(c) பதிப்புத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை-625 021.
Publications Division,
Madurai Kamaraj University,
Madurai-625 021.

பதிப்பு எண்: 110

விலை : 60-00

பதிப்பு விவரங்கள் :

1. ஆசிரியர் : பேராசிரியர், அறிஞர்
ம. முகம்மது உவைஸ்,
இஸ்லாமியத் தமிழ் இலக்கியத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை-625 021.

2. தலைப்பு : இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு
தொகுதி இரண்டு - காப்பியங்கள்

3. பதிப்பு

(அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
Madurai Kamaraj University,
Madurai-625 021.

(ஆ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை (Publications Division)
Madurai Kamaraj University.

(இ) ஆண்டு : 1990 (முதற் பதிப்பு)

4. பக்கம் : viii+654

5. பொருள் : இலக்கிய வரலாறு

6. அச்சு அமைப்பு : திரீயெம் பிரிண்டர்சு, சென்னை-1.



அலுவலகம் : 34949
இல்லம் : 35050
தொலைப் பதிவு 445 308 MKU IN

**மதுரை காமராசர் பல்கலைக் கழகம்**

**மா. லட்சுமணன்**
*துணைவேந்தர்*

பல்கலை நகர்,
மதுரை-625 021.
2 ஜனவரி 1990

# அணிந்துரை

டாக்டர் ம. மு. உவைசு அவர்கள் நாடறிந்த நல்ல இசுலாமியத் தமிழறிஞர். இருட்டில் மறைந்து கிடக்கும் இசுலாமியத் தமிழ் இலக்கியங்களை வெளிக் கொணரும் நற்பணியில் ஈடுபட்டுள்ளார். இவ்வாறு தொகுத்த இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் பற்றி விரிவாக ஆராய்ந்து இசுலாமியத் தமிழ் இலக்கிய வரலாறு என்ற பெயரில் நூல்கள் எழுதி வருகின்றார். இஃது அவ்வரிசையில் இரண்டாவது தொகுதியாகும். இசுலாமியத் தமிழ்க் காப்பியங்கள் பற்றி இந்நூல் விரித்துரைக்கிறது.

கி. பி. 1807 முதல் கி. பி. 1821 வரையுள்ள 15 ஆண்டுக் காலத்திற்குள் ஒன்பது இசுலாமியத் தமிழ்க் காப்பியங்கள் தோன்றியுள்ளன என்பதை எடுத்துக் காட்டி இத்தகு குறுகிய கால எல்லையுள் இத்தனைக் காப்பியங்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் எந்தக் காலக் கட்டத்திலும் தோன்றவில்லை என ஆசிரியர் கூறும்போது நமக்கு வியப்பே ஏற்படுகின்றது. திருமணக் காட்சி தொடங்கி ஆரிபு நாயகம் வரை பதினான்கு நூல்களைப் பற்றிய விரிவான விளக்கம் இந்நூலில் தரப்பெற்றுள்ளது.

நூல்களின் காலங்களை ஆசிரியர் துல்லியமாக வரையறுத்துக் காட்டியிருப்பது ஆசிரியரின் நுண்மாண் நுழைபுலத்தினைக் காட்டுகிறது. இசுலாமிய மரபுகளை நன்கு அறிந்துள்ள ஆசிரியர் அவற்றைப் பாடல்களின் விளக்கத்தில் பொருத்தமுற எடுத்துக் காட்டியிருப்பது போற்றுதற்குரியது. இவற்றோடு தமிழ் காப்பிய மரபுகள் இவ்விலக்கியங்களிலே எடுத்தாளப் பெற்றுள்ளமையையும் அங்கங்கே பாங்குற விளக்கியுள்ளார்.

தமிழ் இலக்கியங்கட்கு ஒரு தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சா. போல, இசுலாமியத்தமிழ் இலக்கியங்கட்கு ஒரு ம. மு. உவைசு எனில் மிகையாகாது.

மதுரை காமராசர் பல்கலைக் கழக இசுலாமியத் தமிழ் இலக்கியத் துறையை உலகெங்கும் உணரும்படிச் செய்து வரும் பேராசிரியர் உவைசு அவர்களின் பணி நம் பாராட்டுதலுக்குரியது.

வளர்க அவர்தம் பணி!

மா. லட்சுமணன்

தி. முருகரத்தனம்,
தமிழியல் துறை தலைவர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,

# முகவுரை

தமிழிலக்கியம் 2500 ஆண்டுகள் நீண்ட வரலாறுடையது. தமிழ் பழம் பெருமையும் பண்பாட்டுப் பெருமையும் கொண்டது ஆயினும் அதன் இலக்கிய வரலாறு முழுமையாகவும் முறையாகவும் எழுதப்பட வில்லை. இலக்கிய வரலாற்றை அரசியல் நோக்கிலும், பொருளாதார நோக்கிலும், சமூக நோக்கிலும், சமய தத்துவ நோக்கிலும் காணலாம். தமிழிலக்கிய வரலாற்றை வரையத் தனிப்பட்ட அறிஞர் சிலர் முயன்றனர். ஒரு பல்கலைக்கழகம்கூட முயன்றது. இந்த முயற்சி களில் சிறப்பாகக் குறிக்கத்தக்கது இந்த நூல். இது ஒற்றை நூல் அல்ல, ஒரு நூல் வரிசையில் ஒரு நூல்.

உலகப் பெருஞ்சமயங்கள் எல்லாம் தமிழகத்தின் மண்ணில் மணம் வீசிக் கொண்டிருக்கின்றன. சமணம், பவுத்தம், இந்து சமயம், இஸ்லாம், கிறித்தவம் ஆகிய பெருஞ்சமயங்களின் இலக்கியங்கள் பெற்ற பெருமை இந்திய மொழிகளில் தமிழுக்கே உண்டு எனலாம். இவற்றுள் இசுலாம் சமயம் தந்த தமிழிலக்கியங்களை முழுமையாக ஆராய முயல்கிறது இந்த நூல் வரிசை. இந்த வகையில் இது முதல் முயற்சி எனலாம். சமணமும் பவுத்தமும் தமிழில் ஆழமாக வேரூன்றி யுள்ளன. ஆனால் அவற்றின் வரலாறுகள் புதையுண்ட பொன்போல் புலப்படாது கிடக்கின்றன.

இசுலாமியத் தமிழிலக்கிய வரலாறு ஆயிரக்கணக்கான பக்கங் களில் பல தொகுதிகளாக எழுதத்தகும் உண்மை இப்போது வெளிப் பட்டிருக்கிறது. இந்த இலக்கியங்களில் எத்தனையோ வகைகள்; அவை காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள், பக்திச் சமய இலக்கியங்கள் எனப் பலப்பல. இந்த நூல் ஓர் அகப்பைச் சோறு போல் அமைந்திருக் கிறது.

'இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு தொகுதி இரண்டு; காப்பி யங்கள்' என்னும் இந்நூல் இந்த வரலாற்று வரிசையில் இரண்டாவது; பதினான்கு காப்பியங்களின் வரலாற்றை விரித்துரைக்கின்றது. இசுலாமியரின் காப்பியக் கொடையினை இதன்வழி நன்கு அறிந்து கொள்ளலாம்.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் நிறுவப்பட்டுள்ள 'உமறுப் புலவர் இசுலாமியத் தமிழிலக்கியக் கட்டில்' இவ்வரலாற்றினை வரையும் பணியை மேற்கொண்டுள்ளது. நாலு தொகுதிகள் உருவம் பெற்றுவிட்டன; இரண்டு தொகுதிகள் அச்சேற்றம் பெற்றுள்ளன.

இக்கட்டிலில் பணிபுரியும் பேராசிரியர் எம். எம். உவைஸ் அவர்களும், இணைப்பேராசிரியர் பி. எம். அஜ்மல்கான் அவர்களும் அரும் பணிபுரிந்து இவ்வரலாற்றை வரைந்திருக்கின்றனர்.

இந்த நூல்வரிசையில் காணப்படுவன வரலாற்று நோக்கும், இலக்கிய நோக்கும் ஆகும். நூலாசிரியர் வாழ்க்கை, காலம், நூலின் அமைப்பு, அணிகள் முதலான இலக்கிய நயங்கள், மொழி வழக்கு ஆகியவை இங்குச் சிறப்பாக எடுத்துக்காட்டப்படுகின்றன. பிற நோக்குக்கள் பின்னர் மேற்கொள்ளலாம்.

பேராசிரியர்கள் முயற்சி தமிழுக்கு ஆக்கம் தருகிறது; பிறருக்கு ஊக்கம் தருகிறது; தமிழுலகம் வரவேற்புத் தருகிறது; தமிழ்த்துறை நன்றி தருகிறது.

தி. முருகரத்தனம்

# நன்றியுரை

இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பரப்பிலே தோன்றி உள்ள காப்பியங்கள் பல. அவற்றுள் காலத்தால் முந்திய இரண்டினைப் பற்றி இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு முதலாந் தொகுதியில் விவரிக்கப்பட்டது. கனகவிராயரின் கனகாபிஷேக மாலையும் உமறுப் புலவரின் சீறாப்புராணமும் அவை இரண்டுமாகும். இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு இரண்டாந் தொகுதியில் பதினான்கு காப்பியங்கள் பற்றிய விவரங்கள் இடம் பெறுகின்றன. இத்தொகுதி வெளிவருவதன் மூலம் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் எம்மீது சுமத்திய பெரும்பணி ஓரளவு முற்றுப் பெற்றுள்ளது என்றே கூறலாம். இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு பற்றி ஆறு தொகுதிகளும் வெளிவந்தால் மட்டுமே எமது இப்பணி முற்றுப் பெறும். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் பேராதரவு எமக்கு இருக்கும் வரை எமது இப்பணி முற்றுப் பெறும் என்று நிச்சயமாகக் கூற முடியும். மதுரை காமராசர் பல்கலைக் கழகத் துணைவேந்தர் முதல் எல்லா அதிகாரிகளும் அளிக்கும் ஒத்துழைப்பு இத்துறையில் எம்மைத் தீவிரமாக ஈடுபடுத்த எமக்குத் தூண்டுகோலாக அமைந்துள்ளது எனின் அது மிகையாகாது.

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு இரண்டாந் தொகுதிக்கு ஓர் அருமையான ஆசி உரை வழங்குவதன் மூலம் இன்றைய துணை வேந்தர் டாக்டர் மாணிக்கம் இலட்சுமணன் அவர்கள் எம்மை ஊக்கி உள்ளார். அவருக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம்.

தமிழ்ப் பேராசிரியரும் தமிழியல் துறைத் தலைவருமாகிய டாக்டர் தி. முருகரத்தனம் அவர்கள் வழங்கி உள்ள அணிந்துரை எமது பணி தொடர எமக்குப் புத்துணர்வு ஊட்டும் பாணியில் அமைந்துள்ளது. அவருக்கு எமது உளங்கனிந்த நன்றி.

மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பதிப்புத்துறைப் பணிப்பாளர் பேராசிரியர் டாக்டர் கதிர் மகாதேவன் அவர்கள் முதல் ஊழியர்கள் அனைவரும் எமது நூல்கள் வெளிவருவதில் எம்மோடு ஒத்துழைத்துத் தமது சலியாத ஈடுபாட்டைக் காட்டி உள்ளனர். அவர்களுக்கு எமது மனமுவந்த நன்றி

பல்கலை கழகத் தமிழியல் துறையின் ஓர் அங்கமாக விளங்கும் இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பிரிவின் இணைப் பேராசிரியர் டாக்டர் பி. எம். அஜ்மல் கான் அவர்கள் கடந்த பத்தாண்டுகளாகத் தனித்தும் எம்மோடு சேர்ந்தும் இத்துறையில் பெரும் பணி புரிந்துள்ளார். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் நூல்களைப் பற்றி நுணுக்கமாக ஆராய்ந்து ஆழ்ந்த அனுபவம் பெற்றவர். இத்துறையில் பல நூல்களை இயற்றித் தந்துள்ளார். அவர் தம் சலியாத உழைப்பு எமக்குக் கிடைத்திருக்காவிடின் எமது இப்பணி முழுமைத்துவம் பெற்றிருக்காது. அவருக்கு எமது ஆழ்ந்த நன்றி.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய பதிநான்கு காப்பியங்கள் பற்றிய ஆய்வு நூலாக அமைந்துள்ள இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு இரண்டாந் தொகுதியைச் சிறந்த முறையில் அச்சியற்றித் தந்த திரீயெம் பிரிண்டர்சாருக்கும் அதன் பணிப்பாளர் அல்ஹாஜ் எம். எம். மீறா சாகிபு அவர்களுக்கும் எமது இதயபூர்வமா்ன நன்றி.

அங்ஙனமே தமது ஓய்வு நேரத்தையும் இலக்கியப் பணிக்கே பயன்படுத்தும் ஜனாப் எம். சையித் முகம்மது (ஹஸன்) அவர்கள் இந் நூலில் அச்சுப்பிழைகள் ஏற்படாதவாறு கவனமாகப் பணியாற்றி உள்ளார். அவருக்கும் இதயப்பூர்வமான நன்றி.

ஆசிரியர்

# பொருளடக்கம்

# இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாறு

## தொகுதி இரண்டு

## காப்பியங்கள்

## முன்னுரை

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்கள் பல. பெரும்பாலானவை இஸ்லாமியப் பெரியார்களைக் கருப்பொருளாகக் கொண்டு காப்பிய இலக்கணங்கள் அமையப் பாடப்பட்டவை. இஸ் லாமியப் பெரியாரின் உலக சாதனைகளை அதே அடிப்படையில் விவரிப்பனவாக சில அமைந்துள்ளன. மறைந்த பின்னர் சில பெரியார் செய்து காட்டிய ஆற்றல் மிக்க செய்கைகளை வருணிப்பன வாக வேறு சில காட்சி அளிக்கின்றன. இஸ்லாமிய வரலாற்றிலே தொடர்ச்சியாக நிகழ்ந்த சில போர்களை விளக்குவனவாக மற்றுஞ்சில காப்பியங்கள் திகழ்கின்றன. ஒரு பெரியாரின் வாழ்க்கையிலே நிகழ்ந்த வியக்கத்தக்க ஒரே நிகழ்ச்சியைக் கருவாகக் கொண்டு இன்னுஞ்சில காப்பியங்கள் விளங்குகின்றன. இவ்வாறு பல்வேறு வகையான காப்பியங்கள் தமிழிலே தோன்றி தமிழ் இலக்கியப் பரப்பைப் பெருக்கிக் கொண்டு வந்துள்ளன.

நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த பெரி தும் வியக்கத்தக்க சம்பவமான மிஃறாஜ் என்னும் விண்ணேற்றம் பற்றி வருணிக்கும் மிஃறாஜ் மாலையைப் பற்றி முன்னர் குறிப்பிட் டோம். இத்துறையில் தோன்றிய முதல் நூல் என இதனைக் குறிப் பிடலாம். இது ஹிஜ்ரி ஆண்டு 998 ஜமாதுல் அவ்வல் மாதம் 20ஆம் நாள் அதாவது கி. பி. 1590-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 28-ஆம் தேதி திங்கட்கிழமை (கொல்லம் ஆண்டு 765 பங்குனி 18) அன்று அரங் கேற்றப்பட்டது. இது இயற்றப்பட்டு 62 ஆண்டுகளுக்குப் பின்னர் கனகாபிஷேகமாலை என்னும் காப்பியம் தோன்றியது. முகம்மது நபி (சல்) அவர்களின் பேரர் இமாம் ஹுசைன் (றலி) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு திகழ்கின்றது. உமறுப்புலவரின் பிறப்பு ஹிஜ்றி ஆண்டு 1052 ஷஃபான் 9-ஆந் தேதி அதாவது கி. பி. 1642-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 2-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை எனக்கொள்ளின், இவர் பிறப்பதற்கு பத்து ஆண்டுகளுக்கு முன்னரே கனகாபிஷேக மாலை இயற்றப்பட்டுவிட்டது எனலாம். சீறாப் புராணம் அரங்கேற்றப்பட்டது பற்றிய ஆதாரப்பூர்வமான செய்திகள் கிடைக்கவில்லை. பெருமானாரின் வாழ்க்கை முழுமையாகப் பாடப்

படவில்லை. ஆதலால் சீறாப்புராணத்தினை உமறுப்புலவர் அரங்கேற்றி இருக்கவும் முடியாது. உமறுப்புலவருடைய மறைவு ஹிஜ்றி 1115 றபியுலவ்வல் 14-ஆம் நாள் அதாவது கி. பி. 1703-ஆம் ஆண்டு ஜுலை மாதம் 29-ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை நிகழ்ந்தது எனக் கூறப்பட்டுள்ளது. உமறுப்புலவருடைய பிறப்பைப் பற்றியும் மறைவைப் பற்றியும் குறிப்பிடும் ஒரு செய்யுள் எம். ஆர். எம். அப்துல் ரஹீம் அவர்களால் தம் முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் என்னும் நூலின் நான்காம் அநுபந்தத்தில் தரப்பட்டுள்ளது. அச்செய்யுள் வருமாறு :

ஓராயிரம் ஹிஜ்ரி யைம்பத்திரண்டு ஷஅபான்
ஒப்பற்ற தேதி ஒன்பதில்
பாராரும் புகழுற்ற நாகலா புரமதில்
பரிமளக் குறைஷிக் குலத்தில்
பேராளன் மாப்பிள்ளை முகம்மது நெயினர்
பிள்ளையீன்ற கவிஞன்
சீராளன் உமறு அறுபத்து மூன்றெட்டில்
சேர்ந்தான் சுவர்க்க நலமே.

இங்கு எட்டில் என்பது எட்டயபுரத்தில் எனப்பொருள் கொள்ளப் பட்டது. 'அறுபத்து மூன்றெட்டில்', மூன்றெட்டு என்பதனை இருபத்து நான்கு எனக்கொண்டு அதனை அறுபத்து என்னும் அறுபதுடன் கூட்டி எண்பத்து நான்கு எனக் கொள்வாரும் உளர். அவ்வாறு பார்க்கும் பொழுது உமறுப்புலவர் எண்பத்து நான்கு ஆண்டுகள் வாழ்ந்தார் எனக்கொள்ள வேண்டி வரும். உமறுப்புலவர் எண்பத்து நான்கு ஆண்டுகள் வாழ்ந்திருந்தால் நபிகள் பெருமானாரின் வாழ்க்கையை முழுமையாகப் பாடி சீறாப்புராணத்தை நிறைவு செய்திருப்பார். ஆக சீறாப்புராணம் நிறைவுறாத நிலையைப் பார்க்கும்பொழுது எண்பத்து நான்கு ஆண்டுகள் அவர் வாழ்ந்தார் என உறுதியாக கூறிவிடமுடியாது.

மற்றொரு கோணத்திலிருந்து பார்க்கும்பொழுது உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தைத் தமது வாழ்க்கையின் பிற்பகுதியில் ஆரம்பித்திருக்கலாம். அவ்வாறு பிற்பகுதியில் ஆரம்பித்தமையால் பெருமானாரின் வாழ்க்கை முழுவதையும் பாடிச் சீறாப்புராணத்தை நிறைவு செய்து அரங்கேற்றுவதற்கு முன்னர் உமறுப் புலவர் இறை அடி சேர்ந்திருப்பார். மேற்குறிப்பிட்ட பாடலில் உமறுப் புலவர் இறந்தது அவருடைய எண்பத்து நான்காம் ஆண்டில் என்பதை ஏற்றுக்கொண்டால் அவரின் மறைவு நிகழ்ந்தது ஹிஜ்றி 1136

என்பதை ஏற்றுக்கொள்ள வேண்டி இருக்கும். உமறுப்புலவரின் மறைவு ஹிஜ்றி 1115-இல் நிகழ்ந்தது என்பதனையே யாரும் ஒப்புக் கொண்டுள்ளனர்.

உமறுப்புலவர் தமது இளம் பிராயத்திலேயே சீறாப்புராணத்தைப் பாடத் தொடங்கினர் எனக் கொண்டால் பெருமானாரின் பெருவாழ்வு சீறாப்புராணத்தில் முழுமைத்துவம் பெறத் தவறியமைப் பற்றிய காரணம் அவர் தமது அறுபத்து மூன்றாவது வயதில் இறையடி எய்தி யதுதான் எனக்கூற முடியும். எனவே மேற்குறிப்பிட்ட பாடலில் உள்ள 'அறுபத்து மூன்று' என்பதை அப்படியே கொள்ளுதல் வேண்டும். அதில் உள்ள 'எட்டில்' என்னும் சொல்லை எட்டு எனக் கொள்ளாது எட்டையபுரம் என்பது குறுகி வந்திருக்கலாம் எனக் கொள்ளலாம்.

மேற்கூறிய பாடலில் இருபத்து நான்கு என்பதை அப்பாடலின் ஆசிரியர் குறிப்பிட விரும்பி இருந்தால் 'மூன்றெட்டு' எனக் குறிப் பிடாது 'மூவெட்டு' என்றே குறிப்பிட்டிருக்கலாம். 'மூன்றெட்டு' என்பதைவிட 'மூவெட்டு' என்பதே இருபத்து நான்கைக் குறிப்பிடப் பொருத்தமானதாக இருக்கும். எனவே உமறுப்புலவர் இறக்கும் பொழுது அவருடைய வயது அறுபத்து மூன்று என்பதைக் குறிப்பிடவே அப்பாடலாசிரியர் 'அறுபத்து மூன்று' எனக் குறிப்பிட்டுள்ளார் எனக் கொள்வதே பொருத்தமானது எனத் தோன்றுகின்றது. சீறாப்புராண அரங்கேற்ற விவரங்கள் கிடைக்கவில்லையாதலால் சீறாப்புராணத்தின் காலத்தை நிர்ணயிக்க அவரின் பிறப்புப்பற்றியும் இறப்புப்பற்றியும் உள்ள காலக் குறிப்புகள் பயன்படுகின்றன. கி.பி. 1703க்கு முன்னர் அதாவது ஹிஜ்றி 1115ஆம் ஆண்டுக்கு முன்னர் உமறுப்புலவர் சீறாப் புராணத்தைப் பாடி இருத்தல் வேண்டும் என்பதை அடிப்படையாக வைத்தே ஏனைய காலக் கணிப்புக்கள் இங்கு இடம் பெறுகின்றன.

**திருமணக் காட்சி :**

உமறுப்புலவரைத் தொடர்ந்து இஸ்லாமியத் தமிழ்க் காப்பிய வானிலே சுடர்விட்டுப் பிரகாசித்தவர் சேகாதி நயினார்ப் புலவராவார். பெருமானாரின் சிறப்புச் சாதனையாக மிஃறாஜ் என்னும் விண்ணேற்றத் தைப் பற்றி ஆலிப் புலவரும் பெருமானாரின் பேரர் இமாம் ஹுசைன் (றலி) அவர்களைப் பற்றி கனகவிராயரும் பெருமானாரின் வாழ்க்கையைப் பற்றி உமறுப்புலவரும் பாடியிருப்பதினால் பெரு மானாரின் வாழ்க்கையோடு தொடர்புடைய மற்றோர் அம்சத்தைத் தாம் பாட வேண்டும் என சேகாதி நயினார்ப் புலவர் விரும்பி இருக்க லாம். இம்மை வாழ்வைப் பற்றியே இதுகாறும் புலவர் பெருமக்கள்

பாடியுள்ளனர். ஆதலால் பெருமானாரின் மறுமை வாழ்வைப் பற்றிப் பாடல் வேண்டும் என்னும் ஆசையால் சேகாதி நயினார்ப் புலவர் உந்தப்பட்டிருக்கலாம். எனவே சேகாதி நயினார்ப்புலவர் அவர்கள் 'முகம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சுவர்க்க லோகத்தில் வெள்ளை யானை மேற் பவனி வந்து ஆசியா மறியம் என்னும் இரண்டு கன்னிகைப் பெண்களையும் திருக்கலியாணம் செய்யும் சரித்திரமாகிய திருமணக் காட்சியைப் பாடி உள்ளார்' என திருமணக்காட்சி என்னும் நூலிலே குறிப்பிடப்பட்டுள்ளதைக் காண லாம். சேகாதி நயினார்ப்புலவர் அவர்கள் திருமணக் காட்சி என்னும் தமது காப்பியத்தை ஹிஜ்ரி ஆண்டு 1122 ரமளான் மாதம் 9 அதாவது கி.பி. 1710 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 31ஆந் தேதி வெள்ளிக் கிழமை அன்று பாடி முடித்துள்ளார். இவ்வாண்டினை சகாத்தம் 1624ஆம் ஆண்டு என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். உமறுப்புலவர் மறைந்த ஏழு ஆண்டுகளில் திருமணக்காட்சி பாடப்பட்டுள்ளது. இதன் முதற் பதிப்பு ஹிஜ்ரத் 1309 றம்ளான் மாதத்தில் அதாவது கி.பி. 1891 ஏப்ரல் மாதத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

***சின்னசீறா :***

நபிகள் பெருமானாரின் வாழ்க்கையை உமறுப்புலவர் முழுமை யாகப் பாடாமல் சென்றதனை அறிஞர் பெருமக்கள் இஸ்லாமிய வானிலே ஏற்பட்ட ஒரு பெருங் குறையாகக் கண்டனர். இந்தக் குறை நிறைவு பண்ணப்படுதல் வேண்டும் என்று எண்ணினர். இக்குறை நிரப்புப்பணியை மேற்கொண்டார் பனீ அகுமது மரைக்காயர் அவர் கள்.உமறுப்புலவரின் மகனார் எனஅறியப்படும் வாவாணப் புலவரோ அவர்தம் மகனாரெனக் கருதப்படும் கவிக் களஞ்சியப் புலவரோ இக் குறை நிரப்புப் பணியை மேற்கொள்ளாததால் தான் பனீ அகுமது மரைக்காயர்ப் புலவர் அவர்கள் இப்பணியை நிறைவேற்ற முற்பட் டார். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி ஆண்டு 1145 இல் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. இந்த ஹிஜ்ரி 1145ஆம் ஆண்டு கி.பி. 1732 ஆம் ஆண்டு ஜுன் மாதம் 24 ஆந் தேதி செவ்வாய்க்கிழமை ஆரம்பித்து கி.பி. 1733 ஆம் ஆண்டு ஜுன் மாதம் 13 ஆந் தேதி சனிக்கிழமை முடிவடைகிறது. பனீ அகுமது மரைக்காயரின் குறை நிரப்புப் பணி யாகிய சீறாவென்கின்ற புராணம் என்றும் இப்பொழுது சின்னசீறா என்றும் வழங்கப்பெறும் நூல் இயற்றப்பட்ட ஹிஜ்றி ஆண்டு குறிப் பிடப்பட்டுள்ளதே அன்றி மாதமும் நாளும் குறிப்பிடப்படவில்லை. எனவே சின்னசீறா இயற்றப்பட்டது கி.பி. 1732 ஆம் ஆண்டின் பிற்பகுதியாயிருக்கலாம் அல்லது 1733 ஆம் ஆண்டின் முற்பகுதியா யிருக்கலாம். எனினும் உமறுப்புலவர் மறைந்து முப்பது ஆண்டு களுக்குப் பின்னரே சின்னசீறா பாடப்பட்டுள்ளது என்பதனை அறிய

முடிகிறது. சேகாதி நயினார்ப் புலவர் திருமணக் காட்சியை இயற்றி இருபத்து மூன்று ஆண்டுகளுக்குப் பின்னரே பனீ அகுமது மரைக் காயரின் சின்னச்சீறா இயற்றப்பட்டுள்ளது என்பதும் இவற்றிலிருந்து புலனாகின்றது. சின்னசீறா இயற்றப்பட்டமை பற்றிய விவரம் அக்காப்பியத்திலே இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

சூல்பதி கரிய மேகக் குடைநபி இறசூல் வேத
நூல்பதி மதீனம் சென்ற கிசுறத்தா யிரத்தோர் நூற்று
நாற்பதோ டைந்தில் சாதா ரணவரு டத்தி னாக
மேற்பதிப் போகம் காமுற் றிக்கதை விளம்பி னேனே.
(சின்னசீறா : பாயிரம்: கடவுள் வாழ்த்து : 7)

**இராஜ நாயகம்:**

ஹிஜ்றி 1145இல் தோன்றிய சின்னசீறாவுக்கும் பின்னர் இஸ் லாமியத் தமிழ்க் காப்பிய வரலாற்றிலே ஒரு நீண்ட இடைவெளி காப்பியங்கள் இல்லாமலேயே கழிந்துள்ளது. ஏறத்தாழ எழுபத் தைந்து ஆண்டுகால எல்லையைக் கொண்ட இந்த நீண்ட இடை வெளிக்குப் பின்னர் தோன்றிய காப்பியம் இராஜ நாயகம். இதன் ஆசிரியர் மதுரை மீசல் வண்ணக்களஞ்சியப் புலவர் ஆவார். இராஜ நாயகம் இயற்றப்பட்ட தேதி ஹிஜ்றி 1222 ஆம் ஆண்டு முஹறம் மாதம் 14 ஆம் நாள் அதாவது கி.பி. 1807 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 23 ஆந் தேதி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. கீழக்கரையிலே இராஜ நாயகம் அரங்கேற்றப்பட்டது என்னும் செய்தி ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

கதிர்விரி வளங்கொள் கீழக் கரையினி லரங்க மாக
மதுரைவாழ் மீசல் வண்ணக் களஞ்சிய மவுல ஹற்றாம்.
(கடவுள் வாழ்த்து : 26)

இராஜ நாயகம் என்னும் காப்பியத்தின் இறுதியில் உள்ள ஒரு செய்யுளில் அது இயற்றப்பட்ட தேதி குறிப்பிடப்பட்டுள்ளது. பதினான்கு சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தமாக அமைந்துள்ள அச்செய்யுள் வருமாறு :

திருநபி கிசுறத் தாயிரத் திருநூற்
றிருபத்து மூன்றினின் முஹறத்
திங்களிற் பதினா லாந்தேதி யதனிற்
சென்றிடு மட்சய வருடம்

வருடுபைங் கூனி மாத்தையிற் பனிரண்
டாந்தின மாகிய சோம
வாரமுத் திரமென் றிரண்டுமே கலந்து
வரப்படு சித்த யோகத்தில்

நரர்முத லுயிர்க ளெவையையும் புரந்த
நபியுல்லா சுலையுமான் வரவு
நானில முழுது மகிழ்வுற விராஜ
நாயக மெனப்பெயர் விளங்க

விரவிய படல நாற்பத்தா றிரண்டா
யிரத்திரு நூற்றுநாற் பானுள்
விருத்தம தாகப் புகன்றனன் மதுரை
மீசல்வண் ணக்களஞ் சியமே.

**குத்பு நாயகம் :**

மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவரும் காயல்பட்டணத்துச் செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவரும் சம காலத்தவர்கள். இருவருக்கும் காப்பியப் போட்டி நிகழ்ந்ததாகக் கூறப்படுவது உண்டு. சேகுனாப் புலவர் என்றும் புலவர் நாயகம் என்றும் வழங்கப்பட்ட செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் இயற்றிய முதற் காப்பியம் குத்பு நாயகம் ஆகும். கீழை நாடுகளிலே முகம்மது நபி (சல்) அவர்களை அடுத்து முக்கியமான இஸ்லாமியப் பெரியாராகக் கருதப்பட்டு வந்தவர் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களேயாவார். இஸ்லாத்துக்குப் புத்துயிரளித்தவர் என்பதைக் குறிக்கும் முகியித்தீன் என்னும் சிறப்புப் பெயரைப் பெற்ற அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள் வாழ்க்கை பல கவிஞர்களுக்குக் கருப்பொருளாய் அமைந்திருப்பதைக் காணலாம். அத்தகைய தமிழ்க் காப்பிய வரிசையில் முதலாவது தோன்றியது சேகுனாப் புலவரின் குத்பு நாயகம் ஆகும். குத்பு என்று வழங்கப்படும் இறைநேசச் செல்வர்களெல்லாரையும் விட மிக்க சிறப்பைப் பெற்றவர் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களேயாவார். அதனாலேயே பல கவிஞர்களும் அப்பெரியாரைத் தமது காப்பியத் தலைவராகக் கொண்டுள்ளனர். சேகுனாப் புலவர் அவர்கள் தமது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தை ஹிஜ்றி 1227 ஆம் ஆண்டு றம்ளான்-இல் வந்த முதலாம் வெள்ளிக்கிழமை அன்று இயற்றி உள்ளார். ஹிஜ்றி 1225 ஆம் ஆண்டு றம்ளான் மாதம் கி.பி.

1810 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30 ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை அன்று தொடங்கி உள்ளது. எனவே றம்ளான் மாதம் வந்த முதலாம் வெள்ளிக்கிழமை அம்மாதம் ஆறாம் நாளாகும். அந்நாள் அக்டோபர் மாதம் 5-ஆந் தேதி வெள்ளிக்கிழமையாகும். வண்ணக்களஞ்சியப் புலவரின் இராஜநாயகம் என்னும் காப்பியம் இயற்றப்பட்டு மூன்று ஆண்டுகளில் சேகுனாப் புலவர் தமது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தை இயற்றி உள்ளார் என்பது புலனாகின்றது. சேகுனாப் புலவரின் குத்பு நாயகம் இயற்றப்பட்ட தேதியைக் குறிப் பிடும் ஒரு செய்யுள் அங்கு இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

தேனனி மலர்த்தார் பொற்றோட் டிருநபி மதீனா வேகும்
பானனி கிசுறத் தாய பன்னிரு நூற்றை யைந்தின்
மேனனி றமலான் றிங்கள் விழைமுதல் வெள்ளி நாளில்
கோனனி புகழின் வல்லோன் கருணையிற் குறித்த தன்றே

(கடவுள் வாழ்த்துப் படலம் : 32)

**திருக்காரணப் புராணம் :**

இரண்டு வருடங்கள்தான் கழிந்தன. மற்றொரு காப்பியத்தை இயற்றி உள்ளார் சேகுனாப் புலவர். திருக்காரணப் புராணம் என்பதே அக்காப்பியம். தமிழகத்திலும் தென்கிழக்கு ஆசியா நாடு களிலும் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களுக்கு அடுத்ததாக முஸ்லிம் மக்களிடையே இறைநேசச் செல்வர்களுள் மிக்க பிரபல்யம் அடைந்தவர் நாகூரிலேயே அடக்கஞ் செய்யப்பட்டிருக்கும் நாகூர் மீறான் என்றும் நாகூர் ஆண்டகை என்றும் வழங்கப்பெறும் சாகுல் அமீது (றஹ்) அவர்களேயாவார். அப்பெரியாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டே திருக்காரணப்புராணம் இயற்றப்பட்டுள்ளது. இதனை ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு சுட்டி உள்ளார்.

வானுலா மதியம் பேச மதித்துடன் பேசும் வள்ளல்
தானுலாங் கிசுறத் தோரா யிரந்தரு மிருநூற் றோடு
மானுலா விருபத் தேழில் வருறம் லானாந் திங்கள்
ஆனமுற் றேதி சௌம னதினிது பனுவல் செய்தான்

(கடவுள் வாழ்த்துப் படலம் : 38)

இச்செய்யுளுக்கிணங்க இந்நூல் ஹிஜ்றி 1227 ஆம் ஆண்டு றம்ளான் மாதம் முதலாம் நாள் இயற்றப்பட்டுள்ளது. இது கி.பி. 1812 செப்டம்பர் மாதம் ஒன்பதாம் தேதி புதன்கிழமை ஆகும்.

ஆசிரியரும் இச்செய்யுளில் 'சௌமன்' எனப் புதன்கிழமையைச் சுட்டி உள்ளார்.

திருக்காரணப் புராணத்தின் இறுதியில் ஒரு தனிச் செய்யுள் சேர்க்கப்பட்டுள்ளது. அச்செய்யுளில் இந்நூல் அச்சியற்றப்பட்ட தேதி குறிப்பிடப்பட்டுள்ளது. ஹிஜ்றத் 1279ஆம் ஆண்டு றஜபு மாதம் 13 ஆம் நாள் திங்கட்கிழமை அச்சிடப்பட்டது இந்நூல் என அங்கு சுட்டப்பட்டுள்ளது. இது கி.பி. 1863 ஜனவரி மாதம் ஐந்தாம் தேதி திங்கட்கிழமை என்பதற்குச் சமமாகும். இந்த விவரத்தையே அச்செய்யுள் இவ்வாறு அதனிடம் கொண்டுள்ளது.

தக்கவன் றூதர்நபி நாயகர் முகம்மதேர்
 தழைமக்க மூரி ருந்து
சாற்றுமதி னத்தினுக் கேகுகிசு றத்தெனுஞ்
 சங்கையா கின்ற வருடம்
சிக்கொன்றி லாவாயி ரத்திருச தத்தோடு
 செப்பெழுப தொன்ப தினிலே
தீதிலா றஜபுமதி தெய்திபதின் மூன்றினிற்
 சிறக்குநாட் டிங்க டன்னில்
கக்கனரு ளாலும்வே தாந்தமகு மூதரின்
 கனிவார் துவாவி னாலும்
காரணக் கடலான கவுதுலகு லம்அப்துல்
 காதிறின் கருணை யாலும்
திக்கெலாம் புகழும்சா குல்கமீ தொலிசரிதை
 திருக்கார ணப்பு ராணம்
சென்னைநகர் தன்னிலே லைசியன் பிரசிலச்
 சிட்டுநிறை வேறின வரோ.

திருக்காரணப் புராணம் இயற்றப்பட்டு ஐம்பது ஆண்டுகள் கழிந்த பின்னரே இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது என்பது ஈண்டு குறிப்பிடத் தக்கது.

**குத்பு நாயகம் :**

மதுரை மீசல் வண்ணக்களஞ்சியப் புலவரும் காயல்பட்டணச் செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவரும் கவிதைத் துறையில் போட்டி மனப் பான்மையுடன் கருமமாற்றி உள்ளனர் என்பது புலனாகிறது. இருவருக்கும் இடையே நிலவிய 'வித்துவத் காய்ச்சல்' இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் வளம்பெற வகை செய் துள்ளது. முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையைக் குத்பு

நாயகம் என்னும் காப்பியமாகச் சேகுனாப்புலவர் இயற்றக்கண்ட மதுரை மீசல் வண்ணக்களஞ்சியப்புலவர் தாமும் அத்தகையதொரு காப்பியத்தைப் பாடவேண்டும் என்று முற்பட்டார். அந்த முயற்சியின் பயனாக முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையினை வேறு ஒரு கோணத்திலிருந்து ஆராய்ந்து ஒரு குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தை இயற்றித் தந்துள்ளார்.

தமது குத்பு நாயகம் என்னும் காப்பியம் சேகுனாப் புலவருடைய குத்பு நாயகத்தைவிடச் சிறப்பாக இருத்தல் வேண்டும் என்னும் நோக்கத்துடன் அதனை இயற்ற முற்பட்டிருப்பார். சேகுனாப்புலவர் தமது குத்பு நாயகம் என்னும் காப்பியத்தை இயற்றி நான்காண்டுகளில் மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவர் தமது குத்பு நாயகத்தை இயற்றி உள்ளார். சேகுனாப் புலவரின் திருக்காரணப் புராணத்தைவிட மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் இரண்டாண்டுகள் காலத்தால் பிந்தியதாகும்.

வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணம் ஹிஜ்றி 1229 ஆம் ஆண்டு நாகூரில் உள்ள சாகுல் அமீது ஆண்டகை அவர்களின் தர்ஹாவில் அரங்கேற்றப்பட்டது என இந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அரங்கேற்றப்பட்ட ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளதே ஒழிய மாதமோ தேதியோ நாளோ குறிப்பிடப்பட வில்லை. ஆண்டு பற்றிய குறிப்பைக் கொண்டு இந்நூல் கி.பி. 1813 ஆம் ஆண்டின் கடைசி மாதத்தில் அல்லது 1814 ஆம் ஆண்டின் முற்பகுதியில் இயற்றப்பட்டது எனக் கொள்ளலாம். ஹிஜ்றி 1229 ஆம் ஆண்டு கி.பி. 1813 டிசம்பர் 24ஆந் தேதி வெள்ளிக்கிழமை ஆரம்பித்து கி.பி. 1814 டிசம்பர் மாதம் 13ஆம் தேதி செவ்வாய்க் கிழமை முடிவுற்றிருப்பதனால் இங்ஙனம் முடிவுக்கு வரவேண்டி இருந்தது. வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் அரங்கேற்றப்பட்ட ஆண்டை குறிப்பிடும் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பாயிருட் படலக் குபிரறத் துலங்கு
பருதியாய் வருநபி கிசுறத்
தாயிரத் திருநூற் றிருபத்தோ டொன்பா
னாண்டினி னாகையம் பதியி
னாயகப் பொருளா யுதித்தருள் சாகுல்
கமீதுநா தரின்றறு காவி
லேயுநற் றவர்முன் குதுபு நாயகமாங்
காவிய மரங்க மேற்றியதே.

(கடவுள் வாழ்த்து : 31)

சாகுல் அமீது ஆண்டவரின் அருட்கொடையினால் இது அரங்கேறியது என 'நல்லருட்கொடை கொடுக்கும் பொருட்டினாலரங்கமாயது குத்பு நாயகமே' (கடவுள் வாழ்த்து: 32) என மற்றொரு பாடலிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**முகியித்தீன் புராணம் :**

வண்ணக்களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் வெளிவந்து இரண்டு ஆண்டுகளில் முகியித்தீன் ஆண்டகை அவர்களைக் கருப் பொருளாகக் கொண்டு மற்றொரு காப்பியம் இயற்றப்பட்டுள்ளது. இக்காப்பியம் முகியித்தீன் புராணம் என்று வழங்கப்பட்டு வருகிறது. இது ஹிஜ்றி 1231 ஆம் ஆண்டு ஜமாதுல்லாகிறு மாதம் பிறை 23 ஆம் நாள் இயற்றப்பட்டுள்ளது. இதனையே முகியித்தீன் புராண ஆசிரியர் பதுறுத்தீன் புலவர் தமது காப்பியத்தில் இடம் பெற்றுள்ள பாயிரச் செய்யுள் ஒன்றில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அருணபி ஹிஜிறத் தாயி ரத்திரு நூற்று முப்பத்
தொருவரு டத்தில் ஜமாத்து லாகிறு பிறையின் றேதி
இருசத மூன்று திங்கள் வாரத்தி லின்புற் றோங்கி
மருவியே யெவருங் கேட்பப் பதுறுத்தீன் கவிசொன் னானே
(பாயிரம்: 22)

இக்காப்பியம் கி.பி. 1816 மே மாதம் 22 ஆந் தேதி திங்கட்கிழமை இயற்றப்பட்டுள்ளது. இரண்டு பாகங்களாக அச்சிடப்பட்டுள்ள இக்காப்பியத்தின் முதற் பாகம் ஹிஜ்றி 1318 ஆம் ஆண்டு றம்ளான் மாதம் 27 ஆந் தேதி பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இது கி.பி. 1901 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 19ஆம் தேதி சனிக்கிழமை அன்றாகும். றம்ளான் மாதம் 27ஆந் தேதி திருக்குர்ஆன் முதன் முதலில் அருளப் பட்ட நாளாகக் கருதப்படுவதால் அத்தகைய புனிதமான ஒரு நாளில் இக்காப்பியத்தின் முதலாம் பாகம் வெளியிடப்பட்டுள்ளது. முகியித்தீன் புராணம் இயற்றப்பட்டு ஏறத்தாழ 85 ஆண்டுகளுக்குப் பின்னரே அது நூலுருப் பெற்றுள்ளமையைக் காண்கின்றோம், அதன் இரண்டாம் பாகம் ஹிஜ்றி 1320 ஆம் ஆண்டு துல்கஅதா மாதம் 9 ஆம் நாள் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது. இந்நாள் 1903 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஏழாந் தேதி சனிக்கிழமையாகும். முகியித்தீன் புராணத்தின் முதலாம் பாகம் வெளிவந்து ஏறத்தாழ இரண்டு ஆண்டு களில் இரண்டாம் பாகம் வெளிவந்துள்ளமையைக் காண்கின்றோம். இரண்டு பாகங்களையும் சதாவதானி கோட்டாறு கா.ப செய்குத் தம்பிப் பாவலர் அவர்கள் பரிசோதித்துப் பதிப்பித்துள்ளார்.

**திருமணிமாலை :**

முகியித்தீன் புராணம் இயற்றப்பட்டு ஏறத்தாழ மூன்றரை மாதங்கள் செல்வதற்குள் இன்னொரு காப்பியம் இயற்றப்பட்டு முற்றுப் பெற்று விட்டது. ஏற்கனவே குத்பு நாயகம், திருக்காரணப்புராணம் என்னும் இரண்டு காப்பியங்களைத்தமிழ் கூறும் நல்லுலகுக்கு அளித்த செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்களே இவ்வாறு தமது மூன்றாவது காப்பியத்தை இயற்றி உள்ளார். திருமணிமாலை எனப் பெயரிடப்பட்டுள்ள இக்காப்பியம் இப்றாகீம் நபி (அலை) அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதாகும். இக்காப்பியமும் ஹிஜ்றி 1231 ஆம் ஆண்டே இயற்றப்பட்டுள்ளது. பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணம் ஹிஜ்றி 1231 ஆம் ஆண்டு அதன் ஆறாவது இஸ்லாமிய மாதமான ஜமாதுல் லாகிறில் இயற்றப்பட்டது. ஆனால் சேகுனாப் புலவரின் திருமணிமாலை அதே ஹிஜ்றி ஆண்டு அதன் பத்தாவது இஸ்லாமிய மாதமான ஷவ்வாலில் இயற்றப்பட்டது. திருமணிமாலையின் கடவுள் வாழ்த்தில் உள்ள ஒரு செய்யுளில் அது இயற்றப்பட்ட தேதியை இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

மறைவளம் பழுத்த வாய்மை முகம்மது நயினார் செல்வ
நிறைவரும் கிசுறத் தோரா யிரநிலை இருநூற் றோடுங்
குறைவரா முப்பா னொன்றில் குளிர்மதி சவ்வால் தெய்தி
உறைபன்னான் கமுதன் வாரத் துரைத்தனன் வல்லோ
னன்பால்

(கடவுள் வாழ்த்து : 35)

இச்செய்யுளில் உள்ள விவரங்களுக்கு இணங்க திருமணிமாலை என்னும் காப்பியத்தை செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் ஹிஜ்றி 1231 ஆம் ஆண்டு சவ்வால் மாதம் பிறை 14ஆம் நாள் இயற்றியுள்ளார். இது கி.பி. 1816 ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 9 ஆம் தேதி திங்கட்கிழமையாகும்.

**இறவுசுல்கூல் படைப்போர் :**

திருமணிமாலையைத் தொடர்ந்து இரண்டு ஆண்டுகளில் மற்றொரு காப்பியம் இயற்றப்பட்டுள்ளது. அது சல்காப் படைப் போர் என்று வழங்கா நின்ற இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியமாகும். இக்காப்பியம் குஞ்ஞு மூசு லெப்பை காஜி ஆலிம் அவர்களால் இயற்றப்பட்டது. ஆசிரியர் தமது காப்பியத்தை எப்பொழுது பாடினார் என்பது நூலின் இறுதியில் தரப்பட்

டுள்ளது. இக்காப்பியத்தில் உள்ள கடைசிப் படலமான றசூலுல்லா மதீனம் புக்க படலத்தின் கடைசிச் செய்யுளில் இந்நூல் பாடி முடிக்கப் பட்ட மாதமும் நாளும் குறிப்பிடப்பட்டுள்ளன. இச்செய்யுளைத் தொடர்ந்து இரண்டு கவிதைகள் இடம் பெற்றுள்ளன. அவை 'கடவுள் வாழ்த்தெனும் பாயிரத்திற் சேர்ந்தனவென்றறிக' என்றும் குறிப்பின் கீழ் இவ்விரு பாடல்களும் தரப்பட்டுள்ளன.

கடைசி படலத்தின் இறுதிச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

ஓதினமுன் னாண்டதனில் ஓங்குசகு பானன்
மாதமிரு வேழ்திகதி வண்மைபெற சும்ஆ
வேதமறு நாளதனில் ஓரணிசல் காமின்
மோதுமம ரின்சரிதைப் பாடன்முற்று மாமீன்

(றசூலுல்லா மதினம் புக்க படலம் : 62)

இங்கே 'ஓதின முன்னாண்டு' என எது சுட்டப்படுகிறது என்பது புலனாகவில்லை. பாயிரத்தில் சேர்க்க வேண்டியவை எனப் பின்னர் குறிப்பிட்ட ஆண்டாயிருக்கலாம் என்றும் துணியலாம். இந்தச் செய்யுளில் இக்காப்பியம் முன் குறிப்பிட்ட ஆண்டில் இஸ்லாமிய மாதமான சகுபான் மாதம் பதினான்காம் நாள் எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. ஆனால் பாயிரத்திற்குரிய செய்யுள்களாகப் பிற்சேர்க்கை யாக உள்ள இரண்டு செய்யுள்களுள் ஒன்றில் சகுபான் மாதம் ஏழாம் நாள் என குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்விரு பாடல்களுள் ஒன்றில் கொல்லம் ஆண்டு குறிப்பிடப்பட்டுள்ளது. அப்பாடல் வருமாறு :

ஆழியுல கின்பர்க ளறைந்துவரு கொல்லம்
ஏழகல வாயிரமி லங்கியநல் லாண்டில்
வாழுபெறு மானியெனு மாதமதோ ரேழில்
கேளிர்கண்முன் னிக்கவிகி ளர்த்தின னுவந்தே

இக்காப்பியம் கொல்லம் ஆண்டு 993 ஆனி மாதம் ஏழாந்திகதி இயற்றப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பாயிரப் பாடலான மற்றதில் ஹிஜ்ரத் ஆண்டு மாதமும் நாளும் குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

முத்திரை முகிற்குடை முகம்மது முனிந்தே
தத்திரமோ டேகுகிசு றத்துவரு டந்தான்
பத்திருச தத்தொருமுப் பானொரு மூன்றில்
சத்தஞ்சகு பான்றிகதி சாற்றினனி தம்மா

இங்கே இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியம் ஹிஜ்றி ஆண்டு 1233 சகுபான் மாதம் ஏழாந் தேதி இயற்றப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு பாடலில் 'சத்தஞ் சகுபான் திகதி' என்றும் மற்றொரு பாடலில் 'சகுபானன் மாதமிரு வேழ்திகதி' என்றும் வந்துள்ளன. முதல் பாடலில் சகுபான் மாதம் ஏழாம் தேதி என்றும் இரண்டாம் பாடலில் சகுபான் மாதம் பதினான்காம் தேதி என்றும் குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காண்கிறோம். ஹிஜ்றி 1233 ஆம் ஆண்டு சகுபான் மாதம் ஏழாம் நாள் கி.பி. 1818 ஜூன் மாதம் 12ஆந் தேதி வெள்ளிக்கிழமையாகும். சும்ஆ (ஜும்ஆ) நாள் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளமையால் அது ஜும்ஆத் தொழுகை நடைபெறும் வெள்ளிக்கிழமை ஆகும். மற்றப் பாடலில் உள்ளது போன்று அதே ஹிஜ்றி ஆண்டு சகுபான் மாதம் பதினான்காம் நாள் எனக் கொண்டால் அந்நாள் கி.பி. 1818 ஜூன் மாதம் 19ஆந் தேதி வெள்ளிக்கிழமையாகும்.

இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியமும் இயற்றப்பட்டு ஏறத்தாழ அரை நூற்றாண்டுக்குப் பின்னரே பதிப்பித்து வெளியிடப் பட்டிருக்கிறது. காப்பியத்தின் இறுதியிலே ஆசிரிய விருத்தமாக உள்ள ஒரு தனியன் இக்காப்பியம் பதிப்பித்து வெளியிடப்பட்ட நாளை இவ்வாறு குறிப்பிட்டுள்ளது.

ஆதிமகு மூதுநபி மக்கநகர் நின்றுமதி
    னாநகர மேகுகிசுறத்
  தாயிரத் திருநூற்றி யெண்பதித் தையாண்டி
    லானமதி சவ்வாலினில்
ஓதுமிரு பத்திரண் டாந்திகதி வேதமே
    யோலமிடும் வெள்ளிநாளில்
  உத்தமமு லாவிவளர் குத்துபா வானபிற
    கொப்பொன் றிலாதநூ லாற்

தீதகலும் றவுசுல்கூ லின்படைப் போரிதைத்
    திருத்தியெழி லாகவாதி
  திருவருளி னால்வேத நபியுதவி யால்முகியித்
    தீனருள் கடாட்சமதனால்
மாதவர் துவாப்பேற்றி னால்சகல கவிமாரி
    வருசிக்கு மெழிலியான
  மகுதூமு கம்மதுப் புலவனச் சிடுவித்து
    வாகோடு தந்தனரே.

இங்கே இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியம் அச்சிடப்பட்ட நாளும் பதிப்பாசிரியர் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது ஹிஜ்றி 1285ஆம் ஆண்டு சவ்வால் மாதம் இருபத்திரண்டாம் நாள் வெள்ளிக் கிழமை அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது எனக் குறிப்பிடப்பட் டுள்ளது. இது கி.பி. 1869 பெப்ருவரி மாதம் 5ஆந் திகதி வெள்ளிக் கிழமை என்பதையே சுட்டுகிறது.

**புதூகுஷ்ஷாம் :**

குஞ்ஞ மூசுப் புலவரின் இறவுசுல்கூல் படைப்போர் இயற்றப் பட்டு மூன்றாண்டுகளில் இஸ்லாமிய அடிப்படையில் இரண்டு காப்பி யங்கள் தோன்றி உள்ளன. ஒன்று சேகுனாப் புலவர் இயற்றியது. மற்றது வண்ணக் களஞ்சியப் புலவர் இயற்றியது. இரண்டு காப்பி யங்களும் போர் பற்றியனவவாக அமைந்துள்ளன. முன்னையது சிறியா நாட்டை வெற்றி கொண்டமையை விவரிக்கும் புதூகுஷ்ஷாம். பின்னையது தமிழ்நாட்டின் ஒரு பகுதியை வெற்றி கொண்டதை வருணிக்கும் தீன் விளக்கம். சேகுனாப் புலவரின் மூன்றாவது காப்பி யமான திருமணிமாலை இயற்றப்பட்டு ஐந்து ஆண்டுகளிலே புதூ குஷ்ஷாம் இயற்றப்பட்டுள்ளது. அதே போன்று வண்ணக்களஞ்சியப் புலவரின் இரண்டாவது காப்பியமான குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணம் இயற்றப்பட்டு ஏழு ஆண்டுகளிலே தீன் விளக்கம் என்றும் தீன்நெறி விளக்கம் என்றும் வழங்கப்படும் காப்பியம் இயற்றப்பட்டுள்ளது. நபிகள் நாயகம் (சல்) அவர்களின் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டு முதலாம் கலீபாவான அபூபக்கர் (றலி) அவர்கள் காலத்தில் தொடர்ந்து நடத்தப்பட்டு இரண்டாம் கலீபாவான உமறு இப்னு கத்தாப் (றலி) அவர்கள் ஆட்சிக் காலத்தில் பூரண வெற்றி ஈட்டப்பட்ட போர்களைப் பற்றி விவரிக்கிறது புதூகுஷ்ஷாம். நபிகள் பெருமானார் அவர்களின் வழித்தோன்றலான செய்யது இபுறாகீம் ஷஹீத் என்பவர் தமிழ்நாட்டில் நிகழ்த்திய போர்களைப் பற்றி வருணிக்கிறது தீன் விளக்கம்.

சேகுனாப் புலவர் தமது நான்காவது காப்பியமான புதூகுஷ்ஷாம் என்னும் காப்பியத்தை ஹிஜ்றி 1236 ஆம் ஆண்டு றஜப் மாதம் 10ஆம் நாளன்று இயற்றி உள்ளார். இச்செய்தி புதூகுஷ்ஷாமிலே இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

மாயிரு கீர்த்தி வள்ளன் மதீனமா நகரில் வந்த
தாயிரத் திருநூற் றாறைந் தாறிய லாண்டிற் றிங்கட்
டுயிரு றசபு பத்தாந் தேதியிற் றுலங்கும் வெள்ளிப்
பாயிரம் புனைதல் செய்தான் பாவினம் புணர்த்து மாதோ.

(கடவுள் வாழ்த்துப் படலம் : 40)

இங்கு குறிப்பிடப்பட்ட நாள் கி.பி.1821ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 13 ஆந் தேதி வெள்ளிக்கிழமை ஆகும். இக்காப்பியம் அச்சியற்றப் பட்டு வெளியிடப்பட்ட நாளும் இந்நூலின் இறுதியில் குறிப்பிடப் பட்டுள்ளது. அக்குறிப்பு 'கிசுறத்து 1277 ஆம் ஆண்டு சபர் மாதம் 6 ஆந் தேதி வெள்ளிக்கிழமை சுப தினத்தில் குத்பாவின் பின்னர் ஆதியினருளால் அகுமதின் பறக்கத்தால் நிதியுற வச்சிட்டு நிறை வேறியதாமே' என அமைந்துள்ளது. இக்குறிப்புக்கு இணங்க புதூ குஷ்ஷாம் என்னும் காப்பியம் இயற்றப்பட்டு ஏறத்தாழ நாற்பது வருடங்களின் பின்னர் அச்சிடப்பட்டுள்ளது என்பது புலனாகின்றது. கி.பி. 1860ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 24ஆந் தேதி வெள்ளிக்கிழமை அன்று அச்சாகி உள்ளது. இரண்டாவது முஸ்லிம் மாதமாகிய சபர் மாதம் வரும் ஆறாம் பிறையன்று இக்காப்பியம் அச்சிடப்பட்டதிலும் ஒரு முக்கியத்துவம் உண்டு. இந்தச் சபர் மாதம் ஆறாம் பிறை அன்று தான் ஹிஜ்றி 1115 இல் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் இறையடி சேர்ந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

புதூகுஷ்ஷாம் காப்பியம் அச்சாவதற்கு எட்டு வருடங்களுக்கு முன்னரே சேகுனாப் புலவர் என்னும் செய்கப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் அவர்கள் இறையடி சேர்ந்துள்ளார்கள். சேகுனாப் புலவரின் மறைவு ஹிஜ்ரி 1268 ஆம் ஆண்டு துல்கஃதா மாதம் 27ஆந் தேதி நிகழ்ந்துள்ளது என்ற குறிப்பு புதூகுஷ்ஷாம் காப்பியக் கையெழுத்துப் பிரதி ஒன்றில் காணப்படும் ஒரு செய்யுளில் இடம் பெற்றுள்ளது. கையெழுத்துப் பிரதி யாரால் தயார் செய்யப்பட்டது என்ற விவரமும் கையெழுத்துப் பிரதியின் இறுதியில் கொடுக்கப்பட் டுள்ளது. இக்குறிப்பு இவ்வாறு அமைந்துள்ளது: 'இப்புராணஞ் செய்த ஆசிரியன் மாணாக்கனாகிய பவளக் காட்டிற் கொட்டைக் குப்பத்திலிருக்கு உபதேசிய பாவல முதலியார் குமாரரான செல்வ ராயன் கையெழுத்து' என்று உள்ளது. அத்துடன் அது எழுதப்பட்ட கொல்லம் ஆண்டு 1021 எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. கொல்லம் ஆண்டு கி.பி. 824 ஆம் ஆண்டிலிருந்து கணிக்கப்பட்டு வருகிறது. எனவே இக்கொல்லம் ஆண்டு கி.பி. 1845 ஆம் ஆண்டுக்குச் சமமா கும். சேகுனாப் புலவர் கி.பி. 1852 ஆம் ஆண்டு செப்டெம்பர் 13 ஆந் தேதி காலமானார்கள் என்பது கையெழுத்துப் பிரதிக் குறிப்பில் இருந்து புலனாகிறது. ஆக, இக்கையெழுத்துப் பிரதி சேகுனாப் புலவரின் மறைவுக்கு ஏழு ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்டுள்ளது. இந்தக் கையெழுத்திலுள்ள புதூகுஷ்ஷாம் காப்பியத்தின் பக்கங் களின் ஓரங்களிலே பாடல்களில் வரும் அறபுச் சொற்கள் அறபு எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளமையைக் காணலாம். புதூகுஷ்ஷா மில் உள்ள அறபு எழுத்துக்களை அடையாளம் கண்டு கொள்வதற்கு இது பயனுடையதாக இருக்கிறது. சேகுனாப் புலவரின் மறைவைக் குறிக்கும் செய்யுள் புதூ குஷ்ஷாம் கையெழுத்துப் பிரதியில் இவ் வாறு அமைந்துள்ளது.

ஆதிநவி கிசுறத்தொ ராயிரத் திருநூற்
றறுபத்தெட் டாமாண்டினில்
அழகான துல்கஃது தாத்தெய்தி மூவொன்ப
தானபரி தாபிவருடந்
தீதிலா வாவணி முப்பத்தொ ராந்தெய்தி
திங்களன் றத்தமித்து
சிறந்தஒரு கடிகையிற் றிருச்சென்னை நகர்வாழுஞ்
செம்மலக மதுவெவ்வைதன்
காதல்செறி யில்லகத் தெதிர்வீட்டி லல்லாவின்
கலாவினது கற்பனைப்படி
கடந்தன ரில்வாழ்வை யாகிறங் குடியான
காவுசெறி வகுதைவாழுஞ்
சோதிமணி வர்த்தக கபீபுமுகம் மதுபுதல்வர்
செய்கபுதுல் காதிராலீந்
தொல்லுலகின் காசியுங் காபிலுங் காத்திபுந்
துதிபெற்ற மசாயிகெனவும்
ஓதுகா ரணப்பெயர் பெற்றநவ ரெத்தின
மொளிமிக்க தமிழ்லட்சணம்
உண்டசூன் முகினிகர் நாகையொலி புராண
முடையவன் கவுதுலகுலம்
போதவான் சரிதையாங் குதுபுநா யகமுநற்
புகழ்திரு மணிமாலையும்
பூவுலகும் வானுலகும் போற்றுமிற சூல்சகுபி
புனைவெற்றி புதூகுசாமும்
வேதகா வியங்களும் பல்சந்த மாலையும்
விளங்குசித் திரக்கவிகளும்
மிகப்பொழியும் நாவலர் சிரோமணி மவுத்தென்ன
மிக்கசென் னையர்கேட்கவும்
நாதனரு ளுலமாக்கள் மசாயிகு லெப்பைமார்
நற்றவ முற்றபெரியோர்
நன்றிசெறி வகுதையாம் மற்றும்வா ணிகர்தையல்
நற்றொழிலர் முற்றும்வந்து
சீதமலர் மென்முக மிலங்கிட துயில்வபோன்
றிறந்தபெரி யோரைநோக்கி
செகத்தினி லிவர்கள்போ லினிக்காண்ப தரிதென்ன
துக்கித்து மிக்கோர்களும்
மூதுரை சறகினெறி பொறைசடங் கியற்றியே
முழுக்காட்டிக் கபனுமிட்டு
முன்னொரு பெரியவர் நின்றுதொழு வித்தபின்
முழங்கிய சகாதத்துடனே

கோதிலாக் குணங்குடி யொலிமஸ்தான் சாகிபு
குலவுமெழின் கபுறிடதுபாற்
குணமா யடக்கினர் லுகாநேரம் வல்லவன்
குளிர்றகு மத்தருள்கவே
மேதினியில் விளங்குபேர் சேக்கனா லெப்பையவர்
மிக்கநா மங்கேட்டபேர்
மிகமிகப் புகழ்ந்துபுகழ் பாத்திகா வோதுவீர்
முசுலிங்க ளனைவோருமே.

**தீன் விளக்கம்**

மதுரை மீசல் வண்ணக்களஞ்சியப் புலவரின் மூன்ருவது காப்பிய மான தீன் விளக்கம் இயற்றப்பட்டு அரங்கேற்றப்பட்டது ஹிஜ்றி1236 ஆம் ஆண்டு துல்ஹஜ் மாதம் ஒன்பதாம் நாளாகும். பொதுவாக துல்ஹஜ் மாதம் 9 ஆம் நாள் அறபா நாள் என வருணிக்கப்படுகிறது. மக்கமா நகருக்குப் புனித யாத்திரையை மேற்கொண்டு செல்லும் எல்லா முஸ்லிம்களும் துல்ஹஜ் மாதம் 9 ஆம் நாளான அறபா நாளில் அறபா திறந்த வெளியில் தங்கி இருத்தல் வேண்டும். அத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த ஓர் அறபா நாளிலே தீன் விளக்கம் அரங் கேற்றப்பட்டுள்ளது. அம்மட்டன்று. அந்தக் குறிப்பிட்ட அறபா நாள் வெள்ளிக்கிழமையாக அமைந்துள்ளமையால் அந்நாள் இன்னும் சிறப்புடையதாகத் தெரிவு செய்யப்பட்டுள்ளது எனலாம்.

அவ்வரங்கேற்ற நிகழ்ச்சி ஏர்வாடியிலே நடைபெற்றுள்ளது. சில காலம் தமிழ்நாட்டின் ஒரு பகுதியைப் பவித்திர மாணிக்கப்பட்டணத்தி லிருந்து ஆட்சி புரிந்த செய்யது இப்ருஹீம் சஹீத் அவர்களின் கல்லறை ஏர்வாடியிலேதான் அமைந்துள்ளது. இறை நேசச் செல்வர் செய்யது இப்றாஹீம் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட தீன் விளக்கம் என்னும் காப்பியம் அவர் தம் கல்லறை சிறந்து விளங்கும் ஏர்வாடியில் அரங்கேற்றப்பட்டுள்ளமை ஈண்டு குறிப்பிடத் தக்கது. அரங்கேற்றம் நிகழ்ந்தமையைப் பற்றிய செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

இயனபி கிசுறத் தாயிரத் திருநூற்
றுடன்முப்பத் தாறினின் மதிதோன்
றிடுகச்சி லொன்ப தாம்தெய்தி யதனி
லியம்பிய சாலிய சகாப்தம்
வியனுறு மோரா யிரத்தெழு நூற்றுநாற்
பத்துமூன் றதனின் மேலாம்
வியவரு டத்தி ஞவணி யிருபத்
திரண்டெனுந் தெய்தியில் விருப்ப

நயனுறு மேறு படியினி லிபுரு
கீம்சகீ தொலிதறு காவி
னலந்தரு முசாவி ராகினோ ருடனு
நவின்றிடு தீனவர் சூழப்
பயனுணர்ந் தனந்த மகிழ்ச்சிகள் கூரப்
பாரகா வியமெனத் தோன்று
பண்புசேர்ந் திடுமோர் தீன்வி ளக்கம்
பரிவுட னரங்கமேற் றியதே.

(கடவுள் வாழ்த்து : 27)

இப்பாடலில் இடம் பெற்றுள்ள ஹிஜ்றி ஆண்டு கி.பி. 1821 ஆம் ஆண்டுக்கு சமமானதாகும். ஆக இக்காப்பியம் அரங்கேற்றப்பட்டது கி.பி. 1821 ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 7 ஆந் தேதி வெள்ளிக் கிழமை அன்ருகும். இதே செய்யுளில் இவ்வரங்கேற்றம் விய வருடம் ஆவணி மாதம் 22 ஆந் தேதி அன்று அரங்கேற்றப்பட்டது எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. விய வருடம் என இருப்பது தவருகும். அது அச்சுப் பிழையாகவும் இருக்கலாம். இவ்வாண்டுக்குரிய சரியான பெயர் விஷு வருடம் என்பதாகும்.

**15 ஆண்டுகளில் 9 காப்பியம் :**

இக்காப்பியங்களை நாம் இவ்வாறு ஆராய்ந்து கொண்டு போகும் பொழுது நமக்கு ஒரு பேருண்மை புலப்படுகின்றது. ஒரு குறுகிய கால எல்லேக்குள் பல காப்பியங்கள் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றியுள்ளமையைக் காண்கின்ரேம். ஹிஜ்றி 1222 ஆம் ஆண்டுக்கும் ஹிஜ்றி 1236 ஆண்டுக்கும் இடைப்பட்ட பதினேந்து ஆண்டுகளில் (அதாவது கி.பி. 1807 முதல் கி.பி. 1821 வரை உள்ள காலக்கட்டதில்) இஸ்லாமிய அடிப்படையில் ஒன்பது காப்பியங்கள் தோன்றி உள்ளன என்பதை அறிகிரேம். இவை இப்பொழுது எமக்குக் கிடைத்துள்ள காப்பியங்களாகும். கிடைக்கப் பெறாமல் இலைமறை காயாக இருப்பவைபற்றி இங்கு குறிப்பிடமுடியாது. இத்தகைய குறுகிய கால எல்லேயுள் இத்தனை காப்பியங்கள் தமிழ் இலக்கிய வரலாற்றிலே வேறு எந்தக் கால கட்டத்திலும் தோன்றவில்லை எனக் கூறலாம். அவ்வாறு தோன்றியமைக்கு ஆதாரமாக இன்று எமக்கு எந்தச் சான்றும் கிடைக்கவில்லை.

இந்தப் பதினைந்து ஆண்டுக் கால எல்லையுள் ஒரு புலவர் நான்கு காப்பியங்களையும் மற்றொரு புலவர் மூன்று காப்பியங்களையும் யாத்துத் தந்துள்ளார்கள். புலவர் நாயகம் என்றும் சேகுனாப்புலவர்

என்றும் வழங்கப்படும் காயல்பட்டினம் செய்கு அப்துல் காதிறு நெயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் 1. குத்பு நாயகம் ஹிஜ்றி 1222, கி.பி. 1807) 2. திருக்காரணப் புராணம் (ஹிஜ்றி 1227, கி.பி. 1812), 3. திருமணி மாலை (ஹிஜ்ரி 1231, கி.பி. 1816), 4. புதூ குஷ்ஷாம் (ஹிஜ்றி 1236, கி.பி. 1821) என நான்கு காப்பியங்களை இயற்றியுள்ளார். வண்ணப்பாடல் பாடுவதில் சிறந்து விளங்கிய மதுரை, மீசல், வண்ணக்களஞ்சியப் புலவர் அவர்கள் 1. இராஜ நாயகம் (ஹிஜ்றி 1222 : கி.பி. 1807) 2. குத்பு நாயகம் (ஹிஜ்றி 1229 : கி.பி. 1814), 3. தீன் விளக்கம் (ஹிஜ்றி 1807, கி.பி. 1821) என மூன்று காப்பியங்களை யாத்துள்ளார். இவையே தவிர பதுறுத்தின் புலவரின் முகியித்தீன் புராணமும் (ஹிஜ்றி 1231, கி.பி. 1816) குஞ்சு மூசுப்புலவரின் இறவுசுல்கூல் படைப்போரும் (ஹிஜ்றி 1233, கி.பி. 1821) இதே கால எல்லைக்குள் தோன்றிய ஏனைய இரண்டு காப்பியங்களாகும். இந்த ஒன்பது காப்பியங்களும் வாழ்க்கை வரலாறுகளையும் வரலாற்று நிகழ்ச்சிகளையும் விவரிப்பனவாகவே அமைந்துள்ளன. அவற்றுள் மூன்று காப்பியங்களான சேகுனாப்புலவரின் குத்பு நாயகமும் வண்ணக்களஞ்சியப் புலவரின் குத்பு நாயகமும் பத்றுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணமும் இறை நேசச் செல்வர்களுள் தலை சிறந்தவராகக் கருதப்படும் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களின் வாழ்க்கையினையே வருணிப்பனவாக அமைந்துள்ளன. மன்னர்களுக்கு மன்னராக விளங்கிய சுலைமான் நபி (அலை) அவர்களின் வாழ்க்கை வரலாற்றினை வண்ணக்களஞ்சியப் புலவர் இராஜநாயகம் என்னும் காப்பியத்தில் அமைத்துப் பாடி உள்ளார். அதே போன்று அல்லாஹ்வின் தோழர் என வருணிக்கப்படும் இபுறாகீம் நபி (அலை) அவர்களுடைய வாழ்க்கையைச் சேகுனாப் புலவர் அவர்கள் திருமணிமாலை என்னும் காப்பியத்தில் பின்னிப் பிணைந்து தந்துள்ளார். அத்தோடு அவர் நின்று விடவில்லை. தமிழ் நாட்டிலே பேரும் புகழும் பெற்று விளங்கிய சாகுல் கமீது (றஹ்) என்னும் பெயரைக் கொண்டு நாகூரில் அடக்கப் பட்டிருக்கும் நாகூர் ஆண்டகையின் வாழ்க்கையினை திருக்காரணப் புராணம் என்னும் காப்பியமாக யாத்து அளித்துள்ளார். நபிகள் பெருமானாரின் காலத்தில் வாழ்ந்த சல்கா என்னும் பெண்மணி இறவுசுல்கூல் என்பானுடன் போர் புரிந்து வென்ற நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்டு பாடப்பட்டுள்ளது, இறவுசுல்கூல் என்னும் காப்பியம். பெருமானர் (சல்) அவர்களால் ஆரம்பிக்கப்பட்டு அவர் களுக்குப் பின் ஆட்சி பீடத்தில் அமர்ந்த இரண்டு கலீபாக்கள் காலத்தில் சிறியா நாட்டின் வெற்றிக்கு வழிகோலிய போர்கள் பலவற்றை வருணிப்பதை முக்கியமாகக் கொண்டு தோன்றியது புதூ குஷ்ஷாம் என்னும் வரலாற்றுக் காப்பியம். நபிகள் நாயகம் (சல்)

அவர்கள் பரம்பரையில் வந்த இறை நேசச் செல்வர் சுல்தான் செய்யது இப்றாகீம் அவர்கள் தமிழ் நாட்டின் ஒரு பகுதியை வெற்றி கொண்டு கி.பி. 12 ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஆட்சி புரிவதில் முடிவடைந்த நாளுக்கு நாள் நிகழ்ந்த போர்களை வருணிப்பதற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுப் பாடப்பட்ட மற்றொரு வரலாற்றுக் காப்பியம் தீன் விளக்கம். இவ்வாறு பார்க்கும் பொழுது 15 ஆண்டுகளைக் கொண்ட ஒரு குறுகிய கால எல்லையுள் பல்லாயிரக்கணக்கான பாடல்களைக் கொண்ட ஒன்பது காப்பியங்கள் தோன்றி இஸ்லாத்துக்கு முந்திய வரலாற்றையும் பதின்மூன்றாம் நூற்றாண்டு வரையிலான இஸ்லாமிய வரலாற்றையும் படித்து அறிந்து கொள்வதற்கு எமக்கு வாய்ப்பினை அளித்துள்ளன. முஸ்லிம்களின் காப்பியப்பணி அத்துடன் நின்றுவிட வில்லை.

**நவமணி மாலை :**

காப்பியம் தோன்றாது கழிந்த காலம் எறத்தாழ முப்பத்தைந்து ஆண்டுகள். ஹிஜ்றி 1271 இல் அதாவது கி.பி. 1855 இல் காப்பியங் கள் மீண்டும் தோன்றலாயின. ஹிஜ்றி 1236 இல் தோன்றிய புதூ குஷ்ஷாம், தீன்விளக்கம் என்னும் இரண்டு காப்பியங்களுக்கு பின்னர் நவ மணிமாலை என்னும் காப்பியம் தோன்றியது. இதனை ஐதுறூசு நயினார்ப் புலவர் அவர்கள் இயற்றி உள்ளார்கள். இக்காப்பியம் ஹிஜ்றி 1271 இல் றம்ளான் மாதம் முதல் நாள் வெள்ளிக்கிழமை அன்று இயற்றப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அத்தகைய குறிப்பு உள்ள பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பெருமதி நபியுல் லாதீன் பெருகச்செய் கிசுறத் தென்னத்
தருமதி விலக்கந் தானோர் சகஸ்திர மிருநூற் றோடும்
வருமதி யெழுபத் தொன்றில் வளர்நல றம்ளான் என்னும்
திருமதி வெள்ளி முற்றே யினிதினி பனுவல் செய்தான்.

(கடவுள் வாழ்த்து : 49)

இந்தக் குறிப்பை பார்க்கும்பொழுது நவமணிமாலை கி.பி. 1855 ஆம் ஆண்டு மே மாதம் 18 ஆந் தேதி வெள்ளிக்கிழமை இயற்றப்பட்டது என்பது புலனுகும். ஐதுறூசுப் புலவர் அவர்கள் ஹிஜ்றி 1295 ஆம் ஆண்டு றஜபு மாதம் 5 ஆம் நாள் சனிக்கிழமை அன்று உயிர் நீத்தார்கள். இவருடைய மறைவு கி.பி. 1878 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6 ஆந் தேதி சனிக்கிழமை நிகழ்ந்துள்ளது என்பது இதிலிருந்து புலனாகிறது.

**நாகூர்ப் புராணம் :**

நவமணி மாலை என்னும் காப்பியம் தோன்றிய பின்னர் ஏறத்தாழ 30 ஆண்டுகள் காப்பிங்கள் எதுவுமின்றி கழிந்துள்ளன. இஸ்லாமிய அடிப்படையில் தமிழ்க் காப்பியங்கள் மீண்டும் தோன்றக் காரணமாயிருந்த குலாம் காதிறு நாவலர் அவர்கள் கி.பி. 1833 ஆம் ஆண்டில் பிறந்தார்கள். நாகூரைப் பிறப்பிடமாகக் கொண்ட குலாம் காதிறு நாவலர் அவர்கள் மூன்று காப்பியங்களை இயற்றித் தந்துள்ளனர். குலாம் காதிறு நாவலரின் முதலாவது காப்பியம் நாகூர்ப் புராணம் என்பதாகும். நாகூர்ப் புராண ஆசிரியர் அது இயற்றப்பட்ட ஹிஜ்றி ஆண்டினை மாத்திரமே தமது நூலில் குறிப் பிட்டுள்ளார். நாகூர்ப் புராணம் ஹிஜ்றி 1300 இல் இயற்றப்பட்டது என முத்திரைக் கவியாக அமைந்துள்ள ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

நண்ணருசீர் செழுமியவிந் நாகூர்ப் புராணத்தைக்
கண்ணகனவ் வூரின்குலாம் காதிறுநா வலனென்பான்
அண்ணனபி கிசுறத்தோ ராயிரத்து முந்நூற்றிற்
பண்ணமைதீஞ் சொற்றமிழிற் பனுவலாப் பாடினனே.

(பாயிரம் : 11)

இங்கே ஹிஜ்றி ஆண்டு மாத்திரம் குறிப்பிடப்பட்டிருப்பதால் அது கிறிஸ்துவிற்குப்பின் எத்தனையாவது ஆண்டு எனக் குறிப்பிடுவது சற்றுக் கடினமாகி உள்ளது. ஹிஜ்றி 1300 இன் ஆரம்பம் கி.பி. 1821 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 12 ஆந் தேதி ஞாயிற்றுக்கிழமை ஆகும். ஹிஜ்றி 1300 ஆம் ஆண்டின் இறுதி மாதத்தின் இறுதி நாள் கி.பி. 1883 ஆண்டு நவம்பர் மாதம் 1 ஆந் தேதி ஆகும். எனவே நாகூர்ப் புராணம் கி.பி. 1882 ஆம் ஆண்டின் இறுதியில் அல்லது கி.பி. 1883 ஆம் ஆண்டின் முதல் பத்து மாதங்களில் தோன்றி இருத்தல் வேண்டும். குலாம் காதிறு நாவலரின் நாகூர்ப் புராணம் கூட அது இயற்றப்பட்டுப் பத்து ஆண்டுகள் கழிந்த பின்னரே கி.பி. 1893 ஆம் ஆண்டில் அச்சிடப்பட்டுள்ளது. அவரின் வாழ்க்கையிலே இந்நூல் அச்சேறியுள்ளது. அவர் 1908 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 3 ஆந் தேதி வெள்ளிக்கிழமை உயிர் நீத்தார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

**ஆரிபு நாயகம் :**

குலாம் காதிறு நாவலரால் இயற்றப்பட்ட மற்றொரு காப்பியம் ஆரிபு நாயகம் ஆகும். இறைநேசச் செல்வர் றிபாயி ஆண்டகை என வழங்கப்பட்ட அகுமது கபீறுர் றிபாயி (றஹ்) அவர்களின் வாழ்க்கை யைக் கருப்பொருளாகக் கொண்டுள்ளது ஆரிபு நாயகம் என்னும்

காப்பியம். இக்காப்பியத்திலும் இது இயற்றப்பட்ட ஹிஜ்றி ஆண்டு மாத்திரமே குறிப்பிடப்பட்டுள்ளது. இக்குறிப்பு இடம் பெற்றுள்ள செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

நறைவிரி நபிகள் யார்க்கு நாயகர் மக்கா நீத்து
மறைவிரி மதீனா வேகும் வருடமாய் ஹிஜ்றத் தாதி
முறைவிரி யாயி ரத்து முந்நூற்றுப் பன்னி ரண்டிற்
துறைவிரி இப்பு ராணத் தொடக்கமு முடிவு மாமே
(பாயிரம் : 15)

இக்காப்பியம் ஹிஜ்றி 1312 ஆம் ஆண்டில் இயற்றப்பட்டது என இச்செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஹிஜ்றி 1312 ஆம் ஆண்டு எத்தனையாம் மாதம் எத்தனையாம் நாள் என்பது இங்கு குறிப்பிடப் படவில்லை. இந்த ஹிஜ்றி ஆண்டு கி.பி. 1896 ஜூன் மாதம் 23 ஆந் தேதி முடிவடைந்துள்ளது. ஆக, ஆரிபு நாயகம் 1894 ஆம் ஆண்டின் கடைசி ஆறு மாதங்களில் அல்லது 1895 ஆம் ஆண்டின் முதல் ஆறு மாதங்களில் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும். இந்நூல் கி.பி. 1896 இல் அச்சியற்றப்பட்டுள்ளது.

**முகாசபா மாலை :**

குலாம் காதிறு நாவலரின் மற்றொரு காப்பியம் முகாஷபா மாலையாகும். இது அளவில் சிறியதேயாயினும் காப்பிய இலக்கணங்கள் அமையப் பாடப்பெற்றுள்ளது. இங்கு நாகூர் ஆண்டகையின் வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சியே வருணிக்கப் பட்டுள்ளது. அவர் தம் கனவில் நிகழ்ந்த விண்ணேற்றப் பயணம் இங்கு விவரிக்கப்பட்டுள்ளது. இம்முகாஷபாமாலை இயற்றப்பட்ட ஆண்டு ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

தேடரிய சாகுல் கமீதென் றோதுந்
திவ்வியநா யகர்இருந்துஞ் சென்று கண்ட
வாடரிய காட்சியெனு முகாஷ பாவை
வண்டமிழின் முகாஷபா மாலை யென்று
பாடரிய கவியாக கிசுறத் தான
பதின்மூன்று நூற்றாண்டிற்
பதினாறா மாண்டு
ஆடரிய ஆநந்த மிருமைக் கண்ணு
மாகவென யான்பாடி யருளி னேனே.
(பாயிரம் : 4)

முகாஷபா மாலை ஹிஜ்றி 1316 ஆம் ஆண்டு பாடப்பட்டுள்ளது. ஹிஜ்றி 1316 ஆம் ஆண்டின் முதல் எட்டு மாதங்களும் கி.பி. 1898 ஆம் ஆண்டின் இறுதியிலும் கடைசி நான்கு மாதங்களும் கி.பி. 1899 ஆம் ஆண்டின் முற்பகுதியிலும் வந்துள்ளன. எனவே முகாஷபா மாலை கி.பி. 1898 இன் பிற்பகுதியில் அல்லது கி.பி. 1899ன் முற்பகுதியில் பாடப்பட்டிருத்தல் வேண்டும். ஹிஜ்றி 1316 ஆம் ஆண்டு 22-5-1898 இல் தொடங்கி 11-5-1899 இல் முடிவடைந்துள்ளது.

**மூசாநபி புராணம் :**

அடுத்து இங்கு இடம் பெறுவது மூசாநபி புராணம். இதில் மூஸா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்வுடன் வசனித்த நிகழ்ச்சி விவரிக்கப் பட்டுள்ளது. இது நூருல் கலாம் என்றும் வழங்கப்படுகிறது. முஹம்மது நூருத்தீன் என்பவரால் இயற்றப்பட்டது. இந்த நூல் இயற்றப்பட்ட நாள் பற்றிய குறிப்பு நூலின் இறுதியில் சுட்டப் பட்டுள்ளது. 'இந்த நூருல் கலாமென்னும் மூசா நபி புராணம் ஹிஜ்றி ஆண்டு 1323 ஆம் வருடம் றபியுலாகிர் மாதம் 11 இல்......பாடி முடிந்தது.' இது கி.பி. 1906 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 3 ஆந் தேதி செவ்வாய்க்கிழமையாகும். முகாஷபா மாலை தோன்றி ஏழு வருடங்களின் பின்னர் மூசா நபி புராணம் இயற்றப்பட்டுள்ளது. இயற்றப்பட்டு இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் அதாவது ஹிஜ்றி 1316 ஆம் ஆண்டு துல்ஹஜ் மாதம் அச்சிடப்பட்டுள்ளது. இது கி.பி. 1908 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஆகும்.

**சாதுலி நாயகம் :**

அடுத்துத் தோன்றியுள்ளது சாதுலி நாயகம் என்னும் காப்பியம். இக்காப்பியமும் அளவில் சிறியதே. இதனை முகம்மது முகிதீன் லெப்பை இயற்றி உள்ளார். இதனை இயற்றிய ஆண்டு ஆசிரியர் ஊர் பெயர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

முதுநபி ஹிஜ்றத் தாயிரத் தொடுமுந் நூற்றிரு
பதிற்றொன் பானுண்டி
னதிவித நலஞ்சே ரபுல்ஹச னலியெம் மாண்டகை
யரும்புக ழுறைந்தேன்
பதியினிற் சிறந்த காயன்மா நகர்வாழ் பண்பகு மதுமுகி
யித்தீன்
திதிதரப் பயந்த முகமது முகியித் தீனெனுஞ் சிறுசுத
னன்றே
(பாயிரம் : 11)

இச்செய்யுளில் ஹிஜ்றி ஆண்டு 1329 இல் இக்காப்பியம் இயற்றப் பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இது 1911 ஆம் ஆண்டுக்குச் சமமாகும். இந்த ஹிஜ்றி 1329 ஆம் ஆண்டு கி.பி. 1911 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 2 ஆந் தேதி ஆரம்பமாகி டிசெம்பர் மாதம் 22 ஆந் தேதி முடிவடைந்துள்ளது.

இஸ்லாமிய இலக்கிய வரலாறு பற்றிய முதலாம் தொகுதியில் இஸ்லாமிய இலக்கியத்தின் தொடக்க காலம் பற்றிக் குறிப்பிடப்பட் டுள்ளது. அங்கே கி.பி. 12 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 17 ஆம் நூற்றாண்டின் இறுதி வரை உள்ள கால எல்லையுள் தோன்றிய தமிழ் இலக்கியங்கள் வரலாற்று அடிப்படையில் ஆராயப்பட்டன. இந்தத் தொகுதியிலும் இதனைத்தொடர்ந்து வரும் தொகுதிகளிலும் இலக்கிய வடிவங்கள் தனித்தனியே ஆராயப்படுகின்றன. அவ்வாறு இலக்கிய வடிவங்களை ஆராயும்பொழுது அவை தோன்றிய கால முறைமை யினை அடிப்படையாக வைத்தே இங்கு சுட்டப்படுகின்றன. இந்தத் தொகுதியிலே காப்பிய இலக்கணங்களுக்கமைய இஸ்லாமிய அடிப் படையில் தோன்றிய தமிழ் நூல்களே விவரிக்கப்படுகின்றன. எனினும் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு முடிவதற்குள் உருவான காப்பியங்கள் முதலாந் தொகுதியிலே இடம் பெற்று விட்டன. எஞ்சிய காப்பியங் களே இத்தொகுதியில் ஆய்வுக்குட்படுத்தப்படுகின்றன.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய சிற்றிலக்கியங்கள் வடிவ அடிப்படையில் மூன்றாம் தொகுதியில் இடம் பெறுகின்றன. வரலாற்று அடிப்படையிலே அவ்விலக்கிய வடிவங்கள் அங்கு ஆராயப்படுகின்றன. அவ்வாறே முஸ்லிம்களுக்கே உரிய சிற்றிலக்கிய வடிவங்களும் ஆராயப்படுகின்றன. மற்றொரு தொகுதியில் மெய்ஞ்ஞான இலக்கி யங்கள் வரலாற்று அடிப்படையில் விவரிக்கப்படுகின்றன. அறபுத் தமிழ் இலக்கியமும் உரை நடை இலக்கியமும் அவ்வாறு ஆராயப்படு கின்றன. அதே முறையில் இஸ்லாமிய நெறி பற்றிய கருப்பொருள் அமைந்துள்ள மரபுக் கவிதைகளும் தற்காலக் கவிதைகளும் ஆராயப் படுகின்றன.

---

# இரண்டாம் இயல் :
# திருமணக் காட்சி

இறந்த கால நிகழ்ச்சிகளே பெரும்பாலும் காப்பியங்களுக்குப் பொருளாக அமைந்து விடுகின்றது. அத்தகைய நிகழ்ச்சிகளுள் மிகப் பெரும்பாலானவை வாழ்க்கை வரலாறுகளைப் பற்றியனவேயாகும். முன்மாதிரியான வாழ்க்கையை நடாத்திச் சிறந்து விளங்கிய ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தனிப்பெருந்தலைவர்களே காப்பியங்களின் பாட்டுடைத் தலைவராக அமைந்து விடுகின்றனர். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களிலும் இவ்வுண்மை இழையோடக் காண்கின்றோம். இவ்வுண்மைக்கு விதிவிலக்காய் அமையும் காப்பியங்களைக் காண்பது அருமையிலும் அருமையாகும். இஸ்லாமிய அடிப்படையிலே தோன்றிய தமிழ்க் காப்பியங்களுள் அத்தகைய அருமையான ஒரு காப்பியம் இடம் பெற்றுள்ளது : அக் காப்பியம் இறந்த கால நிகழ்ச்சியையோ நிகழ் கால நிகழ்ச்சியையோ விவரிக்காது எதிர்காலச் சம்பவம் ஒன்றினை வருணிப்பதாக அமைந்துள்ளது.

இக்காப்பியம் வருணிக்கும் எதிர்கால நிகழ்ச்சி இவ்வுலகில் நிகழ வுள்ள ஒரு சம்பவம் அன்று. இறந்த பின்னர் மறுமையில் நிகழக் கூடிய ஒரு நிகழ்ச்சியாகும். இறந்தவர்கள் மீண்டு வருவதில்லை. இறந்த பின்னர் நிகழும் சம்பவங்களைப் பற்றி அறியும் வாய்ப்பு சாதாரண மக்களுக்கு ஏற்படும் வாய்ப்பு இல்லை. மார்க்கக் கிரந்தங் களிலே வருணிக்கப்பட்டுள்ள அத்தகைய நிகழ்ச்சிகளையே இத்தகைய காப்பியங்களுக்கு அடிப்படைப் பொருளாக அமைத்து விடுகின்றனர் கற்பனை வளம் நிறைய உள்ள கவிஞர். இவ்வாறு இஸ்லாமிய கிரந்தங்களிலே விவரிக்கப்பட்டுள்ள ஒரு நிகழ்ச்சியே அதுவாகும். நியாயத் தீர்ப்பு நாளைத் தொடர்ந்து நிகழ உள்ள ஒரு மாபெரும் நிகழ்ச்சியையே கருப்பொருளாகக் கொண்டுள்ளது இங்கே குறிப்பிடப்பட உள்ள காப்பியம்.

மறுமை வாழ்வைப் பற்றியும் சிறப்பாக சுவர்க்கலோக வாழ்க்கை யைப் பற்றியும் பல புதுமையான கருத்துக்கள் முஸ்லிம் மக்களிடையே நிலவுகின்றன. இத்தகைய நம்பிக்கைகள் பலவற்றைத் தமிழகத்திலும் இலங்கையிலும் வாழும் முஸ்லிம் மக்களிடையே பரவலாக இருக்கக் காணலாம். அத்தகைய புதுமையான கருத்துக்களுள் ஒன்று நியாயத் தீர்ப்பு நாளைத் தொடர்ந்து நடக்க இருக்கும் ஒரு நிகழ்ச்சியைப் பற்றியது. அப்பொழுது பிர்அவுனின் மனைவியான ஆஸியா (ரலி)

அவர்களும் ஈசா நபி (அலை) அவர்களின் தாயாரான மரியம் (அலை) அவர்களும் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களுக்குச் திருமணம் செய்து வைக்கப்படுவர். அதன் பின்னர் அவர்கள் மஹ்மூத் என்னும் பெயரை உடைய யானையின் மீது அமர்ந்தவர் களாய் சுவர்க்கத்தில் வீதிகளின் ஊடாக ஊர்வலமாகப் பவனி வருவ தாகக் கருதப்படுவதே அத்தகைய மறுமை நாள் நிகழ்ச்சியாகும். இது முஸ்லிம் மக்களிடையே நிலவும் வெறும் நம்பிக்கை மாத்திரமே என்று கூறிவிட முடியாது. இதற்கான சான்றுகள் இஸ்லாமியக் கிரந்தங்களிலே இடம்பெற்றிருப்பதைக் காணலாம்.

**அடிப்படைக் கருத்துக்கள் :**

இத்தகைய நம்பிக்கைகளுக்கான அடிப்படைக் கருத்துக்களை அல்குர்ஆன் விரிவுரையான ‘தப்ஸீர் ஜமால்’ கிரந்தத்தில் இதற்கு ஆதாரமான ஒரு குறிப்பைப் பார்க்கலாம். முதலாந் தொகுதியில் உள்ள 338 ஆம் பக்கத்தில் இக்குறிப்பு இடம் பெற்றுள்ளது. சூரத்துல் கஸஸ் என்னும் அத்தியாயத்திற்கான விரிவுரையிலேயே இக்குறிப்பு இடம் பெற்றுள்ளது ஸுபைர் இப்ன் அல் பகர் (றலி) அவர்கள் அறிவித்துள்ள பெருமானாரின் பொன்மொழி ஒன்றிலும் இது பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. சூரத்துல் அல் தஹ்றீம் என்னும் அல்குர்ஆன் அத்தியாயத்திற்கான விரிவுரையிலும் இத்தகவல் குறிக்கப்பட்டுள்ளது. இக்குறிப்பையும் தப்ஸீர் ஜமால் கிரந்தத்தின் இரண்டாந் தொகுதியில் உள்ள 371 ஆம் பக்கத்தின் காணலாம். இப்னு அப்பாஸ் (றலி) அவர்கள் அறிவித்துள்ள பெருமானரின் பொன்மொழியிலும் இடம் பெற்றுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. சூரத்து அல் தஹ்றீம் என்னும் அல்குர்ஆன் அத்தியாயத்திற்கான விரிவுரையான ‘தப்ஸீர் ஸாவி’ என்னும் விரிவுரையிலும் இது பற்றிய குறிப்பு இடம் பெற் றுள்ளது. தப்ஸீர் ஸாவி கிரந்தத்தின் நான்காந் தொகுதியில் உள்ள 190வது பக்கத்தில் இக்குறிப்பு இடம்பெற்றிருப்பதைக் காணலாம். ஆனல் இப்னு அப்பாஸ் (றலி) அவர்கள் அறிவித்துள்ள இது பற்றிய பெருமானாரின் பொன்மொழியில் இந்த நிகழ்ச்சி குறிப்பிடப்பட வில்லை. தப்ஸீர் ஜமால் என்னும் கிரந்தமும் தப்ஸீர் ஸாவி என்னும் கிரந்தமும் தப்ஸீர் ஜலாலைன் கிரந்தமும் என்னும் அல்குர்ஆன் விரிவுரைகளாகும். இம்மூன்று அல்குர்ஆன் விரிவுரைகளையும் எழுதிய மூவரும் அறாபியரே என்பதும் ஈண்டு நோக்கற்பாலது. பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்களின் மறுமை நாள் திருமணப் பவனி ஆதாரபூர்வமான ஒரு நிகழ்ச்சி என இக்கிரந்தங்களில் குறிப்பிடப்பட் டுள்ளமையைக் காணலாம். எதிர்காலத்தில் மறுமை நாளில் நிகழ உள்ள இத்திருமண ஊர்வலமே இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய

ஒரு காப்பியத்திற்கான கருப்பொருளாக அமைந்துள்ளது. இதுவே திருமணக் காட்சி என்னும் முஸ்லிம் தமிழ்க் காப்பியமாகத் திகழ்ந்து கொண்டிருக்கின்றது.

**கடவுள் வாழ்த்து :**

காப்பிய இலக்கணங்கள் அமையப் பெற்றது திருமணக் காட்சி. கடவுள் வாழ்த்து, நாட்டுப் படலம், நகரப் படலம் உட்பட முப்பத்தொரு படலங்களைக் கொண்டது திருமணக் காட்சி. இங்கு இடம் பெற்றுள்ள செய்யுட்களின் மொத்த எண்ணிக்கை தொளாயிரத்து நாற்பத்தேழாகும். முப்பத்தேழு பாடல்களைக் கொண்ட கடவுள் வாழ்த்துப் படலத்தில் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களிலே பின்பற்றப்பட்டுள்ள கடவுள் வாழ்த்து மரபு பேணப்பட்டுள்ளது. முதற் பதினேழு செய்யுட்களிலும் அல்லாஹ்வும், அவன் தன் நபிமார்களும் முகம்மது நபி (சல்) அவர்களும் நான்கு கலிபாக்களான அபூபக்கர் (றலி) அவர்களும் உமறு (றலி) அவர்களும் உதுமான் (றலி) அவர்களும் அலி (ரலி) அவர்களும் அசன் (றலி) அவர்களும் உசைன் (றலி) அவர்களும் சுவன பதவி கிடைக்கும் என நன் மாராயம் பெற்ற பத்துத் தோழர்களும் நபி பெருமானாரின் ஏனைய தோழர்களும் புகழ்ந்து பாடப்பட்டுள்ளனர். சந்தத் தாழிசைத் திருவிருத்தம் ஒன்றில் நான்கு இமாம்களும் வருணிக்கப்பட்டுள்ளனர். மற்றொரு பாடலில் ஆன்மீகத் தலைவருக்கெல்லாம் தலைவரான முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி(றலி)அவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளார். இறை நேசர்களான எல்லா வலிமாரினதும் புயங்களில் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் பாதம் படியும் என்னுஞ் செய்தி இந்தப் பாடலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

ஐயத்தீங் ககற்றும் வேத ரகுமது நபியின் பேரர்
உய்யத்தீன் விளக்க வந்த வொலிகளின் புயத்தி லூன்றும்
வையத்தீ ரடியு மென்றன் வாயகந் தந்த சீர்மு
கியித்தீ னப்துல் காதிர் சாகிபைக் கிளற்று வாமே

(கடவுள் வாழ்த்து : 19)

நிச்சயம் சுவனபதி கிட்டும் என நன்மாராயம் கூறப்பெற்ற பத்துத் தோழர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது முஸ்லிம்கள் நோக்கித் தொழும் திசை பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது. இரண்டு தடவை (இரண்டு ரக்கஅத்) தொழுது முடிந்து நடு இருப்பில் தரித்திருக்கும் பொழுது தொழுந் திசைமாகிய கிபுலா மாற்றப்பட்டது என்னும் இறை அறிவிப்பு கிடைக்கப்பெற்றது. அந்தத் தருணத்தில் பத்துத் தோழரும் அங்கிருந்தார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வாறு முஸ்லிம்கள் நோக்கித் தொழுந் திசையான கிபுலா பைத்துல் முகத்தீசு என

அழைக்கப்படும் ஜெரூசலத்திலிருந்து புனித கஃபா அமைந்துள்ள மக்கா பக்கம் திருப்பப்பட்டது. இவ்வரலாற்று நிகழ்ச்சியையும் சேர்த்து பத்துத் தோழர்களையும் இவ்வாறு வருணித்துள்ளார் ஆசிரியர்.

எழிலா ரிறசூல் தொழுதுநடு விருப்பி லிருந்தங் கெழும்புகையில்
வழியாய் முன்செய் கிபுலாவை வழுவிக் கிபுலாத் திசைநோக்கும்
பொழுதி லவர்க ளுடன்திரும்பும் புகழார் பத்துப் பெயரான
வழகு நெறியா ரஷறத்துல் முபஷறீ னவர்கள் பதம்பணிவாம்.

(கடவுள் வாழ்த்து : 16)

நன்மாராயம் பெற்ற பத்துப் பேர்கள் என்பதனைக் குறிப்பிடவே இப் பாடலில் 'அஷறத்துல் முபஷறீன்' என்னும் சொற்றொடர் பயன் படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

உமறுப் புலவர் உயிர் நீத்து ஏழு வருடங்களில் திருமணக் காட்சி இயற்றப்பட்டுள்ளது. உமறுப் புலவர், தமது சீறாப் புராணத்தில் இடம்பெற்றுள்ள கடவுள் வாழ்த்துப் படலத்தில் நாகூர் ஆண்டகை சாகுல் ஹமீது (றஹ்) அவர்களைக் குறிப்பிடவில்லை. ஆனால் திருமணக் காட்சி என்னும் காப்பியத்தில் நாகூர் ஆண்டகை ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளார். அப்பாடலில் தஞ்சாவூரை ஆட்சி புரிந்த மன்னனின் நோய் தீர்த்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு கலிவிருத்தமாய் அமைந்துள்ள அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

தஞ்சை ராஜன் தனக்கெதி ராளிசெய்
வஞ்ச னைத்தொழின் மாற்றிய வள்ளல்சீர்
எஞ்சி டாத வெழினாகை யூரில்வாழ்
இஞ்சொல் ஷாகுல் ஹமீதை யிறைஞ்சுவாம்

(கடவுள் வாழ்த்து : 20)

**கருப்பொருள் :**

தமக்குக் கருப்பொருளாய் அமைந்த செய்தியை ஆசிரியர் ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார். தீன் என்னும் இஸ்லாம் மார்க்கத்தை உலகில் போதித்தவர் முகம்மது நபி (சல்) அவர்கள், அங்ஙனம் நிறுவிய தீன் பயிரை—தீன் என்னும் பைங்கூழை வாடிப்போகாமல் பாதுகாத்தார்கள். கார்மேகம் என்னும் வேதச் சொற்களால் தீன் என்னும் பைங்கூழை வாடாமல் வழி வகுத்தார்கள். இறைவனால் அளிக்கப்பட்ட வேதத்தைப் பாரினில் வளர்த்தார்கள். மா பதத்த வராயும் அழகிய புயத்தவராயும் மணி போன்ற பிரகாசத்தை உடைய வராயும் விளங்கிய முகம்மது நபி(சல்) அவர்கள் சுவர்க்க லோகத்திலே நிகழ்த்திக் காட்டும் திருமணக் காட்சியை விவரிக்கப் போவதாக ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

ஆரணத்தாற் சொற்சோனை கொடுதீன்பைங் கூழ்வாடா தாகச் சீலப்
பூரணத்தாற் றனிமுதல்வன் றன்பாங்க ரெனவிடுக்கப் புவிசேர் வால
வாரணத்தார் மாபதத்தார் அணிபுயத்தா ரணியொளியே வளர்பொன் னூரில்
காரணத்தார் பொருந்துதிரு மணக்காட்சி யுரைக்கவழி கருத லுற்றாம்

(கடவுள் வாழ்த்து : 21)

மூலநூல் :

திருமணக்காட்சி என்னும் காப்பியத்தை இயற்றத் தமக்கு ஆதாரமாய் இருந்த நூலைப் பற்றியும் அதன் ஆசிரியரைப் பற்றியும் அவ்வாசிரியருக்கு சான்றாக அமைந்தது எது என்பதைப் பற்றியும் ஒரு பாடலில் விளக்கி உள்ளார் திருமணக் காட்சி ஆசிரியர். 'முனிறுல் ஹக்கு' என்னும் கிரந்தமே தமக்கு முதனுலாக அமைந்தது எனவும் ஆசிரியர் 'அபூசல்ககித்துக் குத்தூரி' என்னும் தோழர் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இது ஓர் அறபு நூல். இதனைத் தமிழில் மொழிந்தார் ஒரு பெரியார். அவர் கலைக் கடலை மனக் கலத்தால் சோதித்தவர்' எனப் புகழப்பட்டுள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது :

தெள்ளுமறை நபியிறசூல் திருவுளமா னாரந்நேர் தெரிந்த போதும்
உள்ளுமண பூசல்ககி ததுக்குத்தூரி யசுஹாபி யுலகங் கொள்ள
விள்ளுமக்கித் தாபுமுனி றுல்ஹக்கு நூலிலற புரைப்பா விளங்கச் செந்தேன்.
துள்ளுதமி ழாலுரைத்தார் கலைக்கடலை மனக்கலத்தாற் சோதித் தோரே.

(கடவுள் வாழ்த்து : 22)

சதக்கத்துல்லா ஆலீம் அப்பா அவர்கள் கல்வி கேள்விகளில் சிறந்தவர். ஆழ்ந்த அறிவு மிக்கவர். அதன் காரணமாகக் கலையிலே கடல் போன்றவர் என்று பொருள்பட அவர் கலைக் கடல் என வருணிக்கப்பட்டுள்ளார். பொதுவாக ஆறுகள் கடலில் பாய்கின்றன. ஆழ்ந்த கலைக் கடலாம் சதக்கத்துல்லா என்னும் கடலில் பாயும் ஓர் ஆறாக சேகு அப்துல் லெப்பை என்னும் ஆலிம் விவரிக்கப்பட்டுள்ளார். அத்தகைய சேகு அப்துல் லெப்பை ஆலிம் என்பவரே திருமணக் காட்சி ஆசிரியருக்கு அறபு மொழியிலிருந்த விவரங்களைத் தமிழில் வழங்கியவராவார். இத்த விவரங்களை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அலையாத சீர்காயல் வாழ்சுலையு மான்லெப்பை யாலிம் செல்வக்
கலையாழி யெனும்சதக் கத்துல்லா ஆலிமெனுங் கடற்பா யாறாய்த்
தொலையாத நிபுணமுறு மாலிம்சே கப்துலெப்பை சொற்ற வாறே
மலையாது சிறியேனுஞ் செந்தமிழாற் பாடவென மனம்வைத் தேனே
(கடவுள் வாழ்த்து : 22)

அடுத்த பாடலில் சேகப்துலெப்பை பற்றிய விவரம் தரப்பட்டுள்ளது. அவர் வகுதை மாநகரை சேர்ந்தவர். தேன் சொரிகின்ற மலர்களை உடைய குளிர்ந்த சோலைகளால் சூழப்பட்ட வகுதை நகர் அது. பிறை போன்ற முகத்தை உடையவர். மக்களைக் கவரும் முகத்தை உடையவர். கஞ்சா நயினார் தம் புதல்வர். தீன் என்னும் இஸ்லாம் மதம் தழைத்தோங்கத் திருமறை மொழிகளைப் போதித்தவர். ஆழ்ந்த அறிவினைப் பெற்றுத் திகழ்ந்தவர். இக்கருத்துக்களே இவ்வாறு ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளன.

கொந்துலவு தண்சோலை சூழ்வகுதை மானகர்வாழ் கோமான் சோதி
இந்துலவு திருமுக வஜீகரன்கஞ் சாநயினான் ஈன்ற பாலன்
முந்தியதீன் தழைத்தோங்க நெறிநடத்த வேண்டிமறை மொழியுங் கல்விச்
சிந்துநிக ரென்னும்சே கப்துலெப்பை சொலும்வழிநூற் சேர்க்கின் றேனே.
(கடவுள் வாழ்த்து : 24)

**அவையடக்கம்**

அடுத்து இடம் பெறுவது அவையடக்கம். கடுமையான கோபத்தைக் கொண்டது காட்டிலே வாழும் வேங்கை என அழைக்கப்படும் காட்டுப் புலி. சாதுவாக வீட்டிலே வளர்வது பூனை என அழைக்கப்படும் இற்புலி. (வீட்டுப் புலி) இரண்டையும் சமமாகக் கூறுவது முடியாத காரியமாகும். கடலிலே மீன்கள் கூட்டம் கூட்டமாக வாழும். ஆகாயத்திலே பிரகாசித்துக் கொண்டிருக்கும் நட்சத்திரக் கூட்டமும் மீன் கணம் என அழைக்கப்படுகின்றது. ஆனால் இரண்டும் சரிநிகர் சமானமாகா. அவை போன்றதே தாம் சான்றோர் முன் சாற்றும் கவி என இவ்வாறு அவையடக்கம் கூறி உள்ளார் திருமணக் காட்சி ஆசிரியர்.

செங்கோலச் செந்தாதுங் கருந்தாதுங் பொன்னெனல்போற் செறியுங் கானில்
வெங்கோப வேங்கையம்பூ ஞையும்புலியா மெனச்செகத்தில் விளம்பல் போலும்
சங்கோல மிடுந்திரையின் மீன்களும்வான் மீன்கணமுஞ் சரிசொல் போலும்
பொங்கோசைப் புலவர்முன்யா னும்புலவ னெனச்சிறியேன் புகல்கின் றேனே.
(கடவுள் வாழ்த்து : 26)

அவையடக்கம் இரண்டு பாடல்களில் அமைத்துப் பாடிய திருமணக் காட்சி ஆசிரியர் அடுத்து வரும் இரண்டு பாடல்களில் தம்மைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். முதற்கண் தமது குல பரம்பரையைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். தமது மூதாதையர் யார் என்பதை அறிமுகப்படுத்தி உள்ளார். பாரசீக வளைகுடாப் பிரதேசத்தில் உள்ளது கீஸ் என்னும் ஒரு தீவு. அங்கு ஆட்சி புரிந்தவர் ஜமாலுத்தீன் என்பவர். அவருக்குச் சொந்தமான குதிரைப் பண்ணை ஒன்று இருந்தது அங்கு சிறந்த அறபு இனக்குதிரைகளே வளர்க்கப் பட்டன. அந்தப் பண்ணையைச் சேர்ந்த குதிரைகளையே தமிழ்நாட்டு மன்னர்கள் பெரிதும் விரும்பி வாங்கலாயினர். அதன் காரணமாக ஜமாலுத்தீன் தமிழ் நாட்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். அவருடைய உறவின் முறையினர் தக்கீயுத்தீன் அப்துல் றகுமான் என்பவர். உடன் பிறந்த சகோதரன் எனக் கூறப்பட்டுள்ளது. இவர் தமிழ்நாட்டில் எல்லைப் புற ஆளுநராகக் கடமையாற்றி உள்ளார். இவருடைய செல்வாக்கு தமிழ் நாட்டில் மிகுந்திருந்தது. பாண்டிய மன்னரின் அவைக்களைத்தையே சிறப்பித்துப் பணியாற்றி உள்ளரர். பாண்டிய மன்னரின் அமைச்சராக இருந்ததோடு பாண்டிய இளவரசியையே திருமணம் புரிந்து கொண்டார். அந்தக் காலத்தில் தமிழ்நாட்டைப் பாண்டிய மன்னர்கள் ஐந்தாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொருவராக இருந்து ஆட்சி புரிந்து வந்தனர். ஐவர் ஆட்சி அன்று நிலவியது. அந்த ஐவருடன் ஆறாமவராக தக்கியுத்தீன் அப்துல் றகுமான் அவர்கள் தமிழ்நாட்டின் ஒரு பகுதியை ஆட்சி புரிந்து வந்துள்ளார். இங்ஙனம் தமிழ்நாட்டை ஆட்சி புரிந்து வந்த அதிராஜராம் பிரபுகுல திலகன் தாம் என ஆசிரியர் தம்மை இவ்வாறு ஒரு பாடலில் அறிமுகப்படுத்தி உள்ளார்.

வழுதிகோன் கொடிதனையே மணந்துமவன் படிதொடவாம் பரியில்
வந்து
முழுதுநவ மணிகறியாய் முத்தடிசி லாய்விருந்து முன்ன ரியாதும்
பழுதுறுமை வருக்காறாம் பாண்டியனென் றெவ்விருதும் படைத்துப்
பார்மேல்
எழுமிசைகொள் ளதிராஜ ராம்பிரபு குலதிலக னியம்பி னானே.

(கடவுள் வாழ்த்து : 28)

### ஆசிரியர் பெயர்

திருமணக் காட்சி என்னும் காப்பியத்தின் ஆசிரியர் சேகாதி நயினான் என்பவரே, இவர் வகுதையைச் சேர்ந்தவர். செய்கு அப்துல் காதிறு நயினான் என்பதே சேகாதி நயினான் என திரிந்திருத்தல் வேண்டும். இச்செய்தியை ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் திருமணக் காட்சி ஆசிரியர்.

வள்ளனபி திருமணக்காட் சியையுயர்ந்தோர் நவிலுமுறை வழிவழாமல்
வெள்ளமக ராலயஞ்சூழ் மேதினியிற் செழுந்தமிழால் விளக்கஞ்
செய்தான்
தள்ளருஞ்சீர் வகுதையபு துல்காதிர் நயினார்சொற் றனையன் வாசக்
கள்ளவிழ்குங் குமப்புயன்சே காதிநயி னான்புகழ்மேற் கருதி னானே.
(கடவுள் வாழ்த்து : 29)

## கொடை நாயகர்

கடவுள் வாழ்த்தில் உள்ள ஆறு பாடல்களில் (30-35) திருமணக் காட்சி இயற்றுவதற்குப் பொருளுதவி புரிந்த கொடை வள்ளல் புகழப் பட்டுள்ளார். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய காப்பி யங்களில் ஒரு குறிப்பிட்ட ஒழுங்கு முறைப்படி கொடை வள்ளல் தம் புகழ் காப்பியம் முழுவதிலும் குறிப்பிடப்படுவதைக் காண்கின்றோம், ஆனால் திருமணக்காட்சி என்னும் காப்பியத்திலோவெனின் கொடை வள்ளலின் புகழ் கடவுள் வாழ்த்திலேயே பாடி முடிக்கப்பட்டுள்ளது. நூலில் வேறு எங்கும் அத்தகைய பாடல்களைக் காண முடியாது. திருமணக் காட்சி என்னும் காப்பியத்துக்குக் கொடை நாயகராய் அமைந்தவர் லப்பை நயினார் என்பவரே. திருமணக் காட்சி என்னும் காப்பியம் இயற்றப்பட்டு இருபத்து மூன்று ஹிஜ்றி ஆண்டுகளுக்குப் பின்னர் அரங்கேற்றப்பட்ட பனி அகுமது மரைக்காயரின் சீறாப் புராணம் ஹிஜ்றத்துக் காண்டம் (சின்ன சீறா) என்னும் காப்பியத்துக் கும் கொடை வள்ளலாக அமைந்தவர் இதே லப்பை நயினான் அவர் களே யாவார். வாலிபராக இருக்கும் பொழுது திருமணக் காட்சி என்னும் காப்பியத்துக்கும் பிற்காலத்தில் சின்ன சீறா என்னும் காப்பி யத்துக்கும் லப்பை நயினான் அவர்கள் கொடை நாயகராய் இருந் திருத்தல் வேண்டும். இவர் யார் எவர் என அறிய நாம் செய்கு சதக்கத்துல்லா ஆலிம் அப்பா அவர்களுடைய பரம்பரையைப் பற்றி அறிதல் வேண்டும்.

பெருமானார் முகம்மது நபி(சல்)அவர்களில் நெருங்கிய தோழரும் மாமனாரும் அவர்களுக்குப் பின்னர் கலிபாப் பதவி ஏற்றவருமான அபூபக்கர் சித்தீக்கு (ரலி) அவர்களின் வழித்தோன்றலாகத் தமிழ் நாட்டில் பிறந்தவர் செய்கு சதக்கு மரைக்காயர் என்பவர். இவர் நாகூர் ஆண்டகை செய்கு சாஹுல் ஹமீது (ரஹ்) அவர்களின் நெருங்கிய நண்பராக விளங்கினர். முன்னவருக்குப் பின்னவருடைய ஆசீர்வாதம் கிடைத்தது. இவருடைய பரம்பரையில் முதிர்ந்த ஞானத்தை உடைய ஒரு மஹான் தோன்றுவார் என நாகூர் ஆண்டகை அவர்கள் தீர்க்கதரிசனமாகக் கூறி இருந்தார். செய்கு சதக்கு மரைக்காயரின் செல்வப் புதல்வராக செய்கு சுலையுமான் (றஹ்) அவர்கள் ஹிஜ்றி 1001 (கி.பி. 1592) இல் பிறந்தார்கள்.

தந்தையரும் தனையரும் காயல் மாநகரில் வாழ்ந்து வந்தார்கள். அந்தக் கால கட்டத்தில் வட இந்தியாவில் வாழ்ந்து வந்த வேதிய ரொழுக்கத்தில் சிறந்து விளங்கிய அந்தணர்கள் ஐந்து குடும்பத்தினர் இஸ்லாத்தைத் தழுவி தமிழகம் புகுந்து எமனேசுவரம் என்னும் இடத்தில் குடியேறினர். அக்குடும்பங்களைச் சேர்ந்தவர்களுள் ஒருவர் அங்குள்ள பள்ளிவாசலில் கத்தீப் என்னும் காரியகர்த்தராய் நியமிக்கப் பட்டார். அவருக்கு அழகும் நற்பண்பும் உடைய ஒரு புத்திரி இருந்தார். அவருடைய பெயர் பாத்திமா. அந்தப் பெண்மணியை செய்கு சுலைமான் (ரஹ்) அவர்கள் திருமணம் புரிந்தார்கள். அவர்கள் ஐந்து புத்திரர்களைப் பெற்றெடுத்தனர். சம்சுத்தீன் லப்பை ஆலிம், அகுமது லெப்பை ஆலிம், சதக்கத்துல்லா ஆலிம், சஹாபுத்தீன் ஆலிம், சலாஹுத்தீன் லப்பை என்பவர்களே அந்த ஐந்து சத்புத்திரர்களுமாவர். செய்கு சதக்கத்துல்லா ஆலிம் அப்பா அவர்கள் ஹிஜ்றி 1040 (கி.பி. 1630) ஆம் ஆண்டில் பிறந்தார்கள். அந்தக் கால கட்டத்தில் ஒளரங்கசீப் மன்னர் இந்தியாவை ஆட்சி புரிந்து வந்தார். நாகை நாயகர் சாஹுல் கமீது (றஹ்) அவர்கள் இவ்வுலகை நீத்து 60 வருடங்கள் கழிந்த பின்னரே இது நிகழ்ந்தது. தமிழகத்திலே ஒப்பாரும் மிக்காரும் இல்லாப் பெருந்தகையாகவும் ஆத்ம ஞானியாகவும் விளங்கிய செய்கு சதக்கத்துல்லாஹ் (றஹ்) அவர்கள் ஹிஜ்றி 1115 ஆம் ஆண்டு சபர் மாதம் 5 ஆம் பிறை அன்று (கி.பி. 1703) ஆம் ஆண்டு ஜூன் மாதம் 21 ஆம் திகதி வியாழக்கிழமை) இவ்வுலக வாழ்வை நீத்தார்கள். செய்கு சதக்கத்துல்லா ஆலிம் அப்பா அவர்களுக்கு ஒரு புத்திரரும் ஐந்து புத்திரிகளும் இருந்தனர். புத்திரரின் பெயர் முகம்மது லப்பை ஆலிம் என்பது. ஹதீஜா உம்மா, ஆமினா உம்மா, சைனபு உம்மா, உம்முஹானி உம்மா, சாறா உம்மா என்பவர்கள் அவர்களுடைய புத்திரிகளாவர். இவர்களுள் இளையவரான சாறா உம்மா என்பவருக்கு இரண்டு புத்திரர்கள் இருந்தனர். ஒரு முறை இவர்கள் இருவரையும் அழைத்துச்சென்று சீதக்காதி அவர்கள் சேதுபதி மகாராஜாவுக்கு அறிமுகம் செய்து வைத்தார்கள். செய்கு அப்துல் காதிர் மரைக்காயர் என வழங்கப்பெற்ற கொடை வள்ளல் சீதக்காதி அவர்கள் மறைவுக்குப் பின்னர் மேற்குறிப்பிட்ட இருவருள் மூத்தவரான பெரிய மரைக்காயர் என வழங்கப்பெற்ற லப்பை நயினா மரைக்காயரை அழைத்து அவரைத் தமது அமைச்சராகச் சேர்த்துக் கொண்டார் சேதுபதி மகாராஜா அவர்கள். சின்ன மரைக்காயர் என்று வழங்கப்பெற்ற அப்துல் காதிர் ஆலிம் புலவர் அவர்கள் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கினார். பெரிய மரைக்காயர் என அழைக்கப்பெற்ற லப்பை நயினார் அவர்களே திருமணக் காட்சி என்னும் காப்பியத்துக்குக் கொடை நாயகராய் விளங்கினார். அவருடைய பெயரைக் குறிப்பிடாது அவருடைய பண்புகளை மாத்திரம் சேகாதி நயினாப் புலவர் அவர்கள் இவ்வாறு பாடியுள்ளார்.

வேதவித்தாம் நபியிறசூல் திருமணக்காட் சியையுலகில் விளக்கஞ்
செய்யப்
பூதலத்திற் பொன்றாது புகழெனச்செந் தேன்மழைபோற்
பொழிந்தான் றூய
மாதவத்தார் செறிகாயற் பதியதிப னிதியதிபன் வளங் குலாவு
நீதமுற்ற வுபயகுலோத் துங்கன்அறி ஞோர்புகழு நிருபன் றானே.
(கடவுள் வாழ்த்து : 30)

மற்றொரு பாடலில் லப்பை நயினார் என்பவர் செய்கு சதக்கத் துல்லாஹ் அப்பா அவர்களின் பேரர் என்றும் செய்கு சதக்கத்துல் லாஹ் அப்பா அவர்கள் செய்கு சுலையுமான் அவர்களின் புதல்வர் என்றும் இருவரும் காயலைச் சேர்ந்தவர்கள் என்றும் இவ்வாறு குறிப் பிடப்பட்டுள்ளது.

உலகெலா மொருசுடர்போ லோங்குகல்வி யெனுங்கடலா யுற்றே
பார்மேல்
அலகிலாப் புகழிறசூல் தீன்பயிரைத் தழைப்பிக்கும் அண்ணல் காயல்
இலகுபொறி யாழியெனு மாலிம்சுலே மான்லெப்பை ஈன்ற பாலர்
குலபதியா லீம்சதக்கத் துல்லாதம் பேரரெனுங் கொற்ற வேந்தே.
(கடவுள் வாழ்த்து : 31)

இதுவரை லப்பை நயினுர் அவர்களின் தாய்வழி மூதாதையரைக் குறிப்பிட்ட ஆசிரியர் வேறொரு பாடலில் கொடை நாயகரின் தந்தை வழி மூதாதையரைக் குறிப்பிட்டுள்ளார். லப்பை நயினுர் அவர்களின் தந்தையார் பெயர் அபூபக்கர் லப்பை என்றும் அபூபக்கர் லப்பை என்பவர் தந்தையார் பெயர் மாமு நயினுர் என்றும் அவர் எல்லா நகரங்களிலும் பேரும் புகழும் பெற்று விளங்கும் வர்த்தக சிரோமணி யார் என்றும் காயல் நகரைச் சேர்ந்தோர் என்றும் இவ்வாறு பாடப் பட்டுள்ளது.

அந்நகர்வாழ் வுறுங்குரிசில் வர்த்தக சிரோமணியார் அலையாச்
சீர்த்தி
எந்நகரும் பேர்விளங்கு மாமுநயி னுவரத்தால் ஈன்ற பாலர்
மன்னவரை யுலாம்வேட்டு மபூபக்கர் லப்பை செல்வர் வளர்பொன்
மேரு
இந்நகரைத் தனிபுரக்கும் லெப்பைநயி னுனென்னும் இசைகொள்
வேந்தே.
(கடவுள் வாழ்த்து : 32)

அப்துல் காதிர் நயினு லப்பை அவர்கள் ஓர் ஆலிமாகவும் (அறிஞராகவும்) ஒரு புலவராகவும் திகழ்ந்தவர்கள். அறபு மொழியிலும் தமிழ் மொழியிலும் பல பிரபந்தங்களை இயற்றி உள்ளவர்கள். நாகூர் ஆண்டகை அவர்கள் பேரில் பல பாடல்களை இயற்றினார்கள். அடைக்கலமாலை என்னும் சிறந்த ஒரு நூலின் ஆசிரியர் ஆக இருந்தவர்கள். அத்தகைய பெரியாருடைய மூத்த சகோதரர் லப்பை நயினான் எனப்படுபவர் என ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

எத்தமிழுந் தெரிந்தமையாற் கற்றோர்கள் வரிசையறி வியல்பாய் வந்த
வித்தகரா கியவப்துல் காதிர்நயி னாலப்பை வேந்தர் முன்னோன்
சத்தமுகி லென்னவிந்த தமிழ்க்காதைக்(கு) அளவறுசீர் தந்தான் செங்கை
நத்தனைய கொடையிலப்பை நயினானென் றோங்குமொரு நாம வேந்தே.

(கடவுள் வாழ்த்து : 33)

பல வழிகளில் பொருள் ஈட்டலாம். அந்த வழிகளால் ஈட்ட முடியாத ஒரு பொருள் உண்டு. அந்தப் பொருளை முகம்மது நபி (சல்) அவர்களின் மன்றாட்டத்தின் மூலமே பெறலாம். மேகம் போன்று கொடை அளிக்கும் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் மன்றாட்டம் பெறக் கருதியே கொடை வள்ளல் லப்பை நயினார் அவர்கள் திருமணக் காட்சிக் காப்பியம் பாட, சோர்வடையாது செல்வத்தை வாரி வாரி அளித்தார். நற்கிரியைகளுக்கெல்லாம் முன் மாதிரியாகத் திகழ்ந்தார் அவர். சிறந்த கொடையாளராக விளங்கினுர். சுருங்கக் கூறின் அவர் வகுதைக்கு அரசராகக் காட்சி அளித்தார். அத்தகைய சீரும் சிறப்பும் பெற்ற லப்பை நயினான் அவர்கள் இவ்வாறு ஒரு பாடலில் புகழப்பட்டுள்ளார்.

கடையாலு முதலாலு மறியாத பொருளையுளங் கருதி மேகக்
கொடையாளர் நபியிறசூல் மன்றாடி யீடேற்றிக் கொள்வ ரென்றே
சடையாது நிதிவாரித் திருமணக்காட் சிக்களித்தான் றழைத்தா னல்லோர்
அடையாளன் கொடையாளன் லப்பைநயி னான்வகுதை யரச ரேறே.

(கடவுள் வாழ்த்து : 34)

அறபு மொழியில் இருந்த திருமணக் காட்சி பற்றிய செய்திகளை எல்லாம் தெரிந்தெடுத்து தமிழ் விருத்தப்பாக்களிலே தந்துள்ளார் சேகாதி நெயினார்ப் புலவர் அவர்கள். இங்ஙனம் இவற்றை ஒரு நூலாக இயற்றுவதற்கு பொருளுதவி புரிந்தவர் லப்பை நயினார்

அவர்கள். அளவற்ற தொகையை அன்பளிப்புச் செய்தார்கள். அவரால் அவ்வாறு செய்ய முடிந்தமைக்குரிய காரணம் அவர் காயற் சீமானாக விளங்கியமையேயாகும். அவரிடம் செம்பொன் மேருமலை போன்று குவிந்திருந்தது. இங்ஙனம் அவர் அரசருக்கரசராகத் திகழ்ந்தார். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன :

காருலவு நிழல்மேவு நபியிறசூல் மணக்காட்சிக் காதை நீர்சூழ்

பாருலகி லானவர்சொல் லறபுரைசெந் தமிழ்விருத்தப் பனுவ லாகச்

சீருலவு செங்கனக மளவறநல் கினன்காயற் சீமான் செம்பொன்

மேருவரை யெனவோங்கும் லப்பைநயி னாெனனுமோர் வேந்தர்
வேந்தே.

(கடவுள் வாழ்த்து : 35)

**அரங்கேற்றம் :**

கடவுள் வாழ்த்து படலத்தில் ஒரு பாடலில் திருமணக் காட்சி என்னும் காப்பியம் அரங்கேற்றப்பட்டமை பற்றிக் குறிப்பிடப் பட்டுள்ளது. பல நூல்களை கற்றவர் இந்நூலாசிரியர். பலவற்றைக் காதாரக் கேட்டவர், அத்தகையோர் பெருமளவில் வாழும் காயல் நகரில் உள்ள மண்டபத்தில் அறிஞர் பலர் முன்னிலையில் நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் திருமணக் காட்சி பற்றிய காப்பியத்தை அரங்கேற்றினார், இந்நூலாசிரியர் சேகாதி நயினான் என்னும் புலவர். இவர் தாம் வகுதை நன்னகரில் வாழ்ந்தவர் எனத் தம்மை அறிமுகப் படுத்தி உள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

சொல்வழுவா வாசரசக் கனிபூணக் கலைதேர்தீ னானோர் தொன்னுற்
கல்விகவி செவியுறக்கேட் டனனாருஞ் செழுந்தேன் காயன் மண்டிற்
செல்வமறா விறைதூதர் திருமணக்காட் சியையரங்கஞ் செய்தான்
கற்றோர்
நல்வரிசை செயும்வகுதை நன்னகர்வாழ் சேகாதி நயினான் றானே.

(கடவுள் வாழ்த்து : 36)

**வருபொருளுரைத்தல் :**

வருபொருளுரைத்தல் செய்யுளாக அமைந்துள்ளது கடவுள் வாழ்த்தில் இடம் பெற்றுள்ள இறுதித் திருவிருத்தம். இப்பாடலிலும் மகுமுது என்ற யானையின் பெயர் குறிப்பிடப்படடுள்ளமையைக் காணலாம் : கடைசிப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

ஆதிநா லுணர்ந்தஇற சூலுல்லாவு மவர்வழியும் மத்துகளு மவிரும்
பொன்னிற்

தீதிலா வொருவரிடத் தொருவர்செல்லுஞ் செய்தியுமுன் னோன்
விருந்து செய்யும் வாறும்

கோதிலா மகுமூது மிசையே வைகிக் குலாவிவரு வதுமாற்றில் வங்க
மேறப்

போதுவது மீன்வயிற்றிற் சென்றுமீட்டும் போதுவதும் வகைவகை
யாய்ப் புகல்கின் றேனே.

**நாட்டு நகரப் படலங்கள் :**

பொதுவாக ஒரு காப்பியத்தில் இடம்பெறும் நாட்டு நகரப் படலங்களில் அக்காப்பியத்தின் பாட்டுடைத்தலைவரின் வாழ்க்கைக்குக் களனாக அமைந்த நாடும் நகரமுமே முறையே வருணிக்கப்படுவதைக் காணலாம். உமறுப் புலவர் சீறாப்புராணத்தில் அதன் பாட்டுடைத்தலைவரான நபிகள் நாயகம் (சல்) அவர்களின் வாழ்க்கைக்குக் களனாக அமைந்த அறபுநாடு அதன் நாட்டுப் படலத்திலும் மக்கமா நகரம் அதன் நகரப்படலத்திலும் வருணிக்கப்பட்டுள்ளன. எதிர்காலத்தில் மறுமைநாளில் நியாயத் தீர்ப்பு நாளுக்குப் பின்னர் நடைபெற இருக்கும் பெருமானார் (சல்) அவர்களின் திருமண ஊர்வலத்தை வருணிக்கும் திருமணக் காட்சி என்னும் காப்பியத்தில் நிலைக்களனாக அமைவது சுவர்க்க லோகமாகும். காப்பியங்களில் அமையும் முறைமையின் அடிப்படையில் பார்க்கும் பொழுது திருமணக் காட்சியில் நாட்டு நகரப் படலங்களில் முறையே சுவர்க்க லோகத்தில் உள்ள நாட்டு நகர வருணனைகள் இடம் பெற்றிருத்தல் வேண்டும் என எதிர்பார்ப்பது இயற்கையே. நாட்டு நகர வேறுபாடுகள் அங்கு இல்லையாதலால் அம்முறைமை இக்காப்பியத்தில் பின்பற்றப்படவில்லை எனலாம். நபிகள் நாயகம் (சல்) அவர்களின் சுவனப்பதித் திருமண ஊர்வலம் இக்காப்பியத்தில் வருணிக்கப்படுவதால் அண்ணல் அவர்கள் பிறந்து வாழ்ந்த அறபு நாடும் மக்க மாநகரும் இங்கு நாட்டுப் படலத்திலும் நகரப் படலத்திலும் விவரிக்கப்பட்டுள்ளன.

அறபு நாட்டை விவரிக்கப் போந்த ஆசிரியர், பெருமானார் நிகழ்த்திக் காட்டிய அற்புதங்களை முதற்கண் கூறி உள்ளார். மாமிசத்தில் நஞ்சை ஊட்டிப் பரிமாறப்பட்ட பொழுது அதனை அமுதாக உண்டவர்கள் எம் பெருமானார் (சல்) அவர்கள். அதன் பயனாக ஏழு உலகங்களிலும் பல புதுமைகளை நிகழ்த்திக் காட்டியவர்கள். நடுவுநிலை தவறாது செங்கோல் செலுத்தியவர்கள். புகழ் ஈட்டியவர்கள். கருணைக் கடலாகத் திகழ்ந்தவர்கள். அத்தகை

யோர் பிறந்த நாடு அறபு நாடு. பொறுக்கும் ஆற்றல் புவிக்கு நிறைய உண்டு. அத்தகைய அருமையான உலகினுக்கு ஒப்பற்ற மணியாகத் திகழ்ந்து கொண்டிருப்பது அறபு நாடு. அங்ஙனம் சிறப்புப் பெற்ற அறபு நாட்டை வருணிப்பது எளிதான காரியம் ஒன்றன்று. எனினும் அறபு நாட்டின் எழில்கள் சிலவற்றைத் தாம் கூறப்போவதாக ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்.

கடுவையமு தெனவருந்தி யுலக மேழும்
காரணங்கள் பலபுதுமை நாட்டி நாளும்
நடுவுநிலை யிசைதாங்கி யொருகோ லோச்சி
நங்கருணைக் கடன்மாரி நனிகொள் வேந்தர்
வடுவையிகழ் திருமேனி பொறுக்கு மாற்றால்
வண்மைதவத் தரும்புவிக்கோர் மணிய தாய் வாய்ந்
திடுமறபு நன்னாட்டி னியல்பு கூறற்
கெளியவல்ல வெனுமவற்றிற் சிலசொல் வாமே.

(நாட்டுப் படலம் : 1)

வழக்கமாக ஒரு நாட்டுப் படலத்தில் இடம்பெறும் வருணனைகள் இங்கும் அமைந்துள்ளன. விவசாயக் காட்சிகள் படிப்படியாக விவரிக்கப்பட்டுள்ளன. அங்கு எழும் இனிய ஓசைகளும் வருணிக்கப் பட்டுள்ளன. கரும்பு ஆலைகளிலே கரும்புத் தடிகளை உடைத்து ஆட்டும் ஓசை மற்றொரு பக்கம் கேட்கும். பறவைகள் எழுப்பும் ஒலி கலந்து விழாவின் ஓசை எல்லா இடங்களிலும் எதிரொலித்துக் கொண் டிருக்கும் இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு இடம்பெற் றுள்ளன.

ஆலைவாய்க் கரும்புடைத் தாட்டு மார்பமும்
சோலைவாய் நறவுணுஞ் சுரும்பி னோதையுஞ்
சேலவா யாவிபுட் சிலம்புஞ் சும்மையும்
வேலைவா யமைத்தெழும் விழவு மானுமால்.

(நாட்டுப் படலம் : 26)

மெய்மையான மார்க்கமாக உலகெலாம் விளங்கிக் கொண் டிருப்பது இஸ்லாம். அந்த மார்க்கத்தில் விதித்துள்ள முறைமைகளுக் கியைய அரசர் ஆட்சி செய்து கொண்டிருக்கின்றனர். வேதியர் மார்க்க போதனை செய்து கொண்டிருக்கின்றனர். அனைவரின் உள்ளங்களும் குளிர்ச்சி அடைந்து கொண்டிருக்கின்றன. அத்தகைய சிறப்பைப் பெற்றது அறபு நாடு. அந்த அறபு நாட்டின் சிறந்த

விளக்காய்த் திகழ்ந்து கொண்டிருப்பது மக்க மா நகர். அத்தகைய சிறப்பு மிக்க மக்க மா நகருடைய வளத்தினைக் கூற முற்பட்டுள்ளார் திருமணக் காட்சி ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு :

விளங்குமெய்ம் மறைவிதி யரசர் வேதியர்
உளங்குளிர்ந் தறபுநா டொழுங்கு தீபமாய்
வளங்கொழுஞ் சீர்திகழ் மக்க மானகர்
களங்கமற் றகல்வளங் கருது வாமரோ.

(நகரப் படலம் : 1)

மக்கமா நகருக்குச் சிறப்பான அணியாகத் திகழ்ந்து கொண்டிருப்பது புனித கஃபத்துல்லாஹ்வாகும். கருணையால் உலகினைக் காக்கும் அல்லாஹ் மலாயிக்கத்துமார் என்னும் வானவர்களான அவனுடைய ஏவலாளரைக் கொண்டு புனித கஃபத்துல்லாஹ்வைக் கட்டி எழுப்பிவித்தான். இப்புனித கஃபா ஏழு உலகங்களுக்கும் நடுமையமாக அமைந்துள்ளது. அது இளஞ் சூரியனின் உள் வடிவு போன்று காட்சி அளித்துக் கொண்டிருந்தது. இக்கருத்துக்களையே திருமணக் காட்சி ஆசிரியர் தமது காப்பியத்தில் இவ்வாறு ஆண்டுள்ளார்.

கருணையாய்ப் புரக்கு மேலோன் ககனது மூல மாக
வருணமா மணியின் வானோ ரமைத்தெழுங் கருபத் துல்லா
வருண வீரேழு பாரு மத்தியிற் றொடுத்துத் தூக்குந்
தருணவான் சுடரிற் றோன்றுஞ் சாரமொத் திருந்த மாதோ.

(நகரப் படலம் : 3)

மக்க மா நகரின் தனிச்சிறப்புக்கள் பல உள : அவற்றுள் ஒன்று அங்கு எப்பொழுதும் திருமறை முழங்கிக் கொண்டிருப்பதேயாகும். பெண்களும் கணவன்மாரும் பிள்ளைகளும் ஒப்பில்லாத அறநெறி உடைய இறைமறையை ஒலித்துக் கொண்டிருப்பர். இங்ஙனம் வேத வாக்கியங்கள் உச்சரிக்கப்படுவதைக் கேட்டுக் கொண்டிருந்த கிளிகள் அவற்றை அதே முறையில் மீட்டிக் கொண்டிருந்தன. அந்த மீட்டலைச் செவிமடுத்த காரிப்பிள்ளை என வழங்கப்படும் கரிக்குருவி அவ்வேத வாக்கியங்களை அவ்வாறே உச்சரித்த வண்ணமாய் இருந்தது. இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன,

வள்ளையுண் குழலி னாரு மகிழ்நரு மகவு மியாரும்
வெள்ளைவண் மதியை வெல்லும் விழுமறை முழக்க லாலே'
கிள்ளையுங் கருதிக் கேட்டுக் கேள்வியிற் றரிக்குங் காரிப்
பிள்ளையும் பகரு மென்னிற் பெரிதுணர் கலரி யாரே.

(நகரப் படலம் : 10)

வள் என்பது வளமுடைமையையும் கலர் என்பது தீய மக்களையும் சுட்டுகின்றன. மக்கமா நகரிலே தீயமக்கள் இல்லை என்பது இதிலிருந்து புலனாகின்றது.

குளம் முதலியவற்றில் நீர் பாயும் மடைவகை மதகு எனப்படும். அத்தகைய மதகுகளை உடையது மதீனா மாநகர். மதகிடையே எருதுகள் உள்ளன. அத்தகைய மதகுகளில் வாளை மீன்கள் பாய்கின்றன. மதகின் பக்கத்திலே கமுகு மரங்கள் இருக்கின்றன, கமுகு மரங்களில் பூக்கள் பூத்துள்ளன. அப்பூக்களின் முகையை வரிவண்டுகள் உழுது உலரச் செய்கின்றன. அங்ஙனம் மலர்ந்த கமுகுப் பூக்களிலே வாளைகள் படுத்து உறங்குகின்றன. இது மதீன மாநகரில் உள்ள ஓர் இயற்கைக் காட்சி. திருமணக் காட்சியிலே அதன் ஆசிரியர் இதனை இவ்வாறு பாடியுள்ளார்.

வாளைப் பகடுமத கிடைபோய் வரிவண் டுழுது முகையவிழ்க்கும்
பாளைக் கமுகின் உயர்ந்துதன்கண் படுக்கு மதின நகர்...
(குறாமுசு படை நபி நாயகத்தின் கபுறை இடிக்க மதினமுறும்

படலம் : 1)

காவல் மிகுதியாக உள்ளது மதீன மாநகர். இதனையே ஆசிரியர் 'கடிசூழ் மதீனா நகர்' (குறாமுசு படை நபிநாயகத்தின் கபுறை யிடிக்க மதினமுறும் படலம் : 5) எனக் குறிப்பிட்டுள்ளார். நல்லவற்றையே நல்கும் வளங்கள் மிக்கது மதீன மாநகர் என்பதை 'நலஞ்சேர் வளங்கொடிரு மதினா' (குறாமுசு படை நபிநாயகத்தின் கபுறை யிடிக்க மதினமுறும் படலம் : 9) என்றும் நெல்வயல்கள் மலிந்தது மதீன மாநகர் என்பது ''செந்நெல் வயற்பொலி னாமதினாநகர்...'' (நபிநாயக மணப் பவனி வரும்படலம் : 11) என்றும் மணம் கமழுகின்ற நறுமணம் சொரியும் பூக்கள் மலிந்த மலர்ச் சோலைகள் மிகுதியாக உள்ள மணி மாநகரம் என்பது 'கந்த நறும்பூம் பொழின் மதீனா' (நாயகம் ஹவுலல் கவுதறிடத்தினிறங்கி விருந் தருந்தும் படலம் : 5) என்றும் திருமணக் காட்சியில் வருணிக்கப் பட்டுள்ளமையைக் காணலாம்,

**உருவகமும் உவமையும் :**

தீன் என்னும் இஸ்லாம் மார்க்கத்தை பயிருக்கு உருவகித்தல் முஸ்லிம் கவிஞருக்கே உரிய கவிமரபாகும். சேகாதி நயினார்ப் புலவரும் இவ்வுருவகத்தைப் பல இடங்களில் தமது திருமணக் காட்சி என்னும் காப்பியத்தில் பயன்படுத்தி உள்ளார். (கடவுள் வாழ்த்து: 31; குந்தறுசா வரு படலம்: 5; நபிநாயக மணப்பவனி வரும் படலம்: 14) தீன் என்னும் இஸ்லாத்தைப் பயிருக்கு உருவகித்துள்ளது தீவினையை வருத்தும் குபிர் என்னும் இஸ்லாம் அல்லாத தன்மையையும் பயிருக்கு உருவகித்துள்ளார், ஆசிரியர்.

செய்ய நேர்வழிக் குரியதோர் தீன்பயிர் தீய்த்து
வெய்ய தீவினைக் குபிர்ப்பயிர் விளைத்திடும் வினையான்
(குந்தறுசா வரு படலம் : 5)

சேகாதி நயினாப் புலவரைப் போலல்லாது ஏனைய கவிஞர் தீனை மாத்திரமே பயிருக்கு உருவகிப்பர். ஏனைய கவிஞர் குபிர் என்னும் இஸ்லாம் அல்லாத தன்மையினைப் பயிரை அழிக்கும் களைக்கு உருவகிப்பர். சேகாதி நயினாப் புலவரும் குபிரைக் களைக்கு உருவகித்துள்ளமையைக் காணலாம்.

கொன்னுதித்த குபிர்க்களையைக் கொய்துநற்றீன் பயிர்விளைக்குங் கோமான்
(நபிநாயக மணப்பவனிவரும் படலம் : 14)

இக்காப்பியத்தில் பல உவமைகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் சில சிறப்பாக இங்கு அமைக்கப் பெற்றுள்ளன. நபிகள் நாயகம் (சல்) அவர்களுடைய அன்பினைக் கங்கையின் நீருக்கு உவமித்துள்ளார். ''கங்கா நதிதருங் கருணை யன்னார்'' (ரசூலுல்லா சிறப்புப் படலம் : 6), முகத்தை மலருக்கு உவமிப்பது கவி மரபு. கருகிய முகத்தைக் கருகிய மலருக்கு உவமிப்பர் கவிஞர். மலர் எவ்வாறு கருகும் என்பதையும் அவர்கள் விளக்குவர். இங்கே புலவர் நெருப்பில் மலர் வீழ்வதனுல் அம்மலர் கருகும் என்பர். இதே கருத்தை சேகாதி நயினாப்புலவர்

'நெருப்பின் வீழ்மலர் போன்முகங் கருகியே நிற்பார்' (குறுமுக வருபடலம் : 5)

என வருணித்துள்ளார். 'அடம்பங் கொடியுந் திரண்டால் மிடுக்கு' என்பது முதுமொழி. இங்கே அடம்பங் கொடி திரண்டால் அதனை அழித்துவிட முடியாது என்பது தொனிக்க இப்பழமொழியை இவ்வாறு ஆண்டுள்ளார்,

'பத்தி யாலடம் புந்திரண் டாலறு படுமோ' (முசுலிம்கள்
கூபாவுக்குப் போம் படலம் : 3)

மற்றொரு பாடலில் பல உவமைகள் ஒரே பாடலில் இடம்பெற் றிருப்பதைக் காணலாம். உலகம் முடிவுறும் கால கட்டத்தில் தஜ்ஜால் என அழைக்கப்படும் ஒரு கொடிய தீயவன் வருவான். அவனை அழிக்க ஈசா நபி (அலை) அவர்கள் வருவார்கள். அவர்கள் வருகையினால் தஜ்ஜாலின் தோழர் மடிந்து ஒழிவர். தஜ்ஜாலும் வெருண்டு ஓடிவிடுவான். பின்னர் கொல்லப்படுவான். அவன் அங்கிருந்து ஓடுவதை விளக்கவே பல உவமைகளை மேற்கொண் டுள்ளார் ஆசிரியர். சூரியனைக் கண்ட பனிபோலும், சந்திரனைக் கண்ட இருள்போலும், புலியைக் கண்ட செம்மறியாடு போலும், உரத்த குரலையும் தீப்பொறி தெறிக்கும் கண்களையும் பிளந்த வாயையும் உடைய ஆளி என்னும் மிகப் பெரிய விலங்கினைக் கண்ட யானை போலும் ஈசா நபி (அலை) அவர்களைக் கண்ட தஜ்ஜால் என்னும் தீயவன் ஓடிவிட்டான் என இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர்.

'கதிரவ னுதயங் காணும் பனியெனக் கலைநி லாக்காண்
முதிரிருள் போலும் வேங்கை முன்னுறு துருவை போலு
மதிகுர றழற்கட் பேழ்வா யாளிபாற் களிறு மானப்
பிதிர்வரை யனீகஞ் சாயப் பேதையன் வெருவி யோடும்'
(ஈசா நபி வருபடலம் : 4)

ஈசா நபி (அலை) அவர்கள் வருவதைக் கண்ட மக்கள் தஜ்ஜாலின் அச்சம் நீங்கினவர்களாய் சூரியனைக் கண்ட தாமரை போன்று அக மிக மலர்ந்தனர் என்று இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளனர்.

'இன்னபின் தச்சாற் கஞ்சி யிடைகரந் திருப்போ ரெல்லாம்
பன்னரும் பருதி காணும் பதுமமென் றகம லர்ந்து
கொன்னற வெளிப்பட் டான்று குளிர்நரர்க் கரசாய் மேய
நன்னய மறைதே ரீசா நபிதமை யினிது காண்பார்'.
(ஈசா நபி வருபடலம் : 9)

அல்லாஹ்வின் தன்மைகளை ஆங்காங்கே பாடல்களில் அமைத் துப் பாடியுள்ளார் ஆசிரியர். அல்லாஹ்வின் உள்ளவையும் இல்லாத வையுமான பண்புகள் அத்தகைய பாடல்களில் இடம் பெற்றுள்ளமை யைக் காணலாம். உலகம் அழிவதற்கு முன்னர் மக்கள் அல்லாஹ் விடம் குறைஇரங்கும் முறை ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளது. அப் பாடலிலே அல்லாஹ்வின் தன்மைகள் பாடப்பட்டுள்ளன.

'அன்னையி லாயழி யாய்துயி லாயொளி
யார்துணை யாயுறுவார்
தன்னையி லாய்மறை யாது விளங்கு
தனிப்பொரு ளேயருளே
முன்னையெ லாமுணர் வோய்புவி வானிடை
மொய்த்த படைப்புகளில்
என்னை யலாதிலை நின்னடி யேனெளி
யேனென வேமொழிவார்'

(துனியா முடியும் படலம்: 8)

இறப்பு இல்லாதவன் அல்லாஹ். தொடக்கமற்றவன். நடுவில்லாதவன். முடிவு இல்லாதவன். முதல்வனானவன். தோல்வியோ சோம்பலோ அற்றவன். எல்லாவற்றையும் படைக்கிறவன்; அருள் புரிபவன்; அரியவன்; எவருடைய உதவியும் தேவையற்றவன்; எல்லோருக்கும் கிருபை புரியும் பண்புள்ளவன்; எல்லாம் வல்லவன்; ஆற்றலில் குறைவற்றவன்; அறுசு என்னும் 'சிங்காதனத்தில்' அமர்ந்திருப்பவன்; என்னும் கருத்துக்களைக் கொண்ட ஒரு பாடல் இவ்வாறு இக்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது.

'முஞ்ச லற்றவன் முதனடு வீறிலா முதல்வன்
அஞ்ச லற்றவன் அனைத்தையும் படைத்தரு ளரியோன்
கெஞ்ச லற்றவன் கிருபைசால் புடையவன் சினக்கும்
எஞ்ச லற்றவ னறுசின்கீ ழாகமே யிருக்கும்'.

(கிளிக்கூட்டின் வண்ணப்படலம்: 27)

அறுசு, குறுசு, சுவர்க்கம், நீர், பூமி, மலை, ஒளி, சூரியன், சந்திரன், கடல், ஆகாயம், காற்று முதலிய அனைத்தையும் யாருக்காக அல்லாஹ் படைத்தானோ அத்தகைய பெருமைக்குரிய நபிகள் நாயகம் (சல்) அவர்கள் வந்தார்கள் என்பதைக் குறிக்கவே ஒரு பாடல் பாடப்பட்டுள்ளது. குபிர் என்னும் இஸ்லாம் அல்லாத தன்மையான இருளைப்பருகும் சூரியன் போன்று நபிகள் பெருமானார் தோன்றினார்கள். அத்தகையோருடைய திருமணப் பவனியே இங்கு விவரிக்கப்பட்டு உள்ளது. இக்கருத்துக்களே,

'அறுசுகுறு சுடனுவணை யளறவனி சயிலமொளி ரலரிவிணு முலவு
நீரார்
நரலையொடு லவுபவன நரர்கள்கணமு நடைபறவை நவிலுத
வளவனை வாரிகால்

வரிசையுட னெவ்வகை யுமொருதரளமணி தருவுதவு மகிமைவலு
மையுமுள துய்யோன்
உருகுகுபி ரிருள்பருகு கதிரெனவிவ் வுலகில்விட வுதயம்வரு
நபிகள் பெருமான்

(நபி நாயக மணப்பவனி வரும் படலம் : 119)

என ஒரு பாடலில் இடம்பெற்றுள்ளன. இங்கு பெருமானாரின் தன்மைகளும் குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காணலாம். பெண்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது

'மதநெடுந் தடங்கட் கும்ப வனமுலை பவளச் செவ்வாய்
புதுமட மகளீர்..............'

(நபி நாயக மணப்பவனி வரும்படலம் : 108)

**ஹிஜ்றி நிகழ்ச்சி :**

பெருமானர் (சல்) அவர்கள் மக்மா நகரிலிருந்து மதின மாநகர் ஏகிய ஹிஜ்றி நிகழ்ச்சி ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இப் பயணத்துக்கு வழிகோலிய இன்னல்களைத் தோற்றுவித்தவன் அபூஜகில் என்னும் மக்காக் குறைசியரின் தலைவன். அத்தகைய செயல்களுக்கு அபூஜகிலுக்குத் தூண்டுகோலாயிருந்தவன் இப்லீஸ் என்னும் செய்த்தான். மலையைச் சிதைக்கக் கொசுகு முயன்றது போன்ற முயற்சியைத்தான் அபூஜகில் மேற்கொண்டான். மனத்திலே கோபங் கொண்டவன் பகைவனான அபூஜகில். பெருமானாரின் வீட்டை முற்றுகையிட்ட இபுலீசை உள்ளடக்கிய அனைவரினதும் வாயில் மண்ணைத் தூவிவிட்டு அல்லாஹ்வின் உதவியால் மதீனா வுக்குச் சென்றார்கள் அண்ணல் நபி (சல்) அவர்கள். ஹிஜ்றத் பற்றிய இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

'மலையான தைச்சிதையக் கொசுகே யரிப்பதனெ
மனமே கறுத்த விகலான்
உலைவா யிறத்திவிடு கெனபூஜ கற்கிறுதி
யுரைகூறி யுற்ற விபுலீ
சலைவாக நித்ரைசெய வவன்வாய்ம ணிட்டொருவ
னருளால் வளர்த்தி மதினா
நிலையா றிடைக்கெழுத னளியாளர் சுத்தமுறு
நினைவோர் தெருட்சி பெறுவோர்!

(நபி நாயக மணப்பவனி வரும்படலம் : 125)

**மறியம் ஆசியா :**

பெருமானார் (சல்) அவர்கள் நியாயத் தீர்ப்பின் பின்னர் மறியம் (அலை) அவர்களையும் ஆசியா (அலை) அவர்களையும் திருமணம் புரிவது பற்றிய செய்தியே திருமணக் காட்சிக்குக் கருப்பொருளாய் அமைந்துள்ளமையால் மறியம் (அலை) அவர்களைப் பற்றியும் ஆசியா (அலை) அவர்களைப் பற்றியும் குறிப்புக்கள் இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் சில பின்வருமாறு அமைந்துள்ளன:

'வனிதையர்க் கரசாய் வந்த மறியமை யாசி யாவை
யுனிதயத் திறகு லுல்லா வுழையுற வதுவை செய்ய'

(சொர்க்கத்திற் சுகித்திருக்கும் படலம் : 126)

'மஞ்சு மிசையே யொருமுதல்வன் வல்ல குதறத் தாலளித்த
அஞ்சு வணமெத் தையைவிரிப்பார் அதன்மேல் நபியும் வரமணக்கும்
கொஞ்சு கிளிபொற் கொடியாரும் குலவ விருக்கு மாசனமாம்
விஞ்சு கிளிக்கூ டொருமூன்றின் மேய வழகிற் சிறிதுசொல்வாம்'

(மகுமூதெனும் யானை வன்னிப்புப் படலம் : 19)

'புரந்த கிருபை யுடையபெரும் புகழாய்ப் பொலியும் பொருளிறை
யோன்
திருந்த நபிகள் பெருமானுஞ் செம்பொற் கொடியா ரிருவோரும்
இருந்து சிறந்த வுவணுலக மெங்கு மிபமே லுலாப்போத!.

(கிளிக் கூட்டின் வண்ணப்படலம் : 1)

'நெறியுறு மதினம்வாழ் நீதி வேந்தருக்
கறிவுறு மறியமை யாசி யாதமைக்
குறியுறு திருமணங் கூட்டு கின்றது
வெறியுறு முவ ணையி லார்க்கு மேன்மையாம்'.

(கிளிக் கூட்டின் வன்னிப்புப் படலம் : 87)

'ஈறிலா னெனது தோழர்க் கென்னவிண் ணொளியிற் றெள்ளி
மாறிலா தமைத்துச் சூட்டு மறியமோ டாசி யாதம்
பேறிலா கியமேற் சொர்க்கப் பிருதவு சதனிற் செல்லக்
கூறுல்ஹூ னவர்க ளெல்லாம் குலாவியே வருவார் மன்னோ'.

(கூறுல்ஹூன்கள் சிறப்புப் படலம் : 28)

'மறிய மாசியா தமைமணக் கோலமே வனைந்து
பிறிதி லாதசீர் மங்கைய ருவகை பெருக்க
வெறியு லாவிய சொர்க்கமெட் டினுமுள்ளோர் விரும்பச்
செறியும் வானவ ரனைவருள் ளமுங்களி சிறப்பார்'
(ஆசியா மறியமைச் சிங்காரிக்கும் படலம் : 14)

'அறிவுசெறி குரிசில்வைகு மஞ்சுக்கூ டதன்வலப்பா
லதிலே யிம்றான்
மறியமம்மா வினிதிருக்க மற்றிடப்பா லாசனத்தின்
மசாகு செல்வப்
பொறியெனுந்தா யாராசி யாவிருக்கப் புறம்போதும்
பூதர் காணா
நெறியிருக ணுதற்செவந்த மணித்திரைபஞ் சுரப்பாங்கர்
நிறைகு வாரே.
(நபி நாயக மணப் பவனிவரும் படலம் : 17)

'பெருகுறுந் தவத்தோர் வைகும் பிருதவு சென்னும் சொர்க்கத்
திருவெனு மறிய மாசி யாவெனுந் தெரிவை மாதர்
மருவுறும் வதுவைக் கோல மாயணி வனைவான் போது
பொருவறு கூறுல் ஹீன்கள் பொற்பினிற் சிறிது சொல்வாம்'
(நபிநாயகத்திற்கு மாலையிடு படலம் : 14)

**பெண்கள் வருணனை :**

காப்பியங்களில் அமையும் சிறப்பியல்புகளில் ஒன்று பெண்களின் வருணனையே. அத்தகைய பெண்களைக் கேசாதிபாதமாக அல்லது பாதாதி கேசமாக வருணிப்பது காப்பிய ஆசிரியர் பின்பற்றும் கவி மரபாகும். கேசாதிபாதமாக வருணிப்பதையே சிறப்பு எனக்கொள் பவர் கவிஞர். எனவே தான் தமது காப்பியங்களில் வரும் பெண் களைக் கேசாதிபாதமாக வருணிக்க முற்படுவர் கவிஞர். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் பாட்டுடைத் தலை வருடன் நெருங்கிய தொடர்புடைய பெண்களைக் கேசாதிபாத மாகவோ பாதாதிகேசமாகவோ வருணிப்பதைத் தவிர்க்கவே அத் தகைய கவிஞர் விரும்புவர். அத்தகைய சிறப்பியல்பினை இடம்பெறச் செய்வதற்காக முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள் பெண் பாத்திரங்களைச் சந்தர்ப்பத்திற்கு ஏற்றமுறையில் படைத்துக் கொள்வர். சீறாப் புராணத்தில் இடம்பெற்றுள்ள தசைக் கட்டியைப் பெண் உருவாக்கிய

படலத்தை இதற்கான தகுந்த எடுத்துக் காட்டாக காட்டலாம். சேகாதி நயினாப் புலவரும் இதே போன்ற ஓர் உத்தியைத் தமது திருமணக் காட்சி என்னும் காப்பியத்தில் பயன்படுத்தி இருப்பதைக் காணலாம். திருமணக் காட்சியின் பாட்டுடைத் தலைவர் திருமணம் புரியும் இரு பெண்மணிகளைப் பாதாதி கேசமாகவோ கேசாதிபாதமாகவோ வருணிப்பது நன்றன்று என நினைத்திருக்கலாம். அதன் காரணமாக சுவனத்து அழகிகளான ஹூறுல் ஈன் பெண்களை வருணிக்க முற்பட்டுள்ளார் கவிஞர்.

விண்ணக மகளிர் ஹூறுல் ஈன் என அழைக்கப்படுகின்றனர், ஹூர் என்பது ஹூறாஉ என்பதன் பன்மை என்பர். ஹூர் + ஈன் என்னும் இரண்டு சொற்களாலானது இச்சொற்றொடர். ஹூர்என்பது தூய்மையைக் குறிக்கும். ஈசா நபி (அலை) அவர்களின் முதற் சீடர்களைக் குறிக்கும் 'ஹவாறிய்யூன்' என்னும் சொல்லோடு இச்சொல் தொடர்புடையது எனலாம். துய்மை என்பதோடு அழகு, உண்மை, நல்லெண்ணம் என்பனவற்றையும் இச்சொல் குறிப்பதாகக் கொள்ளலாம். சுவர்க்க லோகத்தில் உள்ள அழகிய மகளிரைச் சுட்டவே இஸ்லாமிய பரிபாஷையில் இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அவர்களின் அழகு அவர்களின் கண்களிலே பிரதிபலிக்கக் காணலாம் எனக்கூறுவர். கண்ணழகிகள் என்றும் இச்சொற்றொடருக்குப் பொருள் கூறலாம். அவர்களின் கண்களின் கண்மணிகள் கடுமையான கறுப்பாகவும் அந்தக் கறுப்புப் பின்னணியில் கண்ணின் வெள்ளைப் பகுதி நன்கு வெண்மையாகவும் காட்சி அளிக்கும். அதன் காரணமாக அவை பிரகாசமானவையாய் இருக்கும். பளபளப்பானவையாக இருக்கும். சுவனத்துப் பேரழகிகள் என வருணிக்கப்பட்டுள்ளனர். விண்ணுலகப் பேரின்பங்களைச் சுட்டு முகமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளவர்கள் ஹூறுல் ஈன்கள் என்றும் அவர்கள் உருவகமாகவே இங்கு குறிப்பிடப்பட்டுள்ளனர் என்றும் கூறுவர். அல்குர்ஆனிலும் ஹூறுல் ஈன்கள் பற்றிய குறிப்பு உள்ளது.

'ஹூறுல் ஈன்' (என்னும் கண்ணழகிகளாகிய
கன்னிகை)களையும் நாம் அவர்களுக்குத்
திருமணம் செய்து வைப்போம்' (44 : 54)
அணி அணியாகப் போடப்பட்ட கட்டில்க(ளில்
உள்ள பஞ்சணைக)ளின் மீது சாய்ந்த வண்ணமாக
அவர்கள் இருப்பார்கள். நாம் அவர்களுக்கு
(ஹூறுல் ஈன் என்னும்) கண்ணழகி(களாகிய
கன்னிகை)களைத் திருமணம் செய்து வைப்போம்'

(52 : 20)

திருமணக் காட்சியில் ஹூறுல் ஈன்கள் வருணிக்கப்பட்டுள்ளனர். 'ஹூறுல் ஈன்கள் சிறப்புப் படலம்' அத்தகைய ஹூறுல் ஈன்களை வருணிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இங்கு தான் சேகாதி நயினாப் புலவர் அவர்கள் ஹூறுல் ஈன்களைக் கேசாதிபாதமாக வருணித்துள் ளமையைக் காணலாம். முப்பத்திரண்டு பாடல்களில் ஹூருல்ஈன்களின் சிறப்பைப் பாடியுள்ள திருமணக் காட்சி ஆசிரியர் ஹூறுல் ஈன்களின் கேசாதி பாத வருணனையை இருபது செய்யுட்களில் அமைத்து நயம் பெறப்பாடியுள்ளார்.

கேசாதிபாத வருணனைப் பாடல்கள் அனைத்தும் எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களாலே அமைந்துள்ளமையைக் காண்கிறோம். இந்தப் படலத்தின் ஏனைய செய்யுட்கள் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களாகவே உள்ளன. இனி ஹூறுல் ஈன்கள் பற்றிய கேசாதிபாத வருணனைகள் திருமணக்காட்சி என்னும் காப்பியத்தில் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பதைப் பார்ப்போம்.

முதன் முதல் குழல் வருணிக்கப்படுகின்றது. கூந்தலிலே மலர் உண்டு. கமகம என நறுமணம் கமழ்கின்ற அம்மலரிலிருந்து மது வழிந்தொழுகுகின்றது. கருமுகில் போல் திகழ்கின்றது அக்கூந்தல். சுருண்டு திரண்டது அக்கூந்தல். செறிந்து மிகுந்திருந்தது. அத் தகைய குழலை உடையவள் எனஇவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது :

'மதுவழிந் தொழுகி நறைகம கமெனும்
வண்மலர் செறிதலாய்க் காவாய்ப்
புதியகூன் சிலையொன் றிருந்திருண் டறலைப்
பொருதலாய்ச் சூழ்கரு முகிலாய்த்
துதிசுருட் கற்றை சைவலந் துதைந்து
தோன்றலாய் தீநிறக் கடலாய்
முதுமறை நயினார் வழிவாரார் மனமாய்
முரிப்பெனச் செருக்குறுங் குழலார்'

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 1)

அப்பெண்மணியின் நுதலுக்கு அகத்திப்பூவின் மொட்டை உவமிக்க முடியாது. தேய்ந்து கொண்டிருக்கும் சாணைக்கும் உவ மிக்க முடியாது. இந்திர வில்லைக்கூட உவமையாக்கி கூறிவிட முடியாது. சந்திர கிரகணத்தின்போது படிப்படியாக மறையும் பிறை யைப் பெரிதும் ஒத்திருந்தது. சந்திர கிரகணத்தின்போது சந்திரனைப் பாம்பு விழுங்குவதும் உமிழ்வதும் ஐதீகம். அதனையே ஆசிரியர் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

'சேந்தசெவ் வகத்தி தருமுகை யினையும்
　　தேய்ந்துகொண் கருவிச்சா ணையையும்
சாய்ந்தபே ரெழிலுற் றழித்திடு மிந்த்ர
　　தனுவையு முவமையிற் சாற்றேங்
கூந்தலங் கரும்பாம் பொக்குதண் செவ்விக்
　　கொழுஞ்சுடர்த் திங்களை விழுங்கிப்
பாந்தண்மேற் படியின் மெலமெல வுமிழும்
　　படியெனத் திகழ்தரு நுதலார்'.

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 2)

குடி என்பது புருவம். அடுத்து வருணிக்கப்படுவது இரண்டு புருவங்கள். அவை வில்லைப் போன்று இருந்தன. வில்லில் நாணை வைத்து இளைஞர் விளையாடுவர். அந்த விளையாட்டின் போது கரடிக்கு அடி படுகின்றது. அத்தகைய இரண்டு புருவங்களை உடையார் அப்பெண்கள். இதுவே இங்கு இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

வில்லகந் தனிலே நாணிமிர்ந் திருந்து
　　விளைஞர்கை யேவல்செய் திடவே
பல்லக மிருந்து கடிபட வடிக்கப்
　　பட்டநிம் பத்தையும் பழித்துச்
செல்லக மெல்லாம் பயந்தொரு விழியாய்ச்
　　சேணிடை நோக்கியந் தரமாய்ப்
புல்லர்க ளெனவே கருங்கொடி வெருவப்
　　பொருகரும் பிருகுடி யுடையார்'

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 3)

கண்ணின் இயல்புகள் வருணிக்கப்படுவதுடன் அம்மங்கையரின் அடுத்த உறுப்பு விவரிக்கப்படுகிறது. கோபத்தைப் பிரதிபலிப்பது கண். உள்ளக் குளிர்ச்சியைக் காட்டுவது கண்ணே. அதுவே மின் போன்று துள்ளும். வடு எனத் திகழும் அது வசியெனக் கடியும். வலை போன்று இளைஞரைக் கட்டவல்லது கண். மயிலைப் போன்று துரத்திச் செல்ல வல்லது அது. முகம் போன்று ஒளி பரப்பும் சந்திரன் தோன்ற மலர்வது குவளை மலர். அத்தகைய குவளை மலரைப் போன்றது கண். அத்தகைய கண்களை உடையவர்கள் ஹுறுல்ஈன் என்னும் விண்ணுலக மங்கையர் என ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

'கடுவெனச் சினந்து சுதையெனக் குளிர்ந்து
கயலென வளகமேற் றுள்ளி
வடுவெனத் திகழ்ந்து வசியெனக் கடிந்து
வலையென விளைஞரைப் பிணித்துப்
படுகொலை புரியு மயிலெனத் துரந்து
பற்றுயிர் பருகியே மருட்ட
விடுசுடர் வதனத் திங்கள் கண்டலரும்
விரைகமழ் குவளைபோல் விழியார்'.

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 4)

வளைந்த குமிழ் போன்ற குருவிந்தத்தினை ஒத்து விளங்குவது அவர்களின் மூக்கு. அதன் பொன் நிறத்தைக் கொண்டு அதனை பொற்குமிழிக்கு உவமை கூற முடியாது. கலைஞரால் வருணிக்க முடியாதது அந்த மூக்கு. அவர்களுடைய சொல்லாற்றல் அதனை வருணிக்கப் பொதுவாக அமையாது. அத்தகைய தனித்தன்மை வாய்ந்தவை விண்ணக மகளிரின் மூக்குகள். இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

'பொற்குமி ழிதென நவிற்றினு முவமை
பொருந்திடா வெள்ளினம் போலுஞ்
சொற்குமி ழியெனக் கலைஞரெவ் வகையிற்
சொல்லினு மதற்கிணை யுரையா
நிற்குமிழ் குழலா மாடவர் கூறு
நீளமி ழிதனால் விழியால்
விற்குமிழ் செவ்வி திகழ்குரு விந்த
மேதகு விளங்குநா சியினார்'.

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 5)

அம்மங்கையரின் இதழ்கள் அடுத்து வருணிக்கப்பட்டுள்ளன. அவை சிவப்பு நிறமாகக் காட்சி அளித்தன. அவற்றின் நிறத்தைக் குறிப்பிட பல உவமைகள் தரப்பட்டுள்ளன. சிவப்பு நிறக் கனிகள் பல குறிப்பிடப்பட்டுள்ளன. செங்கிடை என்னும் நெட்டியும் பயன் படுத்தப்பட்டுள்ளது. இராமாயணத்தில் பல இடங்களில் கிடை அல்லது செங்கிடை பெண்களின் இதழைக் குறிக்கப் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம். இதனையே ஆசிரியர் இவ்வாறு விரி வாக விளக்கி உள்ளார்.

'தூதுளங் கனியும் வீழியங் கனியும்
துப்பரக் காம்பல்செங் கிடையும்
மாதுளங் கனியும் தொண்டையங் கனியும்
வைத்திடிற் கோபமாம் படியி
லேதுளங் கருதுஞ் சுவையெலா மூறி
யுன்னமிழ் துறைந்திடு மறையாம்
போதுளங் கரும திருந்திழை தாங்கும்
பொற்கொடி வனிதைய ரிதழே'.

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 6)

அடுத்த பாடலில் அப்பெண்மணிகளின் சிரிப்பும் பேச்சும் வருணிக்கப்பட்டுள்ளன. அவர்களுடைய சிரிப்போவெனின் அதற்கு உவமை கூறவே முடியாது. 'எனக்கு எவ்வித இணையும் இல்லை' என்று கூறும் அளவுக்கு அவர்களுடைய புன்சிரிப்பு தனித்தன்மை வாய்ந்தது எனப் புலவர் விவரித்துள்ளார். இனிமையானவை எல்லாம் கலந்து பெறப்பட்ட பொருள் போன்று மிக இனிமையாக உள்ளது அவர்கள் தம் உரையாடல். கிளிப்பிள்ளை போன்றவை மயங்கும் அளவுக்கு அவர்களுடைய சொல் இனிமை, சிறப்பு மிக்கதாம். இவ்விரண்டு கருத்துக்களையுமே ஒரே பாடலில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார் ஆசிரியர்.

'முருந்தினைக் களவி னரும்பினைத் தவள
முகையினை முத்தினை மெழுகிற்
றருந்தினை யளவு மெனக்கிணை யலெனத்
தகமுறு வலித்திடு நகையார்
அருந்தினை யடுபா றேன்குழம் பழமு
மாரினும் வேம்பினுஞ் சார்வார்
மருந்தினை யமைத்துக் கிள்ளையும் வாளு
மயங்கிட வுரைத்திடு மொழியார்.'

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 7)

காதுகளில் அணிந்திருக்கும் குழைகள் பொன்னாலானவை. அவை பொன்னாலான ஊஞ்சல்கள் போன்று தொங்குகின்றன. அவர்களுடைய கன்னங்களும் பொன்னிறமாகவே அமைந்திருந்தன. அவை காண்போரை மயக்கக்கூடியனவாக விளங்கின. காமுகரின் உயிர்களைக் கொள்ளத் தக்கனவாகவும் திகழ்ந்தன. அப்பெண்மணிகளின் குழைகளும் கன்னங்களும் இவ்வாறு வருணிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

'கயலிரண் டுகளும் வள்ளைபோல் விழியும்
காமுக ருயிரிருந் தாடப்
புயலம ரளக்கக் காவகத் தியற்றும்
பொருவில்பொன் னூசல்போற் குழையார்
முயலுறும் புவியின் மெய்யெழி னோக்க
முழுமணி யமைத்ததற் பணமா
மயல்பெரிதளித்துக் காமுக ருயிர்கொள்
வஞ்சியர் பொற்கபோ லமரோ'.

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 8)

பாதாதிகேசமாக வருணிக்கும்பொழுது அடுத்து வருவது முகம். இரவில் இணைபிரிந்து வருவதாகக் கூறப்படும் பறவை வகை சக்கர வாகம் எனப்படும். இது சகோரம் எனவும் வழங்கப்பெறும். இளைஞருடைய கண் சகோரத்துக்கு உவமிக்கப்பட்டுள்ளது. அவை ஒண்டி இருக்கும். தனிமையாக இருக்கும். அத்தகையோர் அழகினைக் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருப்பர். அவ்வாறு வண்டு போல் மொய்க்க எண்ணங்கொண்டிருப்பர். அங்ஙனம் வண்டுகள் உட்கார்ந்து உலாவிவரும். வண்டுகள் மொய்த்தலினால் மலருகின்ற தாமரை மலர்போன்று விளங்குவனவாக அமைந்துள்ளன அப்பெண் மணிகளின் முகங்கள்.தாம் அத்தகைய முகத்தைப் பூரணச் சந்திரனுக்கு உவமிப்பது குற்றமானது எனக்குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். ஏனெனில் பூரணச் சந்திரன் கூடச் சந்திர கிரகணம் ஏற்பட்டால் அளவில் குறைந்துவிடும். எனவே, அத்தகைய பூரணச் சந்திரனை ஹூறுல் ஈன்களின் முகங்களுக்கு உவமை கூறுதல் குற்றமுடையதாகும். இக் கருத்துக்களையே சேகாதி நயினாப் புலவர் இவ்வாறு ஒரு பாடலில் அழகுற அமைத்துப் பாடியுள்ளார்.

'விண்டிருந் தியவு வாமதிக் குறைவு
மெய்யினா லார்குறுங் கிடலாற்
கண்டிருந் துவமை கூறுத னவையாம்
காளையர் கட்சகோ ரங்கள்
ஒண்டிருந் தழகை யிமைப்பிலா நோக்கி
யுணுமளி யாமதி யெனவீர்
வண்டிருந் துலவி விகசித வனச
மலரென வொளிசெயு முகத்தார்'.

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 9)

முகத்துக்குக் கீழாக உள்ளது கழுத்து. எவ்வாறு இளந்தளிர்களை உடைய தாமரையின் மலருக்குக் கீழாக வலம்புரிச் சங்கு இருக்கின்ற தோ அதே போன்று தாமரை போன்ற முகத்துக்குக் கீழாக வலம்புரி

என்னும் கழுத்து அமைந்துள்ளது. பொதுவாக காமுகர் உள்ளம் வருந்திக் கொண்டிருப்பர். அங்ஙனம் உள்ளம் வருந்திய காமுகர் களைக் கண்டு மனம் இளகுகின்றனர் பெண்கள். அத்தகைய காமுகர் களின் மனக்கவலையைப் போக்குவதற்காக அப்பெண்களின் தோள் கள் பஞ்சணையாக மாறுகின்றன. காட்டிலே வளர்ந்த பருத்த மூங்கில்கள் போன்று அத்தோள்கள் பசலை நிறமடைந்தன. அக் காமுகர்கள் தங்கும் பஞ்சணையாக மாறின அழகிய மணிவண்ணத் தோள்கள். அத்தகைய அழகிய தோள்களை உடையவர்களாய்த் திகழ்ந்தார்கள் ஹூறுல் ஈன் பெண்மணிகள் என ஆசிரியர் இவ்வாறு அவர்களை வருணித்துள்ளார்.

'வளர்ந்தபைங் கழனிக் கமுகினை யாரு
வன்கொலை வெட்டவே முருக்கி
யிளந்தளிர்க் கமலத் திருமல ரதன்கீ
ழேய்வலம் புரியன கழுத்தார்
உளந்தருக் குறவே காமுகர்க் கிளகி
யோங்குபஞ் சணையெனத் திரண்டு
தளந்தனிற் பணைத்த கழையெனப் பசந்து
தங்குமென் மணியணி தோளார்.'

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 10)

கைகளும் அகங்கைகளும் விரல்களும் அடுத்து வருணிக்கப்படு கின்றன. அவர்களுடைய கைகளில் வளையல்கள் உள்ளன. அவை பொன்னாலானவை. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் தகையின வாய் அவை அமைந்துள்ளன. பிரகாசிக்கின்ற மணிகள் பதிக்கப் பெற்றனவாய் அவ்வளையல்கள் திகழ்ந்து கொண்டிருந்தன. இன்னிசை பயின்று கொண்டிருக்கும் பாடகர்களின் கையில் உள்ள யாழினைப் போன்று வளையல் அணியப் பெற்ற அவர்கள் தம் கைகள் விளங்கின. நிறத்தால் அவை செங்காந்தளை ஒத்திருந்தன. செங் காந்தள்களோ நெருப்பைப் போன்ற நிறத்தை உடையனவாகும். விரல்களும் செறிந்து அழகாக இருந்தன. அவை கெளிற்று மீனின் சினைகளைப் போன்று காட்சி அளித்தன. இவ்வாறு விண்ணக மகளிரின் கைகளும் அகங்கைகளும் விரல்களும் நயம் சிறக்க இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

'இன்னிசை பயிலும் வயிரியர் கையாழ்
என்னவே சுடரொளி மணிகள்
பொன்னிசை யுறுபூண் வளைந்துள முருக்கப்
பொங்கெழில் தங்குமென் னகையார்

வன்னியி னிறச்செங் காந்தளை நிகர்த்து
வடிவெலாந் திகழகங் கையார்
துன்னிய சினையார் கெளிறள விருந்தஞ்
சூழ்ந்தென வாய்ந்துடும் விரலார்.'

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 11)

பல நிறங்களை உடையது கிளி. செவ்வாயை உடையது. இனிமையாகப் பேசுவது. அத்தகைய கிளியின் நகத்தை மிஞ்சி விட்டது சுவனப் பெண்களின் கை விரல்கள். அம்மகளிர் விரல்கள் ஈந்தின் இலையை விட மேலானவை. யானையை அடக்கும் வெண்மையான அங்குசத்தின் நுனியை விட கூர்மையானவை. நல்ல பொன்னினாலான முத்திரை அச்சின் அழகினை பழிக்கும் தன்மை வாய்ந்தவை அவ்விரல்கள். இளைஞர்கள் எந்த எந்த அழகுகளை விரும்புகிறார்களோ அந்த அழகுகள் அனைத்தும் ஒருங்கே அமையப் பெற்றனவாய் அவ்விரல்கள் திகழ்கின்றன. இதனையே இவ்வாறு வருணித்துள்ளார் இக்காப்பிய ஆசிரியர்.

'பஞ்ஞிறஞ் செவ்வாய் கரும்பெனக் கிளவி
பயில்சுகத் தளவினைச் செங்காய்
விஞ்சிய வீந்தி னிலையினைத் தவள
வேழங்கு சத்தினைச் செம்பொ
னெஞ்சிற வமைத்த முத்திரைக் கோலி
னெழிலினைப் பழித்திளை ஞோர்கள்
நெஞ்சினைக் கருதும் எவ்வழ கவையு
நிறைந்திடத் துலங்கிய வுகிரார்.'

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 12)

நெகிழ்ச்சியை உடையது பெரிய பொன் மலை. அப்பொன் மலையிலிருந்து பெறப்பட்ட பொன்னிலிருந்து இழைக்கப்படுபவை பொற்குடங்கள். அத்தகைய திரண்ட பொற்குடங்கள் போன்றிருந்தன அப்பெண்களின் தனங்கள். மயிர்சிலிர்த்து மகிழ்ச்சி பொங்கினது. அன்று தோன்றிய தாமரை மொட்டுகளிலே வண்டுகள் அமர்ந் திருப்பன போன்று காட்சி அளித்தன முலைகள். அவை தளதளத் தன. இரு கண்களும் கறுத்திருந்தன. பாரம் காரணமாக இடை நடுங்கியது. தனங்கள் பருத்தன. பளபளத்தன. அழகு மிக்கு விளங்கின. எங்கும் தேமல் பூத்துப் பொலிவுபெற்று கவர்ச்சி உடையனவாய் அமைந்தன அத்தனங்கள். ஆபரணங்கள் அணியப்பெற்ற முலைகளை உடையவர்களாய் அவ்வரம்பையர் திகழ்ந்தனர் என ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

'இளகுபொற் சயில மெனப்ப ணைத் திடங்கொண்
டிழைகொள்பொற் குடமெனத் திரண்டு
புளகமுற் றிரண்டு கமலநாண் முகையிற்
பொறியறு காலிருந் தென்னத்
தளதளத் திருகண் கறுத்திட நடுங்கத்
தரித்தவம் புறம்புடைத் தடர்ந்து
பளபளத் தழகு திதலைமெய் நலிவெண்
பகட்டையும் பகட்டுபூண் முலையார்.

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 13)

மயிரொழுக்கு அடுத்து வருணிக்கப்பட்டுள்ளது. நிரந்தரமாக உள்ளது அந்த மயிரொழுக்கு. சில மனிதர் மலை ஏறுவதற்குப் பயன் படுத்தும் படிக்கட்டுக்கள் போன்று அம்மயிரொழுக்கு காட்சி அளித்தது. அதனை விளக்குவதற்கு மூன்று உவமைகள் ஒரு பாடலில் தரப்பட்டுள்ளன. உந்தியின் தாமரை மொட்டு இரண்டினை ஏந்த ஒரு கருநாண் நின்றது போல் மயிரொழுக்கு காட்சி வழங்கியது. யானை போன்ற ஆபரணம் அணியப்பெற்ற இரண்டு கொங்கை களிடையே இருந்து தாரையாய் வீழ்வது போன்று மயிரொழுக்கு அமைந்திருந்தது. பந்தை வெல்லும் கொங்கைகளுக்கு அணியப் பெற்ற சாந்து ஒழுகின தன்மைபோல் மயிரொழுக்கு அமைந்திருந்தது என்றும் வருணிக்கப்பட்டுள்ளது. அப்பாடல் இது தான் :

'உந்தியின் முளரி முகையிரண் டேந்தி
யொருகரு நாணின்ற தென்னத்
தந்தியை நிகர்பூண் முலைகணாப் பணின்பாட்
டாரையின் சுரந்துவீழ்ந் தென்னப்
பந்திகல் கொங்கைக் கணிந்தசாந் தொழுகு
பான்மையா மென்னவா டவர்கள்
புந்தியற் றனவெற் பேறுசோ பானம்
போலுமு தாமயி ரொழுங்கார்

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 14)

உந்தி என அழைக்கப்படும் அழகான கொப்பூழ் நாரியருக்கு வனப்பை ஊட்டிக் கொண்டிருப்பதாகும். நாமறிந்த மொழிகளால் அதனை வருணிக்க முடியாது. இன்பம் என்னும் கடலிலே ஆலிலை போல் காமுகர் தத்தளிப்பர். பெண்கள் என்னும் கடலிலே மயங்கும் காமுகர் தம் ஆவி கடற் சுழியிலே சுழிப்பது போன்றவர்களாவர். அத்தகைய கடற் சுழி போன்றது வானக மகளிரின் சுழிகள் என்னும் இன்னோரன்ன கருத்துக்களையே ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு பாடியுள்ளார்.

'காமுக ரின்பக் கடலர சதன்மேற்
கவினுமோ ராலிளந் தளிர்போற்
றோமறு மழகு தோன்றிய வுதரத்
தோகையர் மாலெனு மாழி
மாமய லுங்கா முகர்களா வியெலாம்
வாரியிற் சுழிக்குமற் புதம்போ
னாமுது மொழியிற் றுதிப்பதற் கரிதாம்
நாரிய ருந்தியஞ் சுழியே.

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 15)

மலைக்குகை கந்தரம் எனப்படும். பெருமானார் முகம்மது (சல்) அவர்களுக்கு இறையருள் வாக்கு ஹிறா என்னும் மலைக்குகையிலே அருளப்பட்டது. ஆகையினாலேயே அண்ணல் (சல்) அவர்கள் 'கந்தரம் இருந்த நபி' என வருணிக்கப்பட்டுள்ளார்கள். அத்தகைய திரு நபி அவர்களின் திருமணக் காட்சியைக் காணும் வாய்ப்பைப் பெறாதவர்கள் உள்ளம் உடைந்து வாடுவர். அத்தகையோரின் உள்ளத்தைப் போன்றதே ஹூறுல் ஈன்களின் இடைகள் என ஆசிரியர் வருணித்துள்ளார். அந்தரம் போன்றும் நுணுகிளை போன்றும் உள்ள இளம் பெண்ணின் இடை மின் போன்றும் அம்பு போன்றும் முறிய மாட்டாமல் வருந்தியது. மந்தரம் இரண்டையும் தாங்க முடியாது உடைந்து இடைந்து இடைந்தது. அத்தகைய இடையை உடையவர் கள் வானுலகவனிதையர் என ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

'அந்தர மென்ன நுணுகிளை யென்ன
வாய்ந்த பூங்கொடியிள வஞ்சி
சுந்தர மிகுமின் னென்னவா ளியெனத்
துளங்கிய தென்றலி னொசிந்து
மந்தர மிரண்டு தாங்குதற் கேங்கி
வைகலு முடைந்திடைந் திடைந்து
கந்தர மிருந்த நபிதிருக் காட்சி
காண்கிலா ருள்ளநே ரிடையார்'.

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 16)

அடுத்து வருணிக்கப்படுவது சுவன மாதரின் துடைகள். அவை வாழை மரத்தண்டினை ஒத்திருந்தன. தூங்கலின் இணைக்கரம் போன்றன. ஒத்த இரண்டு கைகள் போன்றன. இவ்வாறு துடைகள் வருணிக்கப்பட்டுள்ளன.

'துய்யசூற் கதலி தண்டிரண் டென்னத்
தூங்கலி னிணைக்கர மென்ன
வுய்யவா டவர்கள் புயக்களி றடுக்கு
மொளிர்மணிக் கம்பர மென்னச்
செய்யவாய் வனப்பின் மென்மைய வாகித்
திரண்டுமால் செயுமணிக் குறங்கார்
மெய்யபே ரழகின் கடலிடை ஞெண்டை
விளைவுறப் பொருவுசா னுவினார்'.
(கூறுல்ஹூீன்கள் சிறப்புப் படலம் : 17)

காலும் காற்கரண்டையும் அடுத்து விவரிக்கப்படுகின்றன. காலின் ஒரு பகுதியான கணைக்காலை முதலில் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். முழந்தாளுக்கும் பரட்டுக்கும் இடைப்பட்ட உறுப்பே கணைக்கால் எனப்படும். கணைக்கால் நீண்டும் வடிவாகவும் இருக்கும். வருணிக்க முடியாத அளவுக்கு சிறந்து இருக்கும். சினை விராலுடனோ பொற்காளத்தினுடனோ அம்புப் புட்டிலுடனோ ஒப்பிட முடியாதது கணைக்கால். தென்னையின் குரும்பைகள் தாழ்ந்தன போன்று திரட்சியுடைய அழகான பரடுகளைக் கொண்டவர்களாய் அப்பெண்மணிகள் விளங்கினர். இவ்வாறு அவர்கள் வருணிக்கப் பட்டுள்ளனர்.

'சினைவிரா லினும்பொற் காளம தினுங்கோல்
செறிவுறு தூணிய தினுமே
நினைபவ ரிடையொவ் வாதெனச் சிறந்து
நீள்வடி வமைகணைக் காலார்
வினைவரா தென்ன நாளிகே ரத்தின்
மென்குரும் பைகள்மதம் பணிந்தாங்
கனைவரா ரழகு நிறைசெயுந் தராசு
தாமெனத் திரண்மணிப் பரடார்'.
(கூறுல்ஹூீன்கள் சிறப்புப் படலம் : 18)

அப்பெண்களின் குதிகளும், தாள்களும், கால் விரல்களும், பாதங்களும் அடுத்து வருணிக்கப்பட்டுள்ளன. உள்ளங்காலின் பின்பக்கம் குதிங்கால் என்றும் குதி என்றும் வழங்கப்பெறும். கொங்கைகள் குலுங்கப் பெண்கள் ஆடும்பொழுது பயன்படுத்தும் பந்தைப் போன்றவை குதி கால்கள். தாள் என்னும் பாத அடி கடலில் உள்ள ஆமை போன்றிருந்தது. கால் விரல்களும் பவளத்தை இணைக்கிணையாகக் காட்சி அளித்தன. பதமோ செம்பஞ்சுக் குழம்பு பூசப்பட்டதாயிருக்கும். பங்கயம் என்பது தாமரை. அனிச்சம் என்பது மோந்தால் வாடும் இயல்பினையுடைய பூ வகை. இக்கருத்துக்களே இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ளன.

'கொங்கைகள் குலுங்க மாதர்க ளாடுங்
குடங்கையின் பந்தெனுங் குதியார்
செங்கய லுலவுந் திரையுறு கமடந்
திருமுறை நிகர்புறத் தாளார்
கங்கைமின் மதிப்பத் துகிரதாய்த் துகிரைக்
கடைந்திணைக் கியதென விரலார்
பங்கயம் பாலா யனிச்சமே முள்ளாய்ப்
பயப்படு மலத்தகப் பதத்தார்'.

(கூறுல்ஹீன்கள் சிறப்புப் படலம் : 19)

கேசாதிபாத வருணனையில் கடைசியாக விவரிக்கப்படுவது அப் பெண்மணிகளின் நடையேயாகும். நடையில் சிறந்து விளங்குவன அன்னமும் பெண் யானையும். அவை இரண்டும் கண்டு உள்ளம் உருகும் பாணியில் அமைந்து இருந்தது அப்பெண்மணிகளின் நடை. அத்தகைய நடையைக் கண்டதும் ஆண்களின் உள்ளம் மயக்கம் உற்றது. பொன்னும் ஆபரணங்களும் அணிசெய்யும் கொங்கைகளை உடைய பெண்கள் மெல்லிய இடை துடியென மின் ஒளி போல் விட்டு விட்டு நுடங்க அப்பெண்மணிகளின் நடை அமைந்திருந்தது. அந் நடையைக் கண்ட அன்னப் பறவைகளும் அது மயிலின் சாயல் என நினைத்துத் தோற்றுப் போயின. அப்பெண்மணிகளின் அழகான கண்கள் மீன்கள் போன்று புரண்டன. காதுகள் வரை ஓடுவன போன்று காட்சி அளித்தன. இனிமையான அமுதினைப் பெற்ற சுவர்க்க லோகமே விளங்க மிக்க புகழுடன் அசைந்து நடப்பவர்களாய் அந்த ஹூறுல் ஈன் மகளிர் காட்சி வழங்கினர். இக்கருத்துக்கள் இவ்வாறு ஒரு பாடலில் அமைந்திருக்கக் காணலாம்.

அன்னமும் பிடியும் கண்டுள முருக
வாடவர் நெஞ்சின்மால் பெருகச்
சொன்னமும் பணியு மணிசெயுங் கொங்கைத்
துடியிடை மின்னென நுடங்க
வன்னமுஞ் சாயன் மயிலெனத் தோற்ற
வடிவிழி கயலெனப் புரள
வின்னமு துயர்பொன் னுலகெலாம் விளங்க
விசையவே யசையுமென் னடையார்.

(கூறுல் ஹீன்கள் சிறப்புப் படலம் : 20)

பல வாத்ய ஒலிகள் திருமணக் காட்சியில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவ்வொலியை எழுப்பிய வாத்தியக் கருவிகள் பலவற்றையும் சேகாதி நயினாப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

'பரசு மங்கல வலம்புரி முழக்கொடும் பதலை
முரசு திண்டிமந் தடாரிபல் லியங்களு முழங்க'.
(கைசரசுப் படலம் : 1)

சுவர்க்க லோகத்திலும் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் திருமணப் பவனியிலும் முழங்கும் ஒலிகளும் அவற்றை மீட்டும் வாத்தியங்களும் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளன.

முரசமுந் திமிலையு முழவும் பம்பையு
மிரைசெய் திண்டிமந் தடாரியு மிடக்கையும்
(நபிநாயக மணப்பவனி வரும் படலம் ; 55)

'காளமுந் தாரையும் காள சின்னமும்
தாளமும் வீணையுந் தம்பு ராதியு
மேளமு மென்னமே கதவ மேவிய
(நபி நாயக மணப்பவனி வரும்படலம் : 56)

'நவுரிபம் பைகளெனு நாடு நாதமும்'
(நபிநாயக மணப்பவனி வரும் படலம் : 59)

**ஓசை நயம் :**

இசைக் கருவிகளைக் கொண்டு ஓசை நயத்தை அமைப்பதோடு ஆசிரியர் நின்று விடவில்லை. பாடலிலே சொற்களை அமைப்பதன் மூலமும் ஓசை நயத்தைத் தமது காப்பியத்தில் புகுத்தியுள்ளார் இக் காப்பிய ஆசிரியர்.

'அப்பறவை யுற்றுறை யனித்திய மனத்தையு
மளித்தரு டீயோ
னற்புறு கருத்தனய லற்றுயர் தவத்துறை
தகைப்பெரு மையோ
னொப்பரு முருத்தியின் மறப்புண விலக்கனறு
ஷ-க்கு மதின்கீழ்
வைப்புறு மரத்தமணி யிற்சுடர் பரப்புமொரு
மாளி கையினே
(சொர்க்கத்திற் சுகித்திருக்கும் படலம் : 93)

மற்றொரு பாடலில் ஓசை நயம் இவ்வாறு அமைந்துள்ளது.
'மத்தாள மெத்தனைய திற்றாள மெத்தனை
வகைத் தாளமுங்
கைத்தாள மெத்தனை யதிற்றாள மெத்தனை

விகற் பானது
மத்தாள மிக்கெழு முறைக்கே யிறைத்திடு
மதிற் கீதமு
மெய்த்தாள கித்தனை யுருக்கா யுதித்திடு
விதப் பாடலே'.

(சொர்க்கத்திற் சுகித்திருக்கும் படலம் : 95)

ஓசை நயம் மிக்கு விளங்கும் ஏனைய செய்யுட்கள் பின்வருமாறு அமைந்துள்ளன.

'அருக்க னெண்ணில வல்லவ னெண்ணில வகலா
நெருக்க மின்கண மெண்ணில நீள்சுட ரெறிக்கும்
வருக்க மெப்படி யப்படி யெனினுமின் வடிவி
னிருக்கு மப்பணி மிக்கொளி வாகவே யிலங்கும்'.

(ஆசியா மரியமைச் சிங்காரிக்கும் படலம் : 3)

'முடிமிடை மிடைந்திடப் பராக மொய்த்திட
வடிமிடை மிடைந்திட வணிசி றந்திடக்
கொடிமிடை மிடைந்திடக் குழுமி சேணொடும்
படிமிடை மிடைந்திடப் பரிநடத் துவார்.'

(நபிநாயக மணப்பவனி வரும் படலம் : 60)

'உற்றமனு வுக்குமம ரர்க்குநெறி யிற்புகுகி
னுக்குமெவ ணுக்கு ளுயிராய்
மற்றவர்க ளுக்குமர சற்றவர்க ளுக்குநிதி
மைப்பொலிகு பிர்க்கு மறலார்
நற்றவமு நற்குணமு மற்பெலமு மற்புதமு
நற்பரிவு பெற்ற மறையோர்
கொற்றதல் வற்பரவி நித்தமருள் பெற்றவொரு
குற்றமில சுத்த முடையோர்'.

(நபிநாயக மணப்பவனி வரும் படலம் : 127)

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் நிறுவிச் சென்ற அற்புதச் சாதனைகள் சில திருமணக் காட்சி என்னும் காப்பியத்தில் சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம். அவற்றுள் ஒன்று மானுக்குப் பிணை நின்று அதனை வேடனிடமிருந்து காப்பாற்றியதாகும்.

'மான்றவ றாதுவேடன் மாட்டொரு பிணையாய் நின்றோர்'.

(றசூலுல்லா சிறப்புப் படலம் : 9)

சிரியா நாட்டு ஹபீபு மன்னனின் வேண்டுகோளுக்கு இணங்க சந்திரனை இரண்டாய்ப் பிளந்து சேர்த்து வைத்தவர் என்பதனை 'நிலவை யீர்ந்தவர்' (கைசரசுப் படலம் : 5) எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். 'நிசியிற்சசி யிற்பங்கு நிலத்திற்குற நல்கும்' (சொர்க்கத் திற் சுகித்திருக்கும் படலம் : 111) என வந்துள்ள அடியும் இதனையே சுட்டுகின்றது.

உமறுப் புலவர் தமது சீறாப்புராணத்தில் தசைக் கட்டியைப் பெண்ணுருவம் அமைத்த நிகழ்ச்சியைப் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் செய்து காட்டிய அதிசயமாகக் குறிப்பிட்டுள்ளார். அதனையே சேகாதி நயினாப் புலவரும் தமது திருமணக் காட்சியில்

சோகந்தரு மொருவன்பெறு சோரித்தசை யதனை
மோகந்தரு பெண்ணாக முயன்றேயரு ளரசே'

என்று பாடியுள்ளார்.

(சொர்க்கத்திற் சுகித்திருக்கும் படலம் : 107)

சீறாப்புராணத்தில் பாந்தள் வதைப்படல நிகழ்ச்சியும் பர்ப்பத ராஜனுடன் உரையாடிய நிகழ்ச்சியும் இரண்டு வெவ்வேறு படலங் களில் விவரிக்கப்பட்டுள்ளன. இவ்விரண்டு நிகழ்ச்சிகளையும் ஒரு பாடலில் உள்ள முதலிரண்டு அடிகளிலும் இவ்வாறு சுட்டியுள்ளார் ஆசிரியர்.

உரகனைச் சிரஞ்சிதைத் தோங்க லோடுநேர்
விரகினைப் பேசிய வேத நாயகர்'

(கிளிக் கூட்டின் வண்ணப் படலம் : 69)

பின்னைய நிகழ்ச்சி மற்றொரு பாடலில் 'குன்றமுட னுரைபேசுங் கோமான்' (நபிநாயக மணப்பவனி வரும் படலம் : 23) என வந்துள் ளமையுங் காண்க. இச்செய்தியையே மற்றொரு பாடலில் 'வெற்பி னுடனே ருரைவிளம்பும் வேத...' (நபிநாயகம் ஹவுலுல்கவுதரிடத்தில் இறங்கி விருந்தருந்தும் படலம் : 10) என அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர்.

**சொல்லாட்சி :**

இனி ஆசிரியரின் சொல்லாட்சியைப் பார்ப்போம். பழங்காலத் தமிழ் இலக்கியத்தில் கரை கண்டவர் எனக் கூறும் அளவுக்கு அவர் தம் சொல்லாட்சி திருமணக் காட்சியில் இலங்கிக் கொண்டிருப்பதைக் காணலாம். மிகமிக அருமையாகப் பயன்படுத்தி உள்ள சில சொல் லாட்சிகளை ஈண்டு எடுத்துக் கொள்வோம்.

இழிக்கி என்பது இழி என்னும் அடியாகப் பிறந்தது. இழிவு படுதல் என்னும் பொருளில் திருக்குறளில் (964) வந்துள்ளது. இங்கே ஆசிரியர் கைவிட்டு என்னும் பொருளில் 'நன்னெறி யிழிக்கித் தீநெறி பழக்கி நடக்கும்வன் காபிரானவர்' (பெண்ணோடு பெண் புணரும் படலம் : 1) எனப்பயன்படுத்தி உள்ளார்.

உரகன் என்றால் பாம்பு. 'உரகன்வாய் கீண்ட மாதவன் போல' என்கின்றது கல்லாடம் (46). திருமணக் காட்சியிலும் 'உரகனைச் சிரஞ்சிதைத்து' (கிளிக்கூட்டின் வண்ணப் படலம் : 69) என அதே கருத்தில் உரகன் என்னும் சொல் ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்.

ஊ என்பது தசை எனப்பொருள்படும். 'ஊ என் ஒரு பெயர் ஆவொடு சிவணும்' என்கின்றது தொல்காப்பியம் எழுத்ததிகாரம். அதற்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர் 'ஊவெனத் தசையை உணர்த்தி நின்ற ஓரெழுத்தொருமொழி' என ஊ என்பதற்குத் தசை எனப்பொருள் கூறியுள்ளார். சேகாதி நயினாப் புலவரும் 'ஊ நாரும் வேட மொளிந்த' (தச்சால்வரு படலம் : 16) என வரும் சொற்றொட ரில் தசையைக் குறிக்க ஊ என்னும் ஓரெழுத்தொரு மொழியைப் பயன் படுத்தி உள்ளார்.

நஞ்சைக் குறிப்பது கடு என்னும் சொல். பெருமானார் (சல்) அவர்கள் ஒரு முறை நஞ்சு கலந்த இறைச்சி பரிமாறப்பட்டபொழுது அதனை அமுதாக மாற வழிவகுத்தார்கள். இதனையே இக்காப்பிய ஆசிரியர், 'கடுவையமு தெனவருந்தி' (நாட்டுப்படலம் : 1) எனக் 'கடு' என்னும் சொல்லை நஞ்சைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தி உள்ளார். திருமுருகாற்றுப் படையிலும் இச்சொல் இதே கருத்தில் (148) ஆளப்பட்டுள்ளது.

கீடம் என்றால் புழு என்கிறது திவாகரம் நிகண்டு. இதே சொல்லை இதே கருத்தில் இக்காப்பிய ஆசிரியர் இவ்வாறு ஆண்டுள்ளார் :

'..............கண்ணிமைத் திடுமுன் றீயோர்
செவந்ததீ விழுங்கீ டம்போற் றீவர்மற் றொருவ ரன்றே'
(யாஜூசு மாஜூசு வருபடலம் : 16)

வஞ்சகம் குத்திரம் எனப்படும் (திவாகரம்) இச்சொல்லை இதே கருத்தில் அருமையாக இவ்வாறு உபயோகித்துள்ளார் ஆசிரியர்.

'குத்திர மகலா வன்னோர் கோதைமார் தமிலொ ருத்தி'
(யாஜூசு மாஜூசு வருபடலம் : 7)

தேருருளை சில்லி எனப்படும். 'வெள்ளிச் சில்லி புக் குற்றது' என்பர் கம்பர் (கம்பராமாயணம் : கடிமணப் படலம் : 71). திருமணக் காட்சியிலும் இச்சொல் இதே கருத்தில்

'பல்லணம் விசித்துறு பரித்திரள் கடாவிச்
சில்லிக ளிணக்குகொடிஞ் சிச்சகடு தூண்டி'

(இமாமஹுதி வருபடலம் : 25)

என ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம். இதே படலத்தில் உள்ள 23 ஆம் செய்யுளிலும் இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

முழுதும் நம்புதல் என்னும் பொருளில் நவ்வுதல் என்பது ஆளப் படுகிறது. இச்சொற்பிரயோகம் திருநெல்வேலி மாவட்டத்தில் பெரு வழக்கினைப் பெற்றிருப்பதைக் காணலாம். இச்சொல் திருமணக் காட்சியில் இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

'அவ்விய குபிர்கணந்த வறுத்தறுத் திசுலா மார்க்க
நவ்வினர்க் கிருகண் மாய்க்கு நன்னிலைக் கலிமா நல்கி'

(ஈசா நபி வருபடலம் : 18)

நொறில் என்றால் விரைவு என்பது பொருள். அதிவீரராம பாண்டியர் தமது நைடதத்தில் நொறில் என்னும் பதத்தை விரைவு என்னும் பொருளில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

'நொறில்பரித் தடந்தேர் உந்தி நோன்சிலை குழைய வாங்கி'

(போர்புரிப் படலம் : 33)

சேகாதி நயினாப் புலவரும் நொறில் என்னும் சொல்லை விரைவு என்னும் கருத்தில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

'நொறில்பரித் தேர்க டாவி நொன்மையா தவனி றப்ப'

(ஈசா நபி வருபடலம் : 25)

பண்டி என்பது வயிறு எனப்பொருள்படும். வில்லிபுத்தூராரின் மகாபாரதத்தில் 'பண்டி நிறைவுறு பின்பு' (வேத்தியல் படலம் : 48) என வயிறைக் குறிக்க பண்டி என்னும் சொல் பயனபடுத்தப் பட்டுள் ளமையைக் காணலாம். சேகாதி நயினாப் புலவரின் திருமணக்காட்சி என்னும் காப்பியத்திலும் பண்டி என்பது வயிறு எனப் பொருள்பட ஒரு பாடலில் இவ்வாறு உபயோகிக்கப் பட்டுள்ளமையைக் காணலாம்.

'நிற்ப ரென்செய்வ னோவெனப் பதைத்திட நேரே
கர்ப்ப வஞ்சியர் பண்டியைக் கருவியாற் கீறி'
(குறுமூசு வருபடலம் : 6)

சூரியனைக் குறிக்கும் உமறுப் புலவர், பார்க்கரன் என்னும் பதத்தை உபயோகித்திருப்பதைச் சீறாப்புராணம் பற்றிய இயலில் கண்டோம். சேகாதி நயினாப் புலவரும் தமது திருமணக் காட்சியில் அதே கருத்தில் பார்க்கரன் என்னும் சொல்லை இவ்வாறு பயன் படுத்தி உள்ளார்.

'நீல மும்பசும் பச்சையும் வயிரநித் திலமுஞ்
சால வொண்மணி யாவையும் வகைவகை தரித்து
மூல மன்னிய பூடணத் திரளவை முழுது
ஞால மெங்கணுந் தோற்றுபார்க் கரனையு நகைக்கும்'.
(ஆசியா மறியமைச் சிங்காரிக்கும் படலம் : 2)

சுவன பதியில் கிடைக்கும் உணவு வகைகளில் ஒன்று பொரிக்கறி எனக்கூறப்பட்டுள்ளது. தமிழ்க் கல்வெட்டுக்களில் இச்சொற்றொடர் இடம் பெற்றுள்ளது. (தென்னிந்திய கல்வெட்டுகள்: 11 : 127 : 9) புளியிடாமற் சமைத்த கறிவகை பொரிக்கறி என வழங்கப்படும் என்பர். இக்கறிவகையை சேகாதி நயினாப் புலவர் இவ்வாறு குறிப் பிட்டுள்ளார் தமது திருமணக் காட்சியில் :

'உற்ற விவ்வொடுக் குள்ளவிப் பாகமு மொருங்கு
துற்று பற்பல பதார்த்தமும் பொரிக்கறித் தொகையும்'
(கிளிக்கூட்டின் வண்ணப்படலம் : 60)

முஞ்சுதல் என்பது சாதல். திருவாசகத்தில் 'அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்' (4 : 19) என வந்துள்ளமை கண்டு நோக்கற் பாலது. எல்லாம் வல்ல அல்லாகுதஆலாவை வருணிக்க முற்பட்ட திருமணக்காட்சி ஆசிரியர் அல்லாஹ்வை,

'முஞ்ச லற்றவன் முதனடு வீறிலா முதல்வன்'
(கிளிக் கூட்டின் வண்ணப் படலம் ; 27)

என வருணித்துள்ளார். இங்கே முஞ்சுதல் என்பது முஞ்சல் என வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. சாதல் இல்லாதவன் அல்லாஹ் என்பதை இன்னொரு விதமாகவும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். விழுதல் என்பதைச் சாதல் என்றும் விழுத்தல் என்பதைச் சாகச் செய்தல் என்றும் கூறுவர். விழு என்னும் இச்சொல்லடி விழி என மாற்றப்பட்டு விழிவு எனப்பயன்படுத்தப்பட்டுள்ளது. சாவற்றவன் என்னும் பொருளில் விழிவிலான் என அல்லாஹ் இவ்வாறு திருமணக் காட்சியில் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

'விழிவிலான் றோழ ராங்கே மெய்ப்புற வியந்தி ருப்ப
(சொர்க்கத்திற் சுகத்திருக்கும் படலம் : 131)

பல பொருள்களையுடைய சொல் விள்ளல் என்பது. சொல்லுதல் என்பதையும் அது குறிக்கும். திருமணக் காட்சியில் விள்ளில் என இச் சொல் ஆளப்பட்டுள்ளதைக் காணலாம். தஜ்ஜாலை வருணிக்க வந்த ஆசிரியர் அவனுடைய கண்களைக் கொள்ளி போன்று கொடியன எனக் குறிப்பிட்டுள்ளார். நெருப்புப் போன்ற அவனது தன்மையை வருணிக்கவே முடியாது. இதனை வலியுறுத்தவே விள்ளில் என்பதனைப் பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர். வருணிக்க முடியாதது என்று தொனிக்கவே விள்ளிலரிய என்னும் சொற்றொடரை இவ்வாறு ஆண்டுள்ளார் ஆசிரியர் :

'கள்ளி மரமுகங் கதைமுருப்ப மாறாமற்
துள்ளிவிழும் பாலுந் துணர்துணர்கா யும்பலவு
விள்ளி லரியகொடு வெவ்வழலி னால்வெய்யவன்
கொள்ளி யெனச்சேந்த கொடியவிரு கண்ணானே'.
(தச்சால் வருபடலம் : 18)

விள்ள என்ற உருவில் இச்சொல்

'கள்ளவிழ் நறுந்தொடை கவின்செய்திர டோளான்
விள்ளவுரை தூதுபகை வேலையிடை நண்ணி'.
(இமாம் மஹதி வருபடலம் : 19)

என வந்துள்ளமையும் காண்க.

அழிவு என்னும் பொருளில் வீ என்பது ஓரெழுத்து ஒரு மொழியாக அமைந்துள்ளது. 'வீகலந்த மஞ்ஞை போல்' என சீவகசிந்தாமணியில் (1104) வீ வந்துள்ளது. சேகாதி நயினாப் புலவரும் தமது காப்பியத்தில்

'வீயினிடை செல்லுநல வித்தகனை யவ்வோர்'
(இமாம் மஹதி வரு படலம்: 20)

என்று வீ என்பதனை அழிவு என்னும் பொருளில் ஆண்டுள்ளார் வீ என்பதனை

'காளையரு மாமகுதி யுங்கடிய வீயின்
பாளைய மிறுப்பர்கள் படங்குகள் செறித்தே'
(இமாம்மஹதி வரு படலம் : 29)

என்றும் ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார்.

வெந் என்றால் முதுகு என்கின்றது பிங்கலந்தை நிகண்டு. புற முதுகு காட்டிடப் பயந்து ஓடிவிட்டான் மதீனாவுக்குப் படையெடுத்து வந்த குறாமுசு என்பவன். இங்ஙனம் புறமுதுகு காட்டுவதையே 'வெந் காட்டி' எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். அவ்வுபயோகம் வருமாறு :

'பாம்பரித்திர டுரந்தெனப் பத்தநன் குயர்ந்தோர்
மேம்ப ரத்திசை யிரிவர்வெந் காட்டியுள் வெருண்டே'

(குறுமுசுபடை போந்தமராடும் படலம் : 13)

சேகாதி நயினாப் புலவர் அவர்கள் விருத்தப்பாக்களில் பல்வேறு சந்தங்களைத் தமது திருமணக் காட்சி என்னும் காப்பியத்தில் அமைத்துப் பாடி உள்ளார். ஈசா நபி வருபடலத்தில் வரும் அறுசீர்க் கழிலடி ஆசிரிய விருத்தப்பாவாக அமைந்துள்ள மூன்றுவது செய்யுள் மூன்றடிகளைக் கொண்டதாகவே அச்சிடப்பட்டுள்ளது. அப்பாடலின் முதலாம் அடிதான் நூல் அச்சாகும் பொழுது விடுபட்டிருக்கலாம். முதலாம் அடி குறைந்துள்ள அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

'அம்மணந் தேடி நாசி யதனுழைத் தடையில் வந்து
கம்மெனக் கமழ மற்றெற் கடுத்தது கால மென்ன
வெம்மென நோக்கா னீற்று மயக்குற விரிதல் செய்வான்'

(ஈசா நபி வருபடலம் : 3)

உலகம் படைக்கப் பட்டதன் நோக்கம் :

உலகத்தையும் உலகத்திலுள்ளவற்றையும் படைத்தமை பற்றி அல்லாஹ் குறிப்பிட்டுள்ளான். முகம்மது நபி அவர்களைப் படைக்க வில்லையெனில் உலகத்தையோ உலகத்திலுள்ளவற்றையோ படைத் திருக்க மாட்டேன் என அல்லாகுத்தஆலா குறிப்பிட்டுள்ளான். இக்கருத்தினையே சேகாதி நயினாப் புலவர் தமது திருமணக் காட்சி என்னும் காப்பியத்தில் இவ்வாறு விவரித்துள்ளார்.

'மூந்துமென் றனது தோழர் முகம்மதைப் படைத்தி லேனேல்
உந்துமும் பர்கள்வான் வெய்யோன் உடுபதி உடுக்கண் வேலை
வந்துமைந் தர்கள் யாவும் வகைவகை யளியே னென்னத்
தந்துதன் றவன் றுதிக்குந் தகுதிமிக் குயர் ஹபீபு.

(றசூலுல்லா சிறப்புப் படலம் : 8)

**பழக்கம் :**

சில அறபுக் கல்வி நிலையங்களில் பயின்று பட்டம் பெற்றவர்கள் தத்தம் பட்டங்களைச் சூடிக்கொள்வதற்கு முன்னர் திருமண ஊர்வலம் பற்றி ஓர் உரை நிகழ்த்தல் வேண்டும். அவ்வுரை திருப்திகரமாய் அமையின் அத்தகையோர் மௌலவி என்னும் அத்தகைய பட்டங்களை சூட்டிக்கொள்வதற்குத் தகுதி உடையோர் எனக்கருதப்படுவர். தமிழ் பேசும் முஸ்லிம் மக்கள் வாழும் பகுதிகளில் இத்தகைய நம்பிக்கை நிலவுவதைக் காணலாம். திருமணக் காட்சி என்னும் காப்பியத்தின் கருப்பொருளுடன் இத்தகைய ஒரு பழக்கம் நெருங்கி இருப்பதைக் காணலாம்.

கருப்பொருளைப் பொறுத்தவரையில் திருமணக் காட்சி தனிச் சிறப்புப் பொருந்தியது எனலாம். எவரும் அறியாத எவருக்கும் அறிய முடியாத எதிர்காலத்தில் நிகழும் என எதிர்பார்க்கப்படும் ஒரு நிகழ்ச்சியே திருமணக் காட்சிக்குக் கருப்பொருளாக அமைந்திருப்பது தெற்றெனப் புலனாகிறது. இத்தகைய கருப்பொருளைக் கொண்ட காப்பியம் தோன்றுவது அருமையிலும் அருமையாகும். ஆனால் சேகாதி நயினாப் புலவர் அவர்கள் தாம் மேற்கொண்ட பணியைக் கற்பனை நயம் சிறந்து விளங்கச் செவ்வனே நிறைவேற்றி உள்ளார் என்றே கூறலாம்.

---

## மூன்றும் இயல்

# சீறுப்புராணம்—ஹிஜ்ரத்துக் காண்டம்

## ( சின்னசீறு )

உமறுப்புலவர் இயற்றிய சீறாப்புராணம் முழுமைத்துவம் பெற வில்லை. முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கை அங்கு முழுமையாக விவரிக்கப்படவில்லை. இது ஒரு பெருங்குறையாகவே இருந்தது. இந்தக் குறை நிறைவு செய்யப்பட வேண்டிய தொன்றாகக் கருதப் பட்டது. ஏறத்தாழ முப்பது ஆண்டுகள் கழிந்தபின்னரே இக்குறை நிரப்பும் பணி வெற்றி அளித்துள்ளது. இந்தக் குறையை நிறைவு செய்யவே சீறாப்புராணம்—ஹிஜ்றத்துக் காண்டம் என்னும் நூல் தோன்றியது. இச்சீறாப்புராணத்தின் முதற்பதிப்பின் பாயிரத்தில் இக் குறை இவ்வாறு எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

எல்லாம் வல்ல இறைவன் தூதாய்
நல்லார் உலகில் நண்ணிய நபியாம்
அகுமது நயினார் அற்புதச் சரிதையை
மிகுபுகழ்ச் செந்தமிழ் விருத்த செய்யுளால்
எத்தகை யோரும் இன்புறப் புலவருள்
உத்தம ராகிய உமறுப் புலவர்
காண்டமோர் மூன்றெனக் கணித்தனர் மூன்றாம்
காண்டச் சரிதம் கடைவற முற்றாக்
குறையை அறிந்தக் குறைதவிர்த் திடவே.

இந்தக் குறையை நிவர்த்தி செய்ய முன் வந்தார் பனீ அகுமது மரைக் காயர்ப் புலவர். அவர் தம்மை அறிமுகம் செய்யும் பாயிரப் பாடலில் தம்மை 'அகுமது' என்று மாத்திரமே குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு அவர் தம் பெயர் குறிப்பிடப்பட்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

சிலையுமான் நிலவும் ஏத்தும் திரு நபி சரிதை காயல்
சுலையுமான் லெப்பை ஆலிம் துணைஜமா லுத்தீன் சேய்பொன்
மலையுமான் சுலையு மான்சொல் கல்விமான் அகம தின்சொல்
மிலையுமான் முதியோர் தேரும் தமிழினால் விளம்பி னானே.

(பாயிரம் : 10)

பனீ அகுமது மரைக்காயர் எனப் பெயர் பெற்ற இக்கவிஞர் தாம் எந்த ஊரைச் சார்ந்தவர் என்பது குறிப்பிடப்படவில்லை. தமது மூதாதைய ரான சுலையுமான் என்பவர் காயல் நகரைச் சேர்ந்தவர் எனச் சுட்டி

உள்ளார். காயல் என்பது சிறப்பாக இன்று காயல் பட்டணத்தையே சுட்டுகின்றது. காயல் மாநகரைச் சேர்ந்த சுலையுமான் என்பவரின் புதல்வர் ஜமாலுத்தீன். அவருடைய புதல்வரே பனீ அகுமது மரைக் காயர். இவர் பனீ இசுறாயீல் கூட்டத்தைச் சேர்ந்தவர் எனக்கூறப்படு கிறது. அதனாலேயே அவருடைய பெயருக்கு முன்னால் பனீ என்னும் சிறப்புச் சொல் வழங்கப்படுகிறது. அவர் நல்லொழுக்கம் உடையவர் என வருணிக்கப்பட்டுள்ளது. அறிவாற்றல் உள்ளவர் அவர். தருமம், தவம், நற்கிரியைகளில் சிறந்து விளங்கியவர். உலகிலே எவ்வாறு வாழவேண்டும் என்று அறிந்திருந்தவர். இல்லற வாழ்வில் இருந்து கொண்டே துறவறமும் மேற்கொண்டவர். கூர்ந்த புத்தி உடையவர். நல்லோர் எல்லோருக்கும் நன்மையே செய்பவர். இவ்விவரங்களையே இந்நூலின் முதலாம் பதிப்பின் பாயிரம் இவ்வாறு தந்துள்ளது.

மறையை அறிந்த மனத்திடை மதித்துப்
பண்புறு நெறிசேர் பனீஇசு றாயீல்
நண்புறு குலத்தில் நண்ணிய நலத்தார்
தேங்கமழ்ச் சோலைத் திருநகர்க் காயலின்
ஓங்கிய அறிவால் உயர்ஜமா லுத்தீன்
கண்மணி சுலையுமான் களிப்புற அளித்த
அண்ணல் பேரறிவிற்கு அணிஎனத் திகழ்வோர்
தருமமும் தவமும் சாந்தமும் தக்கசற்
கருமமும் ஒழுக்கமும் கருணையும் உடையோர்
உலகியல் வழுவா உயர்நெறி உடையோர்
அலகில்நல் யோகத்து அரும்பொருள் கண்டோர்
கூரிய மதியினர் குணம்கொளும் தகவினர்
சீரியர் யார்க்கும் செம்மையே செய்வோர்
இல்லறத் திருந்தும் இயன்மரை நீர்போல்
சொல்லுறு துறவறத் தொன்மையி னின்றோர்
வண்பனீ அகுமது மரைக்காயர் என்னும்
ஒண்பெயர் உடைய உயர்மொழிப் புலவர்.

பனீ அகுமது மரைக்காயர் தமது சீறாப்புராணத்தை இயற்று வதற்கு முன் ஒரு கனவு கண்டாராம். நபிகள் நாயகம் (சல்) அவர் களைக் கனவில் கண்டார்களாம். அந்தக் கனவிலே தமக்கு இடப்பட்ட கட்டளையைத் தலை மேற்கொண்டே இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. இதனையும் முதற்பதிப்பின் பாயிரம் இவ்வாறு குறிப்பிட்டுள்ளது.

கண்வளர் காலைக் கனவில்நன் னயினார்
தண்வளர் மேனித் தரிசனம் காட்டித்
தேம்பட மொழிந்த திருவாக் கின்படி
தாம்பட லங்கள் தகவுற அமைத்து
............ ............ ............ ............
தண்டமிழ்ச் செய்யுளில் ததும்ப இயற்றி
நிறைவுறச் செய்தனர் ............ ............

உமறுப் புலவரின் சீறாப்புராணத்தில் உள்ள குறையை பனீ அகுமது மரைக்காயரின் சீறாப்புராணம் ஹிஜ்ரத்துக்காண்டம் நிறைவு செய்ய பிற்கால அறிஞர் பின்னையதைச் சின்னசீறா என அழைக்கலாயினர். இன்றும் இந்நூலின் பெயர் சின்ன சீறா என்றே பெருவழக்கில் பயன்படுத்தப்படுவதைக் காணலாம்.

உமறுப்புலவரின் சீறாப்புராணத்தில் ஹிஜ்றி ஆறாம் ஆண்டின் ஆரம்பத்தில் நிகழ்ந்த சம்பவங்கள் கடைசி ஆறு படலங்களில் வருணிக்கப்பட்டுள்ளன. மழையழைப்பித்தப் படலம், உமுறாவுக்குப் போன படலம், சல்மா பொருத படலம், உறனிக்கூட்டத்தார் படலம், என்பனவற்றில் விவரிக்கப்படும் நிகழ்ச்சிகள் பெருமானார் (சல்) அவர்களின் மதீனா வாழ்க்கையின் ஆறாம் ஆண்டில் நிகழ்ந்தவையாகும். உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் அவ்வாறே கூறி உள்ளார்.

முனிவற அலிமா நல்கு முலையுறு நறும்பான் மாந்திப்
பனிமதிக் கருணை செய்து படவர வழைத்துப் பேசுந்
தனிமுதற் றூத ராறா மாண்டினில் தகைமை பெற்ற
வனைகழல் சகுபி மார்கள் வழுத்திட விருக்கு நாளில்

(மழையழைப்பித்த படலம் : 1)

சீறாப்புராணத்தில் உள்ள கடைசி ஆறு படலங்களிலுமுள்ள நிகழ்ச்சிகள் ஹிஜ்றி ஆறாம் ஆண்டின் முற்பகுதியில் நிகழ்ந்துள்ளன என்பதற்கு ஆதாரமாக அமைவது சின்ன சீறா. இந்தச் சின்ன சீறாவில் வருணிக்கப்பட்டுள்ள பெருமானாரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் ஹிஜ்றி ஆறாம் ஆண்டிலிருந்தே ஆரம்பமாவதைக் காணலாம். திக்குவிசயம் செலுத்த றூம் கிறக்கில் ராஜாவுக்கு நிருபம் அனுப்பின படலத்திலிருந்து அபாசுபியானுடனே குதிரை பேசிய படலம் வரை உள்ள 244 பாடல்களிலே ஹிஜ்றி ஆறாம் ஆண்டின் நிகழ்ச்சிகள் வருணிக்கப்பட்டுள்ளன. ஒரு பாடலில் ஹிஜ்றி ஆறாம் ஆண்டு இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

திருத்தகு கிசுறத் தாறில் செவிவழி மறையின் தீஞ்சொல்
கருத்தெனும் தடாகச் செய்கால் கண்அறப் பெருக்கி ஈமான்
பொருத்துதீன் பயிர் விளைத்துப் புன்குபிர்க் களைக ளைந்து
விரித்தசீ ரிறசூ லுல்லா வியப்புற வீற்றி ருந்தார்.

(திக்கு விசயம் செலுத்த றூம் கிறக்கீல்
ராஜாவுக்கு நிருபம் அனுப்பின படலம் : 3 (16)

ஹிஜ்றி ஏழாம் ஆண்டு நிகழ்ச்சிகள் கைபர்ப் படலத்திலிருந்து தொடங்கி காத்தபு குறைசிகளுக்கு உளவோலை அனுப்பின படலத்தோடு முடிவடைந்து விடுகின்றன. இந்நிகழ்ச்சிகளின் வருணனை 661 திருவிருத்தங்களில் இடம் பெற்றுள்ளன. ஹிஜ்றி ஏழாம் ஆண்டிலே தான் கைபர்ப் போர் தொடங்கியது. ஹிஜ்றி ஏழாம் ஆண்டு இவ்வாறு சுட்டப்பட்டுள்ளது.

ஆதி மொழிந்த புறுக்கானோர் ஆயத்து இறங்கித் ததனாலே
ஏத மகல வரும்கிசுறத்து ஏழின் முகற்ற மாதமதில்
சோதி யிறசூல் பறைமுறைகள் சொல்வோர் தம்மை வரவழைத்திப்
போது கைபர்க் கேகப்பறை போடும் பொதியும் மன்றுமென்றூர்.

(கைபர்ப் படலம் : 3) (247)

ஹிஜ்றி ஆண்டு எட்டில் மக்கம் கைப்பற்றப்பட்டது. மக்கம் பிடித்த படலத்திலிருந்து ஆமிறை வதைத்த படலம் வரை உள்ள 425 திருவிருத்தங்களில் பெருமானார் (சல்) அவர்களின் வாழ்க்கையில் ஹிஜ்றி எட்டாம் ஆண்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். ஹிஜ்றி எட்டாம் ஆண்டின் ஆரம்பத்தைக் குறிக்கும் திருவிருத்தம் இவ்வாறு அமைந்துள்ளது.

ஏத மற்றவர் கிசுறத்தோர் எட்டினில் றமலான்
மாதம் பத்தினின் மக்கிக ளுடனமர் மலைய
வீதி யெங்கணும் முரசறைந் திடுமென மேலோன்
தூதர் சொற்றனர் வயவர்கள் தோள்புள கெறிப்ப

(மக்கம் பிடித்த படலம் : 2) (907)

முகம்மது (சல்) அவர்கள் மக்க மாநகரைக் கைப்பற்றிய பின்னர் அவர்களை எதிர்த்த முஸ்லிம் அல்லாத அறாபியர் இஸ்லாத்தை இனி எதிர்க்க முடியாது என்ற முடிவுக்கு வந்தனர். பெருமானார் (சல்) அவர்களுக்குச் சிலர் தூது விடுத்தனர். சிலர் அவர்களிடம் வந்து இஸ்லாத்தை ஏற்றனர். 253 திருவிருத்தங்களில் பெருமானாரின் வாழ்க்கையில் ஹிஜ்றி எட்டாம் ஆண்டு நிகழ்ந்த நிகழ்ச்சிகள் வருணிக்கப்பட்டுள்ளன. தபூக் போர், அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்களின் ஹஜ் யாத்திரை அந்த ஆண்டிலேதான் நிகழ்ந்தன. ஹிஜ்றி ஒன்பதாம் ஆண்டு ஒரு திருவிருத்தத்தில் இவ்வாறு சுட்டப்பட்டுள்ளது.

செல்கின்ற கிசுறத்து ஒன்பதிற் சிந்தை
தெளிந்தநேர் தமீன்கிளை யாரில்
அல்கலில் கடல்போல் அறிவெலாம் ஓர்ந்த
வாபிசு தவத்தினில் வந்து

(திக்குத் திகாந்தங்களில் உள்ளவர்கள் ஈமான் கொண்ட படலம் : 21) (1336)

ஹிஜ்றி பத்தாம் ஆண்டு நிகழ்ந்த ஒரே நிகழ்ச்சியையே பனீ அகுமது மரைக்காயர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார், தமது சின்ன சீறுவில். அது நபிகள் பெருமானுர் புனித ஹஜ் கடமையை நிறைவேற்ற மக்க மாநகருக்குச் சென்றதாகும். இந் நிகழ்ச்சி வரலாற்று முக்கியத்துவம் கொண்டதாகும். இந்த ஹஜ் பயணத்தின்போதுதான் பெருமானுர் (சல்) அவர்கள் பிரியா விடைப் பிரசங்கத்தை நிகழ்த்தினுர்கள். அவர்களுடைய இறுதி ஹஜ் பயணமாகவும் அது அமைந்தது. அவர்களும் அப்பிரசங்கத்தின்போது அவ்வாறே குறிப்பிட்டார்கள்.

ஹிஜ்றி பத்தாம் ஆண்டையும் அவ்வாண்டில் நிகழ்ந்த முக்கிய நிகழ்ச்சியினையும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

ஒருதனிச் செங்கோல் உலகெலாம் செலுத்தும்
உயர்புகழ் பெறுநபி இறசூல்
மருவிய கிசுறத்து ஆண்டொரு பத்தில்
வளம்தரு துல்கச்சி மாதம்
தெருளுறு கச்சின் பறுலுகள் முடிக்கச்
சேறலை யாவரும் உணரச்
சொருகுவார் முரசம் திசைதொறும் முழக்கச்
சொல்லினர் தோழர்கள் தமக்கே

(நபி சல்லல்லாகு அலைஹிவசல்லம் கச்சிற்குப் போந்த படலம் : 2) (1589)

50 பாடல்களிலே இதனை ஆசிரியர் வருணித்துள்ளார். இந் நிகழ்ச்சி ஹிஜ்றி பத்தாம் ஆண்டின் இறுதி மாதமான துல்ஹஜ் மாதம் நிகழ்ந்துள்ளது. ஹிஜ்ரி பத்தாம் ஆண்டின் தொடக்கம் கி.பி. 631 ஏப்ரல் 9 ஆந் தேதி செவ்வாய்க்கிழமை ஆகும். ஹிஜ்றி பத்தாம் ஆண்டின் இறுதி மாதமான துல்ஹஜ் மாதம் கி.பி. 632 பெப்ருவரி 27 ஆந் தேதி வியாழக்கிழமை தொடங்கி உள்ளது. பெருமானுர் (ஸல்) அவர்களின் இறுதி ஹஜ்ஜின் போது அறபா தினம் வெள்ளிக்கிழமையாக இருந்தது என ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அன்றையத் தினத்தில் வெள்ளிநாள் ஹச்சுல்
அக்குபறும் அணிஅற பாவும்
என்றுசொல் உபய பெரியநாள் மற்ற
ஏகூதிகள் மசூசிகள் தீமை

துன்றிய நசுரு னிகளிவர் மூவர்
தமக்குமே தோன்றுமுப் பெருநாள்
ஒன்றிய பெருநாள் ஐந்துமோர் தினத்தில்
உதித்ததோர் காலத்தும் இலையால்
(நபி (சல்) கச்சிற்குப் போந்த படலம் : 41) (1628)

ஹஜ்ஜுப் பயணத்தை மேற்கொள்ளும் அனைவரும் துல்ஹஜ் மாதம் 9 ஆம் நாளான அறபா தினத்தில் அறபா மைதானத்தில் தரித்தல் வேண்டும். அத்தகைய அறபா தினம் கி.பி. 632 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 7 ஆந் தேதி வெள்ளிக்கிழமை வந்துள்ளது. ஆக, இக் காரணங்களைக் கருத்திற் கொண்டு பார்க்கும் போது ஹிஜ்றி பத்தாம் ஆண்டு முஸ்லிம்களின் வரலாற்றிலே முக்கியமான ஒரு கால எல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இங்கே ஆசிரியர், பெருமானார் (சல்) அவர்களின் வாழ்க்கையில் ஹிஜ்றி பத்தாம் ஆண்டு நடைபெற்ற ஒரே ஒரு நிகழ்ச்சியையே குறிப்பிட்டுள்ளார்.

ஹிஜ்றி 11 ஆம் ஆண்டை ஆசிரியர் குறிப்பிடவில்லை. அந்த ஆண்டிலே பெருமானார் (சல்) அவர்கள் இறையடி சேர்ந்தார்கள். இங்கே ஹிஜ்றி ஆண்டைக் குறிப்பிடாது அவர்களுடைய வயதை மாத்திரம் குறிப்பிட்டுள்ளார்.

'துங்கம் உறவே அறுப்பத்தின் மூன்று வயதில் தூதிறசூல்
வங்கக் கடல்சூழ் புவிவாழ்க்கை மறுத்துக் கலுறத் திடைபோந்தார்.
(நபி (சல்) உபாத்துப் படலம் : 114) (1751)

இங்ஙனம் பெருமானாரின் வாழ்க்கையிலே கடைசி ஆறு ஹிஜ்றி ஆண்டுகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை 39 படலங்களில் 1823 திரு விருத்தங்களில் பனீ அகுமது மரைக்காயர் அவர்கள் வருணித்துள்ளார். இதன் மூலம் உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் விட்ட குறையை பனீ அகுமது மரைக்காயர் நிறைவு செய்துள்ளார்.

சின்னசீறாவின் இரண்டு பதிப்புகள் வெளிவந்துள்ளன. முதலாம் பதிப்பு ஹிஜ்றி 1271 ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது. இந்த ஹிஜ்றி ஆண்டு கி.பி. 1854 ஆம் ஆண்டு செப்தெம்பர் மாதம் 24 ஆந் தேதி ஆரம்பமாகி 1855 ஆம் ஆண்டு செப்தெம்பர் மாதம் 12 ஆந் தேதி முடிவடைந்துள்ளது. சின்னசீறாவின் இரண்டாம் பதிப்பு ஹிஜ்றி 1272 ஆம் ஆண்டு துல்ஹஜ் மாதம் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. ஹிஜ்றி 1272 துல்ஹஜ் மாதம் கி.பி. 1856 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் மூன்றாந் தேதி தொடங்கி உள்ளது. எனவே சின்ன சீறாவின் இரண்டாம் பதிப்பு கி.பி. 1856 ஆம் ஆண்டு ஆகஸ்ட்

மாதத்தில் வெளிவந்துள்ளமையைக் காணலாம். இது நள வருடம் ஆவணி மாதம் எனவும் அறியக் கிடக்கிறது. தமிழ் நூல்கள் பல வற்றைப் பதிப்பித்து பெரும் பணிபுரிந்த தமிழ்த் தாத்தா உ. வே. சாமி நாத ஐயர் அவர்கள் கி.பி. 1855 ஆம் ஆண்டிலே பிறந்துள்ளார்கள். அவர் பதிப்பித்த சீவக சிந்தாமணியின் முதற் பதிப்பு கி.பி. 1887இலே வெளிவந்துள்ளது.

சேகுனாப் புலவர் அவர்கள் சீறாப்புராணத்தை முதல் முதலில் கி.பி. 1842 இல் பதிப்பித்தார். பழந்தமிழ் நூலொன்று முதல் முதலில் பதிப்பிக்கப்பட்டது கி.பி. 1847லேயாம். பதிப்பித்தவர் மழவை மகா லிங்க ஐயர் அவர்கள். பதிப்பிக்கப்பட்ட நூல் தொல்காப்பியம் எழுத் ததிகாரம் நச்சினார்க்கினியர் உரை என்பதாகும். ஆறுமுக நாவலர் அவர்களின் திருக்குறள் பதிப்பு கி.பி. 1860 இல் நிகழ்ந்துள்ளது. ஏனைய தமிழ் நூல் பதிப்பாசிரியர்களுள் சிறந்து விளங்கியவர்களுள் பிரதானமானவர்கள் எனக் கருதப்படும் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் கி. பி. 1815 இலும் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் கி.பி. 1832 இலும் வித்துவசிரோமணி பொன்னம்பலம் பிள்ளை அவர்கள் கி.பி. 1836 இலும் பிறந்துள்ளார்கள் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. சதாவதானி செய்கு தம்பி பாவலரும் கி.பி. 1849 இலே பிறந்துள்ளார்கள். இங்ஙனம் பார்க்குபொழுது சேகுனாப்புலவர் அவர்களும் உவைசு நயினார்ப் புலவர் அவர்களும் பக்கீர் முகியித்தீன் அவர்களும் தமிழ் இலக்கியங்களைப் பதிப்பிப்பதில் முன்னோடி களாய்த் திகழ்ந்துள்ளனர் என்பது புலப்படுகிறது.

சின்ன சீறா இயற்றப்பட்ட காலத்தை குறிப்பிடும் பாயிரச் செய்யுளில் 'கிசுறத் தோராயிரத் தொரு நூற்று, நாற்பதோடைந்தில் சாதாரண வருடத்தின்' எனக் குறிப்பிடப்பட்டிருந்தமையைக் கண்டோம். இந்த ஹிஜ்றி ஆண்டைக் குறிக்கும் கி.பி. 1732/33 இல் சாதாரண வருடம் வர முடியாது. பரிதாபி வருடம் தான் இந்த ஆண்டில் வருகிறது. எனவே சீறாப்புராணம் இயற்றப்பட்டது பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது போன்ற சாதாரண வருடத்தில் அன்று. பரிதாபி வருடத்திலேயே எனக் கொள்ளுதல் வேண்டும்.

சின்னசீறா பாடுவதற்குப் பொருளுதவி புரிந்தவர் லப்பை நயினார் என்பவர். இவர் வகுதையைச் சேர்ந்தவர். இவரைப் பற்றிச் சின்ன சீறா ஆசிரியர் பாயிரத்தில் இடம் பெற்றுள்ள இரண்டு பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். முதற் பாடலில் லெப்பை நயினாரின் தாயார் யார் என்றும் அவருடைய பரம்பரை எது என்றும் முதலில் குறிப்பிட் டுள்ளார். பாடலில் தாயாருடைய பெயர் சுட்டப்படவில்லை. தாயார் புகழ் பெற்ற சதக்கத்துல்லா புதல்வி என்பதைச் சுட்டி உள்ளார்.

சதக்கத்துல்லா அப்பா அவர்களின் தந்தையார் சுலையுமான் லெப்பை ஆலிம் அவர்களையும் குறிப்பிட்டுள்ளார். இக்குறிப்புக்கள் அடங்கிய செய்யுள் வருமாறு :

ஆதிநூல் உபநிடதம் தேர்சுலையு மானிலப்பை
ஆலிஞ் சேய்சொல்
போதமுறு மெய்ஞ்ஞானச் சதக்கத்துல் லாஆலீம்
புதல்வி பாலன்
சாதிநாய கன்வகுதை இலப்பைநயி னானிதயத்
தடத்திற் பூத்த
பாததா மரையிறசூல் புகழ்பாடக் கனகமழை
பரிவில் பெய்தான்

(பாயிரம் : 11)

அடுத்த செய்யுளில் இலப்பை நயினான் என்னும் கொடைவள்ளலின் தந்தையாரையும் அவரின் மரபினரையும் புகழ்ந்து பாடி உள்ளார். இலப்பை நயினான் என்பவர் அபூபக்கர் லெப்பை என்பவரின் புதல்வர். அபூபக்கர் இலப்பை என்பவர் மாமு நயினார் என்பவரின் புதல்வர். பின்னையவர் மணிப்பரிட்சையில் கைதேர்ந்தவர் என்றும் அவருடைய வியாபாரமும் குறிப்பிடப்பட்டுள்ளது. அச்செய்யுள் வருமாறு :

நிவவுமணிப் பரீட்சையறி பவர்கள்சிரோ மணிமாமு
நயினா னீன்ற
குவவுநெடும் தடம்புயமால் அபூபக்கர் இலப்பை தரு
கோமான் சீத
உவவுமதி நிகர்வதனன் இலப்பை நயினான்மகிபன்
உவரி சூழும்
நவவுலகு தொழுமிறசூல் கதைபாட அளவறுசீர்
நல்கி னானே

காப்பியம் பாடப் பல சீர்களையும் வழங்குவதன் மூலம் பொருள் உதவி புரிந்த கொடை வள்ளல்கள் காப்பியத்திலேயே பல இடங்களில் குறிப்பிடப்படுவது மரபாகும். இந்த மரபைப் பின்பற்றி பனீ அகுமது மரைக்காயர் இலப்பை நயினார் அவர்களைப் பற்றிச் சின்னசீறாவில் குறிப்பிட்டுள்ளார். அக்கொடை வள்ளலுடைய புகழும் வள்ளன்மை யும் விருந்தோம்பற் பண்பு முதலியவைகள் சின்னசீறாவில் விதந் தோதப்பட்டுள்ளன.

சின்ன சீறாவின் கொடை நாயகர் லெப்பை நயினார் என்பவர் மக்கள் தலைவர். அவருடைய புகழ் உலகிலே எல்லா இடங்களிலும் பரவிஉள்ளது. இதனையே சின்னசீறா ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தோட்டு நீர்க்கடல் சூழ்புவி யில்புகழ்
நாட்டும் லெப்பை நயினா நராதிபன்

(பாரிசு, அபுறேசு ராஜாவுக்கு
நிருபமனுப்பின படலம் : 9) (77)

... ... ...

ஓங்கும் புகழ் சேர்த் தென்வகுதைத்
தருமத் துரையாய் வருமிலப்பை
நயினான் ...

(திக்குகளில் உள்ளவர்கள் ஈமான்கொண்ட படலம் : 12) (1346)

அலகில் புகழ்வெண் சுதைபுவிவான்
அனைத்தும் தீற்றிச் சிறப்போங்கும்
இலப்பை நயினான் எனும்பெயர்பெற்று
இருக்கும் குரிசில் ஆனனம்

(நபி (சல்) உபாத்துப் படலம் : 82) (1719)

இலப்பை நயினாருடைய வள்ளன்மையைப் புகழவந்த ஆசிரியர் இத்துறையில் அவருடைய சிறப்பை முகிலுக்கு ஒப்பிட்டுள்ளார். முகில் வழங்கிக் கொண்டிருப்பது போல் இலப்பை வழங்கிக் கொண்டே இருந்தாராம். இவ்வாறு அவரைப் புகழ்ந்துள்ளார் பனீ அகுமது மரைக்காயர் புலவர்.

நல்குமுகி லெனும்அரச னிலப்பைநயினான் இதய
நளினப் போதில்
புல்குமியல் உகளபத — — — —

(காத்தபு குறைஷிகளுக்கு உளவோலை அனுப்பிய
படலம் : 16) (891)

வேண்டியதை வேண்டியவாறே தருவது கற்பக விருட்சம். இதனைத் தேவதாரம் என்றும் கூறுவர். இது சுவர்க்கத்திலுள்ள ஐந்தருக்களில் ஒன்று. தரு என்பதே காடு என வந்து இக்கருத்தைச் சுட்டிக் கொண்டிருக்கிறது. இலப்பை நயினாரின் கொடைத் திறனும் அவர் அடைந்திருந்த புகழும் ஒரு பாடலில் இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

நம்பினவர் தாருவெனும் லெப்பைநயி னான்மன்
இம்பரின் விளைத்தபுகழ் ஏய்ந்தசுதை தீற்றி

(மக்கம் பிடித்த படலம் : 131) (1036)

நம்பிச்சென்றவர்களுக்கு இல்லையெனாது வழங்கும் லப்பை நயினார் கற்பக விருட்சத்துக்கு ஒப்பிடப்பட்டுள்ளார். அதனால் அவர் பெற்ற புகழும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது.

நபிகள் நாயகம் (சல்) அவர்களினதும் இறைநேசச் செல்வர் களினதும் புகழ் பாடப்பட்டு அன்னதானம் வழங்கப்படும் நிகழ்ச்சிகள் இஸ்லாமிய பரிபாஷையில் கந்தூரி என அழைக்கப்படுகின்றன. இத்தகைய நிகழ்ச்சிகளில் புகழப்படும் பாடல்கள் பெரும்பாலும் அறபு மொழியிலே அமைந்திருக்கும். அவ்வாறு புகழ் பாடுதல் மௌலூது ஓதுதல் எனச் சிறப்பாக அழைக்கப்படுகின்றது. மௌலூது என்னும் சொல் நபி நாயகம் (சல்) அவர்களினதும் இறைநேசச் செல்வர்களினதும் பிறந்த நாட்களிலே இத்தகைய நிகழ்ச்சிகள் இடம் பெறுவதால் அவை மௌலூது ஓதும் நிகழ்ச்சிகள் என அழைக்கப்படு கின்றன. இத்தகைய மௌலூது ஓதும் நிகழ்ச்சிகளில் அன்னதானம் சுவை உள்ள உணவுகளுடன் வழங்கப்படுவதைக் காணலாம். கறி என்பது தமிழ் நாட்டிலே ஆட்டிறைச்சிக் கறியையே சிறப்பாகச் சுட்டப் பயன்படுகின்றது. பனீ அகுமது மரைக்காயரும் தமது சின்னசீறாவிலே அத்தகைய ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளார். சின்ன சீறாவின் கொடை வள்ளல் லப்பை நயினாரின் இல்லத்திலே மௌலூது ஓதப் பட்டது. மௌலூது ஓதுவதற்காக மறையோர் எனப்படும் ஆலிம்கள் நிறைய வந்திருந்தனர். ஏனையோரும் சமுகம் அளித்திருந்தனர். அது பெரிய விருந்துக்களரியாகக் காட்சி அளித்தது. முஸ்லிம் மக்கள் ஒன்று கூடி மௌலூது முதலியன ஓதி உணவு உண்ண அமர்ந்திருக்கும் கூட்டத்தைக் களரி என சுட்டுவது முஸ்லிம் மரபாகும். களரியிலே அமர்ந்திருந்தவர்களுக்கு அமுது பெய்யப்பட்டது கறி நிறைய இடப் பட்டமையே இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது. பொன்னாலான கலங் களிலிருந்து கறி முதலியவை வழங்கப்பட்டன. கலம் என்னும் சொல் லும் முக்கியத்துவம் வாய்ந்தது. உணவு பரிமாற பாத்திரங்களை வைப்பதை முஸ்லிம் பரிபாஷையிலே கலம் வைத்தல் என இன்றும் வழங்கப்படுவதைக் காணலாம். இனி சின்ன சீறா ஆசிரியர் லப்பை நயினாரின் மனையில் மௌலூது ஓதப்படும் களரியை வருணிக்கும் முறையினைப் பார்ப்போம்.

வளரிலப்பை நயினான்நன் மனையில் மவு லூதோதும்
மறையோர் கூண்டக்
களரிதனக்கு அமுதுபெய்யும் பொற்கலத்தின் கறிவளத்தின்
காட்சிபோல

(வேட்டைச் சாரி போந்த படலம் : 3) (451)

திருமணக்காட்சி என்னும் நூலுக்கும் சின்னசீறாவுக்கும் கொடை நாயகராய் இருந்தவர் லப்பை நயினார் அவர்கள். சதக்கத்துல்லா

அப்பா அவர்கள் ஹிஜ்றி 1115 இல் (கி.பி. 1703) காலமானார்கள். இங்கே கொடை நாயகராய்க் குறிப்பிடப்படுபவர் சதக்கத்துல்லா அப்பா அவர்களின் மகளின் மகனார் ஆவார். கி.பி. 1710 இல் திருமணக்காட்சியைப் பாடும்பொழுது அவர் இளம் வயதினராய் இருந்திருத்தல்வேண்டும். கி.பி. 1732 இல் சின்ன சீறா இயற்றப்படும் தறுவாயில் அவர் ஏறத்தாழ ஐம்பது வயதுடையவராயிருத்தல் வேண்டும். இங்ஙனம் இரண்டு காப்பியங்களுக்கும் கொடை நாயகராக இருந்து பொருள் வழங்கி உள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கது.

பனீ அகுமது மரைக்காயர் தமது சீறாப்புராணத்தில் இயற்கைக் காட்சிகளைக் கவிநயம் மிளிரப் பாடியுள்ளார். ஒரு சோலையிலே கமுகும் தெங்கும் பலாவும் மாவும் பிறவும் நிறைந்திருந்தன. முள் உள்ள குடக்காய் எனப்பலாவைச் சுட்டி உள்ளார். பெரும்பாலும் பலாப்பழத்தைக் குடக்கனி என்றே அழைப்பர். இங்கே ஆசிரியர் அதனைக் குடக்காய் என்று வருணித்துள்ளார். மாமரத்தின் தளிர்களை நெருப்புக்கு உவமித்திருப்பதும் ஈண்டு நோக்கற் பாலது. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கற்றைக் கவரிப் பசும்பாளைக்
கழுத்து மிடைந்த சூல்கமுகு
நெற்றிக் கதிர்த்த பழமுதிர்க்கும்
நெடிய அடைப்பூ மடல் தெங்கும்
பெற்ற கோட்டின் இடைதூங்கிப்
பிறங்கும் குடக்காய் முள்பலவும்
பற்றும் எரிபோல் தளிர்மாவும்
பலவும் செறிகா வும்கண்டார்.

(கைபர்ப் படலம் : 158) (402)

நெய்தல் நிலத்தைத் தவிர்த்து ஏனைய நிலங்களைச் சுருக்கமாக ஒரு பாடலில் அமைத்துப் பாடியுள்ளார் நூலாசிரியர். அப்பாடலில் குறிஞ்சி என்று குறிப்பிடாது குறிஞ்சிக்கே உரிய மலைப்பாங்கான பிரதேசம் என வருணித்துள்ளார். மலையும் மலைச் சாரலும் உள்ள இடம் குறிஞ்சி என்ருர்

நஞ்சைக் கக்கும் பாம்புகள் உள்ள இடம் பாலை. அந்தப் பாம்பு களின் மணிகள் விளங்கிக் கொண்டிருந்தன. முள்ளும் அங்கே நிறைய உண்டு. அத்தகையது பாலைநிலம். மடியிலிருந்து பாலைச் சுரந்து கொண்டிருக்கும் எருமைகளைக் கொண்டது முல்லை நிலம். மருதத் திலோ வயல்கள் மிகுதியாக இருந்தன. இவற்றையே ஒரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்.

கடமலை பயில்தரும் காவளர் குன்றமும்
விடஅர வின்மணி விளங்குமுள் பாலையும்
மடிசுரை மேதிஆன் வதியுநீள் முல்லையும்
தடவயல் மருதமும் தாம்கடந் தேகினார்

(சுதாம் படலம் : 8) (472)

மற்றொரு பாடலில் மேலே குறிப்பிட்ட நான்கு நிலங்களிலும் வாழும் மக்களையும் அவர் தம் தொழிலையும் குறிப்பிட்டு நான்கு வகையான நிலங்களையும் வருணித்துள்ளார். குறிஞ்சியில் வாழ்ந்தோர் குறவர் எனப்பட்டனர். கொடுமை விளைக்கும் மறவர் பாலையிலே வாழ்ந்த னர். இடையர் பொதுவர் என்பன ஒரு பொருட் சொற்கள். அத்தகை யோர் பசுமாடுகளையும் எருமைகளையும் எப்பொழுதும் கொண்டிருப் பர். முல்லையில் அவர்கள் வாழ்ந்தனர். வெறியை ஏற்படுத்தக் கூடிய மது உண்டு களித்திருக்கும் மள்ளர் மருத நிலத்தைச் சேர்ந்தோராவர். இவ்வாறு குறிஞ்சி, பாலை, முல்லை, மருத நிலங்கள் ஆசிரியரால் வருணிக்கப்பட்டுள்ளன.

பறிதலைக் குறவர் வைகும் பருப்பதக் கடலும் வெய்ய
மறவர்வாழ் பாலைக் காடும் மறிஉடைப் பொதுவர் செங்கண்
நெறிமருப்பு எருமை ஆன்ஆ நிதம்பயில் முல்லைக் காடும்
வெறிமது அருந்தும் மள்ளர் விளைத்த சொல் பழனக் காடும்.

(சுதாம் படலம் : 45) (509)

மதிளின் ஓர் உறுப்பு நாஞ்சில் எனப்படும். அந்த நாஞ்சில் சுற்றி வர ஓடை இருக்கும். அந்த ஓடையிலே தாமரைப் பூ மலர்ந்திருக்கும். தாமரைக் கொட்டை பொகுட்டு என அழைக்கப்படும். அத்தகைய பொகுட்டில் அன்னம் நடனமாடிக் கொண்டிருக்கும். தாமரை மலரிலோ வெனின் வண்டுகள் பாடிக் கொண்டிருக்கும். அத்தகைய நாஞ்சிலையும் தெருக்களையும் கொண்டு விளங்குகின்ற மணிகள் பதிக்கப்பட்ட மாட மாளிகைகளையும் கொண்டு மதீன மாநகர் விளங்கிக் கொண்டிருந்தது. இதனையே நூலாசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

கடந்துவண்டு இசைக்கும் தண்அம்
 கமலமென் பொகுட்டில் அன்னம்
நடந்தரும் ஓடை சூழும்
 நாஞ்சிலும் மறுகும் வாய்ந்து
கிடந்தொளிர் மணிகொள் மாடம்
 கிளர்மதீ னாவில் — — —

(சுதாம் படலம் : 46) (510)

இனி சூரியோதயம் வருணிக்கப்பட்டுள்ள முறைமையைப் பார்ப்போம். வைகறையில் சேவல்கள் கூவுவது வழக்காறாகும். இங்கே குக்குடக் குலங்கள் கூயின என்று ஆசிரியர் கூறி உள்ளார். ஒளி பொருந்தி செந்நிறம் கொண்ட கார்த்திகைப் பூக்களைப் போன்று இருந்தன அச்சேவல்களின் உச்சிக் கொண்டைகள். அவற்றின் உகிர்கள் மிகவும் கூர்மையானவை. வாய்கள் வளைந்திருந்தன. கொடிய முள் காலில் அமைந்துள்ளவை. அத்தகைய குக்குடக் கூட்டங்கள் கூவலாயின. அவை கூவியமையினாலேயே சூரியன் உதித்தான் என இங்கே வருணிக்கப்பட்டுள்ளது. சூரியன் உதிப்பதும் இயற்கையானதே. ஆனால் இங்கே புலவர் சூரிய உதயத்துக்கு ஒரு காரணம் சுட்டுகிறார். கோழிகள் கூவ ஊர்வன முதலிய பிராணிகள் அனைத்தும் விழித்தெழுந்தன. அதே நேரம் ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டு ஒற்றை ஆழித்தேரை உடையவனாகிய சூரியன் உதயமானான். ஆசிரியரின் இந்த வருணனை ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

ஊர்வன முதல்இ யாவும் விழிப்பஒண் காந்தள் சூட்டுக்
கூருகிர் வளைவாய் வெம்முள் குக்குடக் குலங்கள் கூய
ஆர்கலி அகடு கீறி ஆடகத் தொற்றை யாழித்
தேரவன் உதயஞ் செய்தான்..........
(உம்றாக் கலாச் செயப் போந்த படலம் : 27) (538)

பாந்தள் மேல் அமைந்திருக்கின்றது கடல். கடலுக்கு முகடாக அமைந்துள்ளது ஆகாயம். ஆகாயத்திலே சூரியன் தோன்றுகிறான். ஒற்றைத் திகிரித் தேரை உருட்டிக் கொண்டு வருகிருன். கொடிஞ்சியை உடைய அழகிய அத்தேர் குதிரைகள் பூட்டப்பட்டு இருக்கின்றது. அந்தக் குதிரைகள் பச்சைக் கூந்தலை உடையனவாய் இருக்கின்றன. குதிரையின் பிடரிமயிரே இங்கே கூந்தல் எனச் சுட்டப்படுகிறது. 'கூந்தற் குதிரை' என்கிறது கலித்தொகை (103 : 53). வெப்பத்தைத் தருகின்ற சிவப்பு நிறமுடைய சூரியன் தோன்றுகிருன். சூரியன் தோன்றுவதற்குக் காரணமாய் அமைகிறது சேவல்களின் கனைப்பு, இப்பாடலிலும் முன்னைய செய்யுளில் உள்ளது போன்று கூர்முள் காந்தள் அம்சூட்டுச் சேவல் எனச் சேவல் வருணிக்கப்பட்டுள்ளது. சேவல் கூவ சூரியன் உதயமானான் என்பதை இவ்வாறு ஒரு பாடலில் அமைத்துள்ளார் ஆசிரியர்.

பாந்தள்மேல் கிடக்கும் தெண்ணீர்ப்
பரவையின் முகட்டில் பச்சைக்
கூந்தலம் பரிகள் பூண்ட
கொடிஞ்சியம் தேர்க டாவிச்

சேந்தவெம் தபனன் ஒற்றைத்
திகிரியை உருட்டிக் கூர்முள்
காந்தளம் சூட்டுச் சேவல்
கனைத்திடக் கதித்தெ ழுந்தான்
(மக்கம் பிடித்த படலம் : 66) (971)

செங்கோல் நிலைபெறச் செய்த மன்னர்கள் பூமியிலே இறந்துவிடுகின்றனர். தெளிந்த சிந்தனையோ முதிர்ந்த அறிவோ ஆட்சித் தேர்ச்சியோ அற்ற குறுநில மன்னர்கள் ஆட்சி பீடத்தில் அமர்ந்து நிலத்தை ஆளுகின்றனர். அதே போன்றது சூரியன் மறைந்த காட்சி. பகல் முழுவதிலும் ஆட்சி புரிந்த சூரியன் என்னும் மன்னன் மேற்கடலிலே புக்கான். இறந்துவிட்டான். தேர்ச்சி அற்ற இருள் என்னும் வேந்தன் கொடுங்கோல் நடத்தி நிலத்தை ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். அவ்வாறு கொல்லும் நோக்கத்தோடு சந்திரனாகிய மன்னன் வந்தான். ஒருவனைக் கொல்ல வரும்போது ஆயுதம் வேண்டும் அல்லவா? இருள் என்னும் வேந்தனைக் கொல்லுவதற்குக் கதிர் என்னும் வாளை எடுத்து வந்தான் சந்திரன். சங்குகள் முழங்குகின்ற இருள் சூழ்ந்த கடலுக்கு முகடாய் அமைந்துள்ள ஆகாயத்திலே சசி வேந்தன் தோன்றினான். சூரியன் மறைய இருள் சூழ்ந்தது; சந்திரன் தோன்ற இருள் மறைந்து பிரகாசம் பெற்றது. இதனைக் கூறவே புலவர் இவ்வாறு உவகை உருவக நயம்மிளிர அமைத்துப் பாடியுள்ளார்.

செங்கோல் வேந்தர் நிலத்திறப்பத்
தேருக் குறும்பர் நிலம்புரந்து
தங்கோல் நடாத்தும் தகைமையெனத்
தபன னிறப்ப இருள் வேந்தன்
வெங்கோல் நடாத்திப் படிபுரக்கும்
வேளை அவனைக் கோறல் எண்ணிச்
சங்கோ லக்கார் கடல் முகட்டில்
எழுந்தான் கதிர்வாள் சசி வேந்தன்
(கைபர்ப் படலம் : 138) (382)

அடுத்தடுத்து வரும் இரண்டு பாடல்களில் சூரிய அஸ்தமனமும் சந்திரோதயமும் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். எவ்வாறு பசும்பரி கடவி ஒற்றை ஆழி உருட்டிச் சூரியன் கிழக்கே உதிக்கின்றானோ அவ்வாறே அவன் மேற்கே மறைகின்றான். இதனையே ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்.

சுற்றும் வாரிதி அகடுகீன் றெழுஞ்சுட ரிரவி
ஒற்றை யாழியந் தேரினை உயர்விசும் புருட்டி
கற்றை வாளுளைப் பசும்பரி கடவிஒண் கதிர்க்கை
முற்றும் வீசிக் குடதிசைக் கடலில்மூழ் கினனால்
(மக்கம் பிடித்த படலம் : 40) (945)

கள்ள மாதர் உள்ளங்களுக்கு இரவை ஒப்பிட்டுள்ளார் ஆசிரியர். அத்தகைய கங்குலை அகற்றுவதற்கு வந்தான் சந்திரன். அவன் தனிமையாக வரவில்லை. நட்சத்திரங்கள் புடை சூழ வந்தான். ஆயுத பாணியாகவே வந்தான். வெண்மையான வெள்ளி போன்ற கதிர்களை வாளாகக் கொண்டு வந்தான். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

கொள்ளி நீட்டினும் விண்டிலா இருளினும் கொடியக்
கள்ள மாதர்கள் உள்ளம்நேர் கங்குலைக் கடியப்
புள்ளி மீனினம் புடைவர அம்புலி வேந்தன்
வெள்ளி வெண்கதிர் வாள்விதிர்த் தெழுந்தனன் விண்ணில்
(மக்கம்பிடித்த படலம் : 41) (946)

மேகத்தைக் கண்டால் மயில் ஆடும். ஒன்றல்ல மயில் கூட்டமே ஆடும். மேகம் அவற்றிற்கு மகிழ்வை ஊட்டும். ஏனெனில் மேகங்களி லிருந்து குளிர்ந்த மழை பொழியும். ஒரு நாள் அங்கு இயற்கையாகத் தோன்றும் மேகம் காணப்படவில்லை. குளிர்ச்சியான மழை பெய்யவு மில்லை. ஆனால் மயில்கள் ஆடின. ஆடி மகிழ்ந்தன. கண்கள் நிறைந்த பசுமையான தோகைகளை உடையனவாய் அவை அன்று திகழ்ந்தன. அங்கே செயற்கையாக நிகழ்ந்த ஒரு காட்சியையே இயற்கைக் காட்சி என உணர்ந்து மயில்கள் ஆடின. அங்கே மாட மாளிகைகள் இருந்தன. அங்கே வெண்மையான சுண்ணாம்பு பூசப் பட்டிருந்தன. அந்தக் காட்சி பூரணச் சந்திரன் அதன் வெண்மையான கதிர்களைச் சொரிவது போன்று இருந்தது. மாடங்களுக்குள்ளே மகளிர் இருந்தனர். நிறைந்து இருந்தனர். அந்த மகளிர் தம் கூந்தல்களுக்கு அகிற்புகை ஊட்டி நறுமணம் உண்டாக்கிக் கொண் டிருந்தனர். இத்தகைய அகிற்புகை மாடங்களிலிருந்து ஆகாயத்திலே தோன்றும் மேகம் போன்று காட்சி அளித்தது. இந்த அகிற்புகைத் தொகுதியை மேகம் என மயங்கிய மயில்கள் ஆடின ஆடி மகிழ்ந்தன. இதனையே பனீ அகுமது மரைக்காயர் தமது சின்ன சீறாவில் இவ்வாறு பாடியுள்ளார்.

வெண்ணிலா விரிந்த தென்ன
விளங்கிய சுதைகொண் மாடத்து
உண்ணிறை மகளிர் கூந்தற்
கூட்டகில் புகையப் பாரில்

தண்ணுறை சிந்து நீலச்
சலதரக் குலமென் றெண்ணிக்
கண்ணிறை பசிய தோகைக்
களிமயில் தொழுதி ஆலும்
(உம்றாக் கலாச் செய்யப் போந்த படலம் : 32) (543)

மற்றொரு பாடலில் ஒரு பெண்ணைக் கடலுக்கு உருவகித்துள்ளார். கடலிலே முத்து உண்டு; நுரை உண்டு; பாசி உண்டு; பவளம் உண்டு; சங்கு உண்டு; ஒரு பெண்ணின் உறுப்புக்களை இவற்றிற்கு உருவகித்துள்ளார். அப்பெண்ணின் பற்கள் முத்துக்கள் போன்றவை; முலையோ ஓய்வில்லாது அடித்துக் கொண்டிருக்கும் அலைகளின் முகை போன்றது; குழலோ பாசியின் கொத்துப் போன்றது. விரல்கள் பவளக் கொடி போன்றவை; பெரிய வாயை உடைய சங்கு போன்றது அப்பெண்ணின் தொண்டை. அத்தகைய குளிர்ந்த கடல் என்னும் பெண் நடனம் ஆடினாள். அவ்வாறு நடனம் ஆடும்பொழுது கைகளை அசைத்து ஆடினாள். அவளுடைய வடிவான கைகள் கடல் திரைக்கு உருவகிக்கப்பட்டுள்ளன. காலினால் நடனம் ஆடினாள் என ஆசிரியர் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். கால் என்னும் சொல் இங்கு கடலுக்கும் பெண்ணுக்கும் பொதுவாகப் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். பெண்ணுக்குக் கால்கள் உண்டு. அதேபோன்று கடலுக்கும் கால் உண்டு. கடல் மீது வீசும் காற்றே கடலுக்குக் கால் என நயம் படக் குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுள் வருமாறு :

முத்தெனும் எயிறும் நந்தா நுரைமுகை முலையும் பாசிக்
கொத்தெனும் குழலும் துப்பின் கொடியெனும் விரலும் பேர்வாய்
நத்தெனும் களமும் கொண்ட நளிர்கடல் என்னும் மாது
சித்திரத் திரைக்கை காட்டிக் காலினால் நடனம் செய்தாள்.
(அபசி நஜாசா ராஜாவுக்கு நிருபம் அனுப்பின
படலம் : 36) (145)

இஸ்லாம் பரவிய முறையை வருணிக்கவும் ஓர் உருவகத்தை அமைத்துள்ளார் ஆசிரியர். குபிர் என்பது இஸ்லாம் அல்லாத தன்மையைக் குறிக்கும். அந்தக் குபிர்த் தன்மை தெளிவற்றதாக இருக்கும். அது காடு போல் பரந்திருந்தது. அந்தக் குபிர்க் காட்டை ஒருங்கே வெட்டி விட்டார்கள், எம்பெருமானார் முகம்மது (சல்) அவர்கள். அவ்வாறு குபிர்த் தன்மை அறுத்து அகற்றப்பட்ட காட்டில் தீன் என்னும் நல்ல பயிரை வளரச் செய்தார்கள். தீன் என்பது இஸ்லாத்தைச் சுட்டிற்று. அந்த தீன் என்னும் நல்ல பயிர் வளர கலிமா என்னும் நீரை வார்த்தார்கள். இஸ்லாத்தின் மூல

மந்திரம் கலிமா என அழைக்கப்படும். குபிர் களைந்து தீனை ஏற்றி கலிமா நீர் வார்த்து இஸ்லாத்தை வளர்த்தார்கள் என்பது ஒரு செய்யு ளின் முதலிரண்டு அடிகளிலும் இவ்வாறு அமைந்துள்ளது.

தேறாக் குபிர்க்காடு ஒருங்கறுத்துச்
செழித்த தீன்நற் பயிரேற்றி
மாறாக் கலிமா நீர்வார்த்து
வளர்த்த இறசூல் மதினாவில்
(கைபர்ப் படலம் : 2) (246)

இதே கருத்துக்களை விரிவாக வேறொரு முறையில் அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர். இஸ்லாத்துக்கு மாறுபட்டது குபிர்த் தன்மை. இங்கும் குபிர்த் தன்மையைக் காட்டுக்கு உவமித்துள்ளார் ஆசிரியர். 'குபிர்க்கடறு' எனக் குறிப்பிட்டுள்ளார். 'கானவர் கடறு கூட்டுண் ணும்' எனக் காடு என்பதைக் கடறு என்னும் சொல்லால் சுட்டுகின்றது பெரும்பாணாற்றுப்படை (116). அந்தக் காடு கெடுக்கப்பட்டது. உடற்றப்பட்டது. 'ஒல்லுங் கருமம் உடற்றுபவர்' (திருக்குறள் : 818) என கெடுத்தல் என்னும் பொருளில் உடறுதல் என்னும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். பனீ அகுமது மரைக்காயர் தமது சின்ன சீறாவில் உள்ள இப்பாடலில் 'மாறு குபிர்க் கடறுடறி' என்று பாடியுள்ளார். ஆனால் சின்ன சீறாவின் மூன்றாம் பதிப்பில் (1979) இச்சொற்றொடர் 'மாறு குபிர்க் கடல் திடறி' என வந்துள்ளது. இது சீர்பிரிக்க முற்பட்டதன் விளைவு என்றே தோன்றுகின்றது காடு என் னும் பொருளைத் தரும் கடறு என்னும் சொல் கடல் எனவும் கெடுத்து என்னும் பொருளைத் தரும் உடறி என்னும் வினையெச்சம் திடறி எனவும் வந்துள்ளன. திடறி என்று வினையெச்சமோ வேர்ச்சொல்லோ தமிழில் இல்லை என்றே கூறலாம். இனி 'மாறு குபிர்க் கடறுடறி' என ஆரம்பிக்கும் பாடலைப் பார்ப்போம். அதன் உருவக நயத்தைக் கணிப்போம்.

குபிர்த் தன்மை என்னும் காட்டை அழித்தார்கள். வேதம் என்னும் உரத்தை இட்டார்கள். வயலைப் பண்படுத்த வேண் டும். வயலைப் பண்படுத்த ஏர் பூட்ட வேண்டும். வயலைப் பண்படுத்தினார்கள். பெரிதாய் வளரக் கூடிய இஸ்லாம் என்னும் விதையை வித்தினார்கள். அந்த விதை செழுமையாக வளர கலிமா என்னும் நீரைப் பாய்ச்சினார்கள். அதன் பயனாக ஈமான் என்னும் வேர் ஊன்ற வழி வகுத்தார்கள். ஈமான் என்னும் வேர் ஊன்றியது. அந்த இஸ்லாம் என்னும் வித்து முளைத்துக் குருத்துவிடத் தலைப்பட்டது. நன்மை என்னும் குருத்து அவ்விதை யிலிருந்து முளைத்து வெளிவந்தது. இஸ்லாமிய சட்டம் சறகு என

வழங்கப்படும். இஸ்லாம் என்னும் வித்து முளைத்துக் குருத்துவிட்டுப் பொன்னிறமான கதிரை ஈன்றது. அந்தக் கதிரே சறகு ஆகும். அதன் பயனாக தீன் (மார்க்கம்) என்னும் இளம்பயிர் வளர்ந்து விளங்கத் தலைப்பட்டது. குபிரைக் காடாகவும் வேதத்தை உரமாகவும் புறுக்கான் மறையை கலப்பையாகவும் இஸ்லாத்தை விதையாகவும் கலிமாவை நீராகவும் ஈமானை வேராகவும் நன்மையைக் குருத்தாகவும் கதிரைச் சறகாகவும் தீன் என்னும் மார்க்கத்தை இளம் பயிராகவும் ஒரு பாடலில் இவ்வாறு உருவகித்துக் காட்டியுள்ளார் பனீ அகுமது மரைக்காயர்ப் புலவர் அவர்கள்.

மாறுகுபிர்க் கடறுடறி உபநிடத உரம்போட்டு மறைஏர்ப் பூட்டி
மீறுஇஸ்லாம் விதைவிதைத்துக் கலிமாநீர்ப் பெயஈமான்
வேர்கள் ஊன்றித்
தேறுநன்மைக் குருத்துவிட்டுச் சறகெனும்பொன் கதிரீன்ற
செழுந்தீன் பைங்கூழ்
ஆறுபடு மாபாகம் விளைத்தபுகழ் நபிஅவனி ஆளும் நாளில்
(ஜம்றத்தென்னு மசுகாபி விருந்திடு படலம் : 1) (441)

மேலே கூறிய முறையில் இஸ்லாம் வளர ஆவன செய்தார்கள் முகம்மது நபி (சல்) அவர்கள் எனப் பாடப்பட்டுள்ளது.

இக்கால எல்லையுள் அல்குர்ஆன் ஆயத்துக்கள் அருளப்பெற்ற சந்தர்ப்பங்களையும் சின்னசீறா ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பெருமானார் (சல்) அவர்களிடம் கேள்விகள் கேட்கப்படும் என்றும் அத்தகைய கேள்விகள் கேட்கப்பட்டால் அவற்றிற்கான சரியான விடைகள் அளிக்குமாறும் அவ்வாறு விடை அளிக்கும்பொழுது இஸ்லாமிய நெறி முறை வழுவாமல் விடை அளிக்குமாறு அல்லாஹ் அண்ணல் நபி (சல்) அவர்களுக்கு அருளினான். இதனையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மாயிரு ஞாலம் வானம் மலைகடல் நதிபா தாளம்
காயிரு சுடர்மீன் மற்றக் காரணம் விளைக்கா நின்ற
ஆயிர மசலாக் கேட்பர் அதற்கெதிர் உத்த ரங்கள்
பாயிரம் வழுவா வண்ணம் பகரும்நீர் அவர்கட் கென்றே
(எமன் தலத்தாருக்கு நிருபம் அனுப்பின படலம் : 15) (228)

இங்கே ஆயிரம் மசலா பற்றிய குறிப்பு உள்ளது. அப்துல்லா இப்னு சலாம் என்னும் ஒரு யூதர் நபிகள் நாயகம் (சல்) அவர்களிடம் இவ்வாறு கேள்வி கேட்டார்கள் என்றும் அதற்கு இறைவன் அருளால்

அண்ணல் (சல்) அவர்கள் தகுந்த பதிலளித்தார்கள் என்றும் குறிப்பிடும் ஒரு நூலே ஆயிரம் மசலா. கி.பி. 1572 இல் இயற்றப்பட்ட இந்நூலைப் பற்றி அறிந்திருந்ததனால் போலும் இப்பாடலில் அதன் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். ஆங்கே ஆயிரம் கேள்விகள் கேட்கப்பட்டன என்பது தொனித்துக் கொண்டிருக்கிறது. ஆயிரம் மசலா என்னும் நூலில் பெருமானார் அவர்களிடம் கேள்வி கேட்டவர் அப்துல்லா இப்னு சலாம் என்னும் யூதர் என்பது திருக்குர்ஆன் ஆங்கில மொழிபெயர்ப்பின் பின்வரும் திருவசனம் பற்றிய அடிக்குறிப்பில் சுட்டப்பட்டுள்ளது.

'இஸ்ராயீலின் சந்ததி யிலுள்ள
கல்விமான்கள் இதனை அறிந்திருப்பதே,
அவர்களுக்குப் போதுமான அத்தாட்சி
யல்லவா ?

(அல்குர்ஆன் : 26 : 197)

அல் குர்ஆனிலே பல இடங்களில் அல்லாஹ் முஸ்லிம்களுக்கு வெற்றி அளித்தமை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது.

'நபியே) பின்னும் (பின்னும்) அல்லாஹ்
உமக்குப் பலமான உதவி புரிந்தே
வருவான்' (48 : 3)
'மற்றும் நீங்கள் விரும்பக் கூடியவைகளும்
உண்டு. (அவை) அல்லாஹ்வுடைய உதவியும்
சமீபத்தில் (கிடைக்கக்கூடிய மக்காவின்)
வெற்றியுமாகும். ஆகவே (நபியே !
இதனைக் கொண்டு) நீர் விசுவாசிகளுக்கு
நன்மாராயங் கூறுவீராக ! (61 : 13)
'(நபியே உமக்கு) அல்லாஹ்வுடைய உதவியும்
வெற்றியும் கிடைத்தது' (110 ; 1)

இங்ஙனம் பெருமானார் (சல்) அவர்களுக்கு 'வெற்றி அளித்தோம்' என்று இறை வசனம் அறிவிக்கப்பட்டது. சின்ன சீறா ஆசிரியர் தமது காப்பியத்தில் கைபர்ப் போருக்கு முன்னோடியாக அமைந்தது இத்தகைய திருமறையின் திருவாக்கியம் என்பதை முதலாம் செய்யுளின் கடைசி அடியிலும் அடுத்த செய்யுளின் முதலடியிலும் அமைத்துப் பாடியுள்ளார்.

தாறாக் கரிநேர் எகூதிகளை
வெல்லத் தந்தோம் வெற்றி
(கைபர்ப் படலம் : 2) (246)

ஆதி மொழிந்த புறுக்கானோர்
ஆயத்து இறங்கிற் றதனாலே.
(கைபர்ப் படலம் : 3) (247)

மக்காவிலிருந்து மதீனா வந்தவர் காத்திப். அவர் கள்ளத்தனமாக மக்காக் குறைஷிகளுக்கு ஓர் உள்வோலை அனுப்பினார். சிநேக பூர்வமான முறையில் அமைந்திருந்தது அவ்வோலை. தான் மக்காவில் விட்டு வந்த தனது உறவினரைப் பாதுகாக்கும்படி அவர் கேட்டிருந்தார். இந்த ஓலை முஸ்லிம்கள் கையில் சிக்கியது. தான் ஓலை அனுப்பியதை காத்திப் ஒத்துக்கொண்டார். இந்தச் சந்தர்ப்பத்தில்

'விசுவாசிகளே' எனக்கும் உங்களுக்கும்
விரோதியாயிருப்பவர்களை நீங்கள்
நேசர்களாக எடுத்துக் கொண்டு
நேசபான்மையில் (இரகசியமாக
கடிதம் எழுதி) அவர்களிடம் உறவாட
வேண்டாம்... (60 : 1)

என்று ஆரம்பிக்கும் திருவசனம் அருளப்பட்டது. மேற்குறிப்பிட்ட நிகழ்ச்சியை விவரித்த பனீ அகுமது மரைக்காயர்ப் புலவர் இத்திருமறைத் திருவசனம் அருளப்பட்டதை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

சேத்த நறவார் மறைபுறுக்கான்
செகத்தில் விளக்கும் நபிதமக்குக்
காத்தபு என்போர் தம்பொருட்டால்
கருதும் சூறத் தொன்று வந்த
வாய்த்த மூமினா னவரே
வணங்காக் குபிரர் தங்களைத்தான்
நீத்தும் ஒருகா ரியங்களிலும்
நிறுத்தல் ஒழியும் நீங்களென்றே
(காத்தபு குறைஷிகளுக்கு உளவோலை அனுப்பின
படலம் : 29) (904)

மக்கம் கைப்பற்றப்பட்டதும் பெருமானார் (சல்) அவர்கள் அதனைப் பரிபாலிக்க வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொண்டார்கள். அவற்றுள் ஒன்று கஃபத்துல்லாவின் சாவியை உதுமான் சைபா என்பவருக்கு அளித்தமையேயாகும். அது இறைகட்டளைப்படி நிறைவேற்றப்பட்டது என சின்ன சீறா ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

உம்பருக் கரசர் மேலோன் ஒகிப்படி வானிழிந் திங்கு
இம்பரின் அளித்துப் போந்த ஆயத்தின் படியே யார்க்கும்
தம்பமாம் கஃபா வாயில் தாள்செறி திறவு கோலைத்
தும்பிநே ருதுமான் சைபா அவர்துணைக் கரத்தளித்தார்.
(மக்கம் பிடித்த படலம்: 149) (1054)

முனாபிக்குகள் என்றால் யார்? அவர்கள் இயல்பு என்ன? அவர்களை எவ்வாறு கண்டு கொள்ளலாம்? அவர்களின் குறிக்கோள் என்ன? அவர்களை இனங்கண்டு கொள்வதற்கு வாய்ப்பாக பறாஅத் என்னும் சூறாவையே (அத்தியாயத்தைப்) பெருமானார் (சல்) அவர்களுக்கு அல்லாஹ் அருளினான். அல்குர்ஆனின் ஒன்பதாவது அத்தியாயமே பறாஅத் என்று அழைக்கப்படுகிறது. இக் குர்ஆன் அத்தியாயம், தௌபா என்றும் அழைக்கப்படுகிறது. பறாஅத் என்றால் முன்காப்பீடு என்பது பொருள். முனாபிக்குகளை அடையாளங் காணும் குறிப்புக்கள் இந்த அத்தியாயத்தில் 67-வது திருவசனத்திலிருந்து ஆரம்பிக்கின்றது.

''ஆணாயினும், பெண்ணாயினும், நயவஞ்சகர்
அனைவரும் ஒரே இனத்தவரே! அவர்கள்
(யாவருமே) பாபமான காரியங்களைச் செய்யும்படி
தூண்டுவார்கள். நன்மையான காரியங்களைத்
தடை செய்வார்கள். (செலவு செய்ய அவசியமான
சமயங்களில்) தங்கள் கைகளை மூடிக் கொள்வார்கள்.
இவர்கள் அல்லாஹ்வை மறந்து
விட்டார்கள்; ஆதலால் அல்லாஹ்வும்
அவர்களை மறந்துவிட்டான்; நிச்சயமாக
இந் நயவஞ்சகர்கள் தாம் (சதி செய்யும் கொடிய)
பாவிகள்.'' ( 9 : 67 )

இத்தகைய அடையாளங்கள் உள்ளவர்கள் முனபிக்குகள் என்பதைச் சின்னசீறா ஆசிரியர் ஒரு பாடலில் முனாபிக்குகளின்-நயவஞ்சகர்களின் அடையாளங்கள் இவை என அல்குர்ஆனில் இருப்பது போன்று குறிப்பிடாது அவற்றை அறிந்து கொள்ள அல்குர்ஆனையே பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது தொனிக்க இவ்வாறு பாடி உள்ளார்:

முற்று கின்ற முனாபிக்கின் னாரின்னார்
உற்ற சோம்பல் உடையரின் னாரின்னார்
பெற்ற தேகப் பிரியரின் ஞரென
வெற்றி ஆயத்து இவைகள் விளம்பிற்றே.
(தபூக்குப் படலம் : 18) (1380)

பெருமானார் (சல்) அவர்களுடன் போருக்குச் செல்லாதிருந்த மூவர் பிழை பொறுக்கப்பட்டமை பற்றிய குறிப்பும் தௌபா என்னும் அத்தியாயத்திலே இடம் பெற்றுள்ளது. இதனையே சின்னசீரு இவ்வாறு குறிப்பிடுகின்றது.

வெறுத்திடும் மூவர் தாமும் மெய்பகர்ந் ததனால் குற்றம்
பொறுத்திடச் சொலியும் மேலோன் பொருவறு சலாமத் தாக
நிறுத்தினன் எனவும் வேதர் நிகழ்த்தினர்.

(தபூக்குப் படலம் : 105) (1467)

திருக்குர்ஆனின் 112-வது அத்தியாயம் 'குல்ஹுவ வல்லாஹுவ அஹத்' என ஆரம்பிக்கிறது குர்ஆனில் உள்ள சின்னஞ்சிறு அத்தியாயமான இதனை ஓதுவது அல்குர்ஆனின் மூன்றில் ஒரு பகுதியை ஓதுவதற்குச் சமமாகும் எனப் பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் கூறி உள்ளார்கள். இவ்வத்தியாயத்தினை ஓதுவதன் சிறப்பினை பனீ அகுமது மரைக்காயர் தமது சின்ன சீருவில் குறிப்பிட்டுள்ளார். முஆபியத் என்பவரின் மகன் முஆது என்பவர் மரணமானார். அவருடைய மரணச் சடங்கை நிறைவேற்றுமாறு இறைவன் பணித்தான் என ஜிபுறீல் (அலை) அவர்கள் முகம்மது நபி (ஸல்) அவர்களுக்கு அறிவித்தார். அதற்கிணங்க அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மையத்துத் தொழுகை நடத்தினார்கள். இதனை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

உமிழ்முஆ பியத்தை வேதம் ஓதியே தொழுவித் தாரால்

(தபூக்குப் படலம் : 74) (1436)

இந்தத் தொழுகை நிறைவேற்றி இறந்தவருக்காகக் குறை இரங்கிய பின்னர் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் வானவர் கோனை விளித்து, இத்தகைய கட்டளை பிறப்பிக்கப் படுவதற்கு இந்த மனிதன் செய்த சிறப்பு நன்மை என்ன? என்று வினவினார்கள். எப்பொழுதும் தவறாது 'குல்குவல்லாகு' என்னும் அத்தியாயத்தை ஓதி வந்தமை யினாயிலேயே அவர் அத்தகைய சிறப்பினைப் பெற்றார் என் ஜிபுறீல் (அலை) அவர்கள் விடையளித்தார்கள். இந்நிகழ்ச்சியையே ஆசிரியர் இவ்வாறு இங்கே ஒரு பாடலில் அமைத்துப் பாடி உள்ளார்.

நறைமலர்க் கரங்கள் ஏந்தி நபிதுஆச் செய்து வாரித்
தறையினில் இவர்க்கிப் பேறு தரித்ததென் என்ன உம்பர்க்கு
இறையுடன் வினவக் குல்கு வல்லாகு எனுஞ்சூ றத்தை
முறைமுறை நிதமும் ஓதி முடித்திடும் பேறீது என்றார்.

(தபூக்குப் படலம் ; 75) (1437)

சின்னசீறா ஆசிரியர் பெருமானார் (சல்) அவர்களுக்கும் மனைவி யருக்கும் ஏற்பட்ட ஊடலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அபூபக்கர் (றலி) அவர்களின் மகள் அன்னை ஆயிசா (றலி) அவர்களும் உமறு கத்தாபு (றலி) அவர்களின் மகள் அன்னை ஹப்ஸா (றலி) அவர்களும் கூட்டாகச் செய்த சூழ்ச்சியின் பயனாக பெருமானார் (சல்) அவர்கள் பெரிதும் வருத்தப்பட்டார்கள். தங்களது மனைவியரின் வாழ்க்கையைச் சிறிது காலம் துறத்திருந்தார்கள். இவ்விருவரின் இரகசிய நடவடிக்கை

பொன்னிலம் அவனிவான் போற்றும் கற்புலாம்
கன்னிகை யார்கபு சாவும் ஆயிசத்து
என்னுநல் அன்னையும் இவர்கள் தத்தமில்
முன்னமே கபடமாய் முடித்த செய்தியும்.
(நம்பிராட்டிமார்களுடனே ஊடற் படலம் : 14) (1484)

இவ்வாறு மனைவியரை துறந்திருந்தமையையிட்டு சிறப்பாக மாரியத்து (றலி) அம்மையாரைத் துறந்திருந்தமையைப் பற்றி அல்லாஹ் திருக்குர்ஆனிலே குறிப்பிட்டுள்ளான். இதனையே சின்ன சீறா இவ்வாறு குறிப்பிடுகிறது.

துலக்கமாய் உரைத்த நும் தோகை மார்க்குளம்
கலக்கமாய் மாரியத்து என்னும் கன்னியை
விலக்கமாம் கறாமென விடுப்பதல் லவென்று
இலக்குறும் ஆயத்தொன் றிசைத்துப் போயினர்.
(நம்பிராட்டிமார்களுடனே ஊடற் படலம் 16) (1486)

கறாம் என்றால் விலக்கப்பட்டது. இக்கருத்துக்களுக்குச் சமமான திருக்குர்ஆன் ஆயத்துத் தஹ்றீம்-விலக்கல் என்னும் பெயரினைப் பெற்றுள்ளது. அதன் முதல் திருவசனம் இவ்வாறு அமைந்துள்ளது.

நபியே! நீர் உம்முடைய மனைவிகளின்
திருப்திகளைக் கருதி, அல்லாஹ் உமக்கு
ஆகுமாக்கி வைத்ததை நீர் ஏன்
(சத்தியம் செய்து அதனை ஹறாம் என்று)
விலக்கிக் கொண்டீர்? அல்லாஹ்
மிக மன்னிப்போனும் கிருபை
யுடையோனுமாக இருக்கிறான்
(66 : 1)

''நபியே உம்முடைய மனைவிகளுக்கு
நீர் கூறும் ''நீங்கள் இவ்வுலக
வாழ்க்கையையும் அதன் அலங்
காரத்தையும் மட்டிலுமே)
விரும்புவீர்களாயின், வாருங்கள்;
உங்களுடைய வாழ்க்கைக்கு
(உரியதைக் கொடுத்து) நல்லமுறையில்
(தலாக்கூறி) உங்களை நீக்கிவிடுகிறேன்.
அன்றி, நீங்கள் அல்லாஹ்வையும்
அவனுடைய தூதரையும், இறுதிவீட்
டையும் விரும்புபவர்களாயின்,
நிச்சயமாக அல்லாஹ் உங்களிலுள்ள
(இத்தகைய) நன்மையைக் கருதுவோருக்கு
மகத்தான கூலியைச் சித்தப்படுத்தி
வைத்திருக்கிறான்''

(33 : 28-29)

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் மனைவியர் சிறப்புத் தன்மை பெற்றவர்கள். அவர்களுக்கு விசேட கடமைகள் உண்டு. பொறுப்புணர்ச்சியும் உண்டு. அவர்கள் சாதாரணப் பெண்களைப் போன்றவர்கள் அல்லர். பெருமானாரின் மனைவியர் உம்மஹாத்துல் மூமினீன் என அழைக்கப்பட்டனர். 'நம்பிக்கை கொண்டோரின் தாயர்' என்பது அச்சொற்றொடரின் பொருளாகும். வெறுமனே வாழ்க்கை நடத்துவது அவர்கள் தம் கடமை அன்று. தங்கள் மகிழ்ச்சிக்கோ தங்கள் கணவனார் மகிழ்ச்சிக்கோ மாத்திரம் கடமை ஆற்றுதலின் மூலம் அவர்கள் பணி நிறைவுபெற்றுவிடாது. உலக ஆசைகளையும் இல்லற இன்ப வாழ்வையும் மாத்திரமே நாடி இருப்பின் அத்தகையோருக்குப் பெருமானாரின் இல்லத்தில் இடமில்லை. அத்தகையோரின் பிரதான குறிக்கோள் அதுவாயின் விவாக விலக்குப் பெற அவர்கள் தகுதி பெற்றிடுவர். இந்த அடிப்படையிலேதான் மேற் குறிப்பிட்ட திருக் குர்ஆன் வாக்கியங்கள் அருளப்பட்டுள்ளன. இத் திருக்குர்ஆன் வாக்கியங்களே சின்னசீறாவில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

அருக்கன் மேற்கடல் குளித்தனன் இருட்பிழம்பு அனைத்தும்
பெருக்கும் கங்குலில் புலிக்கொரு தாயெனப் பிறங்கும்
திருக்கு லாலிய ஆயிசா மனையினில் சென்றுங்கு
இருக்கும் போதினில் ஆயத்தொன் றிறக்கின னிறையோன்,

அரும்பும் தூய்நெறி மார்க்கமு மும்மையு மகத்தில்
விரும்பும் மாதரை மனைக்கருஞ் சுடரென விளக்கும்
பெரும்பு வித்தலம் வேண்டுமென் றுளங்கொளும் பேரைத்
திரும்பி நோக்கிடா திகழுமென் றுரைத்தது செய்யுள்.
(நம்பிராட்டிமார்களுடனே ஊடற்படலம் : 38-39) (1508-1509)

இந்த இறை அறிவிப்பைத் தங்கள் மனைவியருக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விளக்கினார்கள். முதலில் ஆயிஷா (றலி) அவர்களிடம் 'விருப்பத்துக்குரிய உலக வாழ்வோ சுவன வாழ்வோ' என வினவினார்கள். 'சுவன வாழ்வே தமது விருப்பம்' என்று அன்னை ஆயிஷா (றலி) அவர்கள் விடை பகர்ந்தார்கள். இதே வினாவை ஏனைய மனைவியரிடமும் பெருமானார் (சல்) அவர்கள் கேட்டார்கள். அவர்கள் அனைவரும் 'தாம் சுவன வாழ்வினையே விரும்புவதாகப் பதில் அளித்தனர். இக் கருத்துக்களையே பனீ அகுமது மரைக்காயர் அவர்கள் இவ்வாறு விளக்கி உள்ளார்.

செவிய ஆய்ந்தோர்ந் தாயிசா திருமுகம் நோக்கிப்
புவிவி ருப்பமோ பொற்பதி விருப்பமோ என்னச்
சுவன வாழ்வெனக் ககத்துறும் விருப்பெனச் சொன்னார்
அவிரு மொள்ளிழை ஆயிசா எனுந்திரு அனையே

அன்பின் மேவிய மனைவியர் யாரையு மழைத்து
முன்பு கேட்டபோல் கேட்டனர் அதற்கவர் முதிர்ந்த
இன்ப வான்பதி வேண்டுமென் றனரதில் இருவர்
துன்பம் ஆர்புவி விரும்பிநன் நபிதொடர் தீர்ந்தார்.
(நம்பிராட்டிமார்களுடனே ஊடற்படலம் : 40-41) (1510-1511)

வரலாற்று அடிப்படையில் பெருமானார் (சல்) அவர்களுக்கு இறுதியாக அருளப்பட்ட இறைவாக்கு அல்குர்ஆனின் ஐந்தாம் அத்தியாயம் நான்காம் திருவசனத்தில் அமைந்துள்ளது. அத்திரு வசனத்தில் இடம் பெற்றுள்ள அப்பகுதியின் தமிழாக்கம் இவ்வாறு அமைந்துள்ளது.

'தான் உங்களுக்கு, உங்களுடைய
மார்க்கத்தை இன்றைய தினம், பரிபூரண
மாக்கி வைத்து விட்டேன். உங்களுக்காக
இஸ்லாம் மார்க்கத்தையும் தேர்ந்(தெடுத்)து
(உங்களுக்கு அருட்செய்து) அங்கீகரித்துக்
கொண்டேன்,' (5 : 4)

இவ்வத்தியாயத்தில் உள்ள முதல் திருவசனத்தை இரண்டு திரு வசனங்களாகக் கொண்டு மேற்குறிப்பிட்டவாறு நான்காம் திருவச னத்திலே இக்கூற்று இடம் பெற்றுள்ளது. அதனை ஒரே திருவசன மாகக் கொள்வோர் அது மூன்றாம் திருவசனம் எனக் குறிப்பிட் டுள்ளனர்.

நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் தங்களது பிரியா விடை ஹஜ்ஜுப் பயணத்தின்போது அறபா மலையில் தங்கி இருந்து இறுதிச் சொற்பொழிவை நிகழ்த்தினார்கள். அச் சொற்பொழிவில் பல விழுமிய கருத்துக்கள் இடம் பெற்றன. அப்பிரசங்கம் முடிவடைய அண்ணல் நபி (சல்) அவர்கள் தங்களது பணி முடிந்துவிட்டதா? பணி முழுமைத் துவம் பெற்றுவிட்டதா எனக் கேட்டார்கள். அச் சந்தர்ப்பத்திலேதான் மேற்கூறிய இறைவசனம் அருளப்பட்டது.

இந்நிகழ்ச்சியைப் பனீ அகமது மரைக்காயர் புலவர் அவர்கள் நபி (சல்) கச்சிற்குப் போந்த படலத்தில்

நிலவிய அறபா மலைமிசை ஒட்டை
மீதிருந்து ஒளிநிலாக் கஃபா
புலனுற நோக்கிக் கதிரவன் குடக்கில்
புகுமள வுந்துஆ இரந்தார் (33) (1620)

எனப் பெருமானார் (சல்) அவர்கள் குறை இரங்கினமையையும்

மழைமுகில் கவிகை முகம்மது நபிக்கு
வானவர்க் கரசெனு மணிநல்
இழைதிகழ் புயத்துச் சிபுறயீல் அளித்த
இன்னிசை ஆயத்து. 34 (1621)

என இறைவாக்கு அருளப்பட்டமையையும் குறிப்பிட்ட பின்னர் இறை வசனத்தை இவ்வாறு சுட்டியுள்ளார்.

ஆற்றல்சால் புறுக்கான் அதில்வரும் சூறத்து
ஆயத்தின் ஆனசொற் கெல்லாம்
ஈற்றலில் வந்த ஆயத்தில் உங்கள்
தீனை நாம் இற்றையில் நிறைய

ஊற்றமாய் நிரப்பு வித்தனம் எனவும்
உவணைவாழ் வளித்தனம் எனவும்
மாற்றரும் இசுலாம் மார்க்கமும் பொருந்தி
மகிழ்ந்துசம் மதித்தனம் எனவும்
(35) (1622)

ஆதியும் நடுவும் அந்தமும் எவரும்
அறிகொணா தவனரு மறையில்
ஓதினா னென்ன யாவரு மறிய
உயர்புகழ் நபியுரைத் தனர்கேட்டு

(36) (1623)

கஃபுப் புலவர் எனத் தமிழில் அழைக்கப்படும் கஃப் இப்னு சுஹைர் என்பவர் முன்பு இஸ்லாத்தையும் முகம்மது நபி (சல்) அவர்களையும் இழித்துரைத்து தூற்றி வசைக்கவி பாடுவதில் சிறந்து விளங்கினார். பின்னர் அப்புலவர் மாறு வேடம் பூண்டு பெருமானார் (சல்) அவர்களிடம் வந்து சாதுர்யமாக உரையாடி இஸ்லாத்தைத் தழுவினார். தழுவிய பின்னர் பெருமானார் புகழ் பாட ஆரம்பித்தார். அறுபத்து மூன்று பாடல்களை (பயித்துக்களை)க் கொண்ட பானத் சுஆது என்னும் புகழ்ப் பாவணியைச் சூட்டினார். இதனையே பனீ அகுமது மரைக்காயர் இவ்வாறு பாடி உள்ளார்.

இலக்கண மிலக்கி யஞ்சீ ரெழுத்ததி காரம் மற்றும்
துலக்கமுற் றமைய பான சுஆதென நாமம் நாட்டி
மலைக்கிணை புயங்கள் விம்மப் பயித்தறு பத்து மூன்று
நிலைக்கும்விண் மாரி போலச் சொரிந்தனர் நிமிடத்து அன்றே
(கஃபுப் புலவர் ஈமான் கொண்ட படலம் : 24) (1309)

இவ்வாறு பாடிக் கொண்டிருக்கும் பொழுது ஓர் இடத்தில் 'இன்னற்றசூலல்லாஹி' என ஆரம்பித்துப் பாடினார். அப்பாடலில் 'நிச்சயமாக அல்லாஹ்வின் தூதர் உலகை ஒளிமயமாக்கும் பேரொளி யாவார்கள். ஒளி பொருந்திய கூர்வாளாக இருப்பார்கள் என்று தொனிக்கப் பாடினார். இக்கருத்துக்களையே பனீ அகுமது மரைக் காயர்ப் புலவர் இரண்டு பாடல்களில் இவ்வாறு அமைத்து பாடி யுள்ளார்.

இன்னற்ற சூலல் லாகி எனும்பயித் ததனின் அர்த்தம்
முன்னவன் தூதர் நீர்தாம் முச்சுடர் எறிக்கும் ஒள்வாள்
அன்னது புவியின் மாக்கள் விலையிட அரிய தான
பன்மணி குயிற்றிச் செம்பொன் பரிஞ்சைவைத் தொளிரும்
கூர்வாள்

ஆதிமே லவன்வாள் மின்னும் மணியுறை செறித்தி டாது
பூதலம் வான்மற் றெங்கும் பொருவற மிளிர்வாள் என்றும்
ஓதிய பொருள டக்கி உரைத்தனர் பயித்தைக் கேட்டுத்
தூதர்மெய் புளகம் பூத்துத் துணைப்புய வரைகள் விம்மி
(கஃபுப் புலவர் ஈமான் கொண்ட படலம் : 26-27) (1311-1312)

அப்புலவர்க்குப் 'பொன்னுடை' போர்த்தினார்கள் என்றும் மற்றொரு செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆனந்தக் கடலில் மூழ்கி.........
.........முகமன் கூறி வயநபி உத்தரீகம்
தானந்தான் உதவுகையால் தருக்குற எடுத்துப்போர்த்தார்
(கஃபுப் புலவர் ஈமான் கொண்ட படலம் : 28) (1313)

நபிகள் நாயகம் (சல்) அவர்கள் இறையடி சேர்வதற்கு முன்னர் அவர்கள் திருவாய் மலர்ந்த சில மூதுரைகளைச் சின்னசீறா ஆசிரியர் தமது காப்பியத்தில் தந்துள்ளார்.

நன்றிசெய் தோர்கட் கெல்லாம்
நன்றியே செய்மின் சிந்தை——
கன்றிடக் குற்றம் செய்தால்
பொறுப்பது கடனாம்——
(நபி (சல்) உபாத்துப் படலம் : 18) (1655)

குறைசி மக்களுக்குக் கூறும் புத்திமதியாய் அமைந்துள்ளது மற்றொரு செய்யுளின் கருத்து

தீயவர் தம்மைத் தீயோர்
சேர்ந்துபின் செல்வர் வேதத்து
ஆயுப நிடதம் தேர்ந்த
அருளுடைக் குறைசி காள் நன்
நேயமுற் றெவர்க்கும் நன்றி
நிலைப்புறச் செய்மின் யார்க்கும்
மாய்வுறும் அசடு செய்யின்
மறுத்தவர் தாமும் செய்வார்
(நபி (சல்) உபாத்துப் படலம் : 47) 1684)

கண்களை அதற்குரிய முறையில்பயன்படுத்தாது அறியாமை இருளில் மூழ்கி இருந்தமையைக் குறிப்பிடும் முகமாக ஒரு பாடலில் அத்தகைய கண்கள் இரண்டு புண்களே என்று குறிப்பிட்டுள்ளார், பனீ அகுமது மரைக்காயர்.

விண்ணா டளக்கும் நபிபதத்தில்
வீழ்ந்து கரங்கள் முத்தியிட்டுப்
பண்ணார் மொழியால் அளவளாய்
முகமன் பகர்ந்து முகத்திரண்டு
புண்ணாய் இருந்தோம் கண்பெற்றோம்
என்று போற்றி உளமகிழ்ந்தார்
(கைபர்ப் படலம் : 170) (414)

இத்தகைய கருத்துக்களையே பிற இலக்கியங்களில் காணக்கூடியதாக இருக்கின்றது.

**சொல்லாட்சி :**

சின்னசீறாவில் அதன் ஆசிரியர் பனீ அகுமது மரைக்காயர் புலவர் அவர்கள் மேற்கொண்டுள்ள சொல்லாட்சியைப் பார்ப்போம். அவர் அருமையாக உபயோகித்துள்ள சில சொற்களை ஈண்டு எடுத்துக் கொள்வோம்.

அடியேன் என்பது 'தாசனாகிய நான் என்னும் பொருளில் வரும் ஒரு வணக்க மொழி' என்று கூறப்பட்டுள்ளது. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திலே இத்தகைய உபயோகம் பெரிதும் இடம் பெற்றிருப் பதைக் காணலாம். அடியேன் என்று கூறும்பொழுது ஆண் பெண்பால் வேறுபாடு தொனிக்காது. ஆண்பால் உபயோகமாக அடியன் என்று அச்சொல் பயன்படுவதும் உண்டு. ஆனால் சின்ன சீறாவில் அச் சொல்லின் பெண்பால் உருவம் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். அன்னை உம்முஹபீபு (றலி) அவர்கள் கூறியதாக அமைந்த ஒரு பாடலின் முதலடியில் அடியள் என்னும் சொல் இவ்வாறு உபயோகிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

அடியளென் சலாமுங் கூற
அன்னையே வேண்டும் என்றாள்.
(அபசி-நஜாசா ராஜாவுக்கு நிருபம் அனுப்பின
படலம் : 17) (126)

அம்பி என்னும் சொல் தோணி என்னும் பொருளில் இக்காப்பியத் தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. நீர் நிறைந்த கடலில் மூழ்கித் தத்தளிப்பவனைக் காப்பாற்றக் கூடியது கடலில் செல்லக்கூடிய ஓடமேதான். மக்கத்துக் குறைசிகளின் நிலையைக் கடலில் ஆழ்ந்து தத்தளிப்பவருக்கு உவமை கூறி அவர்களைக் காப்பாற்றக் கூடிய ஒரே கப்பல் அபூசுபியான் (றலி) அவர்களின் இல்லம் என்பது வெளிப்பட இவ்வாறு ஒரு பாடல் அமைந்துள்ளது.

பம்புநீர்க் கடலின் ஆழ்ந்து
பதைபதைப் பவரைத் தாங்கும்
அம்பிபோல் எம்மைத் தாங்க
அடைந்தவ உனது மாடம்
(மக்கம் பிடித்த படலம் : 100) (1005)

தோணி ஏன்னும் பொருளில் அம்பி என்னும் சொல் 'பரிமுக வம்பியும், கரிமுகவம்பியும்' எனச் சிலப்பதிகாரத்திலும் (13 : 176) தெப்பம் என்னும் பொருளில் 'துறை யம்பியூர்வான்' எனக் கலித்தொகையிலும் (103 : 37) வந்துள்ளமை காண்க.

அவிழ்தம் என்பது ஒளடதம் என்பதனைக் குறிக்கும். மருந்தினைச் சுட்டும். நபி நாயகம் (சல்) அவர்களுக்கு நடுக்கமும் சுரமும் ஏற்பட்டன. அவற்றை நீக்க ஒளடதம் தயார் செய்ய முற்பட்டார்கள் அருகிருந்தோர். அதனையே புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

நவமிகு நபியே மெய்யின் நடுக்கமும் சுரமும் கண்ட
அவைதனக்கு அவிழ்தம் யாதும் செய்கவோ என்னக் கேட்டார்
(நபி (சல்) உபாத்துப் படலம் : 6) (1643)

மருந்தினைப் பெருமானாரவர்கள் மறுத்தமைபற்றி அடுத்த பாடல் 'எந்தமக்கு அவிழ்தம் வேண்டாம்' எனக் குறிப்பிட்டுள்ளது

அள்ளல் என்பது சேறு. நெருக்கம் என்றும் பொருள்படும். ஒரு பாடலில் அள்ளல், சேறு என்னும் இரண்டு சொற்களையும் பயன் படுத்தி உள்ளமையால் முன்னையது நெருக்கம் அல்லது மிகுதி என்பதனைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். அள்ளல் என்பதுடன் அம் என்பதும் சேர்ந்து வந்துள்ளது. அது நீரைக் குறிப்பதாக இருக்கலாம். அப்பாடலில் உள்ள முதல் அடி இவ்வாறு அமைந்துள்ளது.

அள்ள லங்கருஞ் சேறணை ததும்பிய நதியும்
(அபூபக்கர் சித்தீக்கு கச்சிற்குப் போந்த படலம் : 20) (1531)

ஆயுதங்களைப் பற்றி வருணிக்கும்பொழுது ஆசிரியர் 'அள்ளிலை' என்னும் சொற்றொடரைப் பயன்படுத்தி உள்ளார். அள் என்பதைக் கூர்மை என்னும் பொருளிலும் இலை என்பதனை ஆயுதவலகு என்னும் பொருளிலும் கொண்டு இச்சொற்றொடரை ஆண்டுள்ளார். வேலைப் பற்றிக் குறிப்பிடும் பொழுதே அள்ளிலை என்பதனை அடைமொழியாகப் பயன்படுத்தி உள்ளார்.

சுடர்விடு நெடுவாள் அள்ளிலை வடிவேல்
சுழற்றுகைக் கவணும் மற்றேந்தி
(தாயிபுப் படலம் : 22) (1202)

என்றும்

அள்ளிலை நெடுவேல் செங்கை
அருந்திறத் துழவர் சூழ
(தபூக்குப் படலம் : 51) (1413)

என்றும் போரைப் பற்றி வருணிக்கும் இரண்டு படலங்களில் அள்ளிலை என்னும் இச்சொற்றொடர் ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்.

பொதுவாக, நாற்படையை வருணிக்கும் பொழுது யானைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, காலாட்படை என்றே குறிப்பிடுவர். ஆனால் பனீ அகுமது மரைக்காயர்ப் புலவர் நான்கு சொற்களிலே நாற்படையையும் குறிப்பிட்டுள்ளார். அடுத்தடுத்து வரும் நான்கு சொற்களில் குறிப்பிட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. யானைப் படையை இபம் என்னும் காலாட்படையைக் காலாள் என்றும் வருணித்துள்ளார். தேர்ப்படையைத் தேர் என்றும் குதிரைப்படையை மா என்றும் வருணித்துள்ளார். அச்சொற்றொடர் இவ்வாறு ஆளப் பட்டுள்ளது.

தாதுலாம் தொடைத்திண் தோளான்
மந்திரத் தலைவர் கூயிப்
போதுஇபம் தேர்மாக் காலாள்
புணரிபோல் திரட்டும் என்றான்.

(மூத்தாப் படலம் : 25) (708)

ஈருள் என்பது ஈரலைக் குறிக்கும். தொடர்ச்சியாக அடுத்து அடுத்து வரும் மூன்று செய்யுள்களில் இச்சொல் பயன்படுத்தப்பட் டுள்ளமையைக் காணலாம். ஈருள் என்பதனை ஈர்+உள் எனப் பிரிக்கலாம். இரண்டாக உள்ள ஓர் உறுப்பு என்பதனையே அது சுட்டும். உடலில் உள்ளே இரண்டாக உள்ள உறுப்பு அது. அதனையே பொதுவழக்கில் ஈரல் என்போம். சங்ககால இலக்கியங்களிலே பயன் படுத்தப்பட்டுள்ளது இச்சொல். இரட்டை இலை போன்று இருப்பதாக வருணிக்கப்பட்டுள்ளது. அகநானூறு ஈருள் என்பதனை இவ்வாறு ஆண்டுள்ளது.

நெய்த் தோய்த் தன்ன நீர்நனை அந்தளிர்
இருவகிர் ஈருளின் ஈரிய துயல்வர

(294 : 7-8)

சின்னசீறாவில் ஈரல் என்னும் சொல்லுக்குப் பதிலாக ஈருள் என்னும் பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆட்டினது ஈரலைக் குறிப்பிடவே சின்னசீறாவில் உள்ள மூன்று செய்யுட்களிலும் ஈருள் என்னும் பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆசிரியர் ஈருள் என்னும் பதத்தை மூன்று இடங்களில் இவ்வாறு ஆண்டுள்ளார்.

மயிர்செறிந்த நெறிமருப்பு முறுக்கலா வரைஆட்டை
அறுத்துள் ஈருள்
அயிலவெடுத் தெரிமூட்டிச் சூட்டுக்கறி செய்மின்

(வேட்டைச்சாரி போந்த படலம் : 4) (452)

உரைத்தபடி வருடையறுத் தூனையட்டார் மோதகமும்
 சுட்டார் ஈருள்
நிரைத்துநெடும் கோலிடையில் கோலிவெய்ய
 அழற்கொழுந்தில்
 நிரைத்துக் காய்த்தி
(வேட்டைச்சாரி போந்த படலம் : 5) (453)

சுட்டுவைத்த ஈருள்தன்னை வாயார வயிறாரத்
 துய்த்து மிஞ்சி
மட்டுவைத்த பாத்திரத்தில் பெய்தகறி வளர்வது கண்டு
 அன்பு பூத்தார்.
(வேட்டைச்சாரி போந்த படலம் : 6) (454)

உவமை என்னும் சொல் ஓமை என மாற்றப்பட்டுச் சின்னசீறாவில் இடம் பெற்றுள்ளது. இணைஅற்றவன் என்றும் உவமை இல்லான் என்றும் அல்லாஹ் வருணிக்கப்படுவதுண்டு. சின்னசீறா ஆசிரியர் உவமையில்லான் எனக் குறிப்பிடுவதற்குப் பதிலாக ஓமையில்லான் என்னும் பொருளில் 'ஓமையில்' என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அன்றிற சூலுல் லாவும் அன்பரும் சுபுகு நேயம்
ஒன்றிடத் தொழக்கண் டார்கள் ஓமையில் இறையைப் போற்றி
(கஃபுப் புலவர் ஈமான் கொண்ட படலம் : 16) (1301)

துடை என்னும் கருத்தில் கவான் என்னும் சொல் பயன்படுத்தப் பட்டுள்ளது. மணிமேகலையின் பதிகத்தில் இச்சொல் 'கழுமிய வுவகையிற் கவாற் கொண் டிருந்தது' (27) என வந்துள்ளது. சின்ன சீறா ஆசிரியர் கவான் என்னும் சொல்லை அதே பொருளில் இவ்வாறு பயன்படுத்தியுள்ளார்.

மட்டவிழ் கமல பாதம் வணங்கிவாய் புதைத்து முந்தி
தொட்டிரு கவானொ துக்கித் தூயவன் தூதே ஏழை.
(தபூக்குப் படலம் : 65) (1427)

கறு என்றால் மன வைரம் என்பது பொருள். பகைமையையும் குறிக்கும். அன்னை ஆயிசா நாயகியும் அன்னை ஹப்ஸா நாயகியும் அன்னை மாரியா நாயகி மீது பொறாமைப்பட்டார்கள். மனவைரம் கொண்டார்கள். பகைமை பூண்டார்கள். இதனையே சின்னசீறா ஆசிரியர் ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு அமைந்துள்ள இப்பாடலில் மனவைரத்தைக் குறிக்கவே கறு என்பதனைப் பெயர்ச் சொல்லாகப் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம்.

அறமிகும் ஆயிசத்து என்னும் அன்னையும்
தறைபுகழ் நிறைகபு சாவும் தத்தமில்
மறுவறு மாரியத்து என்னும் மங்கைமேல்
கறுவொரும் சிலமொழி கழறுற்று ஓதுவார்.
(நம்பிராட்டி மார்களுடனே ஊடற்படலம் : 2) (1472)

பகைப் புலத்திலே எழுப்பப்படும் ஒலி குலிலி என அழைக்கப்படும். போர்க்களத்திலே எழுப்பப்படும் வீராவேச ஒலியைக் குறிக்க இச்சொல் பயன்படுத்தப்படும். பனீ அகுமது மரைக்காயர்ப் புலவரும் தமது சின்னசீறாவில் படைக்களத்தில் எழுப்பப்பட்ட வீராவேச முழக்கத்தைக் குறிப்பிடக் குலிலி என்னும் இச்சொல்லை இரண்டு சந்தர்ப்பங்களில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

கொம்மெனக் குலிலி இட்டுக் கொடும்பொறி மகரந் தத்து
மம்முறும் சலதி போல வருகின்றாரென வறைந்தான்
(மூத்தாப் படலம் : 24) (707)

... ... ... ... உள்ளத் தீமான்
கொண்டவர் கூறக்கேட்டு குலிலி இட்டு இரைந்துகத்தும்
வண்டெனச் சாரி வந்து வடிக்கணை மாரி பெய்தான்
(மூத்தாப் படலம் : 20) (773)

சோகம் என்பது இலக்கியத்தின் ஓர் அருமையான உபயோகம். ஒட்டகத்தைக் குறிக்கும் பொருட்டு இச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சின்னசீறாவில் ஒட்டகத்தைக் குறிக்கச் சோகம் என்னும் சொல் இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

அரிதினிற் கச்சி செயவெழு மென்ன
அதிர்குரல் முரசறைந் தனர்கேட்டு
எரிமணிப் பாண்டில் புரவிசோ கங்கள்
மிசையொரு நொடியில்வந் தனரால்
(நபி (சல்) கச்சிற்குப் போந்த படலம் : 3) (1590)

வந்தனர் திறந்த வயவர்கள் சோகம்
வாம்பரி பாண்டில்விட் டிழிந்து
(நபி (சல்) கச்சிற்குப் போந்த படலம் : 4) (1591)

உள்ளங்களித்தல் என்பது தனகுதல் எனப்படும். பெருமானார் (சல்) அவர்கள் உள்ளம் மகிழ்ந்தமையைப் பற்றிக் குறிப்பிட முற்பட்ட பனீ அகுமது மரைக்காயர்ப் புலவர் 'தனகி' என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார். பெருமானார் உள்ளம் மகிழ்ந்தமையை

ஆரமுற் றிருக்குந் திண்டோள் அபாசுபி யானை நோக்கி
ஈரமுற் றுள்ளத் தீமா னிருத்திப்புன் குபிர்கள் முற்றும்
வேரறுத் திசுலாம் மார்க்கம் விரும்பிலா திந்த மட்டும்
சாரமற் றிருந்த தென்கொல் என நபி தனகிக் கேட்டார்
(மக்கம் பிடித்த படலம் : 68) (973)

என்றும் எல்லாரும் மன மகிழ்ச்சியை அடைந்தமையை

கலக வேற்கரக் கயிசெனும் காவலர் தமக்குத்
தலைமை யுங்கொடுத் தனுப்பினர் யாவருந் தனகி.
(காலிதை நசுறானுக்கனுப்பின படலம் : 14) (1586)

தூதி என்பது மற்றொரு சொற் பிரயோகம். தூதன் என்பதன் பெண் பாலாகவே இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் உள்ள பெருமாள் திருமொழியில் 'யான்விட வந்தவென் றூதி யேநீம் (6 : 4) என வந்துள்ளது. சின்னசீறாவில் தூது செல்பவள் என்னும் பொருளில் தூதி என்னும் சொல் இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

தம்முழைப் பொருளாய் வந்த தங்கத்தின் எட்டி லொன்றை
வம்மெனத் தூதி கையில் வழங்கிட மறுத்துச் சொல்வாள்.
(அபசி-நஜாசாராஜாவுக்கு நிருபம் அனுப்பின படலம் : 15) (124)

அந்நிலம் கடந்து தூதி றவ்கத்தன் போடும் வந்தாள்
(அபசி-நஜாசா ராஜாவுக்கு நிருபம் அனுப்பின படலம் : 18) (127)

துடியிடைக் கரிய கூந்தல் துவரிதழ் களபக் கொங்கைப்
பிடிநடைத் தூதி சொற்ற பேரின்பக் களிப்பு மிஞ்சி
(அபசி-நஜாசாராஜாவுக்கு நிருபம் அனுப்பின படலம் : 20) (129)

உதைத்த என்பது வினைமுற்றாக அமைந்துள்ளது. பெயரெச்ச மாகவே பெரும்பாலும் வரும் உதைத்த என்பது அஃறிணைப் பன்மை வினைமுற்றாகவும் வரும். ஆனால் இத்தகைய பெயரெச்சங்கள் முஸ்லிம்களின் பேச்சு வழக்கிலே வினைமுற்றாக அமைவது பற்றி முன்பு குறிப்பிடப்பட்டது. முன்னைய இலக்கியங்களில் அத்தகைய வினைமுற்றுக்கள் வந்துள்ள இடங்களும் சுட்டப்பட்டுள்ள. சின்ன சீறாவில் அத்தகைய வினைமுற்றுக்கள் சில இடங்களில் வந்துள்ளன. உயர்திணை ஆண்பால் வினைமுற்றாக ஓர் இடத்தில்

எடுத்த புகழார் அம்றென்போர்
இட்ட கடகக் கைவாளால்
கடுத்த மனத்தன் தலையிலக்காய்
கடவச் சுவட்டில் பட்டுஉதைத்த.
(கைபர்ப் படலம் : 82) (327)

என வந்துள்ளது. ஏனைய இடங்களில் அவை அஃறிணையிலே வந்துள்ளது.

மோதும் மதுஆர் இளநீலம்
முகிழ்த்த இதழ்ப்பூம் பொதிஅவிழ்த்த
(கைபர்ப் படலம் : 139) (383)

கருதும் சூறத்து ஒன்று வந்த
(காத்தபு குறைசிகளுக்கு உளவோலை அனுப்பின படலம் : 29) (904)

... ... ... அதனை ஓர்ந்து
மறுத்தரா ஓகை வெள்ளம்
மனத்தடங் கரைக டந்த
(தபூக்குப் படலம் : 105) (1467)

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் மறையவர் திருமறையை ஓதிக்கொண்டிருப்பது பற்றிச் சுட்டப்படு கிறது. மறையவர் ஓதுவதைக் கேட்டுக் கொண்டிருந்த பறவைகள் அவற்றை மீட்டி ஒலித்துக் கொண்டிருந்தன என்று முஸ்லிம் புலவர்கள் வருணிப்பது உண்டு. மறையவர் ஓதுதலைக் கேட்ட கிளிப்பிள்ளைகள் அவற்றை மீட்டின. அவற்றைச் செவிமடுத்த காரிப்பிள்ளைகள் அவற்றை எதிரொலித்தன. மறைஓதுதலைப் பறவைகள் மீட்டின என ஆசிரியர் அத்துடன் நின்றுவிடவில்லை. அத்தகைய இனிமையான ஓசையைக் கேட்ட மயில்கள் அவ்வொலிக்கியைய நடனம் ஆடின என பனீ அகுமது மரைக்காயர் இவ்வாறு பாடி உள்ளார்.

கொடித்திரள் நுடங்கும் மாட கூடகோ புரத்தும் மற்றும்
வடித்தநூல் கலைகள் தேர்ந்த மறையவர் ஓதல் கேட்டுப்
படித்தன சிறைப்பைங் கிள்ளை பகர்ந்தன காரிப் பிள்ளை
நடித்தன மயிலின் கொள்ளை நகரெலாம் சிறக்க அன்றே.
(உம்றா கலாச் செயப்போந்த படலம் : 35) (546)

மற்றொரு பாடலில் கிள்ளைகள் மீட்டுவதைக் கேட்டுக் காரிப் பிள்ளை எதிரொலித்தன. காரிப்பிள்ளைகள் கூறியவற்றை கேட்டு அதே

பாணியில் குயில்கள் கூவின. மேகத்தைக் கண்டால் ஆடும் மயில்கள் இத்தகைய இசை அவற்றின் செவியில் புக ஆடத்தலைப்பட்டன. சாதாரணமாக ஆடவில்லை துள்ளி ஆடின. அத்தகைய நிகழ்ச்சிகள் மிக்க சோலைகள் அங்கு நிறைய இருந்தன.

இத்தகைய நிகழ்ச்சியைச் சின்னசீறா ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

கிள்ளை நன்மறை கிளத்தலைப் பசியவாய்க் காரிப்
பிள்ளை கேட்டிளம் குயில்களுக் கோதநற் பிரியம்
கொள்ளுங் கார்க்கரு வளைவிழிக் கூழைமென் மயில்கள்
துள்ளி ஆலும் மலர்சொறி சோலை மேவினரால்.

(இரண்டாவது உம்றாச் செயப்போந்த படலம் : 18) (1276)

பல்வேறு சந்தங்களைக் கொண்டு விருத்தப்பாக்களைப் பெருமளவில் கொண்டுள்ளது சின்னசீறா. பல நயங்களைக் கொண்டு மிளிரும் இக்காப்பியத்தில் ஓசை நயத்தையும் அமைத்துப் பாட ஆசிரியர் தவறவில்லை. ஒரே விதமான சொற்றொடர்களை ஒரு பாடலில் பன்முறை பயன்படுத்துவதனால் ஒரு பாடலில் ஓசை நயத்தினை இவ்வாறு பாடியுள்ளார்.

காலறுந் தனசில களமறுந் தனசில
வாலறுந் தனசில மடியறுந் தனசில
தோலறுந் தனசில சுவலறுந் தனசில
வேலினால் வீரர்கள் வீழ்த்தவாம் பரிகளே.

(சுதாம் படலம் : 16) (480)

மற்றொரு செய்யுளில் வல்லின எழுத்துக்களை மிகுதியாகப் பயன்படுத்தி ஓசை நயத்தை அமைத்துப் பாடியுள்ளார். வழியிலே கண்ட காட்சிகளை வருணிக்கும் பொழுதே ஒரு பாடலில் இவ்வாறு ஓசை நயம் பெறப்பட்டுள்ளது.

கற்றைவெண் கவரி ஆட்டக் கதலிகை வெயிலை ஓட்ட
கொற்றவான் கவிகை ஈட்டக் குணில்பறை கடலை வாட்ட
வெற்றிமா நடனம் காட்ட வெறிமலர்ச் சோலை நீட்ட
முற்றிய முனைக்கல் ஆறும் உரம்பையும் கடந்து போந்தார்.

(சுதாம் படலம் : 35) (499)

அதே சமயம் பல்வேறு ஓசைகளை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஒவ்வோர் ஓசையையும் அதைவிட ஒலி மிகுந்த ஓசை மிகைத்தது. இறுதியில் எல்லா ஓசைகளையும் விட முகம்மது நபி (சல்) அவர்கள் பேரைக் குறிப்பிட்டு அவர்கள் பேரில் எழுப்பப்படும் சலவாத்து ஓசை மிகுந்து ஒலித்தது. இந்தப் பாடலிலும் கூட பெயரெச்சங்களை வினை முற்றுக்களாக அமைத்துப் பாடியுள்ளமையைக் காணலாம். மறைத்த, அவித்த, என்பன பயன்படுத்தப்பட்டுள்ளமை புலனாகிறது. இச்செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பல்ல வாத்தியத் தொனிகளைப் பரித்தொனி மறைத்த
சொல்லும் அப்பரித் தொனிகளைத் தேர்த்தொனி அவித்த
மொல்லெ னப்பிறக் கின்றவத் தொனிகளை முழுதும்
வல்ல நன்னபி பேர்ச்சல வாத்தொலி மறைத்த.
(மூத்தாப் படலம் : 18) (701)

கரும்பு ஆலையிலிருந்து புறப்படும் ஒலிகள் ஒரு புறம் முழங்கின. குளிர்ந்த சோலைகளிலே குயில்கள் கூவும் இனிய ஒலிகள் மறுபுறம் இசைத்தன. மணமுரசுகள் இன்னொருபுரத்தில் ஒலித்தன. வேறொரு புறத்தில் ஆழ்கடலின் ஒலி எழுந்தது. இவை அனைத்தையும்விட திரு மறையை ஓதுவதனால் ஏற்பட்ட ஒலிகளின் முழக்கம் கேட்டமையினால் ஏனைய ஓசைகள் அனைத்தையும் மிஞ்சிவிட்டது. இவ்வாறு பனீ அகுமது மரைக்காயர் தமது சின்னசீறாவில் ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

ஆலைவாய்க் கரும்பு துண்டித்து
ஆட்டிய ஒலியும் தண்ணம்
சோலைவாய்க் குயில்கள் சுண்ணம்
துதைந்துகூம் ஒலியும் வெற்றி
மாலைவாய் புயத்து மன்னர்
மணமுர சொலியும் சூழ்ந்த
வேலைவாய் ஒலியும் அஞ்ச
வியன்மறை முழங்கு மன்றே
(உம்றா கலாச் செயப் போந்தபடலம் : 36) (547)

பொதுப்படையாக நோக்கும் பொழுது ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற் காகவே சின்னசீறா பாடப்பட்டுள்ளது என்பது புலனாகிறது. பெரு மானரின் வாழ்க்கை முழுமையாக உமறுப் புலவரின் சீறாப்புராணத்தில் இடம் பெறாத குறையை நிவர்த்தி செய்வதையே பனீ அகுமது மரைக் காயர் புலவர் தமது குறிக்கோளாகக் கொண்டே சீறாப்புராணம்-ஹிஜ்ரத்துக்காண்டம் என்னும் காப்பியத்தை எழுதி முடித்துள்ளார். இக்குறிக்கோளை அடைவதில் ஆசிரியர் வெற்றி பெற்றுள்ளார் என்றே கூறிவிடலாம்.

முஸ்லிம் மக்கள் தத்தம் கருமங்களை முடிக்கும் பொழுது இறைவனை இறைஞ்சியே முடிப்பர். துஆப் பிராத்தனையாக அமைத்து விடுவர். அறபு மொழியில் சாதாரணமாக ஓதப்படும் அந்த துஆப் பிரார்த்தனை போன்றே சின்னசீறாவின் இறுதி செய்யுளும் அமைந்துள்ளது எல்லோருக்கும் அல்லாஹ் கிருபை செய்வானாக என்னும் பிரார்த்தனையை அங்கு அமைத்துப்பாடியுள்ளார்.

தாயினிற் பரிவாய் மகுசறில் காக்கும்
சையது முகம்மது நபிக்கும்
ஏயஆல் அசுகா பிகளவர் தமக்கும்
இக்கதைக் குதவிசெய் தவர்க்கும்

தூயசெந் தமிழால் கோவைசெய் தவர்க்கும்
சொற்கவி செய்தவர் தமக்கும்
நேயமுற் றெழுதப் படித்தவர் தமக்கும்
நீதிநீ கிருபை செய் ஆமீன்.

(நபி (சல்) உபாத்துப்படலம் : 186) (1823)

# நான்காம் இயல்

# இராஜநாயகம்

வரலாற்று அடிப்படையில் பார்க்கும் பொழுது ஐந்தாவது இஸ்லாமியத் தமிழ்க் காப்பியமாகத் திகழ்வது இராஜநாயகம் என்னும் காப்பியம். இச் சொற்றொடர் சுட்டுவது போன்று அரசர்க்கரசராய்த் திகழ்ந்த தனிப்பெருந் தலைவர் ஒருவரின் வாழ்க்கை வரலாற்றினை இராஜநாயகம் விவரித்துள்ளது. எல்லா நபிமார்கள் என்னும் தீர்க்க தரிசிகளுள்ளும் அரசருக்கரசராய்த் திகழ்ந்தவர் நபிசுலைமான் (அலை) அவர்கள். தாவூத் நபி அவர்கள் அறிவும் ஆற்றலும் மிக்கவராகத் திகழ்ந்தார்கள். பல அதிசயமான நடுநிலைத் தீர்ப்பு வழங்கி விளங்கியவர்கள். பறவைகள், எறும்புகள், பூதங்கள் முதலியவற்றுடன் உரையாடும் வல்லமை பெற்றிருந்தார்கள் காற்றைத் தங்கள் ஆணைக்கு உட்படுத்தக் கூடியவர்களாக வாழ்ந்தார்கள். அல்லாஹ் விடமிருந்து பல அருட்பாக்கியங்களைப் பெற்றிருந்தார்கள். தன்னிக ரில்லாத் தலைவர்களுள் ஒருவராகத் திகழ்ந்தார்கள். அவர்களுடைய தனிப்பெரும் வாழ்க்கை இராஜநாயகத்தில் கருப்பொருளாக அமைந்துள்ளது.

வாய்ந்தெழிற் சுலையு மானன் னபிவர லாறு தன்னை
… … … காவியமி தற்கே
யேய்ந்திடு பெயரி ராஜ நாயக மென்ப தாமே

(கடவுள் வாழ்த்து : 25)

எனத் தமது நூலின் பெயரையும் தமது நூலுக்குக் கருப்பொருளாய் அமைந்த பாட்டுடைத் தலைவர் பெயரையும் குறிப்பிட்டுள்ளார். மற்றொரு பாடலில்

துதிநபி சுலையுமான் ராஜநாயகத்தை.........

(கடவுள் வாழ்த்து : 26)

என்றும் பிறிதொரு பாடலில்

புராதனச் சுலையு மானன் னபிபுகழ் புனைந்து கூறு
இராஜ நாயகத்து ———

(கடவுள் வாழ்த்து : 27)

என்றும் வந்துள்ளமையைக் காணலாம்.

**ஆசிரியர் பெயர்**

ஆசிரியர் தம்மைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது
...வண்ணஞ் சொல்வன் காவிய மிதற்கே

(கடவுள் வாழ்த்து : 26)

என்று ஓரிடத்தில் தமது வண்ணம் இயற்றும் ஆற்றலால் வந்த பெயரினைக் குறிப்பாகச் சுட்டிஉள்ளார். மற்றொரு பாடலில் கடைசி அடியில் தாம் மீசல் என்னும் இடத்தைச் சார்ந்தவர் என்றும் காவியம் இயற்றப்பட்ட பொழுது மதுரையில் வாழ்ந்தார் என்றும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

மதுரைவாழ் மீசல் வண்ணக் களஞ்சிய மவுலலுற்றாம்
(கடவுள் வாழ்த்து : 27)

இக்காப்பியத்தின் இறுதியில் பதினான்கு சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தமாக அமைந்துள்ள ஒரு செய்யுளில் இந்நூல் இயற்றப்பட்ட காலம் குறிப்பிடப்படுவதோடு இந்நூலின் பரப்பும் குறிப்பிடப்பட்டுள்ளது. நாற்பத்தாறு படலங்களையும் இரண்டாயிரத்து இருநூற்று நாற்பது செய்யுட்களையும் கொண்டுள்ளது என்னும் விவரமும் இவ்வாறு தரப்பட்டுள்ளது.

நரர்முத லுயிர்க ளெவையையும் புரந்த
நபியுல்லா சுலையுமான் வரவு
தானில முழுது மகிழ்வுற விராஜ
நாயக மெனப்பெயர் விளங்க
விரவிய படல நாற்பத்தா றிரண்டா
யிரத்திரு நூற்று நாற் பானுள்
விருத்தம தாகப் புகன்றனன் மதுரை
மீசல்வண் ணக்களஞ்சியமே.

இராஜநாயகத்தின் கடைசிப் பாடலுமான அரசாட்சிப் படலத்தில் உள்ள கடைசிச் செய்யுள் வாழ்த்துப் பாடலாக அமைந்துள்ளது. அங்கேயும் ஆசிரியரின் பெயரும் அவர் பிறந்த ஊரும் வாழ்ந்த நகரும் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

மதிதொடு குடுமி மாட மதுரையோன் வனச வாரங்
கதிர்விரி மீசல் வண்ணக் களஞ்சியக் கவிநூல் வாழி
(அரசாட்சிப் படலம் : 16)

**அவை யடக்கம்**

வண்ணக்களஞ்சியப் புலவர் தமது இராஜநாயகத்தில் அவருக்கே உரிய பாணியில் அவையடக்கம் கூறியுள்ளார். கடல்சூழ் உலகம் என்பர். உலகத்தைக் கடல் சூழ்ந்துள்ளது. அந்தக் கடல் முழங்கிக் கொண்டிருக்கிறது. அந்த முழக்கம் பேரொலி போல் சப்தித்துக் கொண்டிருக்கிறது. அந்தப் பின்னணியில் ஒரு பெண் ஒரு குடத்துடன் வருகிறாள் அந்தக் குடம் நிறைய நீரைக் கொண்டிருக்கவில்லை,

குறைவாகவே கொண்டுள்ளது. அதனால் அக்குடத்தில் உள்ள நீர் தளம்புகின்றது. அவ்வாறு தளம்புவதனால் ஏற்படும் ஒலி அக்குடத்தைக் கொண்டு செல்பவனுக்குக் கூடத் தெளிவாகக் கேட்காது. மிகப் பெரிய கடலின் ஒலிக்கு முன்னே குடத்தில் தளம்பொலி எத்தகையதோ அத்தகையதே தமிழ்க் கவிஞர் முன்னிலையில் தாம் பாடிய நூல் என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

குணங்கள் வேறுவே றெனும்பொரு ணிறைகுவ லையத்தை
வணங்கி லாவிட வளைகட லதிர்வதற் கெதிரே
அணங்க னார்கொடு வருகுறை குடத்தளம் பொலீபோல்
இணங்கு நூற்கவிப் புலவர்முன் யானியம் புவதே

(கடவுள் வாழ்த்து : 28)

இன்னொரு விதமாகவும் ஆசிரியர் அவையடக்கம் கூறிஉள்ளார். மாமன்னர் உலகின் எல்லாப் பாகங்களிலும் புகழுடையராய்த் திகழ்வர். அத்தகைய பேரரசரின் மணிமுடி பல மணிகளைக் கொண்டு விளங்கிக் கொண்டிருக்கும். அந்த மணிகளைப் பார்க்கும்பொழுது குருவிந்தம் எத்தன்மையது. குருவிந்தமோ தாழ்ந்ததர மணி வகையைச் சார்ந்தது. தமது படைப்பு தமிழ்க் கவிஞர் முன்னிலையில் குருவிந்தம் போன்றதே என்று குறிப்பிட்டுள்ளார். இங்கே தமிழ்க் கவிஞரை மாமன்னரின் மணிமுடியை அணி செய்யும் பிரகாசமான மணிகளாகக் கருதி உள்ளார். தம்மைக் குருவிந்தமாகக் கணித்துக் கூறும் பொழுது ஆசிரியர் அந்தக் குருவிந்தம் 'தாழ்வின் மிக்க தாழ்வாக' உள்ள குருவிந்தம் எனக் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது :

ஏழ்வகைப் புவியி னுநிறை தருபுக ழினராய்
வாழ்வின் மிக்கமா மன்னவ ரணிமுடி தனக்கே
தாழ்வின் மிக்கதாழ் வெனுங்குரு விந்தம் சரிபோல்
சூழ்வி தித்தமிழ்ப் புலவர் முனியான் சொலுந்துணிவே

அவையடக்கம் கூறும் மூன்றாம் செய்யுளில் ஆசிரியர் தமிழ்ப் புலமை வல்லவர்களை மேருமலையை ஒப்பவர்கள் எனக் குறிப்பிட்டுள்ளார். கவிப்புலமை வல்லவர் அவர்கள். ஒரு புறம் மேருமலை இருக்கிறது. மற்றப்புறம் ஒரு மண்மேடு உள்ளது. அந்த மண் மேட்டினைக் கறையான் ஆக்கியது. அது கறையான் புற்று. கறையான் குவித்த மண்ணாலானது. தமது படைப்பாகிய இக்காப்பியத்தைக் கறையான் புற்றுக்கும் கவி வல்லமை மிக்கப் புலவரை மேரு மலைக்கும் ஒப்பிட்டுத் தமது சிறுமையைப் பெருமனத்தோடு இவ்வாறு எடுத்துக்காட்டி உள்ளார். கறையான் புற்று போன்றதும் அன்று எனக் குறிப்பிட்டுள்ளமை காண்க.

மிகைத்த விக்கவிப் புலமைவல் லவர்முன்மே ருவுக்கே
தொகைப்ப டுஞ்சிதல் குவித்தமண் ணிணை யெனச்சொலுமத்
தகைத்து மல்லவென் றகற்றியென் புத்தியென் றனையே
நகைத்து மாசைவிட் டொழிந்தில என்செய்வ னானே

(கடவுள் வாழ்த்து : 30)

தமது சிறுமையை இவ்வாறு அவையடக்கத்தில் குறிப்பிட்டுள்ள ஆசிரியர் மற்றொரு பாடலில் தமது கவிகளைப் படிக்கும் முத்தமிழ் வித்தகர்கள் அக்கவிகளில் இனிமையைக் காண்பார்கள் என்றும், அவற்றை நற்கவிகள் என்று ஏற்றுக்கொள்வார்கள் என்றும் கருத்து வெளியிட்டுள்ளார். இதனை விளக்கவும் ஓர் உவமையைக் கையாண்டுள்ளார். பொன் போன்று விலைமிக்கத்தன்று செம்பு. அந்தச் செம்பினை இரத நீரைக் கொண்டு மாற்றலாம். இங்கே இரதம் என்றது பாதரசம். இப்பாதரசம் சேரச் செம்பும் பொன்னாகும். மந்திர சக்தி உள்ள மாத்திரை குளிகை எனப்படுகிறது. ‘குளிகையிட்டுப் பொன்னாக்குவன்’ என்கின்றது திருமந்திரம் (2709) இரதமா குளிகை செம்பினைப் பொன் மாற்றாக்குவது போல ஆசிரியரின் கவிதைகளைப் படிக்கும் முத்தமிழ் வித்தகர்கள் அவற்றினை அன்பூறும் நற்கவிகளாக்கலாம் என்றும் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

வேறு பட்டசெம் பிரதமா குளிகைமீ தணுகில்
ஏறு மிக்கபொன் மாற்றது போலவென் கவியுந்
தேறு முத்தமிழ்ப் புலவர்கள் செவிப்படி லவரன்
பூறு நற்கவி யாமெனுங் குறிப்புமொன் றுளதே

(கடவுள் வாழ்த்து : 31)

## பெரியாரைப் போற்றுதல்

கடவுள் வாழ்த்தில் இடம்பெற்றுள்ள பாடல்கள் பெரும்பாலும் இதற்குமுன்னர்தோன்றிய காப்பிய அமைப்புமுறையைப் பின்பற்றியே அமைந்திருப்பதைக் காணலாம். காலத்தால் முற்திய காப்பியங்களில் அல்லாஹ், முகம்மது நபி (சல்), ஏனைய நபிமார், முறுசலான நபிமார், உலுல் அசுமிகளான நபிமார், நான்கு கலிபாக்களான அபூபக்கர் (றலி), உமறு (றலி), உதுமான் (றலி) அலி (றலி) ஆகியோர் திரு நபி பேரர்களான அசன் (றலி), உசைன் (றலி) ஆகியோர், பெருமானார் தோழர்கள், இஸ்லாத்தின் நான்கு மதுகபுகளான பிரிவுகளின் தலைவர்களான நான்கு இமாம்கள் இஸ்லாத்துக்குப் புத்துயிர் அளித்த முகியித்தீன் ஆண்டகை ஆகியோர்

கடவுள் வாழ்த்தில் குறிப்பிடப்பட்டுள்ளனர். நாகூர் ஆண்டகையைப் பற்றிய குறிப்பு சீறாப்புராணத்தில் இடம் பெறவில்லை. திருமணக் காட்சியில் இடம்பெற்றுள்ளது இராஜநாயகத்திலும் இடம்பெற்றுள்ளது. வண்ணக்களஞ்சியப் புலவர் முதல் தடவையாகத் தமது இராஜநாயகத்தில் குறிப்பிட்ட சில இறைநேசச் செல்வர்களேயும் கவிஞர்களையும் கடவுள் வாழ்த்தில் குறிப்பிட்டுள்ளார். காலத்தால் பிந்தியவரான நாகூர் ஆண்டகை அவர்களின் புகழ்பாடி விட்டு அடுத்த பாடலில் காலத்தால் முந்திய இறைநேசச் செல்வரான சுல்தான் இப்றாகீம் அவர்களின் புகழ் பாடப்பட்டுள்ளது. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதியில் தமிழ்நாடு வந்து தமிழ்நாட்டின் ஒரு பகுதியை ஆட்சி புரிந்த இவ்விறை நேசர் கல்லறை ஏர்வாடி என்னும் இடத்தில் உள்ளது. இது கீழக்கரைக்கு அணித்தாய் அமைந்துள்ளது. அவரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது பெருமானார் முகம்மது நபி (சல்) அவர்களின் வழித்தோன்றல் அவர் என்றும் தம்மை நினைத்து வந்தவர்களின் தீவினைகளை அகற்றுபவர் என்றும் கடுமையான பகைமையைக் கொண்ட கீரியும் பாம்பும் சேர்ந்து இருக்க வாய்ப்பு அளிப்பவர் என்றும் ஏறுபடியில் வாழ்கின்றவர் என்றும் புகழப்பட்டுள்ளார். இக்கருத்துக்கள் அடங்கிய செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

கூறுமொளி யாகி மணி யாகிமயி லாயினர்கு
    லோதையர்தந் நா மநினைவோர்க்கு
ஈறுவரை நோய்பிணி பிசாசுபல தீவினைக
    ளேதுமணு காமலருள் வோர்

தேறுபடி கீரியொடு நாகமது தானுமொரு
    சேகரம தாகவிடுவோர்
ஏறுபடி வாழுமிபு றாகீமொலி பாதமிரு
    போதுமன மீது நினைவாம்

(கடவுள் வாழ்த்து : 19)

இங்கே இவ்விறைநேசச் செல்வர் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் 'குலோதையர்' என வருணிக்கப்பட்டுள்ளார். குல+உதையர் என்பதே வடமொழிச் சந்தி அடிப்படையில் குலோதையர் என வந்துள்ளது. கீரிக்கும் பாம்புக்கும் உள்ள பகைமையைக் குறிக்கத் 'தேறுபடி' எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். சுல்தான் இபுறாகீம் அவர்களின் பிறப்பிடம் யர்புத் என்பதாகும். இது மதீன மாநகருக்கு அருகாமையில் உள்ளது. யர்புத் என்பதே ஏர்வாடி என மருவி இருக்கலாம். ஏறுபடி என இங்கே சுட்டப்பட்டுள்ளது.

வழக்கம்போல் எல்லாக் காப்பியங்களிலும் சதக்கத்துல்லா அப்பாவுக்கு ஓர் இடம் அளிக்கப்பட்டுள்ளது மக்க மாநகரிலே தொழுதுவிட்டு அன்றே வகுதை வரும் ஆற்றல் படைத்தவர் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் என வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

மதிதவழ் மணிமுடி மாட மக்கமா
பதியினிற் றொழுதன்றே வகுதை பால்வரு
துதியொலி சதக்கத் துல்லாப் பதம்புகழ்
நிதிமனப் பேழையி னிறைத்துப் போற்றுவாம்

(கடவுள் வாழ்த்து : 20)

பின்னர் இறைநேசச் செல்வர்களான முதலியார் வெவ்வை சாகிபு அவர்களும் அவர்கள் குமாரர் அபூபக்கர் வெவ்வை ஆலிம் அவர்களும் கடவுள் வாழ்த்தில் உள்ள ஒரு பாடலிலும் (21) தௌகீது மாமுனா வெவ்வையாலிம் மற்றொரு பாடலிலும் (22) இதர இறைநேசச் செல்வர்கள் ஒட்டு மொத்தமாக வேறொரு பாடலிலும் (23) புகழப் பட்டுள்ளதைக் காணலாம். மாமுனா வெவ்வை ஆலிம் அவர்களின் ஆற்றலைக் கூறவந்த ஆசிரியர் ஒன்ருகவே ஒன்றுபோல் கலந்திருக்கும் பாலையும் நீரையும் பிரித்தறியும் ஆற்றல் உள்ள அன்னம் போன்றவர் அவர் எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஒவ்வுபால் சலம்பிரித் துதவு மன் னம் போற்
கௌவையா யிருவினை கடக்கு மார்க்கத்தை

(கடவுள் வாழ்த்து : 22)

தமக்கு முன் வாழ்ந்த புலவர்களையும் போற்றும் மரபு இவருடன் தான் இஸ்லாமியத் தமிழ் காப்பியங்களில் ஆரம்பமாகி உள்ளது. அவ்வாறு அவர்களைப் போற்றும் பொழுது ஒவ்வொருவரினதும் சிறந்ததொரு தொண்டினைக் குறிப்பிடவும் அவர் தவறவில்லை ஆலிப் புலவர் (மிஃறாசு மாலை) மின்னாநூறுத்தீன் புலவர் (பொன்னரியா) மாலை), உமறுப்புலவர் (சீறாப்புராணம்), கனகவிராயர் (கனகாபிஷேக மாலை), காசீம் புலவர் (திருப்புகழ்) சவாதுப் புலவர் (நாவன்மை மிக்கவர்) ஆகியோரைப் புகழ்ந்து இவ்வாறு பாடி உள்ளார்.

மேவிய மிகுறா ஜாலிப் புலவன் மின்னா நூறுத்தீன்
நீவிய மதுரவின்ப சாகர நிகராஞ் சீறாக்
காவிய உமறு மாலைக் கனகவிராயன் காசீம்
நாவினா ளெட்டில் வென்றான் சவாது நற்றாள்கள் போற்றி

(கடவுள் வாழ்த்து : 24)

இராஜநாயகம் அரங்கேற்றப்பட்டது கீழக்கரை என்பதை 'வளங் கொள் கீழக்கரையினி லரங்கமாக' (கடவுள் வாழ்த்து: 26) எனக் குறிப்பிட்டுள்ள ஆசிரியர் தமக்குப் பொருளுதவி புரிந்த வள்ளல் அப்துல் காதிர் என்பவரை 'வகுதையோன்' (கடவுள் வாழ்த்து: 27) எனக் குறிப்பிட்டுள்ளார். இராஜநாயகத்தில் பல இடங்களில் கொடை நாயகர் அப்துல் காதிர் குறிப்பிடப்பட்டுள்ளார். அவருடைய தந்தையர் பெயர் அகுமது நயினான் என்பது.

தராதரப் புயசிங் கார னகுமது நயினான் றந்த
(கடவுள் வாழ்த்து : 27)

என்றும்

தவமுழுது மியற்றியகு மதுநயினா னீன்ற
(சுலைமான் நபி அவதாரப் படலம் : 76)

என்றும்

'தென்வகுதைச் சுந்தரன் அகுமது நயினான்'
(குறுபான் கொடுத்த படலம் : 19)

என்றும்

மந்தர வருவி யெனமத மொழுகி
வண்டல்பாய் கவுட்கய விசைய
சுந்தரன் வகுதை யகுமது நயினான்
(சதக்கா நன்மைப் படலம் : 24)

என்றும்

... ... ... தென்வகுதை வாழும்
அகுமது நயினா னீன்ற
(பல்கீசு அரசுரிமைப்படலம் : 24)

என்றும்

... ... ... வகுதைத்
தனியதி பதியா மகுமது நயினான்
(திருமணப் படலம் : 75)

என்றும்

வகுதையம் பதிவாழ் அகுமது நயினான்
(சகுறஜின் ஈமான் கொண்ட படலம் : 45)

என்றும்

செந்திரு வகுதை யகுமது நயினான்
(அரியணை மாளிகைப் படலம் : 16)

என்றும்

அதிபதி வகுதை யாளும் அகுமது நயினா னீன்ற
(அரசாட்சிப் படலம் : 16)

என்றும் வந்துள்ளமை காண்க.

இங்ஙனம் வள்ளல் அப்துல் காதிர் அவர்களின் தந்தையின் பெயரைக் குறிப்பிடும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர் வகுதையைச் சேர்ந்தவர் என்பது சுட்டப்பட்டுள்ளது.

கொடைவள்ளல் அப்துல் காதிர் அவர்கள் பெயர் கொடைநாயகர் குறிப்பிடப்படும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் சுட்டப்பட்டுள்ளது. 'துரை' என்றும் அடைமொழி அவருடைய பெயருடன் இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

காரொப் பாகுந் துரை அப்துல் காதிர்தன்

(அரசு நிலையிட்ட படலம் : 79)

...துரையப்துல் காதிர் கை போல்

(பல்கீசு அரசுரிமைப் படலம் : 86)

...வரநிதி துரையப்துல் காதிர்

(சகுறஜின்னீமான் கொண்ட படலம் : 45)

சேயெனுந் துரையப்துல் காதிர்

(அரியணை மாளிகைப் படலம் : 16)

அவருடைய வள்ளன்மை

வராதிப னப்துல் காதிர் வள்ளல்

(கடவுள் வாழ்த்து : 27)

என்றும் இல்லையென்னாது வழங்கும் கையை உடையவராய் அவர் விளங்கினார் என்பது

...அப்துல் காதிர் கைபோல்

(பல்கீசு அரசுரிமைப் படலம் : 86)

என்றும் வந்துள்ளமை காண்க.

தமது உடைமைகளை வழங்குபவர் கொடை நாயகர். இத்தகைய பண்பினை மிக்குடையவர். இல்லையென்னாது வழங்கும் பண்பின ராதலின் வள்ளல் அப்துல் காதிர் அவர்கள் ஐந்தரு போன்றவர் என வருணிக்கப்பட்டுள்ளார். இதனைப் பஞ்சதரு என்பதே பெரு வழக்கு. சுவர்க்க லோகத்துக்குரிய ஐந்து வகையான மரங்களை பஞ்சதரு என்கின்றது சூடாமணி நிகண்டு. அவை தெய்வ மரங்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்திரனின் உலகத்தில் உள்ளவை அவை என்கின்றது பிங்கலந்தை நிகண்டு. அரிசந்தனம், கற்பகம்,

சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பனவே அவ்வைந்து மரங்களுமாம். இந்து மத சார்புடைய ஐந்தரு என்னும் சொற்றொடரை கொடைநாயகரின் கொடைத் திறனை வருணிக்கப் பயன்படுத்தி உள்ளார் இவ்வாசிரியர். பாடலில் அப்பகுதி பின்வருமாறு அமைந்துள்ளது.

தவமுழுது மியற்றியகு மதுநயினா
　　னீன்றருள் சந் ததியாய் வந்து
சுவமுதவு குணநிறையைந் தருவெனத் தோன்
　　றியவகுதைத் தோன்ற லானோன்
புவனமுழு தினுங்கீர்த்தி தழைத்த வப்துல்
　　காதிர்மனப் பொருள தாக

(சுலைமாநபி அவதாரப் படலம் : 76)

இங்கே கொடைநாயகரின் கீர்த்தியும் சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம். அவருடைய கீர்த்தி ஒவ்வொரு நாளும் வளர்ந்து கொண்டே இருந்தது என்பதும் அவர் வாக்குக் கொடுத்தால் கட்டாயம் நிறைவேற்றப்படும் என்பதும் தொனிக்க ஒரு பாடலில் அவரது புகழ் இவ்வாறு அமைந்துள்ளது.

நாட்குநாள் வளருங் கீர்த்தி நரபதி யப்துல் காதிர்
வாக்கினா லஞ்ச லென்றே மவுன்றிடப் பெற்றோர் போல

(கனவுகண்டு மணஞ் செய்த படலம் : 60)

பொதுவாக ஒருவரின் கொடையை மேகங்களுக்கு ஒப்பிடுவது வழக்கம். கேட்காமலே மழையைப் பொழிகிறது மேகம். இல்லையென்னாது அளிக்கிறது. ஆதலினால் வள்ளல்களை மேகங்களுக்கு ஒப்பிடுவது வழக்காறாகும். ஆனால் வண்ணக்களஞ்சியப் புலவரோவெனின் 'அருண்முகில்கள்' கொடைநாயகர் அப்துல் காதிர் அவர்களின் கைகள் போல் வாரி வழங்கின எனப் பாடி உள்ளார். முற்றும் முரணான உவமையாக இது உள்ளது. இக் கருத்துக்களைக் கொண்ட பாடலின் பகுதி இவ்வாறு அமைந்துள்ளது :

தேடிய புகழுத் தமனப்துல் காதிர்
　　செழுங்கரம் போலருண் முகில்கள்
கூடிமென் மலர்பொன் மணிபொழிந்திடச் செங்
　　கோன்முறை செலுத்தின ரன்றே

(முத்திரை மோதிரம் பறிபட்டு வந்த படலம் : 62)

கொடை நாயகர் அப்துல் காதிர் அவர்களின் புகழ் எவ்வாறு பாரெங்கும் பரவுமோ அதே போன்று சந்திரனின் ஒளியும் எங்கும் பரவும். இங்கும் கொடை வள்ளலின் புகழ்போன்ற சந்திரன் அதன் நிலாவினைத் திரண்ட இருளைக் கிழித்து உலகில் பரப்புகிறது என்று குறிப்பிட்டுள்ளமையைக் காணலாம். ஒரு மாளிகையின் பிரகாசத்தை வருணிக்க வந்த ஆசிரியர் இரவும் பகலும் எப்பொழுதும் அம்மாளிகை ஒளிமயமாய்த் திகழ்ந்தது எனக் குறிப்பிட்டுள்ளார். சூரியன் ஒன்றல்ல ஆயிரம் வந்து ஒளிபரப்புவது போன்ற அந்த மாளிகை பிரகாசமாகத் திகழ்ந்தது என்பதனையே இவ்வாறு ஒரு பாடலில் ஆசிரியர் விளக்கி உள்ளார்.

செந்திரு வகுதை யகுமது நயினான்
    சேயெனுந் துரையப்துல் காதிர்
சுந்தரப் புகழ்போ லிருட்பிழம் பனைத்தும்
    துணித்தெழு செழுநிலா வொழுகி
சந்திர னொளிபோ லிரவினிற் றுலங்கும்
    சகத்திர கிரணசூ ரியர்கள்
வந்தொரு திரளா யொளிர்வது நிகராய்
    வனப்பொரு பகலினி லிலங்கும்

(அரியணை மாளிகைப் படலம் : 16)

இங்கே ஆயிரஞ் சூரியர்களைக் குறிக்க 'சகத்திர கிரண சூரியர்கள்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயிரத்தைக் குறிக்கும் சகச்சிரம் இங்கே சகத்திரமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

கொடை நாயகர் அப்துல் காதிர் அவர்களுக்கு ஒப்பாவது மழை கொட்டும் முகில்களே. அவருடைய சீர் ஒப்பாவது நாட்டுச் செல்வங் களுக்கு. இவ்வாறு சுலைமான் நபி அவர்கள் ஆண்ட நாட்டின் வளங் கள் அப்துல்காதிர் வள்ளலின் சிறப்பியல்புகளுக்கு ஒப்பிடப்பட்டுள்ளன.

காரொப் பாகுந் துரை அப்துல் காதிர்தன்
சீரொப் பாகுஞ் செல்வங்கள்...

(அரசு நிலைப் படலம் : 79)

பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் பொன்மொழிகள் கேட் பதற்கு இனியவனாய் இருக்கும். இந்நூலின் கொடை நாயகராகிய அப்துல் காதிர் அவர்களின் உள்ளத்திலே உறையும் தவப்பொருள் போன்றவை அம்மணி மொழிகள். விழுமிய கருத்துக்களையே கொடை நாயகர் மொழிந்து கொண்டிருந்தார். இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு கூறியுள்ளார்.

.........

நவி லப்துல் காதிர்நெஞ் சுறையும்
தவப்பொரு ளனைய முகம்மது
நயினார் சாற்றிய திருமொழி கேண்மின்
(நபிப்பட்ட முத்திரை மோதிரம் வந்த படலம் : 18)

காமன் மறுபெயராக மோகன் என்பதைக் குறிப்பிட்டுள்ளது பிங்கலந்தை நிகண்டு. காமன் அல்லது மோகன் பெண்களால் பெரிதும் விரும்பப்படுபவன். 'புடைத்தெழு முலையார் மோகன்' என்றே பாடலில் அடையோடு குறிப்பிடப்பட்டுள்ளான். அத்தகைய மோகனைப் போன்று புகழை உடையவர் இராஜ நாயகக் கொடை நாயகர் அப்துல் காதிர் அவர்கள். கொடை நாயகர் பெருஞ் செல்வம் படைத்தவர். பல வளங்களுக்கு உரித்துடையவர். மக்கள் துயர் துடைத்து வாழ்ந்த பெருந்தகையர். அவர்களையே ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்:

புடைத்தெழு முலையார் மோகன் புகழப்துல் காதி றன்பு
படைத்து ளோர் நிதிக ளூரும் பளங்கள்பெற் றுயர்ந்த வாட்டம்
துடைத்துவாழ் மகிழ்வொப்பாகி யிருவருந் துணிந்த வண்ணம்
(பல்கீசு வரலாற்றுப் படலம் : 60)

தவப்பயன் மிக்கவர் அப்துல் காதிர் அவர்கள். அவருடைய தந்தையார் அகுமது நயினார் என்பவர் பூமியிலே பல நற்செயல்களைச் செய்துள்ளார். அந்த நற்செயல்களின் பயனாக உதித்தவர் தாம் எமது கொடை நாயகர். தவத்தின் பயனாகத் தோன்றியவர். இதனையே இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

............

துலங்கிய தடங்கள் செறிந்ததென் வகுதைச்
சுந்தர னகுமது நயினான்
நிலந்தனி லியற்று தவத்தினா லுதித்த
நிதிபதி துரையப்துல் காதி
றிலங்கிய விதையா சனப்பொருள் மகுமூ
திருபத மிகபர கதியே
(கருபத்துல்லாவிற் குர்பான் கொடுத்த படலம் : 19)

**வகுதை :**

வகுதை என்பது பற்றி முன்னர் குறிப்பிடப்பட்டது. அச்சொல் எவ்வாறு தோன்றி இருக்கலாம் என்பதும் குறிப்பிடப்பட்டது. வகுதையைப் பற்றி வண்ணக்களஞ்சியப் புலவர் குறிப்பிட்டுள்ளார். இக்

காப்பியம் கீழக்கரையில் அரங்கேற்றப்பட்டது என்பதைக் குறிப்பிட்ட ஆசிரியர் அது வகுதையின் மறு பெயர் என்பதைக் குறிப்பிடவில்லை. ஆனால் தமது கொடைநாயகர் வகுதையைச் சேர்ந்தவர் என்பதைப் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார். வகுதையின் இயற்கை நலனையும் வருணிக்க அவர் தவறவில்லை.

வகுதையிலே சோலைகள் உண்டு. செழுமையான சோலைகள். வளம் மிக்கவை. இருள் படர்ந்த சோலை. அடர்ந்து வளர்ந்து இருந்தது. சூரியனின் வெளிச்சம் நுழைய முடியாத அளவுக்கு மரங்கள் செறிந்து விளங்கிய சோலை அவை. அங்குள்ள சோலைகலில் உள்ள மரங்களில் உள்ள கனிகள் பழுத்து உதிர்ந்து இருந்தன. இக் கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கனிபழுத் துதறுங் கதிரவ னுழையாக்
கருஞ்செழுஞ் சோலைசூழ் வகுதை

(திருமணப் படலம் : 75)

ஞாயிற்றின் கதிர் தோன்றிய காலத்தும் படுகின்ற காலத்தும் உட்படச் சிறிதும் செல்லுதலறியாத இளமரக்கா என

வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்

(மணிமேகலை : 4 : 5)

என்னும் அடிக்கு உரை கூறி இருப்பதும் ஈண்டு நோக்கற்பாலது. மற்றோர் இடத்தில் 'செந்திரு வகுதை' (அரியணை மாளிகைப்படலம்: 16) என்றும் வேறோர் இடத்தில் 'அணங்கு மேவிய வளம்பதி வகுதை' (பைத்துல் முகத்தீசிற் குறுபான் கொடுத்த படலம் : 18) என்றும் வகுதைநகர் வருணிக்கப்பட்டுள்ளது.

வகுதை என்று குறிப்பிட்ட இதே நகரை தென்வகுதை என்று இரண்டு பாடல்களில் சுட்டி உள்ளார் ஆசிரியர். வகுதையை ஏன் தென்வகுதை என்று வண்ணக்களஞ்சியப் புலவர் குறிப்பிட்டார்? அதற்கான காரணமென்ன? வண்ணக்களஞ்சியப் புலவரின் கொடை நாயகரான அப்துல் காதிர் அவர்கள் வாழ்ந்த வகுதை என்னும் நகருக்கு வடக்கே இன்னொரு நகர் வகுதை என்னும் பெயரைக் கொண்டு அழைக்கப்பட்டிருக்கலாம். வடவகுதை என்பது வகுதை என அழைக்கப்பட்ட மகுமூது பந்தரைக் குறிக்குமா? வகுதை என அழைக்கப்பட்ட தொண்டியைச் சுட்டுமா? இரண்டும் இப்பொழுது வகுதை எனக் கருதப்படும் கீழக்கரைக்கு வடக்கே இருப்பது புலனாகின்றது. முன்னது வடவகுதை என்றும் பின்னது தென்வகுதை என்றும்

அழைக்கப்பட்டிருக்கலாமா? இவை ஆராய்ச்சிக்குட்படுத்தப்பட வேண்டிய செய்திகளாகும். காயல், தென் காயல் என்பனவும் இங்ஙனம் ஆராயப்பட வேண்டியவையாகும்.

தென் வகுதையின் இயற்கையையும் வருணித்துள்ளார் ஆசிரியர். அங்கே உள்ள குளங்களில் தாமரை மலர்கள் மலர்ந்திருந்தன. அவ்வாறு மலர்ந்த தாமரை மலர்களிலே அன்னங்கள் கூட்டமாக வீற்றிருந்தன. அவைகள் வீற்றிருந்த தாமரைகளைக் கொண்ட குளங்களோ வட்டமாய் அமைந்திருந்தன. பூரணச்சந்திரனைப் போன்று வட்டமாய்த் திகழ்ந்தன. இக்கருத்துக்களையே புலவர் இவ்வாறு படம் பிடித்துக் காட்டிஉள்ளார்.

மலர்ந்தபங் கயங்க டொறுமனத் தொகைகள்
வந்திருப் பவைமதி நிகராய்த்
துலங்கிய தடங்கள் செறிந்ததென் வகுதை
(கஃபத்துல்லாவில் குறுபான் கொடுத்த படலம் : 19)

அடுத்த பாடலில் தென்வகுதை வளமிக்கு விளங்கியது என்று மாத்திரமே இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

மிகவளம் பெருகி யோங்கி விளங்குதென் வகுதை...
(பல்கீசு அரசுரிமைப் படலம் : 86)

### இயற்கை வருணனை

பல மரங்களைக் கொண்டது சோலை. அத்தகைய சோலையை வண்ணக்களஞ்சியப் புலவர் வருணிக்க முற்பட்டு அச்சோலையில் உள்ள மரங்கள் அனைத்தையும் இரண்டு செய்யுட்களில் விவரித்துள்ளார். முக்கனிகளைத் தரும் வாழை, மா, பலா மரங்களை முதற்கண் குறிப்பிட்டுள்ளார். அடுத்து ஈந்து, இலவு, அனிச்சை, அத்தி, கமுகு, சந்தனம், குங்குமம், செண்பகம், முருக்கு, மல்லிகை, மாதுளை, தென்னை, பனை, பாலை மரம், புன்னை, கோங்கு, ஆசினி, தேக்கு, மஞ்சாடி, மகிழ்மரம், விளாமரம், மருக்கொழுந்து, ஆமணக்கு, வெள்ளைச்சீந்தில், வன்னி மரம், அகில் மரம், கருங்கனி, வெங்கனி, நெல்லி, ஆலமரம், கொன்றை, வெட்பாலை, அசோகம் என்பனவும் பிற மரங்களும் நிறைந்திருந்தன அச்சோலையில் என இங்ஙனம் வருணித்துள்ளார் ஆசிரியர்.

கதலீ மாபலா வீந்தில வனிச்சையார் கமுகு
முதிய சந்தனங் குங்குமஞ் செண்பக முருக்குப்
பதிய மல்லிகை மாதளை தேங்குதால் பாலை
ததிகொள் புன்னைகோங் காசினி தேக்குமஞ் சாடி

மகிழ்வி ளாமரு தருணம்வெண் சீவந்தி வன்னி
யகில்க ருங்கனி வெங்கனி நெல்லி யா லத்தி
விகசி தந்தரு பாடலங் கொன்றைவெட் பாலை
புகல சோகினம் பலதரு வினமலர்ப் பொழிலே

(எறும்புகள் விருந்திட்ட படலம் : 4-5)

சோலையிலே வளர்ந்துள்ள மரங்களையும் செடி கொடிகளையும் வருணித்த ஆசிரியர் அவை ஒவ்வொன்றும் தோற்றமளிக்கும் காட்சியை அடுத்துவரும் பாடல்கள் ஒவ்வொன்றிலும் கவிநயம் மிளிர அமைத்துப் பாடிஉள்ளார்.

**உவமையும் உருவகமும்**

இயற்கைக் காட்சிகளை வருணிக்கும்பொழுது அவற்றை எளிதில் விளக்கக் கவிஞர் அவற்றில் உவமைகளையும் உருவகங்களையும் அமைத்துப் பாடுவது கவிமரபாகும். அத்தகைய மரபு இராஜநாயகத்தில் கடைப்பிடிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

மேலே பொழிலில் அமைந்திருந்த மரங்கள் வருணிக்கப்பட்டிருந்தமையைக் கண்டோம். அம்மரங்கள் அமைந்திருந்த முறைமையை நயம்படப் புலவர் வருணித்துள்ளார். சுலைமான் நபி (அலை) அவர்களின் வரவை வருணிக்க முனைந்த ஆசிரியர் அந்நபி அவர்கள் ஒரு சோலைக்கு வந்தமையைக் குறிப்பிட்டார். அந்தச் சோலையை ஒரு மன்னனாக உருவகித்துள்ளார். மன்னர் மன்னனான, இராஜநாயகரான சுலையுமான் நபி (அலை) அவர்கள் வருகை தருவதால் சோலையான மன்னன் தனது திறையைச் செலுத்துவதாக ஆசிரியர் உருவகித்துள்ளார். பட்டை தீட்டப்பட்ட பதுமராகங்களான மணிக்கற்களே திறையாகச் செலுத்தப்படும் பொருள்களாகும். ஆனால் பொழிலாகிய மன்னன் தன்னுடைய திறையாகத் தனக்கே உரிய 'பதுமராகங்'களான அலர்ந்த புன்னைப் பூக்களைத் திறையாக இடுவதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. அவை முத்துக்களென வருணிக்கப்பட்டுள்ளன. புன்னை மரங்கள் பூத்து இருக்கும் காட்சி முத்துக்களை இடுவதனை ஒத்திருந்தது. இதனையே ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

வரஞ்செய் வோனபி வரவறிந் தெழிற் பொழின் மன்னன்
திருந்து சாணைசெய் பதுமரா கங்களைத் திறையாய்ப்
பொருந்த வேயிடற் கிணைதரு மகிழலர் புன்னை
அரும்பெ லாந்தர ளங்களை யிடுவதொத் தருளும்.

(எறும்புகள் விருந்திட்ட படலம் : 6)

முருக்கு மரங்கள் அடுத்து வருணிக்கப்பட்டுள்ளன. கற்பை இழக் காதவர்கள் கன்னியர். மலர்ந்திருந்தும் தன்னிடம் உள்ள தேனை வண்டுகள் கொள்ளவிடாது அமைந்திருத்தலின் அம்மலர்கள் கன்னி யருக்கு ஒப்பிடப்பட்டுள்ளன. வண்டுகளின் கூட்டம் அணுக முடியாமல் சண்பக மலர்களால் மூடப்பட்டுள்ளனவாம் முருக்க மலர்கள். பிறருக்குப் பயன்படாதவாறு அமைந்துள்ளன் முருக்க மலர்கள். அம்முருக்கினைக் கவிஞர் கல்வியில்லாதவனை ஒத்திருந்தது என வருணித்துள்ளார். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம்பெற்றுள்ளன.

வடத்த பொன்னகை பூண்டென வலர்ந்திதழ் வாய்த்தேன்
கொடுத்தி டாதகன் னியரென வரியளிக் கூட்டம்
அடுத்தி டாதுறுஞ் சண்பக மணமிலா வலரான்
முடிக்கொள் கல்வியி லாரையீன் றவரொப்பா முருக்கு
(எறும்புகள் விருந்திடு படலம் : 7)

சரக்கொன்றை அலாதியான காட்சியை அளித்தது. சரஞ்சர மாகப் பூப்பது கொன்றை. கொத்துக் கொத்தாகப் பூக்கும் கொன்றை மலர்கள் அழகான காட்சியாக அமைந்திருந்தன. ஆபரணங்கள் மரத்திலே தொங்கவிடப்பட்டுள்ளன போன்று காட்சி அளித்தன அப் பூக்கள். வானுலக மகளிர் பூஞ்சோலைக்குவந்து விளையாட்டில் ஈடுபட வழி செய்யும் பொருட்டு அப்பூக்கள் ஆபரணங்கள் போன்று காட்சி வழங்கின. இக்கருத்துக்களே இவ்வாறு பாடப் பெற்றுள்ளன.

அம்பொன் மேலுல கரம்பைய ரிழிந்துகா வதனிற்
பண்பு கூர்விளை யாடல்செய் திடவெனப் பலபூ
வம்பு லாவிய வாபர ணங்களை மரத்திற்
கொம்பு தோறினுந் தூக்கிய தாஞ்சரக் கொன்றை
(எறும்புகள் விருந்திடு படலம் : 8)

சூரியகாந்தி மலர் கற்றுணர்ந்தவர்களை ஒத்துத் திகழ்ந்தன. கடுமையான நோக்கை உடையவர்களும் கண்மலர்ந்து பார்க்கும் பொழுது உற்று நோக்குவர். நற்குணம் மிகுக்கும் பார்வையை உடையவராய் இருப்பர். இதத்கைய நற்குணங்கள் கற்றோரிடமும் இருக்கக் காணலாம். அத்தகையோரை ஒத்திருந்தன சூரியகாந்திப் பூக்கள் என்றும் அப்பூக்கள் பூஞ்சோலைக்கே அழகு ஊட்டுவனவாய்த் திகழ்ந்திருந்தன என்றும் ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

முற்று மேகடு நோக்குளோர் கண்மலர் முகமாய்
உற்று நோக்கலு நற்குண மிகுதலு முரித்தாங்
கற்று ளோர்களை நிகர்த்தன சூரிய காந்தி
மற்று மேமரு மலர்சில பொழிற்கெழில் வழங்கும்
(எறும்புகள் விருந்திடு படலம் : 10)

மாமரங்களும் பலா மரங்களும் அப்பொழிலில் மிகுந்திருந்தன. கரும்பு மரங்களுக்கு மேலாக அமைந்திருந்தன. நன்றாகக் கனிந்து உதிரும் மாம்பழங்கள் பழுத்துத் தொங்கும் பலாக்கனிகள் மீது விழுந் தன. இரண்டு கனிகளிலிருந்தும் பழச்சாறுகள் வடிந்தன. அக்காட்சி சோலையிலே இருந்த தேன் குடங்களை யடைத்தது போல் இருந்தது. அதனை மற்றொரு அடை கொடுத்து வருணித்துள்ளார் கவிஞர். வானுலகிலிருந்து வந்த அரம்பையர் அமுதத்தைத் திரட்டிப் பொழிலில் இருந்த தேங்குடத்தை உடைத்தது போன்று இருந்தது எனக் குறிப் பிட்டுள்ளார். இக்கருத்துக்களை உள்ளடக்கிய பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கழைக்குலத் தின்மேல் வளர்ந்துள மாவுதிர் கனிகள்
பழுத்துத் தொங்குப லாக்கனி மீதினிற் படுதல்
செழிக்கும் பொன்னுல கரம்பைய ரமுதத்தைத் திரட்டிப்
பொழிற்கண் முங்கிய தேங்குட முடைப்பது போலும்

(எறும்புகள் விருந்திடு படலம் : 11)

அங்கே அழகிய எலுமிச்சை மரங்கள் அப்பொழிலுக்கு அழகூட்டு வனவாக இருந்தன. அவ்வெலுமிச்சை மரங்களிலிருந்து உதிர்ந்த கனிகள் அங்கும் இங்குமாகச் சிதறிக் கிடந்தன. அவை அம்மனைகள் போல் தோன்றின. பெண்கள் அம்மானை ஆடும்பொழுது பல பந்துக் களை ஒன்றன் பின் ஒன்றாக மேலே எறிந்து கொண்டிருப்பர். அவ்வாறு எறியும் பொழுது அவை நிலத்தில் விழாமல் பார்த்துக் கொள்ளல் வேண்டும். விண்ணக மகளிர் அத்தகைய அம்மானை ஆட்டத்தில் ஈடுபட்டிருந்த பொழுது அவர்களுடைய கைகள் தவறி நிலத்தில் வீழ்ந்த அம்மானை பந்துகள் போன்று எலுமிச்சை மரங்களி லிருந்து உதிர்ந்த கனிகள் காட்சி அளித்துக் கொண்டிருந்தன. நாரத்தைக் கனிகள் கூட அவ்விண்ணக மகளிர் ஆடி நிலத்தில் விழுந்த பந்துகள் போன்று தோன்றலாயின. இக்கருத்துக்களையே ஒரு செய் யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

கவினு லாவுசம் பீரத்தி லுதிர்தரு கனிகள்
சுவன மாதர் கைதப்புமம் மனைகள்போற் றோன்றுந்
தவிர்கி லாச்சுவை நாரத்தைக் கனிகளுந் தரைவந்
திவர்க ளாடிய பந்துகள் கிடப்பதொத் திருக்கும்

(எறும்புகள் விருந்திடு படலம் : 14)

இங்ஙனம் பல செய்யுட்களில் (எறும்புகள் விருந்திடு படலம் 6-32) அப்பூஞ்சோலையில் மலர்ந்துள்ள பூக்களும் காய்த்துக் கனிந்துள்ள மரங்களும் பல்வேறுபட்ட உவமை உருவக நயங்களுடன் வண்ணக்

களஞ்சியப் புலவர் தமது இராஜ நாயகத்தில் சிறப்புறப் பாடி இருப்பதைக் காணலாம். இத்தகைய வருணனைகள் திருமணப் படலத்திலும் (10-34) நயம்பட அமைந்திருப்பதைக் காணலாம்.

கேசாதிபாத வருணனை :

புலவர் தமது காப்பியங்களில் பெண்களின் கேசாதிபாத வருணனை ஒரு முக்கியமான அமிசமாக இடம்பெறச் செய்வது கவிமரபாகும். இத்தகைய வருணனையை இராஜ நாயகத்திலும் வண்ணக்களஞ்சியப் புலவர் அமைத்துள்ளார். இராஜநாயகத்தில் இடம்பெற்றுள்ள சகுறஜின் கூட்டமீமான் கொண்ட படலத்தில் சகுறு என்னும் ஜின்னின் புதல்வியின் கேசாதி பாத வருணனை இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

நாற்குல மலருந் தகரமும் புழுகு
நானமுங் கமழ்கருங் குழலாள் (27)

என அப்பெண்ணின் குழலும்

கமழ்தரு முருவப் பசியகொம் பனையாள்
கருங்கடை நெடுங்கொடிப் புருவம் (28)

என அவள் தன் புருவமும்

... நீண்டுசெவ் வரிசே
ருவமைசெப் பரியபார் வையினாள் (29)

என அவளுடைய கண்களின் பார்வையும்

தனியொரு குமிழ மலரினை நடுவிற்
சாத்திய தென்னுநா சியினாள் (30)

என அப்பெண்ணுடைய மூக்கும்

தண்டரு மமுத முதவியாய்ந் தவர்முத்
தமிழினுஞ் சிவந்தமெல் லிதழாள் (31)

என அவளுடைய உதடுகளும்

சந்திரோ தயம்வந் துதித்தென வனந்தர்
சகோரமுந் தொடர்முறு வலினாள் (32)

என அப்பெண்ணுடைய பற்களும் புன்சிரிப்பும்

கூவுகோ கிலத்தி னிசையையாழ் குழலைக்
குழைக்குமென் மதுரவா சகத்தாள் (33)

என அவள் தன் பேச்சின் இனிமையும்

மயர்வறக் குறையா தினிமைசெய் சுவனத்
 தமுதவட் டெனுங்கபோ லத்தாள் (34)

என அவளுடைய கன்னமும்

பழம்பொருட் சுருதி முதற்கலை யுணர்ந்தோர்
 பகுத்துளத் தாய்ந்திடு முகத்தாள் (35)

என அவளுடைய முகமும்

துலங்கவீ றருளிப் பறவையெண் குரலுந்
 தொனித்திடு சுகந்தகந் தரத்தாள் (36)

என அவள் தன் கழுத்தும்

... பசிய
 கழைநெடுந் தோளினள்... (37)

என அவளுடைய தோளும்

... பவள நிறம்படைத் தெழில்பெற்
 றிலங்கிடச் சிவந்த செங்கையினாள் (37)

என அவளுடைய கைகளும்

வாணிக்கெவ் விதஞ்சொல் லுவதெனும் விரலாள்
 வயிரமேற் பிறத்தல் போலுகிராள் (38)

என அவளுடைய விரலும் நகமும்

மலைமுதற் சிமிழீ றுவமையிற் கடந்து
 வளரிரு புளகவெம் முலையாள் (39)

என அவளுடைய தனங்களும்

நிலைதரு பொருளை விளைத்திடு வயிற்றாள் (40)

என அப்பெண்ணின் வயிறும்

... வயிற்றினின் மடிப்புக்
 கலர்தலை யுலகிலிணை பகர்ந்தி டநா
 வதற்கெலா மடிப்புக ளாமால் (40)

என அவளுடைய வயிற்றின் மடிப்புகளும்

உணர்தரு முவமைக் கடங்கிலா ளுதரத்
 தொழுங்குறு முரோமமென் பதுவே (41)

என அவளுடைய மயிரொழுக்கும்

வருந்தியுள் ளுருகிச் சிலம்பினு லினிலெண்
 மடங்கிலொன் றுளகொலோ விடையே (42)

என அவளுடைய இடையின் வனப்பும்

நெடுங்கழைச் சிலைக்கை மதனிளைப் பாறு
நீழல்செய் வாழையோ துடைகள் (43)

என அவளுடைய துடைகளும்

உடம்பினில் வனப்பென் றிருநிறை சலதி
யுதித்துள வலவனோ முழந்தாள் (43)

என அவளுடைய முழந்தாளும்

படிந்ததி லுறையு மிருவரா லினமோ
பணிக்கழு குதவுவள் கணைக்கால் (43)

என அவளுடைய கணைக்காலும்

திடந்தரு மிளைஞர் மனநிலைநிறுக்குஞ்
சிறுதரா சுகளதோ கறடே (43)

என அவளுடைய காற்பாதமும்

மரைமல ரினையு மிளந்தளிர் தனையு
மருட்டிவென் றிடுமிரு பதமே (44)

என அவளுடைய பாதங்களும்

பிரிவற மதகுஞ் சரத்தின்பின் னடக்கும்
பிடியின் மெல்லிடை நடை பெயர்வாள் (45)

என அவளுடைய நடையின் இயல்பும் உவமை உருவக நயங்களுடன் ஈண்டு வருணிக்கப்பட்டுள்ளன.

அப்பெண்ணின் நடையைப் பற்றி வருணித்த வண்ணக்களஞ்சியப் புலவர் அந்நடைக்கு உவமை கூறும்பொழுது ஒலிக்குறிப்பைப் பயன் படுத்தி உள்ளார். மணங்கமழ்வதை 'கமகம' என இரண்டு முறை கூறுவதே மரபு. ஆனால் வண்ணக் களஞ்சியப் புலவர் அத்தகைய ஒலிக்குறிப்பை மூன்றுமுறை பயன்படுத்தி உள்ளார். 'கமகமகமவென' 'கலகலகலவென' 'பளபளபளவென' 'தளதளதளவென' 'தொடுதொடு தொடுவென' 'நடநடவென' எனப்பயன்படுத்தி உள்ளார். இங்கே 'தள', 'நட' என்பவனற்றை இரண்டு முறையும் ஏனையவற்றை மூன்று முறையும் பயன்படுத்தி இருப்பதைக் காணலாம். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மருமலர்க் களபங் கமகம கமென
மணிவளை கலகல கலெனத்
திரளொளி நகைகள் பளபள பளெனத்
தேகசுந் தரந்தள தளெனத்

தரைபத மழுந்தத் தொடு தொடு தொடெனத்
தருமமென் னுடனட நடெனப்
பிரிவற மதகுஞ் சரத்தின் பின்னடக்கும்
பிடியின்மெல் லிய நடை பெயர்வாள்
(சகுறஜின் கூட்ட மீமரன் கொண்ட படலம் : 45)

**முகம்மது நபியின் மகத்துவம்**

ஒரு நாள் சுலையுமான் நபி (அலை) அவர்கள் காற்றை வாகன மாகக் கொண்டு ஒரு குறிப்பிட்ட இடத்திற்குச் சென்று கொண் டிருந்தார். காற்று முதலியவற்றையும் பறவை விலங்கு முதலிய வற்றையும் பூத கணங்கள் முதலியவற்றையும் கட்டுப்படுத்தித் தம்வசப் படுத்தக் கூடிய ஆற்றல் பெற்றிருந்தார்கள் சுலையுமான் நபி (அலை) அவர்கள். அத்தகைய ஆற்றலைப் பயன்படுத்தி ஆகாயத்தில் சென்று கொண்டிருக்கையில் புனித கஃபாவைத் தாண்டிச் செல்ல வேண்டி ஏற்பட்டது. ஆனால் அதனைத் தாண்டிச் செல்ல முடியவில்லை. சுலையுமான் நபி (அலை) அவர்கள் அங்கு இறங்கினார்கள். இறங்கி அங்கே கொடை வழங்கினார்கள். அப்பொழுது கஃபா அமைந்துள்ள மக்க மாநகர மக்களிடம் ஒரு நற்செய்தியைக் கூறினார்கள். அந்த நற்செய்தியை வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு வருணிக்கிறார்.

உற்றமே லவன்றன் னருளினாற் கஃபா
வுதித்தரு ளித்தலந் தனிலே
குற்றமற் றுயருங் குறைசியங் குலத்தின்
கொழுந்ததாய் வேத காரணராய்
வெற்றியும் விருது மிகப்பெறு பவராய்
விண்ணவர் புகழ்மணி விளக்காய்
நற்றவ நபிக ளெவர்க்குநா யகமாய்
வருவரோர் நபிநல மோங்க
(கஃபத்துல்லாவிற் குறுபான்கொடுத்த படலம் : 14)

இங்கே முகம்மது நபி அவர்களின் எதிர்காலப் பிறப்பு சுட்டப்பட் டிருப்பதைக் காணலாம்.

மக்கா மக்கள் சுலையுமான் நபி (அலை) அவர்களிடம் நபிகளுக்கு நாயகமாய் வர இருப்பவரின் சிறப்பியல்புகள் எவை எனக் கேட்டனர். அதற்கு சுலையுமான் நபி அவர்கள் பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் சிறப்பியல்புகளைக் குறிப்பிட முற்பட்டார். அத்தகைய சிறப்பியல்புகளைக் குறிப்பிடும் பொழுது ஒரு மனிதன் அவற்றை எப்படிப் பெறலாம் என்பதை விவரித்துள்ளார். ஒரு மனிதனின்

உறுப்புக்கள் சிறப்பாய் அமையும் வகையினைப் பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்களுடன் தொடர்புபடுத்திக் கூறிஉள்ளார். சுலையுமான் நபி (அலை) அவர்களின் கூற்றாய் அமைந்த வண்ணக் களஞ்சியப் புலவரின் வருணனை தேவாரக் கருத்துக்களுடன் ஒத்திருப் பதைக் காணலாம்.

முகம்மது நபி (சல்) அவர்களின் மாண்பினை சுலையுமான் நபி (அலை) அவர்களின் கூற்றாய் வருணிக்கப் புகுந்த வண்ணக்களஞ்சியப் புலவர் முதலில் மனத்தினைக் குறிப்பிட்டுள்ளார். முதலில் நெஞ்சினைக் குறிப்பிட்டுள்ளார் சிறந்த நெஞ்சங்கள் எவை எனின் முகம்மது நபி (சல்) அவர்களை நினைவு கூறும் நெஞ்சங்களே நெஞ்சங்கள் எனப் பாடியுள்ளார் இவ்வாறு :

ஆகம கலைகட் கனந்தவா பரண
அழகெனுந் திருப்பெய ரரசை
ஏகசிற் பரமெய்ப் பொருளொளித் தெளிவை
எமக்கெமைக் காட்டுதர்ப் பணத்தைச்
சேகரப் பலகற் பனைகடந் துயர்ந்த
செம்மலை நரருயிர்க் குயிராந்
தேகதத் துவநிர் மலமகு முதைத்
தியானஞ்செய் மனங்களே மனங்கள்

(கஃபத்துல்லாவிற் குறுபான் கொடுத்த படலம் 20)

தேவாரப் பாடல்களின் இரண்டாம் திருமுறை 130-ஆம் திருப்பதிகத் தின் பத்தாம் திருவிருத்தத்தில் கடவுளை நினையாதார் நெஞ்சம் நெஞ்சமாகுமா என்பது தொனிக்க அக்கருத்து அமைந்துள்ளமையைக் காணலாம். முகம்மது நபி (சல்) அவர்களை நினைக்கும் நெஞ்சங்களே நெஞ்சங்கள் என்று வண்ணக்களஞ்சியப் புலவர் பாடி உள்ளார். திரு ஞானசம்பந்த சுவாமிகளோ சிவபெருமானை நிச்ச நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமாகுமா? அவை நெஞ்சங்கள் அன்று என்று அறுதி யிட்டுக் கூறுவதாக அமைத்துள்ளார் இவ்வாறு ஒரு திருவிருத்தத்தில்:

பிச்சை பிறர்பெய்யப் பின்சாராக் கோசாலக்
கொச்சை புலனாற வீருரிவை போர்த்து சந்தான்
அச்சந்தன் மாதேவிக் கீந்தான்ற னாமாத்தூர்
நிச்ச னினையாதார் நெஞ்சமு நெஞ்சமே

(தேவாரம் 2 : 180 : 10)

திருநாவுக்கரச சுவாமிகளோ நெஞ்சுக்கு அறிவுறுத்திப் பாடுவதாகத் தமது திருவிருத்தத்தை அமைத்துள்ளார்.

நெஞ்சே நீநினையாய்—நிமிர்
புன்சடை நிர்மலனை
மஞ்சா ரும்மலை மங்கைம ணாளனை
நெஞ்சே நீநினையாய்

(தேவாரம் 4 : 9 : 6)

அதே போன்று வண்ணக்களஞ்சியப் புலவர் அடுத்து கண்களைக் குறிப்பிட்டுள்ளார். முகம்மது நபி (சல்) அவர்களைப் பார்த்த கண்கள் தாம் கண்களாகும். ஏனையவை கண்கள் எனக் கொள்ளமுடியாதவை எனச் சுட்டாமல் சுட்டி உள்ளார்.

வள்ளலை யொருநான் மறைக்கரும் பொருளை
மறைபடா திலங்குமொண் மதியைத்
தள்ளுதற் கரும்ம் மலத்தையுங் கடந்தோர்
தவத்தினுள் விளங்கிய கனியைக்
கள்ளவிழ் மரவ மலர்த்தொடைப் புயரைக்
கருணையங் கடலினிற் பிறந்த
தெள்ளமு தனைய முகம்மது நபியைத்
தெரிசிக்குங் கண்களே கண்கள்

(கருபத்துல்லாவிற் குறுபான் கொடுத்த படலம் : 21)

திருஞானசம்பந்தர் தமது தேவாரத்தில் சிவபெருமானைக் காணாத கண்கள் எல்லாம் நல்லன எவற்றையும் காணாத கண்களே எனப்பாடி உள்ளார். இத்தகைய கருத்துகள் இடம்பெற்ற தேவாரத் திருவிருத்தம் இவ்வாறு அமைந்துள்ளது.

கோனாகப் பேரங்குற் கோல்வ ளைக்கை மாதரான
பூனாகம் பாகமாப் புல்கிய வளோடும்
ஆணாகங் காதல்செ யாமாத்தூ ரம்மானைக்
காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே

(தேவாரம் : 2 : 180 : 4)

திருநாவுக்கரசர் தமது தேவாரத் திருவிருத்தத்தில் கண்களைச் சிவ பெருமானைப் பார்க்கும்படி அறிவுறுத்தி உள்ளார் இவ்வாறு :

கண்காள் காண்மின்களோ—கடல்
நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்றன்னைக்
கண்காள் காண்மின்களோ

(தேவாரம் 4 : 9 : 2)

இங்கே ஒரு திருவிருத்தத்தில் இரண்டு முறைகண்களுக்கு அறிவுறுத்து தலைக் காணலாம்.

வாய்கள் எவையென வரையறை கூற முற்பட்டால் நபிகள் நாயகத்தை வாழ்த்திய வாய்களையே வாய்கள் எனக் கூறலாம் என முடிவு கட்டியுள்ளார் வண்ணக் களஞ்சியப்புலவர். இவ்வாறு குறிப் பிட்டுள்ளார்.

எப்புவி யினிலு மிருந்தர சியற்றும்
ஏகபூ ரணவரோ தயத்தை
அற்புத வடிவை ஞானலோ சனத்தை
அளவிலா னந்தவா ருதியை
ஒப்பகன் றகண்ட வெளியில்வா ழொளியை
உள்ளிரு ளகற்றுசெஞ் சுடரை
மைப்புயற் கவிகை நபிகணா யகத்தை
வாழ்த்தல் செய் வாய்களே வாய்கள்

(கருபத்துல்லாவிற் குறுபான் கொடுத்த படலம் : 22)

திருநாவுக்கரசர் வாயினைப் பயன்படுத்தி சிவபெருமானை வாழ்த்துமாறு அறிவுரை கூறியுள்ளார்.

வாயே வாழ்த்து கண்டாய்—மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாரும்பி ரான்றன்னை
வாயே வாழ்த்து கண்டாய்

(தேவாரம் 4 : 9 : 5)

ஆனால் திருஞானசம்பந்தரோ வாயைக் குறிப்பிடவில்லை. மாறாக வாயின் உறுப்பான நாவைக் குறிப்பிட்டுள்ளார். பேசுவது வாய் என்றாலும் உண்மையிலே அதற்குப் பயன்படுவது நாவாகும். எனவே தான் நாவால் சிவபெருமான் புகழைப் பாட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தி உள்ளார். அவ்வாறு சிவபெருமான் புகழைப் பாடாத நாக்கள் உண்மையிலே எப்புகழையும் பாடாத பாடமுடியாத நாக்களே என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மாறாத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேறாக நில்லாத வேடமே காட்டினான்
ஆறாத தீயாடி யாமாத்தூ ரம்மானைக்
கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே

(தேவாரம் : 2 : 180 : 7)

முகம்மது நபி (சல்) அவர்கள் புகழைப் பாடும்பொழுது அப்புகழ் மொழியைக் கேட்கும் செவிகளே செவிகள். அவற்றைக் கேளாச் செவிகள் செவிகள் அல்ல என அறுதியிட்டுக் கூறி உள்ளார் வண்ணக் களஞ்சியப் புலவர். நபிகள் நாயகத்தின் புகழுடன் சேர்த்து இவ்வாறு பாடி உள்ளார்.

அரிய விண்ணவர்கள் சிரமிசை உறையு
மலர்சர ணாம்புய நிதியை
உருவரு வதனி னடுநிலை பொருந்தும்
உத்தம காட்சியுற் பவத்தைச்
சரதநித் தியசோ பனமணிச் சுவனந்
தனின்மகு மூதெனு மியானைக்
கிரிமிசை யுலவு நபிதமைத் துதிப்பக்
கேட்குமச் செவிகளே செவிகள்

(கருபத்துல்லாவிற் குர்பான் கொடுத்த படலம் : 23)

திருஞானசம்பந்தரும் சிவபெருமானைத் துதித்துப் புகழும் ஒலியைச் செவி மடுக்காத செவிகள் உதவாதன. நல்லவை எவையும் கேளாதவை அத்தகைய செவிகள் என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தாளா வரக்கன்றோன் சாய்த்த தலைமகன்றன்
நாளா திரையென்றே நம்பன்ற னாமத்தால்
ஆளானார் சென்றேத்து மாமாத்தூ ரம்மானைக்
கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே

(தேவாரம் : 2 : 180 : 8)

அறிவுறுத்தும் பாணியிலே திருநாவுக்கரசர் எப்போதும் சிவபெருமானைப் போற்றி ஒலித்துக்கொண்டிருக்கும் துதிகளையும் புகழையும் செவிகள் கேட்க வேண்டும் என வலியுறுத்தி இவ்வாறு பாடி உள்ளார்.

செவிகாள் கேண்மின்களோ—சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்திற மெப்போதும்
செவிகாள் கேண் மின்களோ.

(தேவாரம் : 4 : 9 : 3)

நபிகள் நாயகத்தின் மேனியில் எப்போதும் நறுமணம் கமழ்ந்து கொண்டிருக்கும் கத்தூரியின் வாசம் வீசிக்கொண்டிருக்கும். அத்தகைய மணங்கமழும் அந்தப் பெருமானின் மேனியை முகர்ந்து பார்க்கும்

மூக்கே மேன்மை உடையது. அந்த மூக்கையே மூக்கென வருணிக்க லாம். ஏனையவற்றை மூக்கென வருணிக்க முடியாது என்று தொனிக்க வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இணைவிழி மணியை உலகின்மங் கையர்கள்
எவர்க்குமன் றாட்டருண் மானை
உணர்வதற் கரிய தனிமுத லறுசில்
உறுபுலிக் களித்தவ ரீன்ற
அணிஅரி யேறென் றிடுமிரு புதல்வர்
அங்கையாற் றொடமகிழ் நபிதம்
மணியொளிர் திருமே னியிற்கஸ் தூரி
வாசங்கொ ணாசியே நாசி
(கருபத்துல்லாவிற் குர்பான் கொடுத்த படலம் : 24)

திருநாவுக்கரசர் மூக்கினுக்கு அறிவுறுத்தும் பாணியில் முரலுமாறு குறிப்பிட்டுள்ளார் இவ்வாறு :

மூக்கே நீமுரலாய்—முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனை
மூக்கே நீமுரலாய்

(தேவாரம் : 4 : 9 : 4)

வண்ணக்களஞ்சியப் புலவர் கைகளின் பயனுடைமை பற்றிக் குறிப்பிட்டுள்ளார். நபி (சல்) அவர்கள் சரணங்களை கை தொட வேண்டும் எனக் குறிப்பிட்டுள்ளார். ஒருவருடைய கால்களை மற்றொருவர் கைகளால் தொடுவது இஸ்லாமிய வரம்பை மீறும் ஒரு செய்கையாகக் கருதக்கூடியதொன்று. ஒருவேளை ஆசிரியர் இஸ்லாமியப் பண்பாட்டை ஒரு கணம் மறந்து தமிழர் பண்பாட்டுக் கியைய இவ்வாறு ஒருவருடைய கால்களை மற்றவர் தொடுவதை முக்கியமான ஒரு செயலாக ஆசிரியர் கருதிக் குறிப்பிட்டிருக்கலாம். பெருமானாருடைய கால்களைத் தொடும் இரண்டு கைகளுமே கைகளே. தொடாதவர்களுடைய கைகளைக் கைகள் எனக் கொள்ள முடியாது என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

கந்தமுந் தவத்தோர் கதிகளு நிறைந்து
கடல்வளை புவிதொடா துயர்ந்து
தந்தவெண் பிறைப்பாந் தளும்வரிப் புலியும்
தாழ்ந்துபா தலங்கடந் துருவி

அந்தர மவனி கதிர்மதி அமைத்தோன்
அறுசினிற் கபுசொடு நடந்து
சுந்தரங்குலவு முஸ்தபா சரணந்
தொடுமிரு கைகளே கைகள்
(கருபத்துல்லாவிற் குறுபான் கொடுத்த படலம் : 25)

திருநாவுக்கரசரும் கைகளை விளித்து சிவபெருமானைக் கைகளால் கூப்பித் தொழும்படி பணித்துள்ளார். அத் தேவாரத் திருவிருத்தத்தின் ஒரு பகுதி இவ்வாறு அமைந்துள்ளது:

கைகாள் கூப்பித் தொழீர்—கடி
மாமலர் தூவி நின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித் தொழீர்
(தேவாரம் : 4 : 9 : 7)

காலால் நடந்து சென்று ஒருவரைச் சந்தித்தலையே பிரதட்சிணம் வருதல் என்பர். பிரதட்சணம் வருவதைப் பிரதானமான ஒரு செயலாகக் கொண்டுள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர். இடமிருந்து வலமாக வருதலை அதாவது வலம் வருதலை பிரதட்சிணம் என்று கூறுவர். இங்ஙனம் நபிகள் பெருமானார் முகம்மது(சல்) அவர்களைப் பிரதட்சணம் வரும் கால்களே உண்மையான கால்கள் என்றும் ஏனையவை பயனற்றவை என்றும் தொனிக்க வண்ணக்களஞ்சியப் புலவர் சுலையுமான் நபி (அலை) அவர்கள் கூற்றாய் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஒரு பாடலில் :

பாரினி னபிக ளெவர்களும் இவரும்
மத்தினோர் பதவிக ளருளென்று
ஆரண முதவு தனிப்பொரு ளிறைபால்
அனுதினந் துவாவிரந் தருள
வாரணத் தரசர் நவமணி முடிகள்
மலர்ப்பத மிறைஞ்சவீன் றுதித்த
காரணக் கடவு ளகுமதைப் பிரதட்
சணம்வரு கால்களே கால்கள்
(கருபத்துல்லாவிற் குறுபான் கொடுத்தபடலம் : 26)

கோயிலையும் அதன் கோபுரக் கோகரணத்தையும் சுற்றிவராத கால்களினால் உண்டாம் பயன் என்ன என்னும் வினாவை எழுப்பி உள்ளார் திருநாவுக்கரசு நாயனார். அத்தகைய கால்களினால் எவ்வித பயனும் இல்லை என்பது தொனிக்கவே ஒரு திருவிருத்தத்தில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

கால்களாற் பயனென்—கறைக்
　　கண்ட னுறை கோயில்
கோலக் கோபுர கோகரணஞ் சூழாக்
　　கால்களாற் பயனென்

(தேவாரம் : 4 : 9 : 9)

பாடல் மரபு

ஒரு பாட்டைப் பாடும் பொழுது அந்தப் பாடகரின் முகபாவம் தோற்றப்பொலிவு எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பது சிறப்பாகக் கவனிக்கப்படுவனவாகும். முன்னோர் இதற்கென இலக்கணம் வகுத்துள்ளனர். இசை மரபு இவ்வாறு வரைவிலக்கணம் கூறுகிறது.

கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா மற்றெரியா—வெண்ணிலவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர்
உள்ளாளப் பாடல் உணர்

திருத்தக்கத் தேவரும் தமது சிந்தாமணியில் காந்தருவதத்தை பாடல் இசைக்கும்பொழுது எவ்வாறு பாடல் மரபினைப் பேணி உள்ளாள் என்பதை நன்கு விளக்கி உள்ளார். புருவம் ஏறா; கண்ணும் ஆடா; மிடறும் வீங்காது; எயிறும் தோன்றா வகையில் அவள் பாடினாள் என்பதை இவ்வாறு வருணித்துள்ளார் :

கருங்கொடிப் புருவ மேறா கயனெடுங்கண்ணு மாடா
வருங்கடி மிடறும் விம்மா தணிமணி யெயிறுந் தோன்றா
இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடி னாளோ
நரம்பொடு வீணை நாவி னவின்றதோ வென்று நைந்தார்
(காந்தருவதத்தையார் இலம்பகம்: 166) (658)

பாடல் மரபினை வண்ணக்களஞ்சியப் புலவர் தமது இராஜநாயகத்தில் குறிப்பிட்டுள்ளார். ஜின்களைப் பற்றிக் குறிப்பிடும்பொழுதே அவ்வாறு சுட்டி உள்ளார். பூதகணங்களுள் ஒரு பிரிவினர் அறபு மொழியில் ஜின்கள் என அழைக்கப்படுகின்றனர். சபபென்னும் நகரத்திலே ஒரு காலத்தில் ஓர் அமைச்சர் இருந்தார். அவர் வேட்டையிலீடுபட்டிருக்கும்பொழுது ஜின்களுடன் சேர்ந்து கொண்டார். விருந்தளித்து மகிழ்வித்த ஜின்கள் அவ்வமைச்சரின் வேண்டுகோள்படி ஆடிப்பாடி மகிழ்விக்கத் தலைப்பட்டனர். அவ்வாறு இணங்கியதும் ஜின்கள் தத்தம் இசைக்கருவிகளை ஒன்று சேர்த்தனர். பாடல் பாட வேண்டிய முறைப்படி பாட முற்பட்டனர். இதனையே வண்ணக் களஞ்சியப் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

வகுத்தலு மத்த ளங்கை மணிகுழற் றுருத்தி வீணை
தொகுத்துள கருவி யாவுங் கொணர்ந்துதோ கையரின் மேலாய்
மிகுத்துள வடிவு தோன்ற மெய்யுரு வெடுத்தி ராகம்
பகுத்துள முறைதப் பாமற் பாடின சிலஜின் கீதம்

(பல்கீசு வரலாற்றுப் படலம் : 32)

அந்த ஜின்கள் முறை தப்பாமல் எவ்வாறு இசை மரபுக்கியையப் பாடினர் என்பதையும் தெளிவாக்கி உள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர். ஜின்கள் பாடும்பொழுது இசை மரபு இவ்வாறு பேணப் பட்டது. அளவுக்கதிகமாக அவை பற்களைக் காட்டவில்லை; கண் களை மூடவில்லை; வாயினைக் கோணலாகக் காட்டிக் கொள்ளவில்லை; தலையையோ உடலையோ அசைக்கவில்லை; மலர்ந்த முகத்தைச் சுருக்கித் தோன்றவில்லை. கழுத்து வீங்கவும் இல்லை. யாழின் ஒலிக்கு இணைய ஜின்கள் பாடின. இக்கருத்துக்களையே வண்ணக் களஞ்சியப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

நகைமிகத் தெரிவ தின்றி நயனமு மூட லின்றித்
தகுசொல்வாய்க் கோண லின்றித் தலையுட லசைவ தின்றி
விகசித முகங்கூப் பின்றி மிடறுவீங் குவது மின்றிப்
பகரியா ழொலிக்க டங்க விருந்துபா டியதன் பின்னர்

(பல்கீசு வரலாற்றுப் படலம் : 33)

இசை ஆசிரியரின் அமைதி கூறவந்த இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில்

அசையா மரபின் இசையோன் றானும்

(அரங்கேற்று காதை : 36)

எனக்கூறி முடித்துள்ளார்.

மீனைக் கொத்திச் சாப்பிடும் கிச்சிலிப் பறவை அதன் இரை வரும் வரை எவ்வாறு உடலை அசையாது சிறகை மாத்திரம் அசைத்துக் கொண்டிருக்குமோ அதே போன்று பாடகனும் உடலை அசையாது கையை ஓரளவு அசைத்துப் பாடலாம். இக்கருத்துக்களையே வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு ஒரு பாடலின் முதலிரண்டு அடிகளிலும் அமைத்துப் பாடி உள்ளார்.

சிரல்சிறை யசைவ தன்றித் தேகம தசையா தொப்பாய்
அரியகை அசைய மேனி அசைவன்றிப் பதலை யார்ப்பக்
கரமணி பதலை யார்க்கு முறைப்படி கறங்க வேணு
விரவிய துருத்திச் சத்த விகற்பமி லாதி சைப்ப

(பல்கீசு வரலாற்றுப் படலம் ; 34)

இங்ஙனம் சில ஜின்கள் பாடி ஆடின. அவைகளின் பாடலிலும் ஆடலிலும் எல்லாச் சுவைகளும் அமைந்திருந்தன. ஒன்பது சுவைகளும் தோன்றின. நவரசங்களும் எவையெனத் திவாகரம் இவ்வாறு சுட்டும். சிங்காரம், ஆசியம், கருணை, இரௌத்திரம், வீரம், பயம், குற்சை (அருவருப்பு), அற்புதம், சாந்தம் என்று குறிக்கும். நவரசங்களையுமே அந்த ஜின்கள் பிரதிபலித்தன என வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு தமது இராஜநாயகத்தில் குறிப்பிட்டுள்ளார் :

கருணைசிங் காரம்வீர நகைபயங் கருத்து நாணல்
பொருவுகம் பீரம் சாந்தம் புதுமையென் றோது கின்ற
இரதமொன் பதுமே தோன்ற அபிநய வின்பங் காட்டித்
திறனுறப் பாடி யாடல் செய்தன சிறிது ஜின்கள்
(பல்கீசு வரலாற்றுப் படலம் : 35)

இந்தப் பாடலின் நவரசங்களும் குறிப்பிடப்பட்டுள்ள ஒழுங்கு முறை இவ்வாறு அமைந்துள்ளது. கருணை, சிங்காரம், வீரம், நகை (ஆசியம்), பயம், கருத்து நாணல் (குற்சை), கம்பீரம் (இரௌத்திரம்) சாந்தம், புதுமை (அற்புதம்) என்பனவே ஒன்பது சுவைகளுமாகும். இப்பாடலில் ரசம் என்பது இரதம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

### பருவ மங்கையர்

பொதுவாக உலாப் பிரபந்தங்களில் பெண்களின் ஏழு பருவங்கள் வருணிக்கப்படுகின்றன. பாட்டுடைத் தலைவர் உலாவருதலைப் பார்க்கக் கூடும் பெண்களை வருணிக்கும்பொழுதே இங்ஙனம் ஏழு பருவ மடந்தையர்கள் வருணிக்கப்படுவதைக் காணலாம். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களிலும் திருமண ஊர்வலங்கள் கற்பனை நயம் மிக வருணிக்கப்படும் பொழுது பெண்கள் தம்மிடையே ஏழு பருவங்களைச் சார்ந்த மங்கையர்கள் குறிப்பிடப்படுவதைக் காணலாம். பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் ஏழு பருவத்தினரும் பதினொரு பாடல்களில் இராஜநாயகத்தில் வண்ணக்களஞ்சியப் புலவர் வருணித்துள்ளார். முதல் நான்கு பருவத்தினரையும் இவ்விரண்டு பாடல்களிலும் எஞ்சியோரை ஒவ்வொரு பாடலிலும் வருணித்துள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கது. முதலில் பேதை இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளாள்.

நகைமு ளைத்தது முளைத்திலா ததுவுமாய் ஞானத்
தொகைமி குத்தவ ரடக்கம்பொன் முலைகள்தோன் றாதாய்
வகையி னைக்கண்முன் கடைபடாப் பாற்கடல் வடிவாய்
இகப ரப்பொ ருணபிமுன்னோர் பேதையெய் தினளே
(திருமணப் படலம் : 115)

அடுத்த பாடலில் தாயார் தனயருக்குக் கூறும் புத்திமதி இடம்பெற்றுள்ளது. பெதும்பையின் வருணனை தொடர்ந்து இடம்பெற்றுள்ளது.

முயலு வோரக விருப்புக ணிறைசிமிழ் முலையும்
வெயிலிற் பாதிதே னூறிய தாமரை விழியும்
மயலெ னும்பயிர் முளைத்துமு விலைக்கொளு மனமும்
தொயிலி னேயமு மாயொரு பெதும்பை தோன்றினளே

(திருமணப் படலம் : 117)

தொடரும் பாடலில் பெதும்பையின் மனநிலை குறிப்பிடப்பட்டுள்ளது. நாளை வெள்ளை யானை மீதமர்ந்து பவனி வரும்பொழுது தான் அங்கே ஏறி வருவது செம்மையாகா விட்டாலும் தனக்கிளையாளை ஏற்றி விடுவேன் என்று திட்டமிட்டுவிட்டுப் பெதும்பைப் பருவத்தாள் சொல்வதாகக் கற்பனை செய்யப்பட்டுள்ளது. மூன்றும் பருவத்தாளான மங்கை என்பவள் அடுத்து இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளாள்.

பங்க யங்களைப் புனற்றடத் தினிற்சிறைப் படுத்தி
வெங்க யங்களை வனத்தினிற் றுரத்திவிம் மிதமாங்
கொங்கை செம்பசு நிறவட மலையெனக் குலுங்க
மங்கை யென்றொரு பருவப்பெண் ணெய்தினள் மயில்போல்

(திருமணப் படலம் : 119)

சுலையுமான் நபி அவர்கள் பவனி வருவதைக் கண்டு மயங்கினாள் மங்கை. முலை பசலையாவது. மற்றவர்களின் முலையும் இப்படியோ எனத் திறந்து பார்த்து உழன்றாள் என அடுத்த பாடலில் கூறப்பட்டுள்ளது. மங்கையைத் தொடர்ந்து மடந்தை வருணிக்கப்பட்டுள்ளாள்.

இருந்தொ ரீவிசைக் கொடுபறந் திடிலத னிறகிற்
பொருந்து காற்றடி படிகினு மதுபொறா தொசிந்து
வருந்து சிற்றிடை முலைமலை தாங்கியே வயங்க
விரைந்து வந்தனள் மடந்தையென் றொருதிரு மின்னே.

(திருமணப் படலம் : 121)

பாட்டுடைத் தலைவரின் பவனி வருதலிலே மூழ்கி இருந்த மடந்தை தான் கூறுவதற்குத் தனது தோழி பதில் கூறினள் என்பதையும் செவி மடுக்காது தான் முன்னர் கூறியதையே மீண்டும் கூறிக்கொண்டிருந்தாள் என்பது அடுத்த பாடலில் இடம்பெற்றுள்ளது. அரிவையைப் பற்றிய செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

அரிவை யென்றொரு மாதுவந் துற்றன ளறிவைப்
பிரியை யிங்குவ ந் தென்றெனக் கொருத்திக்கோ பின்னும்
பரிவை வேலர சுழைவரு பாவையர் பலர்க்கும்
வரிவைக் கும்விதி யோவென மனத்தொடு மவுன்றாள்

(திருமணப் படலம் : 123)

அடுத்து இடம்பெற்றுள்ளது தெரிவைப் பருவத்துப் பெண்ணைப் பற்றிய வருணனை.

கன்னல் போலுரைத் தெரிவைவந் திவ்வுலாக் கண்டாள்
உன்னொ ணாமயன் மிகுந்தென ளொண்டொடி யரைப்பார்த்து
என்ன காரணம் வளையெங்கே கலையெங்கே யென்றாள்
தன்ன தாம்வளை கழன்றதை யறிகிலா டானே

(திருமணப் படலம் : 124)

ஏழு பருவங்களுள் இறுதிப் பருவத்தவளான பேரிளம் பெண் இவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளாள்.

சாய்ந்து வீழ்முலைப் பேரிளம் பெண்வந்து சார்ந்தாள்
வாய்ந்த வள்ளலைக் கண்டதின் மெலமெல மயலாய்
ஆய்ந்து தன்னுமைச் சூழ்பெண்க ளறிந்திடா தடக்கி
ஓய்ந்தி டாக்குருத் தியானம் போற் கண்முகிழ்த் துறைந்தாள்.

(திருமணப் படலம் : 125)

**திருக்குறள் கருத்துக்கள்**

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்களிலே ஆங்காங்கே திருக்குறள் போன்ற நூல்களில் இடம்பெற்றுள்ள கருத்துக்கள் அமைந்திருப்பதைக் காணலாம். சுலையுமான் நபி (அலை) அவர்கள் காலத்தில் வேறொரு நாட்டில் ஒரு மன்னன் வாழ்ந் தான். அவனுடைய புதல்வன் ஒரு நாள் ஒரு கனவு கண்டான். அழகிய பெண்ணொருத்தியைக் கண்டான். கண்டு அவள் மீது காதல் கொண்டான். கனவிலேயே அவளை அழைத்தான். அவள் வரவில்லை. அப்புறம் அவளைக் காணவில்லை. இச்சந்தர்ப்பத்திலே காதலர் தம் ஊடலை நினைவு படுத்தி உள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர். காதலர்களிடையே ஊடல் ஏற்படுவது பின்னர் அவர் தம் காமத்திற்கு இன்பமாய் அமையவே என இவ்வாறு ஒரு பாடலில் குறிப் பிட்டுள்ளார்,

ஊடுதல் காமத் தின்ப மதற்கின்பம் ஊட லற்றுக்
கூடுதல் என்பார் நீயவ் விதஞ்செயக் குறித்தா யென்னில்
கோடுடை முலையி னோர்காற் புல்லின்மேற் குணங்கல் வேண்டும்
வாடுநுண் ணிடையா யாதை நினைத்துநீ கரந்த வாறே.

(கனவு கண்டு மணஞ் செய்த படலம் : 13)

அன்று திருவள்ளுவரும் இதே கருத்தினைக் குறிப்பிட்டுள்ளார். காம நுகர்ச்சிக்கு இன்பமாய் அமைவது அத்தகையோர் இடையே ஏற்படும் ஊடலே. அங்ஙனம் இருவரும் கூடி முயங்கும் முயக்கமே அவர்களிருவருக்கும் இன்பம் பயக்கும். இக்கருத்துகளையே திரு வள்ளுவர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்

ஊடலுவகை : 10 (1330)

தாவூது நபி (அலை) அவர்களிடம் அவர்களுடைய புதல்வர் வந்து தம் இளவலான சுலையுமான் நபியையே அரசுரிமை பெறச் செய்ய வேண்டும் எனக் கேட்டனர். இதற்கு அனைவரும் இணங்கினர். இந்த நற்செய்தியை சுலையுமான் நபி (அலை) அவர்களே தம் மனை சென்று தாயிடம் சொல்லுவதற்கு முன்பே தாயின் தோழியர் மூலம் தாயார் அறிந்து கொண்டார். அப்பொழுது தாயார் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவில்லை. தாயார் தாம் சுலையுமான் நபி (அலை) அவர்களைப் பெற்றெடுத்த சந்தர்ப்பத்தில் அடைந்த மகிழ்ச்சியை விடப் பன்மடங்கு களிப்படைந்தார். இக்கருத்துக்களையே வண்ணக் களஞ்சியப் புலவர் இவ்வாறு அமைத்துப்பாடிஉள்ளார் :

ஏன்ற திச்சொ லெழினபி தம்மனை
தோன்றிச் சொன்முனந் தோகையர் சொல்கேட்
டீன்ற போதினி லெய்துமு வப்பி
லூன்ற நல்லுவப் புற்றனர் தாயார்

(அரசு நிலையிட்ட படலம் : 80)

ஒருதாய் ஒரு புதல்வனைப் பெற்றெடுக்கும்பொழுது பெருமகிழ்ச்சி அடைவாள். ஆனல் அத்தகைய புதல்வன் கல்வி கேள்விகளில் தலை சிறந்து விளங்கிச் சான்றோன் எனக் கூறப்படுவதைக் கேட்டால் பேறு காலத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சியை விடப் பெருமகிழ்ச்சி அடை வாள் அத்தாய். பொதுவாகத் தாய் தன் புதல்வன் எத்தகை சான்

றோன் என்பதை அறியமாட்டாள். ஆனால் பிறர் அவளைச் சான்றோன் எனக் கூறுவது அவளது காதை எட்டும். அப்பொழுது முன்பைக்காட்டிலும் பன்மடங்கு களிப்புறுவாள். இக்கருத்துக்களையே திருவள்ளுவர் இவ்வாறு சுருங்கக்கூறி விளங்க வைத்துள்ளார்.

ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய்

புதல்வரைப் பெறுதல் : 9 (69)

தாவூது நபி (அலை) அவர்களுக்கு இறையடி சேரும் சந்தர்ப்பம் எய்தியது. உடனே தமது புதல்வர் சுலையுமான் நபி (அலை) அவர்களை அழைத்து அறிவுரைகள் பகர்ந்தார்கள். அவ்வாறு புத்தி சொல்லும்பொழுது ஒரு தகப்பன் அவனுடைய மகனுக்கு வைத்துச் செல்ல வேண்டியது பொருளுமல்ல. புதையலுமல்ல. அழியக்கூடிய புதையலை அல்ல அத்தகைய தந்தை வைத்துச் செல்ல வேண்டியது அழிவில்லாத புதையலாம் கல்வியையே. இக்கருத்துக்களையே வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்.

ஊதிய மிதுவென் றன்பா யுள்ளுயிர் மகவை நோக்கி
ஈதுபோ லனந்தம் புந்தி இசைத்தன ரெவையும் நல்கத்
தாதைய ரழிவி லாத புதையலாய்த் தரணி மீது
காதன்மைந் தருக்கு வைக்கும் மெய்ப்பொருள் கல்வி யன்றோ

(தாவூது நபி உபாத்துப் படலம் : 17)

ஒரு தந்தை தனது புதல்வனைப் பொருளுடையவனுக்குதல் முதலியன துன்பம் பயக்க வல்லன. நன்மை பயக்காதன. எனவே ஒரு தந்தை மகனுக்கு இவ்வுலகில் செய்யும் நன்மையாக அமைவது அவன் தன் மகனைக் கல்வி பெறச் செய்வதேயாம். கற்றவர் மத்தியில் அத்தகையோரை விடச் சிறந்தவனாக இருக்கச் செய்வதேயாம். கல்வியுடையவனாயிருக்கச் செய்வதேயாம். இக்கருத்துக்களையே திருவள்ளுவர் தமது திருக்குறளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்

(புதல்வரைப் பெறுதல் : 7) (67)

### மூதுரை

தந்தை சொன் மிக்க மந்திரமில்லை என்பது மூதுரை. இத்தகைய பல மூதுரைகளை வண்ணக்களஞ்சியப் புலவர் தமது இராஜநாயகத்தில் பயன்படுத்தி உள்ளார். தாவூது நபியின் அறவுரைகளைக்

குறிப்பிட முற்பட்ட வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

மகவினுக் கினிய தாதை மனத்திலன் பிருத்தித் தேர்ந்து
பகர்திரு வசனம் போலும் பலசெய்மந் திரமு முண்டோ
(தாவூது நபி உபாத்துப் படலம் : 18)

முத்துக்களிலே மிகவுஞ் சிறந்தது, மிகவும் உயர்ந்தது ஆணி முத்து எனப்படும். எனவே கடலிலிருந்து பெறப்படும் எல்லா முத்துக்களும் ஆணிமுத்தாகா. இதனையே ஒரு வினாவாக இவ்வாறு பாடியுள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர்.

முத்தெ லாமொரு கடலிடைப் பிறக்கினு முழுதும்
பத்தியாயொளி ராணிமுத் தாவதோ...
(அரசு நிலையிட்ட படலம் : 55)

நிலையாமை பற்றியும் பல பாடல்கள் இக்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

அவைப்பட விழியிற் காண்ப தனைத்துமே யழிவ தன்றி
நலப்பட வழுவி லாது நயத்துநிற் பவையு முண்டோ
(தாவூது நபி உபாத்துப் படலம் : 2)

மற்றொரு பாடல்

... ... ... பொய்யாங்
காயத்தை நிலையென் றேயிக்
கருமங்கள் செயத் தொடுத்தான்
(பல்கீசு அரசுரிமைப் படலம் : 51)

என அதே கருத்தை வலியுறுத்திக் கொண்டிருக்கிறது.

பேதைமையின் பொருள் மடமை என்பர். இந்தப் பேதைமை பெண்களுக்கு அணிகலன் எனக் கவிஞர் வருணிப்பர். வண்ணக் களஞ்சியப் புலவரும்

பேதைமை மடவார்க் கணிகல மெனநூற்
பெரியவர் வகுப்பர்...
(பல்கீசை எடுத்து வந்த படலம் : 12)

என அதே கருத்தை இங்குக் குறிப்பிட்டுள்ளமையைக் காணலாம்.

வினவுறு சுவையைக் காணில் விடுவதோ செந்தே னீயே

(எறும்பரசைக் கண்ட படலம் : 19)

கூவலை யகழப் பூதம் புறப்படுங் குணக்காய்...

(விதி கூட்டிய படலம் : 8)

என்பன மற்றுஞ்சில மூதுரைகளாம்.

எல்லாம் வல்லவனாம் அல்லாஹ்வின் நியதிப்படியே அனைத்தும் நடக்கும் என்பதும் இங்கு வலியுறுத்தப்பட்டுள்ளது. இக் கூற்றினை நிலைநிறுத்த வண்ணக்களஞ்சியப் புலவர் சில வினாக்களைக் குறிப்பிட்டுள்ளார். மணம் மிக்கது மல்லிகை. அதற்கு மணம் வழங்கியது யார்? முருங்கை மலர் மணம் அற்றது. அதன் மணத்தைக் கெடுத்தவர் யார்? எல்லாக் கல்லும் பிரகாசமாக இரா. மணிக்கல்லுக்கு மாத்திரமே ஒலி உண்டு. மற்றக் கற்கள் ஒளி பெறாமல் தடுத்தவர் யார்? காகத்துக்கு இரண்டு கண்கள் எனினும் கண்மணி ஒன்றே. அந்த இரண்டு கண்மணிகளில் ஒன்றை எடுத்தவர் யார்? இக்கேள்விகளை ஒரு பாடலில் முதலிரண்டு அடிகளில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர்.

மல்லிகை மலரின் மணமெவர் கொடுத்தார்
மணமற முருக்கையார் கெடுத்தார்
கல்லெலா மணியா யொளிர்வதார் தடுத்தார்
காக்கைக் கண் மணியொன்றா ரெடுத்தார்

(விதி கூட்டிய படலம் : 34)

விதிக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ள இரண்டு பாடல்களின் அடிகள் இவ்வாறு அமைந்துள்ளன.

எதுசெயத் துணியினு மேக நாயகன்
விதிசெயப் படுமதை விலக்கக் கூடுமோ

(சுலையுமான் நபியவதாரப் படலம் : 46)

... ... ... மகித லத்தினில்
மலைதரு நன்மையைத் தீய்மை வெல்லுமோ

(சுலையுமான் நபியவதாரப் படலம் : 47)

அறிஞர்களின் உறவு பெரிதும் பாராட்டப்பட்டுள்ளது. அத்தகையோருடன் கலந்தாலோசித்தால் அடையும் நன்மைகள் மிகப் பல. உள்ளத் தெளிவு ஏற்படும். மடமை அகலும். மனஇருள் நீங்கும். தீவினை தீர்ந்துவிடும். இவற்றைப் போன்று வேறு பாக்கியங்கள் உலகிலே பெற முடியாது. இக்கருத்துக்களையே வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்,

அறிஞர்க ளுறவு கூடி யனுதினங் கலந்து வாழ்கின்
மறுவறு தெளிவு தோன்று மடமென மனத்தின் மேவு
செறியிருட் பிழம்பு நீங்குந் தீவினை யெவையுந் தீரும்
பெறுபல ஙிதுபோ லியாதோர் பெற்றியு முலகில் இன்றே

(தாவூது நபி உபாத்துப் படலம் : 12)

**சொல்லாட்சி**

இனி, வண்ணக்களஞ்சியப் புலவர் தமது இராஜநாயகம் என்னும் காப்பியத்தில் மேற்கொண்டுள்ள சொல்லாட்சியைப் பார்ப்போம். பஞ்ச பூதங்களுள் ஒன்று நீர். அது வடமொழியில் அப்பு என வழங்கப்படுகிறது. பாரசீக மொழியிலும் ஆப் அல்லது ஆபு என நீர் அழைக்கப்படுகிறது. வண்ணக்களஞ்சியப் புலவரும் நீரினைக்குறிக்க அப்பு என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

வீரர் மீதினும் பரிகள் மீதினும் வியர்வை
நீர தோடிய ததையொரு பாத்திர நிறைவித்
தார வாய்ந்துநீர் கேட்கும்அப் புஇதுவென அளித்தார்

(பல்கீசு சோதனைப் படலம் : 76)

ஔடதம் என்பது மருந்தைக் குறிக்கும். அதுவே அவிழ்தம் எனவும் வழங்கப்படும். ஒரு முட்டை வைக்கப்பட்ட இடத்திலிருந்து காணாமற் போய்விட்டது. அதனை எடுத்த இளவலிடம் அதனை எடுத்ததன் காரணம் வினவப்பட்டது. தான் சுலையுமான் நபி (அலை) அவர்களின் வைத்தியன் என்றும் அதனை உடைத்து ஓர் அவிழ்தம்-ஔடதம் செய்ததாகவும் அவன் குறிப்பிட்டான். இதனையே புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

சிட்ட ரைப்புரந் தருணபி யேவயித் தியனான்
முட்டை யீதெடுத் துஅவிழ்தம்செய் தனனென மொழிந்தான்

(தருமலாபப் படலம் : 18)

நீர் என்னும் பொருளில் அறல் என்பது பயன்படுத்தப்பட்டுள்ளது
அறலை அப்புறத் திடுமென உரைத்தனள்...

(பல்கீசு சோதனைப் படலம் : 82)

ஆட்டை என்பது ஆண்டைக் குறிக்கும். ஆண்டு தோறும் என்பதைக் குறிக்கத் தென்னிந்தியக் கல்வெட்டுகளில் ஆட்டை வட்டம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். (S.I.I. 125). சிலப்பதிகார உரை பெறு காதையில் (3 : உரை) ஆண்டு விழாவைக் குறிக்க ஆட்டை விழா என்னும் சொற்றொடர் பயன்

படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். இராஜநாயகத்திலும் இச் சொல் இடம்பெற்றுள்ளது. சுலையுமான் நபி (அலை) அவர்கள் இறைவனால் படைக்கப்பட்டவை அனைத்துக்கும் நாள்தோறும் உண வளிக்கும் பாக்கியத்தைத் தமக்கு தந்தருளுமாறு இறைவனிடம் வேண்டினார். அமரர்களான பல்வேறு மலக்குகளுக்கும் வெவ்வேறு தொழில்களை ஒப்படைத்துள்ள இறைவனைத் தமக்கு இத்தகைய பொறுப்பினை ஒப்படைக்கும்படி வேண்டினார். விண்ணவர் அவர்தம் பொறுப்புக்களைப் பொறுப்புணர்ச்சியுடன் நிறைவேற்றுவது போன்று தம்மிடமும் இப்பணி ஒப்படைக்கப்பட்டால் தாமும் செவ்வனே அதனை நிறைவேற்றுவதாகக் கூறினார். சுலையுமான் நபியால் இப் பொறுப்பை மேற்கொள்ள முடியாது என இறைவன் கூறிவிட்டான். எல்லாக் காலத்துக்கும் எல்லாப் படைப்புகளுக்கும் உணவு அளிக்கும் பாக்கியத்தைத் தந்திட முடியாவிட்டால் ஓர் ஆண்டுக்காவது அப் பேற்றினைத் தமக்கு நல்குமாறு சுலையுமான் நபி (அலை) அவர்கள் கேட்டார்கள். இக்கருத்தினைக் குறிப்பிடும்பொழுதிலே வண்ணக் களஞ்சியப் புலவர் ஆண்டு என்பதற்குப் பதிலாக ஆட்டை என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

இத்திறம் இசைத்தலும் ஏக நாயகன்
சத்துவம் உமக்கிலை எனத்த டுத்தனன்
அத்தகை யென்னில்ஓ ராட்டைக் காயினு
நித்தமு முதவுவ னெனநிகழ்த் தினார்

(படியளந்தேலாப் படலம் : 7)

விறகு என்பதை இந்தனம் என்னும் சொல் குறிக்கிறது. வேதாந்த சூளாமணி (154) இந்தனம் என்னும் சொல்லை இதே கருத்தில் பயன் படுத்தி உள்ளது. வண்ணக்களஞ்சியப் புலவரும் ஒரு சிறுவன் விறகு சுமந்து கொண்டு வந்தான் என்பதைக் குறிக்க இவ்வாறு பாடி உள்ளார் :

... ஒரு சிறுவன்
இந்தனஞ் சுமந்தெதிர் வந்தான்

(தம்பெயரோனுக்கன்புறு படலம்: 2)

காட்டிலிருந்து விறகு கொண்டு வந்தமையை

போயட வியில்இந் தனம் எடுத் துவரப்
புகன்ற னுப்பினள்...

(தம்பெயரோனுக்கன்புறு படலம் : 12)

எனவும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

உக்கம் என்பது இடையைக் குறிக்கும். பெண்கள் இடையில் ஆபரணம் அணிவதுண்டு. பாதத்திலே அணியப்பெற்ற சதங்கையொடு இடையிலே அணியப் பெற்ற ஆபரணமும் ஆடும்பொழுது ஒலித்தன. இடையையும் இடையிலே அணிந்துள்ள ஆபரணத்தையும் குறிக்க உக்கம் பயன்படுத்தப்பட்டுள்ளது. திருமுருகாற்றுப்படையில் 'உக்கஞ் சேர்த்திய தொருகை' (108) என உக்கம் என்னும் சொல் இடையைக் குறிக்கப்பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம். உக்கம் என்னும் சொல்லை அதே கருத்தில் வண்ணக்களஞ்சியப் புலவர் பயன்படுத்தி உள்ள பாடலை இனிப் பார்ப்போம்.

மதிதரு தரளம் போல வதனத்தில் வியர்வு தோன்ற
இதழ்பிரி குவளைக் கண்க ளிருசெவி புகுந்து மீளப்
பதமலர்ச் சதங்கை உக்கம் பதனமென் றதிர்ந்தொ லிப்ப
அதரமென் கனிமின் னார்க ளம்மனை யாடு வாரே

(திருமணப் படலம் : 33)

ஊதை என்பது காற்றைக் குறிக்கும் (திவாகரம்). சுலையுமான் நபி (அலை) அவர்கள் காற்றைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் பெற்றிருந் தார். அவர்களுக்குச் செய்தி எடுத்துச் செல்லும் வாயிலாகவும் காற்று அமைந்திருந்தது. அத்தகைய ஒரு சந்தர்ப்பத்தை வண்ணக் களஞ்சியப் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் சுட்டும் பொழுது அவர்கள் சாதனைகள் சிலவற்றையும் குறிப்பிட்டுள்ளார்.

ஆதிதன் விதியால் இருவருங் கலந்த
அற்புத மப்பொழு தினிலே
ஊதைசென் றியம்ப வறிந்தன ரறிந்தும்
உளவறி யாரென உறைந்தார்
பாதபங் கயஞ்சேர் பசுவுயிர் மீட்டுப்
பகர்புறா மலடையுந் தீர்த்து
மாதகைக் கிழவி மாவழக் கறுத்த
மந்திரக் கரும்பொருள் வள்ளல்

(விதி கூட்டிய படலம் : 35)

ஏல என்பது வடக்குத் திருவீதிப் பிள்ளை அவர்கள் திருவாய் மொழிக்கு எழுதின உரையிலே ஈடு என வழங்கப்படுகிறது. முன்னமே என்னும் கருத்தில் ஏல என்ற சொல் பொதுவாகப் பயன்படுத்தப் படுகிறது. (ஈடு 2,8·7)

ஏல நீர்தவிர்த் திசைத்ததென் என்றிட இரைப்பார்

ஏன்ற என்பது ஏற்ற என்னும் பொருளில் பயன்படுத்தப்படும். 'அடியேனையு மேன்று கொணீ' (தேவாரம் : 323 : 6) என்று வந்துள்ளது. வண்ணக்களஞ்சியப் புலவரும்

ஏன்ற மெய்ச் சுருதியீர்...

(அனந்தரம் பிரித்த படலம் : 3)

என்றும்

ஏன்று தம்மிடத் துறையுல மாக்களாய்...

(அரசு நிலைப் படலம் : 3)

என்றும்

ஏன்ற திச்சொல் எழினபி தம்மனை
தோன்றிச் சொன்முனந் தோகையர் சொல்லக் கேட்டு

(அரசு நிலைப் படலம் : 80)

என்றும் ஏன்ற என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

குதிரையைக் குறிக்கக் கொய்யுளை என்னும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. 'கொய்யுளை கொடிஞ்சி குஞ்சரம்' என்கின்றது ஞானாமிர்தம் (7 : 18) இங்கே முறையே குதிரை, தேர், யானை என்பவற்றைக் குறிக்கவே இச்சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆண் ஜின் (பூதங்)களும் பெண் ஜின் (பூதங்)களும் சுலையுமான் நபி (அலை) அவர்கள் செல்லும் குதிரையைப் பார்த்தனர் என்பதை வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்:

அவிரொளிர் மணிக ளௗனவொளிர் தேக
ஆண் ஜினும் பெண் ஜினுஞ் சேர்ந்த
குவிதிரட் சிலது திருநபி நடத்து
கொய்யுளை முன்புபோய் நோக்கி

(திருமணப் படலம் : 82)

எல்லாப் பக்கங்களிலிருந்தும் குதிரையைச் சிலர் பார்த்த வண்ணமாய் இருந்தனர் என்பதை வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

முன்னழ கதனை நோக்கிநின் றொதுங்கிக்
கொய்யுளை முன்புபோந் ததற்பின்
பின்னழ கதனை நோக்கிநின் றோடிப்
பெயர்நடை யினில்வலப் பாகந்
துன்னழ கதனை நோக்கிநின் றிப்பாற்
சுற்றிவந் தேயிடப் பாக
மின்னழ கதனை நோக்கிநின் றுலவி
வீதியெங் கணுஞ்சிலர் திரிவார்

(திருமணப் படலம் : 84)

சத்துவம் என்பது வலிமை. (சூடாமணி நிகண்டு). வண்ணக் களஞ்சியப் புலவரும் அதே கருத்தில்

உறையும் ஏழ்கடற் கப்புறம் போயொரு பகலில்
தறுகி லாமலே வரத்தகு சத்துவம் படைத்து

(ஜின்கணங்கள் வசப்படு படலம் : 10)

சத்துவம் உமக்கிலை எனத்த டுத்தனன்

(படியளந்தேலாப் படலம் : 7)

எனவும் ஆற்றல் என்னும் பொருளில் சத்துவம் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

சிறுவி என்னும் சொல் மகளைக் குறிக்கும். (சூடாமணி நிகண்டு). இதே சொல்லை மகள் என்னும் பொருளில் வண்ணக்களஞ்சியப்புலவர்

இவ்வகை புரிந்து நபிதனித் திருப்ப
இயல்பெலாம் உணரமைச் சேவச்
செவ்விய வலன்கா தலியுங்கண் மணியாஞ்
சிறுவியு மகிழ்வுட னணுகி
ஒல்லிய கலிமா நிகழ்த்தியீ மான்கொண்டு

(சகுறஜின் கூட்டமீமான் கொண்ட படலம் : 26)

சோங்கு என்னும் சொல் பல பொருள்களைச் சுட்டத் தமிழில் பயன்படுத்தப்படுகிறது. மரக்கலத்தைக் குறிக்கவும் அச்சொல் உபயோகப் படுத்தப்படுகிறது. திருவிளையாடற் புராணத்திலே வலை வீசிய படலத்தில்

சோங்கினை மேலிடு சரக்கொடுங் கவிழ முட்டும் (34)

என சோங்கு என்பது மரக்கலத்தைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ள மையைக் காணலாம். வண்ணக்களஞ்சியப் புலவரும் சோங்கு என்னும் சொல்லை மரக்கலம் என்னும் பொருளில்

கடந்தவண் பார்க்க நாலாங்
கடலதா யிருந்த தாங்கே
இடந்தரு சோங்கு தன்னைச்
சரியவிட்டேகுங் காலை

(இராஜகுமாரன் கடல்வேட்டைக்கெழுந்த படலம் : 63)

என்றும்

கூவுசோங் கோரத்தில் குனிந்து வாரியை

(இருவர் மோகப் படலம் : 10)

என்றும்

புனையிழை காம வெம்மை பொறுக்கொணா திருப்பி டம்பேர்ந்
தனையசோங் குலவ லோயா னதிற்சிறி தேனும் போமோ

(இருவர் மோகப் படலம் : 53)

என்றும்

மலையிலோ சோங்கோர் பாலோ மனத்திலோ வாரி மின்னார்

(இருவர் மோகங் கொண்ட படலம் : 54)

அமைத்துப் பாடியுள்ளமையைக் காணலாம்.

இரத்தத்தைக் குறிக்க சோணிதம் என்றும் சோரி என்றும் இரண்டு சொற்களை வண்ணக்களஞ்சியப் புலவர் தமது இராஜநாயகத்தில் பயன்படுத்தி உள்ளார். கம்பரும் இரத்தம் என்னும் பொருளில் சோணிதம் என்னும் சொல்லை 'வழிபடு செஞ் சோணிதம்' (கம்பராமாயணம்: இந்திரசித் வதைப் படலம்: 26) எனவும் சோரி என்னும் சொல்லை 'ஓசைச் சோரியை நோக்கினன்'

(கம்பராமாயணம் வாலிவதைப் படலம் : 69)

எனவும் பயன்படுத்தி உள்ளார். வண்ணக்களஞ்சியப் புலவர் இரத்தம் என்னும் பொருளில் சோணிதம் என்பதனை

இளையவன் சோணிதம் எலும்பில் இட்டனர்

(அனந்தரம் பிரித்த படலம் : 20)

எனவும் சோரி என்பதைனை

சுந்தரச் சிறுவிரல் குத்திச் சோரியிற்
சிந்திடா தெடுமொரு திவலை என்றனர்

(அனந்தரம் பிரித்த படலம் : 18]

எனவும் பயன்படுத்தி உள்ளார்.

தானியத்தைச் குறிக்க தவசம் என்னும் சொல்லை வண்ணக் களஞ்சியப் புலவர் தமது இராஜநாயகத்தில் வரும் படியளந்தேலாப் படலத்தில் பல இடங்களில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம்.

தகுத்துள நவவிதத் தவச மியாவையும்
பகுப்பற ஒருதலப் படுத்தும் என்றனர் (11)
தகவுறக் குவிந்தன தவசம்... (21)
அலைகடற் கரையுள தவச மற்றதே (39)
நிரைதருந் தவச மெவளவுங் காணார் (41)
செப்புமெத் தலத்து முளதவ சமுமே (42)
பொழிந்திடத் தவச மொருபிடி யேனு
மற்றன வித்தனை புகுந்தும் (43)

நந்தல் என்றால் கேடு என்பது பொருள். கேடில்லாத என்னும் பொருளில் நந்தலில் எனக் கம்பர் தமது இராமாயணத்தில்

நந்தலில் விளக்கமன்ன நங்கையும்

(கோலங்காண் படலம் : 23)

எனப்பாடியுள்ளார். அதே போன்று வண்ணக்களஞ்சியப்புலவரும் அதே சொல்லை அதே கருத்தில்

... அனை யேபொரு ளாகி
நந்தலுற் றுரைகின்றாள்...

(தம்பெயரோனுக்கன்புறு படலம் : 4)

என வண்ணக்களஞ்சியப் புலவர் பயன்படுத்தி உள்ளார்.

'நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ் சோம்' (1236 : 1) என்கின்றது தேவாரம். இங்கே நமன் என்றால் யமன் என்பதையே குறிக்கும். முஸ்லிம் பரிபாஷையில் உயிர் கவருபவன் இசுறாயீல் (அலை) என, அழைக்கப்படுவார். வண்ணக்களஞ்சியப் புலவர் தமிழ் மரபினைப் பேணி உயிர்கவர வருபவரை நமன் என அழைத்துள்ளார். அவ்வாறே பாடி உள்ளார்.

நமன்வரு மளவு மிங்கு நண்ணிவந் திடலெப் போதோ

(சுலையுமா நபி உபாத்துப் படலம் : 41)

நாவாய் என்பது மரக்கலம். 'முந்நீர் வழங்கு நாவாய் போலவும்' என்கின்றது புறநானூறு (13). மரக்கலத்தைக் குறிக்கவே வண்ணக் களஞ்சியப் புலவரும் நாவாய் என்னும் சொல்லை இவ்வாறு பயன் படுத்தி உள்ளார் :

... நண்ணு நாவாய் எல்லாமோர்
முகமுற

(இராஜகுமாரன் கடல்வேட்டைக்கெழுந்த படலம் : 60)

இங்ஙனம் வண்ணக்களஞ்சியப் புலவர் பல சொற்களை அருமை யாகத் தமது இராஜநாயகத்தில் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம்.

# ஐந்தாம் இயல்

## குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணம்

முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களைப் பாட்டு டைத் தலைவராகக் கொண்டு பல கவிதை நூல்கள் தமிழில் எழுதப் பட்டுள்ளன. காப்பியங்கள் இயற்றப்பட்டுள்ளன. சிற்றிலக்கியங்கள் உருவாகி உள்ளன. உரைநடை நூல்கள் தோன்றி உள்ளன. அவற்றுள் முக்கியமான இடத்தைப் பெறுவன காப்பியங்களே. ஆத்மீக ஞானி முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களைப் பாட்டு டைத் தலைவராகக் கொண்டு தோன்றிய காப்பியங்களுள் முதலாவது எனக் கருதப்படுவது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணமே. புலவர் நாயகம் என்று வழங்கப்படும் செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்களே இதன் ஆசிரியராவார். முஸ்லிம் பெருவழக்கில் சேகனாப் புலவர் என அழைக்கப்பட்டார்.

முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி)அவர்கள் குத்புநாயகம் என அழைக்கப்பட்டார்கள். இறைநேசச் செல்வர்கள் வலிமார் எனப் படுவர். எப்பொழுதும் நாலாயிரம் அவுலியாக்கள் உலகில் உள்ளனர் என்றும் அவர்கள் உலகை இயக்கிக் கொண்டிருக்கின்றனர் என்றும் கூறப்படுவதுண்டு. அவர்களுள்ளே பற்பல தரங்களில் பற்பல நிலை களில் உள்ளவர்களும் உண்டு. உயர்ச்சி அடிப்படையில் அவர்களை இவ்வாறு வகுக்கலாம் என்பர். அவர்களுள்ளும் முந்நூறு அஹ்யார் கள் இருக்கின்றனர் என்றும் அவர்களுக்கிடையே நாற்பது பேர் அப்றார்கள் என்றும் அவர்களுள்ளும் எழுவர் அப்தால்கள் என அழைக்கப்படுவர் என்றும் கூறுவர். அவர்களுக்கு மேலாய் நான்கு அவ்தாத்களும் மூன்று நகீப்மாரும் இருப்பர் என்றும் உரைப்பர். அவர்கள் எல்லோருக்கும் தலைமையாக இருப்பவரே குதுப் என்பர்.

குதுப் என்றால் அச்சு என்பது பொருள். ஓர் அச்சினைச் சுற்றியே அதனைச் சார்ந்தவை சுழன்று கொண்டிருக்கும். படைப்பினங்கள் சுழலும் அச்சையும் இவ்வாறே அழைப்பர். முஸ்லிம் மரபுக்கியைய குதுப் என வழங்கப்படுபவர் புனிதத் தன்மையிலே மிக உச்ச நிலையை அடைந்தவர் எனக் கருதப்படுகிறது. கௌஸ் என்று வழங்கப்படும் வலியை விட தரத்தில் உயர்ந்தவரையே குத்ப் என்பர். அத்தகைய குத்புமாரின் தலைவராகக் கணிக்கப்பட்டுள்ளவர் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள். எனவே குத்பு நாயகம் எனச் சுட்டப் பட்டுள்ளார்கள். எனவே அவர்களுடைய வாழ்க்கையை வருணிக்கும் காப்பியத்துக்குக் குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணம் எனப்

பெயரிடப்பட்டிருப்பதைக் காணலாம். எமக்குக் கிடைத்துள்ள இஸ்லாமியத் தமிழ் இலக்கிய நூல்களை வைத்துப் பார்க்கும்பொழுது முகியித்தீன் ஆண்டவர் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நான்கு காப்பியங்கள் இயற்றப்பட்டிருப்பதைக் காண்கின்றோம். நான்கு புலவர்களும் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வெவ்வேறு அமிசங்களை வெவ்வேறு கோணங்களிலிருந்து ஆராய்ந்து பாடி உள்ளனர் எனக் கூறலாம். தாம் வருணிக்கக் கருதிய பல்வேறு பட்ட அமிசங்களை விரிவாகவே விவரித்துக் கவிதைகளாக யாத்துக் காப்பியங்கள் படைத்துள்ளனர் எனக் குறிப்பிடலாம். ஆனால் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையின் பிரதான நிகழ்ச்சிகள் புறக்கணித்துவிட முடியாத சம்பவங்கள் அவர்கள் பற்றிய காப்பியங்களில் இடம்பெற்றுள்ளன என்பதும் நோக்கற்பாலது.

### நூலின் பெயர்

இக்காப்பியத்தின் பெயரை கடவுள் வாழ்த்தில் உள்ள ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கை பற்றிய புராணத்தை குத்பு நாயகம் எனப் பெயரிட்டதாக இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

இயற்றிய கார ணத்தி னெழிலுறுங் கருத்துப் பற்றி
முயற்றவத் துறைகு லாவு முகியித்தீ னென்னுங் கொண்டல்
பயிற்றுமெய்ப் பாதங் கொண்டோர் பதவிமேல் வரங்கொள்
வாரால்
குயிற்றுநற் புராண நாமங் குத்புநா யகமென் றாமே.

(கடவுள் வாழ்த்து : 26)

### ஆசிரியரின் பெயர்

மற்றொரு பாடலில் நூலாசிரியர் தமது பெயரை இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார். தாம் கபீபு முகம்மது லெப்பை புதல்வன் என்றும் மானாப் பிள்ளை லெப்பை ஆலிம் தமது தந்தையின் தந்தை என்றும் காயல் நகரிலே வாழ்ந்த மணிக்கல் வியாபாரி அவர் என்றும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

சீரணிகொண்ட காய றிருநகர் மணிப ரிட்சைப்
பேரணி கொண்ட மானாப் பிள்ளையி லப்பை யாலி
மேரணி கொளும்க பீபு முகம்மது லெப்பை பால
னூரணி கொண்ட வல்லோ னுதவியிற் பனுவல் செய்தான்

(கடவுள் வாழ்த்து : 29)

## கடவுள் வாழ்த்து

ஏனைய காப்பிய ஆசிரியர்கள் பின்பற்றிய ஒழுங்கு முறையையே புலவர் நாயகமும் தமது காப்பியங்களில் பின்பற்றி உள்ளார். ஆனால் அந்த ஒழுங்கு முறையில் ஒரு சிறு மாற்றம் செய்துள்ளார். ஏனைய காப்பிய ஆசிரியரைப் போலல்லாது அல்லாஹ்வைப் புகழ்ந்து ஒன்பது பாடல்களைப் பாடியுள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கதாகும். எனினும் நபி நாயகம் (சல்) அவர்களின் சுற்றத்தவரையும் அவர்கள் தம் அசுகாபித் தோழர்களையும் அசுகாபித் தோழர்களின் தோழர்களையும் நான்கு மதுகபுகளையும் நிறுவிய நல்லறிஞர்களான நான்கு இமாம் களையும் வாழ்த்த ஒரு செய்யுளை மாத்திரமே பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர். அச்செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

கண்ணரு மணியின் வாய்ந்த கபீபிற சூல்தஞ் சுற்றஞ்
தண்ணளி யலர்ந்த தோழர் தாபிகுத் தாபி கீன்கள்
விண்ணழி யாத கீர்த்தி வியன்பெறு சமய நான்கு
பண்ணழி யாது வைத்தோர் பதங்களு மனத்துட் கொள்வாம்

(கடவுள் வாழ்த்து : 19)

## உரை வழங்கியோர்

இக்காப்பியத்தை இயற்றத் தமக்கு உரை வழங்கிய அகுமது லெப்பை ஆலிமையும் அவர் தம் தந்தை செய்கப்துல் காதிர் என்பதை யும் அவர்கள் இருவரும் காயல் மாநகரைச் சேர்ந்தவர்கள் என்பதை யும் ஆசிரியர் குறிப்பிடத் தவறவில்லை. அவரையும் இவ்வாறு வாழ்த்தி உள்ளார்.

வேதமே முழங்குங் காயன் மேனகர் தன்னில் வாழுஞ்
சீதமே குணங்கொண் டோங்குஞ் செய்கப்துல் காதிர் தோன்ற
னீதமே வநந்த ஞானி யகுமதி லெப்பை யாலிம்
போதமே கொண்டு தேர்ந்த வுரைவழி புகன்றிட்டேனால்

(கடவுள் வாழ்த்து : 22)

## மூலநூல் :

இனி இந்தக் குத்பு நாயகம் என்னும் முகியீத்தீன் புராணத்தை இயற்றுவதற்கு மூல நூலாக அமைந்தது 'குலாசத்துல் மபாகிறா' என்னும் அறபுக் கிரந்தமாகும். ஞானியரின் கருத்துப் பேழை என இதன் பொருள் அமையும். அந்நூலிலிருந்த ஒரு சிலவற்றைத் தாம் கூற முற்பட்டதாக ஒரு பாடலின் மூலம் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

இயறருங் கார ணீக மெடுத்துரை யளித்தார் மெய்மை
பயிறருங் குலாசத் துல்ம பாகிறா வெனுங்கித் தாபு
மயறரு நூலுந் தேர்ந்திட் டாதலி னெம்ம னோர்க்கு
முயறரா தேனுங் கொண்ட முறைமையிற் சிலசொல் வேனால்

(கடவுள் வாழ்த்து : 23)

அவையடக்கம்

காப்பிய ஆசிரியர்கள் அவையடக்கம் கூறும்பொழுது வெவ்வேறு விதமாகக் கூறுவர். மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமை போன்றது அறிஞர் முன் தாம் மேற்கொள்ளும் முயற்சி என்ற கருத்துத் தொனிக்கவே புலவர் அவையடக்கம் கூறுவர். அவ்வாறு கூறும் பொழுது வெவ்வேறு உத்திகளைக் கையாளுவர். புலவர் நாயகம் எவ்வாறு குறிப்பிட்டுள்ளார் என்பதைப் பார்ப்போம்.

மணலை எண்ணிக் கணக்கெடுக்க முடியாது. அத்தகைய மணலை எண்ணிக் கணக்கெடுக்கக் கூடியவர்கள் அறிஞர் பெருமக்கள். அத்தகை யோர் முன்னர் தாம் கவிதை புனைய முனைவது ஒன்று என்னும் எண்ணைக் கூட எண்ணத் தெரியாதவன் முற்படுவது போன்றதே என்று குறிப்பிட்டுள்ளார். அத்தோடு அவர் நின்று விடவில்லை. அதே பாடலில் மற்றோர் உவமையும் கூறிஉள்ளார்.வலிமை மிக்க ஒரு சிங்க ஏற்றின் முன்னர் ஒரு சிறு தவளை போன்றதே தமது கவிதை பாடும் முயற்சி என இவ்வாறு பாடிஉள்ளார் :

பாரடை மணலி லக்கம் படுத்துவர் முன்னொன் றெண்ணான்
போரடை யரிமுன் சீதப் புனலரி யியைந்த தேபோற்
சீரடை பொருளின் பாடற் செந்தமிழ்ப் புலவர் முன்னர்
நேரடை பனுவல் செய்யு நீர்மையே யோர்மை யோரே

(கடவுள் வாழ்த்து : 27)

தம்முடைய கவிதையைப் புன்சொல் என்றும் புகழுடையவர்கள் முன்னிலையில் பாடப்பட்டது என்றும் இக்கவிதைகள் அறிஞர் செவி களில் சேரின் அவர்கள் ஏற்றுக்கொள்வர் என்றும், ஆகவே தமது அச்சம் தீர்ந்து விட்டது என்றும் கூறிஉள்ளார். பாம்பு என்று பொருள் படும் கீடத்தையும் அதனைவிடப் பன்மடங்கு சிறியதான குளவியையும் இங்கு ஒப்பிட்டுள்ளார். அச்செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது:

திசையிடஞ் செறிந்த கீடஞ் சேரிடங் குளவி சேர்ந்து
நசையிடந் தன்னி னாக்கு நவமென வெனது புன்சொ
லிசையிடங் கொண்ட மேலோ ரிருஞ்செவி யிடத்திற் புக்கின்
மிசையிடஞ் சேரு மென்னா நகைவெரீஇ யகன்ற தன்றே

(கடவுள் வாழ்த்து : 28)

**கொடை நாயகர்**

கடவுள் வாழ்த்திலே உள்ள மூன்று பாடல்களில் மூன்று முறை கொடை நாயகரை வாழ்த்தி உள்ளார் ஆசிரியர். இக்காப்பியத்தை இயற்றுவதற்குப் பொருளுதவி புரிந்த கொடை வள்ளல் இவர். எனவே தான் முதற் படலத்திலே மூன்று முறை குறிப்பிட்டுள்ளார். இக்கொடை வள்ளல் நாகூரைச் சேர்ந்தவர். குப்பத்தம்பி என்பவரின் புதல்வர். அன்புள்ளம் படைத்தவர். முகம்மது மஸ்தான் என்னும் பெயரை உடையவர். முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் புகழையும் பெருமையையும் கேட்பதில் மிக்க ஆர்வம் உடையவர். எனவே தான் குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தை இயற்றப் பொன்னும் பொருளும் வழங்கி உள்ளார். இவ்வாறு சிறப்புச் செய்தமையைக் கருத்தில் கொண்டு ஆசிரியர் கொடை நாயகரை மும்முறை கடவுள் வாழ்த்தில் போற்றிப் பாடிஉள்ளார். கொடை வள்ளலைப் பற்றிப் பாடிய முதற் பாடலில் அவர்தம் ஊரின் பெயரும் ஊரின் வருணனையும் அவர்தம் தந்தையின் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காணலாம்.

மாரியிற் செழித்த வேலி மருதஞ்சூழ் நாகை வாழ்வோன்
றாரியல் பொற்றோள் குப்பத் தம்பிதன் வரத்தின் றோன்றல்
வாரிமா வரிசை செல்வ முகம்மது மஸ்தா னென்போன்
சீரியல் கவிதை கேட்பான் றிருக்கருத் தியற்றி னானால்

(கடவுள் வாழ்த்து : 24)

அக்கொடை நாயகரின் சில பண்புகளும் அவருக்கு முகியித்தீன் ஆண்டவர் பேரில் உள்ள ஈடுபாடும் பொன்னும் பொருளும் வழங்கினமையும் இவ்வாறு சுட்டப் பட்டுள்ளதைக் காணலாம்.

பற்பல வுயிரி னுள்ளம் படர்ந்தவன் கிருபை கொண்டு
நற்பல முகியித் தீனெந் நாயகர் சரிதை கேட்போர்
சொற்பயில் வரிசை வேண்டிச் சொன்னமே பொழிந்து நின்றான்
மற்பயில் செவ்வித் திண்டோண் முகம்மது மஸ்தா னென்போன்

(கடவுள் வாழ்த்து : 25)

கடவுள் வாழ்த்தில் மூன்றாவது பாடலில் கொடை நாயகர் முகம்மது மஸ்தான் என்பவர் தமக்கு நூல் இயற்ற உதவி புரிந்தார் எனக் குறிப்பிட்டுக் கொடை நாயகரும் அவரைச் சார்ந்த சுற்றமும் 'வாழி வாழி' என வாழ்த்தி உள்ளார். கடவுள் வாழ்த்தின் இறுதிப் பாடலாக அமைந்துள்ள இப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

செழுநயக் காரணத்தின் செய்கப்துல் காதி றென்னும்
தொழுநய மேலோர் நன்மைச் சொன்னயப் பனுவல் செய்வான்
முழுநயக் கருத்தி யற்று முகம்மது மஸ்தான் என்பான்
கொழுநயஞ் செல்வ மேன்மைக் குடிநயம் வாழி வாழி
(கடவுள் வாழ்த்து : 33)

கடவுள் வாழ்த்தில் மூன்று முறையும் நூலின் எஞ்சிய படலங்களில் பதின்நான்குமுறையும் கொடைநாயகர் குறிப்பிடப்பட்டுள்ளார். பொது வாக ஒரு நூலில் கொடை நாயகரைப் பற்றி நூறு பாடல்களுக்கொரு முறை குறிப்பிடப்படுவது இலக்கிய மரபாகும். குத்பு நாயகத்தில் இடம்பெற்றுள்ள மொத்தச் செய்யுட்களின் எண்ணிக்கை 1341 ஆகும். கடவுள் வாழ்த்தில் அமைந்துள்ள முப்பத்து மூன்று செய்யுட்களையும் நீக்கிவிட்டால் எஞ்சி இருப்பது 1308 செய்யுட்கள். இந்த 1308 செய்யுட்களிலும் கொடை நாயகர் பதிநான்கு முறை குறிப்பிடப்பட் டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த அடிப்படையில் பார்க்கும் பொழுது ஏறத்தாழ நூறு பாடல்களுக்கு ஒருமுறை கொடை நாயகர் குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காணலாம். குத்பு நாயகத்தில் இடம் பெற்றுள்ள மொத்தச் செய்யுட்களின் எண்ணிக்கையில் 116, 275, 299, 322, 388, 459, 530, 612, 687, 788, 869, 954, 1150, 1326 என்ற எண்களைக் கொண்ட செய்யுட்களில் கொடை நாயகரின் புகழ் பாடப்பட்டுள்ளமை புலனாகின்றது.

கொடை நாயகரின் அழகினைப் புலவர் இவ்வாறு வருணித் துள்ளார். இப்பாடலில் 'மணி' என்பதனைப் பலமுறை அமைத்துப் பாடி இருத்தல் சுவைக்கத்தக்கது. இதுதான் அப்பாடல் :

செழுமணி தரளத் தொருமணி யாய
திருமணி முகம்மது நயினார்
கொழுமணி மகவின் றருமணி பெயரர்
குரைகட னவமணி யொளிபோற்
றொழுமணி யெழிலின் முகம்மது மஸ்தான்
றுதிமணி திதிமணி ஞால
முழுமணி யென்கண் ணிருமணி யென்ன
முகியித்தீ னாண்டவர் பிறந்தார்
(சகதசற்குரு உதயஞ் செய்த படலம் : 69) (275)

கொடை நாயகர் முகம்மது மஸ்தான் அவர்கள் உள்ளம் மலர்ந்தது எனக் குறிப்பிட வந்த புலவர் 'பூப்ப' என்னும் பதத்தை ஓசை நயம் அமைய அங்கு பல முறை உபயோகித்துள்ளார்.

தாயுடல் பூப்ப வென்றித் தந்தையார் பூப்ப மற்றோர்
மேயுடல் பூப்ப வானோர் மெய்யுளம் பூப்பப் பாடும்
வாயுடல் பூப்பக் கேட்போன் முகம்மது மஸ்தான் பூப்பச்
சேயுடல் கௌதுல் அகுலம் செவ்விதழ் பூத்த வன்றே

(விரதத்து ஐயம் அறுத்த படலம் : 20) (299)

இரண்டாவது முறையாகக் கொடை நாயகரான முகம்மது மஸ்தான் அவர்களின் தந்தையின் பெயர் சுட்டப்பட்டுள்ளது. தன்மையையும் வடிவையும் குறிக்க 'குணங்குறி' என்ற சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. குப்பத் தம்பி என்பதற்கு அடைமொழியாகவே இச்சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதே பாடலில் முகம்மது மஸ்தான் அவர்களைக் குறிக்க 'துரை' என்ற அடைமொழி பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

குணங்குறி யுரைதகாக் குப்பத் தம்பியின்
மணங்கமழ் துரைமுகம் மதுமஸ் தானுளத்
திணங்கிய நாயகர் வரிசை யின்னன
கணங்கொளு மோதிய பயிலுங் காலமே

(ஒலி நிலைக் கண்ட படலம் : 18) (322)

எல்லா வளங்களையும் உடையது கொடை வள்ளலின் நகரம். அது பழம் பெரும் மூதூர். அங்குச் செல்வப் பெருக்குடன் வாழ்ந்தவர் குப்பத் தம்பி என்பவர். அந்தக் குப்பத் தம்பி என்பவரின் புதல்வராக வந்தவர் முகம்மது மஸ்தான் என்னும் கொடை வள்ளல். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளது.

பொழினிழல் செழிப்பும் வாசம் பொழிமலர் நிறைவு நீர்சூழ்ந்
தெழுமுயிர் களிப்பு மூதூ ரிருநிதி திருவு மெல்லா
மழகிய குப்பத் தம்பி யருள்முகம் மதுமஸ் தான்ற
னெழின்மனை நாளும் பொங்கி யிருப்பன போன்ற தன்றே

(நாட்டுப் படலம் : 83) (116)

கொடை நாயகரின் புகழும் அந்தப் புகழுக்கு காரணமான செல்வமும் வளமும் இவ்வாறு பாடப்பட்டுள்ளன.

மருவிய சீர்த்தி யோங்கு முகம்மது மஸ்தா னென்போன்
வருமனை நிலைத்த செல்வ மலிகின்ற வளமை யென்னப்
பெருகிய மணிமா டத்திற் பிதிரொளி பிறங்கும் ஜைலான்

(யாத்திரைப் படலம் : 57) (388)

எவராயினும் பெருமையை முறையாகப் பெறுதல் வேண்டும். அத்தகை நல்ல முறையில் பணிபுரிந்து பெருமை ஈட்டியவர் கொடை நாயகர் முகம்மது மஸ்தான் என்பவர். இதனையே புலவர்

... ... ... நன்கின்
முறைதரும் பெருமை பூண்ட முகம்மது மஸ்தா னென்போன்
பெறுமனத் துறைத லேபோல் வைகினர் பிரியாத ன்றே.

(பகுதாது புக்க படலம் : 15) (459)

என்றும்

மனிதரிற் பெருமை பூண்ட
முகம்மது மஸ்தான் என்போன்

(முரீது பெறு படலம் : 36) (687)

என்றும் வருணித்துள்ளார்.

மென்மையான மொழியை உடையவர். நறுமணங் கமழும் தேன் போன்ற இனிய மொழியை உடையவர். அத்தகைய இனிய வள்ளண்மை மனம் படைத்தவர். எப்பொழுதும் பெருகிக் கொண்டிருக்கும் செல்வம் படைத்தவர். இவை முகம்மது மஸ்தான் கொடை நாயகரைப் புகழ்ந்து பாடப்பட்டவை. இத்தகைய பெரியாரின் உள்ளத்திலே எப்பொழுதும் மலர்ந்து கொண்டிருப்பவர் முகியித்தீன் அப்துல் காதிர் அவர்களே. இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

வனமலர் நறிய செந்தேன் மதுரமென் மொழியால் வண்மைத்
தனமலர் செல்வ மிக்க முகம்மது மஸ்தா னுள்ள
மனமல ரிடத்து வாழு மாதவர் திருநா மத்தை
யினமல ரென்னப் போற்றி விரித்தன ரிதனைச் சொன்னார்.

(கவுதைக் கண்ணுற்ற படலம் : 22) (530)

அவரிடம் மலிந்திருந்த செல்வத்தை

ஏற்றிய செல்வம் பூந்த முகம்மது மஸ்தான் என்போன்

(மலசலத்திடர் துடைத்த படலம் : 19) (954)

எனப் புகழ்ந்து பாடியுள்ளார் ஆசிரியர்.

ஒருவன் வாழ்க்கையில் எந்த எந்தத் தகுதிகளைப் பெற வேண்டுமோ அந்த அந்தத் தகுதிகள் அனைத்தையும் பெற்றவர் கொடை நாயகர். அந்தத் தகுதிகளைப் பெற்றமையினாலேயே வாழ்வின் உயர்ந்த நிலையை அடையும் வாய்ப்பைப் பெற்றார். அத்தகைய நல்லவரின் உள்ளத்திலே எப்பொழுதும் இருக்கும் கருத்துக்களை இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர் :

மேம்பட விளங்குங் காட்சி விரித்தவை மதித்து நாளு
மோம்புமே லவனைப் போற்றிப் புகழ்ந்தன ருயர்ந்த வாழ்வி
னாம்பல தகுதி பூண்ட முகம்மது மஸ்தா னாக்கத்
தேம்பயி லுளத்தி னோங்குந் திருப்பதக் குரிசி லன்றே

(கச்சிற்குப் போந்த படலம் : 72) (612)

கொடை நாயகர் முகம்மது மஸ்தான் அவர்களிடம் நன்மை பலவற்றைப் பெற்றுத் தரக்கூடிய செல்வம் இருந்தது. மேன்மைத் தன்மை இருந்தது. மற்றவர்களுக்கும் பயன்படக்கூடிய அறிவும் ஆற்றலும் இருந்தன. அவற்றின் பயனாக மனிதரிடையே பெருமை பெற்றவர் என்னும் தன்மையைப் பெற்றிருந்தார். அவருடைய உள்ளமும் புனிதத் தன்மை உடையதாக இருந்தது. மனிதப் புனிதராக அவர் வாழ்ந்து வந்தார். இக்கருத்துக்களையே சுவைபட இவ்வாறு அமைத்துப்பாடி உள்ளார் ஆசிரியர்.

நனிதரு செல்வ மேன்மை நயன்தரு மறிவும் பெற்ற
மனிதரிற் பெருமை பூண்ட முகம்மது மஸ்தா னென்போன்

(முரீது பெறு படலம் : 36) (687)

முகம்மது மஸ்தான் அவர்கள் நித்தமும் முகியித்தீன் ஆண்டவர் அவர்களை நினைத்துக் கொண்டிருந்தார். எல்லா அறிஞருடைய புகழையும் அவர் பெற்றிருந்தார். ஐசுவரியம் உடையவராகத் திகழ்ந்தார். அத்தகைய பேறுகளைப் பெற்று கொடை நாயகரிடம் இருந்து பெறப்பட்ட பணத்திலிருந்தே வறியவர் தமது வறுமையைத் தீர்த்துக் கொண்டனர். இக்கருத்துக்களை ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்

பதிபுகழ் நயினார் பாதம் பண்புட னுள்ளங் கொண்டு
மதிபுகழ் பவுசு பெற்ற முகம்மது மஸ்தா னென்போ
னிதிபுகழ் தரவே யேற்றோர் வறுமைநீங் குவபோ லன்னான்

(கொற்றமுற்ற படலம் : 64) (788)

தக்கார், மிக்கார், உற்றார், உறவினர், மேலவர் எல்லோரும் மகிழ்ச்சி அடைய முகம்மது மஸ்தான் என்னும் கொடை நாயகர் வாழ்கவே என ஆசிரியர் வாழ்த்தியுள்ளார். அவ்வாறு மகிழ்ச்சி அடைந்தவர்களுள் தன்னையும் சேர்த்துக் கொண்டார் ஆசிரியர். 'பாடுந் தவத்தினன்' எனத் தன்னைக் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலில் 'களிப்ப' என்னுஞ் சொல் பலமுறை வந்திருப்பதைக் காணலாம். பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மிக்கவர் களிப்ப நன்றி மேலவர் களிப்பச் சூழுந்
தக்கவர் களிப்பப் பாடுந் தவத்தினன் களிப்பச் செல்வ
மொக்கலுங் களிப்ப வாழி முகம்மது மஸ்தா னுள்ளு
மக்கமுங் களிப்பப் பூத்த தமுதவாய் மலரின் வாசம்
(குருநிலை பெற்ற படலம் : 41) (869)

இங்கே கொடை நாயகர் வாழ்த்தப்பட்டிருப்பதையும் காணலாம்.

கொடை நாயகர் எப்பொழுதும் துளங்கிய உள்ளத்தோடே தான் இருந்தார். ஏற்றம் பெற்ற செல்வம் பெற்றிருந்தார். இக்கருத்துக்கள் இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ளன :

தோற்றியகார ணத்தாற் றுளங்கிய வுள்ளத் தோடே
யேற்றிய செல்வம் பூத்த முகம்மது மஸ்தா னென்போன்
(மலசலத்திடர் துடைத்த படலம் : 19) (954)

மற்றொரு பாடலில் கொடை நாயகரின் அறிவு நுட்பம் குறிப்பிடப் பட்டுள்ளது. அவருடைய அறிவு கூட இனிமையானது என இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

... இனியமுகம் மதுமஸ்தான்
புந்தி யென்ன
(செய்கு கம்மாதின் சூகை நீக்கிய படலம் : 46) (1150)

குத்பு நாயகத்தின் கொடை நாயகரான முகம்மது மஸ்தான் என்பவர் கடைசியாகக் குறிப்பிட்டுள்ள செய்யுளில் அவருடைய தோற்றப் பொலிவு வருணிக்கப்பட்டுள்ளது. அவருடைய உடல் கட்டு, உடலமைப்பு, வடிவழகு என்பன விதந்தோதப்பட்டுள்ளன. அவருடைய கொடைத் திறன் புகழப்பட்டுள்ளது. அவர் எப்பொழுதும் மார்பிலே மாலைகள் அணிந்து அலங்கரிக்கத் திகழ்ந்தவர் எனப் பாராட்டப்பட்டுள்ளார். அவரது உள்ளமோ எப்பொழுதும் பணிபுரியக் காத்துக் கொண்டிருந்தது. அத்தகைய உள்ளத்துக்கு முகியித்தீன் ஆண்டவர் அவர்களுடைய ஆசனம் உவமிக்கப்பட்டுள்ளது. இத்தகைய கருத்துக்கள் அடங்கிய பாடல் இவ்வாறு அமைத்துள்ளது :

திணியணி யுடலந் தேட்ட வாட்டத்திற் சிறந்த வள்ளல்
மணியணி யலங்கன் மார்பன் முகம்மது மஸ்தா னென்போன்
பணியணி யுளம்போல் பூத்த பதுமத்தா சனத்தின் மேன்மை
யணியணி முகியித் தீன்வா ழவையினிற் புக்கி னாரால்

(சைய்கு உதுமான் வழிகொள் படலம் : 56) (1326)

**இயற்கை வருணனை**

பலவிதமான கவிதைகள் பாடியுள்ள சேகுனாப் புலவர் இயற்கையை ஆங்காங்கே வருணித்துச் சென்றுள்ளார். கவி நயம் மிளிர அமைந்துள்ள அவருடைய கவிதைகள் இரண்டை ஈண்டு நோக்குவோம்.

மலர்கள் நறுமணம் கமழ்ந்தனவாய்த் திகழ்ந்தன. அம்மலர்களிலிருந்து தேன் வடிந்து கொண்டிருந்தது. இவற்றிற்கிடையே சிவப்பு நிறமான கனிகள் பல இருந்தன. அவை மிகக் கனிந்தனவாகக் காட்சி அளித்தன. ஒருங்கு சேர்ந்து இருந்தமையால் அவற்றிலிருந்து சாறு வழிந்து கொண்டிருந்தது. இவற்றைத் தவிர மரக்கொம்புகளிலே தேன்கள் கூடுகட்டி இருந்தன. அத்தேன் கூடுகளிலிருந்தும் தேன் வடிந்து கொண்டிருந்தது. இவற்றை மேய வந்திருந்தன பறவைகள். அப்பறவைகள் அழகாக எல்லா இடங்களிலும் பூத்திருந்த பூஞ்சோலைகளிலே அமர்ந்திருந்தன. அவை மகிழ்ச்சிப் பெருக்கால் இன்னிசை மீட்டிக் கொண்டிருந்தன. ஒரே விதமாகப்—ஒரு சீராய்ப்—பாடிக் கொண்டிருப்பன போன்று ஒலித்துக் கொண்டிருந்தன. இத்தகைய காட்சிகள் ஒரு பாடலில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன.

நறைவழி மலருஞ் செய்ய நறுங்கனிக் குலமுஞ் சிந்துந்
துறைவழி தேனு மன்னுங் கோட்டினிற் றூங்கி றாலி
னறைவழி தேனு மாங்காங் கணிபொழி னீழல் பூத்த
நிறைவழி தோறும் புட்க ளின்னிசை நெகிழா நிற்கும்.

(மலசலத்திடர் துடைத்த படலம் : 11) (946)

இத்தகைய காட்சிகளை ஆற்றங்கரைகளிலே பெரிதும் காணக்கூடியதாக இருக்கும். மேலே குறிப்பிட்ட பூஞ்சோலையில் உள்ள பூக்கள் குளிர்ந்தனவாய் இருந்தன. அந்தக் குளிர்ச்சியுடன் பூக்களின் நறுமணமும் உள்ளத்தைக் கவர்வதாய் அமைந்திருந்தது. அந்தக் குளிர்ச்சியையும் வாடையையும் அள்ளி எடுத்துக்கொண்டு வந்தது தென்றல் காற்று. பூக்களைத் தடவி அவற்றின் மேலாய் உலாவி வந்தது. தென்றல் காற்றுடன் வரும்பொழுது உள்ளம் மகிழ்வுறும். நறுமணமும் குளிர்ச்சியும் சேர்ந்து தென்றல் காற்றுடன் வரும்பொழுது

உள்ளம் மகிழ்வுறும். அங்ஙனம் உள்ளங்களைப் பூரிப்படையச் செய்ய நறுமணமும் குளிர்ச்சியும் கலந்த தென்றல் காற்று கமகமஎன வீசியது. தென்றல் தனிமையாக வரவில்லை. அது எப்பொழுதும் அதன் தோழர்களான குயில்களுடனேதான் வரும். அப்பொழுது தென்றலோடு குயில்கள் வந்தன. அந்தக் குயில்கள் கூவிக்கொண்டே இருந்தன. அந்தக் குயில்களின் இனிய ஓசை அங்கே எல்லாப் பக்கங்களிலும் எதிரொலித்துக் கொண்டிருந்தது. அதனால் அங்குச் செழுமை ஏற்பட்டது. இதற்கிடையில் அங்கு வண்டுகள் தேனை நிறையப் பெற்றுக் கொண்டன. இதனையே சேகுனாப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார் :

குளிர்ந்தபூ வாடை யள்ளிக் குணங்கொள வெறிந்து லாவித்
தளர்ந்திடா துள்ளம் பூப்பத் தவழ்தருந் தென்ற லோடு
வளர்ந்தெழு குயிலி னோசை மருங்கெலாஞ் செழிப்பப் பல்பாற்
கிளர்ந்தெழு மளியுந் தேனு மதுவினாற் கெழுமு மன்றே.
(மலசலத்திடர் துடைத்த படலம் : 12) (947)

ஆற்தங்கரையிலே மற்றொரு காட்சி. ஆற்றங்கரையிலே ஆற்றிடைத் திட்டுக்கள் இருந்தன. அங்கே வெள்ளை மணல் பரந்திருந்தது. அவ்வாற்றிடைத் திட்டுக்கள் எல்லாவற்றிலும் முத்துக்கள் எறியப்பட்டிருந்தன. அவை நிலத்தில் ஒளிமயமாய்க் காட்சி அளித்தன. பொன் பூத்தாப் போன்று அக்காட்சி அமைந்திருந்தது. அங்கே அன்னங்கள் இருந்தன. அவை நாட்டியம் ஆடுவன போன்று காட்சி அளித்தன. அன்னப்பறவைகளின் இறகுகள் சிறியனவாக இருந்தன. அவை மிகுதியாக இருந்தன. அழகாக இருந்தன. அன்னப்பறவைகள் அவற்றின் மிகுதியாக உள்ள அழகான சிறிய இறகுகளை ஆற்றிக் கொண்டிருந்தன. தூவி ஆற்றிக் கொண்டிருந்தன. அந்த அன்னங்களோ அருகாமையிலே வாழ்ந்து வந்தன. அந்த ஆற்றிலே தான் அவற்றின் உறைவிடங்கள் அமைந்திருந்தன. அன்னங்களின் உறைவிடங்களாக அமைந்தவை அந்த ஆற்றிலே இருந்த தாமரைப் பூக்களாகும். அவை மலர்ந்திருந்தன. நறுமணம் பரப்பிக் கொண்டிருந்தன. இங்ஙனம் இயற்கை எழில் நிறையப் பெற்று விரிந்த கரைகளைக் கொண்டதாக அந்த நதி காட்சி அளித்தது. அந்த நதி இக்காட்சிகளை நல்கிய வண்ணம் பாய்ந்து சென்று கொண்டிருந்தது. இக்காட்சியினையே சேகுனாப் புலவர் நயம்பட இவ்வாறு வருணித்துள்ளார் :

வடிவினின் மிகுத்த முத்தி னிலத்தினின் மலர்ந்த சோதிப்
பொடிதரு பொன்பூத் தென்ன வெண்மணற் புளின மெங்கு
நடிதரு மன்னம் பொன்மை நன்சிறு தூவி யாற்றுங்
கடிதருங் கமலம் பூத்த கரைவிரி நதியு மோடும்
(மலசலத்திடர் துடைத்த படலம் : 13) (948)

**உவமையும் உருவகமும்**

இயற்கை வருணனை பெரும்பாலும் உவமை உருவக நயங்களைக் கொண்டதாக இருக்கும். இங்கே உவமான உவமேயங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. ஆனால் சில புலவர்கள் உவமை உருவகங்களைத் தமது பாடல்களில் அமைத்துப் பாடும்பொழுது உவமான உவமேயங்களையே மாற்றி விடுகின்றனர். உவமானத்தை உவமேயமாகவும் உவமேயத்தை உவமானமாகவும் திரித்து விடுகின்றனர்.

கருமையான எருமையின் மடி சுரக்கின்றது. முலை முறுகிப் பால் வடிகின்றது. வடிந்த பால் கீழே உள்ள தண்ணீரில் கலந்து விடுகின்றது. அங்கே அன்னங்கள் வந்து விடுகின்றன. அவை கமலப் பள்ளியுறைகின்றவை. தாமரை மலர்களைப் பள்ளியாகக் கொண்டு உறைகின்றவை. தேனைச் சொரியும் கமலங்களையே அவை பெரிதும் விரும்புபவையாக உள்ளன. அத்தகைய அன்னங்கள் தண்ணீரில் கலந்த வெண்பாலை தண்ணீரில் இருந்து பிரித்து உட்கொள்கின்றன. தீயவற்றை அகற்றி நல்லவற்றை எவ்வாறு தலை மாணாக்கர் எடுத்துக் கொள்கிறார்களோ அதே போன்றே அன்னங்களும் தண்ணீரை விலக்கிப் பாலை மாத்திரம் சுவைத்தன. பொதுவாகத் தலை மாணாக்கருக்குரிய இலக்கணங்கூறும்பொழுது அவர்கள் அன்னங்கள் போன்றவர்கள் எனக் கூறுவதுண்டு. தண்ணீரில் கலந்துள்ள பாலைத் தண்ணீரிலிருந்து பிரித்துப் பாலை மாத்திரம் உண்ணும் தன்மை அன்னங்களிடம் உண்டாதலால் தலைமாணாக்கர் அன்னங்களுக்கு உவமிக்கப்படுவர். ஆனால் சேகுனாப் புலவரோ அதனை மாற்றி உவமை கூறியுள்ளார். தலைமாணாக்கர் போன்று அன்னங்கள் செயல்பட்டன எனக் குறிப்பிட்டுள்ளார். தலைமாணாக்கரிடம் உள்ள உணர்வைப் போன்றது அன்னங்களின் செய்கைக்கு மூலமான உணர்ச்சி எனப் பாடி உள்ளார். இங்ஙனம் உவமான உவமேயத்தை மாற்றிப் பாடியுள்ளார் செய்கு அப்துல் காதிறு நெய்னாப் புலவர். தமக்குத் துணை புரியக் கூடிய குருவினை அடைய இத்தகைய தன்மையினை உடைய அன்னத்தின் துணையை நாடி உள்ளார் சைகு உதுமான் என்பவர். இக்கருத்துக்கள் அவர்களின் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கரிய மேதி முலைமுறுகிக் கான்று புனலிற் கலந்தவெண்பால்
பிரியப் பிரித்துத் தலைசீடர் பெற்றி யுணர்பி னுண்டுநறாச்
சொரியுங் கமலப் பள்ளியுறை யன்னத் துணையே யித்துணையே
யுரிய குருவின் பதங்காணா துழல்வேற் கருள்வாய் நிழல்வாயே

(செய்கு உதுமான் வழிகொள் படலம் : 23) (1293)

வயலிலே பல்வேறு பணிகள் புரிந்து கொண்டிருந்தனர் மக்கள். ஒவ்வொருவரும் தத்தமக்கே உரிய பாணியில் பாடிக்கொண்டே வேலையில் ஈடுபட்டிருந்தனர். பெண்கள் பணிபுரியும்பொழுது ஒலி எழுப்புவர். அத்தகைய ஒலியை குரவை ஒலி என்பர். தத்தமக்குரிய தொழில்கள் ஓரளவு முற்றுப் பெற்றுவிட்டன என்பதை அறிவிக்கு முகமாக எல்லாத் திக்குகளிலும் குரவை ஒலி எழவாயது; தம் கணவன் மாரைப் பிரிந்திருந்த மனைவியர் தத்தம் கடமைகளை முடித்துவிட்டு வீடு திரும்பும் வேளை அது. எனவே ஊடிப் பிரிந்தவர்கள் கூடும் வாய்ப்பை அளிக்கும் சமயம் அதுவாயிருந்தது. ஆகையினால் பெண் கள் தமக்கு ஒப்படைக்கப்பட்டிருந்த கடமைகளை முடித்து எழுப்பிய குரவை ஒலி கணவன் மனைவியரைச் சேர்த்து வைக்கும் ஒலியாக அமைந்தது. அதனை ஒரு மூலிகை எனக் குறிப்பிட்டுள்ளார் குத்பு நாயக ஆசிரியர் சேகுனாப் புலவர் அவர்கள். ஊடியிருந்தவர்களை கூட்டிடும் மூலிகை போன்று அமைந்திருந்தது திசைதொறும் எழுப்பப் பட்ட குரவை ஒலி என இவ்வாறு நயம்படப்பாடி உள்ளார். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

தத்தமக் குரியன வினையின் சால்பினா
லெத்திசை தொறுமெழுங் குரவை வீங்கொலி
மொய்த்தபோ தூடநீர் மருந்து மூலியென்
றுத்திசெய் துழவர்பாங் குலாவி நோக்குவார்

(நாட்டுப் படலம் : 66) (99)

தாமரை மலர்கள் நிறைந்திருந்தன தடாகத்தில். மானைப் போன்ற பார்வையை உடைய பெண்டிர் அத்தடாகத்திலே ஆடினர். குளித்தனர். ஒவ்வொரு முறையும் அவர்கள் ஆடும்போது அத்தடா கத்தில் அமைதியாக இருந்த தெளிந்த நீர் ததும்பியது. அப்போது அங்கே மூழ்கிய பெண்ணின் வதனம் வானிலே சஞ்சரித்து எல்லோரும் விரும்பும் அமுதமயமான கதிர்களைப் பரப்பும் சந்திரன் போன்று தோன்றியது. சந்திரன் தோன்றிவிட்டான் என நினைத்த தாமரை மலர்கள் நாணின. சூரியன் தோன்ற மலர்வதும் சந்திரன் தோன்ற மறைவதும் தாமரையின் பண்பாகும். எனவே பெண்முகம் தோன்றி யதும் தாமரை மலர்கள் நிலைதடுமாறின. இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளது.

கானலர் தொடையால் வேய்ந்த கனங்குழ லந்ந லார்செந்
தேனலர் வாவி யாடுந் தொறுந்தெண்ணீர் ததும்ப லாலே
வானல ரமுதத் திங்கள் வளமுக நோக்கிக் கஞ்ச
மானல ரொடுங்கி நாணி மறைதலின் மறுகு மன்றே

(நாட்டுப் படலம் : 84) (117)

அவ்வாறு தடாகத்தில் மூழ்கிவரும் பெண்களின் வதனங்கள் மலர்ந்திருந்தன. மகிழ்வோடு காட்சி அளித்தன. அழகு பொருந்தி யவையாய் அவை திகழ்ந்தன. சந்திரனின் ஒளி அம்முகங்களிலே பிரகாசித்துக் கொண்டிருந்தது. அந்த முகங்கள் மணம் வீசும் மலர் போன்று காட்சி அளித்தன. அம்முகங்களை மலர்கள் என்று ஏமாற்ற மடைந்தன வண்டுகள். முலைகளை மொட்டுக்கள் என்று அவை கருதலாயின. இவ்வாறு கருதி அவ்வண்டுகள் இசைக்கலாயின. வண்டுகளே இவ்வாறு ஏமாற்றம் அடைவதற்கு ஏதுவாக அம்மலர்கள் போன்ற முகங்கள் அமைந்தன எனின் மனிதர் அவற்றைக் கண்டால் மயங்காமல் இருப்பார்களோ? இவ்வாறு ஒரு வினாவை எழுப்பிய ஆசிரியரின் ஒரு பாடல் இங்ஙனம் அமைந்துள்ளது.

வனசமார் தடத்து மூழ்கு மானனார் மலர்ந்த செவ்வி
நனிநிலா முகத்தை யன்ன நறுவிய மலரென் றேந்து
மினமுலை முகைக ளென்னா வின்னிசை யளிக டுன்னி
மனநிலை மயங்கா நின்றான் மால்கொளா மனித ரியாரே

(நாட்டுப் படலம் : 85) (118)

இங்ஙனம் தடாகத்தில் மூழ்கிக் குளித்த பெண்கள் எத்தகையர் எனின் அவர்களுடைய இடைகள் மின்னை ஒத்திருந்தன. விட்டு விட்டு மின்னுவது போன்று இடைகள் மிக நுண்ணிதாக அமைந் திருந்தன. அவர்களுடைய கருமையான கூந்தல்கள் மேகத்தை ஒத்திருந்தன. அவர்களின் உடல்கள் பொன்னிறத்தை நிகர்த் திருந்தன. அவர்கள் தமது கூந்தலில் உள்ள ஈரத்தைப் புலர்த்து வதற்காக பூஞ்சோலைகள் தோறும் நின்று கொண்டிருந்தனர். அவர்கள் நின்று கொண்டிருந்த அவர்களுடைய பிற புறச் சாயல் மயில்களைப் போன்று காட்சி அளித்தன. அவர்களின் முற்புறத் தோற்றத்தை, முற்புறத் தோற்றம் எதனை ஒத்திருந்தது என்பதனை எவ்வாறு வருணிப்பேன்? இவ்வாறு மற்றொரு கேள்வியை எழுப்பிப் பெண்களின் அழகினை மிக்க நயமுடைத்ததாய்ப் பாடியுள்ளார் ஆசிரியர்.

மின்னொத்த மருங்கல் கூந்தன் மேகத்தை யொத்த மேனி
பொன்னொத்த மடவா ரீரம் புலர்த்துவார் காவு தோறும்
பின்னொத்த சாய னோக்கிப் பேதுறு மயில்க ளென்னின்
முன்னொத்த பொருளின் சாய லியாதென மொழிகு வேனே

(நாட்டுப் படலம் : 86) (119)

துரும்பு மிக எளிதானது. எடையே யற்றது. காற்றில் தானாகவே பறந்திடும். சுழல் காற்றிலே அகப்பட்டு விட்டால் துரும்பின் நிலையை வருணிக்க முடியாது. கண்ணுக்குப் புலப்படாமலே சென்று விடும். சுழலுங் காற்றின் சுழியில் அகப்பட்டு விட்டால் துரும்பு அடையும் நிலைமை மிக ஆபத்தானதாகும். பரம்பாயாது உழலும் ஆவி அந்தத் துரும்பைப் போன்றதே. காற்றின் சுழியில் அகப்பட்ட துரும்பு போன்று அமையும் இதனையே சேகுனாப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

சுழலுங் காற்றிற் சுழிபட்ட
துரும்புபோலப் பரம்பாயா
துழலு மாவி தனக்குள்ள
(கொற்ற முற்ற படலம் : 84) (808)

மற்றொரு பாடலிலும் துன்பப்படும் ஒருவரின் நிலை காற்றால் அலையும் துரும்புக்கு இவ்வாறு ஒப்பிட்டுள்ளதைக் காணலாம்.

ஆற்றாதுள மாற்றாதல மரல்கொண்டடி யாடிக்
காற்றாலலை துரும்பாய்வரு காலைத்தெரு தலையின்
(விதிமுறை விலக்கிய படலம் : 5) (898)

திருவிளையாடற் புராணம் போன்ற நூல்களிலே தமிழகத்திலே உள்ள பல்வேறு புனித நகரங்கள் ஒரு பெண்ணின் பல்வேறு உறுப்பு களுக்கு உருவகிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். மதுரை அப் பெண்ணின் மணி வயிறு என வருணிக்கப்பட்டுள்ளது. புலியை ஒரு மாதினுக்கு உருவகப்படுத்தப்பட்டுள்ளது. பற்பல தேயங்களும் அந்த மாதின் உறுப்புகளாக அமைகின்றன. எல்லா நாடுகளும் சேர்ந்தே புவி அமைந்துள்ளதாதலான் அவ்வாறு குறிப்பிட்டுள்ளது. அந்தப் புவி மாதின் முகமாக அமைவது சிறந்த அறபு நாடாகும். அங்குள்ள பிரதானமான நகரங்களான மக்கா, மதீனு அதன் விழி களாக அமையும். பகுதாது நகரம் புவி மாதின் வாயாகக் காட்சி அளிக்கும். அறபு அல்லாத நாடுகள் அஜமு நாடுகளாகச் சுட்டப்படு கின்றன. அத்தகைய அஜமு நாடுகள் அப்புவி மாதின் நுதலாகத் திகழ்கின்றன. நெற்றியாக அமைகின்றன. ஆனால் அந்த நெற்றி யிலே அமையும் திலகமே புவி மாதுக்கு அழகினை அளிக்கின்றது. அத்தகைய நெற்றியின் திலகமாக அமைவது முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் பிறந்த ஜீலான் நகராகும்.

இக்கருத்துக்களைக் கொண்ட சேகுனாப் புலவரின் ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

தேயம் பலவு முறுப்பாகச்
சிறந்த அறபு முகமாக
வேயும் பதிகள் விழியாக
விழைவா யாகப் பகுதாது
தோயு மஜமு நுதலாகத்
தோற்றும் புவிமா னழகுபெறற்
காயுந் திலதம் ஜெய்லானி
யாக விருந்த நகரன்றே

(நகரப் படலம் : 3) (136)

**திருக்குறள் கருத்து**

வாழ்க்கைத் துணை நலம் பற்றிக் கூற வந்த திருவள்ளுவர் ஒரு குறளில்,

தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை (6 : 5) (55)

மனைவி கணவனிடம் எத்தகைய உறவு கொண்டிருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி உள்ளார். மற்றொரு குறளில் மதிலும் வாயில் காவலும் போன்ற சிறைக் காவல் பயனற்றவை என்றும் நெஞ்சைக் கற்பு நெறியில் நிறுத்தல் என்றும் காவலே சிறப்புடையது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

சிறை காக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை

(6 : 7) (57)

என்ற குறள் இதனையே வலியுறுத்துகிறது. சேகுனாப் புலவர் ஒரு பாடலில் சிறை காவலையும் நிறை காவலையும் குறிப்பிட்டுள்ளார். அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கு பண்புகளையும் உடையவர்கள் கற்புடைய பெண்டிர். இப்பண்புகளை உடையோரை இப்பண்புகள் காவல் காக்கும். பெண்களுக்குரிய இந்நான்கு பண்பு களையும் ஒரு நகரத்தைக் காப்பதற்கு அமைந்துள்ள நான்கு அரண் களுடன் ஒப்பிட்டுப் பாடிஉள்ளார் சேகுனாப் புலவர். முதலில் இயற்கையான காடுகள் ஒரு நகருக்கு அரணாக அமைகின்றன. அதனை அடுத்து மலைகள் அமைகின்றன. சில சமயங்களில் இயற்கை யாகவும் வேறு சில சந்தர்ப்பங்களில் செயற்கையாகவும் அமையும் அகழி ஒரு நகரின் அடுத்த அரணாக அமைந்துவிடும். அடுத்த அரணாக அமைவதும் உயர்ந்ததாக நிறுவப்படும் மதிலே. இவ்வாறு

காடு, மலை, அகழ், மதில் என்ற இந்நான்கும் ஒரு நகரத்துக்கு அரண்களாக அமைகின்றன. அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு பெண் களுக்குக் கற்பை காக்கும் அரண்களாக அமைவது போன்று நகர அரண்கள் அமைந்துவிடுகின்றன. மாற்றான் அப்பெண்ணைப் பற்றி நினைத்தாலும் அத்தகைய எண்ணம் அத்தகையோனைச் சுட்டுவிடும். இங்கே புலவர் பெண்ணின் குணத்தை ஒரு நகரின் அரணாக அமை வனவற்றிக்கும் அதே பெண்ணின் அவயவங்களை அந்நகரில் இடம் பெற்றுள்ள மாடமாளிகைகளுக்கும் கூட கோபுரங்களுக்கும் ஒப்பிட் டுள்ளமை நயக்கத்தக்கதாகும். அத்தோடு அவர் நின்றுவிடவில்லை. அங்கே உள்ள கூடங்கள் முதலியன மலர்கள் பூத்தன போற் காட்சி அளித்தன என்றும் குறிப்பிட்டுள்ளார். அவருடைய இக்கருத்துக்கள் அடங்கிய பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

காடு மலையும் பேரகழுங்
　　கனக மதிலு நாற்குணமாச்
சூடு மாற்றா ருன்னுகிலோ
　　சுடுமால் காந்த னியல்பினைக் கொண்
டாடு மழியாக் கற்புடைய
　　நகரா மகளி னவயவம் போற்
கூடு மலர்கள் பூத்ததெனக்
　　குலவுங் கூட மற்றுள்ளவே

(நகரப் படலம் : 9) (142)

அந்நகரிலே அழகிய மனைகள் உண்டு. அதே போன்று அங்கே தாய்மார்கள் இருக்கின்றனர். அழகிய இல்லங்களுக்கும் அன்புடைத் தாய்மார்க்கும் பொதுவான இயல்புகள் உண்டு. அழகிய மனைகள் அங்குள்ள தாய்மார்களைப் போன்று இருந்தன. இயல்பால் இரண்டும் ஒத்திருந்தன. சேகுனாப் புலவர் இதனை இங்ஙனம் குறிப்பிட்டுள்ளார் :

மணத்தா லோங்கும் பெருஞ்செல்வ
　　மக்கள் பெறலால் சம்பந்தக்
கணத்தா னிறையுந் திருவயிற்றாற்
　　கவிந்தொன் றணுகா துறக்காக்குங்
குணத்தால் கொண்டோர்க் கியைந்து நிற்குங்
　　குறியால் வெறாத நிலையாலும்
வணத்தால் வளர்க்கு மணிமனைகள்
　　மாதா வனைய வியல்பினவே

(நகரப் படலம் : 13) (146)

# ஆறாம் இயல்

## திருக்காரணப் புராணம்

காரணம் என்பதற்குப் பல பொருள்கள் உண்டு. தெய்வீக ஆசீர்வாதத்துடன் சிறப்பு நிகழ்ச்சிகளைச் செய்து காட்டுவதையும் காரணம் காட்டல் என்பர். அதிசயங்களை நிகழ்த்திக் காட்டுவதையும் இச்சொல்லால் அழைப்பர். இத்தகைய தெய்வீக ஆசீர்வாதத்துடன் நிகழ்த்தப்பட்ட அற்புத நிகழ்ச்சிகளை வருணிக்கும் காப்பியம் திருக் காரணப் புராணம் என அழைக்கப்பட்டுள்ளது.

**காப்பிய நாயகர்**

இத்தகைய தெய்வீக ஆசீர்வாதத்துடன் அற்புத நிகழ்ச்சிகளைச் செய்து காட்டியவர் செய்கு அப்துல் காதிறு சாகுல் கமீது ஆண்டகை அவர்களேயாவார்கள். வட இந்தியாவில் உள்ள மாணிக்கப்பூர் என்னும் இடத்தில் பிறந்தவர்கள். தென் இந்தியாவிலும் அதன் அயல்நாடுகளிலும் தங்கள் புகழைப் பரப்பியவர்கள். இப்பகுதிகளில் பல சீடர்களைப் பெற்றவர்கள். தமிழகத்தில் உள்ள நாகூரிலே நல்லடக்கம் செய்யப்பட்டவர்கள். மீறான் சாகிபு ஆண்டவர்கள் என்றும் அழைக்கப்பட்டவர்கள். அவர்களுடைய இயற்கையும் செயற்கையுமாகிய வாழ்க்கையையே இத் திருகாரணப் புராணம் என்னும் காப்பியம் விவரிக்கின்றது. அவர்களுடைய வாழ்க்கையை விவரித்து அந்நூலுக்குத் திருக்காரணப் புராணம் எனப் பெயரிடப் பட்டது என்பது ஒரு பாடலில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

ஆரணப் பொருளி னுட்பத் தறிவெலாம் விளைந்த சிந்தைப்
பூரணப் பொலிவி னின்ற புகழ்அப்துல் காதி றென்னும்
வாரணத் தரசர் போற்றும் வள்ளலால் சரிதை பண்பாற்
காரணப் புராண மென்னா கனதியி னாம மிட்டான்

(கடவுள் வாழ்த்து : 30)

**காப்பிய ஆசிரியர்**

சேகுனாப் புலவர் என்றும் புலவர் நாயகம் என்றும் வழங்கப்படும் செய்கப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் அவர்களால் திருக்காரணப் புராணம் இயற்றப்பட்டது. இது அப்புலவருடைய இரண்டாவது காப்பியமாகும். இப்புலவர் வித்வாநந்த சிரோமணி என அழைக்கப்பட்டார். இவர் தாம் காகிறூரைச் சேர்ந்தவர் என்றும் மணிக்கல் பரீட்சையில் சிறந்தவராகத் திகழ்ந்த மானாப் பிள்ளை

லெப்பை யாலிம் அவர்களின் மரபினர் என்றும் அவர்தம் புதல்வர் கபீபு முகம்மது லெப்பை அவர்களின் புதல்வர் என்றும் தம்மை அறிமுகம் செய்துள்ளார் ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு :

திருமணி கமல வாவி செறிவயல் காகிறானில்
பெருமணிப் பரிச்சை மானா பிள்ளையி லப்பை யாலிம்
அருமணி யெனுங்க பீபு முகம்ம திலெப்பை பாலன்
அருமணிப் பனுவல் செய்தான் ஆதியின் கருணை தன்னால்

(கடவுள் வாழ்த்து : 33)

காயற் பட்டினமே இப்பாடலில் காகிறான் எனச் சுட்டப்பட்டுள்ளது. கெய்ரோ என்பதே அறபு மொழியில் காஹிறா எனப்படுகிறது. இதுவே காகிறான் என மருவி இப்பாடலில் பயன்படுத்தப்பட்டுள்ளது. தமது பெயரைக் குறிப்பிடும் மற்றொரு பாடலில் தமக்குப் பழம் பெரும் இலக்கண நூல்கள் பற்றித் தெரியாது என்றும் தாம் வகுதையான் என்றும் சாகுல் கமீது ஆண்டகையின் அற்புத நிகழ்ச்சிகளை விவரிப்பதால் தமக்கு மிக்க பயன் கிடைப்பதைத் தாம் நாடியிருப்பத னாலேயே இக்காப்பியத்தை இயற்றியதாகவும் இவ்வாறு குறிப் பிட்டுள்ளார்.

அகத்திய மருந்தொல் காப்பிய மியாப்பருங் கலநன் னூலின்
தகைத்திறந் தெரியான் மேன்மை வகுதையான் சாக மீதின்
பகுத்திடுங் கார ணத்தின் பலனனி கிடைப்ப நாடிச்
சகத்திலிப் பனுவல் செய்தான் சைகப்துல் காதி றென்போன்

(கடவுள் வாழ்த்து : 34)

### காப்பிய அமைப்பு

திருக்காரணப் புராணம் மூன்று காண்டங்களாகப் பிரிக்கப்பட் டுள்ளது. அக்காண்டங்கள் இரண்டு விதமாகப் பெயரிடப்பட்டுள்ளன. மூன்று காண்டங்களும் முறையே தலைக்காண்டம், இடைக் காண்டம், கடைக்காண்டம் எனப் பெயரிடப்பட்டுள்ளன. ஆனால் இம்மூன்று காண்டங்களும் காப்பியத்தின் உள்ளடக்கத்தில் முறையே மாணிக்கப்பூர் காண்டம், பரதேய சஞ்சாரக் காண்டம், நாகூர்க் காண்டம், எனப் பெயரிடப்பட்டுள்ளன. தலைக்காண்டம் என்னும் மாணிக்கப்பூர் காண்டத்தில் பதினொரு படலங்களும் 459 திருவிருத் தங்களும், இடைக் காண்டம் என்னும் பரதேய சஞ்சாரக் காண்டத்தில் இருபத்தொன்பது படலங்களும் 1181 திருவிருத்தங்களும் கடைக் காண்டமான நாகூர் காண்டத்தில் பதினாறு படலங்களும் 935 திரு

விருத்தங்களும் இடம் பெற்றுள்ளன. ஆக, திருக்காரணப் புராணத்தி லுள்ள மூன்று காண்டங்களிலும் ஐம்பத்தாறு படலங்களும், காப்பு விருத்தத்தையும் சேர்த்து மொத்தம் 2576 திருவிருத்தங்களும் அமைந் துள்ளமையைக் காணலாம்.

### கடவுள் வாழ்த்து

காப்பியங்களில் இடம்பெற்றுள்ளது போல் கடவுள் வாழ்த்துப் படலம் திருக்காரணப் புராணத்திலும் அமைந்துள்ளது. முதல் ஐந்து பாடல்களும் அல்லாஹ்வை புகழ்வனவாக அமைந்துள்ளன. இவ் வைந்து பாடல்களும் ஒரே வகையான யாப்பில் அமைந்துள்ளன. முகம்மது நபி (சல்) அவர்களைப் போற்றும் அடுத்த இரு பாடல்களும் இரு வேறு யாப்பமைதியைக் கொண்டனவாக உள்ளன. அடுத்துவரும் ஒவ்வொரு பாடலிலும் எல்லா நபிமார்களும், அபூபக்கர் (றலி) அவர் களும், உமர் (றலி) அவர்களும் உதுமான் (றலி) அவர்களும் அசன் (றலி) உசைன் (றலி) அவர்களிருவரும் முறையே புகழப்பட்டுள்ளனர். பதினைந்தாம் பாடலில் நபித் தோழர்களும், அவர்களைக் கண்டோ ரான தாபியீன்களும், நான்கு இமாம்களும் குறிப்பிடப்பட்டுள்ளனர். அடுத்த பாடல் முகியித்தீன் அப்துல் காதிர் (றலி) அவர்களைப் புகழ்வதாக உள்ளது. முகம்மது கௌது என்னும் பெரியார் ஒரு பாடலிலும் (17) அப்துல் காதிர் என்னும் பெரியார் மற்றொரு பாடலி லும் (18) சாகுல் கமீது ஆண்டகை அவர்களின் புதல்வர் செய்கு யூசுபு என்பார் இன்னொரு பாடலிலும் (19) அவர்தம் குமாரர் பாபா பக்றுத்தீன் என்பார் பிரிதொரு பாடலிலும் (20) அவர்தம் புதல்வர் கமீதுல்லாசிகீன் என்பார் வேறொரு பாடலிலும் புகழ்ந்து பாடப் பட்டுள்ளனர். சுல்தான் கபீரி (22) என்பாரையும் சுல்தான் சகீரி (23) என்பாரையும் சுல்தான் அக்கானி (24) என்பாரையும் நூறுத்தீன் காமிலிய்யி (25) என்பாரையும் சுகுறா பீபி (26) என்பாரையும் தனித் தனிப் பாடல்களில் புகழப்பட்டிருப்பதைக் காணலாம். இத்திருக் காரணப் புராணத்துக்கு முன் தோன்றிய இஸ்லாமியத் தமிழ்க் காப் பியங்களில் இத்துணைப்பெரியார்களும் கடவுள் வாழ்த்தில் இடம்பெற வில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### அறபு மூல நூல்

திருக்காரணப் புராணத்தை இயற்றுவதற்கு நாகூர் ஆண்டகை யின் வாழ்க்கை பற்றிய அறபி நூலை இயற்றியவர் அகமது லெப்பை ஆலிம் அவர்கள். அவர் மார்க்க அறிவு மிகுதியாகப் பெற்றவர். அவர் செய்கப்துல் காதிர் புதல்வர். வளம் மிக்க காயல் பட்டணத்தைச் சேர்ந்தவர். இவ்விவரங்கள் ஒரு பாடலில் இவ்வாறு தரப்பட்டுள்ளன,

திணிவளஞ் செறியுங் காயல் செய்கப்துல் காதி ரீன்ற
அணிவளர் மறையின் தீஞ்சொல் அகுமது லெப்பை ஆலிம்
கணிவளர் அறபிற் கோத்த கருத்துரைப் படியு மற்றை
மணிவளர் உரைக டேர்ந்தும் வகையொரு பனுவல் செய்தான்
(கடவுள் வாழ்த்து : 27)

அத்தோடு இக்காப்பியம் இயற்ற வேண்டிய உரையினை வழங்கியவர் கமீது சாகிபு ஆலிம். இவர் முகம்மது கலிபா புதல்வர். செய்கு யூசுபு பேரர். இச்செய்தியும் ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

சீரணி கொண்ட வள்ளல் செய்குயூ சுபுதம் பேரர்
காரண கரத்தின் வண்மை முகம்மது கலிபா தோன்றல்
தாரணி புயக மீது சாகிபு ஆலிம் தந்த
வேரணி யுரையி னோடு மிக்கவி பனுவல் செய்தான்
(கடவுள் வாழ்த்து : 30)

**கொடை நாயகர்**

திருக்காரணப் புராணம் பாடும்படி ஆசிரியரைக் கேட்டுக் கொண்டவர் அகமது சாகிபு என்பவராவார். இவர் அபூபக்கர் சித்தீக் என்பவரின் புதல்வர். நாகை என வழங்கும் நாகூரைச் சேர்ந்தவர். இவ்விவரமும் ஒரு பாடலில் இவ்வாறு தரப்பட்டுள்ளது.

புவிமுத்தி நாகை வாழ்வோன் போற்றுவார் கருணை யெய்த
தபமிக்க சாக மீதின் தகுதிசேர் கார ணத்தின்
அபூபக்கர் சித்தீ கீன்ற அகுமது சாகி பன்பாற்
கவிமுத்தஞ் சொரிய வேண்டு மெனக்கருத் தியற்றி னானே.
(கடவுள் வாழ்த்து : 31)

அவ்வாறு கேட்டுக் கொண்டதுமல்லாமல் அகமது சாகிபு என்பவர் பொன்னும் பொருளும் ஈந்தார். அவருடைய பொருள் வளம் மேலும் மேலும் பெருக வேண்டும் என்று ஆசிரியர் அக்கொடை நாயகரை இவ்வாறு வாழ்த்தி உள்ளார்:

நவமுறு நாகை வாழு நாயகர் சரிதைக் கன்பின்
அவமறு நிதிய மீந்த அகுமது சாகி புள்ளங்
கவரற வுற்ற பேற்றின் காவலர் துணைவ ரோடு
தவமுறச் செல்வ மேன்மை தழைத்திட வாழி வாழி
(கடவுள் வாழ்த்து : 39)

கொடை நாயகரின் பெயரும் ஊரின் பெயரும் தகப்பனின் பெயரும் பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

சகமதி யபூபக்கர் சித்தீ கீன்றருள்
அகுமது சாகிபி னகக்கு ளிர்ச்சியின்
மிகமலர் கனிசொரி வியன்கொள் சோலைவாய்
அகமதிப் பொடுகளித் தாடு மஞ்ஞையே
(நாட்டுப் படலம் : 25)

நசைதரு முலகம் அபூபக்கர் சித்தீ கீன்றநன் மதலை யெந்நாளு
மிசையகு மதுசா கிபுமனப் பொலிவி னெதிர்படு மலையினை யடுத்தார்
(குருவியற் படலம் : 34)

தவமுய லகத்தின் வள்ளல் சந்திர வுதய மென்ன
அபூபக்கர் சித்தீக் கீன்ற அகுமது சாகி புள்ளம்
(கச்சிற்குப் போந்தபடலம் : 46)

சீரிய லபூபக்கர் சித்தீக் கினிதளித்த
பேரின்உயர் அகுமது சாபெட்பி னெழு கீர்த்தி
(சின்னையீடழித்த படலம் : 41)

இருவர் பெயரையும் குறிப்பிடும் கடைசிப் பாடலில் கொடை நாயகரும் தகப்பனாரும் உறவினர்களும் மரபினர்களும் வாழி வாழி என வாழ்த்தப்பட்டுள்ளனர். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

திகழ்மதி யபுபக்கர் சித்தீக் கீன்றருள்
அகுமது சாகிபு மரிய மக்களு
மிகைவளர் மரபினர் விழைச கோதரர்
அகமகிழ் செல்வமு மனைத்தும் வாழியே
(உபாத்துப் படலம் : 114)

சாகுல் கமீது ஆண்டவர் பாலகராய் இருக்கும்பொழுது வளர்ந்த முறையைப் பற்றியும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். கொடை நாயகரின் உள்ளத்தேனென மிளிரும் வள்ளல் சிறப்பொடு வளர்ந்தார் என்று விவரித்துள்ளார். அப்பாடல் வருமாறு :

வானமா மதியம் போலும் வண்மையும் புகழே போலும்
மானமர் செல்வம் போலும் மதிபடு மறிவே போலும்
தானவன் கருணை யாலே அகமது சாகி புள்ளத்
தேனென மிளிரும் வள்ளல் சிறப்பொடு வளர்ந்தா ரன்றே
(நாயகர் தோற்றிய படலம் : 65)

புகழ்ந்து போற்றப்பட்ட தவசீலன் கொடை நாயகர் என்பது இவ்வாறு ஒரு பாடலில் இடம்பெற்றுள்ளது.

............நன்றி
தகுமுறை கொண்ட சீலன் தவமெனப் புகழ்ந்து போற்ற
அகுமது சாகி புக்கு மருமையங் கருணை செய்வார்
(லாகூர் புக்க படலம் : 33)

தன்னை அடைந்த பேர்களின் வறுமையை நீக்கிவிடும் நற் சிறப்பை உடையவர் கொடைநாயகர் என்பதும் அவருடைய பெயருக்கு அடையாக துரை எனப் பயன்படுத்தி இருப்பதும் பின்வரும் பாடலில் அமைந்திருப்பதைக் காணலாம்.

சேர்ந்த பேர்களின் வறுமைக டீர்த்துநற் சிறப்பின்
நேர்ந்தி டுந்துரை யகுமது சாகிபி னிதிபோல்
(மிசுவாக்குத் தளிர்ப்பித்த படலம் : 22)

கொடை நாயகர் அகுமது சாகிபு அவர்களின் வள்ளண்மை போன்று சாகுல் கமீது ஆண்டகையின் பேரும் புகழும் பரவின. அவர்களை வேண்டிய பொழுதே வேண்டியவற்றை அளிக்க வல்லவர் என்றும் தொனிக்க இவ்வாறு ஒரு பாடல் அமைந்துள்ளது :

சொன்னவை கேளார் கையாற் சுட்டியு முரையார் வேதந்
துன்னிய நயினார் பாதந் தொழுதனர் தொழுத போதே
அன்னவர் கருணை கொண்ட அகுமது சாகி பென்னும்
மன்னவன் கீர்த்தி யெங்கும் வழங்கல்போல் வழங்கா நின்றார்
(புத்துக்கள் வசனித்த படலம் : 29)

கொடை நாயகர் செவ்வியல் குணத்தின் வள்ளல் என்பதும் எவரும் போற்ற எல்லோரையும் திருப்திப்படுத்தி வாழ்ந்தார் என்பதும் ஒரு பாடலில் இவ்வாறு பாடப்பட்டுள்ளது.

தம்மைமிக் குவந்தார் என்னத் தருக்கொடு விழாவி னோடு
கொம்மை யினவர்க ளுற்றார் செவ்வியல் குணத்தின் வள்ளல்
அம்மையின் எவரும் போற்ற அகுமது சாகி பன்பின்
செம்மையங் கருத்தின் வாய்ந்த திருநகர் சிறப்பி னுற்றார்,
(புத்துக்கள் வசனித்த படலம் : 93)

நாகையின் சிறப்பு வளர்ந்தோங்குவதைக் குறிப்பிட வந்த ஆசிரியர் அவ்வளர்ச்சி அகமது சாகிபு என்னும் கொடை நாயகரின் புகழ் ஓங்குவதை ஒத்திருந்தது எனக் குறிப்பிட்டுள்ளார். அவர் கிருபை மேவியவர். மகிழ்ச்சி மிக்கவர். ஆநந்தப் பெருக்குடையவர் செல்வம் தழைத்தோங்கும் செம்மலவர். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

மிகைவளர் நாயகர் கிருபை மேவிய
அகமது சாகிபு மகிழுமா நந்தஞ்
சகமுயர் செல்வமே தழைத்த லாமென
நகைவளர் சோபன நாகை மல் குமால்

(மணம்புரிப் படலம் : 83)

**இயற்கை வருணனை**

மேலை நாகூரை விவரிக்க முற்பட்டார் காப்பிய ஆசிரியர். முதலில் மேலை நாகூர் எங்குள்ளது எவ்வாறு அமைந்துள்ளது என்பன பற்றி விளக்கி உள்ளார். பொதிகை மலையிற் றோன்றிப் பாயும் தாமிரபர்ணி என்னும் பொருநை நதியை அளவிச் செல்கின்றது. வழியில் மணிகளைச் சிந்துகிறது. வைகை நதியை வெருவும்படி தாக்குகின்றது. இருமருங்கிலும் பற்பல பூஞ்சோலைகளைக் கொண் டுள்ளது. காவிரி ஆற்றங்கரையில் உள்ள காடுகள் ஊடாகச் செல் கிறது. அவ்வாறு செல்லும் நீர் வளப்பகுதியிலே மேலை நாகூர் அமைந்துள்ளது. இதனையே ஆசிரியர் இவ்வாறு பாடிஉள்ளார்.

பொன்னெடுங் குன்றிற் றோன்றிப் பொருனை யோடளவி ஞாங்கர்
மின்னிவர் மணிகள் சிந்தி வையையை வெருவத் தாக்கி
பன்னெடும் பொழில்கள் சூழ்ந்து காவிரிப் பழுவம் போந்து
மன்னுநீர் வளத்தின் மேனா கூரென வாய்ந்த தொன்றே

(மேலைநாகூர் புக்க படலம் : 1)

அத்தகைய நகருக்கு அணியப்பட்ட ஆடை போல் விளங்குகிறது மருதவாவி. அவ்வாவியிலே மணிகள் திகழ்கின்றன. அவை இளங் கதிர்களை உடைய சூரியனைப் போன்று விளங்குகின்றன. சிவப்பு நிறமுடைய தேனைச் சிந்திக் கொண்டிருக்கின்றன வாவியில் உள்ள தாமரைப் பூக்கள். அத்தாமரைப் பூக்களிலே பொன்னிறமான அன்னங்கள் அமர்ந்து விளங்குகின்றன. அங்கே சங்குகள் இனிமை யான தேனை உண்டு வண்டுகள் இசை எழுப்பிக் கொண்டிருக்கின் றன. இத்தகைய இனிய ஓசைகள் எதிரொலித்துக் கொண்டிருக் கின்றன அந்த வாவியில். இக்கருத்துக்கலையே ஆசிரியர் இவ்வாறு ஒரு பாடலில் அமைத்துப் பாடிஉள்ளார் :

கதிரிளம் பருதி என்ன கனமணி யிலங்கச் செந்தேன்
பிதிர்தரு நளினந் தோறும் பொன்மையிற் பிறங்கு மன்னம்
இதமுறப் பணிலம் ஆர்ப்ப இன்னறா வளிகள் ஆர்ப்ப
அதிர்தரு மருத வாவி ஆடையி னுடுத்த தன்றே.

(மேலைநாகூர் புக்க படலம் : 2)

மற்றொரு வருணனையை எடுத்துக் கொள்வோம். காடுகள் சூழ்ந்த இடம். காட்டு மரங்களில் பூங்கொப்புக்கள் மிகுந்திருந்தன. சில பூங்கொப்புக்களில் பூக்கள் தேனை உதிர்த்துக் கொண்டிருந்தன. வேறு சில பூங்கொத்துக்களில் கனிகள் விழுந்த வண்ணமிருந்தன. இந்த இனிமையொடு அங்குக் குளிர்ச்சியும் நிலவியது. அந்தக் குளிர்ச்சியான சூழலிலே தென்றலும் கலந்து வீசிக் கொண்டிருந்தது. உயர்ந்த மரங்கள் நீண்ட கொப்புகளுடன் அங்கு இருந்தன. அதன் காரணமாக அங்கு எப்பொழுதும் நிழல் பரப்பிக் கொண்டிருந்தது அந்தச் சூழல். அந்த நிழலின் கீழே மானும் பறவைகளும் மகிழ்ந்தன வாய் உலாவிக் கொண்டிருந்தன. இக்கருத்துக்களை அமைத்து ஒரு பாடலை ஆசிரியர் இவ்வாறு அமைத்துள்ளார் :

தேனொடு கனிகளுஞ் சிந்தும் பூந்துணர்
கானொடு குளிர்ச்சியும் கலக்குந் தென்றலும்
வானொடு படர்சினை மன்னு நீழலின்
மானொடு பறவையு மகிழ்ந்து லாவுமால்

(புட்கள் மீட்டிய படலம் : 3)

நாகூர் ஆண்டகை மகல்ல தீவுக்குச் சென்றார். அந்த மகல்ல தீவு இந்து சமுத்திரத்திலே அமைந்துள்ளது. அங்குச் சோலை களிருந்தன. வளங்கள் அனைத்தும் சிறந்து விளங்கும் சோலைகளாக இருந்தன. வாவிகள் நிறைந்து சோலைகளைச் சூழ்ந்து இருந்தன. அந்த வாவிகளிலே தாமரை மலர்கள் மிகுதியாக இருந்தன. அம்மலர் களிலே சிறிய இள அன்னங்கள் வீற்றிருந்தன. அந்த வாவிகளைச் சூழ கமுகு மரங்கள் இருந்தன. அவை மிக உயர்ந்தனவாய்க் காட்சி அளித்தன. நறுமணங் கமழும் பூக்களை அவை கொண்டிருந்தன. மிகுந்த குலைகளையும் கொண்டிருந்தன. வாவியிலே வாழ்ந்த வாளைகள் அக்குலைகளிலே தாவின. அந்தப் பூக்களிலே இருந்த நறுந்தேனை மாந்தி வாளைகளுக்கு வெறி ஏற்பட்டது. அதன் பயனாக அவை மேகத்திலே புகுத்து விட்டன. பின்னர் மேகம் மழை யாகப் பொழியும்பொழுது அவ்வாளைகளும் மீண்டும் வாவியில் விழுந்தன. வாவியிலே உள்ள தாமரை மலர்களிலே வீற்றிருந்த சிறிய இளம் அன்னங்கள் மீது விழுந்தன. இவ்வாறு மகல்ல தீவின் இயற்கை வருணனையை ஆசிரியர் ஏழு பாடலில் வருணித்துள்ளார்.

நறுவிய வாசப் பூக நனிகுலை யதனிற் றாவி
வெறியொடு மேகம் புக்கிப் புனலொடு மீண்டு வாளை
சிறுவிள வோதி மத்தின் திருமலர்த் துயிலும் வாவி
செறிவள மிகுத்த சோலை மகல்ல தீவென் பதன்றே

(சின்னையீடழித்த படலம் : 1)

இலங்கையிலுள்ள ஆதவலையைத் தரிசிக்கச் சென்றார் நாகை ஆண்டவர் அவர்கள். மஹல்ல தீவிலிருந்து அவர்கள் இலங்கையில் தென் பகுதியில் உள்ள காலித் துறைமுகத்தை அடைந்தார்கள் இந்தத் துறைமுகத்தை

மாற்றருஞ் சிறப்பின் காலி மாநகர் வழிகரை யுற்றனர்
(பாவா ஆதம் மலையைத் தெரிசித்த படலம்; 9)

என்றும் காலியில் கடைத் தெருக்களில் பல்வகைப் பண்டங்கள் இருந்தன என்பதை

பல்வகைப் பண்டக் கடைத்தெரு கடற்போல்
பயிலொலி காலி மாநகர்...
(பாவா ஆதம் மலையைத் தெரிசித்த படலம் : 9)

என்றும் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம், இலங்கையைப் பற்றிக் குறிப்பிடுகையில்,

அலங்கலி னடவி நதிபல வாவி யடர்தரு நிலங்களும் படர்ந்த
இலங்கையு மற்ற நகர்பொழி னீங்கி யெழுங்கடற் கடவையும்
கடந்து
(பாவா ஆதம் மலையைத் தெரிசித்த படலம் : 25)

என்றும் விபரித்துள்ளார்.

**உவமையும் உருவகமும்**

இயற்கை வருணனைகள் நயம் மிக்கனவாய் அமைய உவமைகளும் உருவகங்களும் மெருகூட்டுகின்றன. எனவே எந்தக் காப்பியத்திலும் உவமைகளும் உருவகங்களும் நிறைய இடம்பெற்றிருப்பதைக் காணலாம். வாடிய பயிர்க்கு மழை பெய்தல் இன்றியமையாதது. அவ்வாறு மழை பெய்தால் அவ்வாறு வாடிய பயிர்கள் தழைத்து வளர்ந்து ஓங்கும். பயனுடைய பெரியார்கள் மக்களிடையே தோன்றுவதை வாடிய பயிர்க்கு இன்றியமையா மழையாகும் எனப் புலவர் வருணிப்பது இலக்கிய மரபு. திருக்காரணப் புராண்க் காப்பிய நாயகரான சாகுல் கமீது ஆண்டகை அவர்களை இவ்வுவமை கொண்டு வருணித்துள்ளார் ஆசிரியர்.

வாடிய பயிர்க்கொரு மழையின் வள்ளலும்
(தோன்றல் கண்ணுற்ற படலம் : 59)

இதே கருத்தை வேறு சொற்களில் மற்றொரு பாடலில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளாக புலவர் நாயகம்.

கான்படு தளிரெலாம் கரிந்தி டாதெழும்
வான்படு புயலென வளங்கொள் வள்ளலும்

(தோன்றல் கண்ணுற்ற படலம் : 64)

உமறுப் புலவரும் இதே கருத்தைத் தமது சீறாப் புராணத்தில் பயன்படுத்தி உள்ளார். இஸ்லாத்தை உலகில் பரப்ப முகமது நபி (சல்) அவர்கள் பிறந்தார்கள் என்பதை வருணிக்க முற்பட்ட உமறுப் புலவா தீன் என அழைக்கப்பட்ட இஸ்லாம் என்னும் பயிர்க்கு செழிப் பையூட்டும் மழையாகப் பிறந்தார்கள் என்பதை இவ்வாறு பாடி இருத்தலையும் ஈண்டு நோக்கற்பாலது.

தீனெனும் பயிர்க்கோர் செழுமழை யெனவாய்க்
குறைஷியிற் றிலதமே யெனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முகம்மது நபிபிறந் தனரே.

(நபியவதாரப் படலம் : 92)

ஒரு பாடலிவ் வெள்ளம் வள்ளியோர்க்கு உருவகிக்கப்பட்டுள்ளது. கொடை வள்ளல்கள் வாரி வழங்குவது போன்று நீர்ப்பெருக்கும் பல்வேறு பொருட்களை அலைவில்லாமல் மக்கள் பெறுவதற்கு வழி வகை செய்கிறது என்று ஒரு பாடலில் உருவகம் கையாளப்பட்டுள்ளது. வெள்ளம் புரண்டோடும்பொழுது மலையிலே உள்ள மணிகளையும், பொன் போன்ற உலோகங்களையும், மதம் பிடித்த யானைகளின் தந்தங்களையும், மயில்ப் பீலிகளையும், விலைமதிக்க முடியாத கஸ்தூரி யையும், அம்பரையும் மற்றும் விளைபொருட்களையும் இரு கரை களிலும் அலைகளால் வீசி மக்கள் அலைச்சல் இன்றி எடுத்துக்கொள்ள வழிவகை செய்கின்ற வெள்ளம் வள்ளியருக்கு உருவகிக்கப்பட்டுள்ளது. இக்கருத்துக்கள் ஒரு பாடலில் இவ்வாறு இடம்பெற்றுள்ளன.

மலைபடு மணியுந் தாது மதகரிக் கோடும் பீலி
விலைபடு நரந்த மம்பர் விளைதிர வியமற் றெல்லா
நிலைபடத் திரையின் வீசி நிரைபடக் கொழித்தி யாரும்
அலைபடா தெடுப்ப நல்கும் வள்ளியோர் போன்ற தன்றே.

(பசாசுகளழிவு கண்ட படலம் : 45)

கரும்புத் தண்டுகள் ஆலையில் இடப்படுகின்றன. ஆலையின் பொறியிலே அகப்பட்டு திரிக்கப்படுகின்றன. சொல்லொனாத் துன்பத் துக்கு ஆளாக்கப்படுகின்றன. ஆனால் அவை தருவது என்ன? அருமையான இனிமையான சுவையை நல்கும் பொருள்களே அவற்றி லிருந்து பெறப்படுகின்றன. அத்தகைய இனிய சுவையை மீறிய கருணையை உடையவர்களாக இருந்தார்கள் நாகை ஆண்டகை அவர்கள். இக்கருத்துக்களை அமைத்து சாகுல் கமீது ஆண்டகையை கருப்புக்கு உருவகித்துள்ளார்கள் காப்பிய ஆசிரியர் சேகுனாப் புலவர் அவர்கள்.

ஆலையிற் றிரித்திட்டாலும்
அருஞ்சுவை தனையே நல்கும்
ஏலுநற் கன்ன லென்ன
மீறிய கருணை வள்ளல்
கோலிய வருளி னிற்ப
நெடியவன் கோன்மை யோங்கப்
பாலியற் றண்ட நீதம்
பகுதிபோ னடந்த தன்றே

(மேலைநாகூர் புக்க படலம் : 57)

**பெண்கள் வருணனை**

பெண்கள் கனி போன்றவர்கள் என ஒரு பாடலில் உருவகித்துள்ளார் ஆசிரியர். அப்பெண்களின் நடையை அன்னத்தின் நடைக்கும் அவர்களின் இனிய மொழியை குயிலின் இனிய குரலுக்கும் அப்பெண்களின் சாயலை மயிலின் சாயலுக்கும் அவர்களுடைய விரல்கள் பவளத்துக்கும் அவர்களுடைய அழகு மணியின் பிரகாசத்துக்கும் மலர்கள் அணியப்பட்ட அவர்களின் குழல்கள் முகிலுக்கும் அவர்களுடைய முலைகள் பெரு மலைகளுக்கும் உருவகிக்கப்பட்டுள்ளன. இக் கருத்துக்களையே ஒரு பாடலில் செய்குனாப் புலவர் இவ்வாறு அமைத்துள்ளார் :

திருநடை யன்ன மன்னார் தேமொழி குயிலி னன்னார்
உருவக மயிலி னன்னார் ஒளிர்விரற் பவள மன்னார்
மருவெழின் மணியி னன்னார் மலர்க்குழன் முகிலி னன்னார்
பெருமுலை மலையி னன்னார் பெண்ணெனுங் கனியன் னாரே

(மணம்புரிப் படலம் : 129)

பெண்களும் பல இடங்களில் பாடப்பட்டுள்ளனர். மணம்புரி படலத்தில் (129 - 149 வரை) உள்ள பாடல்களில் பெண்களைப் பல நயங்களுடன் வருணிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். செய்கு யூசுபின் திருமண ஊர்வலத்தைக் காண வந்த பெண்கள் அதன் பின்னர் வருணிக்கப்பட்டுள்ளனர். தமிழ் இலக்கிய மரபுக்கியைய அப்பெண்கள் வருணிக்கப்பட்டுள்ளனர். பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என ஏழு பருவங்களையும் சார்ந்த பெண்கள் அவ்வூர்வலத்தைக் கண்டுகளிக்க அங்கு வந்திருந்தனர் என்று ஆசிரியர் வருணித்துள்ளார். மணம்புரி படலத்தில் இடம்பெற்றுள்ள 150 முதல் 179 வரை உள்ள பாடல்களில் இவ்வேழுவகைப் பருவத்தையுஞ் சார்ந்த பெண்கள் வருணிக்கப் பட்டுள்ளதைக்

காணலாம். ஒரு பாடலில் ஒரு பருவத்தைச் சார்ந்த பெண்களைப் பாடுவதோடு நின்றுவிடாது ஆசிரியர் அடுத்தடுத்த பாடல்களில் அவர்தம் இயல்புகளையும் பாடிஉள்ளார்.

காப்பியம் ஒன்றுக்கு இன்றியமையாத ஒர் இயல் அக்காப்பியத்தில் பெண் ஒருத்தியின் கேசாதிபாத வருணனையாகும். சேகுனப் புலவரும் அத்தகைய ஒரு வருணனையைத் திருக்காரணப் புராணத்தில் இடம்பெறச் செய்துள்ளார். முரீது பெறு படலத்தில் இவ்வருணனை இடம்பெற்றிருப்பதைக் காணலாம்.

குழல்

மாசி லெழிலின் சுருளளியோ மடவார் மலர்சேர்
நெடுங்குழ லே (36)

நுதல்

மின்போற் றிலகச் செழுமகத்தி விரிவாய்
மலரோ வெனுநுதலார் (37)

புருவம்

...... கருவேம்போ செப்பா துவமப் புருவத்தார் (37)

விழி

இழைநூ லிருத நெடுமாலோ விரையாக்
கடலோ வெனும் விழியார் (38)

கன்னம்

வடிவிற் பொலியும் கபோலத்தார் (39)

காது

ஒளிர்கத் திரியின் எழிற்குழையார் (39)

மூக்கு

சண்பகமோ குமிழி னலரோ வெனுமூக்கார் (40)

இதழ்

வீழிக்கனியோ வெனும் இதழார் (40)

பற்கள்

மன்றல ணியார் புன்னகையை வழுத்த லெம்மாற்
தகுதி கொலோ (41)

மொழி

உரையா யுரைக்கும் இசைக்குழலோ ஒன்றும்
ஒவ்வா நன்மொ ழியார் (42)

முகம்

மருவா ரிசமம் மதியினுக்கு வருந்தும் வருந்தாமதி முகத்தார் (43)

கழுத்து

பானற்கதிரின் பணில மெனப்
பல்பூணிமைக்குங் சுந்தரத்தார் (44)

தோள்

மானக் கதிர்முத் துகுக்கும்வெதிர் மானும்பசிய
தோளிணையார் (44)

முன்கை

அலகில் வளையா ரியாழென்ன அழகே பதிந்த
முன்கையினர் (45)

கை

இலகுமுடலிற் சினந்தறையின் எழில்பூ வென்னக்
குளிர்கரத்தார் (45)

நகம்

குலவுங் காந்த ளெனும் விரலிற் கிளிவா
யென்னும் கூருகிரார் (45)

முலை

இணங்கும்' கழங்கோ பம்பரமோ இயைநீர்க் குமிழி
எனுந் தனத்தார் (46)

பிடித்தொத்தடிப்பப் படுத்தியிணை தானுயிருந்த
பெருமுலையார் (47)

மயிரொழுக்கு

... ஆடவர்தம் பீடாராவி யிடம்புகுதுஞ் சலாகைப்
பெயர் கொண் மயிரொழுக்கே (48)

வயிறு

வாமத்தகுதி யாலிலையோ வயிறேகலையின் மறைந்ததுவே (49)

இடை

எண்ணிற்கதறாக் கைத்துடியோ வெளியோ
வென்னுஞ் சிற்றிடையார் (50)

துடை

குழகேயோங்கு மணித்துடைகள் (51)

முழந்தாள்

அழநீ ரலவ னையுஞ்சினந்து வனத்திற்
புகுத்து முழந்தாளார் (51)

**கணைக்கால்**

எழுநேர் வராலின் மணித்தூணி
எனவே திரண்ட கணைக்காலார் (51)

**காற்கரண்டை**

கதிரார் மணிகள் பலநிறுக்குங் கனகத் தராசே
யெனும்ப பரடார் (52)

**குதி**

முதிரா மடவா ரம்மானை முயலுங் கழங்கே
யெனுங்கு தியார் (52)

**தாள்**

பிதிராக் காம நூலெழுதும் பெரும்புத் தகம்போல்
புறந்தாளாள் (52)

**கால்விரல்**

அதிராக் கடலின் செழும்பவளக் கொடியே
யனைய சிறுவி ரலார் (52)

**அடி**

...... செம்பஞ்சின் வாசம் பொருத விள வடியார் (53)

**சாயல்**

மயிலாம் என்னும் சாயலினர் (53)

இங்கே செய்குனுப் புலவர் அவர்கள் பெண்ணின் இருபத்தொன்பது அவயவ உறுப்புக்களைக் கேசாதிபாதி வருணனையில் பயன்படுத்தி உள்ளார். இவ்வாறு வருணிக்கும்போது பல உவமைகளை மேற்கொண்டுள்ளார்.

**தற்குறிப்பேற்றவணி**

சூரிய அஸ்தமனத்தில் தற்குறிப்பேற்றவணியை அமைத்துள்ளார் புலவர். நிரந்தரமாக உள்ள அல்லாஹ்வின் திருக்கருணையைப் பெற்றவர் நாகூர் ஆண்டகை அவர்கள். பெரும் புகழ் படைத்தவர். எல்லா இடங்களிலும் புகழப் பெற்றவர். அவர் குற்றமற்றவர். அவருடைய அழகு தனிச்சிறப்புடையது. அத்தகைய பெரியாரின் அழகின் முன்நிற்பது பழுதாகும். இவ்வாறு நினைத்த சூரியன் மறைந்து ஒளித்துப் போயினன். மேற்குத் திசையிலே மறைந்து விட்டான். சூரியன் மேற்கில் மறைவது ஓர் இயற்கையான நிகழ்ச்சி. அந்நிகழ்ச்சிக்கு ஒரு செயற்கையான சம்பவம் ஒன்றைக் கூறுவது தற்குறிப்பேற்றவணியாகும். நாகூர் ஆண்டகையின் அழகின் முன் நிற்பது பழுதெனச் சூரியன் மறைந்தான் எனக் கூறப்பட்டுள்ளது. இக்கருத்துக்களை இவ்வாறு ஒரு பாடலில் அமைத்துள்ளார் ஆசிரியர்.

பரந்த பாரிடை யெழுந்துவான் படர்ந்த வெண்புகழின்
நிரந்தரன் திருக்கரு ணையினி மலர்தம் மெழின் முன்
திரந்தரும் படிநிற் பதுபழு தெனத்தி கைத்துக்
கரந்து போயினன் போன்மென மறைந்தனன் கதிரோன்

(பசாசுகள ழிவுண்ட படலம் : 5)

உலகம் முழுவதையும் வலம் வருதலால் சூரியனின் மேல் தூசு படர்ந்திருக்கும். தூசு படர்ந்த உடலுடன் நாகூர் ஆண்டகையின் திருமுகச் செவ்வியைப் பார்க்கக்கூடாது என்று எண்ணிய சூரியன் தன் உடலைக் கழுவிக் கொண்டு உவப்புடன் மறுநாள் வந்து காண் பதற்காக மேற்குத் திசையிலே உள்ள கடலில் மூழ்கினன் எனத் தற்குறிப்பேற்றவணியை இவ்வாறு ஒரு பாடலில் அமைத்துப்பாடி உள்ளார் காப்பிய ஆசிரியர் புலவர் நாயகம்.

அருவ மெய்ப்பய நெறிபுனை யாண்டகை யலர்ந்த
திருவ மாமுகச் செவ்வியை யினைப்பறச் செறிதூள்
உருவ மாறத்தன் னுடற்குளித் துவப்பொடு காண்பான்
வருவனனையென் றேகலின் மறைந்தன னிரவி

(பசாசுகளழிவு கண்ட படலம் : 6)

மற்றொரு பாடலில் தற்குறிப்பேற்றவணி வேறு விதமாக அமைந் துள்ளது. சூரியன் மறையும்பொழுது தாமரை குவிந்துவிடும். தாமரை மலரிலே மது அருந்திய வண்டுகள் வெளியே வந்துவிடுவதும் உண்டு. இதனையே இங்கு வேறுவிதமாகக் கூற முற்பட்டுள்ளார் காப்பிய ஆசிரியர். சூரியன் உதிக்க மலருவது தாமரை. இயல்பாக எம்மிடம் புகும் சூரியன் எம்மிடம் வருவது பழுதென நினைத்து விட்டான். அதன் காரணமாக எமது நாயகனுகிய சூரியன் மேற்குக் கடலுக்கு ஓடி விட்டான் என்று கூறிய தாமரை வண்டுகளுக்கு ஒரு கட்டளை இடுகிறது. எமது நாயகனைப் போய் அழைத்து இங்கே வாருங்கள் என்று வண்டுகளை மலரிலிருந்து தள்ளிவிட்டது போல் குவிந்தன தாமரை மலர்கள். சூரியன் அடுத்த நாள் உதித்த பிறகே மீண்டும் வண்டுகள் தாமரை மலரிலிருந்து தேன் பருகும் வாய்ப்பைப் பெறும். எனவே தான் தமது நாயகனை சூரியனை அழைத்து வரும் படி வண்டுகளை ஏவிய தாமரைகள் குவிந்தன எனக் கற்பனை நயத்து டன் தற்குறிப்பேற்றவணியை ஆசிரியர் அமைத்துள்ளமை நயக்கத் தக்கது.

பாங்கி னிற்புகு மெம்மிடம் வருவது பழுதெம்
மோங்கு நாயகன் மேற்கட லோடின னுடன்போய்
ஈங்க ழைத்திவண் வம்மின்க ளெனவளி யினத்தை
ஞாங்கர் தள்ளிய போற்குவிந் தனநளி னங்கள்

(பசாசுகளழிவு கண்ட படலம்: 7)

இத்தகைய வருணனைகள் பலவற்றை அணிநயம் சிறப்புற சேகுனப் புலவர் தமது திருக்காரணப் புராணக் காப்பியத்தில் அமைந்துள்ள மையைக் காணலாம்.

## இஸ்லாமியக் கோட்பாடு

இஸ்லாத்தைப் பற்றியும் இஸ்லாத்தில் தோன்றிய பெரியோர் களைப் பற்றியும் பேசுவனவாக அமைந்துள்ளன இஸ்லாமிய அடிப் படையில் தோன்றிய தமிழ் இலக்கியங்கள். இக்கூற்றுக்குச் சிறந்த ஓர் எடுத்துக் காட்டாக அமைந்த காப்பியங்களுள் ஒன்று திருக் காரணப் புராணம். இங்கே ஒரு பாடலில் இஸ்லாத்தின் அடிப்படைக் கோட்பாடுகளுள் ஒன்று ஒரு பாடலில் மிகச் சிறப்பாக அமைக்கப்பட்டி ருப்பதைக் காணலாம். இஸ்லாத்தில் முக்கிய இடத்தை வகிப்பது நம்பிக்கை. அல்லாஹ் மீதும், மலாயிக்கா என்னும் வானவர்கள் மீதும் நபிமார் என்னும் தீர்க்கதரிசிகள் மீதும் இறுதிநாள் மீதும் நன்மை தீமைகள் அல்லாஹ் பக்கல் நின்றும் உள்ளவை என்பதன் மீதும் விசுவாசம் கொள்வது முதன்மையானதாகும். இதனையே அறபு மொழியில்

ஆமந்து பில்லாஹி வமலாஇகதிஹி வகுத்துபிஹி
வறுஸுலிஹி வல்யவ்மில் ஆஹிரி
வல்கத்றி ஹைறிஹீ வஷற்றிஹி மினல்
லாஹி தஆலா

என உச்சரிப்பர், இதனைத் தமிழில் மொழி பெயர்த்து சேகுனப்புலவர் தமது திருக்காரணப் புராணத்தில் ஒரு பாடலாக அமைத்துள்ளார். இவ்வறபு வாக்கியத்தைத் தமிழில் மொழி பெயர்க்கும் பொழுது நபி என்னும் ஒரு அறபுச் சொல்லை மாத்திரமே பாடலில் இடம் பெறச் செய்துள்ளார். இக்கருத்துக்களடங்கிய பாடல் இது தான்.

நாயக னொருவ னுண்டு நனிபுக ழிமையோ ருண்டுந்
தூயநால் வேத முண்டுந் துலக்கிய நபிமா ருண்டும்
ஆயதோர் கால முண்டும் அடர்வினை யிரண்டுண் டென்று
நேயநல் லுறுதி யுள்ளோர் நினைப்பரோ வேறு மாதோ

(மேலை நாகூர் புக்க படலம்: 42)

## அல்குர்ஆன் கருத்து

அல்குர்ஆன் கருத்துக்களும் ஆங்காங்கே திருக்காரணப் புராணத் தில் இடம் பெற்றுள்ளன. ஆகாயம், ஒளிபரப்பும் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மழை, நிலம், கடல், மலை முதலிய அனைத்தையும் படைத்தவன் இறைவனன அல்லாஹ்வே. அவனே அவை அவற் றிற்குரிய நிலை பெயராமல் இயங்கச் செய்யும் ஆற்றல் படைத்தவன்.

அவனல்லால் வேறு நாயன் இல்லை. சிலைகளுக்கு எவ்வித சக்தியும் இல்லை. இத்தகைய கருத்துக்களை அமைத்து இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

வானமும் கதிரும் சோதி மதியமு முடுவுங் காரு
மானிலம் கடலும் வெற்பு மற்றுள படைப்புந் தத்தங்
கோனிலை பெயரா தாகக் கொண்டவ ஞெருவ னல்லால்
தானிலை யெடா தவன்கல் லுருவினந் தகைய தன்றுல்

(புத்துக்கள் வசனித்த படலம்: 66)

**பொதுக்கூற்று**

எல்லோராலும் போற்றப்படுவர் யாவர் என்பதற்கு வரைவிலக்கணம் வகுத்துள்ளார் ஆசிரியர் தமது காப்பியமான திருக்காரணப் புராணத்தில், அல்லாஹ்வைத் தொழுதல் வேண்டும். அவன் கட்டளைக்கிணங்க விரதம் அனுட்டிக்க வேண்டும். அவனை எப்பொழுதும் புகழ்ந்து துதிக்க வேண்டும். நற்குணத்தை உடையவராய் ஒழுகுதல் வேண்டும். நல்லறிவும் நல்லுணர்வும் இருத்தல் வேண்டும். அவனிடத்திலே தான் நாம் அழுது எமது வேண்டு கோளைக் கேட்க வேண்டும். அவன் நாட்டப்படியே எல்லாம் நடைபெறும் என்ற திடமான நம்பிக்கை இருத்தல் வேண்டும். இங்ஙனம் மாதவத்தில் ஈடுபடுவோரை உலகு என்றென்றும் போற்றும். இக் கருத்துக்களையே சேகுனாப் புலவர் தமது காப்பியத்தில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

தொழுகையும் விரதமுந் துதியு நற்குணத்
தொழுகையு நல்லறி வுணர்வு நாதன்பால்
அழுகையு நாட்டமு மணைந்து மாதவத்
தொழுகையுங் கொண்டுல கெவரும் போற்றுவர்

(மதுபான் தண்டனைப் படலம்: 4)

**பொறையுடைமை**

பொறுமையின் சிறப்பு ஒரு பாடலில் போற்றப்பட்டுள்ளது. இகழ்ந்தவரையும், வஞ்சித்தோரையும், தீமை புரிந்தவரையும், பாவ நெறியிற் சென்று குற்றம் புரிந்தவரையும், அறிவிற்கப்பாற்பட்ட கிரியைகளில் ஈடுபட்டோரையும் நல்லறிவு புகட்டி நல்லொழுக்கம் உடையவராகச் செய்யும் பணி போற்றற்குரிய பெரும் பணியாகும். அங்ஙனம் அவர்களுக்கு நல்வழி காட்டுமாறு எல்லாம் வல்ல இறைவனை அல்லாஹ்வை இரந்து கேட்பர். இறைவன் நல்லருள் பாலிக்கவே அவனைப் புகழ்வர். அத்தகையோர் மேலோராவர். அத்தகையோருடைய பொறையுடைமையும் பெரிதும் பாராட்டப்பட வேண்டியதொன்

ருகும். அத்தகைய பொறையுடைமையின் சிறப்பை இத்தகையது என்று அளவிட்டுக் கூறமுடியாது. இவ்வாறு ஒரு பாடலில் பொறை நலங் கூறப்பட்டுள்ளது.

இகழ்ந்தவ ரேனும் வஞ்சித் திகலின ரேனும் தீமை
நிகழ்ந்தவ ரேனும் பாவ நெறியின ரேனும் குற்றம்
அகழ்ந்தவர்க் கறிவு தோன்ற ஆதியை இரந்து கேட்டுப்
புகழ்ந்தவர் மேலோர் என்றால் பொறைநலம் பகர்தற் பாலோ

(உபாத்துப் படலம்: 50)

அத்துடன் உபாத்துப் படலத்தில் நன்றியின் திறமும் (51), தவத்தின் இயல்பும் (52), ஒழுக்கத் திறமும் (53), அறஞ்சாரொழுக்கமும் (54), நன்னெறி இணக்கத்தின் இயல்பும் (55), வல்லோன் விதித்தன வற்றை செய்யும் முறைமையும் (56) விரிவாக விதந்தோதப்பட்டுள்ளன. இக்காப்பிய ஆசிரியர் அறபு அறிஞராகத் திகழ்ந்தமையால் இவற்றையெல்லாம் கூறுவதில் அவர் கை தேர்ந்தவராய் விளங்கினர் எனக் கூறின் அது மிகையாகாது.

**மக்கட்பேற்றின் சிறப்பு**

மக்கட் பேற்றின் மகிமை பற்றியும் ஆசிரியர் கூறத்தவறவில்லை. பொன்னை மிகுதியாகப் பெற்றிருந்தாலும் அதனால் எவ்வித பயனுமில்லை. பொருளைத் தேடிப் பாதுகாத்து வைத்திருந்தாலும் அதனால் எத்தகைய பயனும் ஏற்படுவதில்லை. சொல் வளம் மிக்கவராய்ச் சொல்லாட்சி உடைய வாக்கு வல்லமை பெற்றவராய் இருப்பதிலும் எந்தவிதப் பலனுமில்லை பெரும் புகழை மக்களிடையே தேடிக்கொண்டவராய் இருந்தாலும் அதனால் பெறப்படும் பயன் எதுவுமில்லை. நல்லதிர்ஷ்டமும் நல்ல பலனும் உடையவராய் இருந்தாலும் அதனால் பெறக்கூடிய நன்மை எதுவுமில்லை. சிறந்த அறிவினை உடைய பேரறிஞராயினும் அத்தகைய நிலைமையினாலும் எவ்வித நற்பலனும் கிடைக்கப் போவதில்லை. இவ்வாறு விவரித்த ஆசிரியர் பயனுடைய ஒன்றையும் குறிப்பிட்டுள்ளார். முற்கூறியவை எல்லாம் இருந்தும் நல்ல பலனைத் தருகின்ற புதல்வர் இல்லாவிட்டால் முன் கூறிய எவற்றினாலும் நன்மை வராது என்பதே புலவரின் கொள்கை. இக் கருத்தினையே சேகுனாப்புலவர் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

பொற்பல னுடைய ரேனும் பொருட்பல னுடைய ரேனும்
சொற்பல னுடைய ரேனும் துதிபல முடைய ரேனும்
நற்பல னுடைய ரேனும் நனியறி வுடைய ரேனும்
இற்பல னாகு மைந்தர் இல்லவர் இல்லா ராமே

(லாகூர் புக்கபடலம் 17)

அதே படலத்திலுள்ள மற்ருெரு பாடலிலும் அதே கருத்துக்களை வேறு விதமாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம். செல்வத்தைச் செல்வம் என்று கூறமுடியாது. சீர்மையைச் சீர்மை என்று சொல்ல இயலாது. ஒருவன் பெற்ற கல்வியைக் கல்வி என்று குறிப்பிடுதல் தவருகும். இவ்வாறு அவற்றின் பயனின்மையைக் குறிப்பிட்ட ஆசிரியர் அவை பயனுடைமை ஆவதற்குப் பிள்ளை வரம் வேண்டும் என்று இறைவனைப் பிரார்த்தித்தல் அவசியம் என்று இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

செல்வமுஞ் செல்வ மன்றே
சீர்மையுஞ் சீர்மை யன்றே
கல்வியுங் கல்வி யன்றே
கைகொள்கா தலனி லாதால்
நல்வினைப் பயனு முண்டோ
நாயக ஆதி பாலிற்
பல்வள மக்கள் எற்குப்
பலன்பெற விரத்தல் வேண்டும்

(லாகூர் புக்க படலம்: 24)

இதே கருத்தினை வேறுவிதமாகக் கூறியுள்ளார் பாண்டியன் அறிவுடை நம்பி. நலம் சான்ற மக்களைப் பயவாதார்க்கு உயிர் வாழ் வால் முடிக்கக் கூடிய பொருளே இல்லை என்று பாடிஉள்ளார். மக்களை இல்லார்க்குப் பயன் குறைவாகவே உள்ளது. வாழும் நாளும் இல்லை என்னும் இக்கருத்துக்களைக் கொண்டு பாண்டியன் அறிவுடை நம்பி இவ்வாறு பாடிஉள்ளார்.

படைப்புப்பல படைத்துப் பலரோடுண்ணும்
உடைப் பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசின் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை யில்லோர்க்குப்
பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே.

(புறநானூறு: 188)

**சொல்லாட்சி**

சொற்களைச் சிறந்த முறையில் உரிய இடத்தில் பயன்படுத்து வதில் கைதேர்ந்தவர் சேகுனப் புலவர். எந்தச் சொல் எந்தச் சந்தர்ப் பத்தில் எவ்வாறு அமைக்கப்படல் வேண்டும் என்பதற்குப் புல

எடுத்துக்காட்டுக்களை அவருடைய காப்பியங்களிலிருந்தும் ஏனைய நூல்களிலிருந்தும் சுட்டிக் காட்டலாம். சில சொற்கள் அருமையாகவே பயன்படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாடலிலும் ஏறத்தாழ ஒவ்வொரு புதுச் சொல்லைச் சேகுனப் புலவர் தமது செய்யுட்களில் பயன்படுத்தி இருப்பது அவருடைய நூல்களில் காணக்கூடிய சிறப்பியல்புகளில் ஒன்ருகும். திருக்காரணப் புராணத்தில் வரும் இத்தகைய சொற்களுள் சிலவற்றைப் பார்ப்போம்.

அங்கியம் என்பது அத்தகைய சொற்களுள் ஒன்ருகும். தொடக்கத்தில் அல்லது முதன்முதலாக என்னும் பொருளில் இச்சொல்லைப் புலவர் அருமையாக இவ்வாறு ஒரு பாடலில் உபயோகித்துள்ளார் :

வேதநி றைந்துயர்
போதநி றைந்தெழும்
ஆதியை யங்கியம்
ஓதிவணங் கவே

(கூத்தானுர் புக்க படலம் : 6)

அசும்பு என்ருல் ஊற்று என்கிறது பிங்கலந்தை நிகண்டு. கிணற்றிலே ஊற்று தெளிவாகத் தோன்றியது என்று இவ்வாறு ஆசிரியர் பாடிஉள்ளார்.

...............உள்ளுறும்
சுந்தரத் திரதக் கூவ லசும்புறத் துலங்கிற் றன்றே

(கலிறு அலை கிஸ்ஸலாமைக் கண்ணுற்ற படலம்: 4)

அத்தம் என்னும் சொல் கண்ணடி என்னும் பொருளில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

முத்தொளிர் வச்சிர முதிர்நி லாமணி
எத்தனை யுந்தெளித் தெடுத்த வெண்சுதை
சுத்தமே வானெலாஞ் சுத்திசெய்தெழில்
அத்தமே யெனச்சுவ ரனைத்துங் காட்டுமால்

(சித்திரகூடங் கண்ணுற்ற படலம்: 13)

அயர்தல் என்பது மறத்தல் எனப் பொருள்படும் 'அங்கவடன்றிற மயர்ப்பா யென்றே? (மணிமேகலை : 19:9) வந்துள்ளது மறதி அடைய மாட்டீர் என்னும் பொருளில் காப்பிய ஆசிரியர் 'அயரீர்' என்னும் இச்சொல்லை இவ்வாறு ஒரு பாடலில் பயன்படுத்தி உள்ளார்.

மறையோ தியதண் புனல்மா முகமுன்
னுறைவோர் கரமீ ந்துளவந் நிலமீ
தறைவீர் தெளிப்பீ ரவணப் பொழுதிற்
றுரைபோங் குழிதொட் டிடுவீ ரயரீர்

(வைப்பருளிய படலம்: 12)

அயினி என்பது மற்ருெரு சொல். அயினி என்ருல் உணவு என்பது பொருள். 'நன்னற்கும் அயினி சான்மென' என அயினி என்னும் சொல் உணவு என்னும் பொருளில் மலேபடுகடாமில் வத்துள்ளது (467). சேகுனுப் புலவர் திருக்காரணப் புராணத்தில் அயினி என்ற சொல்லே நீர் என்னும் சொல்லோடு சேர்த்து உபயோகித்துள்ளார். அயினி நீர் என்பது ஆலத்தி நீரைச் சுட்டும். சேகுனுப் புலவர் ஆலத்தி நீர் என்னும் பொருளிலே அயினிநீர் என்பதை ஒருபாடலில் இவ்வாறு அமைத்துப் பாடிஉள்ளார்,

அழகுலா மணியும் பொன்னும் அயினிநீ சுழற்றிவீச

(மணம்புரிப் படலம்: 183)

கம்பரும் தமது இராமாயணத்தில்

போதுட னயினிநீர் சுழற்றிப் போக்கினுர்

(மிதிலேக் காட்சிப் படலம்: 51) (606)

எனப் பாடி இருப்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

இன்பம் என்னும் சொல்லுக்கு கலியாணம் என்னும் ஒரு பொருள் உண்டு. கலியாணப் பருவம் என்பதை சீருப்புராணம் 'இன்பப் பருவம்' (பாத்திமா திருமணப் படலம்: 10) எனக் குறிப்பிடுகின்றது. திருமணத்தைக் குறிக்க இன்பம் என்ற சொல்லே ஆகுபெயராகச் சீவகசிந்தாமணியில்

இம்பரில்லதோ ரின்பமி யற்றினுர்

(விலேமலேயார்இலம்பகம்: 92)

என வந்துள்ளது- திருமணப் பருவம் எய்திய வடிவினே அடைந்த பெண் என்னும் பொருளில்

குணத்தினிற் பரிவின் மேன்மைக் குலத்தினி லொப்பிலாத
வணத்தினிற் பெண்ணென் றின்ப வடிவினிற் றேடி

(மணம் பொருந்து படலம்: 4)

எனத் திருக்காரணப் புராணத்தில் வந்துள்ளது. ஒரு பெண்ணின் செல்வம், உயர்குலம், அழகு, மார்க்கப் பக்தி ஆகியவற்றிற்காக அப்பெண்ணைத் திருமணம் புரியலாம் என்னும் பெருமானாரின் பொன் மொழிக்கு இணங்க அவை நான்கும் இப்பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளமை ஈண்டு நோக்கற்பாலது,

ஏண் என்பது வலிமை. 'ஏணிலான் சேவகமும்' என சிறுபஞ்ச மூலம் (12) வலிமை என்னும் கருத்தில் ஏண் என்னும் சொல்லைப் பயன் படுத்தி உள்ளது. நிலையுடைமை என்னும் பொருளில் சேகுனாப் புலவர்

......வீட்டின்

ஏணிலா ருளமுங் கொண்டு பேரிளம் பெண்கள் வந்தார்

(மணம்புரிப் படலம்: 173)

என ஏண் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்

ஒரு கையை ஒட்டு என்பர். ஒட்டு என்பதையே ஒட்டால் என சேகுனாப் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

ஓடிய வோட்டால்

(புத்துக்கள் வசனித்த படலம்: 6)

பொரிக்கப்பட்ட உணவு வகை பொரியல் எனப்படுவது போல கருக்கப்பட்ட உணவுப் பண்டம் கரியல் என வழங்கப்படுகிறது. இக் கரியல் என்னுய் சுவையான உணவுப் பண்டத்தைச் சேகுனாப் புலவர் திருக்காரணப் புராணத்தில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்

பொரியலுங் கரியலும் சுவைகள் பொங்கிநெய்
சொரியலு மதுரமாத் தொகுத்த மோதகத்
தரியலும் பகர்ந்துபின் விருந்தொ டார்வரால்

(மணம்புரி படலம் : 79)

மற்றோர் இடத்திலும் கரியல் என்னும் இச்சொல் உணவுப் பண்டத்தைக் குறிக்க இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது,

பொரியலும் பல்சுவை புணர்த்து மேன்மையங்
கரியலு மன்னத்தின் வகையுங் காய்கனி
சொரிமது பாகுடன் துணையு ளுக்களும்

(காணிக்கை நிறீஇய படலம் : 19)

கற்கி என்பது குதிரை; ஆசிரியர் குதிரையில் இளைஞர் ஏறினர் என்பதை

காளை மன்னவர் கற்கியி னேறினர்

(மணம்புரிப் படலம் : 105)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

வைராக்கியமான நிலையில் உள்ளமையைக் கறுநிலை என்பர். சேகுனப் புலவரும் கறுநிலை எய்தியவர்களை ஒரு பாடலில் பிறருடன் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

பொய்நிலை மதித்த பேர்க்கும்
புகழ்நிலை மறுத்த பேர்க்கும்
கைநிலை நெகிழ்த்த பேர்க்கும்
கறுநிலை யுற்ற பேர்க்கும்
மெய்நிலை யுறுத்தி நீக்கி
வியப்புறச் செய்த லன்றே

(தோன்றல் கண்ணுற்ற படலம் : 28)

ஐரோப்பியர் பெரும்பாலும் அணியும் உடையைக் கால்சட்டை என்பர். கால்சட்டை என்னும் இச்சொல் ஒரு பாடலில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

வேதனைப்பெறு மென்று வெளிப்படா
தேதமில்லதோர் கால்சட்டை யிட்டனர்

(மணம்புரி படலம் : 91)

கீள் என்பது கூறு என்று பொருள்படும். இங்கே ஆசிரியர் கூறு கூறாகப் பிரிக்கப்பட்ட இடங்களில் என்று கூற இவ்வாறு ஒரு பாடலில் இச்சொல்லை அமைத்துப் பாடியுள்ளார்.

கீளிடை தனினு மிட்ட
கேழ்திரை யிடத்தும் பொற்கால்

(மணம்புரிப் படலம் : 131)

சீவக சிந்தாமணியிலும் கூறு என்னும் பொருளில் கீள் என்னும் சொல் "கீளிறண்டாகக் குத்தி" (மண்மகளிலம்பகம் : 147) (2248) என வந்துள்ளமை காண்க.

சூடாமணி நிகண்டு குசேசயம் என்பதற்கு தாமரை எனப் பொருள் கூறுகின்றது. சேகுனப் புலவர் தாமரையைக் குறிப்பிட குசேசயம் என்னும் சொல்லை ஒரு பாடலில்,

சேவ லோடனஞ் சிந்தை கனிந்திடை
மேவு பார்ப்பு விழிப்படை கொள்ளுவான்
கூவு மின்னிசை யேங்குங் குசேசய
வாவி வள்ளியர் வண்மையை மானுமால்

(திருப்பதிகடெரிசித்த படலம்: 8)

கணவர் என்னும் பொருளில் கொண்கர் என்னும் சொல்லைப் பயன்படுத்துவர். புறப்பொருள் வெண்பாமாலையில் கொண்கன் என்னும் சொல் கணவன் என்னும் பொருளில் ஓர் உதாரண வெண் பாவில் இவ்வாறு அமைந்துள்ளது.

கூடிய கொண்கன் குறுகக் கொடிமார்பின்
சூடிய சாந்தி னணிதொடர்ந்து — வாடிய
தார்க்குவளை கண்டு தரியா விவண்முகத்த
கார்க்குவளை காலுங் கனல்

(பெருந்திணைப் படலம் கண்டு கண் சிவத்தல்: 11)

கணவர் என்னும் பன்மைப் பொருளில் கொண்கர் என்னும் சொல்லை சேகுனப் புலவர் திருக்காரணப் புராணத்தில் இவ்வாறு ஆண்டுள் ளார்.

பூசுவர் சாந்தரும் புதியகொண் கர்மேல்
வீசுவர் தண்பனி நீர்வி ழிக்கமெய்
கூசுவர் மடவியர் திகைப்புக் கொண்டுளம்
பேசுவ ராடவர் பெருகு மன்பினால்

(மணம் புரிப் படலம்: 75)

சானு என்றால் முழந்தாள். இக்காப்பிய ஆசிரியர் இச்சொல்லை இதே கருத்தில்

விரைபடு சானுவால் வெருவி யோடியும்

(சித்திரகூடங் கண்ணுற்ற படலம்: 37)

இங்ஙனம் பயன்படுத்திஉள்ளார்.

ஆண் யானை தந்தி எனப்படும். திருமண வைபவத்துக்காக முரசறைவதற்கு வள்ளுவர் பயன்படுத்தப்பட்டனர். தமிழ்நாட்டில் பண்டைக் காலத்தில் இப்பழக்கம் நிலவி இருந்தது. யானைகள் மீது ஏறி மணமுரசு அறைவதற்கும் வள்ளுவர் பயன்படுத்தப்பட்டனர் எனத் திருக்காரணப் புராணம் குறிப்பிடுகின்றது.

......மும்மதத்
தந்தியின் வள்ளுவர் தருக்கி னேறினார்

(மணம்புரி படலம்: 25)

மற்றோர் இடத்திலும் வள்ளுவர் பறை சாற்றினர் என்பது
தவந்தர முரசினாற் சாற்றி வள்ளுவர்
துவந்தரு தெருவெலாந் துளக்கினார ரோ

(மணம்புரி படலம்: 39)

என வருணிக்கப்பட்டுள்ளது.

தவக்கம் என்பது தடை. நீரோட்டம் தடைபடுவதை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:

தரைபடிந் தும்பெருந் தவக்கங் கொள்ளுமால்
(சித்திர கூடங் கண்ணுற்ற படலம்: 37)

பகைவன் பகைஞன் எனப்படுவான். ஆனல் சேகுனப் புலவர் பகைவரைக் குறிப்பிடப் பகைஞேரர் எனக் குறிப்பிட்டுள்ளார்.

வஞ்ச மிஞ்சிய வன்பகைஞேருயிர்
(மணம்புரிப் படலம்: 96)

பரியாயம் என்பது பிரதிபதம் என்பர். சேகுனப் புலவர் பரியாயம் என்னும் சொல்லை எதிர்மொழி என்னும் பொருளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

பயிற்றிய மொழிகட் கெல்லாம்
எதிர்பரி யாயஞ் செய்து
(மேலைநாகூர் புக்க படலம்: 56)

பருமையைக் குறிக்க பரூஉ என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. புறநானூற்றிலும் இச்சொல் அரிசியின் பருமையைக் குறிப்பிட இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

அடுமகன் முகந்த வளவா வெண்ணெற்
ரெடிமா ணுலக்கைப் பரூஉக்குற் றரிசி
(399:1-2)

சேகுனப் புலவர் பரூஉ என்னும் சொல்லை பெரிய என்னும் பொருளில் பெரிய மலையின் 'யத்தீம்' என்னும் மன்னன் வருகையைக் குறிப்பிட இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்:

மத்த கத்தின் மணிச்சுடர் பட்டமு
மொத்த கொம்பி ஞெளிர்வளை பூண்களும்
பத்தி விட்டொளி பாயும் பரூஉமலை
யத்தி மென்மகு டாதிப ரீண்டினுர்
(மணம்புரிப் படலம்: 113)

பனசம் என்பது பலா. கம்பராமாயணத்தில் பலாவைக் குறிப்பிடப் பனசம் என்னும் சொல் 'பனசம் வாழை' (மாரீசன் வதைப் படலம்: 96) எனப்பயன்படுத்தப்பட்டுள்ளது. பலாவைப் பனசு எனக்

குறிப்பிட்டுள்ளார் சேகுனாப் புலவர். இயற்கை வருணனையின் போது பலாவைப் பனசு என இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

மாவும் பனசும் பலமா தளையும்
பூவுங் கனியும் பொலிவர் ளைகளின்
காவுஞ் செறிநீ ழலுங்கார்க் குயிலுங்
கூவும் பொழில்வாய் புகழ்மீக் கொளவே

(பொன்னளித்த படலம்: 3)

மாடு என்பது பக்கம் என்கின்றது சூடாமணி நிகண்டு.பொதுவாகத் தலைப்பக்கம் என்பதைத் தலைமாடு என்றும் கால் பக்கம் என்பதைக் கால்மாடு என்றும் வழங்கப்படுகின்றன. ஆனால் கால் பக்கத்தைப் பாதத்தின் பக்கம் என்பதாகப் பொருள் கொண்டு அதனைப் பாதமாடு என ஒரு பாடலில் அமைத்துப் பாடியுள்ளார் சேகுனாப்புலவர். அப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

உள்ளக மறைபடா தோங்கு நர்ட்டமுற்
றெள்ளிய செய்குயூ சுபுமுன் னோதிய
வள்ளலி னுரையினை மதித்து மூன்றுநாட்
டள்ளினர் சார்ந்தனர் பாத மார்ட்டினே

(உபாத்துப் படலம்: 105)

இங்கே நாகூர் ஆண்டகை மறைந்து நல்லடக்கஞ் செய்யப்பட்ட பின்னர் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியே குறிப்பிடப்பட்டுள்ளது.

பிரசம் என்னும் சொல்லுக்குப் பல கருத்துக்கள் உண்டு. தேனீ என்னும் பொருளில் பிரசம் என்னும் சொல் நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தில் வரும் திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழியின் ஒன்பதாம் பத்தில் இடம்பெற்றுள்ள 'முந்துற' என்னும் எட்டாம் திருமொழியில் இவ்வாறு இடம்பெற்றுள்ளது.

பிணங்கலில் நெடுவேய் நுதிமுகம் கிழிப்பப்
 பிரசம்வந் திழிதர பெருந்தேன்
மணங்கமழ் சாரல் மாலிருஞ் சோலை
 வணங்குதும் வாமட நெஞ்சே (5)

சேகுனாப் புலவரும் திருக்காரணப் புராணத்தில் பிரசம் என்னும் சொல்லை தேனீ என்னும் பொருளில் ஒரு பாடலில் இவ்வாறு பயன் படுத்தி உள்ளார்.

வரிசையு மேன்மைப் பேறும்
வளம்பெற நிறைந்த கோமான்
அரசரின் குழுவி னுப்ப
ணணியுலா வருத னேக்கப்
பிரசங்க ணறவின் மொய்த்தா
லெனப்பெரு வீதி யெங்கும்
விரைசெறி குழலின் மாதர்
விரைந்தனர் நெருங்கி னூரால்

(மணம்புரிப் படலம்: 128)

பீறல் என்ருல் கிழிக்கை என்பது பொருள் எனக் கூறுகிறது பிங்கல நிகண்டு. பேச்சு வழக்கில் இச்சொல் பீற்றல் என வழங்கு கிறது. கிழிந்த என்னும் பொருளில் பீறல் என்னும் சொல்லை இவ் வாறு ஒரு பாடலில் சேகுனப் புலவர் பயன்படுத்தி உள்ளார்.

ஒட்டிய வயிறு மேனி உலர்ந்துமெய் தளர்ந்த நெஞ்சங்
கொட்டிய நினைவுந் தள்ளாக் குழைவுந் தன்மானந் தோற்றக்
கட்டிய பீற லாடைக் கையுமா வாஞ்சை யெண்ண
முட்டிநல் குரலில் பட்டோன் முன்னுற வள்ளல் கண்டார்

(நாகளித்த படலம்: 4)

ஒரு பாடலில் சேகுனப் புலவர் வாழைக் குழையைப் புலியடிக்குலை என இவ்வாறு பாடி உள்ளார்.

புலியடிக் குலையொடு பொலிந்த வாழையின்
இலைமடற் ருழையி னெழுந்த பூகத்தின்
இலைதரு தருக்களி னிவந்த பன்மணம்
உலவியந் நகரெலா மோடி யாடுமால்

(மணம்புரிப் படலம்: 61)

பூணி என்ருல் எருது என்பது பொருள். வண்டியில் எருது பூட்டப்பட்டதை ஆசிரியர்,

நாயக ருரைவழி நயந்து தன்னகம்
போயினன் பூணியைக் கொணர்ந்து பூட்டினன்
ஆயதோர் தாம்புமற் றடவி சேர்த்தனன்
மேயவை தூவினன் மீண்டு நின்றனன்.

(விடையருளிய படலம்: 24)

எனப் பூணி என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம்.

பை என்றால் பசுமை. ஞிறம் என்பது நிறம் என்பதன் முதற்போலி. பைஞ்ஞிறம் என்பது பசுமையான நிறம் எனப் பொருள் கொள்ளலாம். வாடிய உள்ளம் நாகூர் ஆண்டகையின் அருளினால் பயத்தொடு கலந்த பசிய நிறத்தை அடைந்தது. இதனையே ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

விரிந்த பாருல குயிரெனு மேலவ ரருளால்
கரிந்த கோலுளம் பயத்தொடு பைஞ்ஞிறங் கலந்து
பிரிந்து முக்கவ ரிலையொடு செழுமையிற் பிறங்கத்
தெரிந்த வாநந்தத் தாண்டகை மகிமையைத் தெருண்டான்.

(மிசுவாக்குத் தளிர்ப்பித்த படலம் : 19)

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைத் தமிழ்க்காப்பியங்களில் இடம்பெற்றிருப்பது போல மகனைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் மகார் என்னும் சொல் திருக்காரணப் புராணத்திலும் அமைந்திருப்பதைக் காணலாம். மக்களைக் குறிக்க இங்கே பயன்படுத்தப்பட்டுள்ளது என்றும் கூறலாம். 'இளந்துணை மகாரின்' என்கின்றது பதிற்றுப் பத்து (71:7). ஒரு வாழ்த்துப் பாடலாக அமைந்துள்ள செய்யுளிலே மகார் என்னும் சொல் இவ்வாறு இடம்பெற்றுள்ளது :

நும்மக மகிழ்தர வாழி நும்மகார்
தம்மக மகிழ்தர வாழி தக்கதோர்
எம்மக மகிழ்தர வாழி யாவருஞ்
செம்மக மகிழ்தர வாழி செல்வமே.

(காணிக்கை நிறீஇய படலம் ; 51)

மஞ்சிகன் என்னும் சொல் நாவிதன் எனப் பொருள்படும். மஞ்சிகன் கையிலிருந்த கண்ணடியை நாகூர் ஆண்டகை பெற்றமை இவ்வாறு ஒரு பாடலில் இடம்பெற்றுள்ளது.

அஞ்சலி செய்யுந் தொண்ட ரகத்துயர் கண்ட வள்ளல்
நெஞ்சிடை நினையா நிற்ப நேருறப் பணிந்து வந்து
மஞ்சிகன் கையி னடி வழங்கினன் முகநோக் காது
தஞ்சமாம் பொருளி னோர்பா லெறிந்தனர் சார்ந்த தன்றே

(வங்கங் காவல் புரிப்படலம்: 18)

மரக்கலம் என்றால் கப்பல். மரக்கலராயன் என்றால் மரக்கலத்தின் சொந்தக்காரரைக் குறிக்கும். மீகாமன் என்பது மரக்கலத்தைச் செலுத்தும் மாலுமியைக் குறிக்கும். மரக்கலராயன், மீகாமன் என்னும் இவ்விரண்டு சொற்களையும் ஆசிரியர் இவ்வாறு ஒரே பாடலில் இடம்பெறச் செய்துள்ளமை நோக்கற்பாலது.

அடித்தகா லுரத்தால் விரித்தபா யினத்தால் அருந்திரை
யோடிய வோட்டால்
எடுத்தவன் பலகை விடித்ததோர் திறத்தால் எங்஗னும்
வெண்டுகில் விரித்தாங்கு
அடுத்தவெண் ணுரைமே லளவினி லமையா தருங்கல
மேகின்ற காலே
விடுத்திடா வலத்தின் மரக்கல ராயன் விரைவின்மீ காமனே
விளித்தான்

(புத்துக்கள் வசனித்த படலம்: 6)

மீ என்ருல் மேலிடம் என்பது பொருள். மேலே அமைந்துள்ள விண்ணுலகை 'மீமலர் சுவர்க்கத்து' என ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப்பாடி நாகூரின் சிறப்பை வானளாவப் புகழ்ந்துள்ளார் காப்பிய ஆசிரியர் :

பூமலர் வீதியும் புனித மாக்களும்
தேமலர் வாசமுஞ் சிறந்த மாடமும்
பாமலர் மின்களும் புதுமைப் பண்ணலான்
மீமலர் சுவர்க்கத்தை மிகைக்கு நாகையே

(மணம்புரிப் படலம்: 84)

முடுக என்னும் சொல்லே விரைந்து செல்ல என்னும் பொருளில் சேகுனப் புலவர் ஒரு பாடலில்

......ஒரு மரக்கல மொல்லேயின் முடுக
(விருந்தருந்திய படலம்: 6)

எனத் தந்துள்ளார்.

முனக்கம் என்பது மணுமுணுக்கை. மூக்கு இயற்கையாக அமைய வில்லே எனின் முனக்கம் ஏற்படும். முனக்கம் என்னும் சொல் முணு முணுக்கை என்னும் கருத்தில் நாஞ்சில் நாட்டில் பெருவழக்காகப் பேச்சு வழக்கில் இடம் பெறுவதொன்ருகும் என்பர். சேகுனப் புலவர் பல குறைகளேக் கூறும் பொழுது முனக்கத்தைப் பற்றியும் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

மூக்கறை முனக்கத் தோடும் முனேயறைக் கோழை யோடும்
நாக்கறை குளற லோடு நடுவறை கூன லோடு
வாக்கறை யூமை யோடு வடிவறை மருள லோடு
நோக்கறை குருட்டினேடு நோய்க்கண மெய்து மன்றே

(பசாசுகளழிவுண்ட படலம் : 72)

வட்டணை என்பது வட்டமான அணை எனப் பொருள்படும். வட்டமான பஞ்சு மெத்தைக் கட்டிலை இச்சொல் குறிக்கும் எனலாம். வட்டமான அணை இரண்டையும் எடுத்துக் கொண்டு செல்வந்தனின் விருந்தினை முடித்துப் பின்னர் அங்கிருந்து புறப்பட முற்பட்டார்கள் நாகூர் ஆண்டகை அவர்கள். இந்நிகழ்ச்சியே திருக்காரணப் புராணத்தில் இவ்வாறு ஒரு பாடலில் இடம்பெற்றுள்ளது.

மதிக்கருங் கருணை வள்ளல் மணமகிழ்ந் திருபாலிட்ட
விதிக்கரும் பணியின் வாய்ந்து விளங்கு வட்டணை யிரண்டுந்
துதிக்கருங் கரத்திற் கொண்டு துணையினோ டெழுந்து செல்லப்
பதிக்கருஞ் செல்வ மன்னன் பார்த்தனன் சிந்தை செய்தான்.

(விருந்தருந்திய படலம் : 25)

வன்பு என்றால் கடினத் தன்மை என்பது பொருள். கடினத் தன்மை அகன்றிட சங்கை செய்தமை பற்றி ஒரு பாடலில் இவ்வாறு வன்பு என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுக் குறிப்பிடப்பட்டுள்ளது.

அன்பொடு போற்றி வாழ்த்தி
அவரவர்க் குற்ற பண்பின்
இன்பமுற் றரிய வெல்லாம்
எழின்மலர்ப் பதத்திற் கீந்து
வன்பறச் சங்கை செய்து
வளமனைக் ககன்று ராங்கு
துன்பமே பெருத்தோர் ரேழை
ஒருபுறந் தூங்கி நின்றான்.

(நாகளித்த படலம் : 3)

வாவுதல் என்பது தாண்டுதல். கம்பராமாயணத்தில் வாவுதல் என்னும் சொல்.

குன்றிடை வாவுறு கோளரி போல
மின்றிரி வன்றலை மீது குதித்தான்

(பஞ்ச சேனாதிபதிகள் வதைப் படலம் : 63)

எனத் தாண்டுதல் என்றும் பொருளில் வந்துள்ளது. ஆனால் வாவுதல் என்னும் சொல்லை சேகுனாப் புலவர் தமது திருக்காரணப் புராணத்தில் மேலே எழுந்து பறந்தன என்னும் பொருளில் ஒரு பாடலில் இவ்வாறு அமைத்து பாடி உள்ளார்.

வந்தவர் முறைப்படி வகுப்பக் கேட்டக
முந்திய களிப்புடன் மொய்த்த புள்ளெவா
நந்தலி லிறைமலர்ப் பாத நாடிமா
மந்தர மென்னவா னெழுந்து வாவவே

(புட்கள் மீட்டிய படலம்: 22)

இங்ஙனம் சேகுணப் புலவர் தமது திருக்காரணப் புராணத்தில் பல சொற்களை அருமையாகப் பயன்படுத்தி உள்ளார். தாம் மேற்கொண்ட பணியைச் செவ்வனே நிறைவேற்ற இத்தகைய பதப் பிரயோகங்களை மேற்கொண்டு தமது காப்பியத்தைச் சிறக்கச் செய்துள்ளார்.

## இலக்கணக்குறிப்பு

இருமடி யேவலாக வரும் வினைச் சொற்கள் மிக அருமையாகவே தமிழ் இலக்கியத்தில் இடம் பெறுகின்றன எனலாம். செய் என்னும் ஏவலின் மேல் ஓரேவலாய்ச் செய்வி என்னும் வாய்ப்பாட்டில் வருவன ஏவலொருமையாகும். செய் என்னும் வினையின் பின் 'வி' விகுதியாவது 'பி' விகுதியாவது தன்னொடும் இணைந்து வருமாயின் செய்யென்னும் ஏவலின் மேல் ஈரேவலாய்ச் செய்விப்பி என்னும் வாய்ப்பாட்டு ஏவலொருமையாம். ஏவலின் மேல் ஏவல் வருவதை இது குறிக்கின்றது. சேகுணப் புலவரும் தமது திருக்காரணப் புராணத்தில் இத்தகைய ஈரேவல் பிறவினையை ஒரு பாடலில் பயன்படுத்தி உள்ளார். எய்துவி என்பது வி விகுதி பெற்றுவந்த ஓரேவல் வினையாகும். எய்துவிப்பி என பி விகுதியைக் கொண்டு பின்னர் பி விகுதி இரட்டித்து எய்துவிப்பிப்பி என்று உருவாகி அதன்பின் எய்துவிப்பிப்பீர் என வந்துள்ளது. எய்துவிப்பிப்பீர் என வந்துள்ள திருக்காரணப் புராணப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

திருத்திய தவத்தினர் சிறப்பின் வந்ததும்
பொருந்திய கருமமொன் றுண்டு போற்றுவான்
இருத்தியங் கெய்துவிப் பிப்பீ ரென்றதுங்
கருத்துறு நினைவுமியான் கண்ட பான்மையே.

(மணம் பொருந்து படலம்: 57)

தெரிநிலை வினைமுற்றுப் பகுபதங்களின் விகுதிகளுள் ஒன்று மின் என்பதாகும். பன்மை முன்னிலை விகுதியாக இவ்விகுதி இடம் பெறும். ஒரு பாடலில் சேகுணப் புலவர் மின் என்னும் பன்மை முன்னிலை விகுதியைப் பல தடவைகள் பயன்படுத்தி உள்ளார்,

மஞ்சன மாடுமின் மலர்கள் சூடுமின்
மஞ்சன நெடுங்குழல் வார்மின் மால்விழிக்
கஞ்சன மெழுதுமின் அணிகள் பூண்மின்வெள்
ளஞ்சன நடையிர் நல்லாடை கோடுமின்

(மணம்புரிப் படலம்: 34)

அதே போன்று மியா முன்னிலை அசைச் சொல்லையும் மின் என்னும் பன்மை முன்னிலை விகுதியையும் பல தடவைகளில் ஒரு பாடலில் அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர்.

தெருவுக டூய்மையிற் சிறப்புச் செய்மின்பூ
மருவுக டோரண மறுகு நாட்டுமின்
திருவளர் மாளிகைச் செவ்வி யாக்குமின்
வருமலர்ப் பந்தர்கண் மணத்திற் செய்மியா

(மணம்புரிப் படலம்: 32)

ஓசை நயம்

இன்னலுற்றோர் எழுப்பிய ஓலத்தினை வருணிக்கப் புகுந்த ஆசிரியர் ஒவ்வொரு சாராரும் எழுப்பிய சத்தங்களை ஓசை நயம் மிக்கதாய் அமைத்துப் பாடியுள்ளார் இவ்வாறு:

ஆஅஆஅ அந்தோ அந்தோ வென்பார் ஒருசாரார்
ஓஒஓஒ வென்றே யோய்ந்தே யாழ்வார் ஒருசாரார்
ஊஉஊஉ வென்றே பட்டுழல் கிற்பார் ஒருசாரார்
கூஉகூஉ வென்றே கூய்க்குறன் மாய்வார் ஒருசாரார்

(பொன்னணி புக்க படலம்: 29)

மும்முரசு ஒரு நாட்டின் வளத்தைச் சிறப்பாகச் சுட்டுவதொன்றாகும். கொடை முரசு, மண முரசு, போர் முரசு மூன்றும் இங்கு ஒரு பாடலில் வருணிக்கப்பட்டுள்ளது. அந்தப் பாடலைப் படிக்கும்பொழுது முரசு ஒலி காதுகளை எட்டுவது போல் அமைந்துள்ளன, அப்பாடலின் இடம் பெற்றுள்ள சொற்கள். அத்தகைய ஒரு பாடல் இங்கே தரப்படுகின்றது. இப்பாடலில் மும்முரசும் குறிப்பிடப்பட்டுள்ளமையைக் காண்கின்றோம்.

வார்பெறு மன்றல் பேரி
வரிசைகொ டானப் பேரி
சீர்பெறும் வீரப் பேரி
சிறுசுப முழக்கும் பேரி
கார்பெறு மிடியி னோதைக்
கடலொலி மறாத நாவூர்
பேர்பெறுஞ் செவ்வி வாய்ந்த
பெரியவ ரிருந்தா ரன்றே

(மணம் பொருந்து படலம்: 1)

ஒரே எழுத்தைப் பலமுறை ஒரு பாடலில் பயன்படுத்தி ஓசை நயத்தைச் சில பாடல்களில் அமைப்பதில் தனிப்பெரும் வெற்றி கண்டுள்ளார் சேகுனாப் புலவர். இந்த வகையில் ஒரு பாடலில் ளகரத்தை ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். ளகரம் பயன்படுத்தப் பட்ட செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

தெள்ளிய வள்ளலும்
ஒள்ளிய பள்ளியு
ளுள்ளிய வுள்ளொடு
கொள்ளரு ளள்ளினர்

(கூத்தானூர் புக்க படலம் : 17)

**யாப்பமைதி**

சேகுனாப் புலவர் தமது திருக்காரணப் புராணத்தில் பல்வேறு வகையான விருத்தப் பாக்களைப் பயன்படுத்தி உள்ளார். வெண்பாவின் இனமாகிய விருத்தத்தை வெண்பா விருத்தம் என வழங்குவதில்லை. அது வெளி விருத்தம் என வழங்கப்படும். பொதுவாக வெளி விருத்தம் ஐந்து சீர்களைக் கொண்டிருக்கும். மூன்று அடிகளும் வரும். நான்கு அடிகளும் வரும். வெளி விருத்தத்தை ஏனையவற்றிலிருந்து பிரித்துக் காட்டுவது அதன் ஒவ்வோர் அடியிலும் வரும் கடைச்சீராகும். ஐந்தாவது சீராகும். எல்லா அடிகளிலும் ஐந்தாவது சீராக ஒரே சொல்லோ ஒரே தொடரோ வரும். ஈற்றில் ஒரே சொல்லோ ஒரே தொடரோ வராவிட்டால் அது கலித்துறை ஆகிவிடும். யாப்பிலக்கண நூல்களில் வெளிவிருத்தத்துக்குரிய எடுத்துக்காட்டாக இப்பாடல் தரப்படுகிறது.

ஆவா வென்றே அஞ்சின ராழ்ந்தார் ஒருசாரார்
கூகூவென்றே கூவிளி கொண்டார் ஒருசாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீத்தார் ஒருசாரார்
ஏகீர் நாய்கீர் என்செய்து மென்ருர் ஒருசாரார்

சேகுனப் புலவரும் தமது திருக்காரணப் புராணத்தில் வெளிவிருத் தங்களை அமைத்துப் பாடிஉள்ளார். ஒன்று இவ்வாறு அமைந்துள்ளது.

என்னே யென்னே யென்பல னென்பார் ஒருசாரார்
முன்னே செய்யு மொய்ப்பய னென்பார் ஒருசாரார்
கொன்னே யாவி கொள்ளை யிதென்பார் ஒருசாரார்
மன்னே மன்னே மாதா வென்பார் ஒருசாரார்

(பொன்னணி புக்க படலம் : 30)

இரண்டு சீரடிகள் நான்கு அமையும் செய்யுள் வஞ்சித்துறை எனப்படும். கூத்தானூர் புக்க படலத்தில் இடம்பெற்றுள்ள இருபத்து நான்கு செய்யுட்களும் வஞ்சித்துறைச் செய்யுட்களாக வந்துள்ளன. எடுத்துக்காட்டாக ஒன்றைப் பார்ப்போம். ஓசை நயத்துடன் இது அமைந்துள்ளது.

துள்ளிய நற்பொரு
ளள்ளிய ளித்தொரு
தெள்ளிய கற்சுதை
பள்ளிய மைத்தனன்

(கூத்தானூர் புக்க படலம்: 14)

பல உறுப்புக்களைக் கொண்டது கலிப்பா. அதன் முதல் உறுப்புத் தரவு. கடைசி உறுப்பு சுரிதகம். ஒரு தரவு மாத்திரம் தனியே வரின் அது தரவு கொச்சகக் கலிப்பா எனப்படும். இந்தத் தரவுக் கொச்சகக் கலிப்பாக்களில் ஈரசைச் சீர்களாகிய மாச்சீரும் விளச்சீரும் மூவகைச் சீர்களுள் காய்ச்சீரும் வரும். விருத்தப் பாடல்கள் பயின்று வரும் காப்பியம் போன்ற நூல்களிலே தரவு கொச்சகக் கலிப்பாச் செய்யுட் களைக் காணலாம். சேகுனப் புலவரின் திருக்காரணப் புராணத்திலும் தரவு கொச்சகக் கலிப்பாக்கள் இடம்பெற்றிருப்பதைக் காணலாம் — ஈரசைச் சீராகிய மாச்சீரைக் கொண்ட தரவு கொச்சகக் கலிப்பாக்கள் திருக்காரணப் புராணத்தில் இடம்பெற்றுள்ளன. தேமா, புளிமா, புளிமா, புளிமா என மாச்சீர்களே வந்துள்ள ஒரு செய்யுளை எடுத்துக் காட்டாகப் பார்ப்போம்,

மாவும் பனசும் பலமா தளையும்
பூவுங் கனியும் பொலிவா ழைகளின்
காவுஞ் செறிநீ ழலுங்கார்க் குயிலுங்
கூவும் பொழில்வாய் புகழ்மீக் கொளவே
(பொன்னளித்த படலம் : 3)

புளி மாச்சீர்களாகவே வந்துள்ள தரவுக் கொச்சகக் கலிப்பா ஒன்று இவ்வாறு அமைந்துள்ளது.

தழையுங் கவையுந் ததையுங் கனியுங்
குழையும் மலரும் குளிர்தண் ணிழலும்
மழையின் பொழியும் மணநற் பொழிலி
னுழையின் புடையோ ருறுகா லையினே
(பொன்னளித்த படலம் : 7)

இவ்விரு தரவு கொச்சகக் கலிப்பாக்களிலும் மாச்சீர் வந்த இடங்களில் எல்லாம் அதன் நிரையே வந்திருப்பதைக் காணலாம்.

இங்ஙனம் காப்பிய இலக்கணங்கள் ஒருங்கே அமைந்து திருக் காரணப் புராணம் சேகுனப் புலவரின் தலை சிறந்த காப்பியங்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது எனக் கூறின் அது மிகையாகாது.

# ஏழாம் இயல்

## குத்பு நாயகம் என்னும் முகியித்தீன புராணம்

மதுரை மீசல் வண்ணக்களஞ்சியப் புலவர் இயற்றிய இரண்டாவது காப்பியம் குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணம். வண்ணக்களஞ்சியப் புலவரின் இயற்பெயர் முகம்மது இபுருகீம் என்ப தாகும். இவருடைய சிறப்பு ஆற்றல் கருதியே இவர் வண்ணக்களஞ் சியப் புலவர் எனப் புகழ் நாமம் சூட்டப்பெற்ருர். இவர் மீசலைச் சார்ந் தவர் என்பதும் கூடல் என மறு நாமம் பெற்ற மதுரையில் வாழ்ந்தவர் என்பதும் இவர்தாம் இக்காப்பியத்தை இயற்றினர் என்பதும் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

தேடுநற் றவத்தின் மேலாய்ச் சிறந்தபு சாலி கீன்ற
நாடுளப் பொருள தான முகியித்தீ னுதர் தோன்று
நீடிய வரலா ருய்ந்து செய்யுளால் நிலத்தி னிற்கக்
கூடல்வாழ் மீசல் வண்ணக் களஞ்சியங் கூறி னுனே

(கடவுள் வாழ்த்து : 33)

**காப்பிய நாயகர்**

இஸ்லாத்துக்குப் புத்துயிர் அளித்தவர் எனப் பொருள்படும் முகியித்தீன் என்னும் திருநாமத்தைப் புகழ்ப் பெயராய்ப் பெற்ற அப்துல் காதிர் (றலி) அவர்களின் இயற்கையும் செய்கையுமாகிய வாழ்க்கை வரலாறு இக்காப்பியத்தில் விவரிக்கப்படுகிறது. முகியித் தீன் ஆண்டவர் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட காப் பியங்கள் பல உள. அவற்றின் ஆசிரியர் ஒவ்வொருவரும் அப்பெரி யாரின் வாழ்க்கையின் வெவ்வேறு சிறப்பமிசங்களுக்கே தத்தம் காப் பியங்களில் முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். முக்கியமான வாழ்க் கைக் குறிப்புக்களை ஒவ்வொருவரும் தந்துள்ளனர் எனினும் அக்காப்பிய ஆசிரியர்கள் அப்பெரியாரின் வாழ்க்கையில் தம்மைக் கவர்ந்த செய்தி களை விரிவாக விவரிக்க முற்பட்டுள்ளனர் என்பது அக்காப்பியங்களைப் படிக்க முற்படுவோருக்கு எளிதில் புலனுகும். முகியித்தீன் ஆண்டவர் என்றும் முகியித்தீன் ஆண்டகை என்றும் வருணிக்கப்படும் அப்துல் காதிறு (றலி) அவர்கள் ஜீலான் என்னும் இடத்திலே பிறந்தவரா வார். இறைநேசச் செல்வர்களுக்கெல்லாம் தலைசிறந்து விளங்கியவர் எனப் போற்றப்படுபவராவார். இவரால் நிறுவப்பட்ட காதிறிய்யா என்னும் பாதையைப் பின்பற்றி ஒழுகுபவர்கள் மிகப் பலர். இஸ்லாமிய மார்க்க அனுட்டானங்களைப் பின்பற்றுவதற்காகத் தோன்றிய தரீக்கா என்னும் பாதையை நிறுவியவர்களுள் முதன்மையானவர் முகியித்தீன்

அப்துல் காதிறு (றலி) அவர்கள் எனக் கூறப்படுகிறது. முகம்மது நபி (சல்) அவர்களின் நேரடி வழித் தோன்றலாகத் திகழ்ந்தவர்கள் இவ் விறை நேசச் செல்வர் அவர்கள். முகம்மது நபி (சல்) அவர்களின் புதல்வி பாத்திமா (றலி) அவர்களின் இரு புதல்வர்களான ஹஸன் (றலி) அவர்களையும் ஹுசைன் (றலி) அவர்களையும் முறையே முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் தந்தை வழி மூதாதையராகவும் தாய்வழி மூதாதையராகவும் கொண்டு திகழ்ந்து தனிச் சிறப்புப் பெற்ற வர்கள். எனவே முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் முகம்மது நபி (சல்) அவர்களின் பேரர் எனப் புகழப்படும் பெருமையைப் பெற்றவர்கள். இத்தகைய குறிப்புக்கள் இக்காப்பியத்தில் அடிக்கடி குறிப்பிடப்படு கின்றன.

இக்காப்பியத்தில் உள்ள இரண்டு காப்புச் செய்யுட்களிலும் இவ் விவரம் குறிப்பிடப்பட்டுள்ளது. காட்டிலே வாழும் மானுக்குப் பிணை யாக நின்றவர்கள் முகம்மது நபி (சல்) அவர்கள். காத்திமுற்றசூல்— இறை தூதர்களுக்கு முத்திரையாக வந்த இறுதி நபி முகம்மது (சல்) அவர்கள். அவர்களுடைய வழித் தோன்றலாக வந்தவர்தாம் இக் காப்பிய நாயகராய முகியித்தீன் ஆண்டவர் அவர்கள். நேரிசை வெண்பாவாக அமைந்துள்ள இரண்டு நேரிசை வெண்பாக்களுள் முதலாவது இவ்வாறு அமைந்துள்ளது.

கானபிணைக் கீடளித்த காத்திமுற் றசூல்பேரர்
மோன முகியித்தீன் முதிர்சரிதை—யானயங்கூர்ந்
தெண்மையறப் பாடிடுதற் கெண்ணரிய பல்லுயிர்மேற்
கண்மைவைத் தாள்பவனே காப்பு

இரண்டாவது காப்புச் செய்யுளிலும் முகியித்தீன் ஆண்டவரவர் கள் மூன்று உலகங்களிலும் வாழுகின்றவர்கள் போற்றிப் புகழும் முகம்மது நபி (சல்) அவர்களின் வழித் தோன்றல் என்பது குறிப்பிடப் பட்டுள்ளது. அக்காப்புச் செய்யுள் வருமாறு :

மூவுலகோர் போற்று முகம்மதுற்ற சூல்பேரர்
கோவுலவு குத்பு முகியித்தீன்—பாவுலவ
மண்விண் மறைந்திருந்த பல்வகையைத் தாந்தெரிந்து
கண்ணின்றிக் காண்பவனே காப்பு

**காப்பிய அமைப்பு**

இக்காப்பியங் காண்டங்களாகப் பகுக்கப்படவில்லை. படலங் களாகப் பகுக்கப்பட்டுள்ளது. மொத்தம் முப்பத்தொன்பது படலங்கள் இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன. இக்காப்பியத்தில் காப்புச்

செய்யுட்களையும் சேர்த்து எல்லாமாக 1707 செய்யுட்கள் இடம்பெற்றுள்ளன. பல காப்பியங்களில் இடம்பெறாத மரபியற் படலம் இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளது. இப்படலத்தில் இடம்பெற்றுள்ள செய்யுட்களின் எண்ணிக்கை ஐந்தாகும். இம்மரபியற் படலத்தில் முகியித்தீன் ஆண்டவரவர்களின் தந்தையரான அபூசாலிகு என்னும் பெரியாரின் மூதாதையரின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**கடவுள் வாழ்த்து**

ஏனைய காப்பியங்களில் உள்ளது போன்ற முறைப்படியே இக்காப்பியத்திலும் கடவுள் வாழ்த்து அமைந்துள்ளது. முதல் பதினான்கு செய்யுட்களும் ஏனைய காப்பியங்களில் உள்ள முறைமையில் அமைந்துள்ளன. நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் மகளான பாத்திமா (றலி) அவர்கள் முதன்முறையாக இக்காப்பியத்தில் உள்ள கடவுள் வாழ்த்தில் வாழ்த்தப்பட்டுள்ளார். ககப்பியத்தலைவரின் தகப்பனாரின் மூதாதையரான ஹஸன் (றலி) அவர்களினதும் தாயாரின் மூதாதையரான ஹுஸைன் (றலி) அவர்களினதும் தாயாராய் இருந்தமையாலே இக்காப்பியத்தில் பாத்திமா (றலி) அவர்கள் கடவுள் வாழ்த்தில் போற்றப்பட்டுள்ளார் எனக் கூறலாம். பாத்திமா (றலி) அவர்களை ஒரு செய்யுளின் இறுதி அடிகள் இரண்டிலும் இவ்வாறு போற்றப்பட்டுள்ளது.

**தரையின் மாதரை மன்ருடு பாத்திமா வெனுந்தாய் பொற்ருண்**
**மரைமலர் இதய மென்னு மலரினி லிருத்தி னேனே**

(கடவுள் வாழ்த்து : 15)

இக்காப்பியத்திலேயே முதன்முதலாக பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் மனைவியர் ஒரு செய்யுளில் வாழ்த்தப்பட்டுள்ளனர். நம் பிராட்டிமார்களுள் கதிஜா (றலி) அவர்களினதும் ஆயிசா (றலி) அவர்களினதும் பெயர்கள் குறிப்பிடப்பட்டு ஏனையோர் பெயர் சுட்டப்படாமலே ஒரு பாடலில் இவர்கள் இவ்வாறு இடம் பெற்றுள்ளனர்.

குவைலிதுக் கிருகண் ணாகிக் குறைசியங் குலத்துக் கெல்லாம்
கவின்மணித் தீப மாகி வருங்கதி சாவி னாரின்
அவிரொளி பரப்பு மேனி யாயிசா முதலா உள்ள
நவமுறு நம்பி ராட்டி மார்பத நளினம் போற்றி

(கடவுள் வாழ்த்து : 16)

நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் நாற்பத்தீராயிரம் அசுகாபிமார் என்னும் தோழர்கள் மற்றொரு செய்யுளில் போற்றப்பட்டுள்ளனர். இக்குறிப்பும் ஏனைய காப்பியங்களில் உள்ள கடவுள்

வாழ்த்துப் படலங்களில் இடம்பெறாத ஒரு சிறப்பம்சமாகும் அவர்களைப் பற்றிய செய்யுளில் அசுகாபிமாரின் எண்ணிக்கை இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

அரசர் பொன்மகுடந் தாழ்த்தி
    யஞ்சலி புரிந்து வாழ்த்தும்
விரிகதிர் முகம்ம தென்னும்
    மதிநடு விளங்கச் சூழும்
கிரணவொண் கண்க ளாகக்
    கிளர்தரு நாற்பத் தீரா
யிரமசு கபி யானோ
    ரிணையடி மலர்கள் போற்றி

(கடவுள் வாழ்த்து : 17)

பெருமானார் முகம்மது (சல்) அவர்கள் மக்காவைத் துறந்து மதினா மாநகர் சென்றபொழுது அவர்களுடன் சென்றவர்கள் முகாசிரீன்கள் எனப்படுவர். மதீன மாநகர் சென்ற அவர்களுக்கு எல்லாவிதத்திலும் துணைபுரிந்த மதீனாவாசிகள் உதவி புரிந்ததோர் எனப் பொருள்படும் அன்சாரீன்கள் என வழங்கப்பட்டனர். வண்ணக்களஞ்சியப் புலவர் தமது குத்பு நாயகத்தில் இவ்விரு சாராரையும் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உவமையின் முகாச ரீன்க ளுடனுமன் சாரி யானோர்
சுவமலர்ப் பதங்க ளேத்துந் துதிமதி சோதி யாமே

(கடவள் வாழ்த்து : 18)

இன்னும் பலர் புதிதாக இவ்வாசிரியரால் இக்காப்பியக் கடவுள் வாழ்த்தில் போற்றப்பட்டுள்ளனர் (கடவுள் வாழ்த்து : 20-25).

### மூல நூல்

கடவுள் வாழ்த்தில் உள்ள இருபத்தொன்பதாம் பாடலில் தமக்கு அறபு மூலத்திலிருந்து உரை வழங்கியவர்களைக் குறிப்பிட்டுள்ளார். அத்தோடு இக்காப்பியத்தை இயற்றத் தமக்கு ஆதாரமாக இருந்த நூல்களாக மல்பூஸ் சரீப், குலாசத்துல் முபாகிரு, இத்துருபுல் லாசாயிபு என்பனவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

### அவையடக்கம்

ஆசிரியர் தம்முடைய கவிதையைப் புன்கவி எனக் குறிப்பிட்டு உள்ளார், அதுவும் எல்லா நூல்களையும் கற்ற பெரியோர் முன் தாம் கவிதை இயற்ற முற்பட்டமையை ஓர் உதாரணம் கொண்டு விளக்கி உள்ளார். தம்மை வண்ணக்களஞ்சியப் புலவர் ஓர் ஈப்புலிக்கு ஒப்பிட்டு

உள்ளார். ஈப்புலி என்றால் சிலந்தி. ஏனைய கற்றோரை குட்டிகளை ஈனும் பெரிய தாய்ப்புலிக்கு ஒப்பிட்டுள்ளார். தாய்ப்புலிக்கு முன்னே சிலந்திப் பூச்சி நிற்பது போன்றதே அறிஞர் முன் தாம் இயற்றி உள்ள கவிதை என ஒரு புது உவமையைக் கூறி ஆசிரியர் அவையடக்கம் கூறியுள்ளமை நயக்கத்தக்கது. அச்செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

நோய்ப்ப தற்றுமுந் நூலுணர்ந் தோர்முனம்
வாய்ப்ப தைப்பில் வகுத்தவென் புன்கவி
ஈய்ப்பு லிக்கு மெழிற்குரு ளைப்பெருந்
தாய்ப்புலிக் குஞ்சரி சொல்வ தொக்குமே

(கடவுள் வாழ்த்து : 34)

மற்றொரு பாடலிலும் அறிஞர் முன் தாம் புன்கவி பாடியமை விண்ணில் விளங்கும் மணிக்கு முன் மண்ணின் மணியை வைப்பதை ஒக்கும் என உவமை கூறியுள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

எண்ணி லுற்ற வியற்புல வோர்முன
நண்ணி லுற்றவென் புன்கவி நற்றரு
விண்ணி லுற்று விளங்கு மணிக்கிணை
மண்ணி லுற்றுடை மண்மணி போலுமே

(கடவுள் வாழ்த்து : 35)

மற்றொரு பாடலில் கற்றவர்கள் தம்முடைய கவிதையைப் படித்துத் தம்மை கோபிப்பரோ என்னும் கேள்வியை எழுப்பி உள்ளார். வலிமை மிக்க குதிரை வீரர்கள் தெருவில் விளையாடும் சிறுர்களைக் கோபிப்பார்களா? இல்லை. அதே போன்று கவி மழை பொழியும் புலவர்கள் தரத்தில் குறைந்தது என்று தமது நூலை வெறுப்பரோ என்ற வினாவை எழுப்பி உள்ளார் ஆசிரியர். தொடர்ந்து வெறுக்க மாட்டார்கள் என்று முடிவுக்கு வந்துள்ளார் என்பதை இக்கவிதை மூலம் விளக்கி உள்ளார்.

வழிந டத்து வயப்பரி வீரர்கள்
கழிந டத்து சிறுவரைக் காய்வரோ
பொழிக விப்புல வோருஞ் சினப்பரோ
விழிவு பற்றியென் னூலையு மெண்ணியே

(கடவுள் வாழ்த்து : 36)

குரங்கை ஆட்டி நடத்தப்படும் கூத்து சாதாரணமாகக் காணக் கூடியதொன்று. ஆனால் அந்தக் கூத்துக்கு எவ்வித தாளமும் கிடையாது. குரங்கு கண்டபடி கூத்தாடும். அக்குரங்கு தாளபேதம் உணரும் தகுதியைப் பெற்றிருக்கவில்லை. அக்குரங்குக்கு

அத்தகைய ஆற்றல் உண்டோ? வினு எழுப்பிய ஆசிரியர் தமது கவிதையில் நீண்ட அனுபவமுள்ள புலவர் பெருமக்கள் தமது நூலை ஆராய்ந்து குற்றம் நினைப்பரோ என்று வினவை எழுப்பி உள்ளார். குரங்குக்குத்தாள பேதம் தெரியாது ஆடுவது போன்று தாமும் இலக்கிய ஆற்றல் இல்லாமல் இந்நூலை இயற்றி உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். தாம் நூலை இயற்றியது பற்றிப் பெருமை கொள்ளாது தமது அடக்கமுடைமையை எடுத்துக்காட்டவே இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். இக் கருத்துக்களை உள்ளடக்கிய செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

ஆள வாய்க்குரங் காட்டிய கூத்துக்குத்
தாள பேத முணர்வது தானுண்டோ
நீள வாய்ந்த புலவர் நினைப்பரோ
கோள தாய்ந்தென் கவியினுங் குற்றமே
(கடவுள்வாழ்த்து: 37)

அடுத்த மூன்று செய்யுட்களிலும் இதே பாணியில் ஆசிரியர் தமது குறையை எடுத்துக்காட்டி உள்ளார் என்பதும் ஈண்டு நோக்கற்பாலது.

**கொடை நாயகர்**

வண்ணக்களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில்எந்த ஒரு கொடை நாயகரும் குறிப்பிடப்படவில்லை என்பது ஈண்டு நோக்கற்பாலது. புலவர் நாயகம் என்றும் சேகுனப் புலவர் என்றும் பெருவழக்கில் அழைக்கப்பட்ட செய்கு அப்துல் காதிறு நயினர் லெப்பை ஆலிம் புலவர் அவர்களுக்கும் வண்ணக்களஞ்சியப் புலவர் அவர்களுக்கும் இடையே நிலவிய புலமைப் பகைமை காரணமாகக் காப்பியம் படைப்பதில் ஒருவரை ஒருவர் மிஞ்சிவிட வேண்டும் என்ற கொள்கை நிலவியது. சேகுனப் புலவர் படைத்த குத்பு நாயகம் என்னும் காப்பியத்தைக் கண்ணுற்றதும் வண்ணக்களஞ்சியப் புலவரும் தாமும் முகியித்தீன் ஆண்டவர் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட ஒரு காப்பியம் படைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார் எனத் தெரிகிறது. அந்த ஆசையை நிறைவேற்று முகமாக வண்ணக் களஞ்சியப் புலவர் எந்தக் கொடை நாயகரையும் பொருளுதவி கேட்கவில்லை என்பதும் புலனுகின்றது. ஏற்கனவே ஒரு குத்பு நாயகம் இருக்கும்பொழுது மற்ருெரு குத்பு நாயகம் இயற்றுவது அவசியமில்லை என்ற கருத்து நிலவியமையால் ஒரு கொடைநாயகரிடம் பொருளுதவி பெறுவது வண்ணக்களஞ்சியப் புலவருக்குக் கடினமான ஒரு காரியமாக இருந்திருக்கலாம். சேகுனப் புலவருடைய குத்பு நாயகத்துக்குப் போட்டியாகத் தாமும் சிறந்த ஒரு காப்பியமாக ஒரு குத்பு நாயகத்தை இயற்ற வேண்டும் என்ற குறிக்கோளையே முக்கியமாகக் கருதினமையால் கொடை நாயகர் ஒருவரின் ஆதரவு இன்றியே வண்ணக்

என்றும்

நற்புக ழிறைவீ டமைத்தருள்
பொழில்சூழ் நாகைவாழ் கமீது மூதாதை
(அபூபக்கரில் கம்மாமிப் படலம்: 37)

என்றும்

அசன்குத் தூசருள் சாகுல் கமீதுமீ தகலா
திசைந்துள் ளன்புசேர் முகியித்தீன்...
(துகிலேவு படலம்: 16)

என்றும்

... நாகையினிற்
பொங்கிவாழ் குதுபு சாகுல்கமீது புகழு மூதாதையர்...
(நபியேவு படலம்: 54)

என்றும்

நித்தன்ற னருள்சேர் சாகுல் கமீதொலி நெஞ்சுள் வாழுந்
சித்திசேர் முகியித் தீன்கோ னற்புதஞ் சொல்லு வாமே
(பேரேங்கு படலம்: 57)

என்றும்

வரதர் சாகுல் கமீது மணிப்புய மதனில் வைகுந்
திருமலர்ப் பாதநாதர்...
(புறவுரைப் படலம்: 31)

என்றும்

தனியவ னருள்சேர் சாகுல்கமீதுதம் முளத்தின்வாழு
நனைமலர்ப் பதத்தார் வள்ளன் முகியித்தீ னாதர்
(உயிர்பொருண் மீட்ட படலம்: 31)

என்றும்

பொருவறுங் குதுபு சாகுல் கமீதிவர் பொருட்டினுல்
(ராபியத்துல் அதபிய்யா நிறையுணர் படலம்: 118)

என்றும்

ஆய்ந்திடும் புகழ்சேர் சாகுல் கமீதுமூ தாதை யாக
வாய்ந்திடு மப்துல் காதிர் முகியித்தீன் மலர்த்தாள் போற்றி
(தாயுணவிடு படலம்: 16)

என்றும்

மட்டலர்ப் புயத்தார் சாகுல் கமீதொலி மணத்துள் வாழு
மிட்டவொண் கமலப் பாத முகியித்தீ னெனும்பே ரோதில்
(நிதியீந்த படலம்: 23)

என்றும்

மெழுகு பீரங்கி யார்த் தருள் சாகுல் கமீது
(செய்கப்துற்றகுமான் தபுசவஞ்சி செருக்கன்ற படலம்: 31)

என்றும்

விண்டு காட்டிய கோன்சாகுல் கமீதன்பு வீற்றிருக்கு
முண்டகப் பதமுகியத்தீன்...
(செய்கபில் காசிம் வாய்மைப் படலம்: 22)

என்றும்

மிக்க காரண முமன்பும் விளங்கு சாகுல் கமீது
(ஆயன்கூற வாய்மையருள் படலம்: 29)

என்றும்

தருவின் மேலருள் சாகுல் கமீது மூதாதை
(உயிர்தரு படலம்: 21)

என்றும்

பயனுறு குமிழ்வா ரகன்றபாதுகை சேர் பதத்தினர் சாகுல் கமீது
முயல்வுறு திருமூ தாதையர் முகியித் தீனப்துல் காதிர்...
(திருடனொலித்தனம் பெற்ற படலம்: 21)

என்றும்

முதிர்புகழ் முகம்மது நபிமுகி யித்தீன்
துதியற பியின்மக சைன்குத் தூசருள்
நிதிகமீ தொலிபத நினைத்து ளோர்க்கெலாங்
கதியொடு வாழ்க்கையா வதுங்கை கூடுமே
(முகியித்தீனிபினியறபி யுதித்தோங்கு படலம்: 132)

என்றும்

தருவி னேடுரை பேசிய சாகமீ தரசு
பரவு நாயகர் முகியித்தீ னவர்க்கெலாம் பகர்ந்து
(நசாருக்களீமான் கொண்ட படலம்: 53)

என்றும்

எழுது சீரியல் முகியித்தீ னொலி கமீதிதயந்
தழுவு பூரண முகம்மது நபிபொருட் டெந்தம்
(நசாருக்களீமான் கொண்ட படலம்: 54)

என்றும்

தால நீள் புகழ் சாகுல் கமீதின் மூதாதை
(செய்குதனு விலாயத்து நீங்கி வரு படலம்: 67)

என்றும்

காத ஞயகர் கமீதிரு மணிப்பதங் காண
(செய்குதனு விலாயத்து நீங்கி வரு படலம்: 68)

என்றும்

தருப்பணிந் தருள்சாகுல் கமீதுமூ தா தை
விருப்ப நெஞ்சினர் முகியித்தீ னரசு வீற்றிருந்தார்
(சூன்மந்தீர்த்த படலம் : 61)

என்றும்

அமையவேயருள் சாகுல் கமீதகத் துறையும்
கமழ்ப தாம்புய முகியித்தீ னரசுல கார்க்க
(இறந்துவந்து மணஞ் செய் படலம் : 225)

என்றும்

பேறியல் சாகுல் கமீது பெட்பகம்
(மரித்தெழுந்து மக்களீன்ற படலம் : 46)

என்றும்

கருணையங் கடல் சாகுல்க மீது மூதாதை
(உருமாறி வந்த படலம் : 51)

என்றும்

செழுநகர் நாகை மேவு செய்யது கமீது நாதர்
முழுநிதி யகத்துள் வாழு முகியித்தீ னப்துல் காதிர்
(பெண்களாணுறுப் பெறு படலம் : 18)

என்றும்

தாதலர்ப் புயசுந் தரர்குதுபு சாகுல் கமீது மூதாதை
(கலையருட் படலம் : 73)

என்றும் முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் சாகுல் கமீது ஆண்டகையின் மூதாதையர் என இக்காப்பியத்தில் பல இடங்களில் வலியுறுத்தப் பட்டுள்ளது.

### இயற்கை வருணனை

வண்ணக்களஞ்சியப் புலவரின் இயற்கை வருணனையைப் பார்ப் போம். பகுதாது ஓர் இடத்தில் வருணிக்கப்பட்டுள்ளது. பகுதாதிலே பாக்கு மரங்கள் இருந்தன. அவற்றின் காய்களாகிய மணிகள் தெறித்தன. அவ்வாறு தெறித்தவை பூமியில் விழவில்லை. அவை உயர்ந்து பாய்ந்தன. உயர்ந்து பாய்ந்து அழகிய மேகத்தில் மோதின. மேகத்தைத் துளைத்தன. பாக்கு மரத்தின் மணிகளான காய்கள் அழ

கான கருமை நிறமுள்ள மேகத்தைத் துளைத்ததன் காரணமாக அம் மேகத்திலிருந்து இனிமையான மணிகள் சிந்தின. மழை பெய்தது. மழைத் துளிகளையே இங்கு ஆசிரியர் இனிமை தரும் மணிகள் எனக் குறிப்பிட்டார். இவ்வாறு பெய்த மழையினால் அழகையும் பொலி வையும் பெற்றன பூஞ்சோலைகள். அத்தகைய பூஞ்சோலைகளைக் கொண்டது பகுதாது என்னும் நகரம். இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு ஒரு பாடலின் முதல் மூன்று அடிகளில் அமைத்துப் பாடி உள்ளார்.

பூகத்தின் மணிதெறித் துயர்ந்து பொற்புறு
மேகத்தைப் பொதுத்துவிண் மணிகள் சிந்திய
வாகுற்ற பொழில் பகுதாது......

(நபியேவு படலம் : 1)

இத்தகைய வளம் மிக்க நகரைக் கடந்து சென்றால் காட்டைக் காணலாம். அந்தக் காட்டிலே கோழிகள் உள்ளன. அந்தக் காட்டிலே விளைந்தவை வரகும் சாமையும் என்னும் தானியங்கள். அவ்வாறு விளைந்த தானியங்களை அறுவடை செய்து அக்கதிர்கள் போர்களாகக் குவிக்கப்பட்டுள்ளன. அந்தப் போர்களிலே ஏறிக் காட்டுச் சேவல்கள் சிறகை விரித்து அடித்துக் கூவின. இந்தச் சத்தத்தால் எண்ணற்ற கண் இமையா நின்ற அரம்பையர்கள் திடுக்குற்று இடுக்கண் எய் தினர். மற்றொரு பக்கத்தில் தாமரை மலரிலே உள்ள சிள்வண்டுகள் ஓசை எழுப்பிக் கொண்டிருந்தன. இத்தகைய இயற்கைக் காட்சிகளை உடையது பகுதாதை அடுத்த முல்லை நிலம். இவ்வாறான முல்லை நிலக் காட்சியையே ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

வளநகர் கடந்து கான வாரணம் வரகு சாமை
விளைகதிர்ப் போரி னேறி விரித்திற கடித்துக் கூவின்
அளவறு மிமையா நாட்டத் தரம்பையர் திடுக்கண் எய்தும்
முளரியஞ் சிள்ளின் ஓதை முல்லையுங் கடந்து போனார்

(நசாருக்களிமான் கொண்ட படலம் : 8)

கொல்லும் பார்வையைக் கொண்ட கரடிகள் கண்டு மெய் சிலிர்த்து வியர்வை ஏற்படக்கூடிய அரிய கரும்பொன் போன்ற மேனியை உடையவர்கள் அங்கு வாழ்ந்தவர்கள். அங்குள்ள வேடர் களின் பாதங்கள் பற்பல பரல்கள் சிந்திய பாதங்களை உடையவர்கள், வில் வித்தையில் சிறந்தவர்கள். அவ்வேடர்கள் இளம்பிறை போன்று வளைந்த வில்லுகளைக் கையிலேந்தியவர்களாய் இருந்தனர். அவர் களுள் சிலர் நெருப்பினில் வெடிக்கும் அளவுக்குச் செம்பை இட்டு உருக்கிக் கொண்டிருந்தனர். அச்சந்தர்ப்பத்தில் ஏற்படும் வெப்பம்

தாங்க முடியாத நிலையை உருவாக்கும். அத்தகைய நிலையை யொத்தது அந்தக் கொடிய பாலை நிலம் என்றும் முல்லை நிலத்தைத் தாண்டி உள்ள பாலை நிலம் வருணிக்கப்பட்டுள்ளது. இக்கருத்துக்கள் இடம் பெற்ற பாடல் இவ்வாறு அமைந்துள்ளது :

கொலைவிழிக் கரடிப் பங்கிக் குறுவியர்க் கரும்பென் மேனிப்
பலபரற் பதிந்த பாதப் பணிப்பிறைத் தனுக்கை வேடர்
சிலர்நெருப் பினிற்பொட் டாகச்செம்பினை யுருக்கிச் சாய்த்த
நிலையெனுங் கொடிய பாலை நிலத்தையு நீங்கிச் சென்றார்

(நசாருக்களீமான் கொண்ட படலம்: 9)

அடுத்து வருணிக்கப்படுவது மலைநாடு. குறிஞ்சி நிலம். தினை வகை பல உண்டு. அவற்றில் ஒன்று அணில் வால் போன்ற தினை யாகும். அத்தகைய சிறப்பான தினையின் கதிர்கள் அவற்றிற்குரிய பரணில் குவிக்கப்பட்டுள்ளன. அப்பரணிலே ஏறிக் குறிஞ்சி நிலக் குறத்தியர் ஆ,ஓ என்று குரல் எழுப்பினர். அந்த ஒலியைக் கேட்டதும் கிளிகள் அங்கு வந்து கூடிவிட்டன. அந்தக் கிளிகளை அங்கிருந்து ஓட்ட வலிமை பொருந்திய கவணிலே கல்லேற்றினர். அவ்வாறு கவண் கல்லேற்றவே அக்கிளிகள் ஓடிவிட்டன. இந்தக் காட்சியோடு குறிஞ்சி நிலத்திலே உள்ள மரஞ் செடி கொடிகளும் காட்சி அளித்தன. அங்கே வேங்கை, தேக்கு, அசோகு, புன்னை, நிறம் மிகுந்த காந்தள் முதலியன தென்பட இருந்தன. இவை அனைத்தும் பூத்திருக்கும் பொழுது மலைச்சாரல் ஒரு கண்கொள்ளக் காட்சியாகவே திகழும். அத்தகைய நீண்ட மலைச்சாரல் உள்ள பிராந்தியமே குறிஞ்சி நிலமாகும். அத்தகைய குறிஞ்சி நிலக் காட்சியையே ஒரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துள்ளார்.

சிறப்புறும் அணில்வால் போன்ற தினைக்கதிர் பரணில் ஏறி
குறத்தியர் ஆயோ வென்னுஞ் குரலினிற் கிளிகள் கூட
விறற்கவ னேற்றி லோட வேங்கை தேக்க சோகு புன்னை
நிறத்த காந்தளு மலர்ந்த நெடுங்கிரிக் குறிஞ்சி கண்டார்

(நசருக்களீமான் கொண்ட படலம்: 10)

பெண்கள் குளத்தில் நீராடிக் கொண்டிருந்தனர். அப்பெண்கள் பிரகாசம் பொருந்திய மேனியை உடையவர்கள். அவர்களுடைய கூந்தல்கள் மிகுந்த கருமை நிறமாக இருந்தன. சூரியன் மறைந்து இருள் பரந்து விட்டது என்று கருதிய குளத்தில் இருந்த குவளை மலரும் ஆம்பல் மலரும் விரிந்தன. பின் குவிந்து விட்டன. பின்னர் அதே சூழ்நிலையை உருவாக்கும் பிறிதொரு காட்சி தோன்றியது. மேகத்

திஞல் மறைக்கப்பட்ட பின்னர் சில வேளைகளில் சந்திரன் தோன்றுவதுண்டு. அவ்வாறே அப்பெண்களின் சந்திரன் போன்ற முகங்களும் கூந்தலினுல் மறைக்கப்பட்ட பின்னர் தோன்றலாயின. இதனுல் முன்னைய நிலைமை உருவாயது. நயக்கக்கூடிய இத்தகைய காட்சிகள் நிறைய உள்ள வயலும் வயல் சார்ந்த இடமுமான மருத நிலமாகும். இத்தகைய மருத நிலக் காட்சியைக் கண்டு கொண்டு முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் பகுதாதிலிருந்து புறப்பட்டுச் சென்ருர்கள் என்பதைக் கூற வந்த ஆசிரியர், அப்பெரியார் கண்டகாட்சிகளை வருணித்துள்ளார். கடைசியாக வருணிக்கப்பட்ட குறிஞ்சி நிலக் காட்சிகளை உள்ளடக்கிய குத்பு நாயகப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கயத்தி னீராடு மின்ஞர் கருங்குழ லிருளென் றெங்கும்
வியத்தகு குவளை யாம்பல் விரிந்து பின் குவியத் திங்கள்
புயற்றினின் மறைந்து காணல் போன்முக மறைந்து தோன்ற
நயத்தகு மருத நீங்கி நடந்தன ரொலிக ணுதர்

(நசாருக்களிமான் கொண்ட படலம் : 11)

மற்ருேர் இயற்கைக் காட்சி இறந்து வந்து மணஞ் செய் படலத்தில் (88-90) வருணிக்கப்பட்டுள்ளது.

பகுதாதில் நிகழ்ந்த ஒரு திருமண வைபவத்தின்போது தமிழ் நாட்டில் அத்தகைய விழாக்களின்போது மேற்கொள்ளப்படும் வழக்கம் ஒன்று பின்பற்றப்பட்டது என்று ஆசிரியர் வருணித்துள்ளார். அங்கு மாடங்கள் மேகத்தைத் தொடும் அளவுக்கு உயர்ந்திருந்தன. அந்த மாடங்களின் வாயில்களின் முன் மேடைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவ்வாறு செய்யப்பட்ட மேடைகளில் மாவிலைகள்வைக்கப்பட்டிருந்தன. பொதுவாகத் தமிழ்நாட்டில் அழகு மிகுந்த மன்மதனுக்கே மாவிலைகள் அர்ப்பணிக்கப்படுகின்றன. இக்கைங்கரியம் அனைவரையும் உளம் மகிழ செய்வதொன்ருகும். அத்தகைய மகிழ்ச்சி மிகவே அவ்வூர் மக்கள் தம் இல்லங்களின் முன் அமுதம் நிறைந்த பூரண கும்பங்களை வைத்தனர். மாவிலைகளின் மேல் அந்தப்பூரணகும்பங்களை வைப்பதுடன் அவ்வூர் மக்கள் திருப்தி அடையவில்லை. ஒவ்வொரு பூரண கும்பத்தின் மருங்கிலும் நீண்ட பாக்கு மரத்தின் பிரகாசம் பொருந்திய பாளைகளையும் வைத்து மகிழ்ந்தனர் அவ்வூர் மக்கள். நிகழ்கின்ற ஒரு கைங்கரியத்தை வருணிப்பது போன்று அமைந்துள்ளது ஆசிரியரின் பாடல். ‘வைப்பார்’ என்று கூறுவதன் மூலம் அத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என வருணித்துள்ளார். வீடுவாசல்களைத் திருமண வைபவத்துக்காக அலங்காரம் செய்யும்படி கேட்கப்பட்டதற்கிணங்கவே ஊர்மக்கள் இவ்வாறு அலங்கரிக்கத் தலைப்பட்டனர். இனி, பூரண கும்பம்வைக்கப்பட்ட விதத்தினை ஆசிரியர் வருணித்துள்ள விதத்தினை அப்பாடல் மூலம் பார்ப்போம். இதுதான் அப்பாடல் ;

மேகமோங் கியமா டத்தின் வாயன்முன் மேடை செய்து
வாகலர் மதனுக் கீயு மாவிலை யதன்கீழ் இட்டே
யாகமுண் மகிழ்வு கூற வமுதமே நிறைத்து நீண்ட
பூகவொண் பாளை வைத்துப் பூரணக் கும்பம் வைப்பார்

(இறந்து வந்து மணஞ் செய் படலம் : 100)

**உவமையும் உருவகங்களும்**

இயற்கை வருணனையிலே உவமையும் உருவகங்களும் பெரும் பாலும் அமைந்து விடுகின்றன. எனினும் குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில் இடம் பெற்றுள்ள சில உவமைகளையும் உருவகங்களையும் பார்ப்போம். முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் பகுதாதுக்கு வந்தமையினால் பகுதாது நன்மை அடைந்தது எனக்கூற வந்த ஆசிரியர் அதனை இரண்டு உவமைகளால் விளக்கி உள்ளார். பிரகாசம் பொருந்திய மணி இருளை அகற்றவல்லது. அதே போன்று முகியித்தீன் ஆண்டவர் என்னும் மணி உள்ளத்திலே புகுந்துள்ள அறியாமை என்னும் இருளை அகற்றவே உலகில் தோன்றினார்கள். உடலிலே இடம் பெற்று விடுவது நோய். அத்தகைய நோயைத் தீர்க்க வல்லது மருந்து. ஒரு மனிதனிடத்திலே இடம் பெற்றிருக்கும் பாவத்தை நோய்க்கு ஒப்பிட்டுள்ளார் ஆசிரியர். பாவம் செய்தோர் மீட்சி பெற்றால் மோட்ச கதி அடைவர். எனவே பாவம் என்னும் நோயைத் தீர்த்து மோட்ச கதியை அளிக்க வல்ல அருமருந்தாய்த் தோன்றி உள்ளார் முகியித்தீன் ஆண்டகை அவர்கள் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பெரும்பாலும் உவமைகளுடன் தொடர்படுத்தியே உருவகங்களும் அமைந்து விடுவதைப் போன்று இங்கும் உவமை உருவகங்கள் அமைந்திருப்பதைக் காணலாம்.

இக்கருத்துக்களை ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார் ஒரு பாடலில்:

வளஞ்செறி பகுதா தென்னும் பதியில் வந்துற் றேனென்றார்
உளஞ்செறி யிருளை மாற்ற உதித்தொளிர் மணியாய் நாளுங்
களஞ்செறி பவநோய் தீர்த்துக் கதியின்பந் தரும ருந்தாய்
நளஞ்செறி புகழ்க ளோங்கு நபியுல்லா பேரர் தாமே

(கல்வி நெறிப் படலம்: 39)

பிலவங்கம் என்பது மான் என இலக்கியச் சொல்லகராதி குறிப்பிட்டுள்ளது. மானுக்கு இன்றியமையாதது அதன் கொம்புகளே. பெருகி வருவது போன்று தோன்றும் கான் நீரை பருகச் சென்று நீரைக் காணாமல் மனம் வருந்தி திரும்பி வந்த மான் கொம்பை இழந்து விட்டால் மானின் அழகே கெட்டு விடும். ஒருவர் உருகி இருந்தமையை கொம்பிழந்த மானுக்கு இவ்வாறு ஒரு பாடலில் உவமிக்கப்பட்டுள்ளது.

பெருகு கா னதி நீர் பருகியுள் ளுடைந்து
பிலவங்கங் கொம்பிழந் ததுபோல்
உருகியாங்கு றைந்தார்...

(அபாபக்ரில் கம்மாமிப் படலம்: 6)

உள்ளம் பதைப்பதை பாம்பு பற்றிய தேரையின் நிலைமைக்கு இவ்வாறு ஒரு பாடலில் உவமித்துள்ளார் ஆசிரியர்.

பாந்தள் பற்றிய தேரையி னுளம்பதை பதைத்து

(ருபியத்துல்லதவியா நிறையுணர் படலம்: 15)

மிக எளிதில் விளங்கக்கூடிய உவமைகளை இவ்வாறு இரண்டு பாடல்களில் ஆசிரியர் அமைத்திருப்பதைக் காணலாம்.

அன்னம் போனடை யினர்சிலர் சிலரிரு ளறுக்கும்
மின்னும் போலிடை யினர்சிலர் சிலர் மகா மேருப்
பொன்னும் போலுட லினர்சிலர் சிலர்பொன்னூர் மணியின்
வன்னம் போல்வடி வினர்சிலர் சிலர்வரு மடவார்.
மயில்கள் போற்சிலர் மாடத்தின் மீதினும் வாய்ச்சொற்
குயில்கள் போற்சிலர் கூடத்தின் மீதினுங் கொதியா
வெயில்கள் போற்சிலர் வீதியின் மீதினும் மேவி
அயில்கள் போல்விழி நோக்கினர் அமுதுரு அனையார்

(இறந்துவந்து மணஞ் செய் படலம்: 175-176)

எல்லையற்ற துயரைக் கரையற்ற கடலுக்கு இவ்வாறு உருவாக்கப் பட்டுள்ளது. துயரால் பீடிக்கப்பட்டவர் கடலில் மூழ்கினவராய் கருதப் படுவதினலேயே இவ்வுருவகம் இவ்வாறு அமைந்துள்ளது.

கரையறு துயரமெனும் கடலிடை மூழ்கினரே

(உயிர் பொருண் மீட்ட படலம்: 4)

கடலில் மூழ்குவோர் சஞ்சலப்படுவர். அவ்வாறு சஞ்சலப்படு வாரை கருணையென்னும் கரையில் சேர்ப்பதற்கு மரக்கலம் இன்றியமையாதது. அத்தகைய மரக்கலமாக அமைபவர்தாம் முகம்மது நபி (சல்) அவர்களின் வழித்தோன்றல் முகியித்தீன் ஆண்டகை அவர்கள். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைக்கப்பட்டுள்ளன.

முடியுய ரறுசின் ஏறு முகம்மது நபிதம் பேரர்
கடலிடை தியங்கு வாரைக் கருணையின் கரையிற் சேர்க்கத்
தடமரக் கலம தான தகமையர் கூற வேமாப்
படர்தரக் குழுவி னேடும் புறப்படத் துணிவு கொண்டார்

(உயிர் பொருண் மீட்ட படலம்: 19)

இஸ்லாம் அல்லாத தன்மை அறபு மொழியில் குபிர் எனப்படும். பெரும்பாலும் குபிர் என்பதைப் பல்வேறு முஸ்லிம் புலவர்கள் களைக்கு உருவகிப்பர். குபிர் என்னும் களையை அகற்றுதல் வேண்டும் எனக் குறிப்பிடுவர். ஆனல் வண்ணக் களஞ்சியப் புலவர் குபிர் என்னும் இஸ்லாம் அல்லாத தன்மையை ஒரு நோய்க்கு உருவகித்துள்ளார்.

ஈனமாங் குபிர்ப்பிணி யகற்ற ருமருந் தென்றூர்

(நசாருக்களீமான் கொண்ட படலம்: 40)

**பெண்கள்**

ஒரு பெண்ணின் அழகும் அவள் தன் இனிய பேச்சும் இதழும் நடையும் இவ்வாறு ஒரு பாடலில் வருணிக்கப்பட்டுள்ளது.

கட்டழ கமுத மதுரமென்மொழி செங்
கனி யிதழன நடை...

(இறந்து வந்து மணஞ் செய் படலம்: 82)

அதே படலத்தில் உள்ள மற்ருெரு பாடலில் பெண் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளார்.

வளநிறை யொருபெரு நகரில் வாணகைக்
களபகுங் குமமுலை கருங்கட் சிற்றிடை
யளவறு மதுரமென் மொழிய ணங்கதோ
ரிளமயில்...

(இறந்து வந்து மணஞ் செய்த படலம்: 2)

காதுவரையும் கண்கள் பரவி இருத்தல் பெண்களுக்கு அழகு என்பர். இத்தகைய அழகுடைய பெண்கள் பலர் திருமண ஊர்வலத்தைப் பார்த்துக் களிக்க வந்தனர். நான்கு வகையான மலர்களினுல் தொடுக்கப்பட்ட மாலைகளை அணிந்து கொண்டு அவர்கள் அங்கு வந்திருந்தனர். அவர்கள் வந்திருந்த பாதையையே ஒளி மயமாக்கும் அளவுக்குப்புன்னகை புரிந்தவர்களாக அவர்கள் காட்சி அளித்தனர். பேதை முதல் பேரிளம் பெண் வரையான ஏழு வகைப்பருவங்களையும் சார்ந்து பெண்கள் அங்கிருந்தனர். இதனையே ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்.

காதை யேயள வியவிழி கஞ்சனங் கவினத்
தாதை யேதரு நால்வகை மலர்த்தொடை தரித்துப்
பாதை யேவெயி லிடுநகை யணிந்துபாற் றிரண்டார்
பேதையே முதற் பேரிளம் பருவமாம் பெண்கள்

(இறந்து வந்து மணஞ் செய்த படலம்: 177)

இவ்வாறு எல்லாப் பெண்களும் வந்திருந்தனர் என்று தொகுத்துக் கூறிய ஆசிரியர் அவ்வேழு பருவங்களையும் சார்ந்த பேதை, பெதும்பை மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என ஒவ்வொரு பருவத்தினரையும் வெவ்வேருக வருணித்துள்ளார்.

வரிவி ழிச்சியர் குழுவினேர் பெண்மருங் கேற்றும்
ஒருமொ ழிக்கொளுங் காமஞ்செவ் விளங்கரும் பொப்பாய்
உருவி ளக்கிய பேதையென் னையுமுட னேற்றென்
றருமை யிற்சொலச் செவிபுகுந் திலவவ டனக்கே
(இறந்து வந்து மணஞ் செய் படலம்: 187)

எனப்பேதை வருணிக்கப்பட்டுள்ளார். இவ்வாறு பெதும்பையும் (188). மங்கையும் (189), மடந்தையும் (190), அரிவையும் (191), தெரிவையும் (192), பேரிளம் பெண்ணும் (193) இறந்து வந்து மணஞ் செய் படலத்தில் விரிவாக வருணிக்கப்பட்டுள்ளனர். பேரிளம் பெண்ணை வருணிக்கும் பொழுது அவளது வயது முதிர்ச்சியைக் குறிப்பிடு முகமாக,

வயிற்றை நோக்கிய முலையினள் வீழியின் வரையாள்
பயிற்றி டும்மெலா மோகஞ்செய் பேரிளம் பாவை
(இறந்து வந்து மணஞ் செய் படலம்: 193)

என வருணிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இவ்வேழு பருவங்களைச் சேர்ந்த பெண்களும் ஊர்வலம் சென்ற பொற்கதிர் மாட வீதியில் உலவினர் என

எழுவ கைப்படு பெண்களு மிவ்வகை யியல
ஒழுகு பொற்கதிர் மாடவீ திகளெலாம் உலவித்
தொழுக ரக்கரு விழிச்சியர் மனமெலாந் தொடரச்
செழும லர்த்தொடை புனைதிருப் பந்தர்முன் சேர்ந்தான்
(இறந்து வந்து மணஞ் செய் படலம்: 194)

அதே படலத்தில் 197 முதல் 207 வரை உள்ள பாடல்களில் பெண்களின் உறுப்புக்களும் அணிந்திருந்த அணிகலன்களும் வருணிக்கப்பட்டுள்ளன.

**அறவுரை**

ஒரு மனிதனுக்கு இருக்க வேண்டிய சிறப்பியல்புகள் ஒரு பாடலில் விதந்தோதப்பட்டுள்ளன. மனிதப் புனிதரான ஒருவர் தமது புலன் வழியே மனதைச் செல்லவிடாது கட்டுப்படுத்தல் வேண்டும். தவம்

புரிந்திருத்தல் வேண்டும். கல்வியும் உயர்ஞானமும் கற்றிருத்தல் வேண்டும். நல்லறிவுடையோராய் இருத்தல் வேண்டும். நல்லொழுக்கம் அமைந்தோராய் இருத்தல் வேண்டும். அன்புடையவராய் இருத்தல் வேண்டும். உலகியல் நன்கு தெரிந்திருத்தல் வேண்டும். பூமியைப் போன்று பொறுமை உடையராய் இருத்தல் வேண்டும். இவையெல்லாம் நிறைய அமைந்திருத்தல் வேண்டும். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

பொறிவழி மனம்புகாது புரிதவ ஞானங் கல்வி
அறிவுசீ ரொழுக்க மன்பொ டுலகிய லகிலம் போன்ற
பொறைநிறை யமைந்து வாழ்தற் ககமெனும் புனித மேவு
நெறியின ரொருவ ரோங்கு மகிழ்வொடு நிகழ்த்து வாரால்

(கலிறு நபி வாய்மைப் படலம்: 1)

யார் தீமை செய்வர்? யார் தீமை செய்தல் பொறுக்க வேண்டும்? யார் தீமை செய்தால் அது பொறுத்தற்கரிய தொன்றுகும்? என்பனவற்றை ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர் தமது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில். கற்று அறிந்தவர்கள் தீயவை செய்யின் அதனைப் பொறுத்துக் கொள்ளல் அரிதான ஒரு செயலாகும். ஆனால் பகுத்தறிவோ ஆராய்ந்தறியும் ஆற்றலோ இல்லாத ஒருவன் ஏதாவதொரு தீமை செய்தால் அத்தகைய தீமை செய்தோரைப் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டும். மன நோயாளரும் மது பானத்தினல் சுய நினைவு இழந்தோரும் தீய்மை விளைத்தால் இழிஞர் என்றே கருதப்படுவர். எனவே நாம் தீமை செய்யாது தவிர்த்திடல் வேண்டும். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

அறிந்தவர் தீய்மை செய்தால் பொறுத்திட லரிதா ராய்வு
முறிந்தவர் தீய்மை செய்தால் முழுக்கடன் பொறுப்ப தன்றே
வெறிந்தவர் அறியாத் தீய்மை விளைத்தவர் தொழும்ப ரென்றே
செறிந்தவரி யாங்கள் செய்த தீவினை தீர்க்க வேண்டும்

(ருபியத்துல் அதவிய்யா நிறையுணர் படலம்: 110)

இக்காப்பியத்திலும் பிள்ளைச் செல்வத்தின் மேன்மை பேசப்படுகிறது. செல்வம் எவ்வளவு தான் இருந்தாலும் குழந்தை இல்லை எனின் அது ஒரு பெருங் குறையாகவே இருக்கும். புதல்வர் இருத்தல் தேன் உள்ள மலர் போன்ற கண்ணிலே உள்ள மணியின் வெள்ளை போன்று விளங்கும். எனவே தான் பிள்ளைகள் கண்மணி எனப்பெற்றனர். இதனையே ஆசிரியர் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

பிள்ளை யற்ற பெருஞ்செல்வ மெவ்விதக்
கொள்ளை யுற்றிடி னுங்குறை யேயன்றே
கள்ளை யுற்ற மலர்க்கண் மணியிலோர்
வெள்ளை யுற்றது போலும் விளங்கலே

(முகியித்தீனிபினியறபி யுதித்தோங்கு படலம்: 33)

இதே கருத்தினை வேறொரு செய்யுளில் ஆசிரியர் வேறுவிதமாகக் குறிப்பிட்டுள்ளார். சிறு பிள்ளைகள் கைகளால் துழாவிய கூழானது அமிர்தத்தை விட மேலானது எனக் குறிப்பிட்டுள்ளார். பிள்ளைப் பேறின்றித் தனித்தவராயும் மலடுகளாயும் இருப்பவர் உட்கொள்ளும் உணவு வேம்பு போன்று கசப்பானதாயிருக்கும். இனிமை இருக்காது. இன்பம் தராது. கிரிமியைச் சாப்பிடுவது போன்று அந்த உணவு அமைந்து விடும். இக்கருத்துக்களையே ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

உமிழ்வ தாய மைந்தர்கை யுழப்புகூழ்
அமிழ்தின் மேன்மையென் பாரது வாதலிற்
றமிய ராய்மல டானவர் தங்களுண்
அமையும் வேம்புங் கிரிமியு மாவதே

(முகியித்தீனிபுனியறபி யுதித்தோங்கு படலம்: 36)

அமைச்சரின் முக்கியத்துவம் ஒரு பாடலில் சுட்டப்பட்டுள்ளது. ஒரு மன்னனின் கடமை அமைச்சரைப் பேணி உயிர் போற் காத்தலாகும். அவ்வமைச்சர் ஆலோசனையை ஆராய்ந்து ஒழுகுதல் அரசன் கடமையாகும். அமைச்சரோ அரசனுக்கு இடித்துரைக்கும் ஆற்றல் வாய்ந்தவர். நல்லவற்றைத் தீயவற்றிலிருந்து பிரித்துக் காட்டி அறவுரை பகரும் தகமை பெற்றவர். அத்தகைய அமைச்சர் ஒருவரின் ஆலோசனையை ஏற்று ஒழுகிடா மன்னர் தோல்வி காண்பர். அவர் விரும்பும் செல்வமும் அப்பொழுது அவரை விட்டு அகன்று விடும். உயர்ந்த அரசையும் இழக்க நேரிடும். அரசே வேரொடும் கெட்டு விடும். ஆகவே கருப்பொருள் உணர்ந்து அரசர் செயல்பட வேண்டும். வருமுன் எதையும் தடுத்துக் காத்துக் கொள்ள வகை செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யாமல் வேறு ஏதாவது கேடேற்பட்டால் அதனை அமைச்சர் மீது சாட்டுவர். ஆதலினால் கேடு வராமல் அமைச்சருடைய ஆலோசனையைக் கேட்டு அரசர் ஒழுகுதல் வேண்டும் என்பது ஈண்டு வலியுறுத்தப்பட்டுள்ளது. இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

பிரித்திடித் துரைக்கு மமைச்சரை உயிர்போற்
பேணியாய்ந் தொழுகிடா மன்னர்
விரிப்புறு பெருஞ்செல் வமுமுய ரரசும்
வேரொடுங் கெடுவ தாத லினல்
கருப்பொரு ளுணர்ந்து வருமுனந் தடுத்துக்
காப்பவர் ஒருவரற் றிவன்தன்
மருட்குடி யுருக்கு மனப்படி செயுமந்
திரியினல் வந்தகே டென்பார்

(கலையருட் படலம்: 53)

திருக்குறளிலும் அமைச்சு என்னும் அதிகாரத்தில் அமைச்சின் சிறந்த பண்புகள் விதந்தோதப்பட்டுள்ளன. வண்ணக்களஞ்சியப் புலவர் தமது பாடலில் கூறிய கருத்துக்களுக்கு ஆதாரமாகத் திருக் குறளின் இக்குறள் வெண்பாவை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு

(64:4) (634)

**சொல்லாட்சி**

வண்ணக்களஞ்சியப் புலவர் தமது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில் எவ்வாறு சொற்களைப் பயன்படுத்தியுள்ளார் என்பதைப் பார்ப்போம். மாட்சிமை என்னும் பொருளில் ஆன்றல் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார் ஒரு பாடலில்.

ஆன்றல்செய் கருணைகூர வடுத்திருந்து
அழைக்கப் பெற்றேன்

(கலையருட் படலம்: 14)

இடவை என்றால் வழி எனப்பொருள் கூறுகிறது பிங்கல நிகண்டு. ஓர் ஊரை விட்டு வழியில் புக்கு காடு, ஆறு, மலை எல்லாவற்றையும் கடந்த பொழில்கள் சூழ்ந்த பகுதாதை அடைந்தார் என்பதைக் குறிப்பிடும்பாடலிலே இடவை என்பது வழி என இவ்வாறு பயன் படுத்தப் பட்டுள்ளது.

முடித்தி யாவரு மவரவர்க் கியல்பொருண் முழுது
எடுத்த வூரைவிட் டிடவை புக்கட வியா றெவையும்
அடுக்கலி யாவதுங் கடந்து பொன்மழை யெனவமுதை
வடித்து வான்றொடு பொழில்பகு தாதில்வந் தனரே

(ருபியத்துல்லதவிய்யா நிறையுணர் படலம்: 33)

இரணியம் என்னும் சொல்லைப் பொன் என்னும் பொருளில் ஆசிரியர் ஒரு பாடலில் பயன்படுத்தி உள்ளார். சாம் நகருக்குச் சென்று வியாபாரத்தில் ஈடுபட்டுச் சரக்குகள் விற்று பொன் முதலியன கொண்டு வர எண்ணியிருந்தமை பற்றிக் குறிப்பிடும் பொழுது இரணியம் என்னும் சொல் பொன்னைக் குறிக்க இக்காப்பியத்தில் பயன் படுத்தப்பட்டுள்ளது.

சாமெனு நகரஞ் சார்ந்து சகத்திரந் தங்கக் காசு
கேமவொண் சரக்கு விற்றே இரணிய மிதுமை யிட்டு
மாமகிழ் வொடுதம் பாலி னுவியை நிகராய் வைத்துச்
சேமம்வாழ் பகுதா தேகச் சிந்தித்தாங் கிருந்தா ரன்றே

(உயிர் பொருண் மீட்ட படலம்: 11)

இரவணம் என்பது ஒட்டகம் என்கின்றது பிங்கல நிகண்டு. சாம் நகருக்குச் சென்றவர்கள் தத்தம் சரக்குகளை ஒட்டகங்களில் ஏற்றிக் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம் முதலிய நிலங்களையும் சோலைகளையும் கடந்து சென்றனர் எனக் குறிப்பிடும் பொழுது ஒட்டகத்தைக் குறிக்க இரவணம் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார் காப்பிய ஆசிரியர். பாடல் இது தான்,

மழுவொடு தண்டம் வில்வாள் வல்லையங் கவண்க லேந்துங்
குழுவொடு சரக்கி யாவு மிரவணத் தினிற்கொண் டேற்றிப்
பொழில்செறி மருத முல்லை பாலைபோய்க் குறிஞ்சி நீங்கித்
தழுவிமை குலவு மாடஞ் சாமெனு நகரஞ் சார்ந்தார்

(உயிர் பொருண் மீட்ட படலம் : 10)

இருமதி தூரம் என்னும் சொற்றொடர் ஒரு பாடலில் பயன்படுத்தப் பட்டுள்ளது. மதி என்பதை மாதம் என்று கொண்டால் இச்சொற் றொடர் இரண்டு மாத கால நடைப்பயணத்தின் தூரம் என்று கொள்ள லாம். இசுபகான் என்னும் இடத்திலிருந்து பகுதாது என்னும் நகருக்கு இருமதி தூரம் என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இசுபகானும் பகு தாதும் இருக் நாட்டில் உள்ள இரு நகரங்கள். இருமதி தூரம் என்னும் சொற்றொடர் அமைந்த பாடலின் இறுதி இரண்டு அடிகளும் வருமாறு :

நவப்பெ ருந்தவி விசுபகா னென்னுமந் நகர்க்குத்
துவக்கு நம்பகு தாதுக்கு மிருமதி தூரம்

(துகிலேவு படலம் : 13)

உவ்வி என்றால் தலை என்பது பொருள். (திவாகர நிகண்டு). வண்ணக்களஞ்சியப் புலவரும் தலை என்னும் பொருளிலே உவ்வி என்னும் சொல்லை ஒரு பாடலில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார் :

ஓடியே குருதி சிந்த உவ்வியைத் துணித்துப் போக
(உயிர் பொருண் மீட்ட படலம் : 16)

ஓதனம் என்பது மற்ருேர் அருமையான உபயோகம். இதன் பொருளை திவாகர நிகண்டு சோறு என்றும் பிங்கல நிகண்டு உணவு என்றும் ஏறத்தாழ ஒரே பொருளைக் குறிப்பதாகச் சுட்டியுள்ளன. வண்ணக்களஞ்சியப் புலவரும் இதே சொல்லை இதே பொருளில் இவ்வாறு ஒரு பாடலின் முதலடியில் பயன்படுத்தி உள்ளார்.

ஒருமையுற் றகத்தினுற்ருேர் ஓதனஞ் செய்யும் போது
(இறந்து வந்து மணஞ்செய் படலம் : 146)

கந்தரம் என்ருல் கழுத்து என்பது பொருள். கழுத்து என்பதைச் சுட்டக் கந்தரம் என்னும் சொல் ஒரு பாடலில் ஆளப்பட்டுள்ளது.

தனியொடு கரத்தினுற் கந்தரத்தினைத் தடவிப் பார்த்தார்
(உயிர்பொருண் மீட்ட படலம்: 17)

கவலி என்பது மனம் வருந்தி என்று பொருள்படும். சிலப்பதிகார உரையில் கவலித்து என்னும் சொல் 'அஃது அறியாது என் பிழைப் போ என்று அவலித்து அரற்றிக் கவலித்துக் கையாற்றின்கண் நெஞ்சமுங்கா நின்றது' (13:91:உரை). என வந்துள்ளது. வண்ணக் களஞ்சியப் புலவரும்

கவலி யாப்பிழை படைத்ததை யகற்றிக்காத் தனரே
(செய்கப்துறகுமான் செருக்ககன்றது: 25)

என்று கவலி என்னும் சொல்லை ஆண்டுள்ளார்,

குமரிருத்தல் என்பதே வீணே கழிதல் எனப் பொருள்படும். இதே சொல்லை இதே கருத்தில் வண்ணக்களஞ்சியப் புலவர்

முத்த வெண்ணகையா யுனைக்குமரிருத்தி...
(இறந்து வந்து மணஞ் செய் படலம்: 79)

குரகதம் என்ருல் குதிரை என்பது பொருள். குதிரைகள் உள்ள இடம் குரகதச்சாலை என அழைக்கப்படும். குதிரைகள் வாழுமிடம் என்னும் பொருளில் குரகதச் சாலை என்னும் சொல்

இவ்வுழி யெனநக ரவரி யம்பினுர்
அவ்வுழி குறித்தவ ணடையுங் காலையின்
ஒவ்வியம் மனைக்கரு கோங்கி யுற்றதோர்
தவ்விய குரகதச் சாலை கண்டனர்

(குன்மந் தீர்த்த படலம்: 9)

இதே கருத்தில் இப்பாடலில் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காண லாம்.

ஊன்று கோலுடையவன் என்னும் பொருளில் கைக்கோலானேன் என இபுலீசு இவ்வாறு ஒரு பாடலில் வருணிக்கப்பட்டுள்ளான்.

கதியறு மிபுலீ சென்றோர் கண்ணற்றேன் கைக்கோ லானேன்
(நசாருக் களீமான் கொண்ட படலம்: (3)

கோசிகம் என்பது பட்டாடை. பட்டாடை அணிந்தாள் என்னும் பொருளில் கோசிகத் துகில் என்பது ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

அன்ன மென்னடை மணிநகை யிகுளைய ரருள
முன்ன ணிந்தவொண் டுகிலினை யகற்றிமுற் றியசெங்
கன்ன லின்சுவை கனிந்தசொல் லிளமுலைக் கன்னிப்
பொன்னி ருந்தொளிர் கோசிகத் துகில்புனைந் தனளே
(இறந்து வந்து மணஞ் செய் படலம் : 206)

கோலாரி வண்டில் என்பது வண்ணக்களஞ்சியப் புலவர் பயன் படுத்தி உள்ள மற்றொரு சொற்றொடராகும். இரட்டைக் குதிரை வண்டில்களைக் குறிப்பிடவே இச்சொற்றொடர் பயன்படுத்தப்பட் டுள்ளது எனக் கூறலாம். கோலாரி வண்டில் என்னும் சொற்றொடர்,

பக்க வாம்பரி பலபல பந்திபந்தி களாய்ப்
புக்க தாங்குவந் திடுகதிர் வாம்பரி போலும்
மிக்க தானகோ லாரிவண் டிலும்விய னுருள்செய்
தொக்க வேயுல வுவதுபோற் சிறந்தன வோங்கி
(இறந்துவந்து மணஞ் செய் படலம் : 172)

சகச்சிரம் என்பது சகத்திரம் என வழங்கப்படுகிறது. ஆயிரம் என்பதுஇதன் பொருள். ஆயிரம் தங்கக் காசுகளைக் குறிப்பிட இச் சொல் இவ்வாறு ஒரு பாடலில் இடம்பெற்றுள்ளது.

சாமெனு நகரஞ் சார்ந்து சகத்திரந் தங்கக் காசு
(உயிர்பொருண் மீட்ட படலம் : 11)

சனித்து என்பது உண்டாகி எனப் பொருள்படும். அச்சம் உண்டாகி என்பதை 'பயஞ் சனித்தே' என்று ஒரு பாடலின் இறுதி அடியில் இவ்வாறு ஆண்டுள்ளார் ஆசிரியர்.

தண்ட வாய்புதைத் தருகினின் றனர்பயஞ் சனித்தே
(குன்மந்தீர்த்த படலம் : 37)

சுவம் என்பது உடைமை. சுவம் என்னும் சொல்லை இதே கருத்தில் ஆசிரியர் இவ்வாறு உபயோகித்துள்ளார்.

சூடக மலர்க்கை யாரு மைந்தருஞ் சுவமிக் காக
(இறந்து வந்து மணஞ் செய் படலம் : 98)

சுவமணமனே என மற்ருெரு சொற்ருெடர் ஆசிரியரால் பயன் படுத்தப் பட்டுள்ளது. சுவ என்பது தன்னுடைய என்ற பொருளைச் சுட்டுகிறது. இச்சொற்ருெடர்

சுவமண மனேபுக் கிறப்பதே சிறப்பென் றகத்தினில்

துணிந்தன டோகை
(இறந்து வந்து மணஞ் செய் படலம் : 83)

சோங்கு என்னும் சொல் இறந்து வந்து மணஞ்செய் படலத்தில் மரக்கலத்தைக் குறிக்கப் பல பாடல்களில் ஆசிரியரால் பயன்படுத்தப் பட்டுள்ளது.

தோற்றித்தனதாகிய சோங்கினிலே (44)
என்றும்

தெரிவாயுயர் சோங்கு செலுத்தினரே (55)
என்றும் பல இடங்களில் இச்சொல் ஆளப்பட்டுள்ளது.

தந்துவன் என்ருல் வேதமுடையோன் என்பது பொருள். தந்துவன் என்னும் சொல்லை இதே பொருளில் வண்ணக்களஞ்சியப் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

அணித்து வாய்புதைத்து நின்று தந்துவன் அறைகு வானே
(கலையருட் படலம்: 30)

தமனியம் என்பது பொன்னைக் குறிக்கும். இதே சொல்லை இதே பொருளில் ஆசிரியர்

தமனிய முழுதுங் கொள்வர் சார்வதீ தெனவிண் டாரே
(உயிர் பொருண் மீட்ட படலம்: 3)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

துவாந்தம் என்பதன் பொருள் இருள் என்பதாகும். ஆசிரியர் இதே கருத்தில் துவாந்தம் என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

எழிர வோர்து வாந்தம் எனவிறை அறுசின் ஏகி
(கலையருட் படலம்: 1)

துன்னம் என்பது தையல். புறநானூறு இச்சொல்லை இதே கருத் தில் இவ்வாறு கொண்டுள்ளது.

யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
இழைவலந்த பஃறுன்னத்து (1 – 2)

வண்ணக்களஞ்சியப் புலவர் தமது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில் துன்னம் என்னும் சொல்லைத் தையல் என்னும் பொருளில்

அன்பொடவ் வகையே செய்தா ரதற்குமே
லொருதுன் னத்தால்
(உபதேசப் படலம்: 4)

என்றும்

மற்றொரு துன்னத் தாலே மறுமையி லதிக வாழ்க்கை
(உபதேசப் படலம்: 5)

என்றும் ஆசிரியர் ஆண்டுள்ளமையைக் காணலாம்.

தொந்தோம் என்பது இசையிலே வரும் ஒரு தாள ஒலிக்குறிப்பு ஆகும். இந்தத் தாள ஒலிக் குறிப்பை விரைவாக என்பதைக் குறிக்க இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

தொந்தோமென விங்கோடி நெடுந்தூர மிருந்தே
வந்தோமிது கண்டோமன மன்பாகி மகிழ்ந்தோம்
(முகியித்தீனிபினியறபி யுதித்தோங்கு படலம்: 86)

நேந்தல் என்னும் ஒரு சொல்லை ஆசிரியர் இங்கு பயன்படுத்தியுள்ளார். நே என்றால் ஈரம் என்று பொருள். புறநானூறு இச்சொல்லை இவ்வாறு கொண்டுள்ளது.

நேமி யுய்த்த நேஎ நெஞ்சின் (3:4)

இந்த நே என்ற சொல்லிலிருந்து நேந்தல் என்பது தோன்றி இருத்தல் வேண்டும். நேந்தல் என்பதும் ஈண்டு ஈரம் என்னும் பொருளிலே வந்துள்ளது எனக் கூறலாம். இக்காப்பியத்தில் உள்ள பாடலிலும் ஈரம் பொங்கிய அன்பு என்று பொருள் கொள்ளக்கூடியதாக நேந்தல் என்னும் சொல் அமைந்துள்ளது. வண்ணக்களஞ்சியப் புலவரின் ஆட்சி இவ்வாறு அமைந்துள்ளது.

நேந்தல் பொங்கிய கருணையாய் நீரிரு வோரும்
(இறந்து வந்து மணஞ்செய் படலம்: 215)

நொய்ய வார்த்தை என்னும் சொற்றொடர் இங்கு ஆளப்பட்டுள்ளது. நொய்ய என்றால் மென்மையான என்பது பொருள். எனவே மென்மை யான சொற்கள் என்பதைக் குறிக்க நொய்ய வார்த்தை என்பதை இவ்வாறு அமைத்துள்ளார் ஆசிரியர்.

சொலவரு நொய்ய வார்த்தைத்
தொகையிட லரிது தோன்றல்
(இறந்து வந்து மணஞ்செய் படலம்: 141)

பணம் என்னும் சொல்லுக்குப் பல பொருள் உண்டு. அவற்றுள் ஒன்று பாம்பின் படம் என்பதாகும். பாம்பின் படம் என்னும் பொருளில் ஒரு பாடலில் இச்சொல் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

சேர்ந்த வெண்பொறித் துத்திக ளுறுபணம் விரித்துக்
காந்து செம்மணி விழியொடுங் கொடுவிடங் கலந்து
தோய்ந்த சீறுயிர்ப் பொடும்ஒரு பாந்தள்தோன் றியதே
(சின்பணிவரு படலம்: 3)

பத்தம் என்றால் உணவு என்பது பொருள். நாலாயிரத்திவ்ய பிரபந்தம் நாச்சியார் திருமொழி பன்னிரண்டாந் திருமொழியில் வரும் ஆறும் பாடலுக்கான வியாக்கியானத்தில் பத்தம் என்னும் சொல் உணவு என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பத்தம் என்பதை உணவைக் குறிக்க வண்ணக்களஞ்சியப் புலவர் ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார். அச்செய்யுளின் இறுதி அடிகள் இரண்டும் இவ்வாறு அமைந்துள்ளன.

முத்த மிட்டனள் முகியித்தீன் அரசுதம் பதத்தில்
பத்த மிட்டனள் அத்திசை நோக்கியும் பணிந்தாள்
(உயிர் தரு படலம் : 20)

பித்திகை என்பது சுவர் எனப் பொருள்படும். (பிங்கலந்தை நிகண்டு). இதே பொருளில் பித்திகை என்பது ஒரு செய்யுளில் இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

முந்துறு கறுவி னுற்பித் திகையினி லெறிவார் மோதி
(இறந்து வந்து மணஞ் செய் படலம் : 96)

மொழிச்சி என்பது பெண்ணைக் குறிக்க குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. தெளிந்த தேன் போன்ற இனிமையாகப் பேசும் பெண் என்பதைக் குறிக்கவே இக் காப்பிய ஆசிரியர் மொழிச்சி என்பதை இவ்வாறு மேற்கொண்டுள்ளார்.

தெள்ளுதேன் மொழிச்சியுந் துணையுஞ் செப்பினுர்
(மரித்தெழுந்து மக்களீன்ற படலம் : 11)

வெள்ளறிவு என்பது அவிவேகத்தைக் குறிக்கின்றது. புத்தியில்லாமையைச் சுட்டுகின்றது. நாலடியாரில் வரும் ஒரு பாடலில் அறிவில்லாதவர் என்பதைச் சுட்ட வெள்ளறிவினுர் என்பது இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

பாம்பிற் கொருதலை காட்டி ஒருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டும் - ஆங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ளறிவி னுர்
(பொது மகளிர் : 5) (375)

வண்ணக்களஞ்சியப் புலவர் தமது காப்பியத்தில் வெள்ளறிவு என்னும் சொற்றொடரை இவ்வாறு ஆண்டுள்ளார்.

தள்ளரு மறைப்பொருள் தருகி தாபையெம்
வெள்ளறி வதற்கிணங் காவி தத்தினுல்
(முகியித்தினறபி யுதித்தோங்கு படலம் : 125)

வேலை என்னும் சொல் வேளை அல்லது காலம் என்னும் பொருளைக் கொண்டது (பிங்கல நிகண்டு). திருவள்ளுவரும் தமது திருக்குறளில்

மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது
( 123:1 ) (1221)

என வேலை என்னும் சொல்லை நேரம் என்னும் பொருளில் பயன் படுத்தி உள்ளமையைக் காணலாம். வண்ணக்களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் என்னும் முகியித்தீன்

புராணத்தில் பல செய்யுட்களில் வேலை என்னும் சொல் காலத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

சுற்றியுட் டுறந்த தூயோர் சூழ்ந்துற விளங்கும் வேலை
(கல்வி நெறிப் படலம் : 42)

இன்னவே லையிலே குத்துப புல்வபா விடத்தி னீவிர்
(கல்வி நெறிப் படலம் : 54)

அந்த வேலைதள் ளினர்சுகூ திட்டன ரண்ணல்
(சின்பணி வரு படலம் : 4)

நித்திரை புரிந்தார் அந்த வேலையி னெடியோன் தூதர்க்கு
(பேரேங்கு படலம் : 19)

வியத்தகண் சொருகித் தூக்க மிகுந்துறங் கினர்அவ் வேலை
(உயிர்பொருண் மீட்ட படலம் : 14)

இன்னும் பல.

எந்தக் காப்பியத்திலும் இடம் பெருத, பிற தமிழ் இலக்கியங் களிலே பிழையெனப் பயன்படுத்தப்படாத ஒரு சொல்லை வண்ணக் களஞ்சியப் புலவர் தமது நூல்களில் பயன்படுத்தி உள்ளார். இஸ் லாமிய அடிப்படையில் தோன்றிய சிற்றிலக்கியங்கள் பலவற்றிலும் இக்குறிப்பிட்ட சொல் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். 'கணவி' என்பது தான் அச்சொல். மனைவி என்னும் பொருளிலே கணவி என்னும் சொல்லை வண்ணக்களஞ்சியப் புலவர் தமது காப்பியங்களான இராஜநாயகம், குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணம், தீன் விளக்கம் என்பனவற்றில் பயன்படுத்தி உள்ளார். குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில்.

கறையறு மதிமுகக் கணவி காந்தனென்
றறைதரு மிருவருற் றடுத்து நின்றனர்
(மரித்தெழுந்து மக்களீன்ற படலம் : 2)

பூண்டனன் கணவி தன்னை நோக்கியே
புருடத் தோன்றல்

(பெண்களாணுருப் பெறு படலம் : 3)

பெண்களும் பிதாவு மாகப்
    பெருஞ்செல்வ மனையில் மேவக்
கண்களி லடங்காக் காட்சி
    கணவியு மெவருங் கண்டு
விண்களும் துதிக்கும் வள்ளல்
    விரைமலர்ப் பதந்து தித்தார்
பண்கொளு மதுர வாய்மைப்
    பாவையர் கவலை தீர்ந்தார்

(பெண்களாணுருப் பெறு படலம் : 19)

**யாப்பமைதி**

ஏனைய காப்பியங்களைப் போன்று குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்திலும் விருத்தப் பாக்களே இடம் பெற்றுள்ளன. அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தங்களும் ஏனைய ஆசிரிய விருத் தங்களுமே பெரும்பாலும் அமைந்துள்ளன. ஒரு கலிவிருத்தம் அமைந் துள்ள முறையைப் பார்ப்போம். முதலில் கலி விருத்தத்தைப் பார்ப் போம்.

வெண்ணி லைப்பிற் போனதை மீளவும்
எண்ணி மற்றினி யென்பல னின்றியாம்
புண்ணி யப்பொருள் பாற்புகழ் வோமவர்
உண்ண யப்பொ டுதவுமென் றெண்ணினர்

(முகியித்தீனிபுனியறபி யுதித்தோங்கு படலம் : 45)

இக்கலி விருத்தத்தில் அடிதோறும் பதினோர் எழுததுக்கள் வந்துள் ளன. முதல் சீர் தேமாவாக இருப்பதனாலேயே பதினொரு எழுத்துக்கள் அமைந்துள்ளன. இச்செய்யுளில் சீர்கள் ‘தேமா கூவிளம் கூவிளம் கூவிளம்’ என வந்துள்ளன.

இனி பன்னிரண்டு எழுத்துக்களைக் கொண்ட புளிமாச்சீரை முதற் சீராக உடைய ஒரு கலி விருத்தத்தைப் பார்ப்போம்.

பெருக்குஞ் செல்வரைப் பெற்றிடும் பேறினும்
உருக்கு நல்லறி வுற்றதற் றுலது
மருக்கொ ளாத மலர்கொண்டு நின்றிடு
முருக்க தாக மொழியு முலகமே

இச்செய்யுளின் சீர்கள் 'புளிமா கூவிளம் கூவிளம் கூவிளம்' என்னும் வாய்ப்பாட்டில் வந்துள்ளமை காண்க. அளவொத்து வரும் நான்கு சீர் அடிகள் நான்காக வரும் கம்பராமாயணக் கலிவிருத்தம் ஒன்று வருமாறு:

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
சரண மன்னவர்க் கேசர ணுங்களே

(கடவுள் வாழ்த்து: 1)

இவ்வாறு பல சந்தங்களை மாற்றி மாற்றி அமைத்துப் பல்வேறு விருத்தப் பாக்களில் தமது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தைப் பாடியுள்ளார் வண்ணம் பாடுவதில் சிறந்து விளங்கிய வண்ணக்களஞ்சியப் புலவர்.

ஹிஜ்றி 1293இல் கிதுரு முகம்மது மரைக்காயரால் பதிப்பிக்கப் பட்டு காரைக்கால் முகம்மது சமதானி அச்சியந்தர சாலையில் அச்சிடப் பட்ட பிரதியே இவ்வாய்வுக்குப் பெரிதும் பயன்படுத்தப்பட்டது.

# எட்டாம் இயல்

## முகியித்தீன் புராணம்

காதிறிய்யா என்னும் ஆத்மிக வழியை நிறுவிய முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி(றலி) அவர்களின் வாழ்க்கை பல புலவருக்குக் கருப்பொருளாய் அமைந்தமை பற்றி முன்னர் குறிப்பிட்டோம். முகியித்தீன் புராணத்திலும் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையே கருப்பொருளாக அமைந்துள்ளது. இதுவரை ஆராயப்பட்ட காப்பியங்கள் அனைத்திலும் முதலாவது படலமாக அமைந்தது கடவுள் வாழ்த்து என்னும் படலமாகும். ஏனைய காப்பியங்கள் பலவற்றில் காப்புச் செய்யுள்கள் கடவுள் வாழ்த்துப் படலத்துக்கு முன்னர் இடம் பெறச் செய்யப்பட்டிருந்தன. முகியித்தீன் ஆண்டவரின் வாழ்க்கையை வருணித்த வண்ணக் களஞ்சியப் புலவர் இரண்டு காப்புச் செய்யுட்களை முதலாவதாகப் பாடிவிட்டு கடவுள் வாழ்த்து படலத்துக்கு அடுத்ததாகப் பாயிரம் என்னும் ஒரு பகுதியையும் தமது குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணத்தில் இடம் பெறச் செய்திருந்தார். ஆனால் இம் முகியித்தீன் புராணம் என்னும் காப்பியத்தில் அதன் ஆசிரியர் கடவுள் வாழ்த்துப் படலம் என்று ஒன்றை அமைக்கவில்லை. அதற்கு மாறாக முதலில் பாயிரம் என்ற பகுதியைப் பாடி உள்ளார். பாயிரம் என்ற பகுதியின் தொடக்கமே காப்புச் செய்யுட்களாக அமைந்துள்ளது.

**ஆசிரியர்**

முகியித்தீன் புராணம் என்னும் காப்பியத்தின் ஆசிரியர் பதுறுத்தீன் புலவர். மகாவித்துவான். இலங்கையில் வாழ்ந்து இக் காப்பியத்தை இயற்றி உள்ளார். இவர் இலங்கையரே என ஒரு சாரார் கூறுவர். மற்றொரு சாரார் இவர் சென்னையிலே பிறந்து இலங்கையிலே வாழ்ந்தவர் என அபிப்பிராயப்படுவர். இலங்கையின் வடக்கே அமைந்துள்ள யாழ்ப்பாணத்திலே தான் தமது முகியித்தீன் புராணத்தை இயற்றி உள்ளார். ஆசிரியரைப் பற்றிய குறிப்பு இவருடைய முகியித்தீன் புராணத்தில் ஒரே ஒரு செய்யுளில் மாத்திரம் இடம் பெற்றுள்ளது. இயற்றப்பட்ட ஆண்டு மாதமும் தேதியும் ஆசிரியரின் பெயரும் அகச்சான்றாக ஒரே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது.

அருணபி ஹிஜிறத் தாயிரத்திரு நூற்றுமுப்பத்
தொருவரு டத்தில் ஜமாத்து லாகிறு பிறையின் றேதி
இருசத மூன்று திங்கள் வாரத்தி லின்புற் றோங்கி
மருவியே எவருங் கேட்பப் பதுறுத்தீன் கவிசொன் ஞனே

(பாயிரம்: 22)

பதுறுத்தீன் புலவர் முகியித்தீன் ஆண்டவர் பேரில் முனாஜாத்துப் பாடல் ஒன்றும் இயற்றி உள்ளார் என்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

**பாயிரம்**

முகியித்தீன் புராணத்தில் கடவுள் வாழ்த்துப் படலத்துக்குப் பதிலாக அமைந்துள்ள பாயிரத்தில் காப்புச் செய்யுட்களாகவே முதல் ஆறு செய்யுட்களும் இருக்கின்றன. ஏக இறைவனான அல்லாஹ்வின் அருளையும் ஆசியையும் வேண்டும் பாக்களாகவே இவ்வாறு பாடல்களும் அமைந்துள்ளன. அடுத்த இரண்டு பாடல்களிலும் பெருமானார் (சல்) அவர்கள் புகழப்பட்டுள்ளார்கள். கஷ்டமான வாழ்க்கையை அனுபவித்து அவ்வாழ்க்கையில் வெற்றி கண்ட உலுல் அசுமி என அழைக்கப்பட்ட நபிமார்கள் அடுத்த செய்யுளில் புகழப்பட்டுள்ளனர். ஏனைய காப்பியங்களில் உலுல் அசுமிகளைப் பற்றிய வருணனையைக் காண்பது அரிதாகும். பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணத்தில் உலுல் அசுமிகளென ஆறு நபிமார்கள் வருணிக்கப்பட்டுள்ளனர். ஆதம் நபி (அலை), நூஹ் நபி (அலை) இபுறுகீம் நபி (அலை) மூசா நபி (அலை) ஈசா நபி (அலை), முகம்மது நபி (சல்) ஆகிய அறுவரும் உலுல் அசுமி என அழைக்கப்படுவர். உலுல் அசுமி எனப்படுவோர் நபிமார் ஐவர் என்றும் ஆதம் நபி (அலை) அவர்கள் உலுல் அசுமி ஆகக் கணிக்கப்படவில்லை என்னும் அபிப்பிராயமும் நிலவுகிறது. பதுறுத்தீன் புலவர் தமது காப்பியத்தில் உள்ள பாயிரத்தில் உலுல் அசுமி என்னும் நபிமார்களை அவர்களின் பெயர்களைச் சுட்டாது அவர்களின் சாதனைகள் ஒவ்வொன்றைக் குறிப்பிட்டு அந்நபிமார்களை அறிமுகஞ் செய்துள்ளார். 'நரர்களைப் பெற்றவர்' என ஆதம் (அலை) அவர்களும் 'நதி வரவுற்றவர்' என நபி நூஹ் (அலை) அவர்களும் 'நம்றூது வைத்தழலைச் சுரர்பதியொப்பென வரமருள் பெற்றவர்' என நபி இபுறுகீம் (அலை) அவர்களும் 'திருமறியத்துறை வயினிலுதித்தவர்' என நபி ஈசா (அலை) அவர்களும் 'தெரிமறை யுற்றிடுவார் ஒருவனே டுற்றுரை யறுதி பெருத்தவர்' என நபி முகம்மது (சல்) அவர்களும் ஒரு விருத்தப்பாவில் இவ்வாறு புகழப்பட்டுள்ளனர் :

நரர்களைப் பெற்றவர் நதிவர வுற்றவர் நம்றூது வைத்தழலைச்
சுரர்பதி யொப்பென வரமருள் பெற்றவர் தொலைநதி தட்டினவர்
திருமறி யத்துடை வயினிலு தித்தவர் தெரிமறை யுற்றிடுவார்
ஒருவனே டுற்றுரை யறுதிபெ ருத்தவ ருலுலசு மைப்புகல்வாம்

(பாயிரம் : 9)

ஓர் இலட்சத்து நாலாயிரம் நபிமார்கள் அடுத்த செய்யுளிலும் (10) நான்கு தலைசிறந்த கலிபாக்கள் 11 முதல் 14 வரை உள்ள செய்யுட்

களிலும் அசன் (றலி) அவர்களும் உசைன் (றலி) அவர்களும் 15ஆம் செய்யுளிலும் புகழப்பட்டுள்ளனர். சொர்க்கம் உறுதி செய்யப்பட்ட பதின்மர் எனப்பொருள்படும் அஷறத்துல் முபஷிறீன் என்போரை 16ஆம் செய்யுளிலும் இஸ்லாத்தின் பிரதானமான பிரிவு எனப்படும் மத்ஹபுகளை நிறுவிய நான்கு இமாம்களும் சாபி (ரஹ்) ஹனபி (ரஹ்), ஹம்பலி (ரஹ்), மாலிக்கி (ரஹ்) ) 17ஆம் செய்யுளிலும் புகழப்பட்டுள்ளனர். வழக்கமாக இந்நான்கு இமாம்களைப் புகழ்ந்த பின்னர் காப்பிய ஆசிரியர்கள் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களைப் புகழ்வதுண்டு. வண்ணக்களஞ்சியப் புலவரைப் போன்று பதுறுத்தீன் புலவரும் தத்தம் காப்பிய நாயகரான முகியித்தீன் ஆண்டவர் அவர்களை முன்னவரின் கடவுள் வாழ்த்திலும் பின்னவரின் பாயிரத்திலும் குறிப்பிடவில்லை.

### காப்பிய அமைப்பு

பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணம் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முதலாம் பாகத்தில் உள்ள நாற்பது படலங்களில் 2162 திருவிருத்தங்கள் இடம் பெற்றுள்ளன. முப்பத்து நான்கு படலங்களைக் கொண்ட இரண்டாம் பாகத்தில் 1821 திருவிருத்தங்கள் அமைந்துள்ளன. ஆக, இரண்டு காண்டங்களிலும் 74 படலங்களும் 3983 திருவிருத்தங்களும் அமைந்திருக்கக் காணலாம். சதாவதானி கோட்டாறு செய்குத் தம்பிப் பாவலர் அவர்கள் முகியித்தீன் புராணம் முதல் பாகத்தை 1901ஆம் ஆண்டிலும் இரண்டாம் பாகத்தை 1903ஆம் ஆண்டிலும் பரிசோதித்துப் பதிப்பித்துள்ளார். முதற் பாகம் கோட்டாறு, வா. நயினார் முகம்மது லெப்பை அவர்களின் முயற்சியால் வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாம் பாகம் வா. முகம்மது நயினார், பேட்டை முகியித்தீன் ராவுத்தர் ஆகிய இருவரினதும் முயற்சியால் வெளியிடப்பட்டது. இரண்டு பாகங்களும் சென்னை ஸ்ரீ பத்மநாப விலாச அச்சியந்திர சாலையில் அச்சேறி உள்ளன.

### உரை வழங்கியவர்

முகியித்தீன் ஆண்டகையின் வாழ்க்கை பற்றிய விவரம் குலாசத்துல் முபாகிர் என்னும் கிரந்தத்தில் உள்ளது. அதனைப் படித்து அதில் தேர்ச்சி பெற்றவர் அப்துல் காதிர் ஆலிம் என்பவராவரர். குரு சீடர் முறைப்படி பதிநான்கு வகையான அறிவுகளையும் கற்றவர். இவரை அறிவுக்கடல் என்று தான் கூறவேண்டும். இவர் வளம் மிக்க வகுதாபுரியில் வாழ்ந்தவர். இவர் அந்த நூலில் உள்ளவற்றை உரையாகத் தமக்கு வழங்கினர் என ஒரு செய்யுளில் பதுறுத்தீன் புலவர் இவ்வாறு சுட்டிக்காட்டி உள்ளார்.

மருவிரி கமல வாவி வகுதையம் பதியின் வாழ்வோர்
குருநெறி பதினு லில்முங் குரைகட னிகர்ப்பக் கற்றோர்
அருமறை யப்துல் காதி ருலிமு மகிழ்ந்து தேர்ந்து
வருங்குலா சத்தில் முபாகிர்க் கிதாபுரை வழங்கச் சொன்னூர்.

(பாயிரம்: 19)

**அவையடக்கம்**

கவ்வி கேள்விகளில் சிறந்த புலவர்கள் முன்னிலையில் தாம் இயற்றி யுள்ள கவிதையைப் புன்கவிதை என ஆசிரியர் அறிமுகப்படுத்தி உள் ளார். தம்மைக் கல்வியிலே வறியவனெனத் தாழ்மையாகக் கூறி உள்ளார். இத்தகையோனின் கவிதையைப் பெரியோர் பொறுத் தருள வேண்டும் எனக் கூறி உள்ளார். அதற்கான காரணத்தையும் சுட்டிக்காட்டி உள்ளார். தாம் தலைசிறந்த ஒரு பெரியாரின் புகழை யும் அற்புதச் சாதனைகளையும் கவிதையில் வடித்தமையால் அவர் பொருட்டால் தம்மைப் பொறுத்தருள வேண்டும் என அவர்களிடம் வேண்டியுள்ளார். மூன்று செய்யுட்களில் அவையடக்கம் கூறி உள்ள பதுறுத்தீன் புலவர் மேற்கூறிய கருத்துக்களை முதலாவது செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்:

அருமறைப் பொருளுந் தமிழி லக்கணமு
மாய்ந்துரை கவிப்புல வோர்முன்
மருவுறுந் தமிழின் பயன்களு மறியா
வறியவ னுரைத்தபுன் கவிதைப்
பெரியவர் பொறுத்து மனத்தருள் புரிவீர்
பெரியவன் றிருமறைத் தூதர்
கருவினி லுதித்த குருமுகி யித்தீன்
காரணக் கவிசொலும் பொருட்டால்

(பாயிரம்: 20)

பாயிரத்தில் அமைந்துள்ள கடைசிச் செய்யுளிலும் இதே பாணி யில் அவையடக்கம் கூறி உள்ளார் காப்பிய ஆசிரியர். இலக்கிய இலக்கணங்களில் சிறந்து விளங்கும் புலவர் முன்னிலையில் முத்தமிழின் வகையையோ நலத்தையோ அறியாத பாலகனை தாம் கவிதை பாடி உள்ளதாகவும் இக்கவிதை புன்கவிதையாகக் காட்சி அளிப்பதாகவும் பிழைகள் இக்கவிதைகளில் காணப்படின் அவற்றைத் திருத்தி உள்ளம் இரங்கிப் பெரியோர் பொறுப்பது கடனே எனக் கூறிய ஆசிரியர் அவ் வாறு கோருவதற்குக் காரணம் புகழ்மிக்க முகியித்தீன் ஆண்டவரின் பெயரைப் போற்றவே இதனைத் தாம் பாடியமையே யாகும் எனக் குறிப்பிட்டுள்ளார். பாயிரத்தின் இறுதிப் பாடல் இவ்வாறு அமைந் துள்ளது.

எழுத்துசொற் பொருளி யாப்பணி யெனவைந்
திலங்கிய விலக்கண நிறைந்து
பழுத்தமுத் தமிழின் வகைநலந் தெரியாப்
பாலக னுரைத்தபுன் கவிதை
செழித்ததிண் புகழார் முகியித்தீ னென்னுந்
திருப்பெயர் வழுத்திடும் பொருட்டான்
பிழைத்த சொற் றிருத்தி மனத்தரு ளிரங்கிப்
பெரியவர் பொறுப்பது கடனே

(பாயிரம்: 25)

மற்றொரு பாடலில் பெரும் புலவர்களோடு ஒப்பிடும் பொழுது தமது காப்பியம் இயற்றும் தகுதிக்குறைவை உவமைகளைக் கொண்டு விளக்கி உள்ளார். அலையும் திரைகளையுடைய பாற்கடல் போன்றவர் புலமை மிக்கோர். தம்மைக் குயவர் மண்ணெடுக்கும் குழிக்கு ஒப் பிட்டுள்ளார். உலகிற்கே அணி செய்யும் மகாமேரு போன்றவர்கள் சான்றோர். தம்மைச் சிறுவர்களைப் போன்று சேற்றினல் ஒரு சிறு குன்றினைச் செய்து அம்மேருமலைக்கு முன்னர் வைக்கும் பாங்கினுக்கு ஒப்பிட்டுள்ளார். மற்றோர் உவமையையும் குறிப்பிடுள்ளார். ஒரு மாபெரும் யானையின் முன்னர் நிற்கும் ஒரு சிறு பூனையைப் போன்றது தமது இக்காப்பியம் இயற்றும் முயற்சி எனக் கூறி உள்ளார். இங்கே பூனையைக் குறிக்க இற்புலி (வீட்டுப்புலி) என்னும் சொற்றொடரைப் பயன்படுத்தி உள்ளமை இங்கு நோக்கற்பாலது. மூன்று உவமானங் களையும் உவமேயங்களையும் ஏனைய புலவர்களின் பெருமையையும் சிறப்பினையும் தமது சிறுமையையும் தாழ்மையையும் விளக்கி இவ்வாறு ஒரு பாடலில் அவையடக்கம் கூறி உள்ளார் பதுறுத்தீன் புலவர்.

சரியுந் திரைப்பாற் கடற்குநிகர் சாற்றுங் குயக்குண் டணியுலகிற்
பெரிய மகமே ரெதிர்சிறுவர் பிதிருஞ் செய்குன் றென்னவும்வெங்
கரியி னெதிரி னிற்புலியு நிகரா யுரைத்த காதையெனப்
புரியும் பெரியோர் தமக்கெதிரே சிறியே னுரைத்த புன்சொலிதே,

(பாயிரம்: 21)

கொடை நாயகர் :

பதுறுத்தீன் புலவர் சென்னையில் பிறந்து இலங்கை, யாழ்ப்பாணத் தில் வாழும் பொழுது முகியித்தீன் புராணத்தை இயற்றினர் என்னும் கூற்று வலியுறின் அவர் யாழ்ப்பாணத்திற்கு வரக் காரணமாயிருந் தவர் அவருக்கு இக்காப்பியத்தை இயற்றப் பொருளுதவி வழங்கியவர் என்பது பொருந்துவதாகும். இங்ஙனம் அவருக்குப் பொருளுதவி வழங்கி அவரை ஊக்குவித்தவர் யாழ்ப்பாணத்தில் வாழ்ந்த செய்கு

கொடை நாயகரைப் பற்றிய குறிப்புக்கள் முகியித்தீன் புராணத்தின் பல இடங்களில் வந்துள்ளன. கொடை நாயகரைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது இலங்கை வளத்தை வருணிக்கத் தவறவில்லை காப்பிய ஆசிரியர். அத்தகைய பல சந்தர்ப்பங்களை முகியித்தீன் புராணத்தில் காணலாம். பெரும்பாலான இடங்களில் செய்கு மீருன் என்பவர் உசைன் நயினுர் என்பவரின் புதல்வர் என்பதையும் சுட்டிக் காட்டி உள்ளார். அத்தகைய சந்தர்ப்பங்கள் வருமாறு :

பன்னரு மிலங்கை நாட னுசைனயி னுன்றன் பாலன்
மன்னவன் செய்கு மீருன் வளமனைச் சிறப் பு மொத்த

(நாட்டுப் படலம் : 46) (71)

மருமல ருகுத்துஞ் சோலை வளம்பெறு மிலங்கை நாட
னுருவிலி நிகர்த்த வாக னுசைனயி னுன்றன் பாலன்
றருகரஞ் செய்கு மீருன்

(செறு விளையாட்டுக் காரணப் படலம் : 12) (269)

வாரண முலவி லங்கை வாழுசை னயினுல் செய்த
சீரணி தவத்தி லுற்ற ஷெய்குமீ ருனென் போனே

(பகுதாது புக்க படலம்: 48) (450)

வாரண முலவா நின்று வரமுறு மிலங்கை வாழுந்
தாரணிப் புயத்தான் வள்ள றருவுசை னயினுன் செல்வன்
பூரண மதிய மென்னும் புகழ்செய்கு மீருன் மன்னன்

(செய்த்தான்கள் தொடர்ந்த படலம்: 72) (656)

எண்ணரும் புகழ்சே ரிலங்கைமா நகரி
னெழிலுறு முசைனயி னுன்செய்
புண்ணியப் பொருளான் றுரைஷெய்கு மீருன்
பொருந்திய செல்வமுற் றிருந்தான்

(ஜின் கொண்டு போன பெண்ணை மீட்டிக் கொடுத்த படலம்: 45) 758)

இலங்கைப் பதியுசை னயினுன்
வரத்துறும் ஷெய்குமீ ருன்

(மணம்புரி படலம்: 1) (862)

நிலவை யணிந்த மணிமாட
நிலமேற் கலச மொளிர்வதுபொன்
னுலவு மிலங்கை யுசைனயினுன்
றவத்தி னுதித்திக் கவிபுகலும்
புலவர்க் குதவும் ஷெய்க்மீருன்
புகழ்போ லுலவும்

(மணம்புரி படலம்: 72) (935)

இவ்வாறு பார்க்கும் பொழுது 202 திருவிருத்தங்களைக் கொண்ட மணம்புரி படலத்தின் முதல் செய்யுளிலும் இடையில் 72ஆம் செய்யுளிலும் இறுதிச் செய்யுளிலும் கொடை நாயகர் மூன்று முறை புகழப் பட்டிருப்பதைக் காணலாம்.

விள்ளரு மிலங்கை வாழும் வேந்துசை னயினுன் பாலன்
வள்ளியோன் ஷெய்கு மீருன் மனத்துறுங் களிப்பை மானும்

(சுரந் தீர்த்த படலம்: 31) (1190)

இந்து லாவு மிலங்கையி னுதிபன்
சிந்து ரக்கரி ஷெய்குமீ ருனென்போன்

(தீனை ஹயாத்தாக்கிய படலம்: 30) (1248)

எண்டலம் புகழ்பெற் ருேங்கு மிலங்கைவாழ் ஷெய்கு மீருன்
பண்டருஞ் செல்வம் போலப் பரிவுபெற் றிருந்த தன்றே

(கலிங்க முடுத்த காரணப் படலம்: 9) (1304)

காரணக் கவிக்குதவி செய்தவன் கனத்த
மேரணி யிலங்கைநகர் மேவுஷெய்கு மீருன்

(அபூபக்கரில் ஹம்மாமியைச் சாபமிட்டுத் தீர்த்த
படலம்: 58) (1685)

உருமையி னிலங்கை நாட னுசைனயி னுன்றன் பாலன்
திருமயி லுலவு மார்பன் ஷெய்கு மீருன் லப்பை

(அபுல் முலப்பறை மீட்ட படலம்: 74) (1843)

இப்பாடலில் லப்பை என்னும் அடைமொழி கொடை நாயகருக்கு வழங்கப்பட்டுள்ளமையைக் காணலாம். இலங்கையிலும் தமிழ்நாட்டிலும் பெயருக்கு அடைமொழியாக லப்பை என்னும் அறபுப் பதம் வழங்கப்படுவதுண்டு.

சந்த திண்புய னிலங்கைவா முசைநயி ஞன்றன்
மைந்தன் ஷெய்குமீ ருன்மன மகிழ்ச்சியின் மகிழ்ந்து
சந்த னந்தப் பெற்றிடும் வாணர்தம் மனம்போற்
(மைமையானவள் தனையனைப் பெற்ற படலம்: 91 ( 1969)

காரணக் கவிசொலக் கனக மாமழைப்
பூரண மனத்தொடு பொலிய வீசினன்
ருரணி யிலங்கையிற் றழைக்கு மாதிபன்
மேரணிப் புயன்ஷெய்கு மீரு னென்பவே
(ஹறக்கத்துப் படலம் : 16) (2105)

ஈகை மீறி யிலங்கையில் வாழ்வுறும்
ஓகை கொண்ட உசைனயி ஞன்பெறுஞ்
சேகு மீருன்...
(கலியாணஞ் செய்வித்த படலம்: 42) (2203)

மருவாரு வாவிபல புடைசூழ வேதுடவை
வளமா ரிலங்கை நகர்வாழ்
திருமேவு யோகனுசை னயினன்செய் வாகையொரு
திரளாகி வந்தெ மொலிதாள்
அருளோடு மேபுகழ மகனுகி னேன்...
(கலியாணஞ் செய்வித்த படலம்: 178) (2339)

179 திருவிருத்தங்களைக் கொண்ட கலியாணஞ் செய்வித்த படலத்திலும் இரண்டு முறை கொடை நாயகர் வாழ்த்தப்பட்டுள்ளமைநோக்கற்பாலது.

கன்னற்கமு கெதிர்காட்டுந் தண்பணைசூழ்
இலங்கைநகர் காவற் பூண்ட
மன்னர்கோன் உசைனயினர் அருந் தவத்தில்
உதித்ததிரு மதலை வாசஞ்
செந்நறவு துளித்தொழுகு மரப மலர்த்
தொடைப்புயத்தான் செய்கு மீருன்.
(செய்குமார் நாட்டங்களை நிறைவேற்றிய படலம்: 87) (2510)

129 செய்யுட்களைக் கொண்ட கலைவிலைப் படலத்திலும் கொடை நாயகர் இரண்டு முறை புகழப்பட்டுள்ளார்.

...சேடருமி லங்கைப் பதியுசை னயினுன் பெற்ற
புத்திரன் செய்கு மீருன் புகழ்மனை மனைவி மக்கள்
சுற்றமுந் தழைக்கும் வாருய்ச் சுகமுறப் பெருகி வாழ்ந்தார்
(கலை விலைப் படலம்: 46) (2692)

நறுமலர்ச் சோலைசூழ் இலங்கை
மகபதி யனைய உசைனயி னுன்றன்
மகவெனப் பிறந்து மா னிலத்தின்
மிகுபுகழ்க் கௌது நாயகர் சரிதை
விளங்கிட வருநிதிக் கலையும்
தகையுற வுதவும் செய்கு மீருன்
(கலை விலைப் படலம்: 129) (2775)

செய்கு ஹம்மாது கைச்சூகை தீர்த்த படலத்தில் 79 செய்யுட்கள் மாத்திரமே உள்ளன. ஆனுல் கொடை நாயகர் இப்படலத்திலும் இரண்டு முறை புகழப்பட்டுள்ளார்:

... இலங்கையின் உசைனயி னுன்தரு புதல்வன்
திருந்தும் பாடலுக் குதவிசெய் செய்கு மீருன்
(செய்கு ஹம்மாது கைச்சூகை மாற்றின படலம்: 14) (2789)

திருவே நிறை ஒளிவேதிகழ் திருவாழிலங் கையில்வாழ்
உருவாருசை னயினுன்றவ முறுசெய்கு மீருன்
(செய்கு ஹம்மாது கைச்சூகை மாற்றின படலம்: 79) (2854)

... தனமிக அளித்தான்
ஆரணத்துறை இலங்கைவா ழுசைனயி னுன்றன்
பேர ணித்துறை பிறந்தவன் செய்குமீ ருனே
(ஈத்தங் குற்றியைத் தழைப்பித்த படலம்: 23) (2938)

கார்வளரும் இலங்கைநகர் உசைனயினுன்
தவத்தினுற்ற கருணையாளன்
தார்வளரும் புயத்துணையான் செய்குமீ
ருன் . . .
(நசாருக்களின் பாதிரி ஈமான் கொண்ட
படலம்: 49) (3009)

. . . மிகுநிதி செல்வம் ஈந்தான்
ஓதிய இலங்கை நாடன் உசைநயி னுன்றன் பாலன்
நீதியாம் செய்கு மீருன் . . .
(கிலுறுப் படலம்: 34) (3201)

. . . இலங்கைநகர் மன்னவன் மகிழ்ந்த
சந்ததியர்ம் செய்குமீருன் . . .

(கபுருளிகளிற் சிலர் வரிசை பெற்ற படலம்: 41) (3319)

தலம்புகழ் இலங்கை மேவுந் தருவுசை ஞயினுன் செல்வன்
நலங்கொளும் செய்கு மீருன் . . .

(இருடியரீமான் கொண்ட படலம்: 83) (3437)

தலங்கொளும் இலங்கை நாடன்
தருமுசைனயினுன் பாலன்
துலங்கிய முகியித் தீன்றந்
தூய்பதஞ் சிரசிற் ருங்கி
நலங்கொளும் செய்கு மீருன் . . .

(ருவியத்துல் பசரியாப் படலம்: 69) (3510)

சததள கமல வாவித் தடங்கொளும் இலங்கை வாழும்
மதனுசை னயினுன் பாலன் மன்னர் கோன் செய்கு மீருன்

(நசுமுத்தீன் ஷஹீது வெளியான படலம்: 39) (3548)

முத்தென நிலவு காலு முகிழ்நனைக் குமுதப் போது
நித்தமு மலர்த லல்லா நிமிடமுங் குவிதற் காணுது
இத்தலம் புகழ்பெற் ருேங்கும் இலங்கைவாழ் செய்கு மீருன்
(இருக்கிராச்சியத்துச் செய்குமார் வகுலு கேட்ட
படலம்: 17) (3586)

கோட்டினின் வரிவண் டார்க்குங்
கொழுமலர் நிழலின் மஞ்ஞை
நாட்டியம் புரியா நின்ற
நலன்கொளுந் துடவை தோற்ற
நாட்டுயர் இலங்கை மன்னன்
உசைனயி னுன்றன் பாலன்
தேட்டருஞ் செய்கு மீருன்
செல்வமொத் திருந்த தம்மா

(அபுல் முக்காலிபு பெஷ்ஷாபுக்குப் போன படலம்: 17) (3795)

அவனியும் அவண்புகழ் இலங்கை ஆதிபன்
உவமையாம் செய்குமீ ருனெப் பாகுமே

(பலக்கூர் முகம்மதுக்கு ஷஹீது வெளியான படலம்: 101) (3167)

செய்கு மீருன் என்னும் கொடை நாயகரின் கொடைத் திறனையும் தமக்குப் பொருளளித்த விதத்தினையும் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். மேலே தரப்பட்டுள்ள செய்யுட்களுக்குப் புறம்பாக இவற்றை எடுத்துக் காட்டுகளாகக் காட்டலாம்.

தருவென வுதவு கையான் உசைனயி னுன்றன் பாலன்
இருநிதிச் செய்கு மீரு னிலப்பையும் வாழ்கத் தானே
(தலைமுறைப் படலம்: 34) (136)

இந்தநற் கவிதை சொல்ல விதற்குறும் வரிசை செய்த
சந்ததம் செய்கு மீருன் தவத்தொடும் வாழ்வர் தானே
(அவதாரப் படலம்: 98) (236)

பூரண மணத்தி னேடும்
பொருவிலா நிதியம் ஈந்தான்
(பகுதாது புக்க படலம்: 48) (450)

. , . கௌதுபொற் சரிதைக்
கவிசொலக் கனகமே சொரிந்தான்
(ஜின் கொண்டு போன பெண்ணை மீட்டுக் கொடுத்த
(படலம்: 45) (758)

கவ்விடக் கவிசொலக் கனக மீந்தனன்
மவ்வலந் தொடை செய்கு மீருன் மன்னவன்
(அவுதாக்களில் நிலைபெற்ற படலம்: 38) (796)

. . . வாணர்க்
கெல்லையில் நிதிய முற்ரு னியலுறுச் செய்கு மீருன்
(சுரந் தீர்த்த படலம்: 6) (1165)

சுரத்தீர்ந்த படலத்தில் 40 செய்யுட்களே உள்ளன. அங்குள்ள 6ஆம் செய்யுளிலும் 31ஆம் செய்யுளிலும் கொடை நாயகர் குறிப்பிடப்பட்டுள்ளார்.

கொடை நாயகரின் புகழ் முகியித்தீன் புராணத்தில்

...

உசனயினன் செவ்வன் வாரி
அமிர்தமுகு மிகுவசன கௌதுமலர்ப்
பதத்தையனு தினமும் போற்றும்
சுமுகனெனும் செய்கு மீருன் புகழை

...

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்: 32) (1358)

அரியலம்பும் புயவிடலைச் செய்கு மீருன்
புகழ்போல . . .
(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்:271) (1597)

என்றும்

அவர்தம் செல்வம்
திடந்தரும் செய்கு மீருன் செல்வம் போல்...
(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம் : 271)

செழுங்கரன் செய்கு மீருன் செல்வம் போல்...
(சேவலுயிர் பெற்ற படலம் : 44) (3245)

... செய்கு மீருன்
நிதமும் வாழ் வோங்கச் செல்வம்—
(நசுமுத்தீன் ஷுகூது வெளியான படலம் : 38) (3548)

... செய்கு மீருன்
உத்தமச் செல்வம் போல ...
(இருக் ராச்சியத்துச் செய்குமார் வகுலு கேட்ட படலம் : 17) (3586)

என்றும் விவரிக்கப்பட்டுள்ளது. உசைன் நயினுர் முகம் சந்திரனைப் போன்றிருந்தது என்பது

சந்திர வதனன் உசைநயி ஞன்றன்
தனையனும் செய்கு மீருன்
(கொடு வரியைக் குக்கலால் வதைத்த படலம் : 66) (2069)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மற்ருெரு செய்யுளில் கொடை நாயகரின் வாழ்வும் வனப்பும் அவரை எப்பொழுதும் இனத்தவர் சூழ்ந்திருப்பதும் இவ்வாறு விவரிக்கப் பட்டுள்ளது :

கனத்த வாழ்வொடு திருமகள் கனத்தையு முடைய
இனத்தர் சூழ்தர செய்குமீ ருனைப்போ லிருந்தான்
(ஈத்தங் குற்றியைத் தழைப்பித்த படலம் : 21) (2936)

மற்ருெரு செய்யுளில் அவரின் அழகு

...
திருமலி உசைனயி ஞன்றன்
கருவென உதித்த செய்குமீ ருன்றன்
கல்பினில் உறைந்த நாயகமே
(ஜின் பாந்தளாக வந்த படலம் : 12) (3674)

யாழ்ப்பாணமும் மற்ெறாரு பாடலில் சிறப்பாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

படர்ந்திடும் இருளை ஓட்டப் பைங்கடல் அகடு கீண்டு
தடந்தரு மதியம் தோன்றித் தண்கதிர் பரப்புந் தோற்ற
முடந்தையாழ்ப் பாணம் வாழும் உசைனயி னுன்றன் மைந்தன்
திடந்தரும் செய்கு மீரான் செல்வம்போ லிலங்கிற் றன்றே

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம் : 86) (1412)

செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலத்திலும் கொடை நாயகர் மூன்று முறை (32, 86, 272) போற்றப்பட்டிருப்பதைக் காண லாம். கொடை நாயகருடைய தவ வலிமையும் புயப் பொலிவும், நீதி வழுவாமையும் கருணையும் உள்ளக்களிப்பும் மேலே உள்ள பாடல்களில் இடம் பெற்றிருப்பதையும் காணலாம்.

**இயற்கை வருணனை**

எழில் மிக்க காட்சிகளை உடையது இலங்கை. நீர் நில வளம் மிக்கது இலங்கை. பச்சைப் பசேலெனும் காட்சிகள் இலங்கையில் அமைந்துள்ளமை பார்ப்போரின் கண்களைக் குளிர வைக்கும் ஆற்றல் வாய்ந்தவை. எனவே தான் பசுமையான காட்சிகளை வருணிக்கும் புலவர் தம் கவிதைகள் படிப்போரின் உள்ளத்தைக் கவருவனவாக அமைகின்றன. கவிதைச் சுவைஞரின் நயக்குந் தன்மையை வளர்க் கும் ஆற்றல் வாய்ந்தவையாகத் திகழ்கின்றன. இயற்கை எழில் மிக்க இலங்கையில் வாழ்ந்து முகியித்தீன் புராணத்தை இயற்றினமையினுல் தானே என்னவோ பதுறுத்தீன் புலவர் தமது காப்பியத்தில் சுவை மிக்க பல இயற்கைக் காட்சிகளை அமைத்துள்ளார் எனலாம். இனி அவருடைய இயற்கைக் காட்சிகள் சிலவற்றைப் பார்ப்போம்.

சிறகுகளை விரித்த வண்ணம் மயில்கள் ஆடுகின்றன. வெண்மை யான அழகிய மலர்களிலிருந்து தேனைப் பருகிக் கொண்டிருந்த வண்டு கள் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. இந்த இனிய ஓசை மயில்களின் நடனத்துக்கு பல்வேறு இசைகளை மீட்டுவது போல் அமைந்து விடுகின்றன. சுதிகளாகி விடுகின்றன. இந்த மயில்களின் ஆட்டத்துக்கும் வண்டுகளின் சுதிக்கும் இசையும் பாணியில் குயில் களின் இனிய கீதங்கள் பொருத்தமாகி அமைந்து விடுகின்றன. இந் நிகழ்ச்சிக்குத் தாளம் போடுவது போன்று அமைந்து விடுகின்றன சிவப்பு நிறமான வாய்களினுல் தவளைகள் எழுப்பும் ஒலிகள். இத்த கைய ஓர் அருமையான நடனத்தைச் சிறு பாலகை இருக்கும் போது முகியித்தீன் ஆண்டவர்களும் அவர்களுடன் பக்கத்திலே அமர்ந்திருந்த தோழர்களும் கண்டு மகிழ்ந்தார்கள் என ஒரு செய்யுளில் இவ்வாறு பாடியுள்ளார் பதுறுத்தீன் புலவர்.

விரிசிறை மயில்க ளாட வெண்மலர் நறவ மாந்தி
யரியினஞ் சுதிகண் மீட்ட வமைந்திசை குயில்கள் பாட
வரியினங் கனிக டன்னு லமைந்துமத் தாளம் போட
வரசரும் பாங்கர் யாரு மருநடம் புரியக் கண்டார்

(சேறு விளையாட்டுக் காரணப் படலம்: 26) (283)

இங்கே அரி என்னும் சொல் இரண்டு முறை பயன்படுத்தப்பட்டுள்ளது. முதலில் வந்த அரி வண்டையும் இரண்டாம் வரி தவளையையும் சுட்டும். கம்பராமாயணத்தில் வல்ல தவளைகள் என்னும் பொருளில் 'வல்லரி' என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. (கிட்கிந்தா காண்டம்: கார்காலப் படலம்: 115) (546). கனி என்பது சிவந்த என்பதைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டு சிவப்பு நிறமான வாயைக்குறிக்க ஆகுபெயராக வந்துள்ளது.

இதே நடனக் காட்சியை ஒரு மலையிலே வேறு விதமாக அமைத்துள்ளார் பதுறுத்தீன் புலவர் தமது முகியித்தீன் புராணத்தில். புள்ளிகளை உடைய வண்டுகள் இனிமையாகப் பாடிக் கொண்டிருக்கின்றன. வடிவான குயில்கள் சுதி மீட்டிக் கொண்டிருக்கின்றன. தவளைகள் கூட்டம் தாளம் போட்டுக் கொண்டிருக்கின்றன. அழகான நிறத்தையுடைய விரிந்த தோகைகளை உடைய மயிலினங்கள் நடனமாடிக் கொண்டிருக்கின்றன. வரிகளைக் கொண்ட அழகிய கண்களைஉடைய பெண்களின் நடையை ஒத்தனவாய் அந்த மயில்கள் திகழ்கின்றன. ஒழுங்காகவும் நிரை நிரையாகவும் அமைந்த மலர்களின் தேன்சிந்தும் வளம் மிக்கதாக அந்த மலை அமைந்திருக்கின்றது. இத்தகைய மலைக் காட்சியை இங்ஙனம் ஒரு செய்யுளில் வடித்துக் காட்டி உள்ளார் பதுறுத்தீன் புலவர்.

வரியளி யிசைகள் பாட வரிக்குயிற் சுதிகண் மீட்ட
வரியினந் தாளங் கொட்ட வரிநிறக் கலாபத் தோகை
வரிவிழி மாத ரென்ன மயிலின நடன மாட
வரிமலர் நறவஞ் சிந்த வளங்கொளு முயர்ந்த வெற்பே

(செய்குமார் வகுலு கேட்ட படலம்: 18) (3587)

பகுதாதை ஓர் செய்யுளில் வருணிக்கும் பொழுதும் இத்தகைய ஒரு காட்சியை வருணித்துள்ளார் ஆசிரியர். இளம்பிறையைப் போன்ற நெற்றியை உடைய பெண்களைப் போன்ற சந்திர கலாபம் உற்ற பெரிய சிறகை விரித்து மயில்கள் நடைபயின்று கொண்டிருக்கின்றன. அதே சமயத்தில் பூக்கள் மலர்ந்த கொப்புக்களில் அமர்ந்திருக்கும் குயிலினங்கள் இசை எழுப்புவது போன்று ஒலித்துக் கொண்டிருக்கின்றன. இந்தக் காட்சிக்கு அங்கு குறைவே இல்லை, இத்த

கைய காட்சிகளைக் கொண்ட நந்தவனங்களால் சூழப்பட்டு பகுதாது நகரம் விளங்கிக் கொண்டிருந்தது. இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்.

சந்திர கலாப முற்ற தடஞ்சிறை விரித்துத் தோகை
இந்திரை நுதலா ரென்ன வியனடை புரித லோடு
கொந்தலர் கோட்டிற் றங்குங் குயிலின யொலியருத
நந்தன வனங்கள் சூழ்ந்த நலனுறும் பகுதா தன்றே
(கடலில் காயிபானவனை மீட்டிக் கலியாணஞ் செய்வித்த
படலம்: 4) (2166)

பகுதாது பற்றிய மற்றொரு வருணனையில் இங்கே மயில்கள் தோகை விரித்து ஆடுவதாகவும் கனிகள் மலிந்த மரங்களிலிருந்து குரங்குக் கூட்டம் கனிகளைச் சிந்துவதாகவும் அவற்றை மொய்த்துக் கொண்டு அவற்றில் உள்ள தேனை உண்டு மீண்டும் மலர்களில் தேனைப் பருகும் பூஞ்சோலைகள் சூழ்ந்துள்ளதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. அத்தோடு அசைந்து கொண்டிருக்கும் ஒளியைப் பாய்ச்சிக் கொண்டிருக்கும் பள்ளிகள் விளங்கும் புகழ் பெற்றோங்கும் நகரங்களுக்கெல்லாம் தலைநகராகத் திகழ்ந்தது பகுதாது என இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

கலபமா மயில்க ளாடக் கவிக்குலங் கனிகள் சிந்த
நலனுற வரிதேன் மாந்து நறுமலர்த் துடவை சூழ்ந்து
விலகிவில் லுமிழும் பள்ளி விளங்கிய பகுதா தென்னுங்
குலவிய புகழ்பெற் றோங்குங் கோநகர் தன்னி லன்றே
(பாந்தள் வசனித்த படலம்: 2) (2600)

இலங்கையைப் பற்றிய வருணனையிலும் இலங்கையில் உள்ள பூஞ்சோலைகள் மிகுதியாக இருந்தன. புள்ளிகளைக் கொண்ட வண்டுகள் ரீங்காரம் செய்து சொண்டிருக்கும் திரட்சியான மலர்களைக் கொண்ட கொப்புக்களின் நிழலிலே மயில்கள் நடனம் புரிந்து கொண்டிருக்கின்றன. இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

கோட்டினின் வரிவண் டார்க்குங்
கொழுமலர் நிழலின் மஞ்ஞை
நாட்டியம் புரியா நின்ற நலன்கொளுந் துடவை தோற்ற
நாட்டுய ரிலங்கை . . .
(அபுல் முகாலிபு பெஷ்ஷாபுக்குப் போன படலம்: 17 (3795)

முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் மக்கமா நகருக்குச் செல்லும் பாதையில் கண்ட காட்சிகள் வருணிக்கப்பட்டுள்ளன. இயற்கை வருணனைகளாக அமைந்த அக்காட்சிகளில் ஐவகை நிலமும் நுணுக்கமாக வருணிக்கப்பட்டுள்ளன. மருதம், முல்லை, குறிஞ்சி, பாலை, நெய்தல் நிலங்கள் இக்காட்சிகளில் விவரிக்கப்பட்டுள்ளன. முதலில் முகியித்தீன் ஆண்டகை அவர்கள் கண்ட ஒரு காட்சி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது, குளங்கள் இருக்கின்றன. அக்குளங்களில் உள்ள மீன்கள் பலா மரங்களுக்குத் தாவி பலவின் கண்களைத் தாக்குகின்றன. அதன் பயனாக உடைந்த பலாப்பழங்களிலிருந்து தேன் ஒழுகுகின்றது. அத்தேன் வழியும் தாமரையில் ஒளி பொருந்திய சிறகுகளைக் கொண்ட அன்னங்கள் துஞ்சுகின்றன. அவ்வாறு அன்னங்கள் உறங்கும் பொழுது அவை கரையிலே உள்ள முத்துக்களை அடை காக்கின்றன. அத்தோடு அங்கே வானளாவப் படர்ந்து வளர்ந்த மரங்களைக் கொண்ட பூஞ்சோலைகளை ஆண்டகை அவர்கள் கண்டார்கள் என இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

தடந்தொறுங் கயல்க டாவித்
தருக்கனி பலவின் முட்டி
உடைந்துதே னொழுகுங் கஞ்சத்து
ஒண்சிறை அனங்கள் துஞ்சும்
இடங்கரை சலச முத்தம்
எகினங்கள் அடையிற் காக்கும்
படர்ந்துவான் தருக்கள் மேவும்
பொழிலையும் பரிவிற் கண்டார்

(பிரயாணப் படலம்: 30) (356)

பதுறுத்தீன் புலவர் நானிலங்களையும் வருணிக்கும் பொழுது குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை என நான்கு நிலங்களையே பெருமளவில வருணிக்கிறார். ஒரே ஒரு இடத்தில் மாத்திரம் நெய்தல் என்னும் சொல்லைப் பயன்படுத்தி நெய்தல் நில வருணனையை மேற்கொண்டுள்ளார். முகியித்தீன் புராணத்தில் முதலில வரும் மருதநில வருணனையைப் பார்ப்போம்.

கொல்லுகின்ற முனையை உடைய வேலைப் போன்ற கண்களை உடைய பெண்மணிகள் குரவை ஒலியை எழுப்புகின்றனர். அவ்வொலி மாருது ஒலித்துக் கொண்டிருக்கின்றது. கரும்பம் வயல்கள் நிறைந்த மருத நிலத்தை ஆண்டகை கடந்து சென்றுர்கள் என்பது இவ்வாறு ஒரு செய்யுளில் வருணிக்கப்பட்டுள்ளது.

கொன்னுனே வேற்க ணல்லார் கடைசியர் குரவை மாருக்
கன்னலு மருத வேலி கடந்தய டனந்தார் மன்னர்
(பிரயாணப் படலம்: 31) (357)

மற்ருெரு பாடலில் மருதநில வருணனே முழுமையாக ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளது. குயில்கள் பெடையோடு எதிரொலியாகக் கூவிக் கொண்டிருக்கின்றன. அந்த இனிமையான தாலாட்டுப் போன்ற ஒலியிலே வயலின் கரையிலே அன்னங்கள் துஞ்சுகின்றன, அங்கே எருமைகள் நிற்கின்றன. அவ்வெருமைகளின் குடம் போன்ற முலேகளிலிருந்து சொரிகின்ற இனிமையான பாலே அருந்திய குஞ்சு அன்னங்கள் துயிலுகின்றன. பெண்மணிகள் அங்கே குரவை ஒலியை எழுப்பிக் கொண்டிருந்தனர். இத்தகைய மருத நிலத்தை ஆண்டகை கடந்து போஞர்கள் என்பது:

பெடையொடு குயில்கள் கூவும் பேரொலி செவியிற் சார
மடையுறு மெகினந் துஞ்சு வயற்கரை யிடத்தின் மேதிக்
குடமுலே நறும்பான் மாந்திக் குஞ்சனந் துயிலா நின்ற
கடைசியர் குரவை மாரு மருதமுங் கடந்து போந்தார்
(ஹஜ்ஜுக்குப் போன படலம் : 7) (492)

மருத நிலக் காட்சிகளேப் பற்றிய வருணனேகளே செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலத்திலும் (223) அப்துல்லா வுமிபுருகீமுந் தரிசித்த படலத்திலும் (12) மிதியடியனுப்பி அஜமிகளேக் காத்த படலத்திலும் (5) ஒட்டகை காண்பித்துக் கொடுத்த படலத்திலும் (4) அபுல்முக்காலிபு பெஷ்ஷாபுக்குப் போன படலத்திலும் (25) காணலாம்.

முகியித்தீன் ஆண்டகை அவர்கள் அடுத்து முல்லேக் காட்சியினேக் கண்டார்கள். முல்லே நிலத்திலே புலியின் முழக்கம் போன்ற ஒரு சப்தம் எழுந்தது. அச்சத்தத்தை உற்றுக் கேட்டபொழுது அங்குள்ள பெண்கள் தயிர் கடையும் ஓசையாக அது இருந்தது. வெண்மையான தயிரைக் கடையும் ஓசையாக அது இருந்தது. ஆய்ச்சியர் தயிர் கடைந்தனர். மத்துக் காம்பினேக் கையிலே எடுத்துத் தயிரைக் கடையும் ஓசை அது. அப்பெண்களின் இடைகள் அவ்வாறு தயிர் கடையும் பொழுது ஒடியும் போல் தோன்றின. தேன் போன்ற இனிமையான மொழியினேப் பேசும் பெண்கள் அவர்கள். அழகு வாய்ந்தவர்கள் ஆம்பல் போன்ற அழகிய வாயினர். இங்ஙனம் முல்லே நிலக்காட்சியை இவ்வாறு வருணித்துள்ளார் ஆசிரியர்.

ஆம்பலி னரிய வாயி ஞுச்சிய ரழகு வாய்ந்த
தேம்படு மொழியி னேடுஞ் சிற்றிடை யொசிய மத்துக்
காம்பிணைக் கரத்திற் பற்றி வெண்டயிர் கடையு மோதை
மேம்படு புலிபோ லார்க்கு முல்லைவிட் டகன்று போனர்
(பிரயாணப் படலம் : 32) (358)

ஏனைய முல்லை நில வருணனைகளை பிரயாணப் படலத்திலும் (32) ஹஜ்ஜுக்குப் போன படலத்திலும் (8) உள்ள பாடல்களின் முழுமையாகவும் ஏனைய பல பாடல்களில் சுருக்கமாகவும் அமைந்திருக்கக் காணலாம்.

அடுத்து பாலை நிலம் வருணிக்கப்பட்டுள்ள விதத்தினைப் பார்ப்போம். பாலை நிலமே சாதாரணமாகச் சிவந்து இருக்கும். அத்தகைய செந்நிற மண்ணை உடைய நிலமே பிளந்தது. அங்கிருந்து பொங்கி எழுந்த செந்தழல் ஆகாயத்தைத் தாவியது . . . அதன் பயனாக நிலை பெற்ற மலையில் வாழ்வோர் அந்த வெப்பத்தை தாங்க முடியாது வாய்விட்டு அழுதனர். புலம்பிக் கண்ணீர் வடித்தனர்.

இங்ஙனம் எல்லாத் திக்குகளிலும் இந்தக் கானல் பரவியது. அத்தகைய கொடுமையானது பாலை நிலம் என இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

சென்னிலம் பிளந்து பொங்கு செந்தழல் விசும்பிற் ருவ
மன்னிய வரையா ரெல்லாம் வாய்விட்டுப் புலம்பிக் கண்ணீர்
பன்னிய திசைகள் தோறும் பறந்திட வெறிக்குங் கானல்
முன்னிய பாலை விட்டு நடந்தன முடுகி யன்றே
(ஒட்டகை காண்பித்துக் கொடுத்த படலம்: 7) (3043)

மற்றொரு பாடலில் பாலை நிலத்தில் பெரும்பாலும் வாழும் வேடர்களைப் பற்றி விவரித்துள்ளார் ஆசிரியர். உடம்பிலும் தலையிலும் அதிகமான விரிந்த மயிர்களை உடையவர்கள் அவ்வேடர். அவர்களின் கண் பார்வையோடு கொலைத் தொழிலைச் செய்யும் அவர் தம் பாங்கினை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது. மும்முனைகளை உடைய சூலத்தையும் வலிமையான வில்லையும் அம்பையும் கையில் கொண்டவர்கள். மிக்க துணிவுடைய மனத்தை உடையவர்கள். மலைக்குகையிலே வாழும் மிருகங்களைக் கொல்லும் வெறி கொண்டவர்கள் அவ்வேடர்கள். அத்தகைய வேடர்கள் வாழும் பாலை நிலத்தையும் கடந்து முகியித்தீன் ஆண்டவர் சென்றார் என்பதைக் கூற வந்த ஆசிரியர் பாலை நிலத்தை இவ்வாறு ஒரு செய்யுளில் வருணித்துள்ளார்;

பறிதலை விரியும் பங்கி படுகொலை விழியு மாகத்
திறிநுனைச் சூலத் தோடுந் திண்சிலை தடியும் வில்லுந்
தெறுமனத் துணிவி னோடுஞ் சிலம்புழை விலங்கு மாய்க்கும்
வெறிகொளும் வேடர் பாலை நிலத்தையும் விட்டு நீங்கார்

(பிரயாணப் படலம்: 33) (359)

பாலை நிலத்தைப் பற்றிய வருணனைகள் பெரும்பாலும் தனித் தனிப் பாடல்களாகவே அமைந்திருப்பதைக் காணலாம். மருதம், முல்லை, குறிஞ்சி நிலங்களை ஒன்றாகச் சேர்த்து ஒரே பாடலில் பாடினு லும் பாலையைப் பொறுத்தவரையில் வெவ்வேறாகவே செய்யுட்களைப் பாடி உள்ளார் ஆசிரியர். காடுகளைக் கடந்த பின்னர் சிங்கங்கள் பிடி பட்டன. சூரியனுடைய ஆயிரங் கதிர்களோடு நரக லோகத்தின் நெருப்பின் வெப்பமும் கலந்து ஒருபட்டால் போன்ற வெப்பம் அப் பாலையில் நிலவியது. இங்கே நரக லோகத்தைக் குறிப்பிடும்பொழுது 'தென் கீழ்த் திசையினன்' உடைய நெருப்பு எழுப்பும் நரகம் எனக் குறிப்பிட்டுள்ளார். தென் கீழ்த்திசையினன் என்பது அக்கினி தேவனைக் குறிக்கிறது. நெருப்புக்குத் தலைவன் அவன். யானையைக் கொள்ளக்கூடிய பாரிய தடாகத்தில் நீரைக் காய்ச்சி வைத்து இறக்கிய கொதிப்புப் போன்று இருந்தது அந்தப் பாலையின் வெப்பம். இந்த வெப்பத்தினுல் நா தீய்ந்து போகக் கூடியதாக இருந்தது. அத்தோடு கேட்கும் சக்தியையும் அழிக்க வல்லதாக அந்த வெப்பம் கொடூரமாக இருந்தது. இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந் துள்ளன.

கடங்களுங் கடந்து மடங்கலைப் பிடித்துக்
கனலியி னுயிரங் கதிரு
மிடங்களுந் தென்கீழ்த் திசையின னெழும்பு
நிரையமு மொன்றுபட் டிடித்துக்
கடங்கொளு மண்ட கடாகத்திற் படுத்திக்
காச்சிவைத் திறக்கிய கொதிப்போ
திடங்கொள வுரைக்கு நாவொடு செவியுந்
தீய்ந்திடு பாலையுங் கடந்தார்

(ஹஜ்ஜுக்குப் போன படலம் : 9) (494)

ஏனைய செய்யுட்களில் பாலை நிலம்

வெய்யோன் காந்தி
யூட்டாந்துக் கம்பிழந்த பாலைநிலந் தனைக்கடந்தங்
கப்பா லுற்றூர்

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்: 41) (1367)

என்றும்

பதியுளார் தீவினை பாவம் யாவும்வந்
தெதிர்கொடு மழலென வியற்றும் பாலையின்
மிதிபடக் கழல்களும் வெந்து நீறிடுங்
கதிரும் பாலையுங் கடந்து போயினர்
(அபுல் முலப்பறை மீட்ட படலம்: 25) (1794)

என்றும்

படர்ந்திடும் பேய்த்தே ரோடிப் பரன்மிடைந் தழல்கள் வீசிக்
கொடுங்கனற் பொறிவெம் பாலை யிடங்களுங் குறுகி நீந்தி
(அப்துல்லாஹ்வுமிபுரு கீமுந் தெரிசித்த படலம்: 13) (1856)

என்றும்

நடந்திடுங் கரிய வறற்பல கொழிக்கு
நதிகளுங் கானையா றுகளும்
படர்ந்திடும் பரவை நிகரென வகன்று
பரன்மிடை யிடங்களுந் துலைத்து
விடம்படர்ந்தனைய கொடியவெம் பாலை
வெயில்விடு பெருஞ்சுர வெளியின்
அடைந்தனர் தருக்க ளெரிந்தது கரிந்து
மலைந்திடுங் குறளென லாமால்
(மிதியடி யனுப்பி யஜமிகளைக் காத்த படலம்: 8) (2544)

பாலையை ஒரு பூதத்துக்கு ஒப்பிட்டும்

மடலுறு மறவ ரார்க்கு
மணற்பொறிப் பாலை . . .
(அபுல் முகாலிபு பெஷ்ஷா புக்குப் போன படலம் : 25) (3803)

என்றும் பல செய்யுட்களில் பாலை நிலம் குறிப்பிடப்பட்டுள்ளது. காப்பியத் தலைவர் கடந்து சென்ற நாடுகள் பாலை நிலங்களாக இருந்தமையால் பாலைநில வருணனைக்கு முக்கியமான ஓர் இடம் ஆசிரியர் அளித்துள்ளார் எனலாம்.

மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி நிலம் எனப்படும். குறிஞ்சி நிலத்தையும் ஆசிரியர் திறம்பட வருணித்துள்ளார். கொவ்வைப் பழம் போன்ற அழகுடைய பெண்கள் வாய்ந்த குறிஞ்சி நிலப்பெண்கள். தினைப்புனங்காக்கச் சென்று கவண்களிலே கற்களை ஏற்றி அழகு மிக்க அந்த மலைச்சாரலிலே நின்று தினைப்புனம் மேய வந்துள்ள கிளிகளை விரட்ட முயலும் பொழுது எழுப்பப்படும் ஓசை அங்கே எதிரொலிக்

கின்றது. அவ்வொலியைச் செவிமடுத்த நல்லவர்கள் தமது பொருளோடு செல்லும் உலகில் உயர்ந்த மலைநாடாகக் குறிஞ்சி திகழ்கின்றது. இத்தகைய குறிஞ்சி நிலத்தைப் பார்த்துக் கொண்டு முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் சென்றார்கள் என்பதை முகியித்தீன் புராணத்தில்பதுறுத்தீன் புலவர் இவ்வாறு பாடியுள்ளார் :

கொவ்வைய ரழகு வாய்ந்த கொடிச்சியர் கவண்கல் லேந்தி
யவ்வணச் சார நின்றங் கருங்கிளி கடியு மோதைச்
செவ்வியர் செவியின் மாந்திச் செல்வரும் பொருளி னோடுங்
குவ்வினி னுயர்ந்த மேருக் குறிஞ்சியுங் கடந்து போனார்

(பிரயாணப் படலம்: 34)

ஏனைய செய்யுட்களிலும் குறிஞ்சி நிலம்
குன்றடா குடில்க டாங்குங் குறவர்தங் குறிஞ்சி

(ஹஜ்ஜுக்குப் போன படலம்: 8) (493)

என்றும்

கவண்கல் லார்க்கு
மேட்டாந்த வரைச்சாரற் குறிஞ்சிநிலந் தனைக்கடந்து

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்: 41) (1367)

என்றும்

கொடுவரி யுலவுங் குறிஞ்சியுங்

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்: 214) (1540)

என்றும்

காடுறுங் குறிஞ்சி . . .

(அபுல் முலப்பறை மீட்ட படலம்: (24) (1793)

என்றும்

நீட்டிலை மிடற்றுச் செழுந்தினரக் குலையை
நெடுவரை மகணிற முறழு
மீட்டிய பவள வோட்டத்திற் கறுவா
நெடியகைக் கவண்கலை யேந்திக்
கோட்டலர் முடித்துப் பந்தலி னிருந்து
குறிஞ்சர லிசையொடும் பாடி
மோட்டிள முலையி னெயிற்றியர் கிளியை
முரணிடுங் குறிஞ்சியும் கடந்தார்

(மிதியடி யனுப்பி யஜமிகளைக் காத்த படலம்: 7) (2543)

என்றும்

குறத்தியர் கவண்கல் லேந்திக்
குறுந்தினை சார்பிற் பஞ்ச
நிறத்துறுந் தத்தை யோட்டு
நீள்குர லோசை யோடும்
திறத்துறுஞ் சிலம்பர் தங்கள்
செய்தொழில் வனப்ப நோக்கிப்
புறத்துறக் குறிஞ்சி நீங்கிப்
புகையெழும் பாலை வந்தோம்
(ஒட்டகை காண்பித்துக் கொடுத்த படலம்: 6) (3042)

என்றும்

தறுகிடாக் குறிஞ்சி . . .
(அபுல் முகாலிபு பெஷ்ஷாவுக்குப் போந்த படலம்: 25) (3803)

என்றும்

குறிஞ்சி நிலம் பல்வேறு வகையாக வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களில் மிக அருமையாகக் காணப்படும் நெய்தல் நிலக்காட்சி ஒன்றின், மிகச் சுருக்கமாக வருணிக்கப்பட்டுள்ள முறையினைப் பார்ப்போம். கடலின் ஓசை மிகுந்த சத்தமுடையது. அத்தகைய ஓசை உடையது நெய்தல் நிலம். கரையை உடைய மருத நிலத்து ஓசையைக் கேட்டவர்களாக முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் மருத நிலத்தைக் கடந்து சென்றார்கள் என்பது ஒரு செய்யுளின் கடைசி அடியில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

தாடிய கடலி னொலியென ஆர்க்கும்
தடமுறு நெய்தலுங் கடந்தார்
(மிதியடியனுப்பி யஜமிகளைக் காத்த படலம்: 6) (2542)

ஏனைய இயற்கை வருணனைகளைப் பார்ப்போம். வண்டுகள் தேனுண்டு ரீங்காரம் செய்யும் சோலைகளைக் குறிப்பிட

கழுதுகள் தேனுண்டார்க்குங்
கடிமலர்ச் சோலை கண்டு
(முரீது பெற்ற படலம்: 43) (581)

என வந்துள்ளது.

திருமண விழாவிற்காக அலங்கரிக்கப்பட்டிருந்த வீட்டு வாயல்களில் பல்வேறு வகையான மரங்கள் வரிசை வரிசையாக நடப்பட்டிருந்தன என்பது இவ்வாறு ஒரு செய்யுள் விவரிக்கிறது.

கரும்பொடு கன்னி காரங் கமுகுமா துளேதே மாபொற்
சுரும்பொடு ஞிமிறும் பாடுஞ் சூதமுட் பனசந் தாழை
யரும்புநித் திலத்தை மேவு மழகிளம் புன்ஊ ஞாளி
நிரம்பிய கனிக ளோடு நிரைத்திடும் வாய ரூேறும்

(மணம்புரி படலம்: 18) (879)

முகியித்தீன் புராணம் இரண்டாம் பாகத்தில் உள்ள கலியாணஞ் செய்வித்த படலத்தில் அமைந்துள்ள 21ஆம் செய்யுளில் மலர்ச்செடி கொடிகளும் 22ஆம் செய்யுளில் மரங்களும் வருணிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

மக்கமா நகரை வருணிக்க முற்பட்ட பதுறுத்தீன் புலவர் மக்கமா நகருக்குச் சிறப்பை அளித்துப் பாடியுள்ளார். அந்நகரின் ஆலயத்தில் அமைந்துள்ள இறை இல்லமான புனித கஃபத்துல்லா (அல்லாஹ்வின் இல்லம்), இச்செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. பெரு வரம் அளிக்கும் நகர் மக்கா நகர். தேன் மணங் கமழும் சோலைகளும் தாமரை மலர்கள் நிறைந்துள்ள தடாகங்களும் மிகுதியாக உள்ளது மக்கமா நகர். இக்கருத்துக்களேயே பதுறுத்தீன் புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் வருணித்துள்ளார்:

இறையவ னருளினு லியற்று மாலேயத்
துறைதவங் கருபத்துல் லாவுற் ரூேங்கியே
நறைவிரி துடவையு நளின வாவிசூழ்
குறையிலாப் பெருவரங் கொளுமக் காநகர்

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்: 2)

மற்ருெரு செய்யுளில் பல்வேறு பறவைகளும் வண்டினங்களும் விலங்கினங்களும் வருணிக்கப்பட்டுள்ளன. இச்செய்யுளிலே மானேக் குறிக்க புல்லாய் என்னும் சொல்லும் கடா என்பதைக் குறிக்க போத்து என்னும் சொல்லும், பூமியைக் குறிக்க விபுலே என்னும் சொல்லும் பயன்படுத்தப்பட்டுள்ளன. பதுறுத்தீன் புலவர் இவற்றை எல்லாம் ஒன்று சேர்த்து இவ்வாறு பாடி உள்ளார்:

அரிநிறத்த விரிசிறையின் மயிலினமுங் குயிலினமு
மகன்ற கானிற்
கரியினமற் றரிகரடி புல்வாயு மரைப்போத்துங்
கலந்து காவில்
விரிமலர்பொற் சுரும்பினெடு வண்டினங்கள் படைபொருதும்
விபுலே மேவு
முரியவரிற் பெரியவராம் ஷெய்குசன்ஹா விரவினிற்கண்
ணுறங்க லானர்

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்: 33) (1359)

மற்ருெரு இயற்கை வருணனையைப் பார்ப்போம். மலர்க் கொத்துக்களிலே பூக்கள் திரட்சியாக பூத்திருந்தன. அங்கே அதன் காரணமாகக் குளிர்ச்சி நிலவியது. இத்தகைய சூழல் அங்கு நிலவியது. சந்திரனின் ஒளி அங்கு பரவியது போன்ற காட்சியை உணரக் கூடியதாக இருந்தது. அத்தகைய பூஞ்சோலே அது. அங்கே வண்டுகள் பறந்து கொண்டிருந்தன. பூக் கொப்புகளில் உள்ள மலர்களிலிருந்து தேன் ஒழுகிக் கொண்டிருந்தது. அவ்வாறு ஒழுகுந் தேனே அருந்துவதற்கு முந்தும் வண்டுகளின் இனிய ஓசை எங்கும் கேட்கக் கூடியதாக ஒலித்துக் கொண்டிருந்தன. இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

கொந்துறு மலர்த்தடங் குளிர்ந்துபுடை சூழு
மிந்துகொளுந் தண்டலே யிருஞ்சுரும் பெழுந்து
சிந்துமலர்க் கொம்பினி லிருந்தொழுகு தேனே
முந்திட வருந்தளி முரன்றிசை மிடற்றும்

(அபூபக்கரில் ஹம்மாமியைச் சாபமிட்டுத் தீர்த்த
படலம்: 47) (1674)

இன்னெரு காட்சியை எடுத்துக்கொள்வோம். தாமரை மலர்கள் மலர்ந்துள்ள வாவிகள் உள்ளன. அழகுடைய இளமையான வண்டுகள் அம்மலர்களிலிருந்து ஒழுகும் தேனே உண்டு மகிழ்கின்றன. அப்பொழுது தென்றல் வீசும். அத்தென்றலினுல் குளிர்ச்சி ஏற்பட்டது. தேனீக்கள் தேனுண்ட பின் எஞ்சியிருந்த பூக்கள் தென்றல் வீசியமையால் உலர்ந்து விழுந்து விடுகின்றன. அதன் பயனுக பூக்கொப்புக்கள் வெறுமையாகி உள்ளன. இத்தகைய பூஞ்சோலேகளேப் பார்த்துக் கொண்டு அங்கு இருந்து சென்ருர். இக்கருத்துக்களே ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

முளரியந் தடங்களு முருகு யிர்த்திடும்
விளரிவண் டினங்கடே னுண்டு விண்டிடுங்
குளிரிய மலருறுங் கோடு மிஞ்சிய
தெளிவுறுங் காவையுஞ் சென்று நீங்கினர்

(அபுல் முலப்பறை மீட்ட படலம்: 27) (1796)

இதே படலத்தில் 28 முதல் 35 வரை உள்ள செய்யுட்களில் இயற்கை வருணனை இடம் பெற்றிருப்பதைக் காணலாம்;

பகுதாது நகரின் மற்றொரு காட்சி இவ்வாறு படம் பிடித்துக் காட்டப்பட்டுள்ளது. மணங்கமழும் விரிந்த தாமரைப்பூக்கள் அங்குள்ள வாவிகளில் நிறைந்திருந்தன. நீரொதுக்கிவிட்ட மண்ணிலே ஊர்ந்து வந்த சங்குகள் முத்துக்களை ஈன்றுள்ளன. தலைசிறந்த அந்த முத்துக் களை முட்டைகள் எனக் கருதி அழகிய சிறகுகளை உடைய அன்னங்கள் அவற்றின் சிறகுகளுக்குக் கீழே கொண்டு அம்முத்துக்களை அடை காத்தன. அவ்வாறு நாள்தோறும் அடைகாத்துக் கொண்டு உறங்கு கின்றன. தாமரை மலர்களில் உள்ள தேனை உண்ண வந்த வண்டி னங்கள் எப்பொழுதும் இன்னிசை எழுப்பிக் கொண்டிருந்தன. இவை அனைத்தையும் ஒருங்கே கொண்டிருந்தன அங்கிருந்த பூஞ்சோலைகள். அத்தகைய பூஞ்சோலைகளால் சூழப்பெற்று பகுதாது என்னும் ஊர் விளங்கியது. இச்சிறப்பை பதுறுத்தீன் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்:

மருவிரி கமல வாவி வண்டலி னூர்ந்த சங்கம்
ஒருமையி னீன்ற முத்தம் ஒண்சிறை எகினங் கண்டே
அருஞ்சிறை அடையிற் காத்தங் கருந்துயிற் புரியு நாளுஞ்
சுரும்பின ஒலிய ருத துடவைசூழ் பகுதா தூரில்

(செய்கபுல் முகம்மதப்துல் றஹ்மான் படலம்: 1) (2341)

ஏறத்தாழ இதே கருத்தை மற்றொரு பாடலில் அமைத்துப் பாடும்பொழுது வாளை மேலே பாயும் நிகழ்ச்சியை மாத்திரம் இங்கு மேலதிகமாகச் சேர்த்துள்ளார். இக்காட்சி இவ்வாறு ஒரு செய்யுளில் அமைந்துள்ளது.

வரியளி குடைந்து பாடும்
வார்தடக் கரையில் அன்னம்
வரிவளைக் குலங்கள் ஊர்ந்து
வண்டலின் உயிர்த்த முத்தைக்

கருவெனச் சிறையிற் சேர்த்துக்
களிப்பொடு துயில வாளை
மருமலர் இடையிற் தத்த
மலைந்தெழும் வசந்த நாடே.
(கடலில் காயியானவனை வருத்திக் கலியாணஞ் செய்வித்த
படலம்: 2) (2164)

இதே கருத்துக்கள் மற்றொரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

வரிவளைக் குலங்க ளூர்ந்து வண்டலி னுயிர்த்த முத்தை
விரிசிறை யெகின மண்ட மென்றடை கிடக்கும் வாவி
பரியின மலர்த்தே னுண்டு மைந்தரு நிகர்க்கும் பூங்கா
மறுமறு மடவி சூழ்ந்த வளம்பெறும் பகுதா தன்றே
(கிலுறுப் படலம்: 2) (3169)

முகியித்தீன் புராணத்தின் இரண்டாம் பாகத்தில் அமைந்துள்ள 74ஆம் படலமான கடைசிப் படலத்திலும் பகுதாது நகரின் வருணனை இடம் பெற்றுள்ளது. பூக்களை மலரச் செய்வது வண்டுகள் என்பது கவி மரபு. முல்லைப்பாட்டிலும்

யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழிகொண்ட நறுவீ முல்லை (8—9)

நறிய பூக்களையுடைய முல்லையினது அரும்புகள் யாழிசை ஓசையினையுடைய இனமான வண்டுகள் ஆரவாரிக்கும்படி அவிழ்ந்தன என வந்துள்ளமை காண்க. பதுறுத்தீன் புலவர் கூற்றுப்படி வண்டுகளின் தாக்கத்தினுல் மலர்ந்த பூக்களிலிருந்து தேன் சிந்துகின்றது. அது காரணமாக நறுமணங்கமழும் தாமரை மலர்கள் தன்னிடத்தே கொண்டு விளங்குகிறது பகுதாது நகர். இதனையே ஆசிரியர் இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார்.

அரியி னங்க ளலர்த்திடத் தேனுறும்
பரிம ளங்கொளும் பங்கய வாவியும்
விரியுஞ் சோலை யுடுத்து வியன்பெறப்
புரியுஞ் சீர்பகு தாதினிற் புக்கினுர்
(காபுமலைக் கப்புறத்தார் வகுலு கேட்ட படலம்: 51) (3956)

**உவமைகளும் உருவகங்களும்**

மேற்கூறிய இயற்கை வருணனையிலே பல உவமைகளும் உருவகங்களும் அமைந்துள்ளன. எனினும் சிறப்பான ஓரிரண்டு உவமை உருவகங்களைப் பார்ப்போம். பாலியப் பருவத்தினரான முகியித்தீன்

ஆண்டவர் அவர்களும் அவர்தம் தோழர்களும் குளத்தில் மூழ்கினர் அப்பொழுது அவர்களுடைய தோற்றத்தையும் அவருடன் இருந்த தோழர்கள் தோற்றத்தையும் சந்திரனைச் சூழ உள்ள நட்சத்திரக் கூட்டத்தின் தோற்றத்துக்கு உவமித்துள்ளார் ஆசிரியர். முகியித்தீன் ஆண்டவர்களுடைய முகம் பூரணச் சந்திரன் போல் தோன்றியது. குளிர்ந்த மதியின்கண் உள்ள களங்கம் அற்றதாய் அது உலகத்திலே தோன்றுவது போன்று முகியித்தீன் ஆண்டவர்களின் முகத்தின் பொலிவு விளங்கியது. 'பனி மதியின் நாகம் விட்டு'த் தோன்றியதாகக் கூறி உள்ளார். ஊருணி என்னும் பொதுக்கிணற்றிலே தாமரை மலர் களுக்கிடையே முகியித்தீன் ஆண்டவர் அவர்களும் அவர்களுடைய தோழர்களும் சந்திரனுடன் நட்சத்திரங்கள் காட்சி அளிப்பதுபோல் தோன்றினர்கள் என்பதை இவ்வாறு ஒரு செய்யுளில் ஆசிரியர் உவமை கூறி உள்ளார்.

நீரிடை மூழ்கும் போதி னிறைமதி முகத்தின் ருேற்றம்
பாரிடைக் கலைக ளோடும் பனிமதி நாகம் விட்டுத்
தாருடுக் கணங்க ளோடுந் தரணியிற் பொலிந்த கஞ்சத்
தூருணித் தடத்தி னின்று முலவிய துவமை யம்மா.

(செறுவிளையாட்டுக் காரணப் படலம் : 14) (271)

முகியித்தீன் ஆண்டவர்கள் கல்வி கற்பதற்காக பகுதாது செல்லப் புறப்பட்டார்கள். அவ்வாறு அவர்கள் சொந்த ஊரை விட்டுப் பிரி வதைப் பொறுக்க முடியாது மரஞ் செடி கொடி கூட வருந்தின எனப் புலவர் கூறிஉள்ளார். மரங்களிலே மணங்கமழும் பூக்கள் மலிந்த பூஞ் சோலைகளிலே இருந்த பறவைகள் தமது சிறகுகளை அடித்துக் கூவின. அப்பூக்களிலே உள்ள தேன் தென்றல் வீசுவதனுல் ஒழுகும் பொழுது அவற்றை உண்ட வண்டுக் கூட்டங்கள் ரீங்காரம் செய்து ஒலி எழுப் பின. இந்தச் சத்தங்களைப் பார்க்கும்பொழுது மாதவத்தினரான முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்கள் பெருமை மிக்க ஜீலான் நகரைவிட்டு நீங்குவதைத் தாங்க முடியாது அங்குள்ள பூஞ் சோலைகள் அழுது புலம்பிக் கொண்டிருப்பதை ஒத்திருந்தது என பதுறுத்தீன் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடியுள்ளார்.

தருவின மருவும் பூங்காத் தண்பொழி லிடத்தி னுற்ற
விரிசிறைப் பறவை யார்ப்ப விண்டலர் தேனை மாந்தி
யரியின முரலுந் தோற்ற மருந்தவ முகியித் தீனிப்
பொருவறும் ஜெயிலா நீங்கத் துடவைகள் புலம்பல் போலும்

(பிரயாணப் படலம் : 29) (355)

மணங்கமழும் பூக்களைத் தமது கூந்தலில் அணிந்திருந்தனர் இளம் பெண்கள். அத்தகைய கூந்தல் குலைந்திருந்தது. வெள்ளை நிலாவைப் பொழியும் சந்திரனைப் போன்ற முகத்திலிருந்து வேர்வை சிந்தியது. பாற்கடலிலிருந்து பெறப்பட்ட அமுதம்போன்ற தெரிவையர் வீதிகளிலே ஆடிக்கொண்டிருந்தனர். அவர்கள் எல்லையற்ற மகிழ்ச்சியோடு ஆடிக் கொண்டிருந்தனர். அவர்கள் தம் கைகளிலே மலர்களாலான பந்துக்களை ஏந்தியவர்களாய் விளையாடிக் கொண்டிருந்தனர். அப்பெண்மணிகள் அங்ஙனம் விளையாடிய காட்சி சிறகுகளை விரித்து அன்னப் பறவைகள் விளையாடிக் கொண்டிருப்பதைப் பெரிதும் ஒத்திருந்தது. இங்கே ஒன்றுக்கு மேற்பட்ட உவமைகள் இடம்பெற்றிருப்பதைக் காணலாம். இங்ஙனம் கண்கவர் காட்சியைக் கண்டவர்களாக முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் சென்றார்கள் என்பது ஒரு செய்யுளில் இவ்வாறு விளக்கப்பட்டுள்ளது.

விரைமலர்க் குழலுஞ் சோர வெண்மதி வதனம் வேர்ப்பத்
திரையினி லமுத மன்னத் தெரிவையர் வீதி வாயிற்
கரையிலா வுவகை யோடுங் கைகளின் மலர்ப்பந் தேந்தி
விரிசிறை யனங்கள் போல விளங்கியா டுவதுங் கண்டார்

(பகுதாது புக்க படலம்: 8) (410)

திருமண விழாவிற்காக பகுதாது நகரில் இடப்பட்ட மகர தோரணம் ஆகாயத்திலே மழைக் காலங்களில் தோன்றிடும் வானவில்லை ஒத்திருந்ததென இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர் :

மண்ணு ளார்புகழ்ந் தேத்திய நகர்பகு தாதுக்
கண்ண லார்திரு மணத்தினுக் கணிமறு கிடத்தி
லெண்ணி வார்ந்திடு மகரதோ ரணத்துற லியம்ப
விண்ணி லார்ந்திடு மிந்திர சாபநேர் விளங்கும்

(மணம்புரி படலம்: 38) (899)

மக்க மாநகரத்துக்கும் ஓர் உவமை கூறி உள்ளார் பதுறுத்தீன் புலவர். உலகினை ஒரு பெண்ணுக்கு உவமித்துள்ளார் அப்பெண்ணின் உடலினைப் பல அணிகலன்கள் அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன. அந்த அணிகலன்களுள் ஒன்று பேரணியாகத் திகழ்கின்றது. அந்த பேரணியின் நிலாவென ஒளிபரப்பும் சிறப்பு மணி போன்று விளங்குவது மக்கமா நகர். இதனையே ஒரு செய்யுளில் சுருக்கமாக விளக்கி உள்ளார் ஆசிரியர்,

உலகெனு மடமயி லுடலிற் பூட்டிய
பலகல னணிந்தபே ரணியிற் பண்புறு
நிலவிடு குருமணி நிரைய தாமென
நலமுறு மக்கமா நகர மென்பவே.

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம்: 10) (1336)

கடல் போன்ற படை என்பதை,

நடந்திடுங் காலெயி னரலை போலவே
படர்ந்திடும் பரிவொடும் படைக ளேந்தியே

(பிரயாணப் படலம்: 39) (365)

என்னும் நகரைச் சுற்றி உள்ள மணம் கமழும் மலர்ந்த தாமரை மலர்களை உடைய அகழி கடல் போன்றது என்பதை

நறைவிரி கமலம் பூத்த நரலைநே ரகழி பூண்டு

(பகுதாது புக்க படலம்: 3) (405)

என்றும் ஒரு பெண் சொல்லும் சொல் அறிவிலிகள் சொல்லும் இழிமொழிபோன்றது,

புல்ல ரோதிய புன்மொழி போலநீ
சொல்ல லாகுமோ தோகையே கேளென்ருர்

(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம் : 156) (1482)

என்றும் உவமான உவமேயங்கள் வந்திருப்பதைக் காணலாம்.

பாவம் என்னும் கடலிலே மூழ்கி நீந்திக் கரையை அடைய முடியாமல் தத்தளித்து ஓலமிடும் கள்வரைக் காக்க திருமறைச் சொற்கள் என்னும் கப்பலில் ஏற்றிக் கரை சேர்க்கும் மன்னரே என முகியித்தீன் அப்துல் காதிறு (றலி) அவர்களை விளித்து ஆசிரியர் இவ்வாறு ஒரு செய்யுளில் பாடி உருவக நயத்தை அமைத்துள்ளார்.

குரைதிரைப் பவத்தி னுற்ற குடிசங்க சார மென்னுந்
திரையினி லழுந்தி நீந்தத் திறனிலா முங்கி யேங்கிக்
கரையினைக் காணப் பொங்கிக் கரைந்திடுங் கள்வர்க் காக்க
மறைப்பத வங்க மேற்றிக் கரையினை வழங்குங் கோவே

(பிரயாணப் படலம்: 70) (3.6)

அறமும் தவமும் புரிந்து நடத்தல் இன்றியமையாதது. பார்வை. கேள்வி, மொழி, நுகர்வு ஆகிய பஞ்சேந்திரியங்கள் என்னும் பறவையைப் பறக்க விடக் கூடாது. அவற்றைக் கட்டுப்படுத்தி விரியும்

பூரகத்தை மேவி கும்பகம் வெளியுருமல் பார்த்துத் துரியத்தை வெளியிலாக்கும் துறவு பூண்டோர் நும்போல் மிக்கார் என்று ஷைத்தான்கள் கூற்ருக உருவகம் அமைத்துள்ளார், ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு:

பரிவுறுந் தவத்துக் கேய்ந்து பஞ்சவிந் திரிய மென்றுங்
குருவியைப் பறக்கொட் டாமற் கூட்டினிற் படுத்தி யோடி
விரியும்பூ ரகத்தை மேவிக் கும்பகம் வெளியு ருமற்
றுரியத்தை வெளியி லாக்குந் துறவலர் நும்போன் மிக்கார்

(செய்த்தான்கள் தொடர்ந்த படலம்: 53) (637)

இப்பாடலில் யோகக் கலையுடன் தொடர்புள்ள சொற்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். பிராணுயாமத்துக்கு உறுப்பானதும் வாயுவை உள்ளே இழுப்பதுமான செயல் பூரகம் எனப்படும். பூரித்த வாயுவை உள்ளே நிறுத்தும் பிராணுயாம வகை கும்பகம் எனப்படும், துரியம் என்பது யோகியர் தன்மயமாய் நிற்கும் உயர்நிலையாகும். இதே படலத்தில் உள்ள 54ஆம், 55ஆம், 62ஆம் செய்யுட்களில் இத்தகைய உருவகக் கருத்துக்கள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

முகியித்தீன் ஆண்டவரை விளித்துப் போற்றும் பொழுது உருவகங்களை ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். அவர்களை அமரருக்கு அருமருந்தாகவும், கடலால் சூழப்பட்ட உலகில் உள்ளவரின் அறியாமை என்னும் இருளினை அகற்றும் சூரியனுகவும், ஒழுங்கில்லாத, இஸ்லாம் அற்ற, குபிர் என்னும் பிணியாகிய இருளை நீக்கும் சந்திரனுகவும் குற்றமற்ற இறைநேசர்களுக்கெல்லாம் அரசராகவும் விளங்குபவர் புண்ணியரான இக்காப்பியத் தலைவரே என்பது இவ்வாறு அப்பாடலில் விவரிக்கப்பட்டுள்ளது.

வரிசை நாயக மேயம ரருக்கரு மருந்தே
திரைசெய் வாருதி யுலகிரு ளறுக்குஞ்செங் கதிரே
நிரையி லாப்பெருங் குபிரிரு ணீக்குநீ ணிலவே
புரையி லாவொலி களுக்கர சானபுண் ணியரே.

(இசுருயீல் கைறூகைத் தட்டி விட்ட படலம்: 61) (1746)

ஒரு மதிலை ஒரு பெண்ணுக்கு ஆசிரியர் ஒரு செய்யுளில் உருவகித்துள்ளார். பெண்ணுக்கு ஆடை போன்று மதிலுக்கு ஆடையாக அமைந்திருப்பது பூமி. பெண்ணுக்கு முலையிருப்பது போன்று மதிலுக்கு அகழியில் உள்ள தாமரை மொட்டுத் திகழ்கின்றது.

பெண்ணுக்குக் கூந்தல் இருப்பது போன்று மதிலுக்கு அகழியில் இருக்கும் சைவலம் எனப்படும் பாசியின் தொகை அமைந்துள்ளது. பெண்களின் சிரித்த முகம் போன்று எல்லோரையும் வரவேற்கும் மதிளின் வாயில் விளங்குகின்றது. இவ்வாறு மதிள் பெண்ணை ஒத்திருந்தது என உருவக நயம் அமைய ஆசிரியர் பாடியுள்ள செய்யுள் வருமாறு:

அகமெனு மாடையை யுடுத்தி யம்புய
முகையினை முலையென முடித்து சைவலத்
தொகையெனக் கூந்தலைச் சூடி வாயலை
நகைமுக மெனமதி ளுரி யொத்தவே

(அபுல் முலப்பறை மீட்ட படலம் : 29) (1798)

சங்குகள் மிகுதியாகவுள்ள கடல் என்னும் தவத்தினர் மத்தியிலே திங்கள் போன்று விளங்கிய ஆசனத்தில் அமர்ந்து செவி மடுப்பதனால் மகிழ்ச்சியைத் தரக்கூடிய கடல் போன்ற அறிவுகள் புகலக் கூடியவர்கள் முகியித்தீன் ஆண்டவர் அவர்கள். இங்ஙனம் முகியித்தீன் ஆண்டகை அவர்களின் கல்வித் திறனை ஒரு செய்யுளில் இவ்வாறு விதந்தோதி உள்ளார் பதுறுத்தீன் புலவர்.

சங்க வாருதி யாமெனுந் தவத்தர் நாப்பண்
திங்கள் போலொளி விளங்கிய குரிசின் மீதிருந்து
பொங்க மாகிய கடலெனும் அறிவுகள் புகலும்
எங்கள் நாயகர் முகியித்தீ னவையகத் தானுர்

(செய்கபுல் முகம்மதப்துல் றஹ்மான் படலம்: 51) (2391)

மற்றுஞ் சில பாடல்களில் உருவக நயம்
அமுதெனும் அறிவைச் செவியினு லருந்தி

(பட்சிகள் வரவுப் படலம்: 14) (3888)

எனவும்

மவுத்தெனும் பெரும்புலி வந்து பாய்ந்ததே

(காபு மலைக்கப் புறத்தார் வகுலு கேட்ட படலம்: 28) (3933)

எனவும் வந்துள்ளமை காண்க.

### தற்குறிப் பேற்றவணி

சூரியோதயம் இயல்பாகவே நிகழ்வதொன்றாகும். ஆனால் வைகறையில் சேவல் கூவி சூரியனை வாவென அழைக்கவே சூரியன் உதயமானான் எனப் புலவர் வருணித்துள்ளார். முகியித்தீன் ஆண்டவரின்

புகழை உலகிற்கு விளக்கவே சேவல் வா எனச்சூரியனைக் கூவி அழைத்தது எனவும் குறிப்பிட்டுள்ளார். இனிச் செய்யுளைப் பார்ப்போம்.

பொருவி லாவிருண் மங்கவு முகியித்தீன் புகழைத்
தெரியப் பூவிடை விளங்கிட வேண்டிவன் சேவல்
விரியும் வெண்சிறைக் காத்திறுற் றட்டியே விரைய
இரவி வாவெனக் கூவிட வெய்யவ னெழுந்தான்

(அவதாரப் படலம்: 36) (174)

சந்திரன் மேற்குத் திசையில் மறைந்தான். அதுவரையில் அல்லி மலர்கள் மலர்ந்திருந்தன. தாமரை மலர்கள் குவிந்திருந்தன. நட்சத்திரங்கள் சூழ சந்திரன் அரசியற்றி வந்தான். மறைந்தபின் சூட்டினைத் தலையிலே உடைய புள்ளிகளைக் கொண்ட சிறகுகளை விரித்துச் சேவல் கூவின. அப்பால் குணகடலிருந்து சூரியன் உதித்தான். இக்கருத்துக்கள் அமைந்த பாடல் இவ்வாறு அமைந்திருக்கின்றது.

கள்ளவிழ் குவளை முகமல ரலர்த்திக்
    கடிமலர்க் குமுதவாய் நகைப்ப
வெள்ளருங் கணங்கள் புடைதர வெளியி
    னிருந்தர சியற்றுவெண் மதியந்
தெள்ளரும் பரவை பச்சிமத் திசையின்
    சேர்ந்தனன் சுடருமிழ் சூட்டுப்
புள்ளியஞ் சிறைவாய்ச் சேவல்க டொனிப்பப்
பொலிவுறக் குணகட லெழுந்த

(முத்துத் தாவடமெடுத்த படலம்: 20) (313)

மற்றொரு பாடலில் தற்குறிப்பேற்றவணியினை ஆசிரியர் அமைத்து விரிவாக விளக்கி உள்ளார். சேவலையும் விரிவாக வருணித்துள்ளார். கோழியைச் சரணாயுதம் (காலாயுதம்) எனக்குறிப்பிட்டுள்ளார். சிறகை விரித்து என்று கூறித் திருப்தி அடையாமல் கைபுடைத்து சேவல் கூவியது என்றார். சேவலின் உச்சிக் கொண்டை சிவப்பு என்றார். சூரியனை வா என அழைத்தது கோழி என்றார். தனிமையாக வரச் சொல்லவில்லை. இரவை அகற்றி உலகை விளக்க ஏழு குதிரைகள் பூட்டப்பட்ட தேரினால் இழுக்கப்பட்டு வருக என பானு என்னும் சூரியனை அழைக்கவே சேவல் கூவியது என ஆசிரியர் வருணித்துள்ளார். ஏழு குதிரையில் இழுக்கப்பட்டு கிழக்குக் கடல் வெளிப்படைய சூரியன் உதயமானான். இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

இரவினை யகற்றி யுலகெலாம் விளக்க
வெழுபரி நடத்திவிண் ணெழுகென்
றிரவியை வாவென் றழைத்தபோற் செவந்த
விளங்கிளி யோட்டஞ்செஞ் சூட்டு
விரிசிறைச் சரணு யுதங்கரம் புடைத்து
விளங்கிட முழங்கிய தொனியாற்
பரியினை நடத்திக் குணகடல் வெழுப்பப்
பானுவு முதையஞ்செய் தனனே
(அவுதாக்களில் நிலையுற்ற படலம்: 15) (773)

சந்திரன் மறைவையும் வருணிக்கும் பொழுது தற்குறிப்பேற்ற அணியை அமைத்துள்ளார் ஆசிரியர். இரவின் இருளை அகற்றுவது அழகுமிக்க சந்திரன். அந்தச் சந்திரன் செய்கான முகியித்தீன் ஆண்டவரின் முகத்தைக் கண்டு விட்டான். ஆனால் சூரியன் காணவில்லைப் போலும் எனச் சந்திரன் சிந்தித்தான். சூரியனையும் செய்கு நாயகத்தின் முகத்தைக் காண வழிவகுக்க வேண்டும் என எண்ணினான். இரவினைப் பகலாகச் செய்யும் ஆற்றல் சூரியனுக்குத்தான் உண்டு எனச் சிந்தித்தான். அப்பெரியாரின் திருமுகத்தைக் காண சூரியனை அழைத்து வர வேண்டும் எனத் தீர்மானித்தவனாய் விரைவாகச் சந்திரன் மேற்குக் கடலை அடைந்தான். இங்ஙனம் கற்பனை செய்து பதுறுத்தீன் புலவர் ஒரு பாடலைப் பாடி உள்ளார். அதனை அடுத்த பாடலில் சேவல் சூரியனை அழைத்ததாகக் குறிப்பிட்டுள்ளார். மூன்றாவது செய்யுளில் சூரியன் உதயஞ் செய்தான் எனக் கூறி உள்ளார். தற்குறிப்பணி பொதிந்துள்ள மூன்று செய்யுட்களும் வருமாறு :

இரவினி லிருளை யோட்டு மெழின்மதி முகத்தி னாலத்
தெரிதரக் காண்கி லாத ஷெய்குதம் வதனங் கண்டு
மிரவினைப் பகலாய்ச் செய்யு மிரவியை யழைப்பான் போல
விரைவுட னடந்தங் கிந்து மேற்றிசைக் கடலிற் சார்ந்தான்

இந்துமேற் கடலிற் சார வெழிறிகழ் சூட்டுச் சேவற்
சந்ததம் ஷெய்கு துன்பந் தவிர்க்கவென்
றிருகை யென்னும்
விந்தைசேர் சிறகாற்றட்டி விரையவா கதிரே யென்னக்
கொந்துறுங் குரலை விட்டுக் கூவிய தோற்றந் தானே

குக்குடங் கூவக் கேட்டுக் குணகடல் வெளுப்ப வாய்ந்த
வுக்கிரப் பரிக டாவி யொருதிகி ரியந்தே ரூர்ந்து
மிக்கரு மளிதே னுண்ண விரிந்தசெங் கமலம்விகளச்
செக்கரும் படத்தைக் கீறித் தினகர னுதையஞ் செய்தான்
(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம் : 103-105)
(1429-1431)

இரவினில் தனித்திருந்தவர் இருள்படர்ந்த அவ்விரவை ஒரு யுக மென உணர்ந்திருப்பார். அவ்வாறு அவரைத் தயங்க விடக்கூடாது மனத்துயரடைய விடக்கூடாது என அவர்மீது இரக்கங்காட்டுவது போல் சேவல்கள் கூவ வானம் வெளுப்ப சூரியன் உதித்தான். உல கெலாஞ் செழிப்பவே தினகரன் உதயமானுன். இக்கருத்துக்களே இவ்வாறு ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளன.

தனித்தி ருந்தவ ரிரவொரு வுகமெனத் தயங்கி
மனத்து றுந்துய ருலேத்திடக் கிடந்தனர் மண்மேற்
கனத்த வாரணஞ் சிலம்பிடக் குணகடல் வெளுப்பச்
சினத்த வெங்கதி ருதித்தன னுலகெலாஞ் செழிப்ப
(செய்கு சன்ஹூாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த படலம் : 132)

இத்தகைய தற்குறிப்பேற்றவணி அமைந்த செய்யுட்கள் பல முகியித்தீன் புராணத்தில் இடம்பெற்றுள்ளன. செய்கு அபியப்துல்லாப் படலத்திலும் (13, 14, 16, 17), மிதியடி யனுப்பிய அஜமிகளேக் காத்த படலத்திலும் (19), ஜின் பாந்தளாக வந்த படலத்திலும் (10), அபுல் முக்காலிபு பெஷ்ஷா புக்குப் போன படலத்திலும் (31), பட்சி கள் வரவுப் படலத்திலும் (9, 10) தற்குறிப்பேற்றவணியை அமைத்துப் பாடியுள்ளார் பதுறுத்தீன் புலவர்.

## பெண்கள்

பல கோணங்களிலிருந்து பார்த்தவரைப் போல் பெண்களே வரு ணித்துள்ளார் பதுறுத்தீன் புலவர். வண்டுகள் வந்துவந்து எழும் பூக் களே உடையது ஒரு பெண்ணின் கூந்தல். அவளுடைய நுதலோ ஒளி பொருந்திய இளம்பிறை போன்றது. வேப்பமிலேயினேப் போன்றது அவளுடைய புருவங்கள். போரில் ஈடுபடுத்தவோவென அஞ்சத்தக்க வேல் போன்றன அவளுடைய கண்கள். இக்கருத்துக்கள் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைந்துள்ளன.

கனவண்டு கலேந்தெழு பூங்குழலுந்
தனிவெண்பிறை தங்கிய வாணுதலும்
வனவேம்பிலே யின்புரு வக்கடையும்
வினேயுற்றிடு கோவெனும் வேல்விழியாள்.
(ஜின் கொண்டுபோன பெண்ணே மீட்டிக் கொடுத்த
படலம்: 29) (742)

அப்பெண்ணுடைய முகம் பூரணச்சந்திரன் போன்றது. தேன் பொழியும் சிறப்பை உடைய செந்தாமரை வெட்கித் தலே குனிந்து குவிய உலகில் உள்ள இருளே அகற்றி மிக்க அழகுடன் ஆகாயத்திலே

உலாவிவரும் முழுமதி போன்ற முகத்தை உடையவள். பெண்ணின் முகத்தைப்போல் தான் இல்லையே என்று தாமரை வெட்கப்பட்டது. குவிந்தது. சூரியன் மறைந்து சந்திரன் தோன்றும் போதும் தாமரை குவியும். இரண்டு கருத்துக்களும் தொனிக்க இப்பாடல் இயற்றப் பட்டுள்ளது.

வேரி யுற்று வியன்கொள்செந் தாமரை
பாரில் வெட்கப் பதின்மடங் காயெழிற்
கார றுத்துக் ககனத்து லாவிய
பூர ணச்சசி போன்முகத் தாளரோ
(ஜின் கொண்டு போன பெண்ணை மீட்டிக் கொடுத்த படலம்: 31)

சிலப்பதிகாரத்தில் கண்ணகியை வருணிக்க முற்பட்ட இளங்கோ வடிகள் அம்மாது சிரோமணியை இவ்வாறு விவரித்துள்ளார்:

மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ
தாழிருங் கூந்தல் கையால்...

(2: 72—80)

இதே பாணியில் பதுறுத்தீன் புலவர் தமது காப்பியத்திலும் பெண்ணை வருணித்துள்ளார். ஒரு பொருளை வருணிக்குமிடத்து, ஆசிரியர் தாம் கருதிய குணம் முதலாகியவற்றின் மிக்க பொருளைக் கூட வைத்துச் சொல்லுவது ஒப்புமைக் கூட்டம் என்னும் அலங்காரம் என்பர். சமதன்மை உடையவைகளை ஒருங்கே சேர்த்துக் கூட்டி அமைத்தல் ஒப்புமைக் கூட்டம் எனப்படும். இரண்டு பாடல்களில் இவ்வாறு பெண்ணை வருணித்துள்ளார் பதுறுத்தீன் புலவர்.

கண்ணினின் மணியே கருத்துறு மறிவே
    கனகமே யுயிர்தரு மருந்தே
விண்ணிடத் துலவா மதியமே யகத்தின்
    வியன்கொளுஞ் சந்திர கலையே
தண்ணருங் கமலத் தடத்தினி லுலவாத்
    தருக்கொளு மகத்துறுந் திருவே
யெண்ணகத் தறனே யிருதயக் கொழுந்தே
    யெழிலுரு வெடுத்தபொற் கொடியே

வாடிய பயிர்க்கோர் மழையென வுதித்து
மருவுமென் குலத்திரு நிதியே
தேடரும் பொருளே வானவர் கடைந்த
திரைகட லுதித்ததெள் ளமுதே
தேடிய தவத்திற் றிரண்டுரு வெடுத்த
செந்திரு வனையமின் னரசே
நாடிய பொருளே யெனப்பல புகழ்ந்து
நன்குறப் போற்றிவாழ்த் தினரே

(ஜின் கொண்டு போன பெண்ணை மீட்டுக் கொடுத்த படலம் : 43-44) (756-757)

திருமண விழாவின் ஊர்வலத்தைக் காணப் பெண்கள் வந்திருந் தனர். ஏழு பருவங்களையும் சேர்ந்த பெண்கள் சமுகமளித்திருந்தனர். கூட்டம் கூட்டமாக நின்று கொண்டிருந்தனர்.

நாற்றிசை பரப்பி னுற்ற நங்கைபே ரிளம்பெண்ணீருய்
ஏற்றிடுஞ் சிறப்பினேடும் எதிர்பவுஞ் சாக வந்தார்

(மணம்புரி படலம் : 124)

இங்கே அல்குர்ஆன் சொல்லான 'பவுஞ்ச்' என்பது இடம்பெற் றுள்ளது. அறபு மொழியில் குழு என்னும் பொருளைக் கொண்டதாக பவுஞ்ச் என்னும் சொல் அமைந்திருப்பதைக் காணலாம்.

பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணத்தின் முதலாம் பகுதியில் மணம்புரிபடலம் அமைந்துள்ளது. அதே போன்று முகியித்தீன் புராணத்தில் இரண்டாம் பாகத்தில் கடலில் காயிபான வனை வருத்திக் கலியாணஞ் செய்வித்த படலம் இடம் பெற்றுள்ளது. இரண்டு படலங்களிலும் பெண்கள் வருணிக்கப் பட்டுள்ளனர். இரண்டு படலங்கள் திருமண ஊர்வலங்கள் இடம் பெற்றுள்ளன. ஊர்வலங்களைக் கண்டு களிக்க பெண்கள் கூட்டம் கூட்டமாக வந்திருந்தனர். ஏழு பருவத்தையும் சேர்ந்த பெண்கள் சமுகமளித்திருந்தனர். இரண்டு படங்களிலும் ஏழு பருவங்களையும் சார்ந்த பெண்கள் வந்திருந்தமையைப் புலவர் வருணித்துள்ளார். திருமணப் படலத்தில் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் திருமண நிகழ்ச்சி கற்பனை நயத்துடன் வருணிக்கப்பட்டுள்ளது. இரண்டாம் பாகத்தில் உள்ள கலியாணஞ் செய்வித்த படலத்தில் கடலில் காணுமற் போன ஒருவனை முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் மீட்டுவித்துக் கலியாணஞ் செய்வித்தமை பற்றி விவரிக்கின்றது.

முகியித்தீன் புராணத்தின் முதலாம் பாகத்தில் உள்ள 20ஆம் படலமான மணம்புரி படலத்தில் ஏழு பருவப் பெண்களும் தனித்தனிப் பாடல்களில் விவரிக்கப்பட்டுள்ளனர். அதே போன்று இரண்டாம் பாகத்தின் முதலாம் படலமும் முகியித்தீன் புராணத்தை முழுமையாகக் கொள்ளின் அதன் 40ஆம் படலமுமாகிய கடலில் காயிபானவனை வருத்திக் கலியாணஞ் செய்வித்த படலத்திலும் ஏழு பருவங்களையும் சார்ந்த பெண்கள் தனித்தனிப் பாடல்களில் வருணிக்கப்பட்டுள்ளனர். ஏழு பருவங்களில் முதலில் வருணிக்கப்படுவது பேதைப் பருவத்தைச் சார்ந்த பெண்கள். பேதைப் பருவத்தைச் சார்ந்த பெண்கள் எப்பொழுதும் தாயாருடன் வருவது வழக்கம். அவ்வாறு வந்து ஊர்வலத்தில் செல்லும் மணவாளன் ஊர்வலம் வரும் வாகனத்தில் தன்னையும் ஏற்றிக்கொண்டு செல்லுமாறு வேண்டும்படி தாயைக் கேட்பதாகப் பாடல் அமைத்துள்ளது. முதல் படலத்தில் மணவாளன் குதிரையிலும் இரண்டாம் படலத்தில் மணவாளன் யானையிலும் பவனி வருவதாக முகியித்தீன் புராணத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. பேதையை வருணிக்கும் பாடலில் முதல் அடியில் மணவாளன் முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் பவனி செல்லும் வீதியின் சிறப்பும், இரண்டாம் அடியில் காப்பியத் தலைவரின் பெருமையும், மூன்றும் அடியில் பேதையின் வேண்டுகோளும், நான்காம் அடியில் பேதை தன் றாயொடு பிதற்றுவதும், குறிப்பிடப்பட்டுள்ளன. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கோதறு சாந்தம் பூசிக் குலவுமே னிலைக ளோங்கும்
வீதியிற் பவனி போதும் வெகுவரம் படைத்த வள்ளன்
மாதவர் பரியின் மீதி லெனையும்வைத் திடுமி னென்னப்
பேதையென் றொருத்தி பெற்ற தாயொடு பிதற்றி நின்றாள்

(மணம்புரி படலம் : 141) (1002)

இரண்டாம் பாகத்தில் உள்ள கலியாணஞ் செய்வித்த படலத்தில் பேதைப் பெண் தன்னை அலங்கரித்துக் கொண்ட விதமும் மணவாளன் பவனி வரும் யானையில் தன்னையும் ஏற்றிச் செல்லுமாறு வேண்டும்படி அழுதவளாய் வயது முதிர்ந்தவளிடம் கேட்டாள்.

மாரிடந் தடியா மெய்த்துகள் துடையா
    மலர்க்குழல் வார்ந்திறுக்கு அறியா
வாரிச மலர்நேர் விழிக்குமை வரையா
    மையலென் பதைமனத் தறியாச்

சீரிய பேதைப் பெண்மண வாளன்
சிறப்பைநோக் கவருட னியானு
மேருறு மியானை மிசையுறு வேனென்
றிருவிழி பிசிந்துரைத் தழுதாள்

(கடலில் காயிபானவனை வருத்திக் கலியாணஞ் செய்வித்த படலம் : 128) (2289)

பேதப் புத்தியினால் கூறிய இவ்வேண்டுகோளை அவருடன் வந் திருந்த மூதாட்டி அவருக்கு ஆறுதல் கூறினாள். முகியித்தீன் ஆண்ட வருடைய அற்புத நிகழ்ச்சியால் உயிர் பெற்றெழுந்து கலியாணம் செய்யும் மணவாளன் பவனிவரும் யானைமீது அவளை இருத்தல் குற்ற மாகும் எனவும் மூதாட்டி கூறினாள். இக்கருத்துக்கள் அடுத்த பாடலில் இவ்வாறு வந்துள்ளன :

உரைத்துக்கண் பிசைந்தங் கழுமவண் முகத்தை
ஒண்டொடி யனையவள் நோக்கி
விரைத்தருங் குழலாள் விருத்தையின் இரப்பால்
விரிதிரைக் கயல்வயின் அழுந்திக்
கரைத்தவன் தனையிப் புவிய லேர் களது
காரணத் தாற்றிருப் பவனி
வருத்திய கரியின் மிசையுனை யிருத்தல்
வழுவெனப் பலபுகழ்ந் துரைத்தாள்

(கடலில் காயிபானவனை வருத்திக் கலியாணஞ் செய்வித்த படலம் : 129) (2290)

ஏழு பருவங்களையும் சேர்ந்த பெண்களையும் பற்றிய வருணனை களைப் பின்வருமாறு செய்யுட்களின் அடிப்படையில் வகைப்படுத்தலாம்.

| | முதலாம் பாகம் மணம்புரி படலம் (20) | இரண்டாம் பாகம் கடலில் காயிபானவனை வருவித்துக் கலியாணஞ் செய்வித்த படலம் (41) |
|---|---|---|
| பேதை | 141 (1002): 164 (1025) | 129 (2289) |
| பெதும்பை | 142 (1003); 143 (1004); 164 (1025) | 131 (2291) |
| மங்கை | 144 (1005); 165 (1026) | 132 (2292) |
| மடந்தை | 145 (1006); 165 (1026) | 133 (2293) |
| அரிவை | 146 (1007); 166 (1027) | 134 (2294) |
| தெரிவை | 147 (1008); 166 (1027) | 135 (2295) |
| பேரிளம் பெண் | 148 (1009); 167 (1028) | 136 (2296) |

திருமணப் படலத்தில் ஒரு தெரு வழியாகச் செல்லும் பொழுது ஏழு பருவங்களையும் சேர்ந்த பெண்கள் குழுமி இருந்து கண்கொட்டா மல் ஊர்வலக் காட்சியைக் கண்டு களித்தனர் என்றும் மற்றொரு தெரு வில் திருமண ஊர்வலம் வரும்பொழுது ஏழு பருவங்களையும் சேர்ந்த பெண்களை இரண்டு முறை ஒரே படலத்தில் முகியித்தீன் புராண ஆசிரி யர், பதுறுத்தீன் புலவர் கற்பனை நயத்துடன் வருணித்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. இந்த அடிப்படையில் பார்க்கும் பொழுது மூன்று வெவ்வெறு விதமான சொல்லாட்சியைப் பயன்படுத்தி வெவ் வேறு மூன்று நடையில் ஏழு பருவங்களையும் சார்ந்த பெண்களைப் படிப் போர்க்குச் சலிப்புத் தட்டாத விதத்தில் பாடியுள்ளமை புலவரின் சொல்லாட்சித் திறமையை எடுத்துக்காட்டுவதோடு கற்பனை ஆற்றலை யும் எடுத்துக் காட்டுகின்றது எனக்கூறின் அது மிகையாகாது.

தமிழ்க் காப்பியங்கள் பெரும்பாலானவற்றுள் இடம் பெற்றுள்ள சிறப்பமிசங்களுள் ஒன்று ஒரு பெண்ணின் கேசாதிபாத வருணனையை அல்லது பாதாதி கேச வருணனையை அமைப்பதாகும். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க்காப்பியங்களிலும் இத்தகைய வருணனைகள் இடம் பெற்றுள்ளன. ஆனால் முஸ்லிம் புலவர்கள் தமது காப்பியங்களில் எந்த முஸ்லிம் பெண்மணியையும் இவ்வாறு வருணிக் கவில்லை என்றே கூறலாம். அத்தகைய வருணனையைத் தமது காப்பியங்களில் இடம்பெறச் செய்வதற்காக முஸ்லிம் அல்லாத பெண் களைப் பயன்படுத்தி உள்ளனர் முஸ்லிம் புலவர்கள். சீருப் புராணத்தில் உள்ள தசைக்கட்டியை பெண்ணுருவாக்கிய படலத்தில் அங்ஙனம் உருவான பெண்ணைக் கேசம் முதல் பாதம் வரை உமறுப்புலவர் வருணித்துள்ளார். இத்தகைய கேசாதிபாத வருணனையை இடம் பெறச் செய்யவே பெருமானார் முகம்மது (சல்) அவர்களின் அற்புத நிகழ்ச்சியைக் கற்பனை செய்து தசைக்கட்டியை உருவாக்கினமை குறிப் பிடப்பட்டுள்ளது என அபிப்பிராயப்படுவாரும் உளர். தசைக்கட்டி யினால் உருவாக்கப்பட்ட பெண்ணையே உமறுப்புலவர் தமது சீருப் புராணத்தில் கேசாதிபாத வருணனைக்காகப் பயன்படுத்தி உள்ளார். சீருப்புராணத்தில் வரும் வேறெந்த முஸ்லிம் பெண் பாத்திரத்தையும் பயன்படுத்தவில்லை என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. அதுபோலவே முகியித்தீன் புராணத்திலும் பதுறுத்தீன் புலவர் கேசாதிபாத வருண னைக்காக எந்த முஸ்லிம் பெண் பாத்திரத்தையும் பயன்படுத்தவில்லை. தரீசா என்னும் முஸ்லிம் அல்லாத ஒரு பெண்ணையே பதுறுத்தீன் புலவர் கேசாதிபாதமாக வருணித்துள்ளார்:

தரீசா என்பவள் றூம் நகரைச் சேர்ந்தவள். மக்கமா நகரிலே பேரும் புகழும் பெற்று வாழ்ந்த மாதவர் செய்கு சன்ஹா அவர்கள் மக்கமா நகரில் இருக்கும் பொழுது ஒரு நாள் தரீசா என்னும்

பெண்ணைக் கனவில் கண்டார். பேரழகியாக அவள் இருந்தாள். றூம் நகருக்குச் சென்ற பொழுது தரீசாவின் இல்லத்தை அடைந்தார் செய்கு சன்ஹா அவர்கள். முகியித்தீன் ஆண்டவரின் தலைமைப் பதவியை ஏற்க மறுத்தமையினால் சாபமிடப்பட்ட செய்கு சன்ஹா என் பவர் உணர்விழந்து அப்பெண் வயப்பட்டார். றூம் நகரில் தரீசாவை செய்கு சன்ஹா என்பவர் கண்டார். அந்தக் காட்சியை வருணிக்க முற்பட்ட பதுறுத்தீன் புலவர் தரீசாவின் கேசாதிபாத வருணனையை நுணுக்கமாக விவரித்துள்ளார். முதலில் மூன்று செய்யுட்களைப் பயன் படுத்தி அவள் கிறித்தவ சமயம் என்னும் இஞ்சீல் மார்க்கத்தைச் சேர்ந்தவள் என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இந்த வண்ண மிலங்குறூ மூரினிற்
சொந்த மாகிய தொன்மறை யோர்களிற்
சிந்து தித்திடு முத்தைச் செறித்தசொ
லந்த மாமறி யம்மலை கிஸ்ஸலாம்
அந்தக் கற்புடை யாயிழை தம்வயின்
றந்தை யன்றிய தற்பர னேவலா
யுந்து தாதையி லாம லுதித்தவிண்
ணிந்து நேர்வத னத்தரீ சாநபி
அஞ்ச லற்றவ னுதிதன் றூதரா
யிஞ்சி லென்று மியன்மறை வேதராம்
வஞ்ச மற்றவர் மார்க்கத்தி னுட்படுந்
தஞ்ச மற்றத ரீசாவென் பாளரோ
(செய்கு சன்ஹாவுக்குச் சாபமிட்டுத் தீர்த்த
படலம்: 55—57) (1381—1383)

தரீசாவின் கேசாதிபாத அழகு இப்படலத்தில் இவ்வாறு வருணிக் கப்பட்டுள்ளது.

அவள் 'விளங்கிரு சுரிகருங் குழலாள்' (59) (1385)

'தண்பிறைக் கொழுந்திற் சிந்துரந் தீட்டிற் றையல்வா
ணுதலினை நிகர்க்கும் (60) (1386)

'வில்லினைப் பொருவா... எழினிலா முகத்தொள்ளிர் புருவம்'
(61) (1387)

'அடுதவத் துறைந்த முனிவரு மயங்க அமுதரி பரந்தமை
விழியாள்' (62) (1388)

'இளைஞர் உயிரினைக் கவரும் கோதையள் காது...(63) (1389)

'மூக்கின் வனப்பெவர் உரைக்க வல்லவரே' (64) (1390)

'கொவ்வையங் கனியிதழ்த் துவர் வாய்... நகைக்கு
மென் நகையாள்' (65) (1391)

'தெண்டிரை யமுதிற் பிறந்தவள் நிகர்க்கும் சேயிழைக்
குமுதவாய் மொழிக்கே' (66) (1392)

'பெரிதரும் இருளின் முகம்மத/ரழைத்த பூரணப் புதுமதி
முகத்தாள்' (67) (1393)

'புட்குரலை விளங்கவே முழக்குகந் தரத்தாள்' (68) (1394)

'திரண்டழ கிலங்குதோ ளிணையாள்' (68) (1394)

'மணிவளை விளங்கு முன்கரத்தாள்' (69) (1395)

'சினத்துசெவ் வாம்பல் நிகரென அங்கை' (69) (1395)

'செப்புதற் கரிய மென் விரல்கள்' (69) (1395)

'இனத் துகிர் போன்று நகத்தெழில்' (69) (1395)

'கனிமொழி மார்பகம் .. பம்பரம் பொருவாக் கோங்கினைப்
பழிக்கும்' (70) (1396)

'அவர்முலைப் பெருமை உரைப்பதற் கரிய' (71) (1397)

'மதமுலைக் கரிகளிரண்டையும் தொடுத்தோர்... சங்கிலியோ

...தளிர்நலங் கவற்று மவ்வயி றணி மயிரொழுக்கே' (72) (1398)

'பெருநீர்ச் சுழியெனும் கொப்புள்' (73) (1399)

'இனிமேற் றேன்றுமோ கான்றரு மிடையே' (73) (1399)

இடைவரைக்கும் உறுப்புக்கள் அனைத்தையும் வருணித்த ஆசிரியர் பெயர் சுட்ட விரும்பாத ஓர் உறுப்பை ஒரு பாடலில் அமைத்துப் பாடி உள்ளார். அப்பாடல் வருமாறு :

வான்றிரிந் துலவுங் கலைநிறை மதியை
　　மருவுமத் திரத்துறு மடவாட்
கான்றிரி யுழையின் குழம்பென நிகர்க்குங்
　　கடிதட வாளரப் படமோ
வான்றிகழ் குடுமி யிரதபொற் றட்டோ
　　வயங்குசிற் றுலவட் டமதோ
சான்றவ ரிதையத் தளவினு மாழ்ந்த
　　தண்மலர்க் கயமென வுரைப்பாம்

(74) (1400)

ஏனைய முஸ்லிம் தமிழ்க் காப்பியப் புலவர் பாடாத ஓர் உறுப்பினைப் பெயர் குறிப்பிடாது இப்புலவர் பாடியுள்ளமை ஈண்டு குறிப்பிடத் தக்கது.

'இந்தெழின் மலர்ப்பஞ் சணையினு மெதுவா யிலங்குறுந்
துணைமணிக் குறங்காள்' (75) (1401)

'வரிபடா தரியத் துத்தியோ டிலங்கி
வடிவுறு மிரு முழந்தாள்' (76) (1402)

'பொருவிலாக் கயத்தின் சினைவிரா னிகர்க்கப் பொருத்தரும்
இணைக் கணைக்காலாள் (76) (1402)

'வடிவுறுந் தராசுப் பொற்பரடு' (77) (1403)

'சேற்றிடை பதிந்த கமடமென் முதுகும்' (77) (1403)

'திகைத்திடு மெழிற் புறந்தாளும்' (77) (1403)

'பார்த்தவர் மயங்க மணியினி லமைத்த பந்தெனும்
குதிமட மயிலே' (77) (1403)

'காமுறச் செவந்தே யலர்த் தகமெழுதிக் கணிப்புறுது
எழிற்பதம்' (78) (1404)

'பூமிசை – உலவும் அனமெனு நடை' (78) (1404)

'வாம மேகலையின் மணிக்கதிர் எறிக்க மயிலெனக் குலவி
நின்றனளே' (78) (1404)

இவ்வாறு முப்பத்தோர் உறுப்புக்களைக் கேசாதிபாதமாக பதுறுத்தீன் புலவர் வருணித்துள்ளார். இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய வேறு எந்தக் காப்பியத்திலும் பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணத்தில் உள்ளது போல் முழுமையான கேசாதிபாத வருணனையைக் காண முடியாதெனின் அது மிகைபடக் கூறும் கூற்றன்று. ஒவ்வோர் உறுப்பையும் வருணிக்கும் பொழுது பயன்படுத்தப்பட்டுள்ள உவமை உருவகங்களைக் கொண்ட செய்யுட்களில் கற்பனை வளமும் அணி நயமும் கருத்துச் சிறப்பும் மேலோங்கி இருப்பதைக் காணலாம்.

**சொல்லாட்சி**

பதுறுத்தீன் புலவர் தமது முகியித்தீன் புராணத்தில் மேற்கொண்டுள்ள அருமையான சொல் உபயோகங்களை இப்பொழுது பார்ப்போம். அகமாடு என்னும் சொல் ஒரு செய்யுளில் பயன்படுத்தப்பட்டுள்ளது,

குழைபொருங் கண்ணி செவ்வாய்
ஒண்டொடி அகமாட் டெய்தி

(றாவியத்துல் பசறியா படலம்: 17)

இங்கே பெண்ணின் வீட்டுப் பக்கம் சென்றமை குறிப்பிடப்பட்டுள்ளது. மாடு என்பது பக்கம் எனப் பொருள்பட்டது.

மற்றொரு சொல் அண்ணை என்பது. அண்ணை என்றால் அறிவின்றி மயங்கி இருப்பவன் என்பது பொருள். இங்கே அதே பொருளில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

அறையும் வாய்களி லங்கிகள் பொங்கிவெங்
கறைம னத்தொடுங் காய்ந்தெழுந் தோங்கிவான்
பிறையெ யிற்றொளி வீசிப் பிறங்கிட
முறைமு றைப்படி யண்ணைகண் மொய்த்ததே

(செய்த்தான்கள் துடர்ந்த படலம்: 9) (593)

ஆனை வாகன மேறிய வண்ணைகள்

(செய்த்தான்கள் துடர்ந்த படலம்: 11) (595)

பசாசு போன்றவர்களைக் குறிப்பிடவே இங்கு அண்ணை என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது எனவும் கூறலாம். சூளாமணியிலும் அண்ணை என்னும் பதம்

அண்ணை அலிகுரு டாதி யவர்களை

(துறவு பூண் படலம்: 145)

இதே கருத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

அவயம் என்பது அடைக்கலம் எனப்பொருள்படும்.

... யானுந்
திறக்கமாய் அவய மிட்டேன் ...

(முரீது பெற்ற படலம்: 11) (549)

என அவயம் என்னும் சொல்லை அடைக்கலம் என்னும் பொருளில் பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

அவலித்து என்பது வருந்தி எனப் பொருள்படும். சீவகசிந்தாமணியிலும் அவலித்து என்னும் சொல் வருந்தி என்னும் பொருளில்

அருவரை மார்பன் அவலித் திருந்தான்

(காந்தருவதத்தையார் இலம்பகம்: 23) (515)

பதுறுத்தீன் புலவர் இதே சொல்லை இதே கருத்தில் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துள்ளார்:

பிணிவர அவலித் தேங்கிப் பேதையும் கொழுநன் ருனும்
(இசுருபீல் கைறூகைத் தட்டிவிட்ட படலம்: 14) (1699)

அழுப்பு என்பதன் பொருள் சோறு என்பதாகும். பதுறுத்தீன் புலவர் அழுப்பு என்பதனை சோறு என்னும் பொருளில்

அவனிடத் திருந்த அழுப்பையுந் தொலைய...
(இருடிய ரீமான் கொண்ட படலம்: 15) (3369)

எனப் பயன்படுத்தி உள்ளார்.

**அனீகம்** என்பது சேனை எனப் பொருள்படும்.

அழகிய மணமா ரன்றனை நோக்கும்
அரிவையர் அனீகமொத் தனரே
(கடலில் காயிபானவனை வருத்திக் கலியாணஞ் செய்வித்த
படலம்: 136) (2297)

என்னும் செய்யுளில் திருமண ஊர்வலத்தைக் காண வந்த பெண் கூட்டத்தைச் சேனை போன்றதொன்று எனப் பொருள்பட அனீகம் என்னும் சொல்லை ஆண்டுள்ளார்.

இத்தை என்பது இதனை என்பதைக் குறிக்க பதுறுத்தீன் புலவர்,
ஏதினிற் காண்பது இத்தைஇயம்பு மென் றிறைவர் கூற
(எழுத்ததிகாரப் படலம்: 34) (690)

என ஒரு செய்யுளில் ஆண்டுள்ளார்.

இவனி என்பது மற்றோர் அருமையான சொல். ஒட்டக்கூத்தர் மாத்திரம் தம் குலோத்துங்கன் பிள்ளைத் தமிழில் இவனி என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

இரைகவர் மகர மதிநிழல் கதுவ
வெறிகடல் கதுவு துவரைவே
ளியமுளி யுமிழ்வ புரையுரை மறையி
லிருதுடன்ன பறியு மெழிலியோ
னுரைவளர் நிலவு முபனிட மருளு
முலகறி பிறவி யுடையசே
வுடைய விவனியி லுருபதி மரபி
லுறுமவன் மருகன் வருகவே

(வாரானைப் படலம்: 7) (57)

பதுறுத்தீன் புலவர் இவ்வுலகம் என்னும் பொருளில் 'இவனி' என்னும் சொல்லைக் கொடை நாயகரைப் பற்றிக் குறிப்பிடும் செய்யுளில்

இவனியில் வாழ்வு பெற்ற செய்குமீ ருனென் போனே
(பாயிரம்: 24)

என அமைத்து இவ்வுலகம் எனப் பொருள்படப் பயன்படுத்தி உள்ளார்.

உபம் என்பது இரண்டு என்னும் பொருள்படும். இரட்டை என்றும் பொருள் கொள்ளலாம். எல்லாப் படைப்புக்களையும் இரண்டு இரண்டாகத் தான் நாம் படைத்தோம் என எல்லாம் வல்ல இறைவனாகிய அல்லாஹ் அவனது திருமறையாம் திருக்குர்ஆனில் குறிப்பிட்டுள்ளான். (அல்குர்ஆன்: 13 : 3: 39:6). இக்கருத்தைக் கருத்தில் கொண்டே முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் கூற்றாக அவர்கள் வாயிலாக பதுறுத்தீன் புலவர் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இபமுத லெறும்பீ ருக விவணுறுஞ் சீவன் யாவு
முபமுறப் படைத்திங் கூணு முறக்கமுங் கவலை மற்று
மிதமுற வெழுதி வைக்கு மிலௌகெனும் பலகை யென்ற
னபமுறு நாட்ட முன்பின் னுட்டிய தன்றே வென்றும்
(மகத்துவம் பேசிய படலம் : 14) (1213)

இச்செய்யுளில் யானை முதல் எறும்பீருக உள்ள உயிரினங்களும் இரண்டிரண்டாக படைக்கப்பட்டமையும் ஊன் உறக்கம் கவலை முதலியன நிகழ்வது பற்றி லௌகுல் மஹ்பூல் என்னும் விண்ணகப் பலகையில் முன் கூட்டியே எழுதப்பட்டுள்ளமை பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

உலம் என்பது திரட்சி எனப் பொருள்படும். திரட்சி என்னும் கருத்தில் உலம் என்னும் சொல்

நலனுறுங் குமரர் யாரு நறுமலர்த் தடத்தின் மூழ்க
வுலம்பொரு தோளிற் றுன்று மாலைக ளுகுத்த தேனு
மிலகிய கயத்தி னுற்ற விரிமல ரிழிந்த தேனுங்
குலவிய வாவி முற்று நறவுகொப் பளித்த வன்றே
(செறு விளையாட்டுக் காரணப் படலம் : 15) (272

திரட்சி பொருந்திய தோள்களில் விளங்கும் மாலைகளிலிருந்து உகுக்கப்பட்ட தேனும் வாவியில் இருந்த மலர்ந்த மலர்களிலிருந்து உகுக்கப்பட்ட தேனும் வாவி முழுவதிலும் நறுமணம் கமழ வழிகோலின எனத் திரட்சியைக் குறிக்க இச்செய்யுளில் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம்.

ஏவன் என்பது யாவன் என்பதாகும்.

ஏவனென் றறிந்திட எழுந்து நண்ணினுர்

(இருடிய ரீமான் கொண்ட படலம் : 22) (3376)

என்னும் இறுதி அடியைக் கொண்ட செய்யுளில் ஏவன் என்னும் சொல் யாவன் என்பதைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

ஓவுதல் என்பது நீங்குதல் எனப் பொருள்படும். ஓவின என நீங்கின என்னும் பொருளில் சிவஞான சித்தியார் சபதம் என்னும் நூலில்

மலங்க ளெல்லாம் ஓவின (4:37)

என ஓவுதல் அடிப்படையாக வந்த சொல் இடம் பெற்றுள்ளது. இதே அடியாகப் பிறந்து இல்பொருள் பெற்ற ஓவிலாது என்பது

ஓவிலாதுகி யாம நாள் மட்டும்

(பகுதாது புக்க படலம்: 28) (430)

என ஒரு செய்யுளின் கடைசி அடியில் இடம் பெற்றுள்ளது. கியாமம் என்றும் அறபுச் சொல் இறுதி நாளைச் சுட்டியது.

கங்கம் என்பதற்கு கழுகு எனப்பொருள் கூறுகிறது பிங்கல நிகண்டு. பதுறுத்தீன் புலவரும் கங்கம் என்ற சொல்லை கழுகு என்னும் பொருளில் இவ்வாறு ஆண்டுள்ளார்.

அரிவையுங் கணவனு மன்புற் றேங்கியே
விரிசிறைக் கங்கத்தை மீட்டு வித்திடுங்
குருமலர்ப் பதத்தினைக் குறித்த கத்தினி
லிருவரு நேர்ச்சையி னியைந்து நின்றனர்.

(இசுருயீல் கைறூ கைத் தட்டிவிட்ட படலம்: 23) (1708)

கம் என்பது ஆகாயம் (பிங்கலந்தை நிகண்டு). ஆகாயம் என்னும் பொருளில் கம் என்பதை கம்மில் மேகங்கள் தூங்கிக்கொண்டிருக் கின்றன என்கிறுர், புலவர்.

கம்மினின் முகிலினினங் கண்க டூங்கிடும்
அம்மலை யிடங்களு மடர்ந்த கோட்டினை
மும்முதக் கரிகளு முரண்டு கூடியச்
செம்மையின் விலங்கினஞ் செறிந்த கானமும்

(பிரயாணப் படலம்; 35) (361)

மணம்புரிப் படலத்திலும் (88) கம் என்னும் சொல் ஆகாயத்தைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

கரவன் என்பது கள்வன். கரவன் என்னும் இச்சொல்லே இதே பொருளில்

நறுமலர்ப் பொழிலின் கண்ணே
நட்பறுங் கரவன் தன்னை

(செறு விளையாட்டுப் படலம்: 13) (270)

என இங்கு ஆளப்பட்டுள்ளதைக் காணலாம்.

கவுத்துவம் என்றால் வஞ்சகம் என்பது பொருள். இதே கருத்தில் கவுத்துவம் என்னும் சொல்

கவுத்துவம் செய்துதின்ற கான்முளை வயிற்றில் நின்று

(இருடியரீமான் கொண்ட படலம்: 73) (3427)

எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

குணபம் என்பது சுடுகாட்டிலுள்ள பிசாசைக் குறிக்கும்.
சிறந்த நீள்புவி யடங்கலு மொருகுடைச் செங்கோற்
றிறந்த தும்பிய வரசர்கோன் காவலர் திரண்டே
யறந்த தும்பிய நகரியின் வீதிக ளனைத்துங்
குறைந்தி டாமுறை பார்த்திடு மளவையிற் குணபம்

அவதாரப் படலம்: (38) (176)

இச்செய்யுளிலே குணபம் என்னும் சொல் சுடுகாட்டிலுள்ள பசாசு என்னும் கருத்தில் இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

கும்பு என்றால் திரள் என்பது பொருள். ஜின்னுகளும் பரிகளும் தேவுகளும் குழுமி இருந்தனர் என்பதைக் குறிக்க கும்பு என்னும் சொல்

ஜின்பரி தேவொடுஞ் சேணி டத்தினிற்
கும்பொடு நிறைந்தனர் கோலங் காண்கவே

(மணம்புரி படலம் : 98) (959)

என இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

கொப்பம் என்னும் சொல் யானை பிடிப்பதற்காக வெட்டும் பெருங் குழியைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. கடும் நெஞ்சத்தவரான கள்வரிடத்தில் வந்து சிக்கியவர்கள் தப்பிப் பிழைப்பது அருமை. தவறி விட்ட பெண் யானையைத் தேடிச் சென்ற ஆண் யானை அதனைப் பிடிப்

பதற்காக வைக்கப்பட்டுள்ள பெருங் குழியில் வீழ்ந்தால் எவ்வாறு கரை யேற முடியாமல் அது தவிக்குமோ அதே நிலையைத்தான் கள்வரிடத்தில் அகப்பட்டவர்கள் அடைவர் என்று கூறவந்த ஆசிரியர் யானை பிடிப்பதற்காக வெட்டும் பெருங்குழியைக் குறிக்கக் கொப்பம் என்னும் சொல்லை ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார். அச்செய்யுள் வருமாறு.

இவ்வகைக் கொடிய கள்வ ரிடத்தின்வந் துற்ற மாக்க
டவ்விய படியைத் தேடுந் தந்திகொப் பத்துள் வீழ்ந்த
தெவ்வகைக் கரைபெரும லிரங்கிய வாறு சீவன்
குவ்வினிற் றனமுந் தப்பக் குழறிநின் றழுங்கு வாரே

(பிரயாணப் படலம் : 60) (386)

சங்கசாரம் என்னும் ஒரு சொல்லை ஆசிரியர் அகில உலகமும் என்னும் பொருளில் பயன்படுத்தி உள்ளார். 'சங்கார' என்று ஒரு சொல்லைப் பாளி மொழியிலும் வடமொழியிலும் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். வேற்று மதக் கொள்கைகளில் உலகம் என்னும் கடலில் தத்தளிப்பதிலிருந்து மீள வேண்டும் என்பதை சங்சார என்னும் கடலிலிருந்து மீட்சி பெறல் வேண்டும் எனக் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். எனவே தான் பதுறுத்தீன் புலவரும் அதே கருத்தில் சங்கசாரம் என்பதை ஒரு செய்யுளில் முதலிரண்டு அடிகளிலும் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

குறைதிரைப் பவத்தி னுற்ற குடிசங்க சார மென்னும்
திரையினில் அழுந்தி நீங்கத் திறனிலா முங்கி யேங்கி

(பிரயாணப் படலம் : 70) (396)

சாகை என்பது வேதத்தினுட் பொருளைக் குறிக்கின்றது. இதே சொல்லை இதே பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ள செய்யுள் வருமாறு:

ஆகையா னீரு மிங்ங னறிவொடுந் திடத்தை மேவிச்
சாகையுந் தவமு மெண்ணுத் தவத்துறும் பொருளை யெண்ணி
யோகையும் மிடத்தி னுற்ற பொன்னினை யுரைத்தீ ரிந்த
வாகையே துரையு மென்னக் கள்வரி னரசன் கேட்டான்

(பிரயாணப் படலம்: 61) (388)

சிரசின் மாட்டு என்னும் சொற்றொடர் தலையின் பக்கம் என்னும் பொருளில் வந்துள்ளது. தலைப்பக்கம் என்னும் பொருளில் இச்சொற்றொடர் ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது,

அவ்வையின் மாதவத் தபசி மங்கையுஞ்
செவ்வையி னடைந்தவர் சிரசின் மாட்டினின்
றிவ்வித மவுத்துமக் கீந்த தற்பர
னெவ்வித முயர்த்திடப் போது மேகனே

(ஹஜ்ஜுக்குப் போன படலம்: 36) (521)

சிலர் என்னும் சொல் சிலவர் என
செஞ்சொலி னரசு மாகிச் சிலவர்தந் திரரு மாக

(செறு விளையாட்டுக் காரணப் படலம்: 24) (281)

வந்துள்ளமை காண்க.

சுவானம் என்பது நாய். இச்சொல் முகியித்தீன் புராணத்தில்
சீக்கிரம் அந்தச் சுவான மென்செய்யும்

(கொடுவரியைக் குக்கலால் வதைத்த படலம்: 56) (2059)

என வந்துள்ளது. அதே படலத்தில் மற்றோர் இடத்தில்
ஏதுசு வானமீ தென்றுரை கேட்ப (60) (2063)

என நாய் என்னும் பொருளில் சுவானம் என்பது வந்துள்ளது.

சொன்றி என்றால் சோறு என்பது பொருள். சோறும் கறியும் குறிப்பிடுவதற்குப் பதிலாக பதுறுத்தீன் புலவர் 'சொன்றும் கறியும்' என ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

சென்றவ ணிருத்தி யென்னைச் சிறப்புறு மமுதின் மிக்க
வின்றுரை பகர வொண்ணு வின்புறு மறுசு வையின்
சொன்றியுங் கறியு மாகச் சுகமுற வமைத்துத் தாமு
மண்டையி லிருந்து தங்க ளருங்கர மெடுத்தா ரன்றே

(முரீது பெற்ற படலம்: 28) (565)

சோளி என்பது சோளிகை என்றும் வரும். பொதுவாக சோளிகை என்பது பிச்சைக்காரனின் பையைக் குறிக்கும். இங்கும் சோளி என்பது பையைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளது. முகியித்தீன் ஆண்டவரின் தாயார் அவர்களுக்குரிய பங்கான நாற்பது பொற்காசுகளை ஒரு பையில் வைத்து அதனை அங்கியில் தைத்தார்கள் என்பதைக் குறிப்பிடவே பை என்னும் பொருளில் சோளி என்னும் சொல்லை ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

பங்கினைப் பிரித்து நான்கு பத்தவர் தமையர்க் கீந்து
தங்கிய சதுபான் காசு தையலா ரொளிகு லாவு
மங்கிலாச் சோளி யொன்றின் வைத்துப்பத் திரமாய்த் தைத்துச்
சிங்கவே றனைய செல்வர் திருக்கரங் கொடுத்துச் சொல்வார்
(பிரயாணப் படலம்: 20) (346)

அதே படலத்தில் சோளி என்னும் சொல்லை பை என்பதனைக் குறிக்க

தோளினிற் றொங்கிய சோளி யின்வயின் (47) (373)

என்றும்

கையினிற் றெடுத்த சோளிக் கழற்றிமுன் அவிழ்த்துப் பார்க்க (56) (382)

என்றும் ஆசிரியர் இவ்வாறு ஆண்டுள்ளார்.

தம்பம் என்பது பற்றுக்கோடு என்பதைச் சுட்டியது. இச்சொல் இதே பொருளில் முகியித்தீன் புராணத்தில் உள்ள ஒரு செய்யுளில் இவ்வாறு ஆட்சியைப் பெற்றிருப்பதைக் காணலாம்.

கொம்பினின் மலரளி குழுமி யார்ப்பது
செம்பருந் திறந்ததை சேர்த்து வைக்கவுந்
தம்பமென் றுதித்தனர் தீனைத் தாங்கவென்
றம்பரத் தமரர்க ளார்ப்ப தொத்தவே
(செறு விளையாட்டுக் காரணப் படலம் : 23) (280)

தலைச்சீலை, தலைத்துகில், தலைப்பாகை என்பன ஒரு பொருட் சொற்கள். தலைச்சீலை என்பதனையும் தலைத்துகில் என்பதனையும்

சுமைதலைச் சீலை தொப்பிக ளவர்க்குச்
சூட்டிடத் தொடுத்திடு மென்றார் (9) (3558)
உவமையி லடங்கா தழகினைச் சுமந்த
ஒண்டொடித் தலைத்துகி லொன்றே (11) (3560)
மிச்சமுற் றிருந்த தலைத்துகி லதனை ... (12) (3561)

ஆசிரியர் பாகை தொப்பி கழற்றிப் போட்ட படலத்தில் குறிப்பிட்டுள்ளார்.

திமிதம் என்னும் சொல் ஈரம் என்னும் பொருளைத் தரும். பதுறுத்தீன் புலவர் திமிதம் என்னும் ஒரு சொல்லை ஈரம் என்னும் பொருளில் திமதம் எனச் சந்திரனின் குளிர்ச்சியைக் குறிக்க இவ்வாறு ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார்,

அமுதினைக் கிலுறும் யானு மருந்தியங் கிருந்த போதிற்
றிமுதமொத் தமுது சிந்துந் திங்கள்வெண் முகத்தா ரெங்குஞ்
சமதென நிறைந்த நாயன் நவமுறு முகியித் தீனே
நமதுறும் பகுதா தென்னும் நகரினுக் கெழுக வென்ருர்

(முரீது பெற்ற படலம்: 42) (580)

துறக்கம் என்பது சுவர்க்கம். சுவனபதி என்னும் கருத்தில் துறக்கம் என்னும் சொல் கலித்தொகையில்

வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம் வேட்டெழுந்தார் போல்
பல் கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர

(நெய்தற் கலி 1) (118)

எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது. பதுறுத்தீன் புலவரும் துறக்கம் என்னும் சொல்லைச் சொர்க்கம் என்னும் பொருளில் முகியித்தீன் புராணத்தில் பயன்படுத்தியுள்ளார். அச்செய்யுளில் நழுவிலாது என்னும் சொல்லும் வழுவிலாது என்னும் பொருளில் வந்துள்ளது. செய்யுள் வருமாறு:

தழுவி யன்புற மகிழ்ந்தனர் தமதவை யாரை
நழுவி லாதழைத் லதநளுவர் நகைமணித் துறக்கம்
பிழையுற் றோர்களை வருத்திடு நிரையமும் பிறவும்
வழுவி லாதமைத் திடுபவ னெலியிவ ரம்மா

(பகுதாது புக்க படலம் : 22) (424)

தொந்தம் என்னும் சொல்லைப் பகை என்னும் பொருளில் பதுறுத்தீன் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தியுள்ளார்:

வந்தவ ரென்னை நோக்கி வடிவுறுங் கரத்தின் வாளைக்
கொந்துறு மெனது கையிற் கொடுத்தெனை யடுத்து நின்று
நிந்தனைசெய்ய வந்த நீசனை வீசு மென்னத்
தொந்தமா யுரைத்த போதிற் றொடர்ந்தவன் பறந்து போனான்

(செய்த்தான்கள் துடர்ந்த படலம் : 42) (626)

நேர்பு என்றால் நிகழ்ச்சி என்பது பொருள். தற்குறிப்பேற்ற வணியையும் அமைத்து நிகழ்ச்சி என்ற பொருளில் நேர்பு என்னும் சொல் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது.

இவ்வண மறிவு சொல்லி இருந்தன ரிரவி யோடிக்
குவ்வினில் நேர்பை எல்லாம் குதுபவர்க் கறியச் சொல்லித்
திவ்விய அரசு வீற்றிச் செங்கதிர்ச் சுருக்கிப் பச்சைச்
செவ்விய பரிந டாத்திச் சென்றனன் குடபா லன்றே
(செய்கு அபீயப்துல்லாப் படலம்: 13) (2407)

பதமாடு என்பது கால்பக்கம் எனப் பொருள்படும். கால் மாடு என்று பேச்சு வழக்கில் பயன்படும் கருத்தினையே பதமாடு என்னும் சொற்றொடர் இவ்வாறு ஒரு செய்யுளில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

முடிபுனை யரசர் செய்கு முகியித்தீன் பதமா டுற்றார்
(சுரந் தீர்த்த படலம்: 28) (1187)

பிசிதம் என்றால் இறைச்சி என்பது பொருள். இறைச்சி என்னும் பொருளில் பிசிதம் என்னும் சொல்லை கம்பர் தமது இராமாயணத்தில்

பிறவியிற் பெரிய நோக்கில்
பிசிதமுண் டுழலும் பெற்றி
(யுத்த காண்டம்: நாகப் பாசப்படலம்: 93) (2032)

என வந்துள்ளது. பதுறுத்தீன் புலவரும் தமது காப்பியத்தில் இதே சொல்லை இதே பொருளில்

பிசிதமே கொணர்ந்திடப் பேணிப் போனவள்
(இருடியரீமான் கொண்ட படலம்: 41) (3395)

என்றும்
கலியி தென்னமொழி பிசித மாகிலிது
கரிய னிற்பதா ரென்னலும்
(இருடியரீமான் கொண்ட படலம்: 50) (3404)

என்றும் வழங்கி உள்ளார்.

புரூரம் என்னும் சொல் புருவம் என்னும் பொருளில் பதுறுத்தீன் புலவர்,

நிலையிலா தெழுந்துக் கோபத்தீ வெளியிற்
சொரிந்திட நெரிந்தன புரூரம்
(மணம் பொருத்து படலம் : 40) (836)

எனப் பாடியுள்ளார்.

போனகம் என்றால் உணவு என்பது பொருள். உணவினைக் குறிக்கப் போனகம் என்னும் சொல் உணவு என்னும் பொருளில் மணிமேகலையில்,

போனகம் ஏந்திப் பொழுதினில் கொண்டபின்
(கச்சிமா நகர் புக்க காதை : 242)

பயன்படுத்தி உள்ளது போல் பதுறுத்தீன் புலவரும் தமது காப்பியத்தில் உணவைக் குறிக்கப் போனகம் என்னும் சொல்லை

உத்தி ரத்திசை யடுத்த போதவண்
உறைந்த போனகம் வழங்கவென்
(இருடியரீமான் கொண்ட படலம் : 61) (3415)

என ஆண்டுள்ளார்.

மணமாறன் என்னும் சொல்லை மணமகன் என்னும் பொருளில்

அழகிய மணமா ரன்றனை நோக்கும்
அரிவையர் அனீகமொத் தனரே
(கடலில் காயிபானவனை வருத்தி கலியாணஞ் செய்வித்த படலம் : 136) (2297)

என முகியித்தீன் புராணத்தில் இடம்பெற்றுள்ளது.

முசியாமல் என்பது கிலேசிக்காமல் என்பதைக் குறிக்கும். இதே கருத்து இதே பொருளில் முகியித்தீன் புராணத்தில்

அசுருறுக ணிறைந்துமதி காரமு மடைந்து
விசுவாசமு மிகுந்துவெகு வாகத்தவ முற்றுச்
சசிபோன்முக மிலங்கப் பெருவாழ்வுக டழைப்ப
முசியாமமுன் னிருந்ததிலி மும்மடங் காணுர்

(அபூபக்கரில் ஹம்மாமியைச் சாபமிட்டுத் தீர்த்த படலம் : 55) (1682)

என முசியாது எனப் பொருள்பட முசியாம என உபயோகிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

முடிப்பாகை என்பது தலைப்பாகை என்னும் பொருளில்

துதிபெறுந் தவத்தோர் ஒலிகள் மற்றெவரும்
சுடர் முடிப்பாகைக ளனைத்தும்
(பாகை தொப்பி கழற்றிப் போட்ட படலம் : 7) (3556)

என இக்காப்பியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

வனி என்பது சுரம் எனப் பொருள்படும். கோபத்தைக் குறிக்க வனி என்னும் சொல் பதுறுத்தீன் புலவரால் ஒரு பாடலில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

தனியவ னருளைப் பெற்ற தஸ்தக்கீர் மனத்து ருமற்
கனிவிலா வகத்தி னேடுங் கருதிலா முனிவி னுலும்
வனியென வழன்று பொங்கி மதிமுக நோக்கி லாது
துனிவுறும் வாய்மையோடும் போமெனத் துரத்தி விட்டார்

(எழுத்ததிகாரப் படலம் : 48) (704)

விளாவுதல் என்பதன் நேரடிப் பொருள் சுற்றிச் சுற்றி உழுதல் என்பதாகும். இங்கே பதுறுத்தீன் புலவர் இச்சொல்லைச் சற்று வேறு பட்ட கருத்தில் பயன்படுத்தி உள்ளார். பல காதங்களுக்கு நறுமணம் வீசக் கூடிய பன்னீரைத் தெருக்களிலெல்லாம் மீண்டும் மீண்டும் அங்குள்ள மக்கள் தெளித்தார்கள் என்பதைக் கூறப் போந்த ஆசிரியர் விளாவி என்னும் சொல்லை ஒரு பாடலில் இவ்வாறு பயன்படுத்தியுள்ளார்.

காத நானங் கமழ்ந்தபன் னீர்தெரு
வீதி யெங்கும் விளாவித் தெளித்தவா
னுதை யைங்கதி யுன்னியோர் மீதினும்
போத கத்துறும் புண்ணியர் மீதினும்

(மணபுரி படலம்: 59) (920)

**யாப்பமைதி**

பல்வேறு விதமான விருத்தப் பாக்களை அடிக்கடி சந்தங்களை மாற்றிப் பாடுவதில் தமக்குச் சிறந்த ஆற்றல் உண்டு என்பதை முகியித்தீன் புராணத்தின் மூலம் பதுறுத்தீன் புலவர் எடுத்துக்காட்டியுள்ளார்.

முதலில் ஒரு கலித்துறைச் செய்யுளை எடுத்துக்கொள்வோம். இது கலிநிலைத்துறைச் செய்யுள் என்றும் வழங்கப்படும். கலித்துறை என்பது அடிக்கு ஐந்து சீர்களாய் நான்கு அடியும் அளவொத்து வருவதாகும், கலிநிலைத்துறைச் செய்யுளில் ஓர் அடிக்கு ஐந்து சீர்கள் வர வேண்டும். முதற்சீரும் ஐந்தாம் சீரும் மாச்சீராக இருத்தல் வேண்டும். மற்ற மூன்று சீர்களும் விளச் சீர்களாக இருத்தல் வேண்டும். முதற்சீரும் ஐந்தாம் சீரும் புளிமாவாகவும் வரலாம். தேமாவாகவும் வரலாம். முதற்சீர் ஓர் அடியில் தேமாவாக வந்தால் நான்கு அடிகளிலும் தேமாவாகவே வரல் வேண்டும். ஐந்தாம் சீரில் இந்த நியதி கடைப்பிடிக்கப்படுவதில்லை. இருவகை மாச்சீர்களும் ஐந்தாம் சீராக வரலாம்.

இந்த வண்ணமே நடந்திடுங் காலெலா மிமையோர்
சொந்த மாகிய வொலியிட மடுத்தவர் சூழ்ந்து
கந்த மாமலர்ப் பதத்தினை வருடியெக் காலு
மந்த மில்லவ னருள்கொடு நடக்குமக் காலை

(மலக்குகளைத் தெரிசித்த படலம் : 6) (320)

இப்பாடலில் தேமா கூவிளம் கருவிளம் கூவிளம் புளிமா என முதற் சீரும் ஐந்தாம் சீரும் மாச்சீராகவும் ஏனைய சீர்கள் விளச் சீர்களாகவும் வந்துள்ளன. ஆனால் நான்கு அடிகளிலும் ஐந்தாம் சீர்களுள் முதலாம் அடியிலுள்ளது புளிமா ஆகவும ஏனைய மூன்று அடிகளிலும் ஐந்தாம் சீர்கள் தேமாவாகவும் இருவகை மாச்சீர்களும் இச்செய்யுளில் வந்திருப்பதைக் காணலாம்.

விருத்தப் பாவுக்குரிய இலக்கணங்களைக் கொண்டு சிந்தடியாக வருவன சிந்தடி விருத்தம் எனப்படும். முகியித்தீன் புராணத்தில் இடம் பெற்றுள்ள சிந்தடி விருத்தம் ஒன்று இவ்வாறு அமைந்துள்ளது.

மன்னர் மன்னர் முகம்மதர்க்
கின்ன நீர விறையவன்
சொன்ன மாமெய்ச் சுருதியின்
வின்ன மேதெ னவிண்டனர்

(எழுத்ததிகாரப் படலம் : 14 (670)

இச்செய்யுள் அளவடியாக வந்துள்ளது. தேமா, தேமா, கருவிளம் என மாச்சீர் இரண்டும் விளச்சீர் ஒன்றும் அடிகள் தோறும் வர நான்கு அடிகளைக் கொண்ட சிந்தடி விருத்தமாகும்.

கழிநெடிலடி நான்கு கொண்டது ஆசிரிய விருத்தம். நான்கடியும் அளவொத்து வரும். ஆறு சீர்களைக் கொண்ட அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தமும் ஏழு சீர்களைக் கொண்ட எழு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தமும் பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணத்தில் பெரும்பாலாக வந்துள்ளன. எண் சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப் பாக்களையும் ஆங்காங்கே காணலாம்.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களுள் செய்யுட்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் முதலிடம் வகிப்பது புதுகுஷ்ஷாம். இக்காப்பியத்தில் 6786 செய்யுட்கள் இடம்பெற்றுள்ளன. இந்த எண்ணிக்கை அடிப்படையில் இரண்டாம் இடத்தை வகிப்பது சீறாப்புராணம். இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள செய்யுட்களின் எண்ணிக்கை 5028 ஆகும். பதுறுத்தீன் புலவரின் முகியித்தீன் புராணத்தில் 3983 செய்யுட்கள் இடம்பெற்றுள்ளமையால் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களுள் அது மூன்றாவது இடத்தை வகிக்கின்றது.

# ஒன்பதாம் இயல்

## திருமணி மாலை

செய்கு அப்துல் காதிறு நயினூர் லெப்பை ஆலிம் புலவரால் இயற்றப்பட்ட மூன்ருவது காப்பியம் திருமணி மாலே என்பதாகும். இக் காப்பியம் இபுருகீம் நபி (அலே) அவர்கள் வாழ்க்கையை விவரிக்கின்றது. ஓரிலட்சத்து இருபத்து நாலாயிரம் நபிமார்களுள் ஒருவரானவர் நபி இபுருகீம் (அலே) அவர்கள். இறைத்தூதர்கள் என வழங்கப்பெறும் முறுசலான நபிமார்களுள் ஒருவர். இறைநெறியைப் போதிக்கும் முயற்சியில் பல இன்னல்களுக்காளான உலுல் அசுமி என்னும் நபிமார்களுள் ஒருவராவர். இறைவனின் தோழர் எனப் பொருள்படும் கலீலுல்லாஹ் என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப் பெற்றவர். இபுருகீம் நபி (அலே) அவர்கள் பின்பற்றிய மார்க்கம் ஹனீப் என்றும் தஹன்னுப் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. தஹன்னுப் என்னும் இறைநெறியை அறிந்திருந்தார்கள் பெருமானூர் முகம்மது (சல்)அவர்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அத்தகைய நபி இபுருகீம் கலீலுல்லா அவர்களுடைய இயற்கையுஞ் செயற்கையுமாகிய நிகழ்ச்சிகளே வருணிப்பது திருமணி மாலே.

**உரை வழங்கினேர் :**

இத்திருமணி மாலே என்னும் காப்பியத்தை இயற்ற உரை வழங்கியவர் நத்தறு சாகிபு ஆலிம் என்பார் என்பதுவும் செய்யிது காமிதென்னும் பெயரினர் என்பதுவும் அவர் செய்யித் முகம்மது சுத்தாரி என்பாரின் புதல்வர் என்பதுவும் அவர்கள் நாகைப் பதியினேச் சேர்ந்தவர்கள் என்பதுவும் புலவர் மரபினர் என்பதுவும் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

பாநலஞ் செறிந்த நாகைப் பதியினர் மரபின் மிக்கார்
மாநலஞ் செறிந்த செய்யித் முகம்மது சுதாரி தோன்றல்
தேனலஞ் செறிந்த வாயின் செய்யிது காமி தென்று
மானநத் தறுசா கீபு ஆலிமிவ் வுரைசெய் தாரால்,

(கடவுள் வாழ்த்து: 23)

இப்பெரியார் அறபு மொழியில் உள்ள கிரந்தங்களேயும் அவற்றில் உள்ள செய்திகளேயும் அளித்தார்கள். ஆங்காங்கே காணப்பட்ட மொழி முரண்பாடுகளே நீக்க வேண்டி இருந்தது. அவற்றை நீக்கி மூதுரை வழங்கினூர் அபூபக்கர் லெப்பை ஆலிம் என்பவர். அழகிய தோற்றத்தையும் சொல்வன்மையையும் கொண்ட அபூபக்கர் லெப்பை

ஆலிம் அவர்கள் அப்துல் காதிர் லெப்பை ஆலிம் அவர்களின் புதல்வர். இருவரும் காயல் நகரைச் சேர்ந்தவர்கள். இவ்விவரங்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளன.

விழுமிய பொருளின் இன்னோர் விரித்திடும் உரையின் உற்ற
மொழிமுர ணீத்து மிக்க மூதுரை அளித்தார் காயல்
எழில்வரும் அப்துல் காதிர் லெப்பையா லீம்தந் தோன்றல்
அழகொழு கியசொல் வல்ல அபூபக்கர் லெப்பை ஆலீம்

(கடவுள் வாழ்த்து: 24)

**நூலின் பெயர் :**

இத்தகைய சிறப்புடைய உரைகாரர் வழங்கிய முன்னூல்கள் பின் பற்றப்பட்டன. அவற்றின் வழிநின்று அன்னூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள முறைமையினைப் போற்றி அவற்றின் அடிப்படையில் இபுருகீம் நபி (அலை) அவர்களுடைய சிறப்பான வாழ்க்கையைப் பின்னணியாகக் கொண்டு இக்காப்பியம் இயற்றப்பட்டுள்ளது. சிறப்பு மிக்கது இக்காப்பியம். அருமையான மணி போன்றது. எனவே இதன் பெயர் திருமணி மாலை எனப்பட்டது. இக்கருத்தினையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இவர்களால் விளங்குஞ் சொல்லின் இயல்பினான் முன்னூல் செய்த
அவர்களால் வழிநி றீஇய அரும்பொருள் நிரையி னோடுந்
திவடரும் கார ணீகச் செயற்கையி னெழுக்கி னுனுஞ்
செவிபுனை யிவற்றி னுமம் திருமணி மாலை யன்றே

(கடவுள் வாழ்த்து: 25)

**நூற்பயன்**

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களையும் அளிப்பது இக்காப்பியம். இவற்றைப் பயக்கும் இந்நூல் எனக்கருதி விருத்தப்பாக்களில் மாலையாகப் புனைந்து இக்காப்பியம் இயற்றப்பட்டது எனப் புலவர் குறிப்பிட்டுள்ளார். விருத்தப்பாக்களாலாகிய மாலையாகப் புனையப்பட்ட இத்திருமணிமாலையை எவரும் பூண்டு கொள்வர் என்னும் கருத்தை உடைய காரணத்தினாலே இந்நூல் இயற்றப்பட்டது. இக்கருத்துக்களை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்,

இயல்புறுந் தரும மாதி இயைபுறும் பொருள்கள் நான்கும்
பயனுறுந் தகுதி நோக்கி பயிற்சியி லறிவுண் டாமென்
றுயர்மன நினைவி னுற்பா வொழுகிய விருத்த மாலை
அயர்விலா தெவரும் பூண்பான் அருங்கவி பனுவல் செய்தான்.

(கடவுள் வாழ்த்து: 26)

**அவையடக்கம்**

பற்பல துறைகளில் சிறந்து விளங்கும் புலவர் பெருமக்கள் முன்னிலையில் தாம் நூலியற்ற முனைவது பொருத்தமற்றது என்றும் அத்தகைய செயல் எத்தகைய சிறுமையானது என்றும் உவமைகள் மூலம் விளக்கி உள்ளார் இக்காப்பிய ஆசிரியர். எட்டுத் திக்குகளிலும் பிரகாசித்துக் கொண்டிருப்பது சூரியன். அத்தகைய சூரியனுக்கு ஒப்பானவர்கள் அறிவு நிறைந்த புலமை மிக்கோர். அத்தகைய பிரகாசமான சூரியன் முன்னே வீட்டில் எரிக்கப்படும் விளக்கு மிகமிகச் சிறியதேயாகும். பிரகாசம் அற்றதொன்றாகும். சூரியன் போன்ற பெரியார் முன்னிலையில் வீட்டு விளக்குப் போன்றதே தமது நிலை என ஆசிரியர் ஓர் உவமை மூலம் விளக்கி உள்ளார். தாமரை மலர் மிக அழகானது. அதனால் கவரப்படுவன வண்டுகள். அத்தாமரை மலரிலே அமர்ந்து இனிமையான ஓசையை எழுப்புவன அவ்வண்டுகள். அத்தகைய சிறப்பு மிக்கது தாமரை மலர். அத்தாமரையோடு ஒப்பிடும் பொழுது கொட்டி எனப்படும் செடியில் மலரும் பூக்கள் மிக மிகச் சிறியனவாம். எவரையும் எவற்றையும் கவருவன வல்ல கொட்டிச் செடியில் மலரும் பூக்கள். புலமை மிக்க அறிஞரைத் தாமரை மலருக்கும் நூலாசிரியரான தம்மைக் கொட்டிக் கொடியில் மலரும் பூவுக்கும் உவமித்துள்ளார் ஆசிரியர். குளத்தில் பூக்கும் தாமரை மலரைப் போலல்லாது கொட்டிச் செடி எந்த ஒரு நீர் நிலையிலும் மலருவதொன்றாகும். எப்பொழுதும் இனிமையான இசையை எழுப்பிக் கொண்டிருப்பது யாழ். பல்வேறு வகையான நாதங்களை ஒருங்கே வழங்கும் ஆற்றல் வாய்ந்தது யாழ். அத்தகைய யாழின் முன் வன்பறை எத்துணை வன்மையானது. கரடுமுரடான ஒரே ஓசையை எழுப்பிக் கொண்டிருப்பது வன்பறை. அறிஞர்களை யாழுக்கும் தம்மை வன்பறைக்கும் ஒப்பிடுள்ளார் இந்நூலாசிரியர். ஆக சுவைமிக்க நூல்களை இயற்றி உள்ள பேரறிஞர் முன்னிலையில் கரடுமுரடான தன்மை உடைய தமது காப்பியத்தைத் தாம் இயற்றி உள்ளதாகத் தம்மைக் குறைவாகக் கொண்டு அவையடக்கம் கூறி உள்ளார் ஆசிரியர். இக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ள பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

எண்டிசை கதிரின் முன்னர் இல்லிசை சுடரே போன்றும்
வண்டிசை மரையின் முன்னர் மலர்தருங் கொட்டி போன்றும்
மண்டிசை யாழின் முன்னர் வன்பறை போன்றும் வல்லார்
கண்டிசை நூன்முன் யானுங் கருத்தொடும் இசைத்தல் அன்றே.

(கடவுள் வாழ்த்து: 30)

திருமணிமாலை என்னும் நூல் பெரியார் இப்ருகீம் நபி (அலை அவர்களுடைய சிறப்பைப் பாடுவதனால் அது நல்ல ஒரு காப்பியமாக இருக்கலாம் என வல்லோர் கொள்வர். எனினும் அங்கே இடம்பெற்றுள்ள தம்முடைய சொற்கள் கடினமான வன்மையான பயனற்ற சொற்களாய் இருந்தமைகண்டு அதனால் நல்ல பயன் கிடையாது என்று கொள்ளவேண்டாம் என்று வேண்டுகிறார் ஆசிரியர். சொற்கள் புன்மை உடையனவாக இருந்தாலும் இது ஒரு புதுமுயற்சி எனக் கருத்திற்கொண்டு அங்கு இடம் பெற்றுள்ள பாடல்கள் நலமானவை எனக்கணித்து அறிவிற்சிறந்த மேலோர் அதனைப் பயில்வர் எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். அதற்கான காரணத்தையும் குறிப்பிட்டுள்ளார். வள்ளண்மையும் புகழும் மிக்க பெருந்தகை இறை தோழர் இப்ருகீம் நபி (அலை) அவர்களுடைய வாழ்க்கையை விவரிப்பதனால் அவர்களுடைய பெயரைப் பெற்ற நூலாக இருந்ததனாலே பெரியோர் இக்காப்பியத்தைப் பயிலுவர் எனக் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளது.

நூனலந் தருதல் கண்டும் நுவன்றிடு மென்சொல் புன்சொல்
வானலந் தாரா தேனும் அதற்குறு முயற்சி நோக்கிப்
பாநலந் தருதற் கேற்ற பயிற்சியி னிற்பர் வல்லோர்
வானலந் தருவார் கொண்ட வண்பெய ரதனு லம்மா

(கடவுள் வாழ்த்து : 31)

**ஆசிரியர் பெயர் :**

திருமணிமாலையில் தமது பெயரைக் குறிப்பிடப் புகுந்த ஆசிரியர் தமது பாட்டனாரின் பெயரோடு ஆரம்பித்துள்ளார். மானுப்பிள்ளை யாலிம் லெப்பையே ஆசிரியருடைய பாட்டனாராவார். ஆனால் திருமணி மாலைக் காப்பியத்தின் தலைப்புப் பக்கத்தில் ஆசிரியருடைய மூத்த பரம்பரையினர் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவர்கள் அனைவரும் காயல்பட்டணத்தைச் சேர்ந்தவர்கள். மகுதூந் தெருவில் வாழ்ந்தவர்கள். இரத்தின பரீட்சை மேற்றொழிலினை நயந்து அங்கு ஈடுபட்டிருந்தார்கள். மரக்கலராயன் வழி நிலையினர். அவர்களுள் முதன்மையானவர் சதக்கு நயினார் மரைக்காயர் என்பவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவருடைய புதல்வரும் புதல்வரின் புதல்வரும் இவ்வாறு வரிசையாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். மானுப்பிள்ளை லெப்பை, காதிறுப்பிள்ளை லெப்பை, மானுப்பிள்ளை ஆலிம் லெப்பை, கபீபு முகம்மது லெப்பை, செய்கு அப்துல்காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் என்பவர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

ஆசிரியரோ தமது மூதாதையரின் பெயரை மானுப்பிள்ளைலெப்பை ஆலிமுடைய பெயரோடு ஆரம்பித்துள்ளார். அவர் காயலைச் சேர்ந்த வர் என்றும் மணி பரீட்சையில் கை தேர்ந்தவர் என்றும் குறிப்பிட்டு விட்டு அவருடைய புதல்வர் கபீபு முகம்மது லெப்பை என்றும் கபீபு முகம்பது லெப்பை என்பவர் தமது தந்தையார் என்றும் ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

இருமையே கொண்ட காயல் எழின்மணி பரீட்சை வல்லோர்
பெருமையே கொண்ட மானுப் பிள்ளையி லெப்பை யாலீம்
அருமையே வளர்க பீபு முகம்மது லெப்பை தோன்றல்
ஒருமையோன் கருணை மிக்கி னுரைத்தனன் இந்நூல் அன்றே.

(கடவுள் வாழ்த்து : 32)

மற்றொரு பாடலில் ஆசிரியர்தம் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆசிரியர் பயின்ற நூல்கள் பலவும் கூறப்பட்டுள்ளன. இக்காப்பியம் பாடப்பட்ட நோக்கமும் குறிப்பிடப்பட்டுள்ளது. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மருமணி பன்னூல் சிந்தா மணிதொகை பார நூல்கள்
பருமணி சின்னூல் நன்னூல் பயன்தருந் தொன்னூல் முன்னூல்
ஒருமணி உணர்வுந் தோற்று உளத்தினன் கதிபே றெண்ணித்
திருமணி மாலை கோத்தான் செய்கப்துல் காதி றென்போன்.

(கடவுள் வாழ்த்து : 33)

**வாழ்த்து**

கடவுள் வாழ்த்துப் படலத்தில் முப்பத்தாறு பாடல்கள் இடம்பெற்றுள் ளன. ஏனைய காப்பியங்களில் அமைந்து உள்ளன போன்று திருமணி மாலையிலும் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அறு சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தப் பாக்களாக உள்ள முதல் ஆறு செய்யுட்களும் எல்லாம் வல்ல இறைவனாகிய அல்லாஹ்வைப் புகழ்ந்து பாடப்பட்டுள்ளன. அடுத்த இரண்டு பாடல்களிலும் முகம்மது நபி (சல்) அவர்களும் ஒரு பாடலில் எல்லா நபிமாரும் நான்கு கலிபாக்களும் நான்கு வெவ்வேறு பாடல்களிலும் அசன் (றலி) உசைன் (றலி) அவர் களும் மற்றொரு பாடலிலும் நபிகள் சுற்றத்தவர் முதலியோர் இன் னொரு பாடலிலும் முகியித்தீன் ஆண்டவர் வேறொரு பாடலிலும் பாடப் பட்டுள்ளமையைக் காணலாம். இம்மரபு எல்லாக் காப்பியங்களிலும் பேணப் பட்டுள்ளமையைக் காணலாம்.

முகியித்தீன் ஆண்டவர்களைத் தொடர்ந்து அவர்கள் தம் மரபினரான சாகுல் கமீது ஆண்டகை (21) புகழப்படுவது வழக்காருகும். ஆனல் திருமணி மாலையில் சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் புகழப் படுவதற்கு முன்னர் சுல்தானுல் ஆரிபீன் அகமது கபீறு றிபாயி ஆண்டகை ஒரு பாடலில்

திணிவரு மாக்கை யெங்குஞ் செறியரு வுயிரி னுக்கம்
கணிவரு மியற்கை நோக்கிக் காரண முணர்த்து மெய்ம்மைப்
பணிவருஞ் சிந்தை பூத்துப் படரறி வினங்க ளோங்கு
மணிவரு நிதிசுல் தானுல் லாரிபீன் பதமுட் கொள்வாம்.

(கடவுள் வாழ்த்து: 18)

என்றும் மற்ருெரு பாடலில் காஜா முகீனுத்தீன் அவர்கள்

கதிதரும் வழியு மேவாக் கனறரும் வழியுஞ் சுட்டி
மதிதரு மறிவிற் பூட்டு மனநிலை யறிவுங் காட்டும்
துதிதருஞ் சகத்தின் பான்மை துலக்குற விளக்கு நன்மை
முதிர்தரு முணர்வின் காஜா முகீனுத்தீன் பதமுட் கொள்வாம்.

(கடவுள் வாழ்த்து: 19)

என்றும் வேருெரு பாடலில் வள்ளல் அப்துல் றகீம் அவர்கள்

மறப்பிலா மனத்தி னுட்ட மதிப்புடன் கதிக்கும் பூட்டி
இறப்பிலான் சகல பன்மை வினைதமே யிவையென் ருய்ந்து
சிறப்பலால் வேறின் றென்னச் செழிப்பருள் வள்ளல் வண்டார்
நறைப்புய வாகை யப்துல் றகீமலர்ப் பதமுட் கொள்வாம்.

(கடவுள் வாழ்த்து: 20)

என்றும் புகழ்ந்து பாடப்பட்டுள்ளனர். இதற்கு முன்னர் தோன்றிய காப்பியங்களில் இவர்கள் கடவுள் வாழ்த்தில் புகழப்படவில்லை என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. சாகுல் கமீதாண்டகையைப் புகழ்ந்து அடுத்த பாடலில் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள் (22) புகழப் பட்டுள்ளார்கள்.

சதக்கத்துல்லா அப்பா அவர்களைப் புகழ்ந்து பாடப்பட்டுள்ள திரு விருத்தம் உருவக நயத்துடன் விளங்குவதைக் காணலாம். விரிந்து கொண்டிருக்கும் திருமறை என்னும் வாரியிலிருந்து—கடலிலிருந்து நீரை வாரி எடுக்கிறது மனம் என்னும் மேகம். நெடு மேகத்தினுள் அந்நீர் புகுகின்றது. அங்கே ஆவியாக உருவெடுத்து மேகமாகிய நீர் மீண்டும் நீராகிறது. மனத்தில் புகுந்த அறிவு தெளிவு பெறுவதைப்

போன்று தூய்மை பெறுகிறது. மேகத்தில் புகுந்த நீராகிய ஆவி மீண்டும் மழையாகப் பெய்கின்றது. அறிவெனும் மழை செந்தேனுகிச் சொரிகின்றது. திருவாயிலிருந்து சொரிகின்றது. அத்தகைய பெருமை வாய்ந்தவர்கள் செய்கு சதக்கத்துல்லா அப்பா அவர்கள். இவ்வருணையே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளது.

விரிதரு மறையின் வாரி மனநெடு மேகம் புக்கிப்
புரிதருந் தெளிவி னேடும் போதரப் பருகிச் செந்தேன்
சொரிதருந் திருவாய் வள்ளல் துதிதரும் வகுதை மேவிப்
பெரிதருஞ் சதக்கத் துல்லா பிறங்கணி பதமுட் கொள்வாம்.

(கடவுள் வாழ்த்து: 22)

## புரவலர்

இபுருகீம் நபி (அலை) அவர்களின் வரலாற்றைக் கவிதையாகப் பாடுவதற்குப்பொருளுதவி புரிந்தவர் பெருஞ்செல்வந்தராகத் திகழ்ந்த கபீபு முகம்மது என்பவர். பெருமளவில் பொருள் வழங்கிய புரவலர் வாழ்க வாழ்க என கடவுள் வாழ்த்துப் பாடலிலே ஆசிரியர் இவ்வாறு வாழ்த்தி உள்ளார்.

இருநிதி பெருக மெய்மை இசைதரும் இபுரு கீந்தந்
திருநிதி பெருக வாகைத் திறத்தொடும் புனைதல் செய்வான்
வருநிதி நிறை கபீபு முகம்மதும் வனைந்து நின்ருர்
தருநிதி பெருக மேன்மை தழைத்திட வாழி வாழி.

(கடவுள் வாழ்த்து: 36)

கபீபு முகம்மது என்னும் புரவலர் காயல்பதியைச் சார்ந்தவர். அழகிய வளம் மிக்கது அந்நகர். அத்தகைய சிறப்பு நகருக்கு அதிபதி யாக இருந்தவர் இஸ்மாயில் என்பவர். அவருடைய கண்மணியென விளங்கியவர் திருமணிமாலை கொடைநாயகர் கபீபு முகம்மது அவர் கள். அத்தகைய வள்ளல் கபீபு முகம்மது என்பவர் திருமணிமாலை இயற்றுவதற்குப் பெருமளவில் பொருளுதவி செய்தார். இவ்வாறு புரவலரின் தந்தையர் யார் என்பதையும் அவர் எந்நகரத்தைச் சார்ந் தவர் என்பதையும் ஒரு பாடலில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

அணிவளம் பழுத்த காயல் அதிபதி இசுமா யீல்கண்
மணிவள மணிக பீபு முகம்மதென் றுயர்ந்த மன்னன்
கனிவள மனந்தங் காட்டுங் காரண ரிபுரு கீந்தந்
திணிவளம் புனைதல் செய்வான் திருக்கருத் தியற்றி னனே.

(கடவுள் வாழ்த்து: 27)

**புரவலரின் பிறப்பகம்**

கொடை நாயகர் கபீபு முகம்மது அவர்களின் பிறப்பகம் புகழ் மிக்க நகராம் வகுதையாம். இக்குறிப்பு

சீர்த்தியின் வகுதைப் பதி......

(புவனம் விளக்கிய படலம் : 58)

என ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளது. மற்றொரு பாடலில் புகழினை நல்கும் வகுதை என்பது

புகழ்தரு வகுதை ......

(நகர் நீங்கு படலம்: 61)

என வருணிக்கப்பட்டுள்ளது.

**புரவலரின் தந்தையார்**

திருமணிமாலையின் கொடைவள்ளலின் தந்தையார் பெயரும் இக் காப்பியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர் பெயர் இசுமாயீல் என்பதும் சுட்டப்பட்டுள்ளது, அவருடைய கண்மணியாகப் பிறந்தவர் கபீபு முகம்மது என்பவர் என்பது

சீர்த்தியின் வகுதைப் பதியிசு மாயீல்
திருவிழிக்கொரு மணியென்ன

(புவனம் விளக்கிய படலம் : 58)

என வருணிக்கப்பட்டுள்ளது. வேறொரு பாடலில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர் இசுமாயீல் என்பதும் அவரின் அளவிலா மகிழ்ச்சிக்குக் காரணமாக அமைத்திருந்தார்கள் கபீபு முகம்மது என்னும் அவர் மைந்தர் என்பதும் இவ்வாறு ஒரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

புகழ்தரும் வகுதை மன்னன்
பொருவிலா இசுமா யீல்மெய்
மகிழ்தரு மணிகபீபு முகம்மது......

(நகர் நீங்கு படலம் : 61)

அவருடைய அழகு வேறொரு பாடலில்
இயலணி இசுமா யீல்...

(நமுறூ தழிவுண்ட படலம்: 27)

என வருணிக்கப்பட்டுள்ளது.

**புரவலரின் செல்வப்பெருக்கு**

கபீபு முகம்மது அவர்கள் மிகுந்த செல்வம் உடையவராய்த் திகழ்ந் தார். அவருடைய செல்வம் நிலைபெற்றதாய் இருந்தது. அந்தச்

செல்வம் நன்மையான காரியங்களுக்கே பயன்படுத்தப்பட்டது. அது மேலான செல்வம் ஆகத் திகழ்ந்தது அவர் தம் மனையில் என்றுமே குறையாத செல்வம் இருந்தது. இக்கருத்துக்கள் ஒரு பாடலின் இரண்டு அடிகளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

மன்மலி பொருள்க பீபு முகம்மதின் மனையி லென்று
நன்மலி செல்வ மேன்மை நனிபெறப் பெருகும் அன்றே.
(நாட்டுப் படலம்: 27)

அவர் ஒன்று சேர்த்த பொருட்செல்வம் வரிசை மிக்கதொன்று என்பது

தேக்கிய வரிசை நிறை நிதி...
(புறப்பாட்டுப் படலம்: 9)

என்றும் அவர் தம் இல்லத்திலே செல்வம் குவிந்திருந்தது என்பதைச் சிறப்பாக மற்றொரு பாடலில்

மனையிற் செல்வ ... ...
(பின்குடியை நன்குடியாக்கிய படலம்: 66)

என்றும் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

**மேன்மை**

புரவலரின் மேன்மை ஒப்பற்றது. எல்லோராலும் போற்றப்படுவதுமாகும். இதனையே சேகுனாப்புலவர் ஒரு பாடலில் இவ்வாறு பாடி உள்ளார்.

...... ...... ...... உலகம்
போற்று மேன்மை கபீபு முகம்மது ...
(நமுறூது கனவு கண்ட படலம்: 4.)

**கருணை**

கொடைநாயகர் கருணைமிக்க மனப்பான்மை உடையவர். ஈரமான உள்ளத்தினைக் கொண்டவர். இதனாலேயே கொடைநாயகரை,

கார்த்தடக் கருணைப் பெருங்கொடை கபீபு...
(புவனம் விளங்கிய படலம் : 58)

என வருணித்துள்ளார் சேகுனாப்புலவர். பல பாடல்களில் அவருடைய அழகு வருணிக்கப்பட்டுள்ளது.

**இயற்கை வருணனை:**

காப்பியங்களில் அமைந்துள்ள நாட்டு நகரப் படலங்களில் இடம் பெற்றுள்ள இயற்கை வருணனை ஒரே விதமாக அமைந்திருப்பதைக் காணலாம். எல்லாத் தமிழ்க் காப்பியங்களினதும் பொதுப்படையான

அமிசமாக அவ்வியற்கை வருணனையைக் குறிப்பிடலாம். காப்பியத்துக்குக் காப்பியம் அவ்வக்காப்பியங்களின் பாட்டுடைத் தலைவர்களைப் பொறுத்தவரையில் அத்தலைவர்களின் நாடு நகரமும் வேறுபடுகின்றனவே தவிர அவை வருணிக்கப்பட்டுள்ள முறைமை பெரிதும் ஒத்திருப்பதைக் காணலாம். எனவே திருமணிமாலையில் இடம் பெற்றுள்ள இயற்கை வருணனைகளுள் ஒன்றிரண்டைப் பார்ப்போம்.

ஒரு பாடலில் அறபு நாடு வருணிக்கப்பட்டுள்ளது. பார்க்க வேண்டிய நாடு அவ்வறபு நாடு. அங்கு செல்வம் எப்பொழுதும் மலிந்து இருக்கும். அந்நாட்டில் நிறையப் பூஞ்சோலைகள் உண்டு. அப்பூஞ்சோலைகளிலே நறுந்தேன் சிதறி இருக்கும். அத்தேன் தாமரையிலிருந்து சிதறப்பட்டது. தாமரையைச் சூழ்ந்து தாமரையைத் தாண்டிப் பாய்வதனால் தாமரையின் தேன் சிதறுண்டு கிடக்கும். அவ்வாறு சிதற அடிகோலுவது தவளைகள். அத்தகைய இயற்கை வளத்தை உடையது அறபு நாடு என அறபு நாடு இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

...... ...... ...... அம்புய நறுந்தேன்
பூண்டமண் டூகஞ் சிதறிய வனஞ்சூழ்
பொலிகின்ற செல்வமே மலிந்த
காண்டகு மறபி தேயத்தின் ......

(இறந்தவரெழுந்துயர் படலம் : 7)

சாதாரணமாக தாமரை மலர்களிலிருந்து [தேன் ஊறக் காரணமாய் அமைவன வண்டுகள். தேன் உண்பதற்கு மலர்கள் தோறும் வண்டுகள் செல்கின்றன. சென்று பாடுகின்றன. பாடிக் கொண்டு ஊதுகின்றன. அவற்றின் காலால் மிதிக்கின்றன. மொட்டுக்களை காலால் மிதித்தலால் அவை திறக்கின்றன. அதன் பயனாக தேன் ஊற்றெடுத்துப் பாய்கின்றது. இக்கருத்துக்கள் நளவெண்பாவில் இவ்வாறு அமைந்துள்ளன.

...... ...... ...... ......
அம்புயத்தின் போதை அறுகாலால்—தும்பி
திறக்கத்தேன் ஊறும் திருநாடு ...

(கலிநீங்கு படலம்: 19)

உமறுப்புலவர் தமது சீறுப்புராணத்தில் அறபு நாட்டை அதன் இயற்கை வளத்திற்கேற்ப வருணித்துள்ளார். ஈத்தம் மரங்கள் நிறைந்த நாடாக அங்கு அறபு நாடு வருணிக்கப்பட்டுள்ளது,

—— —— —— —— ஈந்தின்
அடவிகள் புடையிற் ரேன்றும் அறபு நாடடகம்...
(ஹபீபு மக்கத்துக்கு வந்த படலம்: 65)

**பஞ்சம் பற்றிய வருணனை**

பஞ்சம் பற்றிய வருணனையை நயம்பெறப் பாடியுள்ளார் திருமணி மாலை ஆசிரியர். பஞ்சத்தின் கொடுமையை

நகத்துயர் புலியென நடந்த பஞ்சமே
(பகைவர்க்கிலம் பாட்டுப் படலம்: 12)

என்றும் பஞ்சம் எங்கும் பரந்திருந்தமையை

வெறுமையின் வெள்ளமே விரைந் தடர்ந்ததே
(பகைவர்க்கிலம் பாட்டுப் படலம்: 13)

என்றும் எல்லோரும் வருந்த பஞ்சம் அழிவைக் கொண்டு வந்தமையை

நொய்வரும் பஞ்சமா நூறி நின்றதே
(பகைவர்க்கிலம் பாட்டுப் படலம்: 15)

என்றும் வருணித்துள்ளமை ஈண்டு நோக்கற் பாலது.

பஞ்சம் ஏற்படுத்திய விளைவுகளை ஒரு பாடலில் ஆசிரியர் விவரித்துள்ளார். உழவர் தமது தொழிலை இழந்தனர். செல்வம் சேர்ப்போர் அப்பணியில் ஈடுபட முடியாமற் போய் விட்டது. விழாக்கள் கொண்டாடும் வாய்ப்பும் அற்றுப் போய் விட்டது. இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உழவர்க டொழிலற உயருஞ் செல்வத்தார்
கிழவர்க டொழிலறக் கிருபை யுற்றவர்
விழவுறுந் தொழிலற வேறு வேறதா
யழைகுவர் நெறிபல வகன்ற கன்றரோ
(பகைவர்க்கிலம் பாட்டு படலம்: 14)

பஞ்சம் காரணமாக ஏற்பட்ட ஒரு நிலையை நுணுக்கமாக விவரித்துள்ளார். உணவு கிடைக்காததால் தாய்மார் பிள்ளைகளைப் போசிக்கத் தவறி விட்டனர். பிள்ளைகள் பான் முலையைக் கண்டிலர். பாலர் பால் குடிக்கவில்லையே என்று ஏங்கினர் தாய்மார். மனங்கலங்கினர். மக்கள் மட்டும் பஞ்சத்தினுல் பாதிக்கப்பட்டனர் என்று கூறிவிட முடியாது. விலங்கினங்களும் பசியால் வருந்தின. புல்லை உண்ணும் மிருகங்கள் புல்லோடு சருகையும் உண்ணலாயின. இதனையே ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

பான்முலை கண்டிலார் பாலர் காண்டலும்
தான்மனங் கலங்குறத் தாய ரேங்குமே
மான்மறி விலங்கினம் மறித்தும் புல்லொடும்
கான்மரச் சருகெலாம் பசியிற் காய்ப்பரால்

(பகைவர்க்கிலம் பாட்டு படலம்: 21)

**பூஞ்சோலை**

செந்தாமரை மலர்கள் ஒருபுறம். செவ்வாம்பல் மலர்கள் மறு புறம். சிவந்த குவளை மலர்கள் இன்னொரு புறம். மா, பலா, வாழை என்னும் மென்மையான முக்கனிகளைக் கொண்ட மரங்கள் மற்றொரு புறம். கமுகு மரங்கள் அணியாக வேறொரு புறம். இளநீரைத் தரு கின்ற தென்னை மரங்கள் பிறிதொரு புறம். இத்தகைய கட்டழகினைக் கொண்டு திகழ்ந்தது அங்குள்ள ஒரு பூஞ்சோலை. அத்தகைய மலர் வளத்தையே சேகுனப்புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் வருணித்துள் ளார்.

செய்ய தாமரை செங்கழு நீர்செழும் பானல்
நொய்ய முப்பழங் கமுகொடும் பனையொடு நுவன்ற
வைய தெங்கிள நீரணி வாழைக ளினைய
தைய லாம்பொழில் தண்டலை ... ...

(காமரத்தாக்கிய படலம்: 28)

**சூரியோதயம்**

பெரும்பாலும் புலவர்கள் தமது வருணனைகளில் அணியிலக்கணங் களை அமைத்துப் பாடுவதுண்டு. சிறப்பாகச் சூரியோதய வருணனை களில் தற்குறிப்பேற்ற அணியினை அமைப்பதில் புலவர்கை தேர்ந்தோ ராவர். அவ்வாறு அணியிலக்கணம் அமைத்துப் பாடும்பொழுது சூரியோதயத்துக்கான காரணத்தைக் கற்பனை செய்து கூறுவர், இப்ருகீம் நபி (அலை) அவர்கள் தமது புதல்வர் இஸ்மாயில் நபி (அலை) அவர்களைத் தாம் கண்ட கனவை நனவாக்கும் முகமாக அர்ப்பணிக்க முற்பட்டார்கள். தனிமையான ஓர் இடத்துக்கு அவர்களை அழைத்துச் சென்று அவர்களின் கழுத்தை ஒரு கத்தியால் அறுக்க முற்பட்டார்கள். கத்தியை வன்மையாக ஊன்றி கழுத்தை அறுத்தார்கள். தீப்பொறி எழும் அளவுக்கு கழுத்தில் வைத்து ஊன்றினார்கள். அறுப்பவரும் அறுக்கப்படுபவரும் மனிதப்புனிதர்களாவர். இத்தகைய ஒரு சம்பவம் உலகில் நிகழ்வது ஒரு பேரதிசயமாகும். இதனை அறிந்து மயங்கி, வியப்பு மிகவே இந்நிகழ்ச்சியை நேரில் பார்க்க வேண்டும் என்று சூரியன் நினைத்தான். அவ்வாறு நினைத்து எழுந்து வந்தான்

அருணன். இதனுலேயே சூரியன் உதயஞ்செய்தான் என்று கற்பனை நயம் மிக ஆசிரியர் சூரியோதய வருணனையை இவ்வாறு விவரித்துள்ளார்.

திருமகன் கழுத்தினில் கருவி தீயெழப்
பொருமனத் திருந்தனர் புனிதர் என்னிலே
வருமஃ தென்கொலென் றயர்ந்து மாழ்கியே
வருணமுற் றெழுந்தன னருண னன்றரோ.

(இசுமாயில் நபியைக் குறுபான் செய்த படலம்: 21)

**உவமைகள்**

காப்பியப் புலவர் தத்தம் காப்பியங்களில் பெண்களைக் கேசாதி பாதமாக அல்லது பாதாதிகேசமாக வருணிக்கத் தவறுவதில்லை. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களை இயற்றிய ஆசிரியரும் அத்தகைய வருணனையைத் தத்தம் காப்பியங்களில் இடம்பெறச் செய்துள்ளனர். பெரும்பாலும் அவை கேசாதிபாத வருணனைகளாகவே அமைந்திருப்பதைக் காணலாம். அத்தகைய வருணனைகளைக்கூட அவர்கள் முழுமையானவையாக அமைக்கவில்லை என்பதையும் உணரக் கூடியதாக இருக்கின்றது. இஸ்லாமிய நெறியைப் பேணவே அவர்கள் அவ்வாறு பெண் பாத்திரங்களைப் படைத்துத் தந்துள்ளனர். திருமணிமாலை என்னும் காப்பியத்தில் அதன் ஆசிரியர் சேகுனப்புலவர் அவர்கள் ஆசரின் பாரியாரை பாட்டுடைத் தலைவரான இப்ருகீம் நபி அவர்களின் தாயாரை—அவுசா அம்மையாரை—இப்ருகீம் நபி அவர்கள் பிறக்குமுன் இருந்த நிலையில் கேசாதிபாதமாக வருணித்துள்ளார். ஆனுல் அவ்வருணனை கூட முழுமையானதாக அமையவில்லை. அவ்வாறு வருணிக்கும் பொழுது பல உவமைகளைக் கவி நயம் பெறக் கையாண்டுள்ளார் ஆசிரியரின் எனக் கூறலாம். கேசாதிபாதமாக இபுருகீம் நபி அவர்களின் தாயாரின் சில உறுப்புக்களையும் மாத்திரம் வருணித்துள்ளார் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது. கேசாதிபாத வருணனையை இவ்வாறு அவ்வம்மையாரின் அழகினை வருணிப்பதன் மூலம் ஆரம்பித்துள்ளார். அப்பெண்மணி நிலாவொளியைப் பொழிகின்ற சந்திரனிலும் பார்க்கமிக்க அழகுடையவராய்த் திகழ்ந்தார் என ஒருபாடலில் இவ்வாறு வருணித்துள்ளார்:

எழிலியன் மாளிகை இருந்த மேன்மையில்
செழிதருந் திருவவு சாதன் பாரியார்
பொழிகதிர் மதியினும் பொழிய நல்லழ
கொழுகிய வியப்பினைக் கண்ணுற் ருரரோ

(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 26)

அப்பெண்மணியின் கூந்தலை வருணிக்க ஒன்றுக்கு மேற்பட்ட உவமைகளைஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். சிதறலில்லாத செறிந்த புயல் போன்றிருந்தது. நீர் பாய்ந்த பின்னர் அவ்வாறு பாய்ந்த இடங்களில் கரு மணல் தோன்றக் காண்கிறோம், அது அறல் எனப் படும். அத்தகைய அறல் போன்றது அக்கூந்தல், அது மிகக்கருமை யாகத் தோன்றியது. இருள் போன்று இருந்தது. மணம் வீசிக் கொண்டிருந்தது. இங்ஙனம் அவ்வம்மையாரின் கூந்தல் மிகக்கருமை யாக இருந்தது. இதனையே ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

செறிதரும் புயலெனச் சிதறலின் றிநீர்
மறிதரும் அறலென மறுகலின் றிப்பின்
பறிதரும் இருளெனப் பகலின் றின்றியே
நெறிதருங் கருங்குழ நிவர வாசமே.

(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 26)

கூந்தலின் கருமையை ஆசிரியர் மற்றோரிடத்தில்

காரினுங் காரிய கூந்தல் ...

(சிறைமீட்டுப் படலம்: 32)

என்றும் வேறோரிடத்தில்

காரெனப் படர்ந்த கூந்தல்...

(காமரத்தாக்கிய படலம்: 51)

என்றும் வருணித்துள்ளமையைக் காணலாம்.

கூந்தல் அடுத்து வருணிக்கப்பட்டுள்ளது. அவ்வம்மையாரின் நுதல். அந்நுதல் வில் போன்று வளைந்துள்ளது. வானத்திலே தோன்றுகின்ற பிறையின் கலை போன்று இருந்தது. கொல்லுந்தன் மை உடைய வளைந்த மழு ஆயுதத்தைப் போன்று காட்சி அளித்தது, இங்கே மழுவுக்குக் கொல்லும் தன்மை உள்ளது போன்று அப்புரு வத்துக்குக் காண்போரை வருத்தும் தன்மை இருந்தது என்பது தொனிக்கப்பாடியுள்ளமை நோக்கற்பாலது. அத்தகைய நன்னுதல் சிறந்து விளங்க திலகம் அணியப்பட்டிருந்தது. இவ்வாறு நுதலை ஆசிரியர் வருணித்துள்ளார்.

சிலையது வளைவெனத் தெறிதலின் றிவான்
கலையது பிறையெனக் களங்க மின்றிவன்
கொலையது மழுவெனக் கொடுமை யின்றியே
திலகநன் னுதலணி சிறந்திலங் கவே.

(நபிஇபுருகீம் அவதாரப் படலம்: 28)

அளவாக வளைந்துள்ள புருவமும் சேல்மீன் போன்று அங்கும் இங்கும் அசையும் கண்களும் உடையவராய் அவ்வம்மையார் திகழ்ந் தார் என்பது,

பொருகொடி யலகெனப் பொறுத்து விட்டிடாத்
திருகொடிப் புருவமுஞ் சிறந்த கெண்டையின்
வருகொடி கணையினு மறித்த லுன்னலுந்
தருகொடி படர்விழி தளங்கு நின்றரோ

(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 29)

அடுத்து வருணிக்கப்படுவது அம்மையாரின் கன்னம்: காதிலே உள்ள குழை துள்ளி ஆடிக் கொண்டிருக்கிறது. வள்ளைக் கொடியின் இலை போன்றது அது; ஊஞ்சல் போல் ஆடிக் கொண்டிருக்கின்றது. சாணைக்கல்லினால் மெருகூட்டப்பட்டு தெளிந்த அழகினை எடுத்துக் காட்டிக் கொண்டிருக்கும் வெள்ளை வெளேரென இருக்கும் பளிங்குக் கண்ணாடி போன்று காட்சி அளித்தன கன்னங்கள். அவை மிளிர்ந்தன வாகத் தென்பட்டன. இக்காட்சியினையே ஆசிரியர் இங்ஙனம் ஒரு பாடலில் வருணித்துள்ளார்.

வள்ளையி னல்லிலை வள்ளி யூசலில்
துள்ளிய குழையொடுந் துலங்குஞ் சாணையில்
தெள்ளணி யுலகுயிர் சீர்மை காட்டிய
வெள்ளைமெல் லாடிபோன் மிளிர்க போலமே.

(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 30)

மூக்கும் உதடுகளும்அடுத்து வருணிக்கப்பட்டுள்ளன. செண்பக மலர் வண்டுணா மலர் என்பர். அத்தகைய மலர் இங்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. ஆம்பல் மலரும் பவளமும் மற்றைய உவமை களாகச் சுட்டப்பட்டன. இவ்வுவமைகளைப் பயன்படுத்தி மூக்கும் உதடுகளும் ஒரு பாடலில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன.

செந்நறை கமழ்தருஞ் செண்பக கத்தெழில்
அந்நறை மலரென அலரிற் றுண்டமு
மன்னரை கயிரவ மலரிற் றுப்பினின்
பின்னறை அதரமே விளங்கு நின்றரோ

(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 31)

பிறிதொரு படலத்தில் வாய் வருணிக்கப்பட்டுள்ளது. சிவந்த வாய்,

கனியினுங் கனிந்த செவ்வாய்

(சிறை மீட்டுப் படலம்: 32)

என இங்ஙனம் சுட்டப்பட்டுள்ளது.

வெண்மையான பற்களும் அத்தகைய பற்களினுல் பிரதிபலிக்கப் படும் புன்சிரிப்பும் இயற்கை அழகாக அமைந்து விடுகின்றன. முத்தையும் மிஞ்சி விடுகின்றன அந்த அம்மையாரின் பற்கள் அழகிய தோற்றம். புதிய அழகுடன் தோற்றுவது சந்திரன். ஆனுல் சந்திரனில் களங்குமுண்டு ஆனுல் அவ்வம்மையாரின் முகமோ சந்திரனின் அழகிய பொலிவினைக் காட்டிக் கொண்டிருந்தது என்று கூறுவதுடன் ஆசிரியர் திருப்தி அடையவில்லை. அவ்வம்மையாருடைய முகம் சந்திரனுக்குக் களங்கமாக உள்ள முயல் இல்லாமல் சந்திரன் தோன்றியது போல் காட்சி அளித்ததாக ஆசிரியர் வருணித்துள்ளார். பற்களின் அழகும் முகத்தின் தெளிவும் அழகினைத் தோற்கடிக்க வல்லனவாக அமைந்திருந்தன என்று ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு விளக்கி உள்ளார்.

முத்தென மதித்திடா மூரல் வெண்ணமும்
புத்தெழி லொழுகிய புதிய சோமனு
மத்தல முயலின்றி மலர்ந்த தாமென
வத்திரத் தெளிவொடும் வண்மை தோற்றவே.

(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 32)

அப்பெண்ணின் கழுத்து சங்கு போன்று இருந்தது. நீரில் தோன்ருத சங்கென விளங்கியது. இரண்டு தோள்களும் மூங்கில் போல் இருந்தன. ஆனுல் தீமை விளைவிக்காதன அத்தோள்கள். இங்ஙனம் கழுத்தும் தோள்களும் சிறந்து விளங்கின என ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு விளக்கி உள்ளார்.

நீரிடத் தின்றிய பணில நீர்மையில்
சீரிடக் கந்தரம் சிறப்பு லாவவே
பாரிடத் தெழிலொடும் படர்ந்து தீயிலா
வேரலிற் ரேளிணை விளங்கு நின்றரோ

(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 33)

யாழைப் போன்று விரைவாக இயங்க வல்ல முன் கைகள். யாழோ இசைக்கும். ஆனுல் முன் கைகள் இசைக்காத யாழைப் போன்றவை. விரும்பிப் போர் புரியவரும் பகைவர் தம் பகைமையையும் மிஞ்சக் கூடியனவாகத் தோன்றினும் அக்கைகள் நளினமானவை. அக்கையில் உள்ள காந்தள் போன்ற விரல்கள் உணவு உண்ணவே பயன்படுத்தப்படுபவை. அத்தகைய விரல்களும் அவற்றின் நகங்களும் உயர்வானவையாகவே திகழ்வனவாகும். இக்கருத்துக்களையே சேகுனப்புலவர் தமது திருமணிமாலையில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

இசைத்திடா யாமெனை விசைத்த முன்கையும்
நசைத்தட நடுவலர் நளின வங்கையும்
விசைத்தலர் காந்தளின் மெலித லின்றிய
மிசைத்தகை விரனகம் வயிர மேன்மையே
(நபி இபுருகீம் அவதார படலம்: 34)

சாதாரணமாகச் சுருக்கு விழக்கூடியது உடல். ஆனால் அந்த அம்மையாரின் உடலோ சுருக்கு விழாத ஒன்றாய்த் திகழ்ந்தது. அப் பெண்ணின் உடல் சிவந்த பொன்னிறத்தைக் கொண்டு விளங்கியது. புதுப் பொலிவோடு அம்மங்கை தாமரை மலரில் படும் பாதத்தைக் கொண்டு காட்சி அளித்தாள். இவ்வாறு இக்கருத்துக்களை அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர்.

திரைபடு முடலெலாஞ் செய்ய பொன்னென
விரைபடு மலரினம் விளங்கு மென்கொடி
புரைபடு மருங்கொடு புதிய சாயலின்
மரைபடு பதத்தணி மருவி நிற்பவே.
(நபி இபுருகீம் அவதாரப் படலம்: 35)

பயிர் வளர நீர் இன்றியமையாதது. மழையினால் நீர் பெறப்படுகின்றது. மேகம் மழையைப் பொழிகின்றது. எனவே பயிர் கொண்டல் வேண்டும் பயிராகவே உள்ளது. சிறையிலிருந்து விடுதலை பெறும் நோக்கத்தோடு இருப்பதை இவ்வுவமையை பயன்படுத்தி ஆசிரியர் இவ்வாறு விளக்கி உள்ளார்.

கொண்டல் வேண்டும் பயிரதுபோல்
கொடியாள் வேண்டும் பயனருள்க
மீண்டு வேண்டுஞ் சிறைவிடுத்து
மீட்ட வேண்டும் எனநயினர்
(சிறைமீட்டுப் படலம்: 10)

மற்றொரு பாடலிலும் ஏறத்தாழ இதே கருத்து
மேகந்தரு புனலின்படர் விழையும் பயிர்...
(பின்குடியை நன்குடியாக்கிய படலம்: 44)

தாமரை போன்ற முகம் என்பது வழக்கு. தாமரை என்னும் சொல்லின் முதல் எழுத்துக் குறைந்து மரை எனவும் வரும். 'மரை முகம்' (நுமுறாது கனவு கண்ட படலம்: 19) அத்தகைய ஓர் உபயோக மாகும். இதே போன்ற உவமை 'மருமலர் வதனம் (நுமுறாதைக்

கண்ணுற்ற படலம்: 33) என்பதிலும் 'தடமுகத்தாமரை' (நுமுறூதைக் கண்ணுற்ற படலம்: 52) என்பதிலும் 'கஞ்சமே முகத்தின் மின்னுர்' (சிறையிடு படலம்: 52, என்பதிலும் 'காலை மலர்போற் றிருமுகமும்' (சிறைமீட்டுப் படலம்: 13) என்பதிலும் 'வண்டினந் தொடர்ந்த செந்தாமரைமுக வள்ளல் (கடிமணப் படலம்: 71)

'காலையி லலர்தருங் கமல மென்னவே
சீலநல் லெழின்முகத் தேவி நோக்கி

(இஸ்மாயில் நபியைக் குறுபான் செய்த படலம்: 23)

என்பதிலும் வந்துள்ளமையைக் காணலாம்.

**விரல்கள்**

குழந்தைகள் விரலைச் சூப்புவது வழக்கம். அவ்வாறு ஒரே விரலையே பெரும்பாலும் சூப்புவது உண்டு. அவ்வாறு செய்வதில் அவை அலாதியான ஒரு சுவையைப் பெறுகின்றன. இபுருகீம் நபி அவர்களும் குழந்தையாக இருந்த சமயம் விரல் சூப்பும் பழக்கத்தைப் பெற்றிருந்தார்கள். ஆனுல் அவர்கள் ஒரு விரலை மாத்திரம் சூப்ப வில்லை. கையில் உள்ள ஐந்து விரல்களையும் சூப்பிக் கொண்டிருந்தார் கள். அவ்விரல்களிலிருந்து அவர்களுக்கு சுவன நாட்டுச் சுவைகள் அளிக்கப்பட்டன. அவர்கள் தங்கள் பெருவிரலைச் சூப்பும் பொழுது தேனின் சுவையைப் பெற்ருர்கள். சுட்டு விரலாம் வருவிரலிலிருந்து பாலின் சுவையைப் பெற்று மகிழ்ந்தார்கள். இளகக் காய்ச்சி வெல்லத் திலிருந்து பெறப்படும் சுவையை நடுவிரலைச் சூப்புவதன் மூலம் பெற்று மகிழ்ந்தார்கள். நடுவிரலுக்கு அயலில் உள்ள மோதிர விரலிலிருந்து அவர்களுக்கு வெண்ணெயின் சுவை கிடைத்தது. சிறு விரலிலிருந்து நீரைச் சுவைக்கும் பேற்றைப் பெற்ருர்கள். இபுருகீம் நபி அவர்கள் தங்கள் அன்னையாரின் மடியில் குழந்தையாக இருந்த பொழுது புதுமையான இந்த அனுபவங்களைப் பெற்ருர்கள். இக்கருத்துக்களையே சேகுனைப் புலவர் தமது திருமணி மாலை என்னும் காப்பியத்தில் இடம் பெற்றுள்ள ஒரு பாடலில் இவ் வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

திருவனை மடியிற் றிகழ்தருங் குழவிச்
செழுங்கர மலர்விர லைந்து
மருமலி வாயிற் சுவைத்திடத் தேனும்
பெருவிரல் வழிதர வடுத்து

வருவிரற் பானம் நடுவிரற் பாகு
மயல் விரல் வண்ணவெண் ணெய்யும்
ஒருவிர நீருஞ் சுவன நாடுடைய
வொழுகி யூறிய வளத்துடனே.
(புவனம் விளங்கிய படலம்: 62)

**பொதுக்கூற்று**

பல சமயங்களுக்கும் பொதுவாகச் சில கூற்றுக்களையும் தமது காப்பியத்தில் இடம் பெறச் செய்துள்ளார் ஆசிரியர். அத்தகைய சில பொதுக்கூற்றுக்களை எடுத்துக் கொள்வோம். ஆறறிவுடையரே மக்கள் எனப்படுவர். ஆற்றலிற் குறைந்தவர்கள் மாக்கள் என அழைக்கப்படுவர். பகுத்தறிவு டையரே மக்கள் ஏனையோர் மாக்களா வர். மதியிலாரை மக்கள் எனக்கூற முடியாது என்பதை ஆசிரியர் இவ்வாறு கூறியுள்ளார்.

மக்களே மக்களாகும் மதியிலான் மக்களாமோ.
(நுமுறூதைக் கண்ணுற்ற படலம்: 10)

இந்த அறிவே மக்களுக்குப் பயிற்சியை அளிக்கிறது. இந்த அறிவு பலனளிக்கும் காலத்தை நல்குகிறது. நல்லியல்புகளைத் தருகிறது. பண்புடையராய் மக்களை மாற்றுகிறது. அத்தகைய நல் லறிவிற் பயனை அது அளிக்கும் காலத்திலேயன்றி மூப்படைந்தபின்னர் பெறமுடியாது. இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட் டுள்ளார்.

பருவமும் பயிற்சி தானும் பான்மையும் பண்பு மெல்லாந்
தருவன மதியே யன்றித் தகுவன வேறு முண்டோ
மருவுதல் பருவத் தன்றி மாழ்கிய மூப்பில் உண்டோ
வெருவுற மயக்கங் கொண்ட விருத்தருந் திறத்தா ரன்றே
(நுமுறூதைக் கண்ணுள்ள படலம் : 12)

பலனளிக்கும் காலத்தின் முக்கியத்துவத்தை வாக்குண்டாம்
பருவத்தாலன்றிப் பழா (5)

எனக் குறிப்பிடுகிறது.

பிறந்தோர் அனைவரும் இறப்பது நிசமே. இது எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட உண்மை. தேன், நீர், பால் முதலிய பல்வேறு பொருட்களை நுகர்ந்தவர்களும் அவ்வாறு நுகராதவர்களும் எங்கிருந் தாலும் சாவை நுகர்ந்தே தீரவேண்டும். இத்தகைய கருத்துக்களை இரண்டு செய்யுட்களில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் புலவர் நாயகம் என்னும் சேகுனாப்புலவர்.

தேனுகர்ந்தவை நீரது நுகர்ந்தவை செனித்துப்
பானுகர்ந்தவை மண்ணய நுகர்ந்தவை பலகா
லூனுகர்ந்தவை மற்றவை நுகர்ந்திலா வுயிர்கள்
சாநுகர்ந்தவை யன்றுகொல் எத்தலந் தனினும்.

விரிந்த பாரினில் பிறந்தவ ரிறத்தலே மெய்ம்மை
புரிந்த நல்லறன் கொள்ளலும் புகழது கொள்ளல்
வரந்த ருந்தகை செயற்கையி னிற்றல்வாழ் வனைத்துஞ்
சுரந்த பேர்களா மண்ணிலும் விண்ணிலும் தொடர்ந்தால்

(இசுமாயில் நபியைக் குறுபான்செய்த படலம் : 57-58)

எல்லாம் வல்ல இறைவனின் ஏவலை ஏற்று விலகலைத் தவிர்த்து அவன் வழியில் நடந்தவர்கள் பேறுபெற்றவர்கள் என்பதையும் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் இந்நூலாசிரியர்.

வேழ மொத்தவர் வெம்புலி யொத்தவர் வீரத்
தாழ முற்றவ ரனைவரு மதன்பய னில்லார்
சூழ மொய்த்திடும் வல்லவன் வழிதொடர்ந் தவர்கள்
வாழ வுற்றவ ரனைத்தையு முடையவர் மதித்தால்

(இசுமாயில் நபியைக் குறுபான் செய்த படலம்: 59)

இப்பாடல்கள் இசுமாயில் நபி அவர்கள் கூற்றாய் அமைந்துள் ளமை ஈண்டு நோக்கற் பாலது.

சாம் நகர மக்களின் நல்லியல்புகளை புலவர் ஒரு பாடலில் விவரித் துள்ளார். அவர்கள் வேதமுடையவர்கள், வேதத்தின் மெய்ப் பொருளைப் போதனை செய்வோர் அவற்றைப் பயில்வோர். இவை தாம் அவர் தம் பொழுது போக்கு. அவர் கலைகளில் வல்லவர்கள். நீதமுடையவர்கள்; ஒழுக்கமுள்ளவர்கள். நேர்மை மிக்கவர்கள். தாம் செய்யும் பணியில் இடையறாத பற்றுடையவர்கள். அவர்களின் தன்மைகள் ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

வேதமு மதனிடை விரிந்த மெய்ப்பொருள்
போதமும் பயிற்சியிற் பொழுது போக்குவார்
நீதமு மொழுக்கமு நேர்மை மிக்குறுங்
காதலின் முயற்சியிற் கலைவ லாளரே.

(நகரப் படலம்: 23)

**ஓசை நயம்:**

சொற்களை ஒரு குறிப்பிட்ட ஒழுங்குமுறையில் செய்யுட்களில் அமைப்பதன் மூலம் அச்செய்யுட்களில் ஓசை நயத்தைப்பெறுகின்றனர் புலவர். சில சமயங்களில் ஒரே சொல்லைப் பலமுறை ஒரு செய்யுளில் அமைப்பதன் மூலம் ஓசை நயத்தைப் பெறுகின்றனர். இன்னும் சில சமயங்களில் வல்லெழுத்துக்களையோ மெல்லெழுத்துக்களையோ பல தடவைகளில் அமைப்பதன் மூலம் அப்புலவர் ஓசை நயத்தைப் பெறுகின்றனர். வேறு சில சமயங்களில் ஒலிக்குறிப்பையே அமைத்து அவ்வோசை நயத்தை ஏற்படுத்துகின்றனர். 'இரங்க' என்னும் சொல்லைப் பலமுறைப் பயன்படுத்தி ஒரு பாடலை இவ்வாறு அமைத்துள்ளார் ஆசிரியர்.

வானக மிரங்க வான மன்னுயி ரிரங்க நீர்சூழ்
மாநக மிரங்க மேவு மற்றுயி ரிரங்க வெங்கு
மானபே ரொலி யினேடு மாண்டகை தழுவி னுப்பண்
மேனனி தெய்துங் காலை வல்லபன் விளம்ப லுற்ருன்.

(சுவாலயமெறிந்த படலம்: 54)

பெரும்பாலும் டகர ஒலியைப் பயன்படுத்துவதனுலும் ஆசிரியர் தமது செய்யுட்களில் ஓசைநயத்தை அமைப்பர்,

நிலைநாட்டுவர் வளைபூட்டுவர் நிறைமோட்டணி நிரைவார்
கலைசூட்டுவர் தொடைநாற்றுவர் கடியூட்டுவ ரணிகள்
பலவாக்குவர் நனிவீட்டெதிர் பதிவாக்குயர் பந்தர்
நலவாக்குறு மதிபூத்திடு நவமீக்கொளு முதியோர்

(கடிமணப் படலம் ; 35)

மற்ருெரு பாடலில் காவல என்னும் சொல் ஓசைநயத்தைத் தந்து இவ்வாறு அமைந்துள்ளது.

பொறிகாவல புலன்காவல புகழ்காவல பிசகா
நெறிகாவல செயல்காவல நினைகாவல வைத்தக்
குறிகாவல மனைகாவலக் குடிகாவல வென்ற
னறிகாவல அபயம்பல துயரின்றிய வறிவே

(பின்குடியை நன்குடியாக்கிய படலம் : 46)

இசுமாயில் நபி அவர்கள் தங்களது வாழ்க்கைத் துணைவியாக ஆயிலா அம்மையாரை வேண்டியதுபற்றி ஒரு பாடலில் குறிப்பிடப் பட்டுள்ளது. அப்பாடலில் குடி என்ற சொல் பாடலுக்கு ஓசைநயத்தை அளிப்பதாக அமைந்துள்ளது.

முன்குடி நிறைந்த செல்வ முதிர்குடி யொழுக்கங் கொண்ட
நன்குடி ஆரி தீன்ற நன்மணி யமுறென் றேதும்
பொன்குடி யாளர் பெற்றப் பூங்கொடி ஆயி லாவை
மன்குடி வேண்டி நின்றார் மனைக்குடி வேண்டி னாரே

(இசுமாயில் நபி வதுவை வேட்டுப் படலம் : 40)

ஓஓஓஓ என ஒகர ஒலிக்குறிப்பு நான்கு முறை வரவும் பாடலின் ஏனைய பகுதி ஓசைநயம் அமையவும் பாடப்பட்ட ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

கண்ணுண்டு துண்ட முண்டு காதுண்டு வாயு முண்டு
பண்ணின்று முகத்த லின்று படலின்று தோற்ற மின்று
வண்ணுண்டு கைகா லுண்டு வழியெறும் பேனுந் தட்டா
மண்ணுண்டு போகும்பாவை வாங்குவா ருளரோஓஓஓஓ வென்றார்

(விழைவாடிய படலம் : 14)

அதே போன்று அஆஅ என்னும் அகர ஒலிக்குறிப்பும் ஒரு பாட லில் இடம் பெற்றுள்ளது. அது அதிசயத்தன்மையைச் சுட்டும் வகை யில் ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளது.

பெருமையொன் றுவந்த தானும்
பிறிதின்றென் றுன்ன லாலு
மிருமையென் றியம்ப லானு
மிதன்றெழில் முயற்சி யானுங்
கருமையி னின்ன நிந்தைக்
கருத்தொடும் அஆஅ யாவ
ரருமையிற் செய்மன் வல்லா
ரறிமின்க ளுணர்வி னன்றே

(காமரத் தாக்கிய படலம் : 46)

இபுலீசு என்னும் சாத்தானின் கூற்றாக ஒரு செய்யுள் வந்துள்ளது. இசுமாயில் நபி அவர்களை இப்ருகீம் நபி அவர்கள் அர்ப்பணஞ் செய்ய முற்பட்ட பொழுது இப்லீசு இஸ்மாயில் நபி அவர்களிடம் கூறியதாக அது அமைந்துள்ளது. அதன் கண் ஓசை இவ்வாறு அமைந்துள்ள மையைக் காணலாம்.

நாடி ழந்தனை நன்மனை யிழந்தனை நாடும்
பீடி ழந்தனை பேரணி யிழந்தனை பெற்றக்
காடி ழந்தனை கண்மணி யிழந்தனை களிக்குஞ்
சேடி ழந்தனை இழந்தனை நின்னுயிர் செல்வம்

(இசுமாயில் நபியைக் குறுபான் செய்த படலம்: 38)

இபுலீசின் இக்கூற்றுக்கு இஸ்மாயில் நபி அவர்களின் அம்மையார் அளித்த பதிலும் ஒரு பாடலில் ஓசை நயம் மிக்கதாய்ப் பாடப்பட்டுள்ளது. இறைவழிப் படுதலே தமது முதல் நோக்கம் என்றும் எது வந்தாலும் அதனைப் பொறுத்துக் கொள்ளத் தயார் என்றும் தொனிக்க அவ்வம்மையார் அளித்த பதில் இடம் பெற்ற பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

நாடு பொன்றினு நன்னகர் பொன்றினு நங்கைப்
பாடு பொன்றினு சுற்றம் பொன்றினும் பயிலும்
கூடு பொன்றினு முள்ளுயிர் பொன்றினுங் கொற்ற
மோடு பொன்றிலா திறைவழிப் படுதலே முறைமை.
(இசுமாயில் நபியைக் குறுபான் செய்த படலம்: 45)

கனிச்சீர் பெற்று ஓசை நயம் மிக்கதாய் வந்த இரண்டு வஞ்சிப் பாக்கள் இவ்வாறு அமைந்துள்ளன.

வண்டி னத்தொனி
வண்டி னத்தொலி
முண்ட கத்தொடு
முண்டகத் தொடுமே.

கோவை யங்கனி
கோவை யங்கனி
பாவையங் கொடி
வாய்வயங் கிடுமே
(சுவாலயமெறிந்த படலம் : 69-70)

**யாப்பமைதி**

வெண்பாவைத் தவிர ஏனைய பாக்கள் இக்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளன. பெரும்பான்மையான பாக்கள் பல்வேறு வகையான விருத்தப்பாக்கள். ஒரு கட்டளைக் கலிப்பாவை எடுத்துக் கொள்வோம். அப்பாடலின் யாப்பமைதியினை நோக்குவோம். நாற்சீரடிகளைக் கொண்டது கட்டளைக் கலிப்பா. முதலசை நேரசையாகவும் வரும்; நிரையசையாகவும் வரும். தேமாவாகவும் வரும் புளிமாவாகவும் வரும். கட்டளைக் கலிப்பாவின் முதலடியின் முதற்சீர் தேமா புளிமா வாயின் பன்னிரண்டு எழுத்துக்கள் இருத்தல் வேண்டும். எழுத்து எண்ணும் பொழுது ஒற்று நீக்கி எண்ண வேண்டும். செய்கு அப்துல் காதிர் நெயினர் லெப்பை ஆலிம் புலவரின் திருமணி மாலை என்னும் காப்பியத்தில் வரும் ஒரு கட்டளைக் கலிப்பா இவ்வாறு அமைந்துள்ளது.

முழுவா சனைதன் முனநா சியினே
யுழுவா றதனு லுளமார் தலினே
யெழுவா ணிலையா ளிருப்பா ளுலவாள்
வழுவாள் குனிவாள் மறுகா ளுயிர்ப்பாள்

(புறப்பாட்டுப் படலம்: 52)

இக்கட்டளைக் கலிப்பாவின் முதலடியின் முதற்சீர் புளிமாவாக அமைந்துள்ளது. எனவே அவ்வடியில் பன்னிரண்டு எழுத்துக்கள் இருப்பதைக் காணலாம். இக்கட்டளைக் கலிப்பாவில் உள்ள முதலடியில் எல்லாச் சீர்களும் புளிமாவாக அமைந்திருக்கின்றன.

புளிமா புளிமா புளிமா புளிமா

இவ்வமைப்பு முறை நான்கு அடிகளிலும் அமைந்திருப்பதைக் காணலாம். கட்டளைக் கலிப்பாவின் முதலடியின் முதற்சீர் தேமாவாக அமைந்துள்ள ஒரு பாடலுக்கான எடுத்துக்காட்டு இது,

தேவா லையமுற் றிடுதெய் வமதே
நாவா லுரைசெய் திடினன் றெனலு
மாவா லவளும் மதுமா லையனும்
போவா நிலைகொண் டனர்போ திருளே.

(புறப்பட்டுப் படலம் : 55)

இப்பாடலின் முதலடியில் உள்ள முதற்சீர் தேமாவாகவும் ஏனைய மூன்று சீர்களும் புளிமாவாகவும் வந்துள்ளன.

தேமா புளிமா புளிமா புளிமா

நான்கு அடிகளிலும் இவ்வமைப்பு முறைமை இடம்பெற்றிருப்பதைக் காணலாம். ஒவ்வோர் அடியிலும் பதினொரு எழுத்துக்களே வந்துள்ளன. இங்ஙனம் பல்வேறு வகையான கலிப்பாக்கள் திருமணி மாலையை அணிசெய்து கொண்டிருக்கின்றன.

பல்வேறு வகையான வஞ்சிப்பாக்களைத் திருமணிமாலையில் இடம் பெறச் செய்துள்ளார் அதன் ஆசிரியர் சேகனுப்புலவர். ஒரே படலத்தில் மூன்று வகையான வஞ்சிப்பாக்களைத் தந்துள்ளார். இரண்டு சீரடிகள் நான்கு வந்தால் அதற்கு வஞ்சித்துறை என்று பெயர். இதுதான் அப்பாடல்,

இந்தனங் கனன்றதீ
நுந்தனந் தகந்தமே
சிந்தநந் திடாநிரை
சந்தனத் தருக்களே.

(சுவாலயமெறிந்த படலம் : 50)

மூன்று சீரால் வரும் அடி நான்கை உடையது வஞ்சிவிருத்தம். அச்சீர்கள் வஞ்சிப்பாவுக்குரிய கனிச்சீர்களாகவே அமைந்துள்ளன. இதற்கான எடுத்துக்காட்டு.

செறிந்த வாவிகள்
மறிந்த கெண்டைமொய்த்
தெறிந்ததாமரைக்
கறிந்ததேன்களே

சுவாலயமெறிந்த படலம் : 65)

இங்கே ஒவ்வொன்றும் கருவிளங்கனிச் சீர்களைப் பெற்ற நான்கு அடிகளைக் கொண்டு வந்திருப்பதைக் காணலாம். ஒவ்வொன்றும் கூவிளங்கனிச் சீர்களைக் கொண்ட நான்கு அடிகளாலான வஞ்சிவிருத்தத்துக்கான எடுத்துக்காட்டாக இப்பாவினைக் குறிப்பிடலாம்.

காரணந்தரு
மேரணிந்தவர்
பூரணப்புகழ்
வேரணித்தருவே

(சுவாலயமெறிந்த படலம் : 67)

**சொல்லாட்சி**

ஒரு காப்பிய ஆசிரியரின் ஆற்றலைப் பிரதிபலிப்பது அவர் தமது காப்பியத்தில் மேற்கொண்டுள்ள சொல்லாட்சியேயாகும். தாம் கருதிய பொருளை எத்தகைய சொற்களைக் கொண்டு நன்கு எடுத்துச் சொல்ல முடியுமோ அத்தகைய சொற்களை உபயோகிப்பதில் சிறந்த அக்கறை காட்டுவர், அத்தகைய ஆசிரியர். செய்கு அப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவரின் சிறப்பியல்புகளுள் ஒன்று வெவ்வேறு சொற்களைச் சந்தர்ப்ப சூழ்நிலைக்கேற்ப பயன்படுத்துவதேயாகும். செய்கு அப்துல் காதிறு நயினார்லெப்பை ஆலிம் புலவரின் பாக்கள் ஒவ்வொன்றிலும் குறைந்த பட்சம் ஒவ்வொரு புதுச்சொல்லைக் காணலாம். தமிழ், வடமொழி, உர்து, அறபு, பாரசீகம் முதலிய மொழி

களில் புலவருக்கு இருந்த சிறப்பு ஆற்றல் அவர்தம் பாடல்களிலே பிரதிபலிப்பதைக்காணலாம். திருமணிமாலையில் ஆசிரியரால் சிறப்பாக ஆளப்பட்டுள்ள சில சொற்களை ஈண்டு எடுத்து கொள்வோம்.

அகடு என்பது அத்தகைய சொற்களுள் ஒன்று. அகடு என்ருல் வயிறு என்பது பொருள். கொடுங்கோலன் நுமுறூது இட்ட கட்டளைக்கு இணங்க பெண்கள் தத்தம் வயிற்றில் இருந்த கருக்களை அகற்றினர். இதனையே,

அகடு தங்கிய கருக்களை யெடுத்தெடுத் தறுத்து

(நுமுமுறூது கனவு கண்ட படலம் : 39)

எனப் பயன்படுத்தி உள்ளார். திருவள்ளுவரும் வயிறு என்னும் பொருளில் அகடு என்னும் சொல்லை

அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியால் மூடப்பட் டார்.

(திருக்குறள் : சூது : 6) (936)

அயம் என்பது சேறு. நமுறூது அழிவுக்குட்பட இருந்த சமயம் அவனது நிலையை வருணிக்கமுற்பட்ட ஆசிரியர் அரசு வீற்றிருந்த நுமுறூது சேற்று நீரில் அழுந்தி இருந்தான் என்பதை

அயத்திடை யுற்ற நீரில் அழுங்கினன் மணிப்பீ டத்தின்
வயக்களி றுண்ட வெள்ளிற் கனியென மாழ்கி ருந்தான்.

(நுமுறூது அழிவுண்ட படலம் : 1)

பிறிதொரு சொல் இலம்பாடு. வறுமை என்பது இதன் கருத்து. இலம் என்னும் உரிச்சொல் பாடு என்னும் தொழில் பற்றிய சொல் லோடு வந்துள்ளது. ஒரு கூட்டத்தாரின் வறுமையைக் குறிப்பிடவே இச்சொல் திருமணி மாலையில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

பம்மகத் தவரிலம் பாடு கூறுவாம்.

(பகைவர்க்கிலம் பாட்டுப் படலம்: 1)

தொல்காப்பியம் சொல்லதிகாரம் இலம்பாடு என்ருல் வறுமை என்பதனை,

இலம்பா டொற்க மாயிரண்டும் வறுமை

(உரியியல்: 64(360)

என்று கூறுகிறது.

இரும்பு என்பது மற்றொரு சொல். குறுங்காடு என்பது இதன் பொருள். இஸ்மாயில் நபி அவர்களை அர்ப்பணிக்க இப்ருகீம் நபி அவர்கள் மக்காவின் அருகில் உள்ள மினு என்னும் இடத்துக்கு அழைத்துச் சென்றூர்கள். அங்கிருந்து தபீறு என்னும் குறுங்காட்டை இருவரும் அடைந்தனர். இதனைக் குறிக்கவே ஆசிரியர்

பின்னர் வானவர் பெரும்புகழ் பேணவும் பிரியா
நன்ன யந்தரு மகவொடு நாயகர் நவங்கள்
துன்னு கின்றமி ஞவெனு மிடத்தருந் துதிசேர்
இன்ன நீங்குத பீறெனு மிரும்பரு குற்ருர்.

(இசுமாயில் நபியைக் குறுபான் செய்த படலம்: 76)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

பதிற்றுப்பத்திலும் இரும்பு என்னும் சொல் இதே கருத்தில் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

வில்பயி லிறும்பிற் றகடூர் நூறி

(78 : 9)

கமை என்பது பொறுமை என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ள மற்றொரு சொல்லாகும். உதித்திட வேண்டிய புதல்வனின் தன்மை பொறுமையில் சிறந்திருத்தல் வேண்டும் என்பது இங்கே இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

கமைக்கு மேன்மையி னெருவடி வுறுங்கதிர் குலவி
இமைக்கு மேன்மையின் மகவிவ ணுதித்திடல் வேண்டும்.

(நுமுறாது கனவு கண்ட படலம்: 24)

'கமையினை யுடையராகி' இருத்தலின் அவசியத்தைத் தேவாரம் (1104 : 5) வற்புறுத்தி உள்ளது.

வடமொழியில் குக்குடம் என்ருல் கோழி. இதே சொல்லைக் குக்கிடம் என ஆண்டுள்ள இவ்வாசிரியர் தமது திருமணிமாலையில் :

மல்லுங் குக்கிட நான்கினை எடுத்தனர் வசத்தில்

(உளந் தேற்றுப் படலம் : 13)

இங்கே குக்குடம் என்பது குக்கிடம் என வந்துள்ளது.

சேந்தன் திவாகரம் கும்பி என்பதன் பொருள் நரகு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. திருமணிமாலை ஆசிரியரும் அதே கருத்தில் கும்பி என்னும் சொல்லை இவ்வாறு ஆண்டுள்ளார்.

நிவந்தகைத் தண்டத் தாக்கி னெரிதருங் கும்பி மாழ்வார்
(நகர் நீங்கு படலம் : 13)

இளமைச் செவ்வியைக் குழகு என்பர். இசுகாக்கு நபி அவர்களின் பிறப்பைக் குறிப்பிடப்போந்த ஆசிரியர் அவர்தம் குழந்தைத் தன்மையை

எழிலொடுஞ் சென்னி சுசூதினிற் றாழ்ந்து
வல்லவ ளொருவனென் றுணராக்
குழகொடும்... ... ...
(இசுகாக்கு நபியவதாரப் படலம்: 35)

'கொம்மைக் குழகொடுங் கோவலரை மார்பர் (2990) என்கின்றது சீவக சிந்தாமணி.

கேட்பாயாக என்னும் பொருளில் வரும் வியங்கோள்வினை கேட்டி என வந்துள்ளது. கேள்+தி என்பதே கேட்டி என அமைந்துள்ளது.

சொற்றவ னேக்கிக் கேட்டியிச் சிறையைத்
தொலைத்திட வலற்கரி தன்று
(இறந்தவரெழுந்துயர் படலம்: 3)

என்றும்

இன்றிவண் டரும்படி யிரந்து கேட்டியென்று
(இறந்தவரெழுந்துயர் படலம் : 28)

என்றும் கேட்டி என்பது கேட்பாயாக என்னும் பொருளில் வந்துள்ள மையைக் காணலாம்.

யானைகளைப் பிடிப்பதற்காக வெட்டப்படும் பெருங்குழியினைக் கொப்பம் என்பர் குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டில் வரும் மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழில்,

கைம்மலைசெல் கொப்பத்து வீழ (11)

என வந்துள்ளது. திருமணிமாலை ஆசிரியரும் இதே கருத்தில் கொப்பம் என்னும் சொல்லை

கயத்தொடுங் களிறுங் கொப்பங்
கலங்குற வீழ்ந்த தென்ன
(காமரந் தாக்கிய படலம்: 49)

எனப் பயன்படுத்தி உள்ளார்.

பெருமை என்பது கொன் என்பதன் பொருள் 'கொன்னூர் துஞ்சினு மியாந் துஞ்சலமே' என்கிறது குறுந்தொகை (138) திருமணி மாலேயில் இதே சொல் இதே கருத்தில்

கொன்னிடத் திருந்த வேறு
குறிகொண்டு வணங்கா நிற்கும்
(மந்திரப் படலம்: 49)

என வந்துள்ளமையைக் காணலாம்.

கமத்தொழிலின் போது தோண்டுவதற்காகப் பயன்படுத்தப்படும் ஒரு கருவி கொட்டு என அழைக்கப்படுகின்றது. திருமணிமாலேயில் கொட்டு என்பது குழி தோண்டப்பயன்படுத்தும் கருவியாகவே உபயோகிக்கப்பட்டுள்ளது. எரிமூட்டுவதற்காக குழியைத் தோண்டப் பயன்படுத்தப்பட்ட கருவியைக் கொண்டு சுட்டுகின்றது.

சென்று வன்றிறக் கொட்டினுல் வெட்டிமண் செறித்தே
(சுவாலயமெறிந்த படலம்: 6)

கொட்டு என்பதை ஒருவகைத் தோண்டு கருவி என பழமொழி உரை (388) குறிப்பிட்டுள்ளது. மண்வெட்டி என்னும் பொருளில் பெரிய புராணத்தில் கொட்டி என்பது இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

யான்கல்லுங் கொட்டைப் பறித்தா ரென்றியம்பி
(தண்டியகனயனர் புராணம்: 16)

கோட்டி என்பது திருமணிமாலேயில் இடம் பெற்றுள்ள வேரெரு சொல். இச்சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டு. அவற்றுள் ஒன்று பைத்தியம் என்பதாகும். சிலபகுதிகளில் வாழும் முஸ்லிம்களின் தமிழ்ப் பேச்சு வழக்கிலும் இச்சொல் பைத்தியம் என்னும் பொருளில் பயன்படுத்தப்படும். இராம நாடகம் உயுத்த காண்டத்தில் (41) 'காமக் கோட்டியால் மனங்கூசினேன்' என இச் சொல் பைத்தியம் என்னும் கருத்தில் வந்துள்ளது. திருமணிமாலேயில் பைத்தியம் என்னும் பொருளில் கோட்டி என்னும் சொல், காமரந்தாக்கிய படலத்தில்

செய்திடுங் கோட்டிக் கேற்றத்
திறமிஃ தென்னத் தேறி (32)

என்றும்

திருத்துமிக் கோட்டி நீயே
தெரிந்திருக் கின்ற தென்கா (39)

என்றும்

அடர்ந்தவக் கோட்டி நீக்கற்
கரியதோ ருதவி வேண்டில் (41)

என்றும் ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்.

சகுந்தம் என்றால் பறவை. கம்பராமாயணம் 'சகுந்தங்கள் நீள நோக்கின' (சித்திரகூடப்படலம்: 43) எனக் குறிப்பிட்டுள்ளது. திருமணிமாலையில் இதே சொல் இதே கருத்தில்

நாற்றலை யிடத்தினின் மூன்று நாளிரை
யேற்றலை யின்றிய சகுந்த நான்கினை
யாற்றலை அரையொடுஞ் சேர்த்துக் கட்டினான்.
(நுமுறாது போர் புரிந்த படலம்: 25)

என ஆளப்பட்டுள்ளமையைக் காணலாம்.

வருகை என்பது சார்ச்சி என்பதன் பொருள். சேர்க்கை என்பது சேர்ச்சி என்பதன் பொருள். சார்ச்சி, சேர்ச்சி என்னும் இரண்டு சொற்களையும் ஒரு செய்யுளில் திருமணிமாலை ஆசிரியர் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

தேர்ச்சியிற் றுணைவர் மற்றுஞ் சேனையர் கத்தர் மன்னர்
சார்ச்சியி னுப்பண்வெவ்வேற் றலைவனு முளத்தின் மிக்கால்
நேர்ச்சியின் முகத்துச் கஞ்ச நிரையிடை நிலவு கான்று
சேர்ச்சியின் வந்த திங்க ளெனநபி திகழ்ந்து சொல்வார்.
(நுமுறாது அழிவு கண்ட படலம்: 3)

பெருங்கதையில் வரும் மகத காண்டத்திலும் இவ்விரண்டு சொற்களும் வந்துள்ளன. சார்ச்சி என்பது

அகவா தாகிய அறம்பெறற் சூழ்ச்சிச்
சகுனி கௌசிகன் சார்ச்சியை முன்னே. (26:47)

என்றும் சேர்ச்சி என்பது

ஓர்த்தனள் தேறி யுறுதிநோக் காது
சேர்ச்சியில் செய்கையொடு சிறைகொளப்பட்டு (24:47)

என்றும் பெருங்கதையில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

செட்டு என்பது வியாபாரம் என்று பொருள்படும் என்கிறது சந்திரசேகரப்புலவர் வெளியிட்ட யாழ்ப்பாணத்து மானிப்பாயகராதி. வியாபாரம் செய்வோர் செட்டர் எனப்படுவர். திருமணிமாலையில் வணிகர் என்னும் பொருளில் செட்டர் என்பது

இயலொடு மிவர்கண் மேவு
மெல்லையின் எமனென் றேதும்
உயர்நகர்ச் செட்டர் சாமுக்
குவப்பொடும் போதுங்காலை.

(பின்குடியை நன்குடியாக்கி ய படலம்: 72

எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

செல் என்பது இடி எனப் பொருள்படும். பரிபாடலில் 'வான் முழக்குச்செல்' என (13:44) செல் என்பது இடி என்னும் பொருளில் வந்துள்ளது. செல் என்பதற்கு மேகம் என்றும் ஆகாயம் என்றும் பொருள் கொள்ளலாம், திருமணிமாலையில் உள்ள ஒரு செய்யுளில் செல் என்பதோடு இடி என்பதும் சேர்ந்தே வந்துள்ளது. மேகத்தோடு கூடிய இடி முழக்கம் என்னும் பொருளில்

செல்லொடு மிடியெனக் சினக்கும் வண்மையான்

(நுமுறாது போர் புரிப்படலம்: 27)

எனச் செல் என்னும் சொல் திருமணிமாலையில் வந்துள்ளது.

சேகு என்பது மற்றொரு சொல். திருமணி மாலையில் சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது இச்சொல்.

சேகு என்றால் குற்றம் என்பது பொருள். நுமுறாது என்னும் கொடியவனை வருணிக்க முற்பட்ட சேகுனாப்புலவர் அவன் குற்றச் செயல்களுக்கே பிறப்பிடமாக வாழ்ந்தான் எனக் குறிப்பிட்டுள்ளார். குற்றமே பிறக்கக் காரணமாக இருந்தவன் நுமுறாது என்று விவரித்துள்ளார். குற்றம் கருக்கொண்டு பிறந்ததே அவனிடம் என்பதை

சேகது கருவொடுஞ் செனித்த தீயனே

(நுமுறாது போர் புரி படலம் : 44)

எனக் குறிப்பிட்டுள்ளார். குற்றம் நீக்கும் கரையினில் சேர்த்துவிடுவீர் என்று பொருள்பட

சேகறுங் கரையிடஞ் சேர்த்தி ரென்றனன்

(நுமுறாது போர் புரி படலம் : 59)

என்றும் குற்றமற்ற மாதவத்தை யுடைய செம்மணி என்று பொருள்பட
சேகறு மாதவ னென்னுஞ் செம்மணி

(கடிமணப்படலம் : 48)

என்றும் வந்துள்ளமை காண்க. கம்பராமாயணத்திலும் இச்சொல் இதே பொருளில் இங்ஙனம் வந்துள்ளது.

சேகறு மலருஞ் சாந்துஞ்
செருத்தொழில் வருத்தந் தீர்க்க
(மூலபலவதைப்படலம் : 233) (3465)

சேட்படுதல் என்பது எதிர்ப்படுதல் என்பதாகும். சேட்படுதல் என்பதிலிருந்து வந்த வினைச்சொல் சேட்பட்டார் என்பது, இந்த வினைச்சொல் திருமணிமாலையில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது :

நிறத்துடை நிலையா லன்பி னிலைப்பெறப் போற்று கென்றோர்
திறத்துரை சொற்றே னென்க வென்றுசேட் பட்டா ரன்றே.
(இசுமாயில் நபி வதுவை வேட்டு படலம்: 63)

சிறுமி கேமசரியும் அவள் தந்தையாகிய சுபத்திரனும் சீவகனை கேமமா புரத்தில் எதிர்பட்டனர் என்பதை சேட்பட்டானரோ என்ற சொல்லைப் பயன்படுத்திப் பாடி உள்ளார் திருத்தக்கதேவர் தமது சிந்தாமணி என்னும் பெருங்காப்பியத்தில். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மல்லிகை மணங்கமழ் மாலை வார்குழல்
சில்சுணங் கிளமுலைச் சிறுமி தந்தையும்
செல்வினைத் திருநகர்ச் சேட்பட் டானரோ
பல்கதிர் மணியொளி பரந்த பூணினன்.
(கேமசரியாரிலம்பகம்: 47 (1458)

துண்டம் மூக்கினைக் குறிக்கும். இக்கருத்திலே இச்சொல் திருமணி மாலையில்

கண்ணுண்டு துண்டமுண்டு காதுண்டு வாயுமுண்டு
(விழை வாடிய படலம்: 14)

இவ்வாறு வந்துள்ளது. கல்லாடத்திலும் மூக்கு என்னும் பொருளில் துண்டம் என்னும் சொல்

தோன்று நகையுடன் றுண்டமுஞ் சுட்டி (63:8)

என வந்துள்ளமையைக் காணலாம்.

துனி என்றால் துன்பம். துன்பத்துக்கு மாறுபட்டது. சேகுனப் புலவர் இச்சொல்லை

மனமுற் றிடுவாட் டமுமா தவளும்
துனிவுற் றிடுகா ரணமுட் டுயரின்
(புறப்பாட்டுப் படலம்: 58)

எனப் பயன்படுத்தி உள்ளார். தொல்காப்பியரும் தமது பொருளதி காரத்தில்

இனிதுறு கிளவியும் துனியுறு கிளவியும் (303)

என்பர். இங்கே துன்பத்தைக் குறிக்கவே துனி என்னும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளமையை காணலாம்.

தொத்து என்பது பூக்கள் நிறைந்த கொத்தினைக் குறிக்கும். கொப்பு என்றும் கூறுவர். இப்ருகீம் நபி அவர்களுடைய தாயாரை வருணிக்க வந்த சேகுனப்புலவர் அப்பெண்மணி அலங்காரம் செய்து கொண்ட விதத்தினை விவரித்துள்ளார். தேன் பாயும் பூக்கொத்துக் களைத் தமது கருமையான கூந்தலில் சூடிக்கொண்டார் என்பதையும் ஏனைய விவரங்களையும் இவ்வாறு ஒரு பாடலில் எடுத்துக்காட்டி உள் ளார் திருமணிமாலை ஆசிரியர் செய்கு அப்துல் காதிறு நயினார்ப்புலவர்.

தெள்ளு நறும்புனல் சீரொடு மாடி
வெள்ளை நறுந்துகில் மேன்மையிற் சூடிக்
கள்ளலர் தொத்துக் கருங்குழல் பெய்து
வள்ளை யருங்குழை வண்பணி யிட்டாள்

(புவனம் விளங்கிய படலம்: 25)

திருக்கோவையாரிலும் தில்லை மாநகரை வருணிக்க முற்பட்ட மாணிக்கவாசகர் மலர்கள் நிறைந்த கொத்துக்களைக் கொண்ட மரங் களைத் தன்னுள்ளடக்கிய சோலையை உடைய தில்லை என்பதனை

தொத்தின் மலர்ப்பொழிற் றில்லை (121)

என வருணித்துள்ளார் என்பது ஈண்டு நோக்கற்பாலது.

அடிமைப்பெண்ணை தொழும்பி என்பர். தொழும்பன் என்பதன் பெண்பாற் சொல்லே தொழும்பி என்பர். மெல்லிய இடையை உடைய அடிமைப் பெண் என்பதனை,

நுமக்க ரும்பணித் தொழும்பியாய் நூலென நுசுப்பின்

(நுமுறாதைக் கண்ணுற்ற படலம்: 48)

என வருணித்துள்ளார் சேகுனப்புலவர்.

பசும் என்பது பல கருத்துக்களை உடையது. பசும் என்னும் இச் சொல்லைக் குயில் பறவையைக் குறிக்க சேகுனப் புலவர் தமது திரு மணிமாலையில் பயன்படுத்தி உள்ளார். நாமதீப நிகண்டு (243) பசும் என்பதற்குக் குயில் எனப் பொருள் தந்துள்ளது. பூஞ்சோலையில் குயில் கள் நிறைந்திருந்தன என்பதனை

தண்பலா வரம்பையுந்
தண்பலா வுமாழையுஞ்
சண்பகஞ் சந்தான முங்
கண்பசுஞ் செறிந்தவே.

(சுவாலயமெறிந்த படலம்: 61)

என வருணித்துள்ளார்.

முஸ்லிம் மக்கள் தமது பேச்சு வழக்கில் பத்திரம், பாதுகாப்பு என்னும் பொருள்களில் பதனம் என்னுஞ் சொல்லை நாளாந்தம் பயன் படுத்துவர். ஒரு செய்தியை பத்திரமாக வைத்திருக்குமாறு கோரு வதைப் 'பதனமாய் வை' என்பர். சேகுனாப்புலவரும் இதே கருத்தில் இச்சொல்லை இவ்வாறு ஆண்டுள்ளார்.

பசைதர உன்னிடம் பதனத் தாக்குதி
(நபிஇபுருகீம் அவதாரப் படலம்: 14)

ஞானவாசிட்டத்திலும் இச்சொல் (சக்கி: 19) இடம் பெற்றுள்ளது.

தேனினையப் பிரசம் என்பர். நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில் வரும் பெரிய திருமொழியின் ஒன்பதாம் பத்தில் வரும் முந்துற என் னும் தலைப்பினை உடைய எட்டாம் திருமொழியில் அமைந்துள்ள ஐந் தாம் பாசுரத்தில்,

பிணங்கலில் நெடுவேய் துதிமுகம் கிழிப்பப்
பிரசம் வந்தி ழிதர பெருந்தேன்
மணங்கமழ் சாரல் மாலிருஞ் சோலை
வணங்குதும் வாமட நெஞ்சே.

என பிரசம் என்னும் சொல் தேனீ என்னும் பொருளில் வந்துள்ளது. சேகுனாப்புலவர் தமது திருமணிமாலையில் பிரசம் என்னும் சொல்லைத் தேனீ என்னும் பொருளில்

பிரச மொய்த் தவரும் வாகையந் தோளிற்
பெலத்துடைப் புன்மைய னுமுறா
துரிசையிற் றுயில்செய் காலையிற் கனவொன்
றுழவரக் கண்டெழுந் தனனே.

(புறப்பாட்டுப் படலம்: 1)

என ஆண்டுள்ளமை காண்க.

பொசித்த என்ருல் புசித்த அல்லது உட்கொண்ட என்பது பொருள். துமுறூது என்ற கொடுங்கோலனைக் குறிப்பிட முற்பட்ட சேகுனுப்புலவர் இவ்வாறு அவனை வருணித்துள்ளார்.

புண்டரிக நறும்பாகு வெறும்பாவி
குறும்பொடு பொசித்த கோளன்.

(நுமுறூது போர் புரி ப லம்: 5)

மாழை என்பது மாமரமாகும். சோலையில் உள்ள மரங்கள் பல வற்றைக் குறிப்பிட முற்பட்ட ஆசிரியர் மாழை என்றே மாமரத்தை ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தண்பலா வரம்பையுந்
தண்பலா வுமாழையுஞ்
சண்பகஞ் சந்தானமுங்
கண்பசுஞ் செறிந்தவே

(சுவாலயமெறிந்த படலம்: 61)

கம்பரும் மாமரத்தின் இளந்தளிர்கள் பிரகாசிப்பதைப் பற்றியும் மலைப் பக்கத்திலே உள்ள மற்றக் காட்சிகளைப் பற்றியும் இவ்வாறு வருணித் துப்பாடிள்ளார் ஒரு பாடலில்.

ஈனு மாழை யிளந்தளி ரேயொளி
ஈனு மாழையிளந்தளி ரேயிடை
மானும் வேழமு நாகமு மாதர்தோள்
மானும் வேழமு நாதமு மாடெலாம்.

(வரை காட்சிப் படலம்: 55)

வள்ளூரம் என்பது பசுந்தசையாகும். இச்சொல்லினை இதே கருத் தில் சேகுனுப்புலவர் தமது திருமணிமாலை என்னும் காப்பியத்தில் இவ் வாறு ஆண்டுள்ளார்.

வாயிடந் தீண்டிடா நான்ற வள்ளூரம்
தீயிடங் கொண்டிடும் குடிஞை

(நுமுறூது போர் புரி படலம்: 26)

வேகமான குதிரையையும் பயங்கரமான மலை போன்ற யானையையும் என்று குறிப்பிட வந்த ஆசிரியர் பயங்கரமானது என்பதைக் குறிக்க விகட என்னும் அடைச்சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

வேகவெம்பரி விகடவே தண்டவெங் கரியும்

(நுமுறூது கனவு கண்ட படலம்: 32)

மற்றோர் இடத்தில் அதே கருத்தில் பயங்கரமான பகை என்பதனைச் சுட்ட

விகட வெம்பகை நீக்குதி ரெனவிடை யளித்தான்.

(நுமுறூது கனவு கண்ட படலம்: 39)

என இச்சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

விரிச்சிகன் என்பது மற்றொரு சொல். சூரியன் என்பது இதன் பொருள். சூரியன் அதன் கதிர்களைப் பொலிந்தமை பற்றிக் குறிப்பிட முற்பட்ட ஆசிரியர் விரிச்சிகன் என்னும் சொல்லை

வண்ணமுகத்தின் விரிச்சிகனிற் கதிர்
வன்னியினிற் பொரிய

(இறந்தவரெழுந்துயர் படலம்: 58)

இதே கருத்தில் இச்சொல் ஞானமிர்தத்தில்

வென்றி விரிச்சிகன் விரிகதிர் (56:36)

என வந்துள்ளது.

முன்னைய காப்பியங்களில் சுட்டிக்காட்டப்பட்ட வினைமுற்றுக்களை திருமணிமாலையிலும் காணலாம். பொதுவாகப் பெயரெச்சமாக வழங்கப்படுவன முஸ்லிம் மக்களின் பெருவழக்கில் வினை முற்றாகப் பயன்படுத்தப்படுவதுண்டு. பொலிந்த என்னும் பெயரெச்சம் வினை முற்றாக இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ளது.

புரிந்த நாயகன் கருணையார் தகுதியும் பொலிந்த

(சிறையிடு படலம்: 2)

மற்றொரு பாடலில் செய்த என்னும் பெயரெச்சம் வினைமுற்றாக அமைந்திருப்பதைக் காணலாம். இங்கே உயர்திணைப் பலர் பாலுக்குரிய வினைமுற்றாய்ச் செய்த என்னும் பெயரெச்சம் இடம் பெற்றுள்ளது. இச்சொல் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

அல்லலோடு மொரூஉ நிலை யாயின அவன்சொல்
சொல்லு மாந்தரு மஃதுமே உவப்பொடுஞ் செய்த.

(சுவாலயமெறிந்த படலம்: 9)

## ஏனைய சிறப்பியல்புகள்

தமிழ்நாட்டு மரபுக்கியைய சிறப்பு நிகழ்ச்சிகள் பறைசாற்றுவதன் மூலம் அறிவிக்கப்பட்டன. முரசு அறைவோர் தமிழ்நாட்டில் வள்ளுவர் என்று அழைக்கப்பட்டனர். அதே வள்ளுவர் அறபு நாட்டில் அதே அறிவிப்பை பறை சாற்றினர் என்று இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. நுமுறூதின் கட்டளைகள் வள்ளுவர் மூலம் பறைசாற்றப்பட்டன என்று சேகுனப்புலவர் திருமணிமாலையில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

வெஞ்சின மதத்த மன்னன் வீரருக் கறிக்கை செய்வான்
குஞ்சரத் தெடுத்த பேரிக் குணில் கொளப் பணித்த லோடும்
வஞ்சகத் தெழுந்த சிந்தை வள்ளுவர் தெருக்க டோறு
மஞ்சிடித் தார்த்த தென்ன மலிதர முழக்கி ஞரால்.

(நுமுறூது அழிவுண்ட படலம்: 9)

பெண்களை எப்பொழுதும் ஏழு பருவங்களாகப் பிரித்து வருணிப்பது கவிஞர் மரபு. பெரும்பாலும் திருமண ஊர்வலங்களை வருணிக்கும்பொழுது அத்திருமண ஊர்வலங்களைப் பார்க்க வந்த பெண்களை ஏழு பருவங்களாகப் பிரித்து விவரிப்பர். இலக்கிய மரபுக்கியைய அவ் வேழு பருவங்களும் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. சேகுனப் புலவரும் தமது திருமணிமாலையில் இவ்வேழு பருவங்களையும் கவி நயத்தோடு வருணித் துள்ளார். (கடிமணப்படலம்: 63—69)

சித்திர கவிகள் பாடுவதில் வல்லமை மிக்கவர் சேகுனப்புலவர் அவர்கள். அவர் தம் சித்திரக்கவிகள் பல, பலபாடற்றிரட்டில் இடம் பெற்றுள்ளன. திருமணி மாலையில் இடம் பெற்றுள்ளது மாலை மாற்று என்னும் ஒரு பாடல். இது ஒரு மிறைக்கவி வகை. இத்தகைய ஒரு கவியில் உள்ள எழுத்துக்களை ஈறுமுதலாகப் படிக்குமிடத்தும் முதலி லிருந்து ஈறுவரை படிப்பது போன்று பாட்டு மாறுமல் இருக்கும் கவி வகையே மாலை மாற்று எனப்படும். இத்தகைய செய்யுளின் கருத்து உடனடியாகப் பொருள் கொள்வது சிரமமாகும். சேகுனப்புலவர் தமது மாலை மாற்றுச் செய்யுளை மந்திரப் படலத்தில் அமைத்துள்ளார். இரகசியமாக அரச ஆலோசனை நடத்துவதையே மந்திரப் படலம் விவரிக்கிறது. நுமுறூது மன்னனின் அரச அவைக்குள் சாத்தான் என்னும் செய்த்தான் (இப்லீசு) நுழைகின்முன். நுழைந்து ஆலோசனை வழங்க முற்பட்டான். பெரும்பாலும் அவனுடைய ஆலோசனை தீய வையாகவே இருக்கும். அவ்வாலோசனை புதிர் மிகுந்ததாகவே இருக்கும். எனவே தான் சேகுனப்புலவரும் செய்த்தானின் ஆலோசு

சனையைப் புதிராகவே அமைத்துள்ளார். அவன் முன் வைத்த ஆலோசனையையே மாலை மாற்றுக் கவிதையாக புலவர் நாயகம் தமது திருமணிமாலையில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

வாத வாகன வாலவ காதவா
மாத ராவல மானத போதவா
வாத போதன மாலவ ராதமா
வாத காவல வானக வாதவா

(மந்திரப் படலம்: 13)

பட்டி என்பது சங்க கால இலக்கியத்தில் காவலில்லாதவனைக் குறிக்கும். கீழ்மகன், தீயவன் என்ற பொருளிலும் அச்சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. 'நோதக்க செய்யுஞ் சிறுபட்டி' என்கின்றது கலித்தொகை (51). சிறுபட்டி என்பதற்கு சிறியவனாகிய காவலில்லா தவன் என்று உரை வகுப்பர் நச்சினார்க்கினியர்.

அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ் (கயமை: 4) (1074)

என்கின்றது திருக்குறள். அகப்பட்டி என்பது அகமாகிய பட்டி. கட்டுப்பாடு எதுவுமின்றி பட்டி போன்று ஒழுகியவன் பட்டி எனப்பட்டான். பயிர் அழிக்கும் பட்டி மாட்டினை ஒத்தவனைப் பட்டி என்பர். மனையுள் வாழும் பட்டி மாடு போன்றவனையே பட்டி என்பாரும் உளர்.

சாத்தான் என்னும் செய்த்தானைக் குறிப்பிட இச்சொல் போதுவ தன்று என்று கொண்டுள்ளார் சேகுனா புலவர். செய்த்தான் என்றும் இப்லீசு என்றும் அழைக்கப்படும் அவனின் கீழான தன்மையைக் குறிப்பிட முஸ்லிம் மக்கள் தம் பேச்சு வழக்கில் கீழானவன் ஒருவனைக் குறிக்கப் பயன்படுத்தும் ஒரு சொல்லை உபயோகித்துள்ளார். படுவா என்பதே அந்தச் சொல் படவா என்றும் பயன்படுத்துப்படுவதுண்டு. போக்கிரி என்னும் பொருளில் உறுது மொழியில் பயன்படுத்தப்படும் பர்வா (Barwa) என்னும் சொல்லிலிருந்தே இச்சொல் பிறந்துள்ளது. இத்தகைய படுவா என்னும் சொல்லையே சேகுனாப்புலவர் தமது திருமணிமாலையில் இப்லீசைக் குறிக்கப் பயன்படுததி உள்ளார். படுவா என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ள பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

மன்னிநின் றமு தாதையை மனநிலை பிசகப்
பன்னிநின் றதா லப்பதி யிழந்தனை படுவா
முன்னி னின்றிவ ணெத்தொழில் முயற்சியே கொண்டாய்
என்னி னின்றிடா தேகென உறுக்கினர் இறசூல்.

(இசுமாயில் நபியைக் குறுபான் செய்த படலம்: 68)

**திருத்தம்**

மகதூ முகம்மதுப் புலவரின் பதிப்பான திருமணிமாலையில் தலைப்பு இடம் பெற்றுள்ள அட்டைப்பக்கத்தில் 'நபி இபுருகீம் கலீலுல்லாஹ் அவர்களுடைய இயற்கையுஞ் செயற்கையுமாகிய திருமணி மாலை' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்கிணங்க இக்காப்பியம் இரண்டு காண்டங்களைக் கொண்டதாக அமைந்திருத்தல் வேண்டும். ஆனால் பதிப்பாசிரியர் 'முதலாவது செயற்கையங்காண்டம்' என ஆரம்பித்துள்ளார். முழு காப்பியத்தையுமே செயற்கையங்காண்டம் எனக் கொண்டுள்ளார். ஆனால் இக்காப்பியத்தின் முதற் பாகம் இயற்கையங்காண்டமாகவும் பிற்பகுதி செயற்கையங்காண்டமாகவும் இருந்திருத்தல் வேண்டும். ஆக முப்பத்தொரு படலங்களைக் கொண்ட திருமணிமாலை இரண்டு காண்டங்களாக அமைந்திருத்தல் வேண்டும். கடவுள் வாழ்த்துப் படலம் முதல் இறந்தவரெழுந்துயர் படலம் வரை உள்ள முற்பகுதி இயற்கையங் காண்டமாக இருந்திருத்தல் வேண்டும். இப்பகுதியில் இயற்கையாகவே நிகழ்ந்த சம்பவங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. சிறை மீட்டுப் படலம் முதல் இப்ருகீம் நபி அவர்களின் ஆற்றல்களும் சாதனைகளும் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. இப்பகுதி செயற்கையங் காண்டமாக அமையக் கூடியதாக உள்ளது. சிறைமீட்டுப் படலத்தின் முதலாஞ் செய்யுளில் 'செயற்கை விளக்க உரைக்குதுமே' என ஆரம்பிப்பதிலிருந்து இப் படலமே திருமணிமாலையின் பிற்பகுதியின் ஆரம்பம் என கூறலாம் இப்படலத்திலிருந்து இப்ருகீம் நபி அவர்கள் நிகழ்த்திய ஈடிணையற்ற சம்பவங்கள் விவரிக்கப்படுள்ளன. இனி, சிறை மீட்டுப் படலத்தின் முதலாஞ் செய்யுளைப் பார்ப்போம்.

வானுடுறைவோர் நிதம்பரவும் வரிசைநயினார்
கொடுஞ்சிறையிற்
றேனாமுத முண்டுவந்து செவ்விமகுமூ தொளிவதனற்
கானார்புயத்து மறக்கயவன் கருத்துட்டிகைப்ப
வன்னையினற்
றீனேருடனே வெளிமீண்ட செயற்கை விளக்க வுரைக்குதுமே.

இப்படலம் இக்காப்பியத்தின் இரண்டாம் காண்டமான செயற்கையங் காண்டத்தில் ஆரம்பம் என்று கொள்ளலாம் அல்லவா?

படலங்கள் அமைந்துள்ள முறையிலும் இவ்விளக்கக் குறிப்புக்கள் இன்றியமையாதனவாகின்றன. நபி இபுருகீம் அவதரித்த படலத்தின் முதலாம் செய்யுள்.

காரண நபியொளி கதிர்செய் மேன்மையிற்
சீரணி புகழிபு ருகிஞ் செம்மலார்
வாரண மணியென வரிசை மிக்கொடுந்
தாரணி யிடத்தவ தரித்த தோதுவாம்.

என அமைந்து இபுருகீம் நபி அவர்களின் பிறப்பைக் கூறுவதெனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நபி இபுருகீம் அவர்களின் பிறப்பு இப்படலத்தில் விவரிக்கப்படவில்லை. தனக்குப் பாதகமாக ஒரு குழவி தோன்றப் போவதாக அறிந்து பெண்களுடைய 'கருக்களெல்லாம் பிளத்தழித்திடு திரென்றுன் நிந்தையே பிறந்த வன்பன்' கொடுங்கோலன் நுமுறூது இவ்வுத்தரவு நிறைவேற்றப்பட்டது என்பதுடன் இப்படலம் முடிவடைகிறது. இபுருகீம் நபி அவர்களின் பிறப்பு அடுத்த படலமான புவனம் விளக்கிய படலத்திலே விவரிக்கப்பட்டுள்ளது. இவ்விவரம் இப்படலத்தில் உள்ள முதலாம் செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

சிறந்த மேம்புகழ் நளினமா மணியெனத் திகழு
நிறைந்த காரண நபியிபு ருகிமிந் நிலத்தில்
அறிந்த வல்லவன் கருணையா லழுக்கறு நெறியில்
பிறந்த சீர்மைக ளினிதொடும் பிரித்தெடுத் திசைப்பாம்

'பிரித்தெடுத்திசைப்பாம்' என்பதிலிருந்து இபுருகீம் நபி அவர்களின் பிறப்பை நபி இபுருகீம் அவதாரப் படலத்திலிருந்து பிரித்து எடுத்து உரைத்துள்ளார் சேகுனுப்புலவர்.

திருமணிமாலையின் பாட்டுடைத் தலைவரான இபுருகீம் நபி அவர்களின் பரம விரோதியான கொடுங்கோலனின் பெயர் நமுறூது என்றும் நுமுறூது என்றும் பதிப்பித்து அச்சியற்றும் பொழுது ஏற்பட்டிருக்கலாம். 'நமுறூதை நுமுறூது என்றும் சொல்லுமாம்' என்ற அடிக்குறிப்பிலிருந்து இது புலப்படுகின்றது.

திருமணிமாலையில் உள்ள இருபதாம் படலம் 'காமாத்தாக்கிய படலம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. காமாத்தாக்கிய படலம் என்பதில் உள்ள காமா என்னுஞ் சொல் கருத்தற்றதொன்றாக உள்ளது. காமா என்பதற்கான கருத்துப் புலப்படவில்லை. பதிப்பிக்கும் பொழுது ஏற்பட்ட பிழையாக இது இருக்கலாம். ஏனெனில் இப்படலத்தில் உள்ள ஒரு படலத்தில் 'காமரம்' என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

நன்னிலை யுணராப் பாவி நண்ணிய சிந்தை யுற்றப்
புன்னிலை யென்ன மாசிற் பொதிகளுந் தாதி ஞுக்குங்
கொன்னிலை காம ரத்தில் கொழுந்தழ னிரைத்து முன்னர்
சொன்னிலை யென்ன வைத்தார் அவருளஞ் சுடுதற் கன்றே
(57)

**காமரம்** என்னும் சொல்லுக்கு பல பொருள் உண்டு. திவாகர நிகண்டு **காமரம்** என்னும் சொல்லின் பொருள் அடுப்பு என்கின்றது. எனவே இங்கே அடுப்பு என்னும் பொருளில் வந்த காமரம் என்னும் சொல்லே பொருத்தமானது. காமா என்பதன்று. ஆக, 'காமாத்தாக்கிய படலம்' என்பது 'காமரத்தாக்கிய படலம்' என்றிருத்தல் வேண்டும். இங்ஙனம் திருத்த வேண்டிய இடங்கள் சில திருமணிமாலையில் இருக்கக் காணலாம்,

# பத்தாம் இயல்

## இறவுசுல்கூல் படைப்போர்

படைப்போர் என்பது ஒரு புதிய இலக்கியப் பிரபந்தம். இஸ்லாமிய அடிப்படையிலே தோன்றிய தமிழ் இலக்கியத்தில் சிறப்பிடத்தைப் பெறும் ஒருவகைப் பிரபந்தம். முஸ்லிம் மக்களிடையே பெரு வழக்கினைப் பெற்றுள்ளது. இத்தகைய பிரபந்தம். முஸ்லிம் மக்களால் தமிழ் இலக்கியத்தில் புகுத்தப்பட்ட இஸ்லாமிய பிரபந்த வகைகளுள் ஒன்று. ஏனைய முஸ்லிம் பிரபந்தங்கள் அறபு, பார்சி சொற்களால் வழங்கப்படும் பொழுது இப்பிரபந்தம் மாத்திரம் தமிழ்ச் சொற்றொடர் ஒன்றினால் அழைக்கப்படுகின்றது. ஆங்கில இலக்கியத்திலே பல்லாட் (ballad) என்னும் ஒருவகைப் பிரபந்தமுண்டு. அந்த பல்லாட் பிரபந்த வகையிலே ஒரு சிறப்புப் பிரிவாகப் போர்களைப்பற்றி வருணிக்கும் வார் பல்லாட் (War ballad) என்பதைக் குறிப்பிடலாம். ஆங்கில இலக்கியத்திலே காணப்படும் வார் பல்லாட் என்னும் பிரபந்த வகைக்குச் சமமானது இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய படைப் போர் பிரபந்தம் எனக் கொள்ளலாம்.

படைப்போர் என்னும் தமிழ்ச் சொற்றொடர் படை+போர் என இரு சொற்களாலாயது. படை என்றால் சேனை என்றும் போர் என்றால் யுத்தம் என்றும் விளக்கலாம். ஆனால் இவ்வாறு கருத்துக் கொள்ளின் படை என்பதும் போர் என்பதும் ஏறத்தாழ ஒரே கருத்தினைக் கொண்டவை போல் தோன்றுகிறது எனவே படைப்போர் என்பதை வேறு ஒரு கோணத்திலிருந்து பார்த்தல் அவசியமாகின்றது. அப்படியாயின் படைப்போர் என்றால் அச்சொற்றொடர் சுட்டும் பொருள் யாது என்னும் கேள்வி எழுகின்றது.

படைப்போர் என்பது ஒரு வினைத்தொகை. படைத்த போர், படைக்கின்ற போர் படைக்கும் போர் என முக்காலத்தையும் குறிக்கக் கூடியதாக அமைந்திருப்பதைக் காணலாம். படைப்போர் நூல்களுக்கு இடப்பட்டுள்ள பெயர்களைப் பொறுத்தவரையில் படைப்போர் என்பதை வினைத்தொகையாகக் கொள்வது பொருத்தமானதாகத் தோன்றுகிறது. படைப்போர் நூல்கள் எல்லாம் இஸ்லாத்துக்கும் இஸ்லாம் அல்லாத தன்மைக்கும் இடையே நிகழ்ந்த போர்களையே வருணிக்கின்றன. அத்தகைய படைப்போர் நூல்கள் அனைத்தும் இஸ்லாத்துக்கு எதிராகப் போரிட்ட முஸ்லிம் அல்லாதாரின் பெயர்களாலேயே அழைக்கப்பட்டுள்ளன. படைப்போர் நூல்களிலே விவரிக்கப்பட்டுள்ள

எல்லாப் போர்களும் எதிரிகளால் ஆரம்பிக்கப்பட்டவை என்று தொனிக்கும் பொருட்டே படைப்போர்கள் அனைத்தும் இஸ்லாத்தின் எதிரிகளின் பெயர்களைக் கொண்டு அழைக்கப்படுகின்றன. இஸ்லாம் ஈடுபட்ட போர்கள் அனைத்துமே தற்காப்புப் போர்களே என்பதும் போர்கள் எல்லாம் எதிரிகளால் ஆரம்பிக்கப்பட்டவையே - படைக்கப் பட்டவையே என்பதும் படைப்போர்கள் அவ்வாறு பெயர் பெற்றமைக் குரிய காரணமாகும். இது மறுக்க முடியாத உண்மையாகும்.

**நூலின் பெயர்**

இந்த இயலில் ஆராயப்படுவது அத்தகைய படைப்போர் நூல் களில் ஒன்றாகும். இந்தப் படைப்போர் ஏனைய படைப்போர் நூல்களி லிருந்து வேறுபட்டது. இந்தப் படைப்போர் நூலிலே காப்பிய இலக் கணங்கள் அனைத்தும் ஒருங்கே அமைந்துள்ளன. இந்தப் படைப்போர் இரண்டு பெயர்களால் அழைக்கப்படுகின்றது,' ஒன்று சல்காப் படைப் போர் என்பது. மற்றது இறவுசுல்கூல் படைப்போர் என்பது. இக் காப்பியத்தின் முகப்புப் பக்கத்தில் இஃது எல்லா உலகங்களையும் உயிர் களையும் படைத்தாளுகின்ற வல்ல நாயகனை அல்லாகுத்த ஆலாவின் உண்மைத் தூதராகிய முகம்மது நபி சல்லல்லாகு அலைகி வசல்லமவர் களுடைய இயற்கையுஞ் செயற்கையுமாகிய காரண வதிஜய திட்டாந் தர புதுமையை அறிந்தீமான் கொண்டிசுலாத்திலான கற்பு நாயகி சல்கா வென்னும் பெயரைக் கொண்டலோக தாய் அமர் செய்து வெற்றியடைந்த சல்காப் படைபோர் என்று வழங்கா நின்ற இறவுசுல்கூல் படைப்போர்'-என இக்காப்பியத்திற்கான இரண்டு பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஒரு பெண்ணின் பெயரால் அழைக்கப்படும் முதற் காப்பியம் இதுவாகும். இக்காப்பியத்தில் அரும்பெருஞ் செயல்கள் புரிந்த சல்கா அம்மையின் சிறப்பைக் கருதி அவர் பெயரால் இக்காப்பியம் சல்கா படைப்போர் என அழைக்கப் பட்டிருக்கலாம். சல்கா அம்மையார் கூட முதலில் இஸ்லாத்தை எதிர்த்துப் பின்னர் இஸ்லாத்தைத் தழுவி இறவுசுல்கூலை எதிர்த்தமை யால் சல்காவினால் படைக்கப்பட்ட போர் எனக் கொண்டு இக்காப்பி யம் முதலில் சல்கா படைப்போர் எனப் பெயர் பெற்றிருக்கலாம். ஆனால் சல்கா அம்மையார் இஸ்லாத்தைத் தழுவிய பின்னர் அப்பெயர் பொருத்தமில்லாதிருப்பதை உணர்ந்திருக்கலாம். ஆகையினால் அப் பெயரைக் குறிப்பாகவும் இஸ்லாத்தின் பரம விரோதியாகப் போரிட்டு மறைந்த இறவுசுல்கூலின் பெயரால் வெளிப்படையாகவும் அழைத்தி ருக்கலாம். சல்கா படைப்போர் என்பதற்கு முக்கியத்துவம் அளிக்கப் பட்டால் அடிப்படைக் கொள்கையான இஸ்லாத்தின் பரம விரோதி யின் பெயரால் படைப்போர் நூலுக்குப் பெயரிடும் கொள்கைக்கு முர ணாக அமைந்திருக்கலாம். எனவே தான் இக்காப்பியத்துக்கு இறவு

சுல்கூல் படைப்போர் எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது. பெரும்பாலும் படைப்போரில் எவன் பெயரால் அழைக்கப்படுகின்றதோ அவன் போரில் மடிந்து விடுவதாகப் படைப்போர் விவரிக்கிறது. சல்கா அம்மையார் போரில் மடிந்திருந்தால் சல்கா படைப்போர் பொருத்த மானதாயிருக்கும் என ஆசிரியர் கருதியிருந்தார் போலும். ஆதலினுல் இஸ்லாத்தை எதிர்த்துப் போரிட்டு மறைந்த இறவுசுல்கூலின் பெய ரால் இக்காப்பியத்துக்கு இறவுசுல்கூல் படைப்போர் பொருத்தமானது என்று ஆசிரியர் கருதியிருக்கலாம். இதன் மூலம் பிரதானமாக ஓர் இஸ்லாமியத் தமிழ்க் கவி மரபும் பேணப்பட்டிருப்பதையும் நாம் காண் கிரேம்.

### காப்புச் செய்யுள்

இறவுசுல்கூல் படைப்போரில் இரண்டு காப்புச் செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. இரண்டாவது செய்யுளில் முஸ்லிம் அல்லாதவராய் இருந்து முஸ்லிம் அல்லாதவருடன் போர் புரிந்து பின்னர் முகம்மது நபி (சல்) அவர்களேப் பணிந்து இஸ்லாத்தைத் தழுவினர் என்னும் சரிதையையே தாம் இக்காப்பியத்தில் கூறப் போவதாகக் குறிப்பிட் டுள்ளார். இந்தக் குறிப்பைப் பார்க்கும்பொழுதும் இறவுசுல்கூல் படைப்போர் எவ்வாறு பொருத்தமாக இருக்கிறதோ அவ்வாறே சல்கா படைப்போர் என்பதுவும் இக்காப்பியத்திற்குப் பொருத்தமான பெய ராக அமைந்துள்ளது எனலாம்.

### ஆசிரியர் :

இறவுசுல்கூல் படைப்போர் குஞ்ஞமூசு லெப்பை காஜி ஆலிம் புல வரால் இயற்றப்பட்டது. இவர் செய்யிது முகம்மது என்பவரின் புதல் வர். கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியவர். அறபு அறிஞர் எனப் பொருள்படும் ஆலிம் என்னும் பட்டம் பெற்றவர். எனவே அரபு மொழியில் வல்லவராகத் திகழ்ந்தவர். தந்தையோடு போர் புரிந்த செய்யிதத்து என்பாரின் சரிதையான செய்யிதத்துப் படைப்போர் என்னும் நூலே இயற்றியவர். பூவாறு என வழங்கப்பட்ட குழந்தை நகரைச் சேர்ந்தவர். இவருக்கு இருந்த மலேயாளத் தொடர்பினுலே இவருடைய பேரில் உள்ள குஞ்ஞு என்பது பெறப்பட்டிருத்தல் வேண்டும்.

சென்னேப் பல்கலேக்கழகம் வெளியிட்ட தமிழ்-ஆங்கில (Tamil Lexicon) அகராதியில் குஞ்ஞு என்னும் மலேயாளச் சொல்லிலிருந்தே குஞ்சு என்னும் தமிழ்ச் சொல் பெறப்பட்டுள்ளது எனக் குறிப்பிடப்பட் டுள்ளது. கடவுள் வாழ்த்தில் உள்ள 34, 35, 39 என்னும் செய்யுட் களில் ஆசிரியர் பற்றிய சிறுசிறு குறிப்புக்கள் வந்துள்ளன.

**காப்பிய அமைப்பு**

இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியத்திலே முகப்பு அட்டையிலே இரண்டு காப்புச் செய்யுட்கள் இடம்பெற்றுள்ளன. கடவுள் வாழ்த்தில் இடம்பெறத் தவறிய இரண்டு செய்யுட்கள் நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளன. இந்நூலியற்றப்பட்ட நாளினை இவ்விரண்டு செய்யுட்களும் கொண்டிருக்கின்றன. இக்காப்பியத்தில் 45 படலங்கள் இடம்பெற்றுள்ளன. எல்லாம் சேர்த்து இக்காப்பியத்தில் 2383 திருவிருத்தங்கள் அமைந்துள்ளன. ஒரு படலத்தில் உள்ள ஆகக் குறைந்த எண்ணிக்கை 10 செய்யுடகளாகும். ஆகக் கூடிய எண்ணிக்கை 189 செய்யுட்களாகும் கடவுள் வாழ்த்து நாட்டு நகர வருணனையைத் தொடர்ந்து வாழ்க்கை வரலாறு கூறும் ஏனைய காப்பியங்களில் உள்ளது போன்று மூதாதையர் பற்றிய படலம் இக்காப்பியத்தில் இல்லை. சீருப்புராணத்தில் தலைமுறைப்படலம் உள்ளது காப்பியத்தில் தாம் கூறவந்த வரலாற்றுடன் தொடர்புடைய போர் நிகழ்ச்சியைக் கூற ஆசிரியர் முற்பட்டுள்ளார். அதனாலேயே முதியாள் படலத்துடன் சரிதை ஆரம்பமாகின்றது. இறவுசுல்கூலின் (மகாரிக்) கொடுமையை விவரித்துப் பின்னர் கூறப்படும் போருக்குக் களம் அமைப்பதாக விளங்குகிறது முதியாள் படலம். அடுத்து சரிதை விறுவிறுப்பாய்த் தோன்ற செய்யுட்கள் அமைந்துள்ளன.

**காப்புச் செய்யுட்கள்**

இக்காப்பிய ஆசிரியர் அறபு அறிஞர் ஆதலால் காப்புச் செய்யுளை அழகாக ஆரம்பித்துள்ளார். அல்குர்ஆனின் நுழைவாயிலாகவும் பொழிப்பாகவும் அமைந்துள்ள முதல் அத்தியாயமான சூறத்துல் பாத்திஹாவின் தொடக்கமாயுள்ள திருவசனத்தின் பொழிப்புரையை அடிப்படையாக வைத்து முதலாவது காப்புச் செய்யுள் அமைந்துள்ளது. அல்குர்ஆன் பாத்திஹா சூருவின் முதலாவது திருவசனத்துக்குத் தமிழில் இவ்வாறு கருத்துக் கூறலாம்.

> ''எல்லாப் புகழும் அல்லாஹ் வுக்கே
> (அவன்) அகிலங்கள் அனைத்தையும்
> படைத்துப் போஷித்துப் பரி
> பக்குவப்படுத்து வோன்'' (1 :1)

இக்கருத்துக்கள் இறவுசூல் படைப்போரில் உள்ள முதலாவது காப்புச் செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

> எல்லாத் துதியும் புகழ்எவ் வகையும்
> நல்லாலம னைத்துந டாத்தியருள்
> அல்லாவொரு வற்சுவை யாகுமெனுஞ்
> சொல்லானது கொண்டுதொ டங்குதுமால்

அடுத்த காப்புச் செய்யுளில் பாதிஹா சூருவின் இரண்டாவது திரு வசனத்தில் பொதிந்துள்ள கருத்தினையும் விரிவுபடுத்தி விளக்கிச் சிறப்பாக அதனை அமைத்துத் தந்துள்ளார். தன்னை வழிபடுபவர் வழிபடாதவர் அனைவருக்கும் ஒன்று போல் கிருபை செய்பவன் அல்லாஹ். இது இம்மையில் நடைபெறுவதாகும். ஆனால் மறுமையில் தன்னை வழிபட்டவர்க்கு மிகுதியாகக் கிருபை செய்பவன் அல்லாஹ். அத்தகையோருடைய மனக்கவலையைத் தீர்ப்பவன் அவன். எனவே அத்தகையோனுடைய பெயரைக் கொண்டு ஆரம்பித்துள்ளார் ஆசிரியர். தமது தந்தையும் தந்தையைச் சார்ந்தவர்களும் பின்பற்றி வந்த இஸ்லாம் அல்லாத தன்மையைக் (குபிர்) கடிந்தவள் சல்கா. அவர்களைப் போரில் வென்றவர் சல்கா. வென்று இஸ்லாத்தைத் தழுவியவர் சல்கா. நபிகள் நாயகம் (சல்) அவர்களைப் பணிந்து இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர் சல்கா. அத்தகைய சிறப்புமிக்க சல்காவின் சரிதையை அல்லாஹ்வின் பெயரை முதலில் சாற்றி ஆரம்பித்துள்ளார் ஆசிரியர் குஞ்சு மூசுப் புலவர். இக்கருத்துக்களே இரண்டாவது காப்புச் செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

தனக்குவழிப் பட்டவர்க்கும் வழிப்படாத
சட்சமயத்தவர்களுக்கு மொன்றுபோலக்
கனக்கவிரை கடலுலகிற் கிருபை செய்தேர்
கருதிவிழிப் பட்டவர்க்கா கிறத்தி னன்பாய்
மனக்கவலை தீர்த்துமிகு கிருபை செய்யும்
வல்லனசு மாவதனுற் றொடங்கித் தந்தை
இனக்குபிரர்க் கடிந்துசல்கா பொருதுவென்றெம்
மிறசூலைப் பணிசரித மியம்புவாமே.

உலகத்தவர் அனைவருக்கும் அன்பும் இறுதி நாளில் முஸ்லிம்களுக்கு மாத்திரம் அருளும் பாலிப்பவன் அல்லாஹ் எனப் பொருள்படும். சூறத்துல் பாத்திஹாவின் இரண்டாம் திருவசனத்தில் பொதிந்துள்ள கருத்துக்களை இரண்டாம் காப்புச் செய்யுளில் அமைத்துள்ளார் ஆசிரியர். சூரத்துல் பாத்திஹாவின் இரண்டாவது திருவசனம் தமிழில் இவ்வாறு பொருள்படும் எனலாம்.

அளவற்ற அருளாளன்: நிகரற்ற அன்புடையோன்: (1 : 2)

அல்ஹம்துசூரு என்னும் பாத்திஹா சூருவில் இவ்விரு திருவசனங்களும் அறபு மொழியில் இவ்வாறு அமைந்துள்ளன :

''அல்ஹம்து வில்லாஹி றப்பில் ஆலமீன்
அர்றஹ் மானிர் றஹீம்'' (1 : 1-2)

**அவையடக்கம்**

தாம் அறிவில் குன்றியவன் என்றும் தாம் இயற்றியுள்ள இக் கவிதை அறிஞர் பெருமக்கள் முன்னிலையில்பாடியிருக்கக் கூடாது என்று தனக்குப் புலப்படுகிறது என்றும் கூறுமாப் போல் இக்கருத்துக்கள் தொனிக்க ஆசிரியர் அவையடக்கம் கூறியுள்ளார். அறிஞர் முன் தாம் சொல்லும் பயனற்ற இச்சொற்கள் சந்திரன் முன்னிலையில் நட்சத்திரங் கள் பிரகாசிக்க முயற்சிப்பது போன்றதாகும். கடலிலே ஒரு சிற் றெறும்பு சேர்வது போன்றதாகும். யானையின் முன்னிலையில் தவழ் கின்ற ஆட்டுக்குட்டி போல்வதாகும். இவ்வாறு ஒரு செய்யுளில் உவமை கள் அமைத்து அவையடக்கம் கூறியுள்ளார் ஆசிரியர்

இந்தினெதி ராயுடு விளங்குவது போலும்
சிந்தினெதி ராயுறவி சேருவது போலும்
தந்தியத னின்னெதிர் தவழ்த்தகர்கள் போலும்
புந்தியறி வின்புலவர் முன்புகலு மென்சொல்

**(கடவுள் வாழ்த்து : 36)**

தாம் சிற்றறிவுடையவர் என்றும் தாம் இயற்றிய இக்கவிதை கல்வி கேள்விகளிற் சிறந்த அறிஞருடைய காதுகளில் புகுவது நிச்சயம் போய் மீண்டும் வரும் பொழுது அது எப்படி இருக்குமெனின் உப்புத் தன்மை பெருந்திய நீரை முகந்து மேலே செல்லப்பட்டுப் புயலாக மழையாகப் பயனுடையதாக மாற்றுவதாகும். இதனுல் ஒப்புவமை இல்லா இறைவன் துணைகொண்டு சந்தேகிக்க இடமில்லாமல் இக் கவிதை இயற்றப்பட்டது. இத்தகைய கருத்துக்களைக் கொண்ட பாடல் இது :

கற்குமறி வின்புலவர் காதின் வழியிந்நூல்
புக்குமெனி லுப்பறல் புயல்பருகி மீள்வா
ரெுக்குமென விப்புவியி லொப்புவமை தேரான்
சக்கற விளக்கமொடு சாற்றிடுவ தானேன்

அவையடக்கம் கூறும் மற்றொரு பாடலிலும் ஒன்றுக்கு மேற்பட்ட உவமைகள் மூலம் தமது தாழ்மையை வெளிப்படுத்தியுள்ளார் குஞ்சு மூசுப் புலவர். மரகத நிறத்தையுடைய தோகையை விரித்தாடுகிறது மயில். அவ்வாட்டத்தைக் கண்டு வான்கோழியும் அதுபோல் ஆட முனைகிறது. அறிஞர் முன்னர் தமது நிலையும் இத்தகையதே என்று கூறி உள்ளார் குஞ்ஞுமூசு ஆலிம். குயில் இனிமையாகப் பாடுகிறது. அதனைக் கேட்ட காகமும் அவ்வாறு பாட முற்படுகிறது. சான்றோர் முன் தமது நிலையும் இங்ஙனமே என்று கூறியுள்ளார் ஆசிரியர்.

வெயிலின் முன் வைத்த மெழுகெனத் தமது சொற்களை கற்றறிந்தோர் பிழைகள் இருப்பின் அவற்றைத் திருத்திப் பயன்படுத்திக் கொள்வது நிச்சயம் என்று ஆசிரியர் இக்கருத்துக்கள் அனைத்தையும் ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

மயில்விரி தூவி வாலின் மரகதச் சிறகா லாடப்
பயிறெரி யாவான் கோழி பார்த்தவை புரிதல் போலும்
குயிலிசை குரலாய்க் காகங் கூஇயிடல் போலும் வாணர்
வெயின்முனம் என்சொற் றன்னை மெழுகெனத்
திருத்திக் கொள்வார்

(கடவுள் வாழ்த்து : 38)

மற்றொரு பாடலில் வேறொரு முறையில் அவையடக்கம் கூறியுள்ளார் ஆசிரியர். உலகத்துக்கு எல்லையாக உள்ள கடலினின்றும் வேறுபடுவது கண்ணீர். கடல் நீருடன் கண்ணீரை ஒப்பிட முடியாது. அத்தகையதே தமது ஆற்றல் எனத் தமது தாழ்மையான தன்மையை எடுத்துக் காட்டியுள்ளார் ஆசிரியர். மேகங்கள் தங்கும் உயர்ந்த மரங்களைப் போன்றது தமிழ். அத்தகைய பாரிய மரத்துடன் ஒப்பிடுகையில் தமது அறிவு அறுகம்புல்லின் அளவினை ஒத்திருந்தது என்றும் குறிப்பிட்ட ஆசிரியர் தாம் கவிதை புனைய முற்பட்டதன் காரணத்தை அடுத்துக் குறிப்பிடுகிறார். தமக்கிருந்த தீராத கொள்ளை ஆசையினால் இக்கவிதையை இயற்ற முற்பட்டதை எடுத்துக் கூறுகிறார். ஆனால் அத்தகைய தமது முயற்சி இடியின் ஓசையின் முன் நொடியின் ஓசை போன்றுள்ளது என்றும் ஒப்பிடுவதோடு ஆசிரியர் நின்றுவிடவில்லை. பாற்கடலைப் போன்றவர்கள் அறிஞர்கள். அத்தகையோர் முன்னர் கொஞ்ச நீரை போன்ற தாம் இக்கவிதையை இயற்ற முற்பட்டமை பற்றியும் சுட்டிக்காட்டியுள்ளார். அழகான இவ்வுவமைகளை அமைத்து ஆசிரியர் பாடிய அவையடக்கச் செய்யுளொன்று வருமாறு :

வேலாவ லைய முறழறிவின் விழிநீர ளவும் தேர்ந்திடவும்
மாலார் விருக்க நிகர்தமிழி னறுகுநுனிமட் டோர்ந்திடவும்
மேலா திருந்து மாசையினு னிடியோடெழுப்பு நொடியெனவாய்ப்
பாலா ழியைநேர் கவிஞர்முனம் பகர்வேம் பறல்போற்
பகர்ந்தனனே

(கடவுள் வாழ்த்து: 40)

பாலொடு நீரைக் கலந்தாலும் பாலை விற்கலாம். அரிசி பெறக் கூடிய நெல்லோடு நெற்பதரையும் சேர்த்து விற்றால் அதனைக் கொள்வர் மக்கள். ஆதலால் மலரிலே உள்ள தேனைப் போன்று பெருமானார்

முகம்மது (சல்) அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய இனிமையான சொற்களைத் தமது சொற்களில் இங்கு தாம் கூறிவிட்டதால் அதனை மறையிற் சேர்ந்த கவிதா சக்தியில் மேம்பட்டவர்கள் பால் கலந்த நீரையும் பதர் கலந்த நெல்லையும் பெற்றுக் கொள்வது போன்று நாடிடுவர் என நம்புவதாக ஆசிரியர் உவமை நயம் மிளிரக் கூறியுள்ளார். இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பாலோடு நீர்விலை படும்பதரை நன்னெல்
லாலேகொள் வார்மலரி னுருமது போலே
மேலோன்மு கம்மதமர் விண்டதுகொண் டென்சொன்
னுலாம றைக்கவிஞர் நாடுவ ருவந்தே

(கடவுள் வாழ்த்து: 41)

### அல்லாஹ்விடம் குறையிரங்கல்

கடவுள் வாழ்த்தில் இடம்பெறச் செய்துள்ள ஐந்து செய்யுட்களில் அல்லாஹ்விடம் ஆசிரியர் குறையிரங்கி உள்ளார். தமக்கும் தம்மைச் சார்ந்தோருக்கும் ஏனையோருக்கும் பாவமன்னிப்பு அளிக்கும்படி கோரியுள்ளார். கடவுள் வாழ்த்தில் இடம் பெற்றுள்ள நான்கு செய்யுட்களில் (43—47) பாவமன்னிப்புக் கோருதல் அமைந்துள்ளது. ஒரு செய்யுளில் இவ்வாறு எல்லோருக்குமாகப் பாவமன்னிப்பு இறைஞ்சுகிறார் ஆசிரியர் அல்லாஹ்விடம்.

அடியேன்கவி யாகவறைந் திடமா
வடிவாருரை தந்திடு மன்னவர்தாம்
படிமீதுசெய் பாவமகற் றிநெடுங்
கொடிநீழலைக் கொடுத்தருள் கொற்றவனே

(கடவுள் வாழ்த்து : 45)

இவ்வாறு காப்பிய ஆசிரியர் இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரும் பாடல்கள் வேறெந்தக் காப்பியத்திலும் இடம் பெறவில்லை என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

### கடவுள் வாழ்த்து :

குஞ்ஞுமூசுப் புலவரின் இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியத்தில் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய காப்பியங்களில் இல்லாத சிறப்புகள் இருக்கக் காணலாம். அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோரும் அத்தகைய ஒரு சிறப்பியல்பு முன்னர்க் குறிப்பிடப்பட்டது. மற்ற முஸ்லீம் தமிழ்க் காப்பிய ஆசிரியர் மூன்று

அல்லது நான்கு அல்லது ஐந்து செய்யுள்களிலே அல்லாஹ்வின் காப்பை விரும்பி அல்லாஹ்வைப் புகழ்ந்து பாடுவர். ஆனல் குஞ்ஞுமூசு ஆலிம் புலவர் தமது காப்பியத்தில் உள்ள கடவுள் வாழ்த்துப்பாடலில் பதினொரு செய்யுட்களில் அல்லாஹ்வின் பாதுகாப்பை நாடி அவனைப் புகழ்ந்துள்ளார்.

ஒரு செய்யுளில் கன்னிசல்கா போரினைப் பாடத் தமது கண்களால் பார்க்க முடியாத—எவருடைய கண்களுக்கும் தோற்ருத ஏகனை அல்லாஹ்வைப் புகழ்ந்து அவன் பாதுகாப்பைக் கோரியுள்ளார் ஆசிரியர். ஏழேழாக அமைந்துள்ள விண்ணுலகு, கடல், நரகு, மண்ணுலகு எல்லாமே நபிகள் பெருமானுர் முகம்மது (சல்) அவர்களை வாழ்த்தும். அத்தகைய பெருமானரைக் கண்ணரக் கண்டு களித்த கன்னி சல்கா என்னும் பெண்மணி ஈடுபட்டு இஸ்லாத்துக்கு வெற்றி ஈட்டிக் கொடுத்த போரினைப் பற்றிப் பாட ஏகனை அல்லாஹ்வைப் பாதுகாப்பு அளிக்குமாறு வேண்டியுள்ளார் காப்பிய ஆசிரியர் குஞ்ஞுமூசு ஆலிம் புலவர். இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் வருமாறு:

விண்ணுல கவையே மேழு
    விரிகட னரகே மேழு
மண்ணுல கவையோ டெல்லாம்
    வாழ்த்திய விறசூல் பாதங்
கண்ணுறக் காண்க வுற்ற
    கன்னிசல் காபோர்ப் பாட
எண்ணுதற் கடங்கா தான
    ஏகனே காப்பு நீயே

(கடவுள் வாழ்த்து: 2)

குஞ்ஞுமூசு ஆலிம் புலவரின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் புதுமையனே கருத்துக்களையே கொண்டுள்ளன. இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய தமிழ்க் காப்பியங்களில் இல்லாத பாணியில் இறவு சுல்கூல் படைப்போரில் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் அமைந்துள்ளன. ஏனைய முஸ்லிம் தமிழ்க் காப்பிய புலவர் அல்லாஹ்வின் பண்புகளையும் அவனின் அழகிய திருநாமங்களில் கருத்துக்களையும் அமைத்துப் பாடி இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மரபினை ஏற்படுத்தி உள்ளனர். ஆனல் இவ்விலக்கிய மரபினுக்குச் சற்று மாற்றமாகவே குஞ்ஞுமூசு ஆலிம் புலவரின் கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் அமைந்துள்ளன. மனிதனின் பிரதானமான உறுப்புக்களான உள்ளம், காது, நா, கண், வயிறு, மூக்கு என மனிதனிடம் அமைந்துள்ளன என்பதையும் அவற்றின் சிறப்புக் கருமங்கள் எவை என்பதையும் விளக்கியுள்ளார். அல்லாஹ்வைப் பற்றி நினைப்பதற்கே மனிதனின் மனம் படைக்

கப்பட்டுள்ளது. அவன் தன் திருமறையின் இனிய ஒலியைக் கேட்ப
தற்கே மனிதன் காதைப் பெற்றுள்ளான். மற்ருேர் உறுப்பான நாவினை
மனிதன் பெற்றிருப்பது எல்லாம் வல்ல இறைவனைப் புகழ்வதற்காக
வேயாகும். திருமறையின் கருத்துக்கள் இடம் பெற்றுள்ள நூல்களைப்
பூரணமாகப் பார்ப்பதற்காகவே மனிதனுக்குக் கண்கள் பெரும்பேருகக்
கிடைக்கப் பெற்றுள்ளன. வயிற்றினை ஆண்டவன் ஏன் உருவாக்கி
ஞன் எனின் மனிதனுக்கும் எப்பொழுதும் வேளைக்கு வேளை ஏற்படும்
பசியைத் தீர்ப்பதற்காகவேயாகும். உயிர் வாழ இன்றியமையாதது
மூச்சு. அந்த மூச்சை வாங்கி விடுவதற்கே மனிதனுக்கு மூக்கினை
அல்லாஹ் படைத்துள்ளான். எல்லோரும் இத்தகைய பெரும் பேற்
றினைப் பெற்றுள்ளனர். ஆனால் இந்நூலாசிரியரோ இவற்றை எல்
லாம் தமக்கும் அமைத்ததுடன் நில்லாது எல்லோருக்கும் போல்
உணவு அளிப்பது அல்லாஹ்வைப் புகழவே எனக்கூறியுள்ளார். அத்
தகைய வாய்ப்புக்களை எல்லாம் நல்கிய 'ஏகனுகிய அல்லாஹ்வே நீ
தான் எனக்குப் பாதுகாப்பு அளிப்பாயாக' என்று இக்கருத்துக்கள்
அனைத்தையும் ஒருங்கே அமைத்து இவ்வாறு ஒரு செய்யுளை இயற்றித்
தந்துள்ளார். இப்பாடலில் கல்பு என்பது உள்ளத்தையும் இரணம்
என்பது உணவையும் சுட்டுகின்றன.

நினைப்பதற் குரித்தாம் கல்பு
நின்மறை கேட்கக் காதும்
உனைப்புகழ் வதற்கு நாவும்
உற்றநூ ஞேக்கக் கண்ணும்
தினப்பசி வயிறும் மூச்சாற்
சீர்பெறு மூக்கு மாக
எனைப்படைத் திரணம் ஈயும்
ஏகனீ காப்ப தாமே

(கடவுள் வாழ்த்துப் படலம்: 8)

முஸ்லிம் தமிழ்க் காப்பியங்களில் பெரும்பாலும் மொத்தமாக நபி
மார்கள் அனைவரையும் குறிப்பிடும் பொழுது ஓரிலட்சத்து இருபத்து
நாலாயிரம் என்ற எண்ணிக்கையை அத்தொகை தொனிக்க ஒரு பாட
லில் குறிப்பிடுவது உண்டு. ஆனல் குஞ்சு மூசு ஆலிம் புலவர் நபி
மார்கள் அனைவரையும் எண்ணிக்கை அடிப்படையில் குறிப்பிடாது
ஆதி பிதா ஆதம் நபி (அலை) அவர்கள் முதலாகவுள்ள நபிமார்கள்
அனைவரும் என எல்லா நபிமாரையும் சுட்டியுள்ளார். மற்றப் புலவர்
களிலிருந்து வேறுபட்ட ஒரு முறையைப் பின்பற்றியுள்ளார். சுவன
புரியில் இருக்கும் பொழுது உண்ணக்கூடாது எனத் தடை செய்யப்
பட்ட கனியை ஆசை மிகுதியால் உண்டமையால் குற்றம் மிகவே விண்
ணுலகிலிருந்து ஆதம் நபி (அலை) அவர்கள் அப்புறப்படுத்தப்பட்டார்

கள். பூமியில் எறியப்பட்டார்கள். அந்த பாவா ஆதம் முதல் ஏனைய நல்ல நபிமார் வரை உள்ளவர்களின் பாதங்களை மனதில் வைப்பாம் என இவ்வாறு ஒரு செய்யுளில் பாடியுள்ளார்;

கோதும்பை அவாவின்மிகு
கோதேயட ருவதால்
சேதம்பல வாயிச்செக
மீதேவரு பாவா
ஆதம்பய காம்பர்முத
லாநந்நபி மார்கண்
மாதம்பம தாரும்பத
மனமுடுற வைப்பாம்.

(கடவுள் வாழ்த்துப் படலம்: 15)

நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் மகள் பாத்திமா நாயகி (றலி) அவர்களின் புதல்வர்கள் மூன்று செய்யுட்களில் புகழப்பட்டுள்ளனர். ஹசன் (றலி) அவர்களைத் தனியாக ஒரு செய்யுளிலும் (21) உசைன் (றலி) அவர்களைத் தனியாக மற்றொரு செய்யுளிலும் (22) பெயர் குறிப்பிடப்படாமல் அவர்கள் இருவரையும் சேர்த்து வானோரால் தொட்டிலாட்டப்பட்டவர்கள் முதலிய அடைமொழிகளைப் பயன்படுத்தி மற்றொரு பாடலிலும் புகழ்ந்து விட்டு அவர்கள் அனைவரினதும் நல்லாசியை வேண்டி நிற்பதோடு அறிஞர்களாகத் திகழும் பெரியார்களின் கருத்துக்களையெல்லாம் மனதில் கொண்டு ஏனைய புலவர்களின் கவிதைகளின் உட்பொருளினை ஆராய்ந்து இந்நூலை இயற்ற முற்பட்டார் ஆசிரியர். பொன்னாலான ஆபரணங்களை அணிந்து திகழ்ந்த சல்கா அம்மையார் போர் புரிந்த விதத்தினைக் கவிதை மூலம் விளக்க முன் வந்தார் ஆசிரியர். இக்கருத்துக்களைக் கொண்ட செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

வெற்றியொலி மார்பதம் விளங்குமுடி சேர்த்தும்
கற்றவுல மாவுரை கருத்தினுற வைத்தும்
உற்றபுல வோர்கவி தையுட்பொரு டெரித்தும்
பொற்றடிசல் காவினிது பூண்டவமர் சொல்வாம்

(கடவுள் வாழ்த்து: 31)

## இயற்கை வருணனை

இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியம் வீரச் செயல்களை வருணிக்கும் ஒரு வீர காப்பியம். ஆதலால் அங்கு வீரச் செயல்களின் வருணனையே முக்கிய இடம் பெறுகிறது. இயற்கை வருணனை இரண்

டாம் இடத்தையே பெறுகின்றது. அறபு நாடு, மக்கமா நகர், மதினமா நகர் முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன. ஆனால் அவற்றின் வருணனை ஓரிரு அடைமொழிகளுடன் நிறைவு பெறுகின்றது.

அறபு நாடு, ஒரு பெண்ணுக்கு உருவகிக்கப்பட்டுள்ளது. அந்த அறபுப் பெண்ணுக்கு முந்தானையாய் அமைந்தது கடல். அப்பெண்ணின் கூந்தலாக அமைந்தது அறல். அப்பெண்ணின் முலைக்கு மலை ஒப்பிடப்பட்டுள்ளது. வட்டமாக உள்ள பூமியின் தலையாய் அமைவது அறபு நாடு. மதினா மாநகரம் அதன் நெற்றியாக அமைந்துள்ளது. இவ்வாறு ஒரு பாடலின் முதலிரண்டு அடிகள் அமைந்துள்ளன.

உவரிமுந் தானை யுடுத்தற லோதி
ஒளிர்தர வரைக்குயஞ் சுமந்து
புவரிகொள் புவிமான் தலைநிகர் அறபில்
பலன்தரு நுதல் மதீனா

(முதியாள் படலம்: 3)

மக்கமா நகர் 'திருமக்க மூர்' (10:1) என்றும் 'சிறந்த மக்கா நகர்' (10:34) என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. 'நித்தம் விளங்கும் விறன் மதீனா' (2:1) 'மதின மேல் நகர்' (3:1) 'உயர் மதீனா' (4:1), பூவினில் அழகு வாய்ந்த புகழ் மதினா' (3:31), 'நல்லியன் மதீனா' (6:9), 'புரிசை சூழ் மதீனா' (11:2), 'வரிசையென் பதிபுகழ் மதீனம்' (36:10), 'விந்தை மதினா' (45:1). 'மகர சிந்தின் மலிமதினா' (45:34), 'வற்றுரு வள மதினா' (45:40) என சில அடைமொழிகளுடன் மதினா வருணிக்கப்பட்டுள்ளது.

சாதாரணமாக நாட்டு நகரப் படலங்களில் இயற்கை வருணனை எல்லாக் காப்பியங்களிலும் ஏறத்தாழ ஒரே விதமான முறையில் அமைந்திருப்பதைக் காணலாம். மழையாகப் பெய்த நீர் ஆற்றுப் பெருக்கெடுத்து வெள்ளமாக ஓடியது. அது ஓடுவது மலையெனும் அரசன் இடத்திலிருந்த அனைத்தையும் கவர்ந்து பொன், மணி முதலிய வற்றையும் பொதுவாக எல்லோருக்கும் பகிர்ந்தளித்துக் கொண்டு மன்னர்க்கெல்லாம் மன்னர் போன்று குறிஞ்சி நிலத்திற்குச் சென்றது. இக்கருத்துக்களையே குஞ்ஞுமூசு ஆலிம் புலவர் இவ்வாறு வருணித்துள் ளார்.

இந்த தன்மையி னிரிதரு மிளம்புன னதிதா
னன்ன வெற்பெனு மரசுழை யாவையுங் கவர்ந்தப்
பொன்ன னைத்தையு மணியையும் பொதுவற வீழ்த்தோர்
மன்னர் மன்னனெக் குறிஞ்சியின் மதர்த்துவந் ததுவே

(நாட்டுப் படலம்: 13)

குறிஞ்சி நிலத்தில் புகுந்த நீர் குறிஞ்சி நிலத்தில் இருந்த கூழ் முதலியவற்றை அடித்துச் செல்கின்றது. இச்செயல் குறிஞ்சி நில மகளிர் ஆன குற மகளிர் தலையைத் தொடுந் தகட்டணி அணிந்து நாவால் உறிஞ்சி வைக்கப்படுவது அக்கூழ். அத்தகைய கூழ் அனைத் தையும் திருடிக்கொண்டு செல்வது போன்று காட்சி அளிக்கிறது வெள்ளம். அவ்வாறு செய்து கொண்டு அவ்வெள்ளம் கொடுமையான பாலை நிலத்தில் புகுந்தது. இக்காட்சியே இச்செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

குறிஞ்சி யந்நிலத் தெய்திய ஜலங்குற மகளிர்
நறுஞ்சி ரந்தொடுந் தகட்டணி யொடுமவர் நாவால்
உறுஞ்சி வைத்திடுங் கூழ்முத லுளதெலாந் திருடி
வெறுஞ்சி றப்புற வெருட்டி வெம் பாலையிற் புகுந்த

(நாட்டுப் படலம்: 14)

அங்கிருந்து அந்த வெள்ளம் பாலையில் புகுந்து பரந்தது. அப் பகுதியை ஆட்சி செய்யும் பெண்கள் வேலை யொத்த கண்ணை உடைய வர்கள். அத்தகைய பெண்கள் அங்குள்ள வேடரை வெருட்டி அவர் களின் பொருள்களைத் திருடிக் கொண்டு செல்வர். அதே போன்று அந்த வெள்ளமும் பாலையில் இருந்த எல்லாவற்றையும் சுருட்டிக் கொண்டு முல்லை நிலத்தில் பாய்ந்தது. இக்கருத்துக்கள் இவ்வாறு ஒரு பாடலில் அமைந்துள்ளது.

பாலை யிற்புகும் பயம்பரந் தவணிருந் தாளும்
வேலை யொத்தகண் ணரொடும் வேடரை வெருட்டிச்
சேலை மற்றுள தெவ்வையுந் திருடிக்கொண் டிரிந்து
மாலை யிட்டமின் னிணைமலி முல்லையுற் றனவால்

(நாட்டுப் படலம்: 15)

இங்ஙனம் பல பாடல்களில் நாட்டு வளம் கூறப்பட்டுள்ளது. எருமை இனம் வயல் வரம்புகளிலே மேய்ந்து கொண்டிருந்தன. பெண் எருமைகளின் பாரிய முலைகளிலிருந்து பால் ஒழுகுகின்றது. பாகெலாம் வாசனை மிக்க மலர்களிலிருந்து வடியும் தேனுடன் கலக் கின்றது. அவையெல்லாம் வயல்களிலே சார்ந்து விடுகின்றது. இக் கருத்து ஒரு பாடலில் இவ்வாறு அமைந்திருந்தது.

எருமையின் கணம்வரம் பிடையின் மேய்ந்ததின்
பருமுலைக் கண்டிறந் தொழுகு பாகெலா
மருமலர்த் தேன்கிடந் துவட்டி மாவளந்
தரும்வயல் இடத்தினில் சிறப்பச் சார்ந்ததே

(நாட்டுப் படலம்: 32)

இனி, ஒரு நடனக் காட்சியை எடுத்துக் கொள்வோம்.

சேவல் கூவும். அவ்வாறு சேவல் கூவும் பொழுது அதன் சிறகுகளை அடித்தே கூவும். ஒரு நடனக் காட்சியை வருணிக்க முற்பட்ட குஞ்ஞுமூசு ஆலிம் புலவர் அச்சேவல் சிறகடிப்பதை முரசொலிப்பதாகவும் அச்சேவல் கூவுவதை காளம் ஊதலாகவும் உவமித்துள்ளார். அந்நடனக் காட்சியில் குயில்கள் ஊது குழல் ஊதுகின்றன. சாதாரணமான குயில்கள் இசை எழுப்புவது குழல் ஊதுவது என வருணிக்கப்பட்டுள்ளது. அங்கே மலர்களிலிருந்து தேனைப் பருகிய வண்டுகள் இனிய ஓசை எழுப்பி ரீங்காரம் செய்கின்றன. வண்டுகளின் ரீங்காரம் பாடலாக ஒலித்தது எனக் குறிப்பிட்டுள்ளார். புருப்பறவைகள் ஒலி எழுப்புகின்றன. அந்த ஒலி குரவை ஒலிக்குச் சமமானதாக இருந்தது. இந்தப் பின்னணியில் மயில்கள் நடனம் புரிந்து கொண்டிருந்தன. இக்காட்சி ஒரு செய்யுளில் இவ்வாறு அமைக்கப்பட்டு வருணிக்கப்பட்டுள்ளது.

சிறைமுர சொலிப்பச் சேவற் றிருக்குரற் காள மூதக்
குறையறு குழலி சைக்கக் குயிலினந் தேனை மாந்தி
அறுபத ஞிமிறு கீத மதுசெய மயில்க ளாடப்
புறவுபுட் குரவை காட்டப் புகலுமிக் கோலத் தோடே

(இறவுசுல்கூல் வதைப் படலம்: 38)

ஒரு நாள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஓர் அகழியைக் கடந்து சென்றார்கள். அது பெரியதோர் அகழி. அந்த அகழியிலே பல்வேறு வகையான மீன்கள் இருந்தன. விதவிதமான சங்குகள் இருந்தன. அங்கே இருந்த சூரு எனப்படும் மகர மீன்கள் மத்தளத்தைப் போன்று காட்சி அளித்தன. நீண்டவாளை மீன்கள் மேலே பாய்ந்து விழுவது ஆகாசவாணம், பொறிவாணம் முதலியன போன்று காட்சி வழங்கின. விரால்கள் சிலம்பை வித்தை காட்டுவன போல் தோன்றின. அங்குள்ள இருல்கள் குதித்துக் குதித்துக் காட்சி தந்தன. சங்குகளின் ஒலிகுரவை ஒலியைப் போல் கேட்டது. அழகுமிக்க வலம்புரிச்சங்கு எழுப்பும் ஒலி இனிமையைத் தந்து கொண்டிருந்தது. மத்தளம், வாணம், சிலம்பம், குதி, குரவை, பண் முதலியன ஒரு மண வீட்டுக்கு இன்றியமையாதனவாகும். எனவே அகழ் ஒரு மண இல்லத்தைப் போல் காட்சி வழங்கியது என ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு அக்காட்சியை ஒரு படம்பிடித்துக் காட்டுவது போல் தந்துள்ளார்.

மகரமத் தளத்தைக் காட்ட வாளைவா ணத்தைக் காட்ட
உகழ்விரால் சிலம்பங் காட்ட ஒழுகிருல் குதிகள் காட்ட
இகல்வளை குரவை காட்ட எழில்வலம் புரிபண் காட்ட
அகழ்மண மனையைக் காட்டி ஆங்குறல் நபிகண் டாரால்

(அகிழ் கடந்த படலம்: 18)

**போர் வருணனை**

அறமிபுனுதையான் போர் புரிய வருவதை ஆசிரியர் தத்ரூபமாக வருணித்துள்ளார். அவனுடைய படையினர் நடக்கும் பொழுது பூமி நடுங்கியது. மலைகள் அஞ்சின. வார் கட்டப்பட்ட முரசொலி ஒலித்து எதிரொலித்தது. மிகுதியாக ஒலித்தது. வரிசை வரிசையாகச் சக்தி மிக்க போர் வீரர் மிகுதியாக வந்தனர். அணி அணியாய் வந்தனர். வேகமாகப் பாய்ந்து வந்த பெரிய குதிரையின் மீது அவன் ஏறி வந்தான். இக்காட்சி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

தாரணி நடுங்கிடச் சயிலம் அஞ்சிட
வாரணி முரசொலி மலிய வாசியின்
போரணி வயவர்கள் புடை செறிந்திடச்
சீரணி யுறுகதித் தேசி மேற்கொண்டான்

(அறமிபுனுதையான் வரு படலம்: 38)

போர் வீரர்கள் எவ்வாறு வந்தனர் என்பது வேருெரு விதமாக வருணிக்கப்பட்டுள்ளது. வில்லையுடையவர்கள் மிகுதியாக வந்தனர். வேலை ஏந்தியவர்களாகப் பலர் வந்தனர். பெருங் கற்களைத் தாங்கியவர்களாக வேறு பலர் நடந்தனர். கசையைக் கையில் கொண்டவர்களாய் நிறைய வந்திருந்தனர். மல்யுத்தத்தில் ஈடுபடுபவர்கள் கூட்டம் கூட்டமாய் வந்தனர். வாளை உருவியவர்களாய் அனேகர் வந்தனர். அவர்கள் அனைவரையும் ஒழுங்காக நடக்க வேண்டி கட்டளை பிறப்பிப்பவர்களாகப் பலர் வந்தனர், இங்ஙனம் போர் புரிய வந்தவர்களின் கூட்டத்தை ஒரு செய்யுளில் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்:

வில்லினர் மிடைந்திட வேன்மி டைந்திட
கல்லினர் மிடைந்திடக் கசைமி டைந்திட
மல்லினர் மிடைந்திட வாண்மி டைந்திடச்
சொல்லினர் மிடைந்திடத் துகண்மி டைந்திட

(அறமி புனுதையான் வரு படலம்: 40)

இங்கே ஓசை நயம் ததும்புவதைக் காணலாம்.

அவன் எவ்வாறு புடைசூழ வந்தான் என்பதை மற்றொரு செய்யுளில் ஆசிரியர் விவரித்துள்ளார். குதிரைகள் நெருக்கமாக வந்தன. கொடிகள் பிடித்தவர்களாய் பலர் வந்தனர். சிவிகைகள் நெருக்கமாக வந்தன. தேர்கள் நெருக்கமாக வந்தன. குடைகள் நெருக்கமாக வந்தன. அவர்கள் அனைவரும் குதிரைகளிலே வந்தனர். வீரம் மிக்க சூரனாக பெரும்பாதையிலே வந்து நெருங்கினான். இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

குவிபரி நெருங்கிடக் கொடிநெ ருங்கிடச்
சிவிகைக ணெருங்கிடத் தேர்நெ ருங்கிடக்
கவிகைக ணெருங்கிடக் கற்கியோட் டியே
சவுரியத் துடனெறி தன்னில் ஈண்டினான்

(அறம் மிபுனு தையான் வரு படலம்: 40)

இச்செய்யுளிலும் ஓசை நயம் அமைந்திருப்பதைக் காணலாம்.

ஒரு சந்தர்ப்பத்தில் நடந்த போரில் வரிசையாக நடப்பட்டிருந்த கொடிகள் முறிந்தன. குடைகள் நொறுங்கின. போர் முரசு உடைந்தது. வலிமையான வீரர் பலரின் தலைகள் பிளந்து பட்டன. மூளைகள் சிதறின. அவற்றை ஏனையோர் மிதித்து நடக்கலாயினர். இக்காட்சி இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

கொடிநிரை முறிந்திடக் குடை நொறுங்கிட
வடிமுர சுடைந்திட வலியின் மன்னர்கண்
முடிபல பிளந்திட மூளை சிந்திடக்
கடிதனின் மிதித்தன கருத யாருமே

(குசுஆவரு படலம்: 44)

இறவுசுல்கூல் படைப்போர் காப்பியத்தில் நடைபெற்ற போர் பொதுவாக இருவருக்கிடையே நடைபெற்றது. முஸ்லிம் அல்லாதார் சார்பில் ஒருவர் முஸ்லிம் மக்கள் சார்பில் ஒருவருடன் போர் புரிவது தான் வழக்கம். ஒருவர் வெட்டப்பட அவரிடத்தை மற்றவர் எடுப்பது முறைமை. அப்துத்தாறு என்பவன் சுகைறு என்னும் முஸ்லிமுடன் மோதி சுகைறு என்பவரை வெட்டி வீழ்த்தினான். பின்னர் அவனுடன் அலி (றலி) அவர்கள் போருக்குச் சென்றார்கள். அப்பொழுது அப்துத்தாறின் நிலைமையை இங்ஙனம் விளக்கி உள்ளார் ஆசிரியர்.

அன்ன காலை யவனு மடர்ந்தனன்
உன்னி தன்னை உரக்க விடுத்தொளிர்
மின்னும் வாள்கொடு வேத ரலியவன்
சென்னி மீது சினங்கொடு வெட்டினார்

(சுகைறுல் ஆமிரை வெட்டும் அப்துத்தாறு வதைப்படலம்: 9)

இவ்வாறு வெட்டப்பட்டதன் விளைவை மற்றொரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார் :

சிரசறுந்தன தேகமறுந்தன
பரியறுந்தன பங்கிரண் டாயின
தரைபிளந்தன தாவியத்தாரைவாள்
விரைவுகண்டு விடையுண்ணடுங்கின
(சுகைறுல் ஆமிறை வெட்டும் அப்துத்தாறு வதைப்படலம்: 10)

சல்கா அம்மையார் போருக்குப் புறப்பட்டுச் சென்ற போது அவருடைய அவயவங்கள் மக்களுக்கு எப்படித் தோற்றின என்பதை ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார் :

இலங்குசெம் முகத்தைக் கண்டார்
இளம்பிறை நுதலைக் கண்டார்
துலங்குவிற் புருவைக் கண்டார்
துணைவிழி வேலைக் கண்டார்
ஜலங்கெழுங் குமிழைக் கண்டார்
தரளவெண் ணகையைக் கண்டார்
அலங்கலுற் றிருக்குந் தோளில்
அங்கிபூத் திருக்கக் கண்டார்
(சல்கா போர் புரிப் படலம்: 38)

சல்கா அம்மையார் போர் புரிவதற்குக் குதிரை மேல் ஏறிச் சென்றார். அந்த அம்மையார் குதிரை மீது ஏறி குதிரையைச் செலுத்தும்பொழுது எல்லோரும் நடுங்கினர். எல்லாமே நடுங்கின. இதனையே ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு விவரித்துள்ளார் :

தரியலர் நடுங்க வன்னோர் தமதுள நடுங்க வேறு
பரிகளு நடுங்க வோங்கற் படங்குக ணடுங்க நீள்கைக்
கரிகளு நடுங்கச் சேனைக் கடங்களு நடுங்க வந்த
வரிகளைத் தமலை காட்ட வணங்கதின் மிசைகொண் டாளால்
(சல்கா போர் புரிப் படலம்: 64)

சல்கா அம்மையாரின் வாள் வீச்சினால் ஏற்பட்ட வெட்டுகளினாலும் குதிரையைச் செலுத்தினமையாலும் அடியினாலும் முட்டினாலும் எல்லாம் குருதி பரந்திருந்தது. இந்தக் காட்சியை ஆசிரியர் இவ்வாறு விவரித்துள்ளார் ;

வெட்டினுலும் விடும்பரி யாலுமற்
றட்டினுலும் தரியிலர் தத்தமின்
முட்டினுலும் முறிவுகண் மிஞ்சலான்
மட்டிலாது மலிந்தன சோரியே
(சல்கா போர் புரிப் படலம்: 101)

இரவு புலர்ந்தது. இருள் சூழ்ந்தது. அனைவரும் இல்லம் திரும்பினர். சூரியனும் மறைந்தான். உலகம் வெறிச் சோடியது. பின்னர் வரிகளை உடைய வண்டுகள் மலர்களை நாடின வாவிகளில் அன்னங்கள் கூடின குதிரை வீரரும் கூடி விட்டனர். இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

இரவெனும் நிசியங் கீண்ட யாவரும் விடுதி யீண்ட
அருணனும் குடபா லீண்ட அவனியின் வெளிதா னீண்ட
வரியளி மலரி னீண்ட மடுக்களில் அனங்க ளீண்ட
புரவியின் வீர ரீண்ட பொழுதும்விண் ணீண்டிற் றம்மா
(கடந்தைப் படலம்: 1)

ஓசை நயமும் இங்கே அமைந்துள்ளது.

ஒருவர் ஓரிடத்தை விட்டகலாதிருப்பதற்குபூவினை விட்டகலாது சுற்றும் தேனீக்கு ஒப்பிடப்பட்டுள்ளது.

விரைசெறி தேனுற் பூவை விடுத்தக லாது சுற்றும்
பிரசமொத் தவ்வூர் விட்டுப் பிரிந்திடா திருந்தேன் அப்போ
(அம்று வாய்மைப் படலம் : 13)

எதிரியுடைய கழுத்தை வெட்டி அவன் விரலிலிருந்த மோதிரத்தைக் கழுத்தை வெட்டியவன் விரைவாக அணிந்து கொண்டான். ஏரியிலே நீந்திக் கொண்டிருக்கும் மீனினை கொக்கு விரைவாகக் கொத்தி உணவாக்கிக் கொள்வது போன்றது அவனது செய்கை

உரைசெய் யேரியி லூர்ந்துறு மச்சத்தை
இரைய தாய்க்கொக் கெடுத்திடு மாறுபோல்
துரித மாய்க்கம்மைத் துண்டித்தங் காழியை
விரைவிற் கொண்டுதன் கைவிரற் சேர்த்தியே
(அம்று வாய்மைப் படலம் : 60)

மற்ருெரு செய்யுளில் புலியைக் கண்டு பயந்தோடும் ஆட்டினைப் போல என்பது

புலியைக்கண் டஞ்சி யோடும் புருவைநே ரன்னோ ரோட

(அம்றிபுனு மகுதீக்கரீபு வரு படலம் : 22)

என வந்துள்ளது.

வேருெரு பாடலில் மூன்று உவமைகள் இடம்பெற்றுள்ளன. வலிமை மிக்க யானையைப் போன்று நிலைபெயர்ந்த பகைவர் என்பதும் நீரோட்டம் போல் ஓடினர் என்று பின்னர் அவர்கள் ஏரியில் நீந்துவோர் போல் காட்சி அளித்தனர் என்றும் விவரிக்கப்பட்டுள்ளது.

மூரிவெங் களிறென முறிந்த வொன்னலர்
வாரியை நிகரதாய் மலிந்தங் கோடுநெய்த்
தோரினிற் குறையுயிர் தொண்டை மட்டுற
வேரியி னீந்துவோ ரென்ன லாயினர்

(அறமிபுனு தையா னீமான் கொண்ட படலம் : 17)

'வேலி பயிரைத் தின்னுதல்' என்பது ஒரு முதுரை. காவலில் உள்ளவனே தன்னல் காக்கப்படும் பொருளைத் தன்னுடைய நன்மைக்காகப் பயன்படுத்துதலைக் குறிக்கும். இபுலிசீனல் கெட்டமையைக் குறிக்க இம்முதுரை பயன்படுத்தப்பட்டுள்ளது.

கோல னிபுலீ சின்மிகு கோட்டி செய்வ தாலோர்
வேலி பயிரைத் தினும்வி நோதமது மாகி

(அம்று வாய்மைப் படலம் : 22)

அழிக்கும் வல்லமையுள்ள காய்ச்சிய இரும்புக்குப் பயந்து நெருப்பின் பால் சென்றடைவது என்னும் ஒரு முதுரை உள்ளது. அதனை ஒரு பாடலில் இவ்வாறு ஆண்டுள்ளார் ஆசிரியர்.

அதஞ் செய்யு மிரும்புக் கொல்கி
அரியின்பாற் புகுந்த தொத்த

(சல்கா புறப்படு படலம்: 58)

முஸ்லிம் அல்லாதார் முஸ்லிம்களிடம் சிக்கிக் கொண்டமை மூன்று உவமைகளால் விளக்கப்பட்டுள்ளது. காட்டிலே தோண்டப்பட்டுள்ள படுகுழியில் யானை விழும். வேடரால் விரிக்கப்பட்ட சிறுகண்களை உடைய வலையில் மான்கள் சிக்கி விடும். தடாகத்தில் உள்ள மீன்கள் இரையிடப்பட்ட வளைந்த தூண்டில்களில் மாட்டிக் கொள்ளும். இவை

மூன்றும் போலவே முஸ்லிம் அல்லாதார் முஸ்லிம்களிடையே சிக்கிய முறைமையை குஞ்ஞுமுசுப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார் ஒரு செய்யுளில்.

காறு றும்படு குழிக்கய மெனவும்கண் வலையில்
தானு றும்பிணை யெனவுநற் றடாகத்தின் மீன்கள்
கூன றுன்றுகோான் மாட்டிய தெனவுமக் குபிரர்
தீனு ளத்தின ரிடத்தினில் வந்துசிக் கினரால்

(சதியெழுத்துப் படலம்: 51)

உவமைகள் போலவே உருவகங்கள் பலவற்றையும் ஆசிரியர் இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியத்தில் நிறையப் பயன் படுத்தி உள்ளார். நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் திரு மறையை ஒரு விளக்காக உருவகித்துள்ளார் ஆசிரியர். அந்த விளக்கு எரிய நெய் அவசியம். அதற்கு நெய்யாக அமைவது இஸ் லாமிய மூலமந்திரமான கலிமா. திரியாக அமைவது தீன் என்னும் மார்க்கம். இஸ்லாம் என்னும் தீயினுல் அவ்விளக்கு பற்ற வைக்கப் படும். இதனைச் செய்பவர்கள் இளம் பெண்கள். இக்கருத்துக்கள் இடம் பெற்ற செய்யுள் இது:

வெற்றியிற சூல்மறை விளக்கினை நிறுத்தி
உற்றகலி மாநெய்யை உவப்பொடு நிரப்பிக்
குற்றமறு தீன்திரி குயிற்றிஇசு லாந்தீப்
பற்றுவர்க ளெங்குமுயர் பாவையிள மின்னுர்

(நகரப் படலம்: 29)

மற்றொரு பாடலில் இதே கருத்தை சற்று வேறுவிதமாகப் பாடி யுள்ளார் ஆசிரியர். உருவகங்கள் முன்னைய செய்யுளிலிருந்து வேறு படுவதைக் காணலாம். இந்தச் செய்யுளில் தீன் என்னும் மார்க்கத் துக்கு விளக்கு உருவகிக்கப்பட்டுள்ளது. அந்தத் தீன் என்னும் விளக்கை உலகில் நிலை நிறுத்துவதற்கு அவசியமான திரி திருமறை யாகும். அதற்குத் தேவைப்படும் நெய் ஈமானுகும். உலகில் அது பரப்பும் சுடர் கலிமாவாகும். அந்தச் சுடரினுல் அகற்றப்படுவது இருள் ஆக உள்ள குபிர் என்னும் இஸ்லாம் அற்ற தன்மையாகும், இவ்வாறு சுடர் பரப்பினுல் இஸ்லாம் என்னும் மரம் தழைத்து வளரும். வளர்ந்தோங்கும். வளர்ந்தோங்குவதற்கு ஆதாரமாக கத்தூரி மணம் எட்டுத் திசைகளிலும் பரவி கமழ்ந்து கொண்டிருப்பதற்காக ஒப்பற்ற அரசினை நடத்திக் கொண்டிருந்தார்கள் எம்பெருமானுர் முகம்மது நபி (சல்) அவர்கள், இக்கருத்துக்களையே ஒரு செய்யுளில் இவ்வாறு உருவக நயத்துடன் அமைத்துப் பாடியுள்ளார் குஞ்ஞு மூசு ஆலீம் புலவர்.

தீனெனும் விளக்கை நிலமிசை நாட்டித்
திருமறைத் திரியுமோ நெய்யீ
மானுமங் கியற்றிச் சுடர்க்கலி மாவை
வையகம் முழுதினந் துலக்கி
ஈனவெங் குபிரி னிருள்கடிந் திசுலா
மென்தவத் தருத்தழைத் தோங்க
நானமெண் டிசையுங் கமழ்தரப் பொருவா
நல்லர சியற்றுமக்காலே

(முதியாள் படலம்: 4)

இதனை அடுத்து வரும் செய்யுளிலும் (5) உவமை உருவக நயங்கள் இருப்பதைக் காணலாம்.

மற்றொரு செய்யுளில் அறத்தை மனைக்கும் அறிவை விளக்குக்கும் திருமறையை நுழைவாயிலுக்கும் உருவகிக்கப்பட்டுள்ளன, இவை அனைத்தையும் கொண்டது இஸ்லாம் மார்க்கம் பெருமானாரின் மார்க்கம். இவற்றை ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளும் இவ்வாறு கொண்டுள்ளது.

அறமெனு மனையு மாகி அறிவெனும் விளக்கு மாகி
மறையெனு நுழையு மாகி வருமிற சூலின் மார்க்கம்

(முதியாள் படலம்: 27)

இத்தகைய உருவக நயம் நிரம்பிய செய்யுட்களை இக்காப்பியத்தில் வெவ்வேறு படலங்களில் காணலாம் (16:55; 24:21; 43:25; 45:16)

### தற்குறிப்பேற்றவணி

காப்பிய ஆசிரியர் பெரும்பாலும் சூரிய உதயத்தை, சூரிய அஸ்தமனத்தை, சந்திரோதயத்தை தற்குறிப்பேற்றவணி இலக்கணத்தை அமைத்தே வருணிப்பர். நாள்தோறும் உதயமாகும் சூரியன் அன்றொரு நாள் ஒரு சிறப்புக் காரணத்துக்காக உதயமானன் என்று புலவர் கூறுதல் மரபு. ஏதோ ஒன்று 'வருக வருக' என்று அழைக்கவே சூரியன் உதயமானன் என்று வருணிப்பதும் கவி மரபு. இயற்கையை செயற்கையாக்கிக் கூறுவதே கவிஞர் பெருவழக்காகும். படிப்போர் உள்ளங்களில் தாம் கூறவந்த கருத்துக்களைப் பதிய வைப்பதே கவிஞரின் பிரதான குறிக்கோளாகும். இதன் பயனைக் கவிஞர் தமது கற்பனை ஆற்றலையும் வெளிப்படுத்தத் தவறுவதில்லை. இனி, குஞ்ஞு மூசு ஆலிம் புலவர் தற்குறிப்பேற்றவணி அமையப் பாடியுள்ள சூரிய உதயம் முதலியவற்றைப் பார்ப்போம்.

மாலையானதும் மேற்குத்திசை சிவப்பு நிறமாகியது. மேலைக்கடல் பீடமும் அதே தன்மையில் இருந்தது. நடுக்க முற்றதினால் சிவப்பு நிறப் போர்வையினால் போர்த்துக் கொண்டிருப்பது போல் காட்சியளித்தது. அதனால் நலிவு ஏற்பட்டுள்ளது. அந்த நலிவை நீக்கி விட வேண்டும் என்னும் நோக்கத்துடன் சூரியன் உறங்குவதற்காகப்போய் விட்டான் என இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது,

குடக்கடற் பீடமேற் குறுகி வெண்டிரை
மடக்கணை தன்னிலே வழுத்து பூவல்வா
ணடுக்கறப் போர்த்துமெய் நலிவை நீக்குவான்
படுக்கலென் றடைந்தனன் பருதி வேந்தனே

(அலியார் மழை யழைத்த படலம்: 37)

சூரியன் மறைந்து விட்டான். என்றாலும் ஒருவருக்கும் உறக்கம் வரவில்லை. அவர் துஞ்சாததற்குக் காரணம் இருள் தான். எனவே தான் அந்த இருளை நீக்குவதற்காக குளிர்மையான சந்திரன் தோன்றினான். குளிர்மை உறக்கத்துக்குத் தூண்டுகோலாக அமையும். இதனை இச்செய்யுள் இவ்வாறு விவரிக்கிறது.

சூரிய னடைந்தபின் சூரர் யாவரு
மாரியங் கவிகையர் மருகர் தாமுமெய்
வீரிய அம்றின்மேல் விருப்பின் துஞ்சிலாக்
கூரிருட் போக்கினர் குளிர்ச்சுரத் தினே

(அலியார் மழையழைத்த படலம்: 38)

போரிலே ஆயிரம் பேர் மாண்டனர். குதிரைகள் மாண்டன. அலி (றலி) அவர்களின் குதிரையுடன் பகைவர் எவ்வாறு போரிடலாம்? இவ்வாறு சிறந்த தேரையுடைய சூரியன் பதறினான். அதன் தேரால் இழுக்கப்பட்டு மேற்திசையில் உள்ள கடலிலே மறைந்தான். இதனையே புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

அன்னவெஞ் சமரின் அடையலர் களிலை
யாயிரர் புரவியோ டிறப்ப
மன்னவ ரலிதம் பரியினும் அடர்வ
தென்கொலென் றரியரி பதறி
மின்னொளி விடுக்கு மாழியந் தேரை
விரைந்தி ழுத்தன குடக்கதனால்
தன்னருங் கரங்க ளனைத்தையு மொடுக்கிச்
சார்ந்தனன் கடன்மிசை பகலோன்

(றசூலுல்லா படை வந்த படலம்: 1)

கடல் போன்ற சேனை முஸ்லிம்களுக்கு எதிராகப் போரிட வந்துள் ளனர். முஸ்லிம்களுடன் போர் புரிய முடியாமல் அவர்களைச் சுட்டுவிட வேண்டும். இக்கருத்தினைக் கொண்டு சூரியன் உதயமானுன் என் பதைக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

கடலென ஒலித்துறுங் காபிர் சேனையைச்
சுடவெனக் ககனிழிந் தரிய சூரியன்

(றசூலுல்லா படை வந்த படலம்: 48)

முஸ்லிம் மக்கள் பொறுமை உடையவர்கள். அவர்கள் சாதித்த வீரதீரச் செயல்களை சூரியன் கண்டான். அவற்றைப் பார்ப்பதற்குச் சந்திரனையும் நட்சத்திரங்களையும் இங்கே அழைத்து வரவேண்டும். இவ்வாறு சிந்தித்த சூரியன் மேற்குத் திசையில் உள்ள கடலிலே மறைந்தான், இக்கருத்தினை அமைத்துப் பாடப்பட்ட செய்யுள் இது வாகும்:

தீனோர் பொறுத் தமர்கள் செய்ததிறல் காண
மீனேடு திங்களை விளித்திவண் விடுப்பான்
வானேடி அப்புறம் வளர்ந்தொலி பொருந்து
பானேடி மேற்றிசை படுங்கடல் படிந்தான்

(அறமிப்னுதையான் வரு படலம்: 91)

சல்கா போர் புரி படலத்தில் வரும் முதல் மூன்று செய்யுட்களிலும் தற்குறிப்பேற்றவணி அமைய ஆசிரியர் பாடியுள்ளார். இஸ்லாம் அல் லாத தன்மையான குபிரின் இழிவு காண்பதற்காக சூரியன் உதயமா னுன் என முதலாவது பாடலிலும்

தீனெறிக் கிணங்கிலாச் செறுந னுவிவிண்
போனதாற் பிருதிவிற் புதைத்து மாதுற
வீனவெங் குபிரின ரிழிவு காண்பபோற்
பானுவுங் கதிர்விழி பரப்பி வந்தனன்

இருளில் சல்கா அம்மையார் வழிதவறக் கூடாது. ஆகவே சரியான பாதையைக் காட்ட வேண்டும் என்று சூரியன் உதயமானுன் என்று

அல்லிரு ளினில்வரு மரிய மாதினுக்
கெல்லைக டவறிடா தின்பங் கூர்ந்திட
நல்லிய லாறுகாட் டிகளி னட்புநே
ரொல்லையி னெழுந்தனன் உதய பானுவே

என இரண்டாம் செய்யுளிலும்

சல்கா அம்மையார் நீந்திக் கொண்டிருக்கிறார். அவரைத் துறைமுகத்துக்குச் சேர்க்க வேண்டும். ஆகவே ஒரு தோணியை ஆயிரம் சவளத்தால் துழாவி எடுத்துச் செல்லுதல் வேண்டும். இவ்வாறு சிந்தித்த வண்ணம் ஆயிரங் கதிரோனான சூரியன் உதயமானான் என்று

நிறைமதி முகமயி னீந்து மாற்றினற்
றுறைமுகஞ் சேர்க்கவோர் தோணி யாயிர
மறுவறு சவளத்தால் துழாவி வந்தபோல்
அறைகுடக் கரியரி அரியொடுந் தோன்றிற்றே

என மூன்றும் செய்யுளிலும் வந்துள்ளமை காண்க. தொடர்ச்சியாக ஒரு படலத்தில் உள்ள முதல் மூன்று செய்யுட்களிலும் தற்குறிப்பேற்றவணி அமைய அவற்றை முதன் முதல் பாடியபெருமை இறவுசுல்கூல் படைப் போர் என்னும் காப்பியத்தை 'இயற்றியுள்ள குஞ்சு மூசு ஆலிம் புலவரையே சாரும். (பார்க்க சதியெழுத்துப் படலம்: 63).

### பெண்கள் வருணனை

குஞ்சு மூசு ஆலிம் புலவரின் இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியத்தில் இரண்டு பெண் பாத்திரங்களே வந்துள்ளன. ஒன்று முதியவள். மற்றது சல்கா அம்மையாள். முதியவளைப் பற்றிக் குறிப்பிடுகையில் அவளைப் பற்றிய விவரங்கள் சிலவற்றை ஆசிரியர் தந்துள்ளார். அம்முதியவளுடைய உடல் கூனி இருந்தது. முதுமையை எய்தி இருந்தாள். வெள்ளை நூல் போன்று அவளுடைய தலைமயிர் நரைத்திருந்தது. அவளுடைய தலை நடுக்குறுவதாகக் காட்சியளித்தது. அவள் பேசும்பொழுதும் அவள் அனுபவித்துக் கொண்டிருக்கும் நடுக்கத்தின் தாக்கம் தோன்றக்கூடியதாக இருந்தது. எனினும் இனிய மொழியைப் பேசுவதாக இருந்தாள். சிவப்பு நிற ஆடையை அணிந்திருந்தாள். மின்னல் போன்று நடந்து முகம்மது நபி (சல்) அவர்களைச் சந்திக்க வந்திருந்தாள். இக்கருத்துக்களையே ஒரு பாடல் இவ்வாறு கொண்டுள்ளது.

... ... ... ...
முன்னிலை மாதோ உடலுற கூனு
முதுமையு நூனரைக் குழலும்
சென்னியி னடுக்கும் குதலையின் மொழியும்
சிவந்த நெய்த்தோர் உடையோடு
மின்னினை நடந்து முகம்மதுற் றிருக்கும்
வியன்பள்ளி வாயிலுட் புகுந்தாள்

(முதியாள் படலம் : 7)

இக்காப்பியத்தில் இடம் பெற்றுள்ள இரண்டாவது முக்கியமான பெண் பாத்திரம் சல்கா அம்மையார் ஆவார். அவ்வம்மையாரை வைத்துக்கொண்டே பெண்கள் வருணனையை விவரிக்க வேண்டிய நிர்ப்பந்தம் குஞ்ஞு மூசு ஆலிம் புலவருக்கு ஏற்பட்டது. இங்ஙனம் சல்கா அம்மையாரை வருணித்துள்ளார் ஆசிரியர். நட்சத்திரக் கூட்டத்துக்குத் தலைவனான சந்திரனின் ஒளியும் சூரியனின் பிரகாசமும் கலந்த தோற்றத்தை உடையவர் சல்கா அம்மையார். இவ்விரு ஒளிகளினாலும் தெளிந்தெடுத்து வடித்த நிறத்தைக் கொண்ட மேனியை உடையவர் இவ்வாறு உருவாக்கப்பட்டவரோ என ஐயுற வேண்டி இருந்தது. புள்ளியிடப்பட்ட சித்திரச் சீலை போன்று பட்டாடை அணிந்திருந்தார். அணிகலன்கள் பூண்டிருந்தார். மணியோ பொன்னோ நவரத்தினமோ என ஐயுறும்படி அழகாய் இருந்தாள். இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்திருந்தன.

வெள்ளிக் கரசாம் விதுவமுதும்
வெய்யோன் கதிருஞ் சரிகலந்தே
தெள்ளித் தெளித்து வடித்ததனால்
தெரிவை யுருச்செய் தியற்றியதோ
புள்ளிப் படமார் பணிமணியோ
பொன்னோ நவரத்தின அறலை
யள்ளிப் படைத்த வடிவினளோ
அவர்க டிருமுன் அணுகினளே

(சல்கா புறப்படு படலம்: 5)

காப்பியத்தின் ஓர் அமிசமாக அமைந்துள்ள கேசாதிபாத வருணனையை இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியத்திலும் அமைக்க சல்கா அம்மையாரின் உருவம் புலவருக்கு வாய்ப்பாய் அமைந்தது. இஸ்லாத்தைத் தழுவு முன்னர் அவ்வம்மையாரை வருணித்தால் அது இஸ்லாத்துக்கு முரணாகவும் அமையாது. சல்கா புறப்படு படலத்தில் உள்ள இருபத்தொன்பது செய்யுட்களில் அவ்வம்மையாரின் இருபத்தேழு உறுப்புக்களை குஞ்ஞு மூசு ஆலிம் புலவர் வருணித்துள்ளார். குழலும் முலையும் இவ்விரண்டு செய்யுட்களில் விவரிக்கப்பட்டுள்ளன. உவமை உருவக நயங்கள் அமைய இவ் வருணனைகளை மேற்கொண்டுள்ளார் ஆசிரியர்.

*தலைமயிர்*

'விரிதரு தளவ வெள்ளி பூத்திலங்கி
விளங்குகந் தரமெனும் குழலாள்' (7)

'எண்டிசை விளங்கு முடிப்பதற் கியைந்தங்
கெழிலிரு டிரண்டதீள் குழலாள்' (8)

நெற்றி

'குழலெனும் பெயர்கொள் கருமையின் கீழ்பாற்
பிறந்தகோ இளம்பிறை நுதலாள்' (9)

புருவம்

'மேற்றிசைக் கறையின் உறுநிறப் பவள
மென்கொடி யுறழ்புரு வத்தாள்' (10)

கண்கள்

'கொலைசெயக் கருதிக் கடுவொடு மினங்கக்
கூற்றுடன் பழகுமை விழியாள்' (11)

காது

'மங்கிலூ சனற் கத்திரி வள்ளையைப்
'பங்கமாகப் பழிக்கும்பொற் காதினள்' (12)

கன்னம்

'தக்கதாகித் தயங்கி யதண்படி
மக்கலத்தினும் வாய்ந்த கபோலத்தாள்' (13)

மூக்கு

'கொள்ள நீன்று கொளும்வள நாசியாள்' (14)

இதழ்

'படியிலஞ் சுகமும் பூவையுமாயப்
படுத்துபண் வாயி னிதழாள்' (15)

பற்கள்

'கல்லென உருகா மனங்கரைந் துருகக்
கற்றபுன் னகைதரு நகையாள்' (16)

முகம்

'சாதிமணி மேவிய சரோருக மதென்ன
மேதினியின் வெண்மணி விளங்கும் வதனத்தாள்' (17)

நாக்கு

'ஈனமறு கிள்ளைகுள லிக்கரிய பூவை
தானுறழ்வு ருமதுரத் தாலினுரை யாளே' (18)

கழுத்து

'பொருவினும் பொருவா மணியணி பலவும்
பூண்டழ கிலங்குமென் கழுத்தாள்' (19)

தோள்

'இந்நிலத்தினி லீர்வதால்
துன்னநீக்குமென் றேளினுள்' (20)

கை

'வாய்ந்தமன்னர் வலிகடான்
தேய்ந்திடச்செயுஞ் செங்கையாள் (21)

அகங்கை

'வாய்ந்த மன்னர் வலிகடான்
தேய்ந்திடச்செயுஞ் செங்கையாள்' (22)

கைவிரல்

'புனல் புகப்பொனி ஞழியை
வளையு மென்விரன் மன்கையாள்' (23)

நகம்

'அஞ்சுகத்தல கானதின்
மிஞ்சுகூருகிர் மேவினுள்' (24)

முலை

'பெரும்பதக் கரிக்கோ டிவைகளை முடுக்கிப்
பெருமையுற் றிலங்குபொற் றனத்தாள்' (25)

'தரளவொண் மணிப்பூண் டழைத்துழும் மதத்தின்
தந்தியைப் பொருங்கன தனத்தாள்' (26)

மயிரொழுக்கு

'பைங்கொடி நிலையோ மதன்மய நூலோ
பகரடி வயிற்றுறு முடியாள் (27)

இடை

'பாலினி லிருப்பக் கற்பெனும் வேலி
படர்கலை விசித்தமெல் லிடையாள்' (28)

'இந்நிலத் திசைமா ரனினுடல் போன்றும்
இல்லையுண் டெனவுறு மிடையாள்' (29)

தொடை

'கரம்புழை யெனவே கடிந்துமென் மையவாய்க்
கவினுற இலங்குசெங் குறங்காள்' (30)

கணைக்கால்

'உரம்பெறு கணைத்தூ ணியைநற்கா களத்தை
உவமைசொல் லருங்கணைக் காலான் (30)

காற்கரண்டை

'பொன்னிஞற் சமைத்த மணித்தரா சுவமை (31)
பொருந்திஞும் பொருந்துருப் பரடாள்'

அடி

'வன்னமார் சுமடப் போத்தக மெனவே (31)
மணிச்சிலம் பிசைபுற வடியாள்'

குதி

'மின்னஞர் கரந்தொட் டாடும்பொற் றிரட்டும் (31)
விளங்கு பந்தெனுஞ் செழுங் குதியாள்'

கால்விரல்

'பன்னுமோர் வயிரக் கதிருகி ரமைசெய் (31)
பவளமென் கொழுந்தணி விரலாள்'

பாதம்

'கனங்கிடந் தனைய கருங்குழன் மடவார் (32)
கரங்கொடு வருடுபொற் பதத்தாள்

நடை

மலையினிற் பயிலு மிளம்பிடி யானை
வருகின்ற சாயலோ அல்லால்
இலங்கிய அருங்கட் டூவியின் தோகை
யிணையடி பெயர்த்ததோ கமலத்
துலவிய நறும்போ தினிற்றிரி அனங்க (33)
ஞலவலோ சொல்லரு நடையாள்

அல்குர்ஆன் கருத்து

இஸ்லாத்துக்கு அடிப்படையாக அமைவது அல்குர்ஆன். எனவே அல்குர்ஆன் கருத்துக்கள் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய காப்பியங்களில் அமைந்துவிடுவது இயல்பே. நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்களின் வாழ்க்கையோடு தொடர்புடைய காப்பியங் களெனின் அத்தகைய கருத்துக்கள் மிகுதியாக இடம்பெறும். இறவுசுல்கூல் படைப்போரிலும் அத்தகைய அல்குர்ஆன் கருத்துக்கள் வந்துள்ளன.

முஸ்லிம் அல்லாதார் பலம் குன்றி அஞ்சினவர்களாய் ஓடினர் அப்பொழுது முஸ்லிம் போர் வீரர் அல்குர்ஆன் திருவசனம் ஒன்றை ஓதியவர்களாய் அவர்களைத் துரத்தினர். அந்த அல்குர்ஆன் ஆயத்து (திருவசனம்) இதுதான்,

"(ஈசாவை நிராகரித்த) அவர்கள்
(அவரைக் கொலை செய்யச்) சதி
செய்தார்கள். (எனினும் அல்லாஹ்
அவரை இரட்சித்துக் கொண்டு
தங்களில் ஒருவனையே அவர்கள்
கொலை செய்து விடும்படி) அல்லாஹ்
(அவர்களுக்குச்) சதி செய்து விட்டான்.
அல்லாஹ் சதி செய்பவர்களில்
மிகைத்தவன்." (3—54)

கைறான அதாவது நல்லனவற்றுக்குச் சதி செய்வதில் அல்லாஹ்வை விட மிஞ்சியவர்கள் இல்லை என்பதே ஒட்டு மொத்தமான கருத்தாகும். முஸ்லிம்கள் இந்த ஆயத்தை ஓதியவர்களாய்ப் பகைவர்களை விரட்டினர் என்பது இவ்வாறு ஒரு செய்யுளில் அமைந்துள்ளது.

உதித்தவவ் வாயத்தி னுடைய உட்பொருள்
சதித்துறும் அவரையே சதிப்பன் ஆதியு
கதித்தவச் சதியரின் கைறுள்ளா னென்றே
யிதைத்தனி யோதியங் கீண்டி வெட்டினர்.
(முகல்கில் போருக்கெழுந்த படலம்: 124)

ஒரு நாள் இறவுசுல்கூலுக்கும் அலி (றலி) அவர்களுக்கும் போர் மும்முரமாக நடந்தது. அப்பொழுது எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அல்லாஹ்வினல் ஏவப்பட்ட கடந்தை என்றழைக்கப்படும் ஒரு வகை வண்டுகள் சிறகுகளை விரித்துக் கொண்டு அங்கு வந்தன. வந்து பகைவரைத் தாக்கின. கடந்தை இனத்தைச் சேர்ந்த வண்டுகள் பல்லும் முள்ளும் உள்ளவை, இறவுசுல்கூல் சேனையில் புகுந்த கடந்தை வண்டுகள் அவற்றின் பற்களால் பகைவரின் முகங்களைக் கிழித்தன. குத்தின. முகத்திலே குழி ஏற்படும் வரை தாக்கின. இதனுல் பகைவர் நிலை தடுமாறினர். அலங்குலைந்தனர். ஐயோ எனக் கூச்சலிட்டனர். தலைக்குப்புற விழுந்தனர். விழுந்து விழுந்து ஓடினர். பெரும் இன்னலுக்கு ஆளாகினர். அவர்களுடைய மமதை அடங்கியது. இக்கருத்துக்களை ஒரு செய்யுளில் குஞ்சு மூசு ஆலிம் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

புகுந்தவை யாவும் பல்லால் பூமுகங் குழிய வூன்ற
அகந்தடு மாறிக் காபிர் அலங்குலைந் தையோ வென்னச்
செகந்தனின் முகங்கீ ழாகிச் சிதைவுற விழுந்தங் கோடி
மிகுந்தவெவ் விதன முற்று மிடுக்கறுந் தனர்கள் அன்றே
(கடந்தைப் படலம்: 11)

யானை ஆண்டு ஏற்படக் காரணமாயிருந்த நிகழ்ச்சியை இது நினைவுபடுத்துகிறது, அப்றஹா என்பவன் யானைப்படையுடன் மக்காவைக் கைப்பாற்ற வந்தான். மக்கா மக்கள் அவனை எதிர்க்க வில்லை. அப்பொழுது அல்லாஹ் அபாபீல் என்னும் பறவைகளை அனுப்பினான். அவை சுடப்பட்ட சிறிய கற்களைக் கால்களில் கவ்விக் கொண்டு கூட்டம் கூட்டமாக வந்தன. அப்பறவைகள் அந்த யானை களைச் சுடப்பட்ட அக்கற்களினால் தாக்கி யானைப்படையை அழியச் செய்தன. அப்றஹாவையும் பின் வாங்கச் செய்தன. மக்கமா நகர மும் காப்பாற்றப்பட்டது, இந்தச் சம்பவம் அல்குர் ஆனிலே

''அவர்கள்மீது பட்சிகளைக் கூட்டங்
கூட்டமாக அவன் அனுப்பி வைத்தான்
(கெட்டியான) சுடப்பட்ட சிறிய கற்களை
அவை அவர்கள் மீது எறிந்தன.'' (106-3,4)

என அந்நிகழ்ச்சி குறிப்பிடப்பட்டுள்ளது.

இறவுசுல்கூலுக்கும் முஸ்லிம் மக்களுக்கும் இடையே நடந்த போரில் எதிரிகளைத் தாக்கி அவர்களைச் சின்னபின்னமாக்கிய பல்லும் முள்ளும் உள்ள காந்தள் வண்டுகள் அப்றஹாவை அழித்த அபாபீல் பறவைகளுடன் ஓரளவு ஒப்பிடக்கூடியதாக இருப்பதைக் காணலாம்.

ஒரு செய்யுளில் ஓர் அறபுக் கூற்றும் அதனை அடுத்த செய்யுளின் அக்கூற்றின் பொருளையும் தந்துள்ளார் ஆசிரியர். 'யாகியாதல் முஸ்த்தகீம் தீனே' என்றும் 'அறுகமற் றாகிமீன்' என்னும் அறபுச் சொற்றொடர்கள் இரண்டும் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந் துள்ளன. இச்செய்யுளில் புலவரே அதன் மகனாவை — கருத்தை அடுத்துவரும் செய்யுளில் தரப்போவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

விழைவொடு மவரிவ்வாறு மேன்மையர்க் கியற்றுந் தோறு
மொழிகுவர் யாகியாதல் முஸ்த்தகீம் தீனே யென்றும்
அழகுறுமதற் பின்னேயா அறுகமற் றாகிமீ னென்
றெழிலொடு மிவ்வி ரண்டி னிலங்கிய மகனாகக் கேண்மோ

(சுபைறு சிறைப்படு படலம் : 50)

'யாகியாதல் முஸ்த்தகீம் தீனே' என்பதன் கருத்து 'உதவி கேட்போர்க் கெல்லாம் உதவி செய்பவனே' என்றும் 'அறுகமற்றாகிமீன்' என்பதன் கருத்து 'சிறப்பாகக் கிருபை செய்யும் ஏற்றம் உள்ளவனே' என்றும் அடுத்த செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

உதவிகள் கேட்போர்க் கெல்லா முதவிசெய் பவனே யென்று
மிதமுறுங் கிருபைசெய்யு மேற்றமுள்ளவனே யென்று
மதினூறு மகனா வாகு மப்படிச் சுபைறங் கார
மதினம்விட் டலியா ரேகும் வழியினரர் வரவு சொல்லாம்.

(சுபைறுசிறைப் படு படலம் : 51)

**பொதுக் கூற்று**

ஒருவன் தான் செய்த காரியத்துக்குத் தானே பலன் அனுபவிப்பான்: இது உலக நியதி. 'வினை விதைத்தவன் வினையறுப்பான்: தினை விதைத்தவன் தினையறுப்பான்' என்பது பழமொழி. இதனையே ஒரு செய்யுளில் குஞ்ஞு மூசு ஆலிம் புலவர் இவ்வாறு அமைத்துள்ளார்.

வினை விதைத்தவன் வினைக்குலை பெறுவதைப் போலும்
தினை விதைத்தவன் றினைக்குலை பெறுவதைப் போலும்
பனுச திப்பெனும் விதைமனம் விதைத்தவப் பலன்பெற்
றனிலம் போன்மிகு தொலையிரிந் திருந்தன னரசன்.

(சதியெழுத்துப் படலம் : 63)

மற்றொரு செய்யுளில் வேறொரு பொதுக் கூற்று இடம் பெற்றுள்ளது. வாக்குண்டாம் என்னும் மூதுரையில்

நெல்லுக் கிரைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கு மாங்கே பொசியுமாம்—தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்
டெல்லார்க்கும் பெய்யும் மழை

(10)

இவ்வாக்குண்டாம் செய்யுளின் கருத்தைத் தழுவி அறபு நாட்டுச் செய்தி ஒன்றைக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். முகம்மது நபி (சல்) அவர்கள் எல்லோருக்கும் நன்மையே செய்வார்கள். அவர்கள் பொருட்டால் தந்தையர் நற்பலன் அடைவாராக. நல்லொழுக்கத்தையும் தரும சிந்தனையையும் நட்புத் தன்மையையும் பெருமானர் பொருட்டால் எமக்கு அளிப்பாயாக அல்லாவே என வேண்டுகிருர். அல்லாஹ்வைக் குறிக்க இங்கே இலாஹி என்னும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. இக்கருத்தினையே ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் ;

நெல்வய னிரப்பவிடு நீரொழுகி அங்கார்
புல்லினை வளர்த்திடுதல் போல்நபி பொருட்டால்
சொல்லுமெனின் தந்தையர்தம் துன்புபல நீக்கி
நல்லிய லறம்பெருக நட்பருளி லாகி

(றசூலுல்லா மதீனம் புக்க படலம் : 55)

**சொல்லாட்சி**

குஞ்ஞு மூசு ஆலிம் புலவர் அவர்கள் தமது இறவுசுல்கூல் படைப் போர் என்னும் காப்பியத்தில் சில சொற்களை அருமையாக உபயோகித் துள்ளார்,

இரணியம் என்பது அத்தகைய சொற்களில் ஒன்று. இரணியம் என்ருல் பொன் என்பது பொருள். இச்சொல் இதே கருத்தில் இவ்வாறு ஒரு செய்யுளில் இடம்பெற்றுள்ளது.

தரணியி னிவ்வே ழையின் மகவுகளைத்
தமர்களைக் கொடுங் கொலைப் படுத்தி
இரணிய மனைத்துங் கவர்ந்து கொண்டெனை
இப்படிவிடுத் தனனொரு பாவி
(முதியாள் படலம் : 11)

இரிஞன் என்பதற்கு பகைவன் என்பது பொருள் (திவாகரம்). இச் சொல் இதே கருத்தில் இக்காப்பியத்தில்

இரிஞனிவ் விதநர கெய்தப் பின்னுமீ
ரொருபது வீரரை யொன்ரெென் ருகவே
பொருதொளிர் வாளினல் போழ்ந்து வீழ்த்தினர்
கருதலர் கண்டகங் கலங்கி நின்றனர்
(முகல்கில் போர்க்கெழுந்த படலம்: 117)

எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

உபாயிகள் என்பது உபாயஞ் செய்பவர்கள் என்று பொருள்படும். உபாயிகள் என்னும் சொல் ஒரு செய்யுளில் இதே கருத்தில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

ஆட்டிறத் தினர்களாய் அதற்கு பாயிகள்
வாட்டமின்றி யென்முனம் வருக என்றலும்
(அலியார் கோட்டை புக்க படலம்: 2)

உவ்வி என்பது தலை என்கிறது திவாகரம். தலை என்னும் பொரு ளில் உவ்வி என்னும் சொல்லை குஞ்ஞு மூசு ஆலிம் புலவர் இவ்வாறு ஆண்டுள்ளார்.

இப்படிச் சேர்ந்தவ னுணர்வந் துற்றெழுந்
தொப்பொடும் இருக்கையில் மகன்ம கனுவ்வி
கைப்பட வேந்தியக் களத்திற் ரேன்றலும்
செப்பவ னெஞ்சுறச் சேர்த்துப் புல்லினன்
(துகாமத்துச் சிறைபடு படலம்: 38)

உவன் என்பது முன்னிற்பவனைக் குறிக்கப் பயன்படுத்தும் ஒரு சொல்லாகும். பரிபாடலில் உவன் என்னும் இச்சொல் 'பார்த்தானுவன்' (12:55) என வந்துள்ளது. இக்காப்பிய ஆசிரியரும் உவன் என்னும் இச்சொல்லை முன்னிற்பவனைக் குறிக்க இவ்வாறு ஆண்டுள்ளார்.

வரவு நன்றுநன் ருமதி மன்னநீ
ரிய நீனிசு லாமுற வாகியே
பிருத வுசுற லெற்குப் பிரியமென்
றுரைசெய் தாரவை கேட்டங் குவனுமே

(அறம்மிபுனுதையான் வருபடலம்: 58)

உறவி என்ருல் எறும்பு என்பது பொருள். இவ்வாசிரியர் இச்சொல்லை இதே முறையில் அவையடக்கம் கூறும் படலத்தில் குறிப்பிட்டுள்ளார் :

சிந்தி னெதிராய் உறவி சேருவது போலும்

(கடவுள் வாழ்த்து: 36)

உனி என்பது உன்னி என்னும் சொல்லிலிருந்து பெறப்பட்டுள்ளது. அன்னம் என்னும் சொல் சில சமயங்களில் கவிதையில் அனம் என்று வருவதுபோல் இங்கே உன்னி என்பது உனி என வந்துள்ளது. உன்னி என்ருல் குதிரை என்பது பொருள்.

அலியுனி மேற்கொள அம்று நாதரும்

(குசுஆ வரு படலம் : 34)

என உனி என்னும் சொல் குதிரை என்ற பொருளில் வந்துள்ளது.

ஐ என்ருல் அழகு (பிங்கலந்தை). ஐ என்ற சொல்லை ஆயிரத்தோடு சேர்த்திருப்பதால் ஐயாயிரம் என்று கொள்ள வாய்ப்பு உண்டு. அது ஐயாயிரம் என்னும் எண்ணைக் குறிக்கவில்லை. அழகிய ஆயிரம் மிருகங்கள் என்பதையே ஐயாயிரமாவை என்னும் சொற்ருெடர் குறிப்பிடுகின்றது. இச்சொற்ருெடர் அமைந்துள்ள செய்யுளின் முதலாம் அடி வருமாறு :

ஐயாயிர மாவைப் புவி படைவீரர்

(உக்காசு வதைப்படலம் : 9)

சூழ்ச்சம் என்பது சூழ்ச்சி என்பதன் திரிபாகும். இச்சொல் ஆலோசனை, எண்ணங்கள் மறைமுகமாக எனப் பொருள்படும்.

துள்ளுபாட லத்திருந்து சூழ்ச்சமாக விட்டனன்

(சுகைறுல் ஆமிறீமான் கொண்ட படலம் : 58)

சுந்தர வேவினைச் சூழ்ச்ச மாகவே
(குசுஆவரு படலம் : 26)

தால் என்ருல் நாக்கு என்பது பொருள். திருவாசகத்தில் தால் என்பது நா எனப் பொருள்பட (38 : 4)

பச்சைத் தாலர வாட்டீ

என வந்துள்ளது. கேசாதிபாத வருணனையில் நா வினை வருணிக்கத் தால் என்னும் சொல் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

தேனமுதி யாழ்கதலி சீனிமுதிர் பாகோ
காஞெழுகு மாங்கனிகற் கண்டினி வருக்கை
யீனமறு கிள்ளைகுள விக்கரிய பூவை
தானுறழ்வ ருமதுரத் தாலினுரை யாளே
(சல்கா புறப்படு படலம் : 18)

நீரைக் குறிக்கும் சலம் முதலிய சொற்களைப் பயன்படுத்தும் பொழுது ஜலம் என்று ஜ என்றும் கிரந்த எழுத்தை ஆசிரியர் பயன் படுத்தி இருப்பதைக் காணலாம்.

செயமணி என்பது ஜெயமணி என வந்துள்ளது காண்க
(சுபைறு சிறைப்படு படலம்; 38)

## இலக்கணக் குறிப்பு

செய்யும் என்னும் ஏவல் செய்ம் என வந்துள்ளது'
காவலார் நூறுபேர் சுரத்திற் காட்டியிப்
பாவமுழ் பவர்தமைப் பதனஞ் செய்ம்மெனக்
(ஜின் வதைப் படலம்: 28)

இதே போன்று சொல்லும் என்பது சொன்ம் என வந்துள்ளது. சொல்லும் என்னும் ஏவல் வினையில் உள்ள லுகர உயிர்மெய் குறைந்த சொல்+ம் என வந்து சொன்ம் என உருவாகி உள்ளது.

தேவைத்திரு டிக்கொண்டுறு திறம்யாதுசொன் மென்ருர்
(அம்று மப்துல்லாவும் சுபைறை பற்ருசைக் கொணர்ந்த படலம்: 99)

ஏராக நீவிர்கொடிங் கெய்தவைசொன் மென்ருர்
(அம்று மப்துல்லாவும் சுபைறை பற்ருசைக் கொணர்ந்த படலம்: 142)

கடுகளவெனினுந் தீன்ரு துறக்கண்டவ் வரசன் செய்கே
சுடுமுண வருந்தா தென்னை சொன்மென்ருன் அவனுஞ் சொல்வான்
(இபுலீசு புத்துக் கொணர்ந்த படலம்: 39)

தொழுதெழுந்திற சூல்சிறைக் காபிர்கண்
முழுமையும்வரு வித்துயர் முத்தியின்
அழகுசேர்கலி மாச்சொன்மென் ருரதிற்
கொழுகிலாரைக் கழுகூட்டச் செய்தனர்

(இக்றிமத்தும் ஜனுதிலு மீமான் கொண்ட படலம்: 2)

**ஓசை நயம்**

குஞ்ஞு மூசு ஆலிம் புலவர் ஒரே விதமான சொற்களை அமைத்துச் செய்யுட்களில் ஓசை நயத்தைப் பெற்றுள்ளார். சொற்களைப் பயன்படுத்தி ஒரு செய்யுளில் ஓசை நயத்தைப் பெற்றுள்ளார் ஆசிரியர்:

படபடென்னப் பதின்மரைக் கொன்றவன்
அடலிலேயுட லற்றுவி ழுந்ததைத்
திடமடர்ந்தவன் கண்டு திடுக்கொடுத்
தடதடென்னத் தனதரி யேறினுன்

(சுகைறுல் ஆமீறீமான் கொண்ட படலம்: 45)

மற்ருெரு பாடலிலும் இதே பாணியை ஆசிரியர் இவ்வாறு பயன் படுத்தி உள்ளார் :

மடமடமடென வோடி வலிகளும் பலமுந் தேய்த்தே
படபடபடென வாவிப் பதைபதைத் திடுவர் மன்னே

(சுந்தலத்து வதைப் படலம்: 18)

வேருெரு செய்யுளில் ஓசை நயம் இவ்வாறு அமைந்துள்ளது. சில எழுத்துக்களை பலமுறை உபயோகிப்பதன் மூலம் ஓசை நயத்தைப்பெற் றுள்ளார் ஆசிரியர்.

இருவரும் இருவரை எதிர்த்தது என்னவே
ஒருவருக் கொருவருள் அஞ்சி டாமலே
பொருவறப் பொருதனர் பொருதும் போதலி
வெருவறத் தாக்கினர் வெய்ய வாளினுல்

(அலியாரும் இறவுசுல்கூலும் போர்புரி படலம்; 28)

# பதினேராவது இயல்

## புதூகுச்சாம்

செய்யுட்களின் எண்ணிக்கையைப் பொறுத்தவரையில் சேகுனப் புலவரின் புதூகுச்சாம் பாரிய காவியமாகத் திகழ்கின்றது. இந்த அடிப்படையில் முதலாவது காப்பியமாக விளங்குகின்றது புதூகுச்சாம். சேகுனப் புலவரால் இயற்றப்பட்ட நான்காவது காப்பியமிதுவாகும். 'பு(த்)தூஹ்' என்பது 'பத்ஹு' என்பதன் பன்மையாகும். பத்ஹு வெற்றி எனப் பொருள்படும். தமிழ் இலக்கிய மரபில் வாகை எனப் படுவதும் இதுவே. எனவே பு(த்)தூ ஹுஷ்ஷாம்' எனுஞ் சொற்ருெடர் 'ஷாம் நாட்டு வெற்றிகள் அல்லது ஷாம் நாட்டை வென்று கைப் பற்றிக் கொள்ளல்' என்னும் பொருள் தருவதென்பது தெளிவு.

ஷாம் நாடு அறபு நாட்டின் வடதிசையில் அமைந்து உரோமப் பேரரசின் ஒரு பகுதியாயிருந்தது. 'சிரியா' என்பது அந்நாட்டின் இக்காலப் பெயர்.

ஷாம் என்பது அறபு வழக்கில் இடக்கைப் பக்கத்தில் இருப்பதைக் குறிக்கும். அறபு நாட்டார் சூரியன் உதிக்கும் திக்கை நோக்கி நிற் குங்கால் இடப்புறமாய் அமைந்து விளங்கும் நாடு ஷாம் என அவர் களால் வழங்கப்பட்டது.

எம் பெருமானர் (ஸல்) அவர்களின் காலத்திலேயே உரோம நாட்டுப் போர் ஆரம்பித்துவிட்டது. செய்யிதினு அபூபக்கர் சித்தீக்கு (றலி), செய்யிதினு உமறு பாறூக்கு (றலி) ஆகிய இரு பெரு வேந்தர் காலத்திலும் தொடர்ந்து பூரண வெற்றியுடன் நிறைவெய்தியது. இவ் வெற்றி வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு எழுந்ததே 'புதூ குஷ்ஷாம்' காப்பியம்.

இதனையே ஒரு பாடலில் சேகுனப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்:

நவக்குண முகம்ம தெங்க
　　ளுயகர் துடக்கும் வெம்போர்
துவக்கபூ பக்கர் காலந்
　　தொடர்ந்தபின் உமறு கத்தா
புவக்குமச் சாமு றூம்க
　　ளொக்கலின் வென்று வாகை
புவிக்குளே பூண்ட தன்மை
　　புதூகுச்சாம் என்ப மாதோ

(கடவுள் வாழ்த்து : 31)

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற் பயன்களையும் அடக்கியுள்ளது இந்நூல் என்று ஆசிரியரே கூறுகின்றார் இவ்வாறு ஒரு செய்யுளில்.

நன்னபி முதல மூவர் நாட்டிய அரசின் மாட்சித்
துன்னிய அறமு நீதி தொடரம ரதனாற் செம்பொன்
மன்னிய வருவாய் தன்னால் மல்கிய வின்ப மன்னோர்
சொன்னயம் வீடு நான்குந் தொக்கநாற் பயன்மெய் நூலே

(கடவுள் வாழ்த்து: 32)

### காப்பிய அமைப்பு

முகம்மதிய்யா, சித்தீக்கிய்யா, பாறூக்கிய்யா என்னும் மூன்று காண்டங்கள் இக்காப்பியத்தில் உண்டு. முதற்காண்டம் முகம்மதிய்யா பதினொரு படலங்களையும் தொளாயிரத்து அறுபத்தைந்து திருவிருத்தங்களையும் கொண்டது. இரண்டாம் காண்டம் சித்தீக்கிய்யா பதின் மூன்று படலங்களையும் ஆயிரத்து எழுநூற்று நாற்பத்தேழு திருவிருத்தங்களையும், மூன்றாங் காண்டம் பாறூக்கிய்யா முப்பத்தேழு படலங்களையும், நாலாயிரத்து எழுபத்து நான்கு திருவிருத்தங்களையும் கொண்டன.

எனவே மூன்று காண்டங்களும் அறுபத்தொரு படலங்களும் ஆறாயிரத்து எழுநூற்று எண்பத்தாறு திருவிருத்தங்களும் காப்பு விருத்த மொன்றும் இப்பெருங் காப்பியத்திலடங்கியுள்ளன.

புலவர் நாயகம் ஷெய்கு அப்துல் காதிர் நெய்னார் லெப்பை ஆலிம் அவர்கள் ஹிஜ்ரீ 1236 றஜபுத் திங்கள் 10ஆம் நாள் வெள்ளிக் கிழமையன்று (கி.பி. 1821—ஏப்ரல் 13) தாம் இந்நூலை அரங்கேற்றிய தாகக் கூறியுள்ளார்.

### நூலாசிரியர் வரலாறு

புத்தூஹுஷ்ஷாம் என்கிற புராணத்தைப் பாடியருளியவர் பாவகைவல்ல புராணங்கள் செய்த புலவர் நாயகம் செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் அவர்கள் ஆவர். இப்பெயர் இவர் காலத்தில் சேகுனாப் புலவர் என இனிமையுற வழங்கப்பட்டது.

காயற் பட்டணத்து இரத்தின வணிகர் மரபொன்றில் இவர் பிறந்தார். இளமையிலேயே கவிபாடும் இயல்பினைப் பெற்றிருந்தார். தமிழ், அறபு, பாரசீகம், வடமொழி முதலாம் பன்மொழிகளைக் கற்றுத் தேர்ந்தார். வேத நூல் வித்தகராய் விளங்கியதோடு திருக்குர்ஆனை

மனப்பாடம் செய்து 'ஹாபிலு' ஆகவும் விளங்கினர். தவ ஒழுக்கங்களில் மேம்பட்டு இறைநேசச் செல்வராய்த் திகழ்ந்தார். இருமுறை திருமக்கமாநகர் சென்று ஹஜ்ஜுச் செய்தார். இறையன்பரான அவுலியாக்களுள் ஒருவகையினராம் 'அப்தால்'களுள் இவரும் ஒருவரெனப் பெரியோர்கள் இவரைப் போற்றினர்.

ஞானமேதை குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்களோடு ஒருசாலை மாணுக்கராகக் கல்வி பயின்றவர் இவர். அப்பெரியாரின் பாடல்களுக்கு 'வாயுறை வாழ்த்து', 'ஒருபா ஒரு பஃது', தோத்திரப்பா என்பன பாடிச் சிறப்பித்துள்ளார். இருவரும் ஒத்த வயதினர் என்று கூறப்படுகின்றது. மஸ்தான்சாகிப் அவர்கள் ஹிஜ்ரீ 1207இல் பிறந்தனர் (கி.பி.1792-93) எனக் கூறப்படுவதால் புலவர் நாயகமும் இக்காலப் பகுதியிலேயே பிறந்தவர் எனக் கொள்ளலாம். புலவர் நாயகம் 'வபாத்' ஆன காலம் ஹிஜ்ரீ 1268 துல் கஃதா 27 (கி.பி. 12.9.1852 ஞாயிறு பிற்பகல் திங்கள் இரவு) ஆகும். எனவே புலவர் நாயகம் அறுபது ஆண்டு காலம் இவ்வுலகில் வாழ்ந்திருந்தனர் எனலாம்.

இப்பெருமகனுரின் சாதனைகள் மிகப்பல. தமிழ்ப் பெரும் புலவர் என்னும் வகையில் 19ஆம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் இவர் நெடிதுயர்ந்து தோன்றுகின்றுர்.

பதினறு அவதானங்களைப் புரிந்த சோடசாவதானியாக விளங்கிய புலவர் நாயகம் அக்காலத் தமிழகப் புலவர்களான திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர், சபாபதி முதலியார் முதலாம் பெருமக்களின் நட்புக்கும் பாத்திரமாக விளங்கினர்.

குஞ்சு மூசுப் புலவர், யாழ்ப்பாணத்து பதுறுத்தீன் புலவர், வண்ணக்களஞ்சியப் புலவர், தரும ஷபாஅத்து மாலை பாடிய அருள்வாக்கி செய்குஅப்துல் காதிறுப் புலவர் முதலியோர் இவர் காலத்தவரே.

ஈழத்தில் வாழ்ந்த மருதமுனை சின்ன ஆலிம் அப்பா (மீரா லெப்பை ஆலிம்) அவர்களும் இக்காலத்தில் வாழ்ந்தவரேயாவர்.

19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் புகழ் பரப்பிய தமிழகத்துச் சிறந்த புலவர் பலர் புலவர் நாயகம் பெரும் புகழ் பரப்பி விளங்கிய காலப் பகுதியில் பிறந்துள்ளமை குறிக்கத்தக்கது.

மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை (1815) ஆறுமுகம் நாவலர் (1822) இராமலிங்க வள்ளலார் (1823) சி. வை. தாமோதரம் பிள்ளை (1833) வித்துவ சிரோமணி பொன்னம்பல பிள்ளை (1836) ஆகிய பெருந்தமிழ்ப் புலவர்கள் பிறந்த காலத்தில் புலவர் நாயகம் தமிழிலக்கிய உலகில் 'சாம்ராட்' ஆக கொடிகட்டிப் பறந்து கொண்டிருந்தார்.

மிறைக் கவிகள் பலபாடிச் சொல்லலங்கார வித்தையிற் கைதேர்ந்த புலவர் நாயகம் சிறுவரும் உணரத்தக்க இலகு நடையிலும் நூல்களை யாத்தளித்துள்ளார் என்பது புதுமையாகவேயுள்ளது. நல்லொழுக்கங் களையும் நீதிகளையும் புகட்டும் 'சொர்க்க நீதி' என்னும் நூல் சிறுவர்க் கும் உபயோகமாகக் கூடியவாறு 'உலகநீதி'யே போல் அமைந்து விளங்குகிறது. இது மிகவும் சிறந்த அறநூலாகும்.

முன்னேரியற்றிய நூல்களை அச்சிட்டு வெளியாக்குவதிலும் புலவர் நாயகம் முன்னேடியாகத் திகழ்கின்ருர். உமறுப்புலவர் பெருமானின் சீருப்புராணத்தைச் செவ்வனே பதிப்பித்தவர் இவரே. பல ஏட்டுப் பிரதிகளிலிருந்து ஆராய்ந்தெடுத்து ஹிஜ்ரீ 1258ல் (கி. பி. 1842) அதனை அச்சிட்டு வெளியாக்கினுர்.

தமிழ் நூற்பதிப்பின் முன்னேடியாகிய மழவை மகாலிங்கையர் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தை (நச்சினுர்க்கினியம்) முதன் முத லாக 1847இல் அச்சிட்டுள்ளார். இதனை நோக்குமிடத்துப் புலவர் நாயகம் இத்துறையில் அவருக்கும் முன்னேடியாய் விளங்குகிருர் என் பது குறிப்பிடத்தக்கது.

தமது நூல்களுள் நாகையந்தாதியை மட்டுமே 1843இல் இவர் அச்சிட்டார். புலவர் நாயகத்துக்குத் துணைபுரிந்து சீருப்புராணத்தை அச்சிடுவித்த கூட்டு முயற்சியாளர் யாழ்ப்பாணத்தவரான பரிகாரி மரைக்கார் பக்கீர் முகியித்தீன் என்னும் கெழுதகை அறிஞரும் வள்ளி யோருமாவார் என்பது ஈழத்தவருக்குப் பெருமை தருவதாகும்.

யாழ் பக்கீர் முகியித்தீன் அவர்களே காசீம் புலவரின் திருப்புகழை ஹிஜ்ரீ 1869 (1852) இலும் புலவர் நாயகத்தின் 'குத்பு நாயக'த்தை ஹிஜ்ரீ 1271 (1854) இலும் சின்னச் சீருவை ஹிஜ்ரீ 1272 (1856) இலும் அச்சிட்டார்.

ஆசிரியர் தாம் காயல் நகரைச் சேர்ந்தவர் என்றும் மணிப்பரீட் சையில் சிறந்தவரான மானுப்பிள்ளை லெப்பை ஆலிமின் மகனை கபீபு முகம்மது லெப்பை என்பாரின் புதல்வன் என்றும் ஒரு பாடலில் இவ் வாறு குறிப்பிட்டுள்ளார்.

*சீதக வயல்சூழ் காயற் றிருமணிப் பரிச்சை யாரில்*
*பேதக நீக்கு மானுப் பிள்ளை யிலப்பை யாலிம்*
*மாதவ மகக பீபு முகம்மதி லெப்பை மாண்பின்*
*பூதவத் தினிதி னீன்ற புகழணி தோன்ற லன்றே*

(கடவுள் வாழ்த்து; 37)

ஆசிரியர் தம் பெயரை இவ்வாறு மற்ெருரு செய்யுளில் குறிப் பிட்டுள்ளார் :

வருநெறி யுணர்ந்த சிந்தை வல்லவ ருவக்கும் பண்பின்
ஒருநெறி யுணரான் பாவத் தூடுபுக் கிருந்தான் வள்ளல்
மருநெறி தோழ ராகம் வழுத்திடிற் சிறப்ப தென்னத்
திருநெறி யிஃதே பூண்டான் செய்கப் துல்காதி றென்போன்
(கடவுள் வாழ்த்து : 38)

**உரை வழங்கியவர்**

புதூகுச்சாம் தமிழில் இயற்றப்படுவதற்கு உரை வழங்கியவர் முகம்மது ஜான் லெப்பை ஆலிம் என்பவர். இவர் முகம்மது சகிய்யி என்பவரின் புதல்வர். பவளக் காட்டைச் சேர்ந்தவர். இச்செய்திகள் ஒரு செய்யுளில் இடம் பெற்றுள்ளன.

மதிவழிந் தொழுகு மாட வளநகர் பவளக் காட்டின்
முதிர்புகழ் கல்விச் செல்வ முகம்மது சகிய்யின் தோன்றல்
துதியினர் வரிசை வேண்டித் தொடரறிவுணர்வின் பாலார்
அதிமுகம் மதுசான் லெப்பை யாலிம்நற் கருணை வள்ளல்
(கடவுள் வாழ்த்து : 27)

இவர் அறபில் உள்ள சிறியாவை வெற்றி கொண்டமை பற்றிய முதல் நூலிலிருந்தே உரையினைப் பெற்றுள்ளார். இத்தகவலும் இவ்வாறு ஒரு செய்யுளில் இடம்பெற்றுள்ளது :

பொன்மணி மன்னும் மூதூர் புகழ்மதி ஞவிற் கென்று
நன்மணி நயினர் தோழர் நாட்டிய நெறியின் வாகைப்
பன்மணி யரசரி யாரும் பயிற்சியிற் புனைவா ஞகச்
சொன்மணி யறபின் முன்னூற் றுலங்குற வுரைசெய் தாரால்
(கடவுள் வாழ்த்து : 25)

முதனூலும் வழிநூலும் பெறப்பட்டமையால் இக்காப்பியம் சார்பு நூலாக அமைகின்றது. மற்ெருரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது,

வழியொடு சார்பென் ருேதும் வழியவர் வாய்மை யன்ருே
மொழிவ வன்ஞே ரியற்கை செயற்கையின் முறைமை தன்ஞல்
அழகிய நயினர் போற்று மாக்க மேயார்க்கும் வேண்டிப்
பழகுத லுளத்தி னென்றும் பண்பென வுணர்ந்து மாதோ
(கடவுள் வாழ்த்து : 26)

### மூல நூல்

சேகுனுப் புலவரின் பெருங்காப்பியமான புதூகுச்சாம் என்பதற்கு மூல நூலாய் அமைந்தது அறபு மொழியில் உள்ள புதூகுஷ்ஷாம் என்னும் நூலேயாகும். புதூகுஷ்ஷாம் என்னும் அறபு நூலே இயற்றியவர் அபூ அப்துல்லாஹ் முகம்மது பின் உமர் என்பவராவர். இவர் அல் வாக்கிதி என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார். அல் வாக்கிதி என்பது இவருக்குக் குடும்பப் பெயராய் அமைந்து பின்னர் சிறப்புப் பெயராகி விட்டது. இவர் ஒரு தலைசிறந்த வரலாற்றாசிரியர் எனக் கருதப்பட்டார். இவர் மாலிக் பின் அனஸ் என்பவரினதும் சுபியான் அல் தௌறி என்பவரினதும் மாணுக்கராகக் கணிக்கப்பட்டுள்ளார் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பெருமானுரின் பொன்மொழிகள் ஆய்வில் முதல் முதலில் ஈடுபட்டவர் எனக் கருதப்படும் இப்னு ஜுறைஜ் என்பவருடன் தொடர்பு கொண்டிருந்தார் என்றும் பேசப்பட்டுள்ளது. வாக்கிதி என்பவர் வரலாற்றுத் துறையில் மாத்திரமின்றி நீதித்துறையிலும் பொன்மொழிகளான ஹதீதுக் கலையிலும் சிறந்து விளங்கினுர் என்றும் கூறப்பட்டுள்ளது. இவர் சுல்தான் ஹாறூன் அல்றஷித் அவர்களினுல் காலியாக நியமனம் பெற்றுர். சுல்தான் மஃமூன் காலத்தில் அரச பதவி வகித்தார். இவர் பக்தாதில் இருந்த ஓர் இடத்திலிருந்து மற்ற இடத்திற்குச் செல்ல நேர்ந்த பொழுது 120 ஒட்டகச் சுமைகளாக இவருடைய நூல்கள் எடுத்துச் செல்லப்பட்டனவாம். இவருக்கு அபார ஞாகப சக்தி இருந்தது என்றும் கூறப்பட்டுள்ளது. இவர் ஹிஜ்ரி 130ஆம் ஆண்டு பிறந்து ஹிஜ்ரி 207ஆம் ஆண்டு மறைந்தார் எனக் கூறப்பட்டுள்ளது. இவர் கி. பி. 834ஆல் இறந்திருக்க வேண்டும் என இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் குறிப்பிட்டுள்ளது. கி.பி. 834ஆம் ஆண்டுக்குச் சமமான ஹிஜ்ரீ ஆண்டு 219 ஆகும். முன்னைய கூற்றுப்படி வாக்கிதி 75 ஆண்டுகள் வாழ்ந்துள்ளார். பின்னைய கூற்றின்படி 87 ஆண்டுகள் வாழ்ந்துள்ளார் (ஹிஜ்ரீ 130 - கி. பி. 747; ஹிஜ்ரீ 207 - கி. பி. 822); (கி. பி, 834 ஹிஜ்ரீ 219). ஆண்டு அடிப்படையில் வரலாற்று நிகழ்ச்சிகளை விவரிப்பதில் கைதேர்ந்தவர் என மேனுட்டு அறிஞர்களால் புகழப்பட்டவர்களுள் வாக்கிதி எனப்படுபவரும் ஒருவராவார். இவர் சிறியாவை வெற்றி கொண்டமையைப் பற்றி மாத்திரம் அன்று இருக் வெற்றி கொண்டமை பற்றியும் இலக்கியம் படைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

### கடவுள் வாழ்த்து

ஏனைய காப்பியங்களில் உள்ளது போன்றே கடவுள் வாழ்த்து புதூகுச்சாமிலும் இடம்பெற்றுள்ளது. காப்புச் செய்யுளைத் தவிர்த்துக் கடவுள் வாழ்த்துப் படலத்தில் எட்டுச் செய்யுட்கள் இறைவனைப்

புகழ்ந்து அவன் அருள் கோரிப் பாடப்பட்டுள்ளன. அடுத்த இரண்டு பாடல்களில் பெருமானார் (சல்) அவர்கள் போற்றிப் புகழப்பட்டுள்ளார்: பின்னர் எல்லா நபிமார்களும் (11) நான்கு கலி பாக்களும் (12-15) அஸன் உஸைன் இருவரும் (16,)சுவர்க்க லோகத்துக்குரித்துடையவர் என பெருமானார் (சல்) அவர்களால் நன்மாராயம் பெற்ற பத்து அசு காபித் தோழர்களும் (17) என இவ்வாறு பாடிப் போற்றிய ஆசிரியர், நபித் தோழர் அனைவரையும் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடியுள்ளார்:

அரியவருக் கரியவரா முரியவர்க்கின் புரியவரா மான னங்கள்
தெரியவராம் வணக்கநெறி யுரியவரா முன்வேதஞ் சிறப்பிற் போற்றும்
பெரியவரா மென்றோழன் றன்றோழ ரெனமறையிற் பெரியோன் சொல்லும்
கரியவராம் அசுகாபி மார்வரிசைத் திருப்பாதங் கருது வாமே

(கடவுள் வாழ்த்து : 18)

அடுத்து நான்கு மதுகபுகளையும் நிறுவிய நான்கு இமாம்களையும் (19) முகியித்தீன் ஆண்டவரையும் (20) ஆரிபு நாயகரையும் (21) நாகூர் ஆண்டகையையும் (22), சதக்கத்துல்லா அப்பாவையும் (24) புகழ்ந்திருப்பதைக் காணலாம். ஏனைய காப்பியங்களில் கடவுள் வாழ்த்தில் இடம்பெறாத ஆரிபீன்கள் (பாரவான்கள்) சாகிதீன்கள் (துறவறத் தோழர்) ஆஷிகீன்கள் (இறைக்காதல் உள்ளவர்) ஆபிதீன்கள் (வணக்கவாளி) ஆகிய நால்வகைச் சான்றோர்களையும் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடிப்புகழ்கின்றார் ஆசிரியர் :

பாரின்மீது மேவுமேதி யாவுமாக மேவிடாத
பாரவாய்மை நாயகர்
சீரின்மாத ராசைபோக மேகொளாத வேதநாதர்
சீலமேய பாலின
ரோரிணு மேவலோடு காலநேம மோதியோதி
யோய்விலாது தாழ்பவர்
ஆரிபீன்கள் சாகிதீன்க ளாசிகீன்க ளாபிதீன்க
ளாசில்பாத மோதுமே

(கடவுள் வாழ்த்து : 23)

**கொடை நாயகர்**

புதூகுச்சாம் காப்பியம் இயற்றும்படி புலவர் நாயகம் அவர்களைக் கேட்டுக் கொண்டவர் முகம்மது சகீது என்பவர். இவர் பாவா சாகிபு என்பவரின் புதல்வர் இவர் பவளக் காட்டைச் சேர்ந்தவர். இத் தகவல்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு இடம்பெற்றுள்ளன.

*சீதநீர் வயல்சூழ் மேன்மைத் திருப்பதி பவளக் காட்டில்*
*தாதுலாம் புயத்து பாவா சாகிபு தவத்தால் வந்த*
*மூதறி வுணருஞ் சிந்தை முகம்மது சகீது வேந்த*
*னுகமொய்ப் பனுவல் செய்வா னற்கருத் தியற்றினனே*

(கடவுள் வாழ்த்து : 28)

இந்நூலின் கொடை நாயகர் மூதறிவுணரும் சிந்தையாளரான முதுபுகழணிந்தகீர்த்தி முகம்மது சகீது என்னும் வள்ளலேயாவார். இவர் பவளக்காடு என்னும் திருநகரில் சிறப்புறத் தோன்றிய சீர்பெறு மேலோராவர்.

முகம்மது சகீது வள்ளலின் கொடை மாண்பினையும் அன்னவர் நபிகளெம் கோமான் (ஸல்) மீது கொண்டுள்ள குறைவறும் உள்ள பக்தியினையும் நூல் முழுவதும் நிறைவுறப்பாடிச் சென்று வாழியும் பகர்ந்துள்ளார். உமறுப் புலவர் அபுல்காசிம் வள்ளலாரையும், கம்பர் சடையப்ப வள்ளலையும் ஏனையப் புலவர் பெருமக்கள் தத்தம் வள்ளற் பெருமக்களையும் பாடியுள்ள மரபையே இவரும் பின்பற்றியுள்ளார்.

ஒரு பாடலில் கொடை நாயகர் முகம்மது சகீது என்பவருடன் அவரது சகோதரர்களான செய்னுல் ஆபிதீனையும் முகம்மது அனீபா வையும் சேர்த்து அவர்கள் இருவரினதும் மூத்த சகோதரரான கொடை நாயகர் முகம்மது சகீது என் பவரையும் ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். செல்வம், புகழ் முதலிய செல்வங்கள் அனைத்தை யும் பெற்று வாழ்க என ஒரு செய்யுளில் இவ்வாறு வாழ்த்தியுள்ளார் ஆசிரியர் செய்கப்துல் காதிறு நெயினர் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள்.

அருளுடை மனத்தன் செய்னுல்
　　ஆபிதீன் றனக்கு நன்மைக்
கருதிய சிந்தையாளன்
　　முகம்மது கனிபா வுக்கும்
முருகவிழ் புயத்து முன்னோன்
　　முகம்மது சகீது மன்னன்
பொருளுறை செல்வம் என்றும்
　　புகழொடு வாழி வாழீ

(கடவுள் வாழ்த்து : 41)

கடவுள் வாழ்த்துப் படலத்தில் உள்ள இறுதிச் செய்யுள் எல்லோரையும் வாழ்த்தும் ஒரு செய்யுளாக அமைந்திருப்பதைக் காணலாம்.

கொடை நாயகரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது தொடர்ச்சியாக ஒரு முறைமையைக் கடைப்பிடித்துள்ளார் ஆசிரியர். கொடை நாயகர் பெயர் வரும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் முகம்மது சகீது என்றே அவருடைய பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது. முகம்மது என்பது நபிகள் பெருமானுர் பெயராக அமைவதிஞலேயே முஸ்லிம் மக்கள் அப்பெய ரைத் தத்தம் ஏனைய பெயர்களுடன் சேர்த்துக் கொள்கின்றனர். அந்தப் பெயருக்கு இருக்கும் மகிமையை உணர்ந்து தான் அவர்கள் அவ்வாறு செய்கின்றனர். அப்பெயரைக் கொண்டவர்கள் எப்பொழு தும் அப்பெயரைப் பயன்படுத்த வேண்டும் என்பது பெருவழக்காகி விட்டது. இக்கருத்துக்கிணங்கவே செய்கு அப்துல் காதிறு நெய்ஞர் லெப்பை ஆலிம் புலவர் முகம்மது என்பதை விடாது செய்யுளிலும் முகம்மது சகீது எனப் பாடியுள்ளார்.

கொடை நாயகரின் மாட்சிமையும், தெளிந்த புத்தியும், நற்குண மும், அளவிலா கிருபையும், மிகுந்த செல்வமும் எங்கும் பரந்திருந்தன. பூஞ்சோலைகள் மிகுந்த மருத நிலத்தைப் போன்று விரிவாய் அமைந் திருந்த இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

செழுமையுங் குணமும் ஓங்குந்
    தண்ணமும் திருவின் மிக்க
விழுமமு நிழலும் கூழின்
    வியப்பொடு மணமு மாரு
முழுவளம் புனேந்த செல்வ
    முகம்மது சகீது கீர்த்தி
ஒழுகுத லொத்த பூங்கா
    ஓங்கிய மருதமன்றே

(நாட்டுப் படலம் : 87)

பெருமானுர் (சல்) அவர்கள் மீது கொடை நாயகர் அளவிலா அன்பு கொண்டிருந்தார். இந்த அன்பிற்கு அளவுண்டு எனக் கூறின் மதீனுவின் சிறப்புக்கும் அளவு உண்டெனக் கூறலாம். இரண்டும் அளவிடற்கரியது என்னும் கூற்று ஒரு செய்யுளில் இவ்வாறு வலி யுறுத்தப்பட்டுள்ளது.

நிவப்பணி காரணத்தி னிறைநகர் செல்வப் பான்மை
தவப்பொருள் முகம்ம தெங்கள் நாயகர் கிருபை தாங்கித்
தவப்பலன் கொண்ட வண்மை முகம்மது சகீது நெஞ்சத்
துவப்பினுக் கெல்லே யுண்டே லோதலாந் தகைமைத் தன்றே.

(நகரப் படலம் : 45)

செல்வத்தைத் தேட வேண்டிய முறை ஒன்று உண்டு. அந்த முறை இஸ்லாமிய மார்க்க விதிகளுக்கு இணங்கியதாகவே இருத்தல் வேண்டும். அத்தகைய விதிகளையும் ஒழுங்கு முறைகளையும் அறிந்து அவற்றிற்கிணங்கப் பொருளீட்டியவர் கொடை நாயகர் முகம்மது சகீது. அவருடைய மனம் என்னும் தவிசிலே பெருமானார் (சல்) அவர்கள் வீற்றிருந்து செங்கோலோச்சினார்கள் என ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

தனத்தியல்பு தெரிந்தியற்றும் பெருஞ்செல்வ
 முகம்மதுச கீது தேர்ந்த
மனத்தவிசி னிருந்தரசு புரியுமுகம்
 மதுநயினார் வண்மை தானே

(றசூலுல்லா அரசுரிமைப் படலம் : 30)

எல்லாவிதச் செல்வங்களையும் கொண்டவர் முகம்மது சகீது என்னும் கொடை நாயகர். அவருடைய உள்ளத்தில் அன்பு குடிகொண்டிருக்கும். அவருடைய முகம் தாமரை போன்று மலர்ந்திருக்கும். அபூபக்கர் சித்தீக் (றலி) அவர்களின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்திருந்தது. இக்கருத்துக்களே ஒரு பாடலின் இறுதி இரண்டு அடிகளிலும் இவ்வாறு இடம் பெற்றுள்ளன.

முழுவளம் புனைந்த செல்வ முகம்மது சகீதுள் ளன்பின்
எழுமனக் கமலம் போல எழின்முகம் மலர்ந்திட் டாரால்

(படையெழுச்சிப் படலம் : 62)

எல்லோர்க்கும் உதவி செய்பவராகத் திகழ்ந்தார் கொடை நாயகர் முகம்மது சகீது. அதன் பயனாக அவர் எல்லோருக்கும் தாயகமாக விளங்கினார். அவர்களின் பொருளுதவியில் பலர் தங்கியிருந்தனர். அவரும் அத்துணை பேர்களும் வாழி என வாழ்த்தியுள்ளார் ஆசிரியர்.

நாயக முகம்ம தின்ப நடையியற் றேர்ந்தி யார்க்குந்
தாயக மாக நின்ற முகம்மது சகீது செல்வ
மேயகத் துணைகள் மக்க ளுயர்கிளை மிகுத்த வாழி
தூயக மென்ன மேலோ ரணிநகர் தோற்றிற் றன்றே

(அபூவுபைதா தலைமை பூண்ட படலம் : 55)

எமக்குக் கிடைத்துள்ள புதூகுச்சாம் கையெழுத்துப் பிரதி ஒன்றில் அபூவுபைதா தலைமை பூண்ட படலத்தில் மேலே குறிப்பிட்ட செய்யுள் 74வது செய்யுளாக அமைந்துள்ளது. அக்கையேட்டுப் பிரதியில் இப் படலத்தில் மொத்தம் 81 செய்யுட்கள் இடம் பெற்றுள்ளன. ஆனால் அச்சிடப்பட்டுள்ள புதூகுஷ்ஷாம் பிரதிகளில் 61 செய்யுட்களே இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

முன் கூட்டியே தர்மம் செய்வதில் சிறந்தவர் முகம்மது சகீது என்னும் கொடை நாயகர். புலவருக்குப் பெருநிதி ஈந்தவர் அவர். செல்வம் மிக்கவர். இதனையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

முன்னெறி ஈய்ந்தார் செல்வ முகம்மது சகீது...

(கிம்மசு கொண்ட படலம் : 120)

மற்றெரு பாடலில் புலவர் தமது கொடை நாயகரை வாழ்த்தியுள் ளார். அவ்வாறு வாழ்த்தும் பொழுது அவர்களுடைய செல்வச் சிறப்பை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுளின் முதலிரண்டு அடிகளும் வருமாறு :

நாடொறும் வாழி செல்வ மிக்குடைய
நரபதி முகம்மது சகீது
நீடிய மதியின் மனமென விரிந்த
நிலையுள பெருந்தல மதனில்

(வாகை பூண்ட படலம் : 33)

முகம்மது சகீது கொடை நாயகத்தை தருவுக்கு ஒப்பிட்டுள்ளார் ஆசிரியர். இங்கே தரு என்பது கற்பகத் தரு - கற்பக விருட்ச்சத்தைத் தான் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். சுவர்க்கத்தில் உள்ளது கற்பக விருட்சம். விரும்பியவர்களுக்கு விரும்பியவற்றை அளிக்கும் வல்லமை உள்ளது கற்பக விருட்சம். கற்பகத் தருவைக் குறிக்க மணிமேகலை யிலும் தரு என்னும் சொல்

தருநிலை வச்சிர மெனவிடு கோட்டம்

(மணிமேகலா தெய்வம் வந்து தோன்றிய காதை : 114)

எனப் பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம். சேகுனப் புலவரும் முகம்மது சகீது என்னும் புரலவரை தருவுக்கு இவ்வாறு ஒப்பிட் டுள்ளார்.

தருவெனு முகம்மது சகீது மன்னவன்
அருளுரை யுளங்கொளா ரவரிற் கையற்று

(கிறக்கிலுக்கு நிருபம் விடுத்த படலம் : 65)

மதீன மாநகர மாடமாளிகைகளும் தருவும் உலகிலே சிறந்தன வாக விளங்கின. முகம்மது சகீது என்னும் கொடை வள்ளலின் உள்ளம் போன்று ஒளி பெற்று விளங்கின. ஆனல் தருமம் செய்வதில் கொடை நாயகர் உலகத்திலே உள்ள கற்பகத் தரு போன்று விளங் கினர். இக்கருத்துக்களையே சேகுனப் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

திருநக ரணிமனை பலபல தெருவு
மருவொடு மழகொடும் வனைதர வுலகிற்
றருவென வருமுக மதுசகீ தருளி
னெருமன மெனவொளி வுலவின மிகவே

(உமறுகத்தாப் அரசியற் படலம் : 9)

கொடை நாயகரைக் குறிப்பிடும் பொழுது துரை என்னும் அடை கொடுத்து அவர் பெயரைக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். முகம்மது நபி (சல்) அவர்கள் மீது அளவற்ற பக்தி கொண்டிருந்தார் சகீது. அவருக்கு வேத நூல் பயிற்சியுமிருந்தது. அவர் இனிமை யானவர். கருணை உள்ளம் படைத்தவர். இனிச் செய்யுளைப் பார்ப்போம்.

விண்ண கத்திலு முறைபடர் முகம்மது விரித்த
பண்ண கத்துயர் மறைமொழி மதுரமும் பயின்று
தண்ண கத்துரை முகம்மது சகீதுளத் தன்பின்
மண்ண கத்தினி னதியெனப் பெருகிவந் ததுவே

(தபூக்கிற்றிறை கொண்ட படலம் : 157)

மற்ருேர் இடத்தில் துரை என்பதை கொடை நாயகரின் பெயருடன் இவ்வாறு சேர்த்துள்ளார் ஆசிரியர் :

துணிதரு மறிவி னேங்குந் துரைமுகம் மதுச கீது

(இரண்டாம் போர் புரி படலம் : 259

வேறோர் செய்யுளில் முகம்மது சகீது கொடை நாயகரின் கொடைத் திறனை வள்ளன்மையைக் கற்பக விருட்சத்துடனும் ஒப்பிட முடியாதது. கற்பகத் தருவையும் மிஞ்சிவிட்டது அவருடைய கொடை. இங்கே கொடை நாயகரின் தகப்பன் பெயரும் சுட்டப்பட்டுள்ளது. அவருடைய

பெயர் பாவா சாகிபு என்பதாகும். கொடை வள்ளலிடம் அறிவுத் திறமை இருந்தது. உள்ளத் தெளிவு இருந்தது. துரை என்னும் அடையும் சேர்க்கப்பட்டுள்ளது. இவற்றில் சிறந்து விளங்கினர் கொடைநாயகர். ஒரு செய்யுளில் முதலிரண்டு அடிகளில் இச்செய்தி இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது,

தருவினு மதிக வண்மையின் பாவா சாகிபு கண்மணி யென்ன
வருதுரை செல்வமுகம்மது சகீது மனத்தினுக் கறிவொடு தெளிவும்

(அந்தாக்கியா மேற்செல் படலம் : 33)

துரை என்னும் அடை மற்ருெரு செய்யுளிலும் இடம்பெற்றுள்ளது. முகம்மது சகீது என்னும் கொடை வள்ளல் பெருமானர் (சல்) அவர்கள் மீது மீறிய அன்பு கொண்டவர். எப்பொழுதும் அவரைச் சுற்றத்தார் சூழ்ந்து கொண்டிருப்பர். அத்தகைய வரிசை பெற்றவர் கொடை நாயகர். அவர்களுடைய கீர்த்திப் பெருமையால் பகைவர் களத்தை விட்டே ஓடிவிட்டனர் என ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்.

வெற்றிவாண் முகம்ம தின்ப மீறிய கருத்தன் கேளிர்
சுற்றி வாழ் வரிசை பெற்ற துரைமுகம் மதுச கீது
பெற்றிவாழ் வணிந்த கீர்த்திப் பெருமையாற் சிறுமை போமால்
தொற்றிவா ளெறிந்து மாற்ரு ரொளித்தனர் பல்பால் அன்றே

(அரசிருக்கை கொண்ட படலம் : 80)

நீதி நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள வழிமுறைகளுக்கிணங்க நடப்பவர் கொடை நாயகர். இதனையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

. . . நீதி நூன்
முறையணி முகம்மது சகீது சிந்தையின்

(உசாமா தலைமை பூண்ட படலம் : 64)

கொடை நாயகர் முகம்மது சகீது என்பாரின் உள்ளம் முகம்மது நபி (சல்) அவர்களின் அருள் நிரம்பியதாக இருந்தது. நீதி தவருது வாழ்ந்தவர் கொடை நாயகர். அவரே இவ்வாறு புகழப்பட்டுள்ளார்,

சோதி நாயக முகம்மதி னருளொடு
துலங்கிய திருவுள்ளம்
நீத மோங்கிய முகம்மது சகீதெனும்
நிதிபதி மலர்க்கண்ணும்

(திமுசுக்குக் கொண்ட படலம் : 172)

இங்கே செல்வத்தில் மிக்கவராகத் திகழ்ந்தவர் கொடை நாயகர் என்பது 'நிதிபதி' என்னும் சொற்றொடரால் சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

முகம்மது சகீது கொடை நாயகர் ஓங்கி விளங்கினார். அவர் செய்த தவப்பயனால் சிறந்து விளங்கினார். இன்பம், செல்வம் என்பவை அவரை மகிழ்வித்தன. ஒழுக்கத்தால் உயர்ந்து திகழ்ந்தார். அவர் செய்த நற்றவம் அவரை இறுகப் பிடித்துக் கொண்டிருந்தது. இதனையே சேகுனாப் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் :

செய்தவப் பலனால் இன்பத் திருவினா லொழுக்கத் தாலும்
மொய்தவப் பயன்கொண் டோங்கு
முகம்மது சகீது வேந்தன்

(இறைவியைத் தானமளித்த படலம் : 137)

உவமைகளைக் கொண்டு, முகம்மது சகீது கொடை நாயகரின் வள்ளன்மை விளக்கப்பட்டுள்ளது. முகம்மது சகீது உயர்ந்த மேலான புகழ் வாய்ந்தவர். வளர்கின்ற செல்வம் உடையவராய்த் திகழ்ந்தார். பொறுமை அவரிடம் இருந்தது. உயிர்களைப் பாதுகாக்கும் பண்பு அவரிடம் குடிகொண்டிருந்தது, அவருடைய ஈகைச் சிறப்பினால் வறுமை அகன்று ஓடியது. அதே போன்று பகைவர் மருண்டு ஓடினார் கள். இப்பாடலில் கொடை நாயகர் முஸ்லிம்களுக்கும், வள்ளன்மை முஸ்லிம்களின் வீரத்துக்கும், வறுமை முஸ்லிம் அல்லாதார்க்கும்' வறுமை அகன்றது, பகைவர் தலைதெறிக்க ஓடியதற்கும் உவமை களாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனையே ஆசிரியர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார்.

ஓங்கு மேம்புகழ் வளர்திரு நிறையினா லுலகந்
தாங்கு மன்புள முகம்மது சகீதெனு மன்னன்
தேங்கொள் பூங்கர வண்மையாற் கலியினஞ் சிதறி
நீங்கு மாறடை யலர்புற நிலைபெரு தகன்றார்

(பலஸ்தீன் கொண்ட படலம்: 144)

பொறுமை உடையவர். தவஞ் செய்வதில் ஈடுபாடுடையவர். நல்லொழுக்கமுடையவர். அறிவிற் சிறந்தவர். புண்ணியமே செய்பவர் நற்சீலம் மிக்கவர். வேத அறிவு மிக்கவர். இவை குடி கொண்டிருக்கும் உள்ளத்தை உடையவர் முகம்மது சகீது என்னும் கொடை நாயகர். அவரே இவ்வாறு புகழப்பட்டுள்ளார் ஒரு செய்யுளில்

பொறைதவ மொழுக்கங் கல்விப்
புண்ணியஞ் சீலம் வேதம்
முறைபல வாழுஞ் சிந்தை
முகம்மது சகீது செல்வ
நிறைமனை விளக்குப் போல
நிலைதரு வாகை வள்ளல்
உறைமதி யாளர் சூழ
உவப்பி னேடுற் றவேலை

(புசுருக் கொண்ட படலம் : 128)

முகம்மது சகீது கொடை நாயகர் எப்பொழுதும் உள்ளம் மலர்ந்த வராகக் காணப்பட்டார். முகப் பொலிவுடன் எப்போதும் காட்சி அளிப்பார். அவர்தம் கண்கள் அன்பைச் சொரிந்தனவாய் அமைந் திருக்கும். எவருக்கும் தீங்கு செய்யாத உயர்ந்த பண்பினராக வாழ்ந்து வந்தார். அவர் எப்பொழுதும் எவ்விடத்தும் மேன்மை உடையவராய் இருப்பதைப் போன்று சூரியனும் பிரகாசம் பரப்பி உதயமானுன். இதனைக் கண்ட அனைவரும் தத்தம் பொருமையினைத் துறந்தனர். நல்ல பாதையில் செல்லத் தலைப்பட்டனர்.

கருத்தின் மலரும் முகமலரும் கண்ணின் மலரும் மிகமலர
வருத்துங் குணத்தின் முகம்மதுச கீது மகிப னெவ்விடத்தும்
பொருத்து மேன்மை யெனக்கதிரோன் புணரி யெழுந்தா
னனைவோரும்
திருத்து நெறியிற் கடன்கழித்துச் சிறந்தார் பொருமைத்
துறந்தாரே

(அபுல்குதுசு கொண்ட படலம் : 136)

எப்பொழுதும் கொடை நாயகர் முகம்மது சகீது உள்ளம் நிறைந்த மகிழ்ச்சியோடு இருந்தார். செல்வச் சிறப்பினைக் கொண்டவராய்த் திகழ்ந்தார். மாண்புடைய நல்லவர்களே அவருடன் தொடர்பு கொண்டிருந்தனர். வள்ளன்மையில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத வராய்க் கொடை நாயகர் திகழ்ந்தார். முகம்மது நபி (சல்) அவர் களின் அன்பும் அவருக்கு நிறைய இருந்தது. சுகநலம் உடையவராய் விளங்கினர். சுகக்குறைவே இல்லாதவர் அவர். மக்கள் கூட்டம்

அவரை எப்பொழுதும் சூழ்ந்திருந்தது. எல்லோரும் அவர் மேல் பற்றுக் கொண்டவர்களாய் இருந்தனர். அத்தகைய நிறைந்த புகழை உடைய முகம்மது சகீதின் மகிழ்ச்சியைப் போன்று அபூ உபைதா (றலி) அவர்கள் மகிழ்ந்திருந்தார்கள். இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன.

மனநிறை மகிழ்வுஞ் செல்வ மாண்புநற் றொடர்பும் வண்மை
யினநிறை முகம்ம தன்பு மிசைநிறை சுகத்தி னோடு
சனநிறை தழுவ வந்த முகம்மது சகீது சிந்தைக்
கனநிறை புகழின் வள்ளல் கணிப்பரு முவகை பூத்தார்.

(கன்சரீன் கொண்ட படலம் : 145)

முன்னைய மார்க்கங்கள் பலவற்றில் தேர்ச்சி பெற்ற முகம்மது சகீது கொடை நாயகரின் உள்ளத்திலே ஏற்பட்ட மகிழ்ச்சியை எவராலும் வருணிக்க முடியாது எனப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

முன்னெறி பலவுந் தேர்ந்த முகம்மது சகீது மன்னன்
தன்னெறி உளமுங் கொண்ட மகிழ்ச்சியார் சாற்ற வல்லார்

(அகுசாசு கொண்ட படலம் : 116)

கொடை நாயகரின் குடும்பத்தில் சகோதரர் மூவரே இருந்தனர். தகப்பனார் பெயர் பாவா சாகிபு. அம்மூவருள் முதல்வர் தாம் முகம்மது சகீது கொடை நாயகர் ஆவார். இதனையே புலவர்.

தாவிய கீர்த்தி வளர்தரு பாவா
சாகிபு தவத்தி னுலுதித்த
மூவரின் முதல்வன் முகம்மது சகீது
முழுமதிக் கருத்திடை குலவும்
காவலன் இறசூல் முகம்மது நயினார்
கருணைபூத் தொழுகிய வள்ளல்
நாவலம் புனையுந் துறவியல் பூண்ட
நண்பரோ டிருந்தன ரன்றே.

(பகுலப்பக் கொண்ட படலம் : 109)

பெருமானார்(சல்) அவர்களின் அன்புக்குப் பாத்திரமானவர் பாவா சாகிபு என்பார். அவர் பவள மாநகரைச் சேர்ந்தவர். அந்நகரத் தலைவர் தாம் முகம்மது சகீது கொடை நாயகர். அவருடைய சிந்தை எவ்வளவு என்று கூறமுடியாது என அசைந்தன கொடிகள். அவ்வாறு அலங்கரிக்கப்பட்ட பொன்னாலும் மணிகளாலும் நிறைத்துச் செய்யப் பட்ட பந்தருக்கு காலிது இப்னு வலீது (றலி) அவர்களும் தோழர்களும் வந்தனர். இச்செய்தியே இவ்வாறு ஒரு செய்யுளில் இடம்பெற்றுள்ளது.

தவள மாமணி நபியரு ணிறைபாவா சாகிபு தவப் பாலன்
பவள மாநக ரதிபதி முகம்மது சகீது பண்புள சிந்தைக்
கெவள வாயினு மருவல ருளமென வெழுங் கதலிகைக் கூட்டந்
துவள வாய்ந்த பொன்மணி நிரைப்பந் தரிற்றுதி விறலினர்
வந்தார்

(ஐவர் சிறை மீட்ட படலம் : 39)

தாயன்பையுடையவர் முகம்மது சகீது கொடை நாயகர் என்பது

ஆயு மன்புள்ள முகம்மது சகீது நிதி
யாலுறு பலன்பெறு மனந்
தோயும் இன்பமென ...

(மாகான் போர் புரி படலம் ; 47)

என்றும் கொடை நாயகர் பவள நாடன் என்பதும் எல்லோராலும் விரும்பப்பட்டவர் என்பதும்

நல்லின்ப முயக்குஞ் செல்வ நயம்புனை பவள நாடன்
சொல்லின்ப முவக்குங் கல்வி முகம்மது சகீது தூய
வெல்லின்ப மனமே போன்ற விளங்கொளி பள்ளி யெங்கும்
புல்லின்ப முதியோ ராக நிறைந்தெழில் பொழிந்த வன்றே

(ஆவணம் விடுத்த படலம் : 32)

என்றும் அவருடைய சிறந்த பண்புகளுக்காக அவர் எல்லோராலும் நயக்கப்பட்டார் என்பதும்

புன்மன மொதுக்கித் தீஞேர்க் குதவிகொள் புந்தி நல்கி
வன்மன வேந்தை நேரில் வருத்திய வல்லோன் றன்னை
முன்மன மறிவி னின்ற முகம்மது சகீது மன்னன்
நன்மனம் பூண்ட மேலோ ரியாவரு நயந்திட் டாரால்

(கலபு கொண்ட படலம் : 205)

என்றும் முகம்மது சகீது கொடை நாயகர் வாழ்க என்பதும் அவருடைய மகிழ்வும்

அகமணி யாவியென்ன
அடைந்து புல்லி வாழி
முகமது சகீது மன்னன்
முழுமதிக் களிப்புப் பூத்தார்

என்றும் வருணிக்கப்பட்டுள்ளது.

கடைசிப் படலத்திலுள்ள இரண்டு செய்யுட்களில் முகம்மது சகீது கொடை நாயகரும் அவருடைய குடும்பத்தவரும் இவ்வாறு வாழ்த்தப் பட்டுள்ளனர்.

திருமலி செயினு லாபி தீன்முகம் மதுக னீபா
இருவர்கண் மணிபோல் வந்த இறைமுகம் மதுசகீது
பெருநிதி வாழி வாழ்வின் பெறுபலன் வாழி யாதி
யருள்றகு மத்து வாழி அணிபுகழ் வாழி வாழி

தலைமையிற் சிறந்த பீரு சாகிபு தவத்தால் வந்த
நிலைமையிற் சிறந்த வண்மை நிதிமுகம் மதுச கீது
நலனுடை முன்னோர் பின்னோர் நனிதருமக்கள்சுற்றம்
பலனொடு வாழி வாழி பரிவொடு வாழி வாழி

(வாகை பூண்ட படலம் : 84-85)

### இயற்கை வருணனை

போரினைக் கூறும் காப்பியமாயிருப்பதால் புதூகுச்சாம் என்னும் காப்பியத்தில் இயற்கை வருணனைகள் அதிகமாக இடம்பெறவில்லை, போர் வருணனைகளுக்கே இக்காப்பியத்தில் முக்கியத்துவம் அளிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். போர்கள் நிகழ்ந்த இடங்கள் பற்றிய வருணனையே பெரும்பாலும் இங்கு இடம்பெற்றன.

அபுல்குதுசு என்னும் நகரில் ஒரு விழா நடைபெற்றது. பொதுவாக விழா நடக்கும்பொழுது பற்பல விதமான பொருள்களைக் கொண்டு வந்து அங்கு விற்க முற்படுவர் வேற்று ஊரவர். அத்தகைய வேற்றூர் வியாபாரிகளால் அங்கே கடைகள் அமைக்கப்பட்டு வியாபாரப் பொருள் கள் வைக்கப்பட்டிருந்தமையைப் புலவர் குறிப்பிட்டுள்ளார். அங்கே பல இடங்களில் தயார் செய்யப்பட்ட பொருள்களும், பொன்னும் நகைகளும். வெள்ளியும், இரும்பு முதலிய உலோக வகைகளும், மணிக் கற்களும் முத்தும் பல்வேறு வகையான துணிமணிகளும் மயிரினால் இயற்றப்பட்ட கம்பளங்களும், இவை போன்ற உலகத்திலே தயார் செய்யப்படும் பிறபொருள்களும் அவ்விழாவின் போது விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்தன. இதனையே இச்செய்யுள் குறிக்கின்றது.

இனையமே ளளிற் பற்பல நகரத்
தெழும்பொரு ளினநிதித் தொகையுங்
கனகமுங் காசு மிரசித முலோகங்
கரும்பொன்மற் றெவையுமா மணியு
நனிவகைத் துகிலு மயிர்ப்படா முதலா
நானிலத் திரவிய மெல்லாந்
துனியற மாற்றுந் தொழில்செய்வான் கடைக
டோன்றுமா லெழுதின மவணில்

(அபுல்குதுசு கொண்ட படலம் : 28)

கிம்மசு நகர் வளமிக்கது. மருத நிலம் அங்கு உண்டு. அங்கே வயல்கள் இருந்தன. அந்த வயல்களிலே குவளை மலர்கள் இருந்தன. அவற்றைப் பிடுங்கிஎறிந்தனர் உழத்தியர். அவர்களுடைய கண்கள் கரியனவாயும் கூரியனவாயும் இருந்தன. அவை வேலாயுதம் போல் கூர்மையானவையாய் இருந்தன. அவை சிவந்து இருந்தன. அந்த உழத்தியரின் முகங்கள் சந்திரன் போன்று விளங்கின. சந்திரன் என நினைத்த நறுமணம் உள்ள தாமரை மலர்கள் குவிந்தன. அத்தாமரை மலர்களிலே மது அருந்திக் கொண்டிருந்த வண்டுகளும் அத்தாமரை மலரில் சிறைப்பட்டன. அத்தகைய தாமரை மலர்கள் நிறைந்த வாவிகள் பல அம்மருத நிலத்தில் இருந்தன. அங்ஙனம் சிறப்புப் பொருந்திய மருதவளம் மிக்கது, திமிசுக்கு நகரம் எனப் புலவர் இவ்வாறு ஒரு பாடலில் அந்நகரை வருணித்துள்ளார்.

செவ்வேற் கருங்கண் பொருங்குவளைக் களைகட் டுழத்தித்
திருமுகங்கண்
டவ்வே ரியந்தா மரையோடு மைய மளிகள் கொளச்செறிந்த
வெவ்வே தொருவு மருதவள மிகுந்த கிமசுக் ககம்பு குந்து
குவ்வேழ் நிறுத்து நீதியபபூ வுபைதா முன்ன ரெய்தினரால்
(அபுல்குதுசு கொண்ட படலம் : 143)

படை வீரர்கள் எல்லா இடங்களிலும் பரவி இருந்தனர். அங்கே கருப்பஞ் சோலைகள் இருந்தன. அக்கருப்பஞ் சோலைகளிலே கருப்பஞ் சாறு வழிந்து ஆருக ஓடிக் கொண்டிருந்தது. நீரோடைகள் இருந்தன. அந்நீரோடைகளில் தாமரை மலர்கள் பூத்து நிறைந்திருந்தன. அத்தாமரை மலர்களிலே தேன் உண்ண வந்த வண்டுகள் அதனை உண்டு மகிழ்ந்து ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. பண்ணுடன் பாடிக் கொண்டிருந்தன. தடாகங்கள் இருந்தன. அத்தடாகங்களிலே பல்வேறு வகையான மீன்கள் நிறைந்து இருந்தன. முல்லை மலர்கள் பூத்துக் குலுங்கிய பூங்கொத்துக்கள் மிகுதியாக இருந்தன. இங்ஙனம் மருத நிலத்திலும் முல்லை நிலத்திலும் மதங்கொண்ட யானைகளை ஒத்த போர் வீரர்கள் குழுமி இருந்தனர். இக்காட்சியே ஒரு செய்யுளில் இவ்வாறு சுட்டப்பட்டுள்ளது.

நருவழிந் தாறு கொண்ட
நனிகழைக் காடும் பாண்செய்
துருவளி கமலம் பூத்த
வோடையும் வெறியுண் டோங்கும்

சுருவழி மடுவும் மற்றத்
துணர்ப்புணர் முல்லை யெல்லா
மருவழி மதத்த வேழ
மள்ளராற் கொள்ளப்பட்ட

(தபூக்குக் கொண்ட படலம் : 42)

மற்றொரு காட்சி. முல்லை நிலம் அது. கானவர்கள் காட்டிலே வாழ்ந்தனர். அவர்கள் நிலத்தை தோண்டினர். அங்கே விளைந்த கிழங்குகளை எடுக்கவே அவ்வாறு தோண்டினர். அவ்வாறு தோண்டு வதற்காக நீண்டு கூரிய ஆயுதத்தை அவர்கள் உபயோகித்தனர். அங்ஙனம் அந்த ஆயுதத்தால் கிழங்கு தோண்டும் ஓசை இடி முழுக்கம் போல் இருந்தது. அந்த இடி முழக்கம் போன்ற ஓசையைக்கேட்ட புலிக் கூட்டம் சிதறியோடியது. புலிகள் ஓடுவதைக்கண்ட ஏனைய பிராணிகள் அச்சம் மேலீட்டினால் ஒதுங்கலாயின. அத்தகைய நிகழ்ச்சிகளைக் கொண்ட குன்றிலிருந்து வழிந்த நீரானது அருவிகளாகத் தோன்றின. இத்தகைய சோலைகள் நிறைந்த அவ்விடத்தைத் தாண்டி முகம்மது நபி (சல்) அவர்களின் தூதுவர் சென்றார் என்பது இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

நிலன்படு மூலங் கல்லும் கானவர் நெடுங்கூ ரோசை
வலன்படும் இடியேறென்ன வரிப்புலி யிரியக் கண்டு
குலன்படு மிருகம் பம்மும் குன்றினின் றிழியுந் தெண்ணீர்
பலன்படும் அருவி மன்னும் பழுவமற் றகன்று போனார்

(கிறக்கிலுக்கு நிருபம் விடுத்த படலம் : 7)

இன்னொரு காட்சி. எருமைக்கன்று தாயின் பாலைக் குடித்தது. அவ்வாறு குடிக்கும் பொழுது தாய்ப் பசுவின் முலைகள் வழியாகப் பால் வழிந்தது. அது இனிமையாக இருந்தது. அவ்வினிமையான பாலை அன்னக் குஞ்சுகள் அருந்திக் கொண்டிருந்தன. அவை இசையை இனிமையாய் மீட்டிக் கொண்டிருந்தன. அத்தகைய மலர்த் தடாகங் களும் பூஞ்சோலைகளும் நிறைந்த முல்லை நிலங்களையும் குன்றுகளையும் நதிகளையும் கடந்து முஸ்லிம் போர் வீரர் சென்றனர் என்பதனையே சேகுனாப் புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார்:

கன்றுமுக மிட்டமுலை கண்வழிகொள் தீம்பா
லென்றுமன முண்டிசை யிரைத்தமலர் வாவித்
துன்றுபொழில் பற்பல துவன்றபுற வங்கள்
குன்று நதி மற்றுங் குலத்தொடு கடந்தார்

(கிறக்கிலுடன் போர்புரி படலம் : 21)

வேறோர் காட்சி பூஞ்சோலைகள் இருந்தன. பூஞ்சோலைகளில் நான்கு வரையான மலர்கள் இருந்தன. கோட்டுப் பூ, கொடிப் பூ, நீர்ப்பூ, புதற் பூ என்பன அந்நான்கு வகையான மலர்களுமாம். அவை பூத்து விளங்கின. மிகுதியாக இருந்தன. மலைகளிலே மேகங்கள் தங்கி இருந்தன. காட்டிலே மரங்கள் நெருங்கி வளர்ந்திருந்தன. பாலை நிலங்களும் இருந்தன. வேறு இடங்களும் காட்சி வழங்கின. எல்லா இடங்களிலும் கஸ்தூரி மணம் கமழ பெருமானார் (சல்) அவர்கள் வாழ்ந்தார்கள். அவர்களுடைய மேனியில் எப்பொழுதும் கஸ்தூரி வாசம் மிகைத்துக் கமழ்ந்து கொண்டிருக்கும். இத்தகைய சூழலிலே பெருமானார் (சல்) அவர்கள் வந்தார்கள் என்பது இவ்வாறு ஒரு செய்யுளில் பாடப்பட்டுள்ளது.

வனங்கடுன்றிய நால்வகை மலர்களு மருவிக்
கனங்க டுங்கிய வரைகளு மடர்தருக் கடமற்
றினங்க ளெங்கணு மான் மதம் விரிவெடி மிகைப்பத்
தினங்கொண்மேனியெம் மாண்டகை சிறப்பொடு சென்றார்
(தபூக்கிற்றிறை கொண்ட படலம் : 145)

பெருமானார் (சல்) அவர்கள் மறைந்து விட்டார்கள். மதீன மாநகரமே ஆருத்துயரில் மூழ்கியது துயர மிகுந்த காரணத்தால் மதீனா நகர மக்கள் செய்வது இன்னது என உணராமல் தவித்தார்கள். மக்களுடைய கைகள் அவற்றிற்குரிய வேலைகளைச் செய்ய மறுத்தன. பச்சிளங் குழந்தைகள் பால் உண்ணவுமில்லை. தாய்மார்கள் பாலூட்டவும் மறந்து விட்டனர். உடல்கள் உயிரற்றன போன்று காட்சி அளித்தன. அடுப்பங்கரையை எவரும் நாடவில்லை. சமையல் நடக்கவில்லை. மீளாத் துயரம், சமையல் இல்லை. எனவே சமையல் அடுப்புக்களிலிருந்து புகை வரவில்லை. பறவைகள் பறக்கவில்லை. தத்தம் உணவு தேடி பூஞ்சோலைகளுக்கும் செல்லவில்லை. அவை பூஞ்சோலைகளையே மறந்து விட்டன போன்று காட்சி அளித்தன. உணவின் தேவையையும் மறந்தன. சொகுசான படுக்கைகளைப் பயன்படுத்தியவர்கள் அப்படுக்கைகளையே மறந்துவிட்டனர். அவர்கள் படுக்கைக்கே செல்லவில்லை. துயில் கொள்ளவில்லை. வீடுகளில் தீபங்கள் ஏற்றப்படவில்லை. அதனையும் வீட்டார் மறந்து விட்டனர் வீடுகள் இருள் மண்டிக் கிடந்தது. அத்தகைய கடுமையான துயரம் மதீனமா நகரையே வாட்டியது. மதின மாநகரம் அதன் கருமங்களைச் செய்யத் தவறியது. எதுவுமே அங்கு இயங்கவில்லை. எல்லாவற்றிற்கும் காரணம் பெருமானார் (சல்) அவர்களின் மறைவினால் ஏற்பட்ட துக்கமேயாம். இந்த நிலையை ஒரு செய்யுளில் ஓசை நயம் மிளிர இவ்வாறு பாடியுள்ளார் சேகுனாப் புலவர்.

பாவினை மறந்த கைகால் பான்முலை மறந்த பிள்ளை
ஆவியை மறந்த ஆக்கை அடுபுகை மறந்த சுல்லி
காவினை மறந்த் புட்கள் கண்படை மறந்த பள்ளித்
தீவிகை மறந்த இல்லம் செய்தொழின் மறந்த மூதூர்

(நபி நாயகம் உபாத்துப் படலம் : 48)

வாளை மீன்கள் மேலே குதித்து எழுந்தன. மேலெழுந்த வாளை மீன்கள் கமுகு மரங்களைத் தாக்கி மீண்டும் கீழே விழுந்தன. நறுமணங் கம்முழம் பூஞ்சோலையிலே தடாகம் உள்ளது. அது ஒரு பெரிய அகழி போன்று காட்சி அளித்தது. அந்தத் தடாகத்தைச் சுற்றிவர வயல்கள் இருந்தன. அந்த வயல்களிலே உழத்தியர் களை பிடுங்கிக் கொண் டிருந்தனர். அவர்கள் பாடிக் கொண்டே களை பிடுங்கினர். குரவை எழுப்பினர். அத்தகைய வயல் நிலங்களைக் கொண்ட மருத நிலமாகக் காட்சி அளித்த அந்த இடத்தைத் தாண்டி முஸ்லிம் போர் வீரர் தபூக் நகரை அடைந்தனர். இக்காட்சிகள் புதூகுச்சாம் செய்யுள் ஒன்றில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

உகழிய வாளை யோடு முதிர்கமு கரும்பு வாடை
யகழிய தடஞ்சூழ் பண்ணை யாற்றுக்கா லாட்டி மாதர்
மகிழ்தரு குரவை வாழி வளங்கெழு மருத நோக்கித்
திகழ்தரு புகழின் மிக்கோர் திருநகர் தபூக்குப் புக்கார்.

(அபுல் குதுசு கொண்ட படலம் : 13)

அந்த நாடு குளிர்ச்சி மிக்கதாய் இருந்தது. காரணம் அங்கு குளிர்ந்த நதிகள் பாய்ந்து சென்றன. தென்றல் வீசிக் கொண்டிருந்த சோலைகளும் அந்த நாட்டுக்குக் குளிரூட்டிக் கொண்டிருந்தன. குளிர்ந்த நீரை உடைய வாய்க்கால்கள் அங்கு நிறைய இருந்தன. நீர் நிரம்பிய வயல்கள் மற்றொரு வகையில் அந்நாட்டுக்கு குளிர் மையை அளித்துக் கொண்டிருந்தன. பற்பல மரங்களின் பல்வேறு வகையான கனிகள் சுவை மிக்கதாய் அமைந்திருந்தன. அவற்றை உண்டதனல் அங்குக் குளிர்ந்த தன்மை ஏற்பட்டது. உணவும் நிறைய இருந்தது. அதன் பயனாக மக்கள் திருப்தி அடைந்தவர்களாக இருந் தார்கள். அம்மட்டன்று. மண்ணிலிருந்து பெறப்படும் எல்லா வகை யான பொருள்களும் எவ்வித குறைவுமின்றி இடையருது பெறப்பட்டுக் கொண்டிருந்தன, அந்தகு செல்வம் மிக்க நாடாக அது திகழ்ந்தது. இக்கருத்துக்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு இடம்பெற்றுள்ளன.

தண்ண ருநெடு நதிகளும் பொழிலுந்தண் ணடையுங்
கண்ண ருவய லினங்களும் கனிகளு முணவு
மண்ண ருதெழு பயனொடு திரவிய மல்கித்
திண்ண ருதன பூத்திருந் தனசெழுந் தேயம்

(அபுல்குதுசு கொண்ட படலம் : 52)

போர் வருணனை

இக்காப்பியம் வீரத்தைப் போற்றும் காப்பியமாக அமைந்துள்ளமையால் போர் பற்றிய சில வருணனைகளைப் பார்ப்போம். போர் நடக்கும்போது நடைபெறும் சில நிகழ்ச்சிகள் இங்கு எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. போர்க்களத்தில் போர் நடைபெற்றுக் கொண்டிருந்தது. வாளைப் பிடித்துக் கொண்டிருந்த சிலரின் கைகளை வாளோடு வெட்டி விட்டனர். கைகள் கீழே விழ வெட்டினர். அச்சுறுத்தும் வகையில் சிலரைத் தட்டினர். கேடகங்களைத் தாங்கி நின்ற சிலரைக் கேடகங் களும் தலைகளும் நொறுங்க உடைத்தனர். கையிற் பிடித்த தண்டாயு தங்களோடு தோள்களும் அறுந்து விழப் போரடினர். மற்றுஞ் சிலர் வேலாயுதங்களைக் கொண்டு தாக்கினர். இதனையே புலவர் இவ்வாறு வருணித்துள்ளார் :

வெட்டு வார்சிலர் வாளொடு கையிற வெருளத்
தட்டு வார்சிலர் கேடகம் தலையொடு நொறுங்க
வொட்டுவார் சிலர் கதையொடு தோள்விழ வொதுங்கிக்
கட்டு வார்சிலர் வேல்கொடு பொருமுகக் களித்தே

(கிறக்கிலுடன் போர் புரி படலம் : 85)

அன்று பெரும்பாலும் இரு சாராரையும் சார்ந்த இரு போர் வீரர் ஒருவருடன் ஒருவர் மோதுவதுதான் வழக்காறுக இருந்தது. ஒருவர் வீழ மற்றவர் அவர் இடத்தை ஏற்றுப் போரைத் தொடர்தல் முறைமையாகக் கணிக்கப்பட்டது. ஒரு முறை பகைவன் ஒருவன் முஸ்லிம் படைத் தளபதி ஜஃபர் (ரலி) அவர்களுடன் போர் புரிந்தான். அப் பகைவனுடைய கண்கள் நெருப்புப் பொறியைக் கக்கிக் கொண்டிருந் தன. கோபாவேசமாக வந்தான். கையிலே ஆயுதத்தைச் சுழற்றிய வனுக எதிரே வந்தான். வேகமாகச் செல்லும் குதிரையிலே ஏறி வந்தான். ‘எங்களுள் பலரைக் கொன்றுய், எம் குதிரைகளை அழித்து விட்டாய். மற்றும் வாகனங்களையும் இயங்காமல் செய்து விட்டாய், அருமையான படை வீரர்களைக் கொன்றுய். இதோ பார் உனது கையினைக் கையிலே உள்ள பொருளோடு வெட்டி விடுவேன்’ என வஞ்சினம் கூறிக் கொண்டு எதிரே வந்தான். வன்மச் சிரிப்புடன்

முன்னேறினன். அவனுடைய சிரிப்பு அவனுக்கேற்பட்ட கடுங்கோபத்தினுல் உண்டான சிரிப்பாகும். அவ்வாறு வந்து ஜஹ்பர் (றலி) அவர்களை எதிர்த்தான். இக்காட்சியினையே சேகுனப் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடியுள்ளார் :

நெருங்கு சேனையி னிடையிருந் தழல்விழி
  நிவப்புற வொருரு வீரன்
பொருங்கை ஆயுதஞ் சுழற்றிய விசையொடு
  புரவியைக் கடி தூண்டிக்
கருங்க ணூர்திமற் றரும்படை யளவிலே
  கடிந்த நின்கதிர் வாளோ
டிருங்கை போக்குவ னியானெப் பகைதரு
  நகையி னேடெதிர்ந் தானுல்

(கிறக்கிலுடன் போர்புரி படலம் : 123)

போர் நடைபெற்ற முறையை மற்றொரு பாடல் வருணிக்கிறது. போர் வீரர் கோபத்தினுல் சொண்டை மடிந்தனர். மடித்துக் கடித்தனர். வன்மையாகச் சத்தமிட்டனர். அடித்தனர். உக்கிரமாகக் கோபந் தொனிக்கச் சிரித்தனர். கையிலே கதையைக் கொண்டு அதனுல் தாக்கினர். புடைத்து அடித்தனர். தம்மை எதிர்த்த ஆயுதங்களைத் தமது ஆற்றலால் தெறிக்கச் செய்தனர். வாளோடு வாள் மோதுவதால் ஒளி பரப்பும் வகையில் இருசாராரும் போராடினர். இவ்வாறு கடுமையாகப் போர் நிகழ்ந்தது என்பது இவ்வாறு ஒரு பாடலில் இடம் பெற்றுள்ளது.

மடித்தித ழதுக்கினர் வலித்தனர் கதத்தா
லடுத்தனர் நகைத்தன ரதட்டினர் கதைக்கை
யிடித்தனர் புடைத்தன ரெதிர்த்தவை தெறிப்பத்
தடித்தொளிர் விளக்குவ ணியற்சமர் விளைத்தார்

(மாகான் முதற்போர் புரி படலம்: 41)

மற்றொரு செய்யுளில் பகைவன் முடி முதலியன அறுந்தன எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. முடிகள் அறுந்தன. தலைகள் அறுந்தன, முகங்கள் அறுந்தன. இரண்டு தோள்களும் அறுந்தன இத்தகைய பல காட்சிகள். இவற்றைக் கண்டும் போர் வீரனின் மனநிலை அறுக்கப்படவில்லை. அவன் துணிச்சலுடனே போரிட்டான். சுற்று வர பிணங்கள் குவிந்திருந்தன. உடலில் குறைகளுடன் அவை காணப்பட்டன. தலைகள் துண்டிக்கப்பட்ட உடல்கள் அவற்றுள் இருந்தன. அவற்றின் மேல் குதிரைகள் நடனமாடின. அவற்றின்

பாதங்களும் அறுந்தன. அச்சந்தர்ப்பத்திலும் கூட குதிரை வீரர் போர் புரிந்து கொண்டிருந்தனர். பின்னர் நிலத்திலே விழுந்தனர். புரண்டனர். இத்தகைய காட்சிகளைக் கண்டும் பகைவரின் தலைவன் போரைத் தொடர்ந்து நடத்தும்படி உத்தரவிட்டுக் கொண்டிருந்தான். இக்காட்சியே ஒரு செய்யுளில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

முடிது மிந்துமணி தலைது மிந்துமுக முனிது மிந்துமிரு
தோளொடுங்
கடிது மிந்துமன நிலைது மிந்திலுட லணிக வந்தமொடு மாடுமா
லடிது மிந்துநடை மிகவெ ழுந்தடரு மரிய வெம்பரிக டானையார்
தொடைது மிந்துநில னுைடும்பு ரண்டுமமர் தொடர்க வென்றுரறி
மோதுவார்

(மாகான் முதற்போர் புரி படலம் : 107)

இச்செய்யுள் துமிந்து என்னும் பதம் அறுக்கப்பட்டமையைக் குறிக்கப் பலமுறை பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

போரைப் பற்றிய பாடல்கள் சில குற்றெழுத்துக்களாலான செய்யுட்களாக அமைந்துள்ளன. வஞ்சனை பொருந்திய கயவர்களான பகைவர் போர் வீரர் ஒரு பக்கத்திலே கூடி இருந்தனர். மிகைத்து இருந்தனர். தவம் மிக்க அதிபரும் அவருடைய முஸ்லிம் வீரரும் மறு பக்கத்தில் இருந்தனர். மேகக் கூட்டங்களும் திகைக்கும்படி ஒலி முழக்கம் எழுப்பினவர்களாகப் பகைவர்களைத் தாக்கினர். நெருங்கினர். அடர்த்தனர். கலக்கினர். தமது படை வீரர்களைப் பின்னர் ஒருவழிப் படுத்தினர். இக்கருத்துக்களைக் கொண்ட ஒரு செய்யுள் குற்றெழுத்துக்களையே கொண்டு இவ்வாறு அமைந்துள்ளது.

வலப்புற மிகைத்தனர் மறக்கய மனந்திற்
சலப்பகை யெனத்தகு தவத்திப ரொக்கல்
கலப்புற நெருக்கின ரடர்த்தனர் கலக்கி
குலப்படை கொழித்தனர் புயற்குழு குழு திகைப்ப

(இரண்டாம் போர் புரி படலம் : 158)

மற்றொரு போர்க்காட்சியையும் குற்றெழுத்துக்களை மாத்திரம் கொண்ட ஒரு செய்யுள் மூலம் வருணித்துள்ளார் ஆசிரியர் :

நிறத்தினி லொருத்தரு மிளைத்திடர் நிகர்க்கும்
திறத்தினர் கலத்திலி னிறச்சித றுறுப்புப்
பறத்தலி னிடைக்ககன பற்றிசை சுழற்று
மறத்தழல் வளிப்படு மரத்துகளி னெக்கும்

(இரண்டாம் போர் புரி படலம் : 160)

இத்தகைய சில செய்யுட்கள் கடைசிச் சீர் மாத்திரம் நெட்டெழுத்தசையைக் கொண்டதாகவும் ஏனையவை குற்றெழுத்துக்களைக் கொண்டதாகவும் அமைந்திருப்பதைக் காணலாம். யுகாந்தத்தின் போது ஏற்படும் முழக்கம் போன்றும் நெருப்புப் போன்றும் முஸ்லிம் படையினர் தாக்கவே மனமுடைந்து போன பகைவர் அஞ்சி நடுங்கித் தமக்குச் சொந்தமானவற்றை எல்தாம் அழித்துவிட்டு விரைவாக நடந்து எதிர்க்காமல் ஓடி விட்டனர். இத்தகைய ஒரு செய்யுள் வருமாறு :

கடையுகத்தி னிடிநிகர்த்த கனமுழக்கி னெரியெனப்
படைவிதிர்த்த விறல்கருத்தர் படர்தரத்த மகம்வெரீஇ
குடைநிரைத்த கொடிகண்மற்ற குலமெடுத்த விருதெலா
மிடையழித்து நடைகதிப்ப வெதிர்தலற்று மறுகினூர்

(இரண்டாம் போர் புரி படலம் : 139)

கடைசிச் சீர் மாத்திரம் நெட்டெழுத்தசையைக் கொண்டதாகவும் ஏனையவை குற்றெழுத்துக்களாகவும் அமைந்த ஒரு வஞ்சிச் செய்யுள். சுபைறு (றலி) அவர்கள் தமக்கு உகந்த குதிரையைச் செலுத்தி என்றும் கோபம் மிக்க பகைவராகிய கடலுக்குள் சென்றூர். பெண்கள் அதன் பயனுக அச்சந்தீர்ந்தார் என்றும் அப்பெண்களுடைய கூந்தல் மேகத்தைப் போன்று இருந்ததென்றும் அவர்கள் குரலமைதி பெற்று இனிமையான குரலினை உடையவராய் இருந்தார் என்றும் கமலமுகை போன்ற முலைகளை உடையவராய் இருந்தார் என்றும் இவ்வாறு குறிப்பிடுகிறது.

மனமொத்த வயப்புர விக்கடவிச்
சினமொத்த பகைக்கட லிற்செலுமைக்
கனமொத்தவர் நற்குர லிற்கமலத்
தனமொத்தவ ரச்சக யர்த்தனரால்

(மூன்ரும் போர் புரி படலம் : 25)

போரில் மடிந்தவர்களைப் பற்றிக் கூற வந்த உமறப்புலவரும் குற்றெழுத்துக்களைக் கொண்ட ஒரு செய்யுளில் அத்தகைய ஒரு காட்சியை அமைத்துப் பாடி உள்ளமை ஈண்டு நோக்கற்பாலது. (உகுதுப் படலம் : 203)

முஸ்லிம்களுக்கும் றூமிகளுக்கும் இடையில் நடைபெற்ற போரில் றூமிப் படைகளுக்கு ஏற்பட்ட சேதம் பல செய்யுட்களில் வருணிக்கப்பட்டுள்ளது. அவற்றுள் இரண்டு செய்யுட்கள் இங்கு

தரப்படுகின்றன. இவ்விரண்டு செய்யுட்களிலும் கடைசி அடியின் கடைசிச் சீரைத் தவிர்ந்த முழுச் செய்யுளும் குற்றெழுத்துக்களையே கொண்டனவாக அமைந்துள்ளன. முதல் பாடலில் இடங்கள் படபட என்று அழிந்தன. பேரிகைகள் வெட்டுண்டு கடகட என உருண்டன. வீரர்களில் உடல்கள் மடமட என்று சரிந்தன. மலை போலக் குவிந்துள்ள பிணக் குவியலில் குறைபட்ட உடலின் உறுப்புக்கள் தடதட என நடனமாடுமாடுவது போல் துடித்தன, நடனமிட்டன என இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

படப டென்றுகதை யிட்டவிட முற்றுமழி பட்டுகவியங்
கடக டென்றுருள வெத்திசையு மொய்த்தவலி கத்தருடல
மடம டென்றுசரி யக்கண நெருக்கினிழி மட்டையெவனுந்
தடத டென்றுநட னிட்டன பிணக்குவைத டக்கிரிகண்மேல்

(மூன்ரும் போர் புரிப் படலம் : 59)

இங்கே ஓசை நயமும் அமைந்திருப்பதைக் காணலாம்.

அறபிகளின் கை ஓங்கின. கயவர் கட்டுப்பாடு அற்றுக் குலைந்தனர். குதிரைகள் வெட்டுண்டு சின்னபின்னமாயின. அவை நிலத்திற்கிடந்து துடித்தன. தேர்கள் நொறுங்கின. எழுந்தன எல்லாம் வீழ்ந்தன. இக்காட்சியை இவ்வாறு விவரித்துள்ளார் ஆசிரியர் :

கரிக ளொத்தவய மிக்கமற மைக்கயவர் கட்டழிதரப்
பரிக ளற்றன நிலத்திடை துடித்தன படைத்தவிரதக்
கிரிக ளற்றன வெடுத்தன படுத்தன கிளர்த்தபடையி
னரிக ளொத்தமன வுக்கிர மிகுத்தவ ரடர்த்தவலியால்

(மூன்ரும் போர் புரிப் படலம் : 60)

### தற்குறிப் பேற்றவணி

சூரியோதயம் சந்திரோதயம் போன்ற வருணனைகளைப் பாடும் பொழுது பெரும்பாலும் தற்குறிப்போற்றவணியினை அமைத்தே செய்யுளியற்றுவர். இயற்கையாக நிகழும் சூரியோதயமோ, சூரியாஸ்தமனமோ, சந்திரோதயமோ சந்திராஸ்தமனமோ ஒரு செயற்கைக் காரணத்தினுல் ஏற்படுகின்றது என்பதைக் குறிக்கவே இத்தகைய வருணனைகளில் தற்குறிப்பேற்றவணி அமைக்கப்படுகின்றன.

சூரியன் மறைவது இயற்கை. அன்று சூரியன் மறைவதற்கு ஒரு காரணம் கற்பித்துள்ளார் ஆசிரியர். அப்துல்லாஹ் (றலி) அவர்கள் தமது தந்தையின் மரணத்தை அறிந்து அவர் அடக்கத் தலத்துக்குச்

சென்று அவருடைய ஆத்மசாந்திக்குப் பிரார்த்தித்த பின்னர் மீளாத் துயரத்தில் மூழ்கி இருந்தார். அவருடைய கவலே தோய்ந்த முகத்தை இனிமேலும் நோக்க முடியாது, அதனைச் சகித்துக் கொண்டிருக்க முடியாது என உணர்த்து வேதனையோடு மேற்குத் திசை சென்று விட்டான் சூரியன். இதனையே ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளிலும் ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார் :

கருத்திடத் தகலா வன்பாற் கனிந்தவ ணிருந்தார் வெய்யோ
னருந்திய முகநோக் காதுள் ளயர்வினே டகன்ருன் வாடி
வருத்தமுற் றரிய காலே மலர்விழி துயின்ருர் மென்மை
யிருத்திய கனவொன் ருதி யிறையவனருளிற் கண்டார்

(அபுல்குதுசு கொண்ட படலம் : 16)

மற்ெருரு சூரியாஸ்தமனம். அதற்குக் காரணாாய் அமைந்தது காலிது இப்னு வலீது (றலி) அவர்களின் செவ்விய முகம். அவருடைய புகழ் எட்டுத் திசையும் பரவி இருந்தது. தலே சிறந்த போர்த் தளபதியாக அவர் விளங்கினர். ஆகையினலே அவருடைய முகத்தைக் கண்டு திகைத்தான். அது காரணமாக மேற்குத் திசையிலே ஓடி மறைந்து விட்டான். மாலே என்பவன் உலகினே ஆட்கொண்டான். இதனையே மற்றொரு செய்யுளின் முதலிரண்டு அடிகளிலும் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

எண்டிசை பரந்த கீர்த்தி யிறைமுகச் செம்மை நோக்கிக்
கண்டிகைத் திரவி மேல்பாற் கரந்தனன் மாலே யென்பான்
கொண்டன னுலகம் வெம்போர்க் குரவையார்ப் பன்றி வேலார்
திண்டிறல் வேறு காண்பான் றெரிந்தனர் குறிப்பி னன்றே

(அபுல்குதுசு கொண்ட படலம் : 87)

இன்னுமொரு சூரிய அஸ்தமனம், நபிகள் நாயகம் (சல்) அவர்களின் தோழர்களின் மதிப்பையும் ஆற்றலேயும் நாளேக்கு நான் பார்ப்பேன் இன்று முடியாது. இவ்வாறு எண்ணியவனுய் மேற்குத் திசைக்குச் சென்று விட்டான். எல்லா இடங்களிலும் இருள் சூழ்ந்து விட்டது இதுவே ஒரு செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

மண்பரி மன்னுள மதிப்பு மாநபி
நண்பரி னுக்கமு நாளே நான்றரு
நண்பகல் காண்டுமென் றெண்ணி நாற்றிசைப்
புண்பரிந் தேகினன் பருதி வெய்யவன்

(பகுலப்பக்குக் கொண்ட படலம் : 63)

வேறொரு சூரியாஸ்தமனம். உலகனைத்தையும் விளக்கும் வல்லவனான சூரியன் அந்த மதிலைத் தாண்டிச் செல்ல முடியாது என எண்ணுவதற்குள் மேற்குத் திசையில் போய் மறைந்தான். இன்னும் சில பொழுது இருந்தால் அவர்கள் திட்டம் தீட்ட ஒரு வேளை மதிலைத் தாண்டி விடலாம். ஆதலினால் அது நிகழவிடாது அவர்கள் மதிலைத் தாண்ட நினைப்பதற்குள் இருளைப் பரப்பி மேற்குத் திசையிலே சூரியன் மறைந்து விட்டான். இதுவே இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

உளத்தி னுன்னிய வருஞ்சினத் தெறுழுடை யவர்க
ளளத்த லின்றிய பெருமதி லுயர்படற் கரிதால்
கொளத்த காதென வெண்ணுமுன் குடகடற் புகுந்தான்
வளத்தி னுலக னைத்தையும் விளக்கிய வல்லான்

(கிம்மசரண் முற்றிய படலம்: 63)

இனி, சூரியோதய வருணனையைப் பார்ப்போம். றங்கன் என்னும் நகரினை ஒரு சூழ்ச்சியை மேற்கொண்டு முஸ்லிம் படைகள் கைப்பற்றின. அங்குள்ள மக்கள் முஸ்லிம்களிடம் அபயம் கோரினர். அவர்களுடைய மனவெறுப்பு நீங்கியது. வலிமை அழிந்தது. ஒளியினால் கண்கள் குளிர்ந்தன. இரவோடு இரவாக அந்தக் கோட்டை சரணடைந்தது. அந்தக் கோட்டை மீட்கப்பட்டு விட்டது என்று நபித் தோழர்களின் முகங்கள் மலர்ந்தன. தாமரைப் பூ மலர் சூரியன் தோன்றுவது போல கிழக்குக் கடலிலிருந்து சூரியன் தோன்றினான். சூரியன் அதன் கதிர்க் கால்களை கிழக்குக் கடலிலே உருவினான் என்றே சூரியோதயம் வருணிக்கப்பட்டுள்ளது.

உள்ளக் கார மொழியவலி யொழிய விழிகள் குளிரவொளிர்
கொள்ளக் காந்தும் படைக்கலன்க ளொழியக் குறுகார் குறுகிவரத்
துள்ளக் காலு மானந்தந் தொடர்ந்த மேலோர் முகமலரப்
பள்ளக் கார்பைங் கடற்றணக்கிற் பருதி கதிர்க்கா லுருவினனே

(முப்புரங் கொண்ட படலம்: 35)

பெருமானாரின் சலவாத்தொலி முழங்கியது. முஸ்லிம் சமுதாயத்தை அடையச் செய்யும் பணி ஓரளவுக்கு முற்றுப்பெற்று விட்டது. அவ்வாறு இஸ்லாத்தை ஏற்றவர்கள் வாழ்த்தப்பட்டார்கள். மனைவி மக்கள் சுற்றத்தோர் அனைவரும் வாழ்த்தினார்கள். இவ்வாறு எல்லோரும் வாழ்த்துரை கூறுகிறார்களே நானும் அதைப் பார்க்க வேண்டாமா? என்று எண்ணியவனாக சூரியன் உதித்தான். சூரியன் வருவதினால் இரவு ஒழிந்து விடும். ஆனால் இங்கே சூரியன் இரவை ஒழித்து விட்டு உதயமானான் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது நேற்றுப்

போகும்பொழுது நானே வருவேன் எனக் கூறிவிட்டே சென்றான். அது போல அக்காட்சியைக் காண இன்று வந்துவிட்டான். இதனையே ஆசிரியர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார்:

சொன்னயத் தருமை காணுந் தூய்நபி சலவாத் தோதி
மன்னபி சமுக நல்கு மாட்சிமை யாட்சி பூண்டு
துன்னிய மனைகள் மக்கள் சுற்றங்கள் வாழி கூற
வின்னயங் கொண்டோர்க் காண்பா னிரவியு மிரவை விட்டான்

(சபலா முதற் போர் புரிப் படலம்: 115)

பொழுது காலித்தல் பொழுது படல் என்பவற்றில் தற்குறிப்பேற்ற அணியை அமைத்து அவற்றை வருணிப்பதுடன் ஆசிரியர் நின்றுவிட வில்லை. வேறு விதமாகவும் புலவர் தற்குறிப்பேற்றவணியைச் செய்யுளில் அமைத்துப் பாடுவர். அத்தகைய ஒரு சந்தர்ப்பம் புதூகுச்சாமில் எவ்வாறு அமைந்திருப்பதென்பதைப் பார்ப்போம். சேவல்கள் கூவின. இது இயற்கையாக நிகழ்வது ஒன்று. ஆனால் சேவல் கூவியது பறை முழக்கம் போல இருந்தது. ஏதாவது ஒரு முக்கியமான நிகழ்ச்சியை அறிவிக்கவே பெரும்பாலும் பறையடிப்பதுண்டு. இங்கே பலவகையான குக்குடங்கள்-கோழிகள் பறையடிப்பது போல் கூவின. கோழிகள் கூவுவது வாய் உரைத்தல் போன்றும் சிறகுகளை அடிப்பது பறையடிப்பது போன்றும் இருப்பதாகப் புலவர் கற்பனை பண்ணுவதுண்டு. இங்கோ கோழிகள் சிறகடித்துக் கூவுவது ஒரு முக்கியமான நிகழ்ச்சியைப் பறை சாற்றுவது போல் அமைந்திருந்தது. ''நல்லொழுக்கம் உடையவர்களே என்றும் விரும்பி அடைந்தவர்களை நன்கு உபசரித்து இணக்கம் காண்பவர்களே'' என்றும் நாட்டு மக்கள் விவரிக்கப்பட்டுள்ளனர். அவர்களிடம் ஒரு விஷயத்தைச் சொல்லவே அவர்கள் இவ்வாறு விளிக்கப்பட்டனர். இதுகாறும் இந்நாட்டில் நிலவிய கெட்ட மார்க்கம் அகன்று விட்டது. துன்பங்கள் மறைந்து ஒழிந்தன. துன்பத்தைத் தரும் போக்கும் மறைந்து விட்டது. புனிதமாம் இஸ்லாம் மார்க்கம் தோன்றும் காலம் ஆரம்பித்து விட்டது. இந்தச் செய்தியை பலவர்ணங்களில் இருந்த சேவல்கள் கூவுவது பறை சாற்றுவது போன்றிருந்தது. இங்கே இயற்கையாகவே கூவும் சேவல்கள் இந்தச் செய்தியை அறிவிப்பது போன்று கூவின என்று ஒரு செயற்கை நிகழ்ச்சியை அச்சேவல்களின் கூவும் பாணியில் கண்டுள்ளார் புலவர். அவர் கற்பனையில் கண்ட அக்காட்சிக்கே ஒரு செய்யுளில் இங்ஙனம் சொல்லமைத்து ஒரு படமாக்கிக் காட்டியுள்ளார்.

நன்னெறி யுடையீர் வேண்டுநனிதரு மிணக்க முள்ளீர்
புன்னெறி யகன்று துன்பப் போக்ககன் றரிய வேதச்
சொன்னெறி பரவுங் காலந் தோற்றிய திவ்வூர்க் கென்னப்
பன்னெறி குக்கு டங்கள் வாய்ப்பறை படர்ந்த வன்றே
(கலபு கொண்ட படலம்; 159)

இங்கு சேவலின் ஒலி வாய்ப்பறை என்றே குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம்.

**உவமையும் உருவகமும்**

புதூகுச்சாமில் இடம்பெற்றுள்ள உவமைகளையும் உருவகங்களையும் பார்ப்போம். முகம்மது நபி (சல்) அவர்கள் சுவனபதி எய்தி விட்டார்கள். நாட்டிலே தலைவர் இல்லை என்னும் நிலை ஏற்பட்டது. சாதாரண தலைவர் அல்லர். மதிப்பு வாய்ந்தவர். முன் மாதிரியானவர். முன்னிலையாகக் கொள்ளக் கூடியவர் அத்தகைய தலைவர் இல்லாத ஒரு நகரமும் அந்நகரத்தில் வாழும் மக்களும் சிறப்பற்றவர்களாகவே இருப்பார்கள். நீர் இல்லாத பூஞ்சோலைக்கு அவர்கள் ஒப்பாவார்கள். அறிவே இல்லாதோர் கூறும் வெறுமனும் பேச்சைப் போன்றவர்களாவார்கள். சூரியன் பிரகாசிக்காத வானத்துக்குச் சமமானவர்களாக இருப்பார்கள். பயிர்களையே காணமுடியாத மருத நிலத்தைப் போன்று இருப்பார்கள். வனம் இலா வனம், மதியிலா உரை, கதிர் இலாக் ககனம், புனம் இலாத் தண்ணடை என்னும் உவமைகளை இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப்பாடி உள்ளார் சேகுனப் புலவர்.

வனமிலா வனமென மதியி லாவுரை
யினமெனக் கதிரிலாக் ககன மென்னநற்
புனமிலாத் தண்ணடை போலு முன்னிலைக்
கனமிலாப் பதியொடு களிக்கு மாக்களும்
(அபூபக்கரரசுரிமைப் படலம் : 14)

அபுல்குதுசு என்னும் இடத்திலே போர் மூண்டது. முஸ்லிம்களும் முஸ்லிம் அல்லாதோரும் போரில் ஈடுபட்டனர். பகைவருடைய தாக்குதல் வாடைக்காற்றும் இடி முழக்கமும் பெருமழையோடு சுழலுவது போன்று இருந்தது. முஸ்லிம்கள் தாக்கியமை கோடைக் கனலும் இடியும் தீயும் ஒன்றுபட்டது போல் இருந்தது. முஸ்லிம் படைத் தலைவர் பகைவர் கூட்டத்திலே புகுந்தது யானைக் கூட்டத்தினுள்ளே ஒப்பற்ற சிங்கம் சென்றது போல் இருந்தது. இத்தகைய உவமைகளை ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

வாடையு மிடியும் செய்யு மாரியோ டுழற்று மாறு
கூடயின் முதல வெல்லாங் குடிலமுற் றடர வீசுங்
கோடையு மிடியுந் தீயுங் குலாவலின் வள்ளல் வாளா
லூடறுத் தெறும்பிக் கூட்டத்தொருதனிச் சீய மானுர்
(அபுல்குதுசு கொண்ட படலம் : 68)

தகாத இழிச்செயலைச் செய்வோருக்கு எவ்வளவு படைபலம் இருந் தும் அது பலன் தராது. அத்தகைய தலைவன் வேரற்ற பழைய மரமே யாவான். வேரற்ற மரம் தள்ளினுல் விழுந்து விடும். முஸ்லிம் வெற்றி நிச்சயம் என்பதற்காகவே இவ்வுவமையின் ஒரு செய்யுளின் இறுதி அடியில் சேகுனுப் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்:

... அத்தகையிழி
வினைஞருக் கென்றந்தத்
துன்று வெம்படை விடுத்தலி னென்பயன்
வேரிற் றுன்மர மேயாம்
(மாகான் புறப்பாட்டுப் படலம்: 26)

மற்றெரு செய்யுளில் ஒன்றுக்கு மேற்பட்ட உவமைகள் இடம் பெற்றுள்ளன. மலைபோல் திரண்ட தோளையும் நெருப்புப் போல் சிவந்த கண்களையும் ஒல் என்னும் ஆரவாரம் போன்று கூறும் சொற் களையும் உருக்குப் போன்ற உடலையும் மற்போர் புரிவதைக் கண்டால் களிக்கும் உறுதி போன்ற நெஞ்சினையும் உடையவர்களானவர்கள் அவ்வீரர்கள். அவர்கள் தத்தமக்குரிய இடங்களுக்குச் சென்ருர்கள் என் பதைக் குறிக்கவே மேற்காட்டிய உவமைகளை அமைத்து இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர்:

கல்லெனத் திரண்ட தோளார் கனலெனச் செறிந்த கண்ணு
ரொல்லெனப் படர்ந்த சொல்லா ருருக்கெனப் பெருக்கு மெய்யார்
மல்லெனக் களிக்கு நெஞ்சார் மறத்தினிற் றிறத்தார் தத்தஞ்
சொல்லெனத் தொடர்ந்தார் நாட்டும் பதிகளைத் துதிக ளோடே
(மாகான் புறப்பாட்டுப் படலம்: 69)

காய்ந்த சருகினில் நெருப்புப் பொறி பட்டால் அது கொழுந்து விட்டெரியும், அதிலிடும் அச்சருகு எதுவுக்குமே பயன்படாத புன்சருகு எனின் அது இன்னும் விரைவாக எரிந்து விடும். பகைவர் மீது முஸ் லிம் வீரர் பாய்ந்தது இவ்வாறு இருந்ததாம். அதன் பயனுக குதிரை வீரர் குதிரையோடு சாய்ந்து விழுந்தனர். வாளால் வெட்டப் பட்டதைக் கூட அறியாதவராய் விழுந்தனர். அக்காட்சி ஓவியம் சாய் வது போல் சாய்ந்தனர் அவ்வீரர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவை ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

காய்ந்தி ருந்தபுன் சருகினிற் கனற்பொறி யென்னப்
பாய்ந்தெ ழுந்தவெம் பரிவலப் பார்த்திவர் வாளே
தோய்ந்தெ ழுந்தவை யறிகிலர் துரகதத் தோடுஞ்
சாய்ந்தி ழிந்தில ரோவியம் போற்கில தரியார்

(சபலா முதற்போர் புரிப் படலம் : 172)

இரு சாராரும் போரிட்டதும் உவமைகள் மூலம் விளக்கப் பட்டுள்ளது. காற்ருேடு நெருப்புக் காற்று மோதுவது போன்றிருந்தது அச்சண்டை. நெருப்போடு நெருப்பு மோதுவது போன்றிருந்தது ஒருவரை ஒருவர் தாக்கியது. யமனை யமன் எதிர்ப்பது போன்ற காட்சி அளித்தது. இரு சாராரும் மோதியது இடியேற்று முழக்கத்துடன் ஆண் சிங்கம் போட்டிக்கு முழங்கியது போலவும் இருந்தது அப்போர்க் காட்சி. அங்ஙனம் குதிரை வீரர் ஒருவரோடு ஒருவர் போரிட்டனர். இவ்வுவமைகளையே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி யுள்ளார்.

காற்றி னேடெரி காற்றெனக் கனலொடு கனல்போல்
கூற்றி னேடெதிர் கூற்றெனக் கொடுஞ்சினத் தசனி
யேற்றி னேடட லேறென விவுளியோ டிவுளி
யாற்ற லாற்புணர்ப் பறிகிலா வமர்சில ரடர்வார்

(சபலா முதற் போர் புரிப் படலம் : 173)

எல்லா இடத்திலும் செல்லவல்லது காற்று. அதே போன்று ஆமிறு (றலி) அவர்கள் போராடச் சென்ருர்கள். அவர்களுக்குக் கோபம் வந்தது. சிங்கம் போல் சீறிஞர்கள். அதனல் அவருடைய கண்களே சிவந்து விட்டன. ஊற்றுக் கண்ணிலிருந்து நீர் ஊறுவது போன்று கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. அத்தகைய ஒருவனை இரு கூருக அவனது உடலை கூர்மையான வாளால் வெட்டிஞர். அவர்களுடைய பாய்ச்சல் பருந்தின் பாய்ச்சலைப் போன்று இருந்தது. பருந்தின் பாய்ச்சல் குறி தவருது அல்லவா? அத்தகைய ஆற்றல் வாய்ந்தவர் ஆமிறு (றலி) அவர்கள். இக்கருத்துக் களே ஒரு செய்யுளில் இவ்வாறு இடம்பெற்றுள்ளன.

காற்றிற் கொக்குங் கோண நடித்துக் கனல்சிந்து
மேற்றிற் கொப்பச் சீறிவை வாளா ளெறிவிட்டா
ரூற்றிற் கொப்பச் சோரியி ழுக்கைக் கூறெய்தப்
பாற்றிற் கொப்பப் பாய்ந்து படர்ந்தே பண்புள்ளார்

(இரண்டாம் போர் புரிப்படலம் : 202)

குதிரைகள் செலுத்தப்பட்ட விதத்தினைக் குறிப்பிடப் பல உவமைகள் இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளன. சில குதிரைகள் காற்றுப்போல் வேகமாகச் செலுத்தப்பட்டன. வேறு சில பம்பரம் போல் சுற்றின. மற்றும் சில நெருப்புக் கொள்ளி போன்று இருந்தன. இருசாராரும் இங்ஙனமாகப் போர்க்களத்துக்கு வந்தனர். அரபியரின் நெஞ்சோ பால் போலது என்ற அவர்களின் வருணனையும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. அத்தகைய நெஞ்சுகளுடன் ஒப்பிடுகையில் உறூமியரோ விடம் போன்ற நஞ்சினை உடையோராவர். பகைவரும் வேறு வழி இல்லாமல் போகட்டும் என்னும் குறிக்கோளுடன் எல்லா வாயில்களையும் அடைத்து விட்டனர். இங்கே குதிரை வீரர்கள் குதிரைகளை இயக்கிய வழி காற்றுக்கும் பம்பரத்துக்கும் நெருப்புக் கொள்ளிக்கும் உவமிக்கப்பட்டுள்ளது. அறபு மக்களுடைய நெஞ்சு பாலுக்கும் றூமியரின் நெஞ்சு நஞ்சுக்கும் உவமிக்கப்பட்டுள்ளன. இவ்வுவமைகளையே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துள்ளார் ஆசிரியர்.

காலெனச் சிலமா வாடுங் கறங்கெனச் சிலமா வன்னி
கோலெனச் சிலமா வெங்கோல் விரைவெனச் சிலமா வூர்ந்தார்
பாலெனச் சிறந்த நெஞ்சர் விடமெனப் பகைத்த நெஞ்சர்
வேலெனப் படைமற் றென்ன விடைவெளி யடைத்து விட்டார்

(இரண்டாம் போர் புரிப் படலம்: 243)

பெருமானார் (சல்) அவர்களின் மறைவை அறிந்த தோழர்கள் பெருந்துயரில் ஆழ்ந்தார்கள். பெருமானாரை 'எம்முயிரே' 'எழில் சேர் முகம்மதே' 'அகமதே' என அழுதார்கள். அவ்வாறு அழுதமையைக் குறிப்பிட வந்த சேகுனாப் புலவர் ஓர் உருவகத்தை இங்கு அமைத்துள்ளார். பாவமாகிய சுமை காரணமாகத் துயரமாம் கடலில் மூழ்கித் தத்தளிப்போரை உரித்துடன் கரையேற்றும் மரக்கலம் போன்றவர்கள் எம்பெருமானார் நபிகள் நாயகம் (சல்) அவர்கள். அவர்களுடைய அழகுப் பொலிவை எப்போது காண்பேனோ என அருமைத் தோழர் கூற்றை ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்.

துன்று பாவச் சுமைஞாட்பி னழுந்துங் துயரக் கடன்மூழ்கி
நின்றோர்க் குரிய மரக்கலத்தி னிகரா வளியிற் றிகழ்ந்தருளே
பொன்ரு தலர்ந்த திருநயனப் புண்ட ரீக மலர்ந்திருப்ப
தென்றோ காண்ப வெம்முயிரே யெழில்சேர் முகம்ம தகமதுவே

(நபிகள் நாயகம் உபாத்துப் படலம்: 57)

மற்றொரு உருவகச் செய்யுளை எடுத்துக் கொள்வோம். முஸ்லிம் மக்களைத் தீவினை அகற்ற வந்தவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள். அத்தகையோர் இழிவு என்னும் கடலில் ஆழ்ந்து விடுவர்,

பொய்ம்மை என்னும் நரகத் தீயில் இடப்பட்டு உழன்று விடுவர். அத்தகைய இடத்திலிருந்து நன்மையாகிய கரையிலே சேர்த்து அருளுபவர் எங்கள் பெருமானார் முகம்மது (சல்) அவர்களே. அவர்களை ஒரு நாளும் மறக்க முடியாது. இணை வைத்துப் பல தெய்வங்களைப்பூசித்து வருதல் தீமையை வருவிக்கும். அத்தகைய பூசித்தல் என்னும் தீமையிலிருந்து மக்களை மாற்றக்கூடிய ஒரே ஒரு வழி உள்ளது. அதுதான் ஓரிறைவன் என்னும் இறை நம்பிக்கையாகும். இங்கே இழிவு கடலுக்கும் பொய்ம்மை நரகத்தீக்கும், நன்மையைக் கரைக்கும் காப்பாற்றக் கூடியவர் நபிகள் நாயகம் (சல்) அவர்களுக்கும் இணை வைத்துப் பூசித்தலைத் தீமைக்கும் காப்பாற்றக் கூடிய ஒரே வழி ஒரே இறை நம்பிக்கைக்கும் இவ்வாறு ஒரு செய்யுளில் உருவகிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

புன்மையங் கடலிற் ருழ்ந்து பொய்நர கழல்புக் காது
நன்மையங் கரையிற் சேர்த்த நன்றியை மறப்ப துண்டோ
பன்மையை மாற்று மோர்மைப் படுத்ததற் கைம்மா றேதும்
இன்மையா லிகழ்ந்து நும்மை எங்ஙன மிருந்து வாழ்வோம்
(மூவர் பிழை பொறுத்த படலம்: 15)

இங்ஙனம் எடுத்துக்காட்டுக்கள் மிகப்பல.

**அல்குர்ஆன் கருத்துக்கள்**

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க் காப்பியங்களுள் தனிச்சிறப்புடன் விளங்குவது புதூகுச்சாம் என்னும் காப்பியம். காப்பிய அமைப்பை எடுத்துக் கொண்டாலும் சரி, வருணனைகளை எடுத்துக் கொண்டாலும் சரி, பாத்திரப் படைப்பை எடுத்துக்கொண்டாலும் சரி, சொல்லாட்சியைப் பொறுத்த வரையிலும் சரி, இஸ்லாமியக் கோட்பாடுகளை எடுத்துக் கொண்டாலும் சரி புதூ குச்சாம் அதற்கே உரிய ஒரு தனி நடையைப் பின்பற்றிச் செல்வதைக் காணலாம்.

இஸ்லாமிய கோட்பாடுகளுக்கு மூலமாய் அமைவது அல்குர்ஆன் அத்தகைய அல்குர்ஆன் கருத்துக்கள் பல புதூகுச்சாமில் புகுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம் அல்லாஹ்வுடைய பாதையில் தனது பொருள்களைச் செலவு செய்கிறவனுக்குக் கிடைக்கும் பலாபலனைப் பற்றி அல்லாஹ் தனது அல்குர்ஆனில் குறிப்பிட்டுள்ளான். '(நபியே) அல்லாஹ்வுடைய பாதையில் தங்களுடைய பொருளைச் செலவு செய்கிறவர்களுடைய (பொருளின்) உதாரணம், ஒரு வித்தின் உதாரணத்தை ஒத்திருக்கிறது. அ(ந்த வித்)து ஏழு கதிர்களைத் தந்தது. ஒவ்வொரு கதிரிலும் நூறு வித்துக்கள். (ஆக எழுநூறு வித்துக்கள் அந்த ஒரு வித்திலிருந்து உற்பத்தியாயின). அல்லாஹ் தான், விரும்பியவர்களுக்கு (இதைப் பின்னும்) இரட்டிப்பாக்குகின்றான். ஏனெனில்

அல்லாஹ் (கொடையில்) மிக்க விசாலமானவனும் அறிபவனுமாக இருக்கின்றான். (2:261). இதே கருத்துக்கள் புதூ குச்சாமில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

வித்தொன்று குலேயோ ரேழு குலேக்கொரு நூறு வித்தின்
எத்துணைப் பயனுங் கொண்ட தெண்மையர்க் குதவு மார்ப்பின்
ஒத்தன னெனினும் மேலோன் வழிபடும் பொருளென் ருேங்கும்
சத்திய மறையின் தீஞ்சொல் தவழ்ந்து லாமனத் தினீரே

(தபூக்கிற்றிறை கொண்ட படலம் : 16)

இஹ்லாஸ் என்ருல் (நம்பிக்கையில்) தூய்மை என்பது பொருள் என்பர். ஏகத்துவம் என்பதையும் குறிப்பதாகக் கொள்வர். மலாயிக் கத்துமாரும் சேர்ந்து முஸ்லிம்களுக்கு வெற்றி கிட்ட வேண்டும் எனப் பிரார்த்தித்தனர், இதற்கான காரணம் என்ன எனக் கேட்கப்பட்ட பொழுது அமரர் பதி சொன்ன விளக்கம் குல்குவல்லாஹ்வை ஓதியதனுல் பெற்ற தூய நிலே என்பதுவே. இதனேயே சேகுனுப் புலவர் தமது புதூ குச்சாமில் இவ்வாறு பாடியுள்ளார் :

மதியொடு பகர்ந்த மாதவர் கேட்ப மாநிலத் தனுதினம் வழக்கத்
துதியினெப் புறத்துங் குல்குவல் லாவை யோதிய தூய் நிலே
யென்றுர்

(தபூக்கிற்றிறை கொண்ட படலம்: 130)

யார் யாருக்கு நாம் கீழ்ப்படிய வேண்டும். யார் யாரை வழிபட வேண்டும். யார் யாரை தொடர வேண்டும் என்பதைப் பற்றி அல் குர்ஆன் தெளிவாக விவரிக்கிறது. ‘ விசுவாசிகளே, நீங்கள் அல்லாஹ் வுக்கு வழிபட்டு நடவுங்கள். (அவ்வாறே அல்லாஹ்வுடைய) தூதருக் கும், உங்கள் அதிபருக்கும் வழிபட்டு நடவுங்கள்...’ (4:59) அல்குர் ஆனின் இந்த திரு வாக்கியத்தில் ‘உலில் அம்ர்’ என்னும் அறபுச் சொற்ருெடர் அதிகாரம் உள்ள அல்லது பொறுப்பு வாய்ந்த, அல்லது தீர்மானத்தை மேற்கொள்ளக்கூடிய, அல்லது விவகாரங்களேத் தீர்த்து வைக்கக் கூடியவர்களேயே குறிப்பிடுகிறது எனக் கொள்வர். இறுதி அதிகாரம் அல்லாஹ்விடமே உள்ளது. எனினும் ஏனேயோர் அல்லாஹ் விடமிருந்தே அதிகாரத்தைப் பெறுகின்றனர். சாதாரண ஓர் அரசாங் கமும் நேர்மையாகவே நடக்கும் என இஸ்லாம் எதிர்பார்க்கிறது. எனவே தான் அத்தகைய அதிகாரத்துக்கு. அதிகாரத்தைச் செலுத்து வோருக்கு, அமீருக்கு நாம் கீழ்ப்படிய வேண்டும் என இஸ்லாம் விதிக் கிறது. இத்தகைய கருத்துக்கள் மற்ருெரு இடத்திலும் அல்குர்ஆனில்

(47:33) குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கருத்துக்களேயே உள்ளடக்கி சேகுனுப் புலவர் அவர்கள் தமது புதூகுச்சாம் என்னும் காப்பியத்தில் இவ்வாறு பாடியுள்ளார்:

ஆதியா நின்ற மேலோ னன்பினோ டவற்கும் வந்த
தூ தரா னவர்க்கும்நாட்டுத் தலைவர்க்குந் தொடர்க வென்ன
வேதமே விதித்த வண்ண மெடுத்த யாமாத லானும்
போதமே போது மென்றூர் பொங்குதார் வீங்கு மார்பர்

(படையெழுச்சிப் படலம் : 16)

அவற்கும், தூதுவரானவர்க்கும், நாட்டுத் தலைவர்க்கும் என்பன முறையே அவனை, தூதுவரை, தலைவரை எனக் கொள்ளல் வேண்டும். இங்கே இரண்டாம் வேற்றுமை வரவேண்டிய இடங்களில் நான்காம் வேற்றுமை உருபு வந்துள்ளது. யானையைக் கோட்டைக் குறைத்தான் என்பது யானைக்குக் கோட்டைக் குறைத்தான் என அமைந்துள்ள இலக்கண விதிக்கு அமையவே இங்கு ஆளப்பட்டுள்ளது. தொல் காப்பிய இலக்கண விதிக்கமையவே இவ்வுபயோகம் அமைந்துள்ளது. தொடர்க என்பதை வழிபடுக எனப் பொருள் கொள்ளல் வேண்டும்.

மன்னன் கிறக்கீல் நோன்பைப் பற்றியும் அது எவ்வாறு முஸ்லிம் களுக்கு விதிக்கப்பட்டது என்பது பற்றியும் தனக்கு விளக்குமாறு கேட்டான். றபீஅத் (றலி) அவர்களும் அதனை முறைப்படி விளக்கினர். அவ்வாறு நோன்பு விதிக்கப்பட்ட அல்குர்ஆன் ஆயத்தையே (திரு வசனத்தினையே) ஓதிக் காட்டினர்கள். 'விசுவாசிகளே, உங்களுக்கு முன்னிருந்தவர்கள் மீது விதிக்கப்பட்டிருந்த பிரகாரமே உங்கள் மீதும் நோன்பு நோற்பது விதிக்கப்பட்டிருக்கின்றது. (அதனுல்) நீங்கள் பரிசுத்தவான்களாகலாம்.' (2:183) இக்கருத்துக்களைக் கொண்ட திருக் குர்ஆன் வசனத்தை ஓதிக் காட்டினர்கள் றபீஅத் (றலி) அவர்கள். இக்கருத்துக்களை அதே முறையில் எவ்வளவு அழகாக ஒரு பாடலில் சேகுனுப் புலவர் அவர்கள் அமைத்துள்ளார்கள் என்பதனைப் பாருங்கள். பாடல் இதுதான் :

முன்னினர்க் குரிமை யென்ன முதிர்புகழ் விரத நோற்பா
னன்னிலை யீமா னுள்ளீர் நாட்டின னுங்கட் கென்றே
சொன்னதோர் வேதத் தாயத் தோதியுட் டுளங்கச் செய்தார்
பொன்னலங் கதிர்செய் யாரம் புரடரு வரையிற் றோளார்

(தபூக்குக் கொண்ட படலம் : 120)

இந்த உரையாடல் தொடருகிறது. கிறக்கீல் மன்னன் மேலும் கேள்வி கேட்கின்றன். முந்திய வேதங்களில் ஒரு நன்மைக்கு ஒரு பலனே

கிடைக்கும் என்று இருப்பதைக் கண்டேன். இஸ்லாத்திலே இது எவ்வாறு உள்ளது என்று கிறக்கில் மன்னன் கேட்டான். றபீஅத் (றலி) அவர்கள் அல் குர்ஆனிலிருந்தே அக்கேள்விக்கும் விடை கொடுத்தார். அக் குர்ஆன் திரு வசனத்தின் கருத்து இவ்வாறு அமைந்திருந்தது: 'எவரேனும் ஒரு நன்மையைச் செய்தால் அவருக்கு அதைப் போல் பத்துப் பங்கு (நன்மைகள்) உண்டு. எவரேனும் ஒரு தீமையைச் செய்தால், அதைப்போன்றதேயன்றி (அதிகமாக) அவருக்குக் கூலி கொடுக்கப்பட மாட்டாது. (குற்றத்திற்கு அதிகமான தண்டனையைக் கொடுத்தோ, அல்லது நன்மைக்குரிய கூலியைக் குறைத்தோ) அவர்கள் அநியாயம் செய்யப்பட மாட்டார்கள்.' (6:160; 28:84) இக்கருத்துக்களையும் சுவை மிக்க ஒரு செய்யுளின் மூலம் புதூகுச்சாம் ஆசிரியர் இவ்வாறு விளக்கி உள்ளார் :

நன்மைகொண் டுவந்தோர்க் கன்ன நன்மை பத்துண்டு தீயப்
புன்மைகொண் டுவந்தோர்க் கொன்றே பொருந்துவ கூலி யென்ன
சொன்மைகொள் சுருதி யோதிக் கடவினர் துறைகடோறும்
பன்மைகொண் டொருமை காட்டு மேலவற் பணிய நீரார்

(தபூக்குக் கொண்ட படலம் : 122)

தொடர்ந்து கிறக்கீல் மன்னன் முன்னைய வேதங்களில் உள்ளவற்றைப் பற்றிக் குறிப்பிட்டு அச்செய்திகள் இஸ்லாத்தில் உண்டா என்று கேட்கின்றான். முகம்மது நபி அவர்களின் பேரில் ஸலவாத்துக் கூறுதல் முஸ்லிம்களின் மீது விதியாக்கப்படும் என முன்னைய வேதங்களில குறிப்பிடப்பட்டுள்ளது. அத்தகைய குறிப்புக்கள் இஸ்லாத்தில் உண்டா என்பதுதான் கிறக்கிலின் கேள்வி. கிறக்கிலின் கருத்தை உள்ளடக்கிய செய்யுள் பின்வருமாறு அமைந்துள்ளது :

பன்னல னருகு மேலோன் பகர்நய முடைய வள்ள
லன்னவர் பேரில் வண்மை யழகிய சலவாத் தோத
மன்னிய வும்மத்தோர்க்கு விதிமுறை வகுப்ப னென்ன
முன்னிய மறையில் கண்டேன் உண்டுகொல் முயற்சி யென்றான்

(தபூக்குக் கொண்ட படலம் : 123)

இவ்வினவுக்கும் அல்குர்ஆனிலிருந்தே றபீஅத் (றலி) அவர்கள் பதிலிறுத்தார்கள். அல் குர்ஆன் திரு வசனத்தையே ஓதிக் காண்பித்தார்கள். 'இன்னல்லாஹ வமலாஇக்கதஹு யுஸல்லூன அலன்னபிய்யி யாஅய்யுஹல்லதீன ஆமனூ ஸல்லூ அலய்ஹி வஸல்லிமூ தஸ்லீமா.' (33 : 56). இதன் கருத்தாவது : நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்துச் சொல்லுகின்றார்கள். (ஆகவே) விசுவாசிகளே, நீங்களும் அவர் மீது ஸலவாத்துச்

சொல்லி ஸலாமும் கூறிக் கொண்டிருங்கள். இக்கருத்துக்களையே சேகுனப் புலவர் அவர்கள் தமது காப்பியத்தில் இவ்வாறு அமைத்துப் பாடி பெருமிதம் அடைகிறார் :

இறையவ னேடுமும்ப ரிசைத்தனர் நபிதம் பேரில்
நிறைதரு சலவாத் தீமா னீங்கிலா வுளத்தீர் நீரும்
அறைதிரென றியம்பும் வேத மணிபெற வோதி யிட்டார்
மறைவளம் பழுத்த செந்நா மாதவக் குன்ற மன்னர்

(தபூக்குக் கொண்ட படலம் : 124)

இஸ்லாமியக் கோட்பாடுகளிலே நம்பிக்கை கொண்டவர்கள் யாருக்கு அஞ்ச வேண்டும்? அவ்வாறு பயப்படுவதால் ஏற்படும் நன்மை யாது? முஸ்லிம்கள் அல்லாஹ்வுக்குப் பயப்படல் வேண்டும். அல்லாஹ்வுக்குப் பயப்படுவதனல் முஸ்லிம்கள் கண்ணியம் அடைகின்றனர். இக் கூற்றுக்கு ஆதாரமாக உள்ள அல் குர்ஆன் திரு வசனங்களை சறுகபீல் (றலி) அவர்கள் விளக்கிக் கூறினர்கள். அல்குர்ஆன் ஆயத்தையே எடுத்துக் கூறினர்கள். அல் குர்ஆனிலே உள்ள அவ்வாயத்தின் கருத்து இவ்வாறு தரப்பட்டுள்ளது. 'விசுவாசிகளே நீங்கள் அல்லாஹ் வுக்குப் பயப்படுவீர்களாயின் அவன் உங்களுக்குக் கண்ணியத்தை அளிப்பான். அன்றி, (அதனை) உங்கள் பாவங்களுக்குப் பரிகாரமாக்கி உங்களை மன்னித்து விடுவான். ஏனென்றால், அல்லாஹ் மிக்க மகத்தான அருளுடையோன.' (8:29) இதனோடு ஒத்த கருத்துக்களை அல் குர்ஆனின் பிற இடங்களிலும் வருவதைக் காணலாம். (9:119; 33:70) இனி இந்தக் கருத்துக்களை இனிமையாக சேகுனப் புலவர் அவர்கள் அமைத்துள்ள விதத்தைப் பார்ப்போம்; இக்கருத்துக் களைக் கொண்ட செய்யுள் இதோ :

அஞ்சுவ தகையின் வேந்தை யஞ்சுமி னீமான் கொண்டீர்
துஞ்சல ரல்லீர் நீவிர் துன்பெனும் பாவ மெல்லா
மெஞ்சல்செய் தல்லா லென்ன விறையவன் சொன்ன வாயத்
தஞ்சலி செய்தீ ரீதே யப்பயன் பெறுத லென்றார்

(புசுருக் கொண்ட படலம் : 35)

திருக் குர்ஆன் ஆரம்பிக்கும் சூறத் பாத்திஹாவையும் 112வது சூறத்தான இஃலாஸையும் ஓதுவதனல் ஏற்படும் நன்மைகள் புதூகுச்சாமில் விதந்தோதப்பட்டுள்ளன. இவ்விரண்டு சூறத்துக்களையும் ஓதி வருவதனல் நன்மை வந்தடைவது மட்டுமல்லாமல் தீங்குகளும் அகன்று விடும். இக்கருத்தினை வலியுறுத்தி சேகுனப் புலவர் அவர்கள் இவ்வாறு ஒரு பாடலை யாத்துள்ளார் :

வரிவில்லேந்தும் மதிவல்லார் வடிவாள் விழியின் மடவாளை
விரிவில் லேய்ந்த திருமேனி விளங்கு மெங்க ளுயகஞ்சொற்
பரிவில் லேய்ந்தா யுரைத்தியெனப் பாத்தி காவுமி குலாசு
யிரிவில் லாது சொலக்கேட்டா னந்த மெய்தித் துளங்கினரால்

(புசுருக் கொண்ட படலம்: 144)

அல் குர்ஆனிலே தாலூத் மன்னனைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது. இவரைப் பற்றிக் குறிப்பிடப்படும் அல் குர்ஆன் ஆயத்திலே ஒரு நபி இடம் பெறுகிறுர். அங்கு நபி என்பது மாத்திரம் தான் குறிப்பிடப் படுகிறது. பெயர் குறிப்பிடப்படவில்லை. அவருடைய பெயர் இஷ் மவீல் அல்லது ஷம்வீல் ஆகியிருக்கலாம் எனக் கருத்துத் தெரிவிக்கப் பட்டுள்ளது. இவருடைய பெயர் யூஷா இப்னு நூன் அலலது ஷம்ஊன் இப்னு ஸப்யா என இருக்கலாம் என்ற அபிப்பிராயமும் தெரிவிக்கப்பட்டுள்ளன. இப்பெயரின் கருத்து இஸ்மாஈல் என்பதன் கருத்துடன் ஒத்திருக்கிறது என்று கூறுவர். இந்த நபியின் காலத்தில் இஸ்ரவேலர்கள் பெரும் இன்னலுக்கு ஆளாயினர். அவர்களுக்கு அர சியல் தோல்வி ஏற்பட்டது, உடனே அவர்கள் நபி இஷ்மவீல் (அலை) அவர்களை அண்மித் தங்களுக்கு ஒரு மன்னனை அனுப்பி வைக்குமாறு வேண்டினர். நபி அவர்களும் அல்லாஹ்விடம் துஆ இறைஞ்சினுர் கள். தாலூத் என்பவரை மன்னனுக அனுப்பினதாக நபி அவர்கள் கூறினுர்கள். அவர் உயர்ந்த தோற்றமும் அழகான உருவமும் உடையவராய் இருந்தார். புன்யாமீன் நபி அவர்களின் கோத்தி ரத்தைச் சேர்ந்தவர்களாய் இருந்தார். ஆனுல் அவருடைய உலகச் சொத்துக்களோ மிகச் சொற்பமானதாய் இருந்தது. இதனுல் இஸ்ர வேலர்கள் தாலூத் அவர்களை மன்னனுக ஏற்க மறுத்தனர். போலிக் காரணங்களைக் காட்டி தமது மறுப்பைத் தெரிவித்தனர். அவர்களி டத்து ஏற்பட்ட பொருமையே அதற்கான காரணமாகும். பின்னர் அவர்கள் தாலூத் அவர்களை மன்னனுக ஏற்றுக்கொண்டனர்.

அப்பால் ஒரு படையைச் சேர்ந்தவர்களாக தாலூத் அவர்கள் புறப் பட்டார்கள். அவ்வாறு புறப்படும் பொழுது படைவீரர்கள் சோதிக்கப் படும் முறை ஒன்றினைக் குறிப்பிட்டார்கள். தாங்கள் செல்லும் வழியில் ஓர் ஆறு குறுக்கிடும். அந்த ஆற்றிலிருந்து அளவுக்கு அதிகமாக நீரை ஒருவரும் உட்கொள்ளக் கூடாது. இந்தக் கட்டளையை மீருதவர்களே தம்முடன் செல்லத் தகுதி உடையவர் எனக் குறிப்பிட்டார்கள். ஆனுல் பெரும்பாலானோர் இந்தக் கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லை. எனவே ஒரு சிறு கூட்டத்தினரே அவர்களுடன் செல்ல முடிந்தது தாலூத் அவர்களும் அவர்களுடைய சிறு கூட்டத்தினரும் ஒரு பெருஞ் சேனையை எதிர்நோக்க வேண்டி ஏற்பட்டது. அப்பொழுது தாலூத் மன்னன்

அல்லாஹ்விடம் துஆக் கேட்டார்கள். 'எங்கள் இறைவன், நீ எங்கள் மீது பொறுமையைச் சொரிவாயாக. எங்கள் பாதங்களை உறுதிப்படுத்துவாயாக. அன்றி நிராகரிக்கும் இந்த ஜனங்கள் மீது (வெற்றிபெற) எங்களுக்கு நீ உதவி புரிவாயாக.' தாலூத் அவர்கள் இவ்வாறு இறைவனிடத்தில் துஆக் கேட்டார்கள். வெற்றியும் பெற்றார்கள். எதிரிகளின் தலைவனான ஜாலூத்தை அப்பொழுது தாலூத்தின் படையில் பணிபுரிந்த தாவூத் நபி (அலை) அவர்கள் வெட்டிக் கொன்றார்கள். தாலூத் மன்னனைப் பற்றியும் அவருடைய சிறு கூட்டத்தினர் பெருங் கூட்டத்தை வெற்றி பெறக் கிடைத்த வாய்ப்பினையும் பற்றியும் அல்குர்ஆன் குறிப்பிடுகிறது. (அல் குர்ஆன் 2 : 246-251).

முஸ்லிம்கள் பிற்காலத்தில் தாம் ஈடுபட்ட தற்காப்புப் போர்களில் தம்மை விடத் தமது எதிரிப்படைகள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்த சந்தர்ப்பங்களில் இத்தகைய துஆவினை அல்லாஹ் இடத்தில் கேட்டார்கள். தாலூத் மன்னனுக்கு அளித்த அதே வெற்றியைத் தமக்கும் அளிக்குமாறு அல்லாஹ்விடத்தில் இறைஞ்சினார்கள். விருறைச்சிறைமீட்ட படலத்தில் இக்கருத்துக்களை ருபிகு (றலி) அவர்கள் நினைவுபடுத்தி அல்லாஹ்விடம் குறை இரந்தார்கள் என புதூகுச்சாம் விவரிக்கின்றது. இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வல்லநாத னேவும்மாண்பின் வாழிநற்பொ ருத்தமேற்
செல்கநாடி முன்னுளோர்தஞ் செய்யபாதை யுய்கநீள்
வில்லி னண்ணல் தாலூத்தன்பின் மிக்கசேனை யோதல்போற்
சொல்கநன்மை யருள்வனாதி துணையுமென்று ணர்த்தினர்

(விருறைச் சிறைமீட்ட படலம்: 89)

அடுத்த செய்யுளில் இதனைக் குறிக்கும் ஆயத் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

எறுமுக்கில் செய்யிதினா அபூவுபைதா (றலி) அவர்கள் றூமியர்களின் படையினரின் எண்ணிக்கையைக் கண்டதும் தங்களது சிறிய சேனையை நினைத்து அல்லாஹ்விடம் துஆக் கேட்டார்கள். அவரும் தாலுத் மன்னன் அல்லாஹ்விடம் குறை இறங்கும் பொழுது ஓதிய அதே ஆயத்தினை ஓதி தங்களுக்கும் வெற்றியை அளிக்குமாறு துஆக் கேட்டார்கள். இக்கருத்துக்களையே சேகுனாப் புலவர் அவர்கள் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்:

இருமையுஞ் சிறந்த நாயகக் குரிசில் இருங்குணத் தபூவுபை
தாவும்
பெருமையிற் படர்ந்த றாமிக ளனீகப் பெருக்கினை நோக்கிவல்
லவன்பால்
கருமையிற் ருலூத் தொன்னலர் முன்னங் கழறிய வாயத்தை
யோதி
யருமையி னிரந்து கேட்டனர் சூழ்ந்தா ரன்பின்ஆ மீன்பகர்ந்
தனரால்

(எறுமூக்கிற் பாசறை வகுத்த படலம்: 70)

அல்லாஹ்வின் பாதையி போரில் ஈடுபடுவோருக்கு சுவன பதி நிச்சயமாகக் கிடைக்கும் என்று அல் குர்ஆன் கூறுகிறது (9:111). இக்கருத்தினையே சேகுனைப் புலவர் அவர்கள் தமது புதூகுச்சாம் என்னும் காப்பியத்தில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்:

நாயக னமரின் வேட்கை நடத்து முமீன் களாக்கை
யேயநற் பொருளைச் சொர்க்க மீய்ந்துகொண் டானென் றுற்ற
ஆயத்தை யோதி யோதி யறிவுறூஉங் காலை வீரத்
தூயுள வாகை மற்றேள் விருறரி தூண்டி னூரால்

(வர்த்தான் போர் புரிப்படலம்: 47)

சொன்ன சொல்லை நிறைவேற்றுவது முஸ்லிம்கள் மீது கடமையாக்கப்பட்டுள்ளது. பொதுவாக அவர்கள் மீது சுமத்தப்பட்டுள்ள கடமைகளை நிறைவேற்றுவது அவர்களுக்கு விதியாக்கப்பட்டுள்ளது. இக்கடமைகள் பல்வேறு வகையன. வார்த்தைப்பாட்டை நிறைவேற்றுதல் அவற்றின் ஒன்றாகும். அல் குர்ஆனில் உள்ள அல் மாயிதா என்னும் சூறத்தின் முதலாம் ஆயத்திலேயே 'விசுவாசிகளே நீங்கள் (உங்கள்) உடன்படிக்கைகளைப் பூரணமாக நிறைவேற்றுங்கள்.' (5:1) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கருத்தே ஒரு பாடலில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது:

புன்மை நீங்கியிப் போதெழில் முகம்மதெம் புகழ்ந பிதருமார்க்க
நன்மை நீங்கிலா திருந்தன மின்னுமெய் நலந்த
ருமறைவாய்மைச்
சொன்மை வார்த்தைப்பா டழிவிலா தோம்புமின் சொன்னவை
தவருயிற்
பன்மைத் தண்டனை குட்படு வீரெனும் பாகினையுண் டேமால்

(திமசுக்குக் கொண்ட படலம்: 154)

'அல்லாஹ் பொறுமையாளருடன் இருக்கிருன்.' (2:153) என்று கூறுகிறது அல் குர்ஆன். இக்கூற்ருனது எல்லா முஸ்லிம்களும் எல்லாச்சந்தர்ப்பங்களிலும் பின்பற்றவேண்டிய ஒரு கோட்பாடாகும். இக்கோட்பாட்டைப் பின்பற்றிஞல் முஸ்லிம்கள் நிச்சயம் வெற்றி பெறுவர். பெருங் கூட்டத்தினரை சிறு கூட்டத்தினர் வெல்லுவதற்கு சிறு கூட்டத்தினரின் பொறுமையே காரணமாகும். எனவே தான் பொறுமையாளருடன் அல்லாஹ் இருக்கிருன் என்பது வலியுறுத்தப்படுகிறது. இக்கருத்து புதூகுச்சாமில் பரவலாக இடம் பெற்றுள்ளதைக் காணலாம். ஒரு பாடலில் இக்கருத்து இவ்வாறு அமைந்துள்ளது:

நாதன தியற்கை யாலே நனிகணந் தோற்ப வென்றி
மேதகை சிறுக ணங்கள் பெற்றன மிகவல் லோனும்
போதிய பொறையு ளாரோ டென்றன னெனப்பொய் யில்லா
வேதமு மோதிக் காட்டி வியவும்அவ் வொலியுங் கேட்டார்
(அபுல் குதுசு கொண்ட படலம்: 89)

மனிதன் தனது உற்ருர் உறவினரை அதிகம் நேசிக்கிருன். சொத்து சொம் முதலியவற்றை விரும்புகிருன். வியாபாரத்தையும் இலாபம் ஈட்டும் வழி முறைகளையும் பற்றிப் பிடித்துக் கொள்கின்ருன். உயர்ந்த கட்டடங்களையும் கௌரவத்தையும் வசதிகளையும் பெறுவதில் கண்ணும் கருத்துமாய் இருக்கிருன். அல்லாஹ்வின் பாதையில் இவை தடைகளாயிருப்பின் இவற்றில் எதனை அதிகம் விரும்புகின்ருனே அதனை அவன் நேசிக்க வேண்டும். வேறு எல்லாவற்றையும் தியாகம் புரிய நேர்ந்தாலும் நாம் அவற்றிற்காகக் கவலைப்படாது அல்லாஹ்வையே அதிகம் நேசிக்க வேண்டும். நமது இன சனங்களையும் உடைமைகளையுமே நாம் பெரிதும் விரும்பி அல்லாஹ்வின் பாதையைப் புறக்கணித்தால் அதனல் பாதிக்கப்படுவது அல்லாஹ்வின் பாதையன்று நாம் இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி அல்லாஹ்வின் குறிக்கோள்கள் நிறைவேறுகின்றன. ஆனல் அவ்வாறு அல்லாஹ்வின் பாதையைப் புறக்கணிப்பதால் பாதிக்கப்படுவர்கள் நாமே தாம். ஆன்மீகத் துறையில் பாதிக்கப்படுபவர்கள் நாமே தாம் அல்லாஹ்வின் பாதையில் தங்களை அர்ப்பணித்துத் தங்களின் சுற்றத்தாரையும் உடைமைகளையும் இழந்து மதினமா நகர் சென்ற மக்கா வாசிகளை இதற்கு ஓர் எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

அல் குர்ஆன் இக்கருத்துக்களை இவ்வாறு கூறுகிறது: '(நபியே, விசுவாசிகளை நோக்கி) நீர் கூறும். உங்களுடைய தந்தைகளும், உங்களுடைய மக்களும், உங்களுடைய சகோதரர்களும், உங்களுடைய துணைவர்களும், உங்களுடைய குடும்பமும், நீங்கள் சம்பாதித்து வைத்திருக்கும் (உங்கள்) பொருள்களும், நஷ்டமாகி விடுமோ என நீங்கள்

பயந்து (மிக எச்சரிக்கையுடன்) செய்துவரும் வர்த்தகமும், உங்களுக்கு (மிக்க) விருப்பமுள்ள (உங்கள்) வீடுகளும் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விடவும், அவனுடைய பாதையில் புரிவதை விடவும் உங்களுக்கு மிக விருப்பமானவைகளாயிருந்தால், (நீங்கள் உண்மை விசுவாசிகளல்ல. நீங்கள் அடைய வேண்டிய தண்டனையைப் பற்றிய) அல்லாஹ்வுடைய கட்டளை வரும் வரையில் நீங்கள் எதிர்பார்த்திருங்கள். (உங்களைப் போன்ற) பாவிகளை, அல்லாஹ் நேரான வழியில் செலுத்துவதில்லை' (9;24).

இவ்வாயத்தில் இடம்பெற்ற இக்கருத்துக்களைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் சேகுனாப் புலவர் அவர்கள் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் :

தந்தை தாய்மக வுடன்பிறந் தார்கிளை தாரஞ்
சொந்த மாநிலம் பொருந்திய பொருட்டொடர் பதிக
நந்து மேனுமிக் ககத்தொடல் நாதனை யென்ன
வந்த ஆயத்தின் பயனய முணர்கநும் மனத்தில்

(கன்சரீன் கொண்ட படலம் : 5)

பொறுமையின் பெருமையைப் பற்றிப் புதூகுச்சாமில் பல இடங்களில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளது. துன்பங்கள் நேர்ந்தால் அதற்காக நாம் தளர்ந்து விடக்கூடாது. மனச் சோர்வு அடையக் கூடாது. அவற்றை எல்லாம் சகித்துக் கொண்டிருத்தல் வேண்டும் ஊக்கமாயிருக்க வேண்டும். எந்தச் சந்தர்ப்பத்திலும் எதிரியை எதிர் நோக்கத் தயாராயிருக்க வேண்டும். அத்தோடு அல்லாஹ்வுககுப் பயந்து நடந்து கொள்ளுதல் வேண்டும். அல்குர்ஆனில் இக்கருத்துக்கள் இவ்வாறு அமைந்துள்ளன: 'விசுவாசிகளே, நீங்கள் பொறுமையைக் கடைப்பிடியுங்கள். ஒருவர்க்கொருவர் சகித்துக் கொள்ளுங்கள். (எதிரியை எதிர்க்க) எந்நேரமும் சித்தமாயிருங்கள். அல்லாஹ்வுக்குப் பயந்து (நடந்து) கொள்ளுங்கள். நீங்கள் (இம்மையிலும் மறுமையுலும்) சித்தியடைவீர்கள்'. (3:200). இதே கருத்துக்களைச் சேகுனாப் புலவர் அவர்கள் ஒரு திருவிருத்தத்தில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் :

நிறைதரு மீமா னுள்ளீர் நேர்தரு துன்புக் கெல்லா
மறையுள மயரீர் போரின் மன்னிய வினைகட் கெண்ணுப்
பொறைநிலை பூண்பீ ரூக்கம் புனைகுவீ ரிறைபா லச்ச
முறைகொள்வீர் கொண்டால் வென்றி முயன்ற நீரென் றதன்றே.

(திருமுகம் பெற்ற படலம் ; 55)

போர்க்களத்தில் தொழுகை நடைபெற்றது. செய்யிதிநா அபூ வுபைதா (றலி) அவர்கள் முன் நின்று தொழுகையை நடத்தினார்கள். இரண்டு றக்அத்துக்களைக் கொண்டது அத்தொழுகை. ஒவ்வோர் றக்அத்திலும் என்னென்ன சூருக்களை அவர்கள் இமாமாக நின்று ஓதினார்கள் என்பது புதூகுச்சாமில் குறிப்பிடப்பட்டுள்ளது. முதலாவது றக்அத்தில் 'வல் பஜ்ர்' என்று ஆரம்பிக்கும் சூறத்தையும் இரண்டாம் றக்அத்தில் 'வஷ்ஷம்ஸ்' என்று ஆரம்பிக்கும் சூறத்தையும் ஓதித்தொழுவித்தார்கள் எனக் கூறப்பட்டுள்ளது. இவை இரண்டும் முறையே சூரு அல் பஜ்ர் என்றும் சூரு அஷ்ஷம்ஸ் என்றும் வழங்கப்படுகின்றன. முதல் கூறிப்பிட்ட சூறத்தின் தலைப்பின் கருத்து விடியற்காலை என்பதாகும். இரண்டாவதாகக் குறிப்பிட்ட சூறத்தின் கருத்து சூரியன் என்பதாகும். அபூவுபைதா(றலி) அவர்கள் தொழுவித்த விதத்தையும் தொழுகையில் ஓதிய சூருக்களையும் புலவர் நாயகம் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்:

தத்தமக் குரியர் பின்னணி யாகித் தலைமையர் முன்னிலை யாகப்
பத்தியி னின்ரு ரியாவர்க்கு மிறையெம் பாக்கியம் அபூவுபை
தாவும்
உத்தம றக்அத் ததனின் முன்சூறந் தொல்பசு ரேதினர் பின்னர்
தத்துவத் தியலின் ஒச்சமு சோதித் தொழுவித்தார் தம்முளக்
குணத்தான்

(இரண்டாம் போர் புரிப்படலம்: 23)

இவர்கள் இவ்வாறு ஓதித் தொழுகையை முடித்ததும் ஆகாயத்திலே ஓர் அசரீரி கேட்டது. நீங்கள் வெற்றி பெற்று விட்டீர்கள் என்பதே அந்த அசரீரி சத்தம். முந்தின றக்அத்திலே அல் பஜ்ர் (89) என்னும் சூறத்தையும் இரண்டாவது றக்அத்தில் அஷ்ஷம்ஸ் (91) என்னும் சூறத்தையும் அனைவரும் உள்ளத்தில் கொண்டார்கள். முதலாவது றக் அத்தில் ஓதப்பட்ட சூறத்தில் உள்ள 'இன்ன றப்பக லபில் மிர்ஸாத்' (89:14) என்பதையும் இரண்டாவது றக் அத்தில் ஓதப்பட்ட சூறத்தில் உள்ள பதம்தம அலைஹிம் றப்புஹும் பிதன்பிஹிம்' (91:14) என்பதையும் மற்றொரு பாடலில் சுட்டிக் காட்டுகிறார் நூலாசிரியர். அப்பாடல் வருமாறு:

நன்னயத் திறக்அத் ததனின் முன்இன்ன றப்பக்க லபில்
மிறுசாதும்
பின்னயத் தோடு பதம்தம அலைகிம் றப்பு கும் பிதன்பிகிம் என்று
முன்னயத் துமரின் முன்னிலை வள்ளல் மொழிதரத் தோன்றின
வவையே
துன்னயத் திமாமா நின்றமற் றதிபர் தம்மிடத் தினுந்துலங்
கினவால்

(இரண்டாம் போர் புரிப் படலம்: 25)

இச்செய்யுளிலே குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு ஆயத்துகளினதும் பொருளை அடுத்த பாடலில் செய்கு அப்துல் காதிறு நெய்னர் ஆலிம் புலவர் அவர்கள் தமது புதூகுச்சாமில் விளக்குகிறுர். இவ்விரண்டு ஆயத்துக்களினதும் கருத்து இவ்வாறு அமைந்துள்ளது:

'நிச்சயமாக உமது இறைவன் (இந்தப் பாவிகளின் வரவை எதிர் பார்த்த வண்ணமாக இருக்கிறுன்.' (அல் குர்ஆன் 89:14)

'...ஆகவே அவர்களுடைய இறைவன் அவர்களின் இந்தப் பாவத் தின் காரணமாக, அவர்களின் மீது வேதனையை இறக்கி, அவர்கள் யாவரையும் (தரை) மட்டமாக்கி விட்டான்.' (91 : 14) இவ்விரண்டு ஆயத்துக்களின் கருத்தினையே ஆசிரியர் ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்:

புகழ்முகம் மதுநின் ணுண்டகை யடியார் புணர்த்துமவ்
வினைக்கெதிர் கூலி
நிகழ்தர மறைந்து நோக்குரு நின்ரு னென்றது நீதிமுன் ஆயத்
திகழ்தரு மவரின் பவத்தினு னவர்க ளிறையவர் களையதா பியற்ற
வுகழ்தர விருந்தான் என்றது பின்ன ரோதுமவ் வாயத்தின்
பொருளே
(இரண்டாம் போர் புரிப் படலம் : 26)

கீழான நாட்டங்களையும் தீய எண்ணங்களையும் கொண்டு செயல் படுபவர்கள் மீட்சி பெற மாட்டார்கள். அல்லாஹ்வின் ஏவல்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்களுக்கே நற்பயன் கிட்டும். நன்மை செய்தவர் களுக்கே நன்மையான பலன் கிடைக்கும். நல்ல நேரான வழியில் செல்பவர்களே இறுதியில் வெற்றி அடைவார்கள். இது திண்ணம். இக்கருத்துக்கள் அல்குர்ஆனிலே இவ்வாறு இடம்பெற்றுள்ளன:

'(மிக்க பாக்கியம் பெற்ற) அந்த மறுமையின் வீட்டையோ பூமியில் பெருமையையும் விஷமத்தையும் விரும்பாதவர்களுக்கே நாம் (சொந்தமாக) ஆக்கி விடுவோம். ஏனென்ருல், (நல்ல) முடிவு பக்தி உடையவர்களுக்குத்தான்' (28 : 83).

இக்கருத்துக்களே புதூகுச்சாமில் இவ்வாறு இடம்பெற்றுள்ளன:

இப்பயன் விளங்கக் கூறி யெழினபி நயினுர் மீட்டு
மப்பய னின்ப வீட்டை யமைத்தன முலகின் மேன்மை
வெப்புறுங் கீண்மை நாட்டம் வேண்டிலார்க் கென்ன வல்லோன்
செப்பிய மறையி ஞயத் தொன்றினைத் தெளிவித் தாரால்
(ஆவணம் விடுத்த படலம் : 23)

ஒரு முறை பைத்துல் முகத்திசில் முஸ்லிம்களுக்கும் முஸ்லிம் அல்லாதோருக்கும் உரையாடல் நடைபெற்றது. அவ்வுரையாடலின் போது ஈசா நபி (அலை) அவர்கள் பற்றி ஆராயப்பட்டது. ஈசா நபி (அலை) அவர்கள் மசீஹ் என அழைக்கப்பட்டார். அல்குர்ஆனிலும் இச்சொல் இடம்பெற்றுள்ளது மசீஹிடம் தாம் இரங்குவதாக முஸ்லிம் அல்லாதோர் கூறினர். அவ்வாறு செய்ய முடியாது என்று வாதாடினர் முஸ்லிம்கள். இக்கூற்றுக்கு ஆதாரமாக முஸ்லிம்கள் பின்வரும் ஆயத்தை எடுத்துக் காட்டினர்.

'மர்யமுடைய மகன் மஸீஹ், ஒரு தூதரேயன்றி (ஆண்டவனோ, ஆண்டவனுடைய குமாரரோ) அல்ல. இவருக்கு முன்னரும் (இவரைப் போல்) தூதர்கள் பலர் (வந்து) சென்று விட்டனர். அவருடைய தாயும் (ஆண்டவன் அல்ல. அவர் மிக்க உண்மையான) ஒரு சத்திய வாதியாகத்தான் இருந்தார். இவ்விருவரும் (இவ்வுலகிலிருந்து காலமெல்லாம் மற்ற மனிதர்களைப் போல) உணவு உட்கொண்டே (வாழ்ந்து) வந்தனர். (ஆகவே, இவ்விருவரும் எவ்வாறு ஆண்டவர் களாவார்கள். இதனை) நாம் பல அத்தாட்சிகளைக் கொண்டு, அவர் களுக்கு எவ்வாறு தெளிவாக்கி வைத்திருக்கின்றோம் என்பதை(நபியே) நீர் கவனியும். (உண்மையிலிருந்து) அவர்கள் எவ்வளவு தூரம் விலகிச் சென்று விட்டனர் என்பதையும் நீர் கவனியும்.' (5 : 75).

இக்கருத்துக்கள் புதூகுச்சாமிலும் இடம்பெற்றுள்ளன. முஸ்லிம்கள் முஸ்லிம் அல்லாதாருக்கு இந்த நிலையை விளக்கிய விதத்தினையும் அதற்கான ஆதாரத்தை எவ்வாறு வலியுறுத்தினார்கள் என்பதையும் நயம்பட இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் இந்நூலாசிரியர் புலவர் நாயகம் :

இரத்தற் குரியர் நீவிரன்றவ் வேந்த லெவைக்குங் கருத்தனுமன்
றுரைத்த பயனின் மறையுணர்வா யுலகி னபிமா ரியல்பொருந்துந்
திரத்தி னபியே மறியமருள் செல்வக் குரிசி லவருமவர்
பரத்தி னனையு முண்டிமுதற் பலவு மருந்துங் குலனுள்ளார்

(உமறு கத்தாபு பைத்துல் முகத்திசுக்கெழுந்த படலம் : 81)

இக்கருத்துக்களின் தொடர்ச்சியை நூலாசிரியர் அடுத்த பாடலில் எடுத்துக்காட்டுகிறார் :

அவரை யியற்று முவமைமுத லமைக்கு மாத மெனும்வள்ள
லிவரை யியற்று முவமையென்று லிருவர் சடமுமண் ணேனுங்
கவலு மன்னை தந்தையிலார் கனதி யுடையா ரறிகவல்லோ
னுவலுங் குன்னென் றீரெழுத்தால் நோக்கி யெழுந்த வுலகுயிரே

(உமறு கத்தாபு பைத்துல் முகத்திசுக்கெழுந்த படலம் : 82)

உமறு கத்தாப் (றலி) அவர்கள் பைத்துல் முகத்திசுக்குச் சென்று அங்கே குத்பாப் பிரசங்கம் நிகழ்த்தினார்கள். அப்பொழுது பல விஷயங்களைக் குறிப்பிட்டார்கள். அல்லாஹ்வின் அருட்கொடைகளைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அதற்கு ஆதாரமாக அல்குர்ஆனிலிருந்து ஓர் ஆயத்தையே ஓதிக் காட்டினார்கள். அந்த ஆயத்தின் கருத்து இவ்வாறு அமைந்திருந்தது.

'ஆகவே அவர்கள் அல்லாஹ்வின் அருட்கொடையையும் பாக்கியத்தையும் பெற்றுத் திரும்பி வந்தார்கள். அவர்களை எத்தகைய தீங்கும் அணுகவில்லை.

'ஆகவே, அவர்கள் அல்லாஹ்வின் அருட்கொடையையும் பாக்கியத்தையும் பெற்றுத் திரும்பி வந்தார்கள். அவர்களை எத்தகைய தீங்கும் அணுகவில்லை. (ஏனென்றால்) அவர்கள், அல்லாஹ்வின் விருப்பத்தையே பின்பற்றிச் சென்றார்கள். (பொருளை விரும்பிச் செல்லவில்லை.) அல்லாஹ்வோ மகத்தான கொடையுடையோனாக இருக்கின்றான். (ஆகவே, பொருளையும் அவர்களுக்கு அளித்தான்.)' (3:174)

செய்யிதினா உமறு கத்தாப் (றலி) அவர்களின் குத்பாப் பிரசங்கத்தில் இடம்பெற்ற கருத்துக்களை விளக்க வந்த புலவர் நாயகம் அவர்கள் அல்லாஹ்வை விசுவாசித்து அவனை சுக்று செய்யும் எவரும் அல்லாஹ்வின் நிகுமத்துக்களை அதிகம் அதிகமாகப் பெறுவார் என்று தமது புதூ குச்சாமில் குறிப்பிடுகிறார். அக்கருத்துக்களைக் கொண்ட செய்யுள் பின்வருமாறு அமைந்துள்ளது:

இன்னலங் கனியு மியான்றரும் வரிசை யியைநிகு மத்துகட் கெல்லாம்
நன்னயம் பெறநீர் சுக்றுசெய் வீரேல் நாடொறு மதிகமெய் திடலா
மன்னய னருள்வே னென்னவல் லவனும் மறையினின் விளக்கின னென்றே
பின்னரோ ராயத் தோதினர் தவத்தாற் பெருமையா லுயர்ந்தநம் பெருமான்

(உமறுகத்தாபு பைத்துல் முகந்திசுக்கெழுந்த படலம்: 156)

மனிதன் உண்மை நிலையைப் பிரதிபலிப்பது முகம். அகத்தினழகு முகத்தில் தெரியும் என்று கூறியதும் இக்கருத்தினையே எனலாம். ஒருவருடைய புகழையும் மதிப்பையும் சுட்டிக்காட்டுவதும் முகமே எனலாம். இத்தகைய முகத்தை நாம் பாதுகாத்தல் வேண்டும். எவ்வாறு

பாதுகாக்கலாம். இது பற்றி அல்குர்ஆன் குறிப்பிடுகிறது. ஆன்மீக உண்மைகளை அறிவித்து வேதமுடையவர்களைச் சிறப்பாகக்கணித்தான் இறைவன். ஆனால் அவர்கள் இத்தகைய அருட்கொடைகளுக்கு அருகதை அற்றவர்களாக மாறினால் இறைவன் அவர்களுடைய முகங்களை முன் பின்னாகவும் பின் முன்னாகவும் மாற்றுவான், இக்கருத்துக்களையே அல் குர்ஆன் பின் விளக்குகிறது:

'வேதங்கொடுக்கப்பட்டவர்களே, உங்களிடமுள்ள (வேதத்)தை உவமைப்படுத்துகின்ற, நாம் அருளிய (இவ்வேதத்)தை விசுவாசங் கொள்ளுங்கள். இன்றேல் (அவர்கள்) முகங்களை மாற்றி, அவைகளைப் பின்புறமாகத் திருப்பி விடுவோம் அல்லது, (சனிக்கிழமையில் வரம்பு மீறுபவரான) அஸ்ஹாபுஸ்ஸப்தை நாம் சபித்த பிரகாரம் அவர்களையும் நாம் சபித்து விடுவோம். அல்லாஹ்வுடைய கட்டளைகள் நடந்தே தீரும்' (4:47).

இக்கருத்துக்களையே புதூ குச்சாம் ஆசிரியர் தமது செய்யுள் ஒன்றில் இவ்வாறு அமைத்துப் பாடுகிறார்:

பெற்ற வேத முடையீர்நல் லீமான் பெறுவீ ரதையுண்மை
முற்ற விறக்குஞ் சுருதியினை முகத்தை மாற்றித் திருப்புமுன்னே
மற்ற வினத்தை முனிந்ததுபோல் நாமே முனியு முனம்வல்லோன்
றுற்றுங் கரும முடிந்ததெனச் சொல்லும் பயனிற் றறிவையன்றே.
(ககுபுல் அகுபாரீமான் கொண்ட படலம் : 27)

அடுத்த செய்யுளில் 'ஓது மாயத் தரும்பயனை யுணர்ந்து நெஞ்ச மிகக் கலங்கி' என முன்பு குறிப்பிட்ட செய்யுளில் இடம்பெற்றவை அல் குர்ஆன் கருத்துக்களே என வலியுறுத்துகிறார் ஆசிரியர் :

அறிஞர் ககுபுல் அகுபாறு என்பவர் உமறு கத்தாப் (றலி) அவர்களை விளித்து நபிகள் பெருமானார் (சல்) அவர்கள் போதித்த நல்ல நெறி முறைகளைப் பற்றிச் சிறிது விளக்குமாறு கேட்டார். அவை திருமறையில் இடம் பெற்றுள்ள முறைமையினைக் கூறுமாறு வேண்டினர்.

நேர்பெ றுங்குணத் தனைவருந் துதிதர நிலவிப்
பேர்பெ றும்புகழ் நாயக நம்பெரு மான்றஞ்
சீர்பெ றுந்திரு நெறிமுறை மறையினிற் றெளித்த
தேர்பெ றப்பகர்ந் திடுமின்க ளென்றன ரறிஞர்
(ககுபுல் அகுபாறு ஈமான் கொண்ட படலம் : 41)

இக்கேள்வியைச் செவிமடுத்த உமறு கத்தாப் (றலி) அவர்கள் அல்குர்ஆன் திருவசனங்களை ஆதாரமாக எடுத்துக்காட்டினர்கள்.

('யூதர்களே') யஃகூபுக்கு மரணம் வந்த சமயத்தில் (அவருடையய) சமீபத்தில் இருந்தீர்களா? அவர் தன் சந்ததிகளை நோக்கி, 'எனக்குப் பின் எதை வணங்குவீர்கள்?' எனக் கேட்டதற்கு, 'உம்முடைய நாயனும், உம்முடைய மூதாதைகளான, இப்ருஹீம், இஸ்மாயில், இஸ்ஹாக் ஆகியவர்களின் நாயகனுமாகிய ஒரே நாயகனை வணங்குவோம். அவனுக்கு முற்றிலும் வழிப்பட்ட முஸ்லிம்களாகவே இருப்போம் என்றே கூறினர்கள்'' (அல்குர்ஆன் : 2:133)

உமறு கத்தாபு (றலி) அவர்கள் இதனை எடுத்துக் கூறினர்கள் என புதூகுச்சாம் ஆசிரியர் இக்கருத்துக்களைச் சுருக்கமாக ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார் :

நன்னபி யிபுரு கீமு நபியெகு கூபுந் தந்த
மன்னனி மக்கட் கோதி வகுத்தன ரொசியத் தன்றே
முன்னவன் றெளித்த மார்க்க முயன்று நீர் முசுலி மாகிப்
பின்னிறந் திடுத லன்றிப் பெயர்ந்திடி ரென்று மன்னே

(கருபுல் அகுபாறு ஈமான் கொண்ட படலம் : 42)

இபுருகீம் நபி (அலை) அவர்கள் யார் என்பதை உமறு கத்தாப் (றலி) அவர்கள் விளக்கினர்கள். அவர் யூதருமல்லர். ஒரு கிறித்தவரும் அல்லர். ஒரு நயவஞ்சகரும் அல்லர். யகூதியுமல்லர், நசுருனியுமல்லர், முசுரிக்குமல்லர் என இம்மூன்றையும் முறையே அறபு மொழியில் இவ்வாறு குறிப்பிட்டார்கள். திருமறை இவ்வாறு கூறுகின்றது.

''இபுருஹிம் யூதராகவும் இருக்கவில்லை; கிறிஸ்தவராகவும் இருக்கவில்லை. எனினும் இறைவனுக்கு முற்றிலும் வழிபட்ட நேரான முஸ்லிமாகவே இருந்தார். அன்றி, அவர் இணை வைத்து வணங்குவோரினும் (ஒரு போதும்) இல்லை.''

(அல் குர்ஆன்: 3:67)

இதனையே சேகுனப் புலவர் சுருக்கமாக இவ்வாறு பாடி உள்ளார்:

படர்புகழ் இபுரு கீமும் பயிலெகூ திய்ய ரன்று
தொடர்நசு ருனியன்று துயருறு முசுரிக் கன்று
நடைதரு நேர்மை பற்று நயனுடை முசுலி மென்ன
விடரறு மாயத் தோடு மிசைத்தன ரின்னு மன்றே

(கருபுல் அகுபாறு ஈமான் கொண்ட படலம்: 43)

இஸ்லாம் மார்க்கத்தை ஏற்காத ஒருவனின் நிலையைப் பற்றி அறிஞர் கருபுல் அகுபார் அவர்களுக்கு உமறு கத்தாப் (றலி) அவர்கள் விளக்கினர்கள். அல் குர்ஆனிலிருந்தே அதற்கான அத்தாட்சியை

எடுத்துக் காட்டினுர்கள். திருமறையில் ஒரு திருவாக்கியம் இவ்வாறு அமைந்துள்ளது.

> ''இஸ்லாத்தையன்றி (வேருெரு) மார்க்கத்தை எவரேனும் விரும்பினுல், நிச்சயமாக அவனிடமிருந்து (அது) அங்கீகரிக்கப்பட மாட்டாது. மறுமையில், அவன் நஷ்டமடைந்தோரில் தான் இருப்பான்'' (அல் குர்ஆன்: 3:85)

இத் திருவாக்கியத்தின் கருத்தையே சேகுனுப் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு அறிமுகஞ் செய்துள்ளார்.

மன்னெறி யிசுலா மன்றி மற்றெருரு நெறியை யாரே
செந்நெறி கொள்வா ஞகி லவனடைத் தெளிவி லாபந்
துன்னெறி யன்று நாளைத் துயருறு நட்டவாளர்
தன்னெறி யாள னென்று சாற்றிய மறையு மன்றே
(ககுபுல் அகுபாறு ஈமான் கொண்ட படலம்: 44)

அந்தாக்கியா மீது படையெடுத்து அதனைக் கைப்பற்றும் முறையினைக் கலந்து ஆலோசித்துக் கூறுமாறு அபூ உபைதா (றலி) அவர்கள் தமது தோழர்களைக் கேட்டார். அப்பொழுது முஸ்லிம்களால் கைப்பற்றப் பட்ட கலபு நகரின் அரசர் யூக்கினு என்பவர் அறபு மொழியிலே அனை வருக்கும் விளங்கும் வகையில் தம் கருத்தைக் கூறினுர். நேற்று வரை அறபு மொழி பேசத் தெரியாத யூக்கினு எவ்வாறு அம்மொழியில் பேசும் வாய்ப்பை பெற்ருர் என்று அறிய எவரும் விரும்பினர். யூக்கினு பெருமானுர் (சல்) அவர்களைக் கனவில் கண்டதும், அவர் பொருட்டால் அறபு மொழிப் பயிற்சியைத் தமக்குத் தரும்படி அல்லாஹ்விடம் வேண்டியதாகவும் அவ்வாறே தமக்கு அறபு மொழியில் பேசும் வாய்ப்பு ஏற்பட்டது எனறும் யூக்கினு கூறினுர். (அகுசாசு கொண்ட படலம்: 12-17). பின்னர் தாம் ஓர் அறையுட் சென்றதாகவும் அங்கே சில நூல்கள் இருந்ததாகவும் அவற்றை நுணுக்கமாகப் பார்த்த பொழுது அங்கே பெருமானுர் முகம்மது (சல்) அவர்களின் இயல்புகள் சில குறிப்பிடப்பட்டிருந்தன என்றும் கூறினுர். அவர்கள் தந்தையில்லாத அனுதைகள், ஆதரவு இல்லா மக்கள், நெஞ்சில் வஞ்சகமில்லாத நன் மக்கள் ஆகியோர் மீது மிகுந்த உவப்பு உடையவர்கள் என்றும் தம்மைத் தொடர்ந்தவர்களுக்கு நல்லுபதேச நெறிகளைப் போதித்து அவ்வாறு நடாத்திச் சென்ருர் என்றும் அந் நூலில் எழுதப்பட்டிருந்தது என யூக்கினு கூறினுர். இதனைக் கேட்ட அபூ உபைதா (றலி) அவர்கள் இக்கூற்றுகளுக்கு ஆதாரமான அல் குர்ஆன் திருவசனங்களை எடுத்துக் காட்டினுர்கள். அவ்வாறு அவர்கள் எடுத்துக்காட்டிய அல் குர்ஆன் 15:88; 17:25; 93:6; 93:9 ஆகிய திருவசனங்கள் விரிவாய்க் கூறுவனவற்றைச் சுருக்கமாகப் புதூகுச்சாம் ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்:

தந்தையி லரிய மக்கள் தாபர மில்லா மக்கள்
புந்தியில் வினையங் கொள்ளாப் போக்குளர் மீது மிக்குச்
சிந்தையி லுவப்ப ரென்றுந் தமைத்தொடர் சீரி யோர்க்கு
நந்தலி னெழுக்கிற் ருழு நன்குள ரென்று மென்ருர்

(அகுசாசு கொண்ட படலம் : 19)

மற்ெருரு செய்யுளில் திருக்குர்ஆன் ஆயத்துக்கள் நான்கின் கருத்துக்கள் இருக்கக் காணலாம்.

நீங்கள் என்னைத் தியானியுங்கள்; நானும்
உங்களை நினைத்து (அருள்புரிந்து) வருவேன்...!

(அல் குர்ஆன் 2:152)

இக்கருத்தினையே சுருக்கமாக

'எனைநினைத் திடீ ருங்களை நினைப்பனியான் ...

என குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

'அன்றி, உங்கள் இறைவன் (அவர்களை நோக்கி "இதற்காக) நீங்கள் (எனக்கு) நன்றி செலுத்தினல், (நான் என்னுடைய அருளைப் பின்னும்) உங்களுக்கு அதிகப் படுத்துவேன்" ...

(அல் குர்ஆன் 14:7)

இதன் சுருக்கமே அதே செய்யுளில்

... யான் கொடுத்த
தனைத் துதித்திடி லதிக மாக்குவன் ...

என வந்துள்ளது.

'உங்கள் இறைவன் கூறுகின்ருன் : நீங்கள் (உங்களுக்கு வேண்டியவையும் கேட்க) என்னையே அழையுங்கள் நான் உங்களு(டைய பிரார்த்தனை)க்குப் பதிலளிப்பேன்'

(அல் குர்ஆன் 40:60)

இதுவே சுருக்கமாக அதே செய்யுளில்

... அமை கருமந்
தனையி ரந்திட ரருள்குவன் ...

என அமைந்திருப்பதைக் காணலாம்.

"(நீங்கள் பாபத்திலிருந்து விலகி, மனம் வருந்தி மன்னிப்பைக் கோரினல்) நிச்சயமாக அல்லாஹ் (உங்களுடைய) பாபங்கள், யாவையும் மன்னித்து விடுவான்...'

(அல் குர்ஆன் 53:93)

இதனைச் சுருக்கி அதே செய்யுளில்

... பிழைபொறு தகைமை
யினையெடுத்திடீர் பொறுக்குவ னென்றன னிறையே

எனப் பயன்படுத்தி உள்ளார். ஆக, இந்த நான்கு சிறந்த குர்ஆன் வாக்கியங்களின் கருத்துக்களை இங்ஙனம் ஒரு செய்யுளில் சேகுனைப் புலவர் அமைந்துள்ளமை நன்கு சுவைக்கத் தக்க தொன்ருகும்.

எனை நினைத்திடீ ருங்களை நினைப்பனியான் கொடுத்த
தனைத் துதித்திடி லதிகமாக் குவனமை கருமந்
தனையி ரந்திடீ ரருள்குவன் பிழைபொறு தகைமை
யினை யெடுத்திடீர் பொறுக்கில னென்றன னிறையே.

(அகுசாசு கொண்ட படலம் : 59)

ஒரு செய்யுளில் இல்லீன் என்றும் சிஜ்ஜீன் என்றும் இரண்டு சொற்கள் இடம்பெற்றுள்ளன. இல்லிய்யூன் என்பதே செய்யுளில் இல்லீன் என வந்துள்ளது. சுவர்க்கத்தின் ஏழாவது நிலை என்று இதற்குப் பொருள் கூறுவர்.

'நிச்சயமாக நன்மை செய்தோரின் ஜாபிதா
'இல்லிய்யூன்' என்ற மேலான இடத்தில் இருக்கும்''

(அல் குர்ஆன் : 83 : 19)

இங்கே நன்மை செய்தோரின் பெயர்ப் பட்டோலை சுட்டப்பட்டுள்ளது. 'இல்லிய்யூன்' என்ற மேலான இடம்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளதால் மிக உயர்ந்த சுவனபதியைக் குறிக்கும். சிஜ்ஜீன் பற்றியும் திருமறை குறிப்பிடுகிறது.

'எனினும் சிச்சயமாகப் பாவிகளின்
ஜாபிதா ஸிஜ்ஜீனி'ல் இருக்கிறது'

(அல் குர்ஆன் : 83 : 7)

இங்கே தீமை செய்தோரின் பெயர்ப் பட்டோலை சுட்டப்பட்டுள்ளது.

எனினும் சேகுனைப் புலவர் இல்லீன் என்பது சுவர்க்கத்தையும் சிஜ்ஜீன் என்பது நரகத்தையும் சுட்டுவதாகச் செய்யுளில் அமைத்துள்ளார். இஸ்லாம் போதிக்கும் நற்குணங்களைப் பின்பற்றி நல்லொழுக்கம் உடையோராய் வாழ்வோர் விரும்பும் நிலை சுவர்க்க லோகம் அடையும் நிலையாகும். இஸ்லாத்துக்கு முரணை பொய்யையும் புரட்டையும் மேற் கொண்டவர்களாய்த் தீயகுணங்களைப் பின்பற்றித்

தீய ஒழுக்கமே உடையோராய் வாழ்வோர் மேனிலை அடைய முடியாது இழிந்த தாழ்நிலையை அடைவர். எனவே நன்மை செய்தோர் 'இல்லியூன்' என்னும் சுவனப்பேற்றையும் தீமை புரிந்தோர் சிஜ்ஜீன் என்னும் நரகத்துக்குத் தள்ளப்படுவதையும் எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது. இக்கருத்துக்களையே சேகுனாப் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப்பாடி உள்ளார் :

இந் நிலைகொண்டு சொன்ன வெழிற்குணம் எடுத்தோ ரியாவும்
வென்னிலை யில்லீ னென்னு மேனிலை கொள்வர் பொய்மை
புன்னிலை சார்ந்து தீய்மை பொழியிழி குணத்திற் புக்கித்
தந்நிலை சிச்சீ னென்னுந் தாழ்நில கொள்ளா ரன்றே

(பலீத்தானுசு ஈமான் கொண்ட படலம் : 85)

இங்கே நல்லவர்கள் தீமை புரியாத காரணத்தினால் சிஜ்ஜீன் என்னும் நரகைப் பெறமாட்டார்கள் என்பது சுட்டப்பட்டுள்ளது.

நன்மை ஒன்றுக்குப் பலன் அதன் பத்து மடங்கே. ஆனால் ஒரு பாவச் செயலுக்கு உரிய தண்டனை ஒன்றேயாம். இக்கருத்துக்களை உடைய ஒரு செய்யுள் முன்னர் எடுத்துக் காட்டப்பட்டது. மற்றொரு செய்யுளில் இக்கருத்துக்களை இவ்வாறு அமைத்துப்பாடி உள்ளார் ஆசிரியர் :

இசைத்தபின் கைசை நோக்கி ஏந்தலைம் மறையிற் கண்டேன்
திசைத்தலம் புகழோர் தூதர்ச் சேர்ந்திடும் உம்மத் தானோர்
பசைத்திடு நன்மை ஒன்றுற் பலன்பஃதொருபா வத்தால்
அசைத்திடு கூலி யொன்றே அடைவரென் றவரியா ரென்றான்

(லிருறைச் சிறை படுத்த படலம் : 55)

முகம்மது நபி (சல்) அவர்கள் உலகிற்கு அனுப்பப்பட்ட காரணம்

நபியே! நிச்சயமாக நாம் உம்மை
(மனிதர்களுக்கு) ச் சாட்சியாகவும்
நன்மாராயங் கூறுபவராகவும், அச்ச
மூட்டி எச்சரிக்கை செய்பவராகவும்
அனுப்பி வைத்திருக்கிறோம் ''

(அல் குர்ஆன் 33 : 45)

என்று ஓர் ஆயத்தில் அவர்களுடைய வருகைக்கான காரணம் கூறப் பட்டுள்ளது. இக்கருத்தினையே ஒரு செய்யுள்,

உலகுள படைப்புக் கெல்லாஞ் சாட்சியா யுயர்பொன்னூரா
ணவனுடை யின்பத் தின்மா ராயமு நரகத் தாலாங்
கலகத்தால் வற்புறுத்திக் காட்டுவ ரிறைபாற் கூட்டும்
வலனுளர் முகம்மதென்ற வார்த்தையென் னென்றுன வேந்தன்

(லிருறைச் சிறைப் படுத்த படலம் : 56)

என இவ்வாறு கொண்டுள்ளது. மற்றெரு திருக்குர்ஆன் திருவசனத்தில்

'அன்றி, அல்லாஹ்வுடைய அனுமதியின்படி
(ஜனங்களைநீர்) அவன்பால் அழைப்பவராகவும்
ஒளிவீசும் (மணி) விளக்காகவும் (இருக்கின்றீர்)

(அல் குர்ஆன் 33 : 46)

பெருமானுர் (சல்) அவர்கள் உலகுக்கு ஓர் ஒளி விளக்காய் அனுப்பப் பட்டார்கள் என்பது வலியுறுத்தப் பட்டிருப்பதைக் காணலாம். இதனையும் ஆசிரியர் இவ்வாறு ஒரு செய்யுளில் இடம்பெறச் செய்துள்ளார் :

இத்தகை யியன்ற தூதாயிப்புவி யெவைக்கு மாருப்
பத்திய விளக்காய்ச் சோதி படர்தர வனுப்பி னேமால்
உத்தியின் முகம்ம தேயா மும்மையென்றிறைவன் றந்தான்
சத்திய மறையின் வாய்மை யென்றனர் தவத்தின் மிக்கார்.

(லிருறை சிறைப்படுத்த படலம் : 58)

நபி பெருமானுர் (சல்) அவர்கள் மீது புகழ் மாலை பாடுவது பற்றி முன்னர்க் குறிப்பிடப்பட்டது. அல் குர்ஆன் (33:56) இல் உள்ள அதே கருத்துக்கள் மற்றெரு செய்யுளில் இடம் பெற்றுள்ளன. பெருமானுர் (சல்) அவர்களைப் பின்பற்றுபவர்கள் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் உயிரோடிருக்கும் போதும் மறைந்த பின்னரும் அவர்களுடைய பெயரைக் கேட்டதும் சலவாத்து என்னும் புகழ் மாலை ஓதுவதுண்டோ என்று நாட்டு மன்னன் கேட்டான். இறைவன் அவ்வாறு விதித்துள்ளானு என்றும் கேட்டான். உண்டு என்று பதிலளித்த கைசு (றலி) அவர்கள் இக்கருத்துக்கள் அடங்கிய அல் குர்ஆன் திருவசனத்தை (33 : 56) ஓதிக் காட்டினாகள். இந் நிகழ்ச்சியே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது.

அவரின தும்மத் தானேர்க் கவருறு போதும் பொன்னு
ரவர்புகுந் தமைந்த பின்னு மவர்பெயர் சலவாத் தோத
நவமுளான் விதித்த துண்டோ வெனநர பதிவி ஞவத்
தவமுளார் வேத வாய்மை விளக்கினர் தகைய தென்ருர்

(லிருறைச் சிறைப்படுத்த படலம் : 59)

தல்கீன் என்னும் அறபுச் சொல்லுக்கு அறவுரை பகர்தல் என்பது பொருளாகும். ஒருவர் இறந்ததும் அவரை நல்லடக்கம் செய்துவிட்டு புதைகுழியில் தலேமாட்டில் அமர்ந்து ஓர் அறிஞர் கூறும் அறவுரை களாகும்அது. அவரிடம் அமரர் வந்து கேள்வி கணக்குக் கேட்கும் பொழுது அவர் பதிலளிக்க வேண்டிய முறை அவருக்குப் புகட்டப்படும். நல்லடக்கஞ் செய்யப்பட்ட பின்னர் அவரிடம் அமரர் என்னும் மலக்குகள் சிறப்பாக முன்கர்-நக்கீர் வந்து கேட்கும் கேள்விகளும் அக்கேள்விகளுக்கு எந்தவிதமான பதில்கள் அளிக்கப்படல் வேண்டும் என்ற முறைமையினையும் இவ்வறவுரை என்னும் தல்கீன் விளக்குகிறது. தங்கள் அருமைப் புதல்வர் இப்ருஹீம் அவர்களை நல்லடக்கம் செய்து விட்டு அவ்விடத்தின் அருகே நின்று நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ஓதினர்கள் என ஹதீதுப் பொன்மொழி கிரந்தத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது. மதுகபுகளை நிறுவிய இமாம்கள் நால்வருள் இமாம் சாபிஈ அவர்களும் இமாம் ஹனபீ அவர்களும் இதனை ஒரு வழக்காறு(சுன்னத்) என ஒப்பியுள்ளார் என்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது. இங்ஙனம் தல்கீன் ஓதுவதன் மூலம் இறந்தவரைவிட இறந்தவரை நல்லடக்கம் செய்வதற்காக அங்கு குழுமி இருப்பவர்களே இத்தகைய அறவுரை யினல் பெரிதும் பயன் அடைவர் எனக் கூறின் அது மிகையாகாது. முஸ்லிம் ஒருவன் அறிந்திருக்க வேண்டிய மிக இன்றியமையாத குறிப்புக்களே இத் தல்கீனில் இடம்பெற்றுள்ளது.

உமது இறைவன் யார்? உமது (தீன்) மார்க்கம் எது? உமது நபி யார்? நீர் எதிர்நோக்கித் தொழும் திசை (கிபுலா) எது? உமக்கு வழிகாட்டியாக (இமாமாக) அமைவது எது? உமது சகோதரர் யார்? என்பன அக்கேள்விக் கொத்தில் இடம் பெறுகின்றன. அக்கேள்வி களுக்கான விடைகள் தரப்பட்டுள்ளன. அல்லாஹ் தான் எமது இறைவன். இஸ்லாம் தான் எனது (தீன்) மார்க்கமாகும். முகம்மது நபி (சல்) அவர்கள் எனது நபியாவார்கள். புனித கஃபாவே நான் எதிர்நோக்கித் தொழும் திசையாம், கிப்லாவாகும். எனக்கு வழிகாட்டி யாக (இமாமாக) உள்ளது புனித அல் குர்ஆனே. எனக்குச் சகோதரர் களாக அமைபவர் முஸ்லிம் மக்களே. இங்ஙனம் வினக்களும் அவற்றிற்குறிய விடைகளுமே தல்கீன் என்னும் அறவுரையில் முக்கிய மாக இடம்பெற்றுள்ளன.

புசுருத் தலைவன் உறுமாசு, புசுரு கைப்பற்றப்பட்ட பின்னர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டார். எவ்வாறு ஏற்றுக் கொண்டார் என்பதை விளக்கவே தல்கீனின் விடைகளாய் அமைந்த பகுதியை இங்குக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். உறுமாசு என்பவர் இஸ்லாத்தை எவ்வாறு ஏற்றுக் கொண்டார் என்பதை அவர் வாயிலாகவே அவர் கூற்றாகவே ஒரு செய்யுளில் அமைத்துப் பாடியுள்ளார். அல்லாஹ்வை இறைவனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முகம்மதை நபியாகவும் கஃபாவைக் கிபுலா என்னும் தொழுந்திசையாகவும் குர்ஆனை வழி காட்டும் இமாமாகவும் முஸ்லிம்களை சகோதரர்களாகவும் ஏற்றுக் கொண்டேன் என்று கூறுவதுடன் அவர் அமைந்துவிடவில்லை. இஸ்லாம் அல்லாத குபிரர்களை இல்லாமல் செய்து விடுகின்றேன் என்று சூளுரை பகர்ந்தார் உறுமாசு என்பவர். இக்கருத்துக்களை ஒரு ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப்பாடியுள்ளார் சேகுனைப் புலவர்.

அல்லா தனைஆண் டவனாக முகம்ம தவரே நபியாகச்
செல்லா றிசுலாம் நெறியாகச் சிறந்த கஃபாக் கிபுலாவாய்ச்
சொல்லார் குறுஆன் இமாமாகத் துணையே முசுலி மீனாகப்
பொல்லாக் குபிரை அறக்களைந்துப் பொருந்தி னேனென் றறைந்
தனரே

(புசுருக் கொண்ட படலம் : 135)

**பொதுக் கூற்று :**

அன்று பெருமானார் மக்காவிலிருந்து மதீனாவுக்கு எழுந்தருளி ஒன்பது ஆண்டுகள் கழிந்து விட்டன. ஒன்பதாம் ஆண்டு றஜபு மாதம் ஐந்தாம் நாள் வியாழக்கிழமையாகும். இது கி.பி.630 ஆண்டு அக்டோபர் மாதம் பதினெட்டாம் நாளாகிய வியாழக்கிழமையாகும். தபூக்குக்குச் செல்வதற்காக மதீனாவிலிருந்து பெருமானார் (சல்) அவர் களும் தோழர்களும் புறப்பட்டார்கள். அவ்வாறு புறப்படுவதற்கு முன் னர் அலி (றலி) அவர்களை மதீனாவில் இருக்கச் செய்து விட்டார்கள். இதனை அறிந்த வஞ்சகர்கள் முஸ்லிம்களிடையே பிளவு ஏற்படுத்த முயன்றார்கள். அதற்குச் சாதகமாக அலி (றலி) அவர்கள் போருக்குச் செல்லாமல் மதீனாவிலே இருந்து விட்டமையை ஒரு காரணமாகச் சுட்டிக் காட்டினர். பெருமானார் (சல்) அவர்களும் அவர்கள் தம் மருகரான அலி (றலி) அவர்களும் இவ்வாறு நடந்தமை சரிதானா என்ற வினாவை எழுப்பினர். மருகருக்கு ஒரு நீதி ஏனையோருக்கு மற்றொரு நீதியா என்று கேட்கத் தலைப்பட்டனர். இச்சந்தர்ப்பத்தை இவ்வாறு விவரித்துள்ளார் சேகுனைப் புலவர்,

ஒருவரைப் பற்றிய நல்லெண்ணமும் நல்லன்பும் ஒருவரிடம் இருப்பின் முன்னவருடைய குற்றம் பின்னவருக்குப் புலப்படாது. மாறாக ஒருவரைப் பற்றி நல்லெண்ணமோ நல்லன்போ மற்றவரிடம் இருக்காவிட்டால் முன்னவரின் நற்கருமமும் பின்னவருக்குக் குற்ற மாகவே தோன்றும். இவ்வாறு வஞ்சகர் கேட்டனர். பெருமானரும் அவர்கள் தம் மருமகனரும் நடந்து கொள்வது இப்படியா? இது நீதியா? என்று இவ்வாறு குதர்க்கம் புரிந்து முஸ்லிம்களுக்கிடையே பிளவை ஏற்படுத்த முற்பட்டனர் வஞ்சகர். வஞ்சகரின் இக்கூற்றே இவ்வாறு ஒரு செய்யுளில் இடம்பெற்றுள்ளது.

உள்ளுறை யன்புன் டாயி ஞெருகுறை வெளியு ருவாம்
கள்ளுறை யன்புண் டாயிற் கருமமும் வரும மாகும்
தெள்ளிய நீத மீதே தேவர்தம் நீத மீதே
வள்ளலும் வள்ளற் கேற்ற மருகனு முறையு மன்றே

(தபூக்கிற்றிறை கொண்ட படலம் : 60)

அன்பு மிகுதியினல் தீயவை நல்லவையாகவும் அதே அன்புக் குறைவினல் நல்லவை தீயவையாகவும் மாறுவதைப் பற்றி பலரும் பல இடங்களில் குறிப்பிட்டுள்ளனர். திருத்தக்க தேவரும் தமது சிந்தா மணியில்

வாரம் பட்டுழித் தீயவை நல்லவாம்
தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம்
ஓடும் வையத் தியற்கையன் றேவெனு
வீர வேல்நெடுங் கண்ணிவி ளம்பினள்

(குணமாலையாரிலம்பகம் 38) (888)

இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். அறிவுடையவர்கள் காய்தல் உவத்தல் என்பனவற்றிற் ந அப்பால் நிற்றல் வேண்டும். எதனையும் ஆராய்ந் தறிதல் வேண்டும். காய்தல் உவத்தலினல் ஏற்படும் விளைவுகளை அறநெறிச் சாரச் செய்யுள் ஒன்று

காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே-காய்வதன்கண்
உற்ற குணம்தோன்ரு தாகும் உவப்பதன்கண்
குற்றமுந் தோன்ருக் கெடும்

எனக் காய்தலினல் இருக்கும் நல்ல குணம் தோன்ருமல் போகும். அதே சமயத்தில் உவத்தலினல், இருக்கும் குற்றமும் தோன்ருமல் போய்விடும் எனக் குறிப்பிடுவதைக் காணலாம்.

அபூபக்கர் (றலி) அவர்கள் இஸ்லாமிய வரலாற்றிலே இரண்டாவது கலீபாவாக பதவி வகித்தார்கள். அப்பொழுது போருக்குச் சென்ற தமது வீரர்களுக்கு அறிவுரை பகருகின்ருர்கள். 'பகைவர் பெருமைப்பட்டவர்களாய் இருக்கலாம். ஆனல் நீங்கள் வெற்றி பெற்ற காரணத்துக்காக அவர்களுடைய இல்லங்களுக்கும் தீ வைக்காதீர்கள்'. இதனையே சேகுனைப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

தீங்குறை பகைஞர்கள் செருக்கின் வைகிய
ஊங்குறை மனைகளை ஒளிர்வெந் தீயினல்
வேங்குறை படுத்திடீர் வென்றிகொண் டதால்
வாங்குவிற் றடக்கர வண்மை தாங்கினீர்

(படையெழுச்சிப் படலம் : 85)

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடிய மாங்குடி மருதனர்

நாடுகெட எரிபரப்பி
ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து
அரசுபட அமர் உழக்கி
முரசுகொண்ட களம்வேட்ட
அடுதிறல் உயர் புகழ் வேந்தே

(மதுரைக் காஞ்சி 126-130)

என பகைவர் நாட்டை எரியூட்டி அழித்த மன்னரின் வீரத்தைப் பாடியுள்ளமை ஈண்டு நோக்கற் பாலது.

மற்ருெரு பாடல் அபூபக்கர் (றலி) அவர்கள் இட்ட வேருெரு கட்டளை இடம் பெற்றுள்ளது. இக்கட்டளைக்கிணங்க நோயாளர், முதியவர், பேதையர், பெண்டிர், சிறுபிள்ளைகள் ஆகியோரைக் கொல்லக் கூடாது என வெற்றி வீரர்களான தமது படையினர் கேட்கப் பட்டுள்ளனர். இக்கருத்தை கொண்ட பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

பிணியினர் முதிர்ந்தவர் பேதை மாதரோ
டணியினர் சிருரிவ ரகப் படுத்ததோர்
திணிவிறல் கொண்டிடிற் றெறுதல் கொள்ளன்மின்
கணிதலி லெறுழ்வலிக் கனகம் பூண்டநீர்

(படையெழுச்சிப் படலம் : 84)

புறநானூற்றில் வரும் ஒரு பாடலை புதூகுச்சாமில் இடம்பெற்றுள்ள செய்யுளின் கருத்துக்களுடன் ஒத்திருத்தலைக் காணலாம்.

'ஆவும் ஆனியர் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புல வாழிநர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர் பெருஆதீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்' என (9 : 1-5)

அபூபக்கர் (றலி) அவர்களின் செங்கோன்மை ஒரு செய்யுளில் விளக்கப்பட்டுள்ளது. எவரையும் ஒப்ப நாடுபவர்கள் அபூபக்கர் (றலி) அவர்கள். ஒரு பால் கோடாது முறை செய்பவர்கள். பொருள், அருள், அறிவு, வலிமை என்பனவற்றில் மிக்க பெரியாருக்கும் இவையே இல்லாத சிறியவர்களுக்கும் ஒரே பாணியில் நீதி வழங்குபவர்கள். தாம் காட்டும் அருளினல் உயிர்கட்கெல்லாம் நன்மையையே விளைவிப்பவர்கள் என அபூபக்கர் (றலி) அவர்கள் ஒரு செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளார்கள்.

பொருளினிற் செல்வந் தன்னில் பொருவலி யதனிலேனுந்
தெருளினின் மிக்கோரேனு மிவையிலாச் சிறிய ரேனு
மருளணி வராது காக்கும் மாண்புடை நீடு பூண்டார்
அருளினி லுயிர்கட் காக்க மளித்திடுந் தகையரன்றே
(பலஸ்தீன் கொண்ட படலம் : 44)

நடுநிலை வகித்தல் ஆட்சியாளரின் சிறந்த இலக்கணம் என்பதை வலியுறுத்தும் திருக்குறளில்

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார் மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை (541)

என வந்துள்ளமை காண்க.

ஒரு நாட்டில் ஆட்சி சீர் குலைந்தால் கிரகங்கள் நிலை பெயர்ந்து இயங்கும் என்பர். ஆனல் கத்தாப் (றலி) அவர்களின் ஆட்சியில் அத்தகையன நிகழவில்லை. எல்லாம் அமைதியாகவும் ஒழுங்காகவும் நடந்தேறின. செய்பவரின் தகமைக்கேற்ப தவநிலை இருந்தது. தீயவர் பாவச் செயல்கள் எவ்விடத்தும் காணப்படவில்லை. இக்கருத்துக்களே ஒரு பாடலில் இவ்வாறு அமைந்துள்ளன :

நவநிலை கிரகமு நடுநிலை தழுவின
தவநிலை யவரவர் தகைபெற மருவின
பவநிலை யடையலர் பதிதொறு மொருவின
திலநிலை யருளொடு திதிகொள வொழுகின
(உமறு கத்தாப் அரசியற் படலம் : 22)

பிற செய்தி

புதூகுச்சாம் என்னும் காப்பியத்திலே பல்வேறு செய்திகள் இடம் பெற்றுள்ளன. காப்பியங்களில் வரும் கிளைக்கதைகள் போன்று அவை அமைந்துள்ளன. புதூகுச்சாம் காப்பியத்தில் பல்வேறு ஆற்றல் மிக்க வீரர்களுள் ஒருவராகக் கணிக்கப் பெற்றவர் காலிது இப்னு வலீத் (றலி) அவர்கள். அவர் பங்கு பற்றிய எந்தப் போரிலும் தோல்வி அடையவில்லை என்று கூறப்பட்டுள்ளது. தொடக்கத்தில் இஸ்லாத்தை எதிர்த்து உகுதுப் போரிலே முஸ்லிம்களுக்கு எதிராகப் போராடியவர். பின்னர் இஸ்லாத்தைத் தழுவி முஸ்லிம்களுக்குப் பல வெற்றிகள் பெறுவதற்குக் காரணமாயிருந்தவர்.

செய்யிதினா காலித் இப்து வலீத் (றலி) அவர்களின் தனிப் பெரும் வெற்றிக்குக் காரணம் யாது? அதன் இரகசியம் யாது? இறைவனை அல்லாஹ்வின் பேரருளும் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் துஆப் பேறும் ஆகும் என்பது உண்மையே. எனினும் அதற்கான துணைக் காரணம் ஒன்று உள்ளது என்று கூறுவோரும் உளர். காலித் இப்னு வலீத் (றலி) அவர்கள் போருக்குப் போகும் பொழுது தமது தலைஅணியில்-தொப்பியில் றசூல்(சல்)அவர்களின் தலைமயிரை வைத்துக்கொண்டு சொல்வார்களாம். தமது வெற்றிக்குரிய துணைக்காரணம் அதுதான் என அவர் கூறியுள்ளார். போருக்குச் செல்லும்பொழுது செய்யிதினா காலித் இப்னு வலீத் (றலி) அவர்கள் தமது தொப்பியில் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் தலை மயிர்களை வைத்துக்கொண்டு சென்றார்கள் என்பதை புலவர் நாயகமும் தமது புதூகுச்சாம் காப்பியத்தில் குறிப்பிட்டுள்ளார். மன்னவர்களுக்கெல்லாம் மன்னவரான முகம்மது நபி (சல்) அவர்களின் கேசத்தினை - தலை மயிரினைத் தமது முடியிற் புனைந்து கொண்டார்கள் வள்ளலாகிய காலித் இப்னு வலீத் (றலி) அவர்கள் என புலவர் நாயகம் இவ்வாறு குறிப்பிடுகிறார்.

'மன்னவர்மன் நபிகேச மணிமுடியிற் புனைவள்ளல்' (லிருறைச் சிறை மீட்ட படலம்: 169) நபிகள் நாயகத்தின் கேசம் நறுமண முள்ளது. கருமையானது. தூய்மையானது மலர் போன்றது மணங் கமழ்வது. இவ்வாறு பல இடங்களில் அதனை வருணித்து அதனை காலித் அண்ணல் அவர்கள் தமது முடியில் வைத்துக் கொண்டார்கள் என புதூ குச்சாமில் வருணிக்கப்பட்டுள்ளது. மோலி, மௌலி என்பது ஒரு பொருட் சொற்கள். மணிமுடி, மயிர்முடி, சடைமுடி என்பன அவற்றின் பொருள்களாகும். செய்யிதினா காலித் இப்னு வலீத் (றலி) அவர்கள் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நபிகள் பெருமானாரின் கேசத்தினை தமது தலை அணியில் வைத்துக் கொண்டார்கள் என்பதை வெவ்வேறு விதமாக ஆசிரியர் வருணித்துள்ளார்.

'கருணையங் கடலின் முகம்மது நயினார் கருங்குஞ்சி
(மடவியர் வெற்றி கொண்ட படலம் : 29)

... உயர்சிரத்தே காசிநபி
நறிகருகுஞ்சியி னடைப்பேர் மோலியி னகுபடைவண்கையி
னடித்தார்காலிதுவே
(வர்த்தான் போர் புரி படலம் : 78)

தோளக மாலை வேய்ந்து தூய்நபி கேச மோலி
ஆளகந் தாங்கி ஒள்வாள் அங்கைகொண்டு அரிமே லானார்
(அபுல்குதுசு கொண்ட படலம் : 84)

'வரிமேல் முகம துறசூல்தம் வாச மலருங் கேசமுறை
புரிவேய் மோலி மறந்தெழுந்தேன் ...
(கன்சரீன் கொண்ட படலம் : 126)

இங்கே நபிகள் பெருமானாரின் தலை முடியின் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்டுவதற்காக ஒரு நிகழ்ச்சி விவரிக்கப்படுகிறது. ஒரு நாள் போருக்குச் செல்லும் பொழுது காலித் இப்னு வலீத் (றலி) அவர்கள் பெருமானாரின் கேசத்தைக் கொண்டு செல்ல மறந்து விட்டார். போருக்கு எல்லோரும் புறப்பட்டு விட்டனர். தளபதி செய்யிதினா அபூ உபைதா (றலி) அவர்களும் சென்று விட்டார்கள்' அவர்களுக்கு முன்னே ஒருவர் போகக் கண்டனர். இக்காட்சி எல்லோரையும் அதிசயத்தில் ஆழ்த்தியது. 'நீர் யார்? எங்கே போகிறீர்?' என அவரிடம் கேட்கப்பட்டது. 'எனது அன்பிற்குரியவர் நபிகள் பெருமானாரின் கேசத்தைக் கொண்டு வர மறந்து விட்டார். அவரிடம் அதனை ஒப்படைக்கவே இங்கு வந்தேன். என்னுடைய பெயர் உம்மு தமீம் என அந்தப் பெண்மணி விடை அளித்தார். இக்கருத்துக்களையே சேகுனப் புலவர் இவ்வாறு நயம்பட விவரிக்கிறார்.

யாவர்நீர் என்னின் முந்த ஏகல்எத் திறம்கொல் என்ன
காவலீர் நபிகள் கோமான் கடிகமழ் கேச மோலி
மேவலான் புகுந்தேன் வைத்து மறந்தவர் விரும்புந் தேவி
ஆவலால் என்பேர் உம்முத் தமீம்என வறையாச் சென்றார்
(கன்சரீன் கொண்ட படலம் : 134)

அங்குள்ளவர்கள் அவருக்கு அங்குச் செல்ல அனுமதி வழங்கினர். அவரும் அங்குச் சென்று காலித் இப்னு வலீத் அவர்களிடம் அதனைக் கையளித்தார். அவரும் அதனைப் பெற்று தமது தலையில் அணிந்து கொண்டார். இக்கருத்துக்களே இங்கு இவ்வாறு அமைந்துள்ளன.

தூயநம் முகம்மது என்னும் சுடர்மணிக் கேச மோலி
மேயின துடர்ந்து வந்தேன் மேவலர்க் கரியே என்கண்
நாயக மனைவி உம்முத் தமீமுநான் கோடிர் என்றே
சேயுயர் பொருளை ஈய்ந்தார் திறல்வரும் சென்னி சேர்ந்தார்
(கன்சரீன் கொண்ட படலம் : 139)

செய்திஞு காலித் இப்னு வலீத் (றலி) அவர்கள் மற்றொரு முறை போருக்கெழுந்த பொழுது எவ்வாறு நபிகள் பெருமானாரின் தலை மயிரை அணிந்து கொண்டு சென்றூர் என்பதும் வருணிக்கப்பட்டுள்ளது

தூய நாதன்இற சூல்மு டிகேச
மேய மோலியொடு ...
...
காயரிக் குரிசில் காலி தெழுந்தார்
(சபலா முதற் போர் புரிப் படலம் : 117)

ஒரு முறை காலித் இப்னு வலீத் (றலி) அவர்களிடம் நபிகள் நாயகம் (சல்) அவர்களின் தலை முடி பற்றிக் கேட்கப்பட்டது. போர் தொடங்கு வதற்கு முன்னர் அது காணுமற் போனதையும் பின்னர் ஆத்திரத்துடன் அவர்கள் அதனைத் தேடியதையும் அப்பால் அதனைப் பெற்றுக் கொண்ட பின்னர் மகிழ்ச்சி உற்றமையையும் பற்றி அவரிடம் கேட்கப்பட்டது. அதற்குக் காலிது இப்னு வலீத் (றலி) அவர்கள் இவ்வாறு பதிலளித்தார்கள் என ஒரு நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. 'நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் ஒரு முறை உம்ருச் செய்து விட்டுத் தலையைச் சவரம் செய்தார்கள். அப்பொழுது அங்குக் குழுமி யிருந்த மக்கள் கூட்டம் அத்தலை மயிர்களை எடுப்பதற்கு விரைந்தார்கள். நான் எல்லாரையும் விட முன்பதாகக் குதித்துச் சென்று நபிகள் நாயகம் (சல்) அவர்களுடைய முன்னெற்றி மயிர்களைக் கைப்பற்றிக் கொண்டேன். அந்த உரோமங்களை இந்தத் தொப்பிக்குள்ளேயே வைத்திருக்கின்றேன். அதனை அணிந்து கொண்டு எந்தப் போரில் பங்கு பற்றிஞலும் நான் வெற்றியே பெற்றிருக்கின்றேன். நான் ஒரு நாளும் தோல்வி என்பதையே அறிந்திலேன். இது தான் அதன் தத்துவம்.

செய்யிதிஞ காலித் இப்னு (றலி) அவர்களின் இந்தக் கூற்றினை செய்கு அப்துல் காதிறு நயினூர் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் தமது புதுகுச்சாம் என்னும் காப்பியத்தில் இவ்விதமாகக் கூறுகிறூர். நபிகள் நாயகம் முகம்மது (சல்) அவர்கள் கடைசியாக நிறைவேற்றிய ஹஜ்ஜின் போது தலை முடியைக் களைந்தார்கள். அதனை ஓர் அரும்

பெரும் பொருளாகக் கொண்டேன். அதனைத் தலைமேல் வைத்து அணிந்து கொண்டால் தோற்றக் கூடிய போர்கள் ஒவ்வொன்றிலும் வெற்றியே கிடைக்க அது வழிவகுக்கும் என்றார்கள். இக்கருத்துக்களையே புலவர் நாயகம் ஒரு கவிதையில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் :

ஈற்றினி லியற்றும் கச்சின் எழில்முகம் மதுநம் கோமான்
போற்றிய சிரத்தின் குஞ்சிக் கலைந்தனர் பொருளாக் கொண்டேன்
ஏற்றிய முடியின் வைததிட் டிணக்கிநுந் தலைமேற் கொண்டால்
தோற்றிய போரின் எல்லாம் வாகை யேகிட்டுமென்றார்

(மூன்றாம் போர் புரிப் படலம் : 197)

இங்ஙனம் நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் தலைமுடியைத் தமது தலைமேற் சூடிக்கொண்டு சென்ற போர்களில் எல்லாம் தாம் வெற்றிக்கு மேல் வெற்றி ஈட்டியதாகவும் காலித் இப்னு வலீத் (றலி) அவர்களிடம் வினவியவர்களுக்கு அவர்கள் விடை அளித்தார்கள். இந்த விடையையும் புதூகுச்சாம் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

எந்நபி உரைத்த சொற்போல் இயைந்ததோர் முடிய தானே
என்னிடத் தெய்தும் வென்றி யாவும்அவ் வாக்கால் என்ன
மன்னவர் உரைத்து நெஞ்ச மகிழ்ந்தனர் யாரும் சூழ
ஒன்னலர் சேனை அஞ்ச மேற்செல ஒருமித் தாரால்

(மூன்றாம் போர் புரிப் படலம் : 198)

இன்னும் நாம் இந்த மரபைப் பின்பற்றுகிறோம் எனக் கூறலாம் அல்லவா? சிவப்புத் துறுக்கித் தொப்பி அணியும் நாம் இத்தத்துவத்தை நடைமுறைப்படுத்தி வருகிறோம். நாம் சர்வ சாதாரணமாக அணியும் எமது தொப்பியில் குஞ்சம் இருக்கின்றதல்லவா? அது கறுப்பு நிறக் குஞ்சமாகவே இருக்கின்றது. இதனை நாம் சிந்திக்கின்றோமா? செய்யிதினா காலித் இப்னு வலீத் (றலி) அவர்கள் எவ்வாறு நபிகள் பெருமானார் (சல்) அவர்களின் தலைமுடியைத் தலையில் அணிந்து கொண்டு சென்று பங்கு பற்றிய போர்களில் எல்லாம் வெற்றி பெற்றார்களோ அவ்வாறே நாமும் எமது காரியங்களில் வெற்றி பெற வேண்டும் என்னும் விழுமிய நோக்கினைக் கொண்டவர்களாக எமது மூதாதையார் இருந்தமையினாலேயே அவர்கள் எங்களுக்கு இவ்வாறு முன் மாதிரி காட்டிச் சென்றுள்ளார்கள் என்று கூறுவது பொருத்த முடைத்து அல்லவா?

ஓசை நயம்

புலவர் தமது நூல்களில் பல்வேறு முறைகளில் ஓசை நயத்தை அமைத்துள்ளனர். சிலர் சில சொற்களை பலமுறை ஒரு செய்யுளில் பயன்படுத்துவதன் மூலம் ஓசைநயத்தைப்பெறுகின்றனர். மற்றும் சிலர் மெல்லெழுத்துக்களைப் பெரும்பான்மையாகப் பயன்படுத்தி ஓசை நயத்தை அமைக்கின்றனர். இன்னும் சிலர் மெல்லெழுத்துக்களைப் பெரும்பான்மையாகப் பயன்படுத்தி இதனைப் பெறுகின்றனர் இனி புதூகுச்சாமில் ஓசைநயம் எவ்வாறு அமைந்திருக்கின்றது என்று பார்ப்போம். பாதிக்கு மேற்பட்டவை வல்லெழுத்துக்களாய் அமைந்துள்ள ஒருபாட்டில் ஓசைநயம் அமைந்துள்ளது. நான்கு அடிகளிலும் முதற்சீர் முறையே படபட, கடகட, மடமட, தடதட என அமைந்திருப்பதைக் காணலாம். கடைசி அடியின் கடைசிச் சீரில் மாத்திரமே ஒரு நெட்டெழுத்து வந்துள்ளது. ஏனைய அனைத்துமே குற்றெழுத்துக்களாக இருப்பதைக் காணலாம்.

படப டென்றுகதை யிட்டவிட முற்றுமழி பட்டுகவியங்
கடக டென்றுருள வெத்திசையு மொய்த்தவலி கத்தருடல
மடம டென்றுசரி யக்கண நெருக்கினிழி மட்டை யெவணுந்
தடத டென்றுநட னிட்டன பிணக்குவை தடக்கிரி கண்மேல்
(மூன்ரும் போர் புரி படலம்: 59)

வல்லெழுத்துக்கள் மிகப்பெரும்பான்மையாக வந்து ஓசைநயம் தரும் ஒரு செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

கடுகிக்கடு கடுப்பார்சிலர் கனலிற்கொதி கொதிப்பார்
நடுகிப்பட படுப்பார்சிலர் நகையிற்கனை கனைப்பார்
கிடுகிற்புடை புடைப்பார்சிலர் கிளரத்திடு திடுப்பார்
முடுகிக்கறு கறுப்பார்சிலர் முனையிற்றுடி துடிப்பார்
(மாகான் வதைப் படலம்: 47)

இதே போன்ற மற்ருெரு பாடல்

நடப்பார்சிலர் ரயிலாற்கதி நடனப்பரி வீரர்
கிடப்பார்சிலர் துடிப்பார்சிலர் கிளப்பார்தலை சிலர்போர்
கடப்பார்சிலர் மறப்பார்சிலர் கதிப்பார்சிலர் காலா
லிடப்பார்சிலர் குதிப்பார்சில ரெதிர்ப்பார்சில ரதிப்பார்
(மாகான் வதைப் படலம்: 49)

என அமைந்திருப்பதைக் காணலாம்.

கடுகள வுறுபவன் கதியிற் சேர்கலன்
கடுகள வுறுபவன் கன்லிற் சேர்கலன்
வடுகளப் பெருமையீ மானு மேயென
வடுகளப் பெருகையீ ராய்ந்திட் டேனரோ.
(உமறு கத்தாப் பைத்துல் முக்த்தீசுக்கெழுந்த படலம்: 172)

என்பது இத்தகை மற்ருெரு பாடலாகும்.

மற்றுமொரு பாடல் இவ்வாறு ஓசைநயம் பெற்றுத் திகழ்கின்றது.

ஏசினர் சீறின ரேறின ரெங்கு
மூசினர் கைகொடு மோதினர் வாளால்
வீசின ராடினர் வெண்ணிண வூனுற்
பூசினர் தாசர் புரத்தெரு வெல்லாம்

(கலபு அரணமுற்றிய படலம் படலம் : 130)

வல்லெழுத்துக்களை அதிகமாகக் கொண்ட மற்றொரு செய்யுள்,

அச்ச மகற்றின ரச்ச மகற்றற்
கிச்சை யுளத்தி னெழுந்த சினத்தா
ஞெச்சி யணிந்தணி நுந்திய பல்பா
லுச்சித நற்றக் பீறெலி யிட்டார்

(கலபு அரணமுற்றிய படலம் : 164)

மெல்லெழுத்துக்களால் ஒரு செய்யுளில் ஓசைநயம் இவ்வாறு பெறப் பட்டுள்ளது.

வஞ்சகர் நெஞ்சு வகிர்ந்து பிளந்துச்
செஞ்சுடர் மிஞ்சிய செம்புனல் சிந்துங்
கஞ்ச மருங்கர மைந்துளர் கண்டந்
தஞ்ச முவந்தவர் வண்புகழ் தந்தார்

(கலபு அரணமுற்றிய படலம் : 164)

இலக்கணக் குறிப்பு

முஸ்லிம்களின் தமிழ் இலக்கியத்திலும் பேச்சு வழக்கிலும் பயரெச்ச வடிவங்கள் வினைமுற்றுக்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன. சேகுனப் புலவர் இங்ஙனம் பல இடங்களில் பயன்படுத்தி உள்ளார். ஒரு செய்யுளின் நான்கு அடிகளிலும் அத்தகைய பெயரெச்சங்களான பறிபட்ட, தெறிபட்ட, ஏறிபட்ட, தறிபட்ட என்பவை வினைமுற்றுக் களாய் வந்துள்ளன.

பரிக ளனந்தம் பண்ணும் கோனும் பறிபட்ட
திரிதொது வங்கந் தலையோ டனந்தத் தெறிபட்ட
இரத மனந்தம் பாண்டி னெடுங்கா லெறிபட்ட
வரிக ளனந்தஞ் செந்நர கூக்கத் தறிபட்ட

(கிறக்கிலுடன் போர் புரிப் படலம் : 107)

மற்றொரு செய்யுளில் மதிபட்ட, பொடிபட்ட படிபட்ட என்பவை:

விருது படங்குங் கவிகை யனந்தம் மிதிபட்ட
பொருது முழங்கு முரச மனந்தம் பொடிபட்ட
பருதி யினெங்குஞ் செம்புனல் வெள்ளம் படிபட்ட
அரிதரி தம்மா உரை செய லென்கோன் அமரன்றே

(கிறக்கிலுடன் போர் புரிப்படலம் : 108)

எனவும் 'கொள்ளப்பட்ட' என்பது மற்ரெரு செய்யுளில்

சுருவழி மடுவு மற்றத் துணர்புணர் முல்லை யெல்லா
மருவழி மதத்த வேழ மன்னராற் கொள்ளப் பட்ட
(தபூக்குக் கொண்ட படலம் : 42)

எனவும் வந்துள்ளன.

... கனற்பொறி முன்னறி முன்னர் பஞ்சின்
பலஞ்சுழன் றென்ன றூமிப் படைக்கணம் பட்ட மாதோ
(புசுருக் கொண்ட படலம் : 48)

என்னும் செய்யுளில் 'கணம்பட்ட' என்பது வந்துள்ளமை காண்க.

மைந்தரது மட்டைமலை மாரெட வளர்ந்த
(புசுருக் கொண்ட படலம் : 99)

என்பதிலும் வளர்ந்த என்பது வினைமுற்ருக வந்துள்ளது.

பட்ட என்பது பலமுறை ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தப் பட்டிருப்பதைக் காணலாம்.

துண்டுபட்ட முடிகளும் துறந்துபட்ட உதரமும்
கண்டுபட்ட உடலமும் கலந்துபட்ட பரிகளும்
மிண்டுபட்ட விரதமும் மிதந்துபட்ட சுருதிநீர்
மண்டுபட்ட மிடைகுளித்து மறுநிறங்கள் பட்டவே.
(விருறைச் சிறைமீட்ட படலம் : 101)

மற்ரெரு பாடலின் கடைசி அடியில் இவ்வாறு பட்ட என்பது வந்துள்ளது.

வடிதிரை யாக மூதூர ரண்கடை மடைவாய்ப் பட்ட
(மடவியர் வெற்றி கொண்ட படலம் : 46)

இன்னெரு பாடலில் பல தடவைகள் பட்ட என்பது இவ்வாறு பயன் படுத்தப்பட்டுள்ளது.

வெம்பரிகள் பட்டஉட லங்கிரிக ளொத்தமற 'மிண்டர்தலையோ
டம்பிடரி பட்ட பட்டவுடல் விண்டினிழி பட்டழியு மங்குருதியோ
டும்புணரி பட்ட இடை வன்கழுகு பட்டஒளி ருங்கழுவினிற்
சம்புபல பட்டஅட ருங்கையிசெ டுத்தவிரி தந்திகிரியால்
(வர்த்தான் வதைப் படலம் : 83)

பட்ட என்பது மற்றுமொரு செய்யுளில் பல தடவை உபயோகப் பட்டிருப்பதைக் காணலாம்.

மறங்கடைப் பட்ட மன்னன் மானமு மற்ருேர் வீரம்
புறங்கடைப் பட்ட நாட்டும் பொற்றவி சருங்கைப் பட்டத்
திறங்கடைப் பிடித்தார் வெற்றித் திசையெழு முரச மார்ப்ப
அறங்கடைப் படாது காக்கு மாண்டகை தம்பா லுற்ருர்.

(அரசிருக்கை கொண்ட படலம் : 90)

உண்ட என்னும் பெயரெச்சம் வினைமுற்ருக இவ்வாறு அமைந்துள்ளது:

பற்றிசை யெங்குங் கலந்து பரந்த
முற்றிசை யான்மு னிணங்கினர் துன்ப
மெற்றிசை யெய்தியதென்ன மகிழ்ந்தார்
சுற்றிசை யானக ருந்துவக் குண்ட

(கலபு கொண்ட படலம் : 171)

சொல்லாட்சி :

புதூகுச்சாம் என்னும் காப்பியத்தில் சேகுனப் புலவர் தமது சொல்லாட்சி வன்மையைத் திறம்படக் காட்டியுள்ளார். புதுப்புது முறையில் சொற்களைப் பயன்படுத்தி உள்ளார். அத்தகைய உபயோகங்களுள் அருமையானவை எனக் கணிக்கப் பெற்ற சில சொற்களை எவ்வாறு செய்யுளில் ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார் என்பதைப் பார்ப்போம்.

முதலில் இக்காப்பியத்தில் இடம்பெற்றுள்ள ஒலிக்குறிப்பினை எடுத்துக் கொள்வோம். 'அஆஅ' என்னும் எழுத்துக்கள் ஒரு செய்யுளில் இடம் பெற்றுள்ளன. 'அஆ' என்பது ஓர் இரக்கக் குறிப்பாய் நாலடியாரில் (9) வந்துள்ளது. கோட்டையில் வாசலைத் திறக்க வேண்டாம் அவ்வாறு திறந்தால் உடனே கோட்டைக் கைப்பற்றப்படும். ஆதலினுல் கோட்டை வாயிலைத் திறக்க வேண்டாம் என்று கூறுங்கள். ஐயையே அவ்வாறு கூறுங்கள் என்று கருத்துப் பெற 'அஆஅ' என்னும் ஒலிக்குறிப்பு இவ்வாறு பயன்படுத்தப் பட்டுள்ளது,

அகல விருக்கும் போதடைத்திங் கமைந்தோ மகத்தினியன் முடிப்பா
னிகல வணித்தி னுற்றனரா லிப்போ தரணந் திறந்தெய்திற்
பகலே முடிப்பர் வென்றி அஆஅப் பகர்த லொழிமி னெழிமினென
மிகலே மதியிற் சிலர்சொன்ஞர் வியந்து மற்ருேர் நயந்தனரால்

(கலபு கொண்ட படலம் : 87)

அத்திரம் என்பது கைவிடுபடையைக் குறிக்கும். ஆங்கிலத்தில் missile என்பதும் இதனையே குறிக்கும். சேகுனப் புலவர் அத்திரம் என்னும் சொல்லை 'கு' விகுதி பெறச் செய்து அத்திரக்கு என்று பயன் படுத்தியுள்ளார். உண்மையிலேயே அத்திரம் என்பது 'கு' என்னும் வேற்றுமை விகுதி பெறும்பொழுது அத்துச் சாரியை பெற்று அத்திரத் துக்கு என்று வருவதுதான் வழக்காறு. ஆனால் இதனை அத்திரக்கு என சேகுனப் புலவர் இவ்வாறு ஆண்டுள்ளார்.

சித்தின ரிடமெல்லாஞ் செறிந்து பாய்ந்தன
அத்திரக் குத்திர மறைதற் பாலவோ

(பகுலப்பக் கொண்ட படலம் : 58)

அத்திரம் என்னும் சொல் கைவிடு படை என்னும் பொருளில் நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் 'அத்திரமே கொண்டெறிய' என (பெரியாழ்வார் திருமொழி: 3 : 10 : 6) வந்துள்ளமை காண்க.

ஆகுளி என்பது ஒரு வகைப் சிறு பறையைக் குறிக்கும். மதுரைக் காஞ்சியில் 'நுண்ணி ராகுளி யிரட்ட' (606) என ஆகுளி என்பது சிறு பறையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. சேகுனப் புலவர்

ஆகு ளித்திசை முழக்கின ரணியணி தோறும்

(எறுமுக்கிற் பாசறை வகுத்த படலம் : 40)

என ஆகுளி என்னும் சொல்லை சிறுபறையைக் குறிக்கப் பயன்படுத்தி உள்ளார்.

முக அபிநயங்கள் பதினன்கு உண்டு, அவற்றுள் ஒன்று ஆலோலித முகம் எனப்படும். ஆகையால் மலர்ந்த முகத்தோடு ஒருவனை அமைக்கும் அபிநயவகையையே ஆலோலித முகம் என்பர். சேகுனப் புலவரும் ஒரு செய்யுளில் 'ஆலோலித மாமுகம்' என்னும் சொற்றொடரைப் பயன்படுத்தி உள்ளார். மா என்னும் சொல் இச் சொற்றொடரில் மிகுதியைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது எனக் கூறலாம். அழைக்கப்பட்ட போர் வீரர் திரும்பி வந்தமையால் எல் லோரும் ஆலோலித மா முகமாயினர் என்பதையே ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்,

மேலோருரை போலவர் மீண்டனரால்
பாலோருள ரியாரவரு மிப்படைசெய்
நூலோர்வலி நோக்கிய வீறதனு
லாலோலித மாமுக மாயினரால்

(கலபு கொண்ட படலம்: 60)

ஆற்றுக் காலாட்டியர் என்பது மருதநிலப் பெண்டிரைக் குறிக்கும் என்கின்றது திவாகர நிகண்டு. தபூக்குக்குச் செல்லும் வழியில் மருதநிலப் பெண்கள் தடாகம் சூழ்ந்துள்ள வயல்களிலே களை பிடுங்கும் அதே வேளையில் குரவை ஒலி எழுப்பிக் கொண்டிருந்தனர். அத்தகைய மருத நிலத்தைக் கண்டு தபூக் அடைந்தனர் என்பதைக் குறிப்பிடவே மருத நிலப் பெண்டிர் ஆற்றுக் காலாட்டியர் அல்லது ஆற்றுக் காலாட்டி மாதர் எனச் செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆற்றுக் கால் என்பதை ஆற்றிலிருந்து பாசனத்துக்காக நீரைக் கொண்டு செல்ல வெட்டப்பட்ட கால்வாயையும் குறிக்கும் என்பர். 'ஆற்றுக் காலாட்டி' என்னும் சொற்ருெடர் இவ்வாறு ஒரு செய்யுளில் ஆளப் பட்டுள்ளது.

உகழிய வாளை யோடு முதிர்கமு கரும்பு வாடை
அகழிய தடஞ்சூழ் பண்ணை ஆற்றுக்கா லாட்டி மாதர்
மகிழ்தரு குரவை வாழி வளங்கெழு மருத நோக்கித்
திகழ்தரு புகழின் மிக்கோர் திருநகர் தபூக்குப் புக்கார்

(அபுல் குதுசு கொண்ட படலம்: 13)

இரண் என்பது மற்ருேர் அருமையான உபயோகம். இது இரணம் என்னும் சொல் மருவி இரண் என வந்திருக்கலாம். ரண என்னும் சொல்லை மூலமாகக் கொண்டு போர் என்னும் பொருளினை உடைய சொல் இது எனலாம். போரிலே சரண் அடைவதாகக் கூறும் பகைவருடன் போர் புரிவது தருமமன்று. ஆகவே முரண்படும் வேதத்தை உடைய பெரியவரைப் பகைத்துக் கொள்ளாதீர். ஆனல் பகைவர் போர் வேண்டும் என்று கூறி அதே நேரம் பாதுகாப்புக் கேட்டல் எத்தகையது? காலிது இப்னு வலிது (றலி) அவர்களுடன் சில பகைவர் இருக்கின்றனர். அவர்கள் எங்கே போவார்கள்? என்ன நடக்கும் என்பதைக் கூறுங்கள் என்று கூறினர். இக்கருத்துக்களைக் கூறும் பொழுது இரண் எனினும் சொல்லைப் போரைக் குறிப்பிட இவ் வாறு ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

இரண்கேட்கு மயில்காலி திடைநின்ற வடையலர்நோக்
கரண்கேட்ட லெவன்கொலெவ ணடைவரெவ ரறைகவென்ருர்

(விருறைச் சிறை மீட்ட படலம்: 171)

ஈயல் என்பது இறகு முளைத்த கறையானைக் குறிப்பிடப் பயன் படுத்தப்படும் ஒரு சொல். ஈசல் என்னும் இதனைக் குறிக்க வழங்கப் படுவதுமுண்டு. மயில்கள் ஈயல் விரும்பும். எனவே தான்

மஞ்ஞை யீயற் கிவரும் வகை போல்

என சீவக சிந்தாமணியில் சிறகு முளைத்த கரையானைச் சுட்டுதவற்கு ஈயல் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. மயில்கள் ஈயலை வவ்வுவது போல என ஓர் உவமையை ஆண்டுள்ளார் சேகுனப்புலவர். போர் வீரர் குதிரைகளை மயில்கள் ஈயலைக் கௌவுவது போல பிடித்தனர் என இவ்வாறு ஒரு செய்யுளில் வருணிக்கப்பட்டுள்ளது.

வலமிடந் திரும்பி மஞ்ஞை வவ்வு மீய லாமெனச்
சிலமிடந்த பரிகணைந்து சிந்த நூற நடுவணே
கலனிலங்க புடையிலங்கக் கழுவிலங்க மூரித்தோள்
உலமிலங்க வரியினின்ற வொருவன் றன்னைக் கண்டனர்

(விருறைச் சிறை மீட்ட படலம்: 106)

உண்டாட்டு என்பது கள்ளுண்டு மகிழ்வதை குறிக்கும். கள்ளுண்டு மகிழ்தலைத் தெரிவிக்கும் ஒரு புறத்துறை இது எனத் தொல்காப்பியம் கூறுகிறது. முஸ்லிம் படையினர் ஓடிவிட்டனர் என்ற களிப்பால் கலபு நாட்டு மக்கள் குதூகலம் எய்தினர். உண்டாட்டு நடத்தினர் என்று சேகுனப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

புறம்போ நிலையாற் பகையுளத்திற் பொலியுங் களிப்பா லவரவர்க
ணிறம்போங் களியாட் டுடனுண்டாட் டுவந்தார் நிமிர்ந்தார் மன்னவனுந்
திறம்போ மாறவ் விணக்கமுறச் செல்வர் தம்மைப் பிடித்திறுக்கி
மறம்போ ரியல்பி னின்றனனுண்மாயாக் கதிரோன் மாய்ந்தனனால்

(கலபு கொண்ட படலம்: 107)

உவட்டல் என்பது மிகுதல் எனப் பொருள்படும். அறுபதினாயிரம் போர் வீரர் இறந்து விடுவர் என்று கூறக் கேட்ட சபலா கோபம் மிக்குடையவனானான். இதனையே சேகுனப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

அறுபதி னாயிர ராவி தாங்கிய
பொறையுயிர்த் தொழிவரெப் புரத்துங் காண்டியென்
றிறையருள் காலிது மிசைப்பத் தாங்கலா
துறைசின முள்ளெலா முவட்ட லாயினன்

(சபலா முதற்போர் புரி படலம் : 154)

ஊங்கு என்பது மேம்பட்டது எனப் பொருள்படும். 'கல்வி யினூங் கில்லை' என்கிறது நீதிநெறி விளக்கம் (2). இங்கே மேம்பட்ட உள்ளத்திலே உள்ள மேன்மையாம் தன்மை வழுவடைந்தால்

கிடைக்கக் கூடிய பயன் அற்றுப் போய்விடும். அல்லாஹ்வுடைய முனிவுக்கும் ஆளாகிவிட வேண்டி ஏற்படும். இக்கருத்துக்களையே ஆசிரியர் இவ்வாறு கூறி உள்ளார்.

ஊங்கு ளத்துறா நிலைவழு விடிலுறு பயனற்
றேங்கி நிற்பரா முனிவுபெற் றிருமையும் எவரும்
(அகுசாசு கொண்ட படலம்: 50)

எத்துக என்பது எத்திவைக்க எனப் பொருள்படும். எடுத்துச் சென்று சொல்லிடுக என்பதைக் குறிக்கும். போருக்குப் புறப்படும் ஓர் இளவல் 'பகைவனைக் கொல்வேன் அல்லது வீர மரணம் எய்துவேன். அவ்வாறு நான் மரணித்தால் எனது சலாமினை எனது தந்தையாரிடம் எத்தி வைக்க' எனக் கூறுவதையே இவ்வாறு ஒரு செய்யுளில் எத்துக என்பதைப் பயன்படுத்தி சேகுனாப் புலவர் விவரித்துள்ளார்.

இத்திறக் கயவன்முன் னெதிர்ப்ப னுட்பொறை
வைத்தவன் றனைத்தெறில் வரிசை வல்லவ
னுத்தமத் துதவியா ளெழிழி னென்சலாம்
எத்துக வெனப்பிதா விடத்தி லோதியே
(இரண்டாம் போர் புரிப் படலம்: 184)

ஒட்டார் என்பது பகைவரைக் குறிக்கும். ஒற்றுமையாக வாழ முடியாதவர் என்பதே அதன் காரணமாகும். திருக்குறளிலும் இச் சொல் இதே கருத்தில் (826) பயன்படுத்தப்பட்டுள்ளது. சேகுனாப் புலவரும் பகைவரைக் குறிக்க ஒட்டார் எனனும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தியுள்ளார்.

ஒட்டார் சிதறிப் பஃறிசையு மொளித்தார் தம்மைத் தேடிவரும்
(மாகான் வதைப்படலம்: 27)

ஒட்டார் என்பது மற்றோர் இடத்தில் இவ்வாறு ஆளப்பட்டுள்ளது.

மிக்க வலத்துடை மற்ற வரத்தினர் மெய்ப்பாகத்
துக்கிர மொத்து நடிப்ப வயப்பரி ஒட்டார் பற்
றிக்கினு மற்றழிய ...
(அரசிருக்கை கொண்ட படலம்: 70)

ஒட்டை என்பது ஒட்டகம். ஒட்டகை மீது பயணஞ் செய்வோர் ஒட்டையர் என அழைக்கப்பட்டனர். இங்கே ஒட்டை மீது போருக்குச் சென்ற வீரர் ஒட்டையர் என அழைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஒரு செய்யுளில் ஒட்டையர் என்பது இவ்வாறு வந்துள்ளது.

ஊரு மாவினர் ஒட்டையர் ஓங்குதின்
தேருலர்வினர் சேவகர் மற்றவர்...
(கிறக்கில் புறப்படு படலம் : 13)

ஒல்லல் என்றால் இயலுகை என்பது பொருள். விருப்பம் இல்லாத பகைவரிடமிருந்து பல நகரங்களைக் கைக்கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தினுல் தங்கள் சேனையின் நிலையைப் பற்றி நீண்ட காலமாக ஒன்றும் தெரியாமையினுல் மனம் வருந்தி ஒரு கடிதம் எழுதினுர்கள் உமறு (றலி) அவர்கள் என ஒரு செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

ஒல்ல லின்றிய மாற்றலர் பன்னக ரொருகைப்
புல்ல லிற்படு வினையினுற் புந்திகொள் சேனை
நல்லி யற்கைமற் றெய்தில நாள்மிக வாலே
அல்ல லுற்றுள மெழுதின ருமறெனு மரசர்

(கன்சரீன் கொண்ட படலம்: 2)

'ஒகோ' என்பது அதிசயம் முதலிய நிலைகளை அடைந்த ஒருவனின் மனநிலையைச் சுட்டும் ஓர் ஒலிக்குறிப்பு. உள்ளங் கலங்கின நிலையை சேகுனுப் புலவர் இவ்வாறு ஒரு பாடலில் பாடியுள்ளார்:

மன்னு முயிர்கள் வினைவிளங்கு மறுமை நாளி னீயொருபால்
உன்னை யீன்ற யானெருபால் ஓகோ வாதன் முறையன்றே

(கிறக்கில் புறம்படு படலம்: 81)

மற்றொரு பாடலில் ஓகோ என்னும் ஒலிக்குறிப்பு

இன்னு மொழியோகோ யாங்களி சையே மனத்துட் கொண்டபடி

(உமறு கத்தாப் பைத்துல் முகத்திசுக்கெழுந்த படலம்: 75)

என வந்துள்ளது.

கச்சூரம் என்றால் பேரீந்து என்பது பொருள். வளர்ச்சி அடைந்த தாமிசு என்பார் வலிமையான கச்சூர மரத்தினைப் போன்ற உடலை உடையவர் என இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளார் :

அச்சூர மறத்தி னடுந்தொழில்க
ளச்சூர மெனத்தெரி வோமனவன்
கச்சூர மரத்துட லார்கவல்போ
துச்சூர ருரப்பொலி கேட்டனரால்

(கலபு கொண்ட படலம் : 50)

கட்கம் என்பது வாள் (திவாகரம் நிகண்டு). 'ஒளிர்கட்கமே' என்று வாள் என்ற பொருளில் ஆசிரியர் கட்கம் என்னும் சொல்லைப் பயன் படுத்தி உள்ளார்.

மின்னு வன்கண லகைக்குலங் கண்டுவிட் கணுகியொளிர் கட்கமே

(தபூக்குக் கொண்ட படலம் : 138)

கண்மை என்றால் அன்பு சொரியும் கண்ணேட்டம் என்பது பொருள்.

பெருமானுர் முகம்மது (சல்) அவர்களைக் குறிப்பிடும்பொழுது ஆசிரியர் கண்மை என்னும் அடைமொழியைப் பயன்படுத்தியே இவ்வாறு பாடியுள்ளார்,

கண்மை கொள்கநம் முகம்மது நபியருள் கனிந்து
(அகுசாசு கொண்ட படலம் : 51)

கமற்றும் என்பது மிக்கு ஒலிக்கும் எனப் பொருள்படும். மிக ஒலிக்கும் என்னும் கருத்திலே சேகுனைப் புலவரும் சிங்கம் போன்று முழங்கியதை கமற்றும் என்னும் சொல்லைப் பயன்படுத்தி இவ்வாறு பாடியுள்ளார் :

செம்மை விளியுஞ் வரவவருஞ் சிங்க மெனமுன் னடைகமற்றும்
(வர்த்தான் வதைப் படலம் : 72)

கயம் என்றால் குறைபாடு என்பது பொருள். கடைப் போலியாகக் கொண்டு கயம் என்பதனைக் கயன் என அமைத்து குற்றம் என்னும் பொருள் தொனிக்க ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார் :

பயன்றரு பாக மோரா தறிவிலா பயக்குஞ் செய்கைர்
கயன்றனைப் பொறுப்பார்.
(கிறக்கில் புறப்படு படலம் : 72)

இங்கே பயன் என முதல் அடியில் வந்துள்ள சொல்லோடு எதுகையாக அமையவே கயன் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார் என்பது புலனாகின்றது.

கலத்தல் என்றால் பரத்தல், பரவுதல் எனப் பொருள்படும். 'கட்டுரை கலந்த காலை' என்கிறார் கம்பரும் (கான... 68). இங்கே செய்தி பரவியது என்பதையே சுட்டியுள்ளார் கம்பர். முகம்மது நபி (சல்) அவர்களின் கருத்துப்படி இஸ்லாம் மார்க்கம் உங்கள் நகரங் களில் மாத்திரம் அன்றி அவற்றிற்கு அப்பாலும் பரவும் என்று கூறி யுள்ளார்கள் என்னும் முஸ்லிம்களின் கூற்றை விளக்கவே 'கலவும்' என்னும் சொல்லைப் பரவும் என்னும் பொருளில் இவ்வாறு ஒரு செய்யுளில் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர்.

எங்க ணயினர் முகம்மதனு
  ரிசைத்த திருவாக் கணி வென்றி
தங்கி யியற்று முறைமையெங்க
  டவஞ்சேர் தீனி லினிய நிலைத்
துங்க முறவே யாங்களுறத்
  துளக்கி வளர்ந்து கிளர்ந்தலர் வாய்த்
துங்க ணகர முழுதுங் கவிந்
  துலவிப் புறத்துங் கலவுமென்றும்
(சபலா முதற் போர் புரிப் படலம் : 15)

கவலுதல் என்பது மனம் வருந்துதல் எனப் பொருள்படும். உள்ளம் வருந்தாதே என்பதைக் குறிக்க சேகுனப் புலவர் கவலல் என கவல்தல் என்னும் சொல்லில் உள்ள தல் என்பதனை நீக்கி எதிர்மறை யைக் குறிக்கும் அல் என்பதனைச் சேர்த்து ஒரு செய்யுளில் பயன்படுத்தி யுள்ளார். எல்லாம் அல்லாஹ்வின் நியதியின்படி நடக்கும். இது இயற்கையானது. இயற்கைக்கு அமையாத ஒன்றினை ஏற்படுத்த முயன்று தோல்வி கண்டால் அதற்காக நீ கவலை கொள்ளாதே. மனம் வருந்தாதே என அல்லாஹ் தனது திருமறையிலே கூறியுள்ளான். இக் கருத்துக்களை ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளன.

என்னி யற்கையின் கருமத்தி னியற்றுத லேது
நின்னி யற்கையில் இல்லையா லஃதுநே ராநேல்
மன்னி யற்கையின் மனத்தொடு கவலலென் றிறைவன்
தன்னி யற்கையின் உரைமறை தரவிளக் கினனால்
(யூக்கினு தலைமை பெறு படலம் : 7)

கீழ்மை என்றால் இழிவு. புதூகுச்சாம் ஆசிரியர் இந்தச் சொல்லைக் கீண்மை என்றே பயன்படுத்தியுள்ளார். இங்கே வீரசோழியத்துக் சிணங்க ழகரத்தின்முன் மெல்லின மகரம்வந்து ழகரம் ணகரமானதைக் காணலாம். கீழ் + மை = கீண்மை.

இன்சொல் வஞ்சியர் சிறுவரல்லா லொருவருடத்தி னிடைநான்குப்
பொன்செல் காசளித் திடத்திறை வல்லவன் புகழ்வழி
யினர்மேன்மைத்
தன்சொ லாரென மற்றவர் கீண்மையிற் றிறரித்தவ ரெனக்காண்பா
னன்சொ லோதின னென்றவர் வாட்பெயர் நரர்க்கரி யேறன்னார்
(ஐவர் சிறை மீட்ட படலம் : 59)

குணக்கு என்பது கோணல் என்று பொருள்படும். எதிரிடை என்னும் ஒரு பொருளும் உண்டு. குணக்கில்லார் என்பர் கோணலோ எதிரிடையோ இல்லாதார் என்பதைக் குறிக்கின்றது. கலிமாச் சொல்லி ஈமான் கொண்டவர்களையும் திறை செலுத்தச் சம்மதித்த இரு சாராரையும் குணக்கில்லாத முஸ்லிம்கள் ஏற்றுக் கொண்டனர் என்பது இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மதுர மொழிகேட் டுள்ங்கனிந்து வாக்கா லரிய கலிமாவு
மதிர வுரைத்திட் டீமானி லடைந்தார் சிலரம் மன்னனொடு
முதிரு மியலபிற் றிறையளித்து முறையி னடக்கை வழியொழுகி
யெதிரி னிருந்தார் சிலரிதற்கு மிணங்க முடித்தார் குணக்கில்லார்
(முப்புரங் கொண்ட படலம் : 38)

குணிக்கும் என்பதனை படைக்கும் என்ற பொருளில் ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். குணிக்கும் என்பதனுல் பெருக்கும் என்ற பொருளும் பெறப்படுகிறது. குன் என்னும் அறபுச் சொல்லின் கருத்து ஆகுக என்பதே. இறைவன் ஆகுக என்றே அனைத்தையும் படைத்தான். இக் கருத்தினையே ஒரு செய்யுளின் முதலடியில் இவ்வாறு பயன் படுத்தியுள்ளார் ஆசிரியர்.

குன்னென்னும் வியன்கொளினுல்
குணிக்கு மிறை யவன்புறத்தால்
(அந்தாக்கியா மேற்செல் படலம் : 15)

கூகூ என்பது ஓர் ஒலிக்குறிப்பு. இசை நிறைவு கருதி சேகுனுப் புலவர் இதனை கூகு என ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தி யுள்ளார்.

வேகமன்னவ ராடுபோரினில் வேலைமாநகர் பாலெலாங்
கூகுவென்றெழு வோசையால்வலி கோரவீரிய சேவகர்
(அகுசாசு கொண்ட படலம் : 125)

இவ்வொலிக்குறிப்பு கூகா என்றும் வழங்கப்படும்.

கூள் என்னும் சொல்லை உணவுப் பொதி என்னும் கருத்தில் சேகுனுப் புலவர் ஒரு செய்யுளில்,

நம்பிய கூள்கள் காப்பொடுங் கவர்க
என்றனுப் பினர்நர பதியே
(கிம்மசு கொண்ட படலம் : 3)

எனப் பயன்படுத்தியுள்ளார்.

சக்கிரி என்பது பாம்பு. ஆதிசேடன் பூமியைச் சுமந்து கொண் டிருக்கிறது என்பது ஐதீகம். அத்தோடு ஒரு கவி மரபு, பாம்பும் மாநிலமும் போர் காரணமாக அதிர்ந்தன எனக் கூறவந்த ஆசிரியர்,

சக்கிரி மாநில னேடு அதிர்ந்தே தகையெய்த
(கிம்மசு கொண்ட படலம் : 66)

என ஆதிசேடனையும் பூமியையும் குறிப்பிட்டுள்ளார்.

சமழ்ப்பு என்ருல் வெட்கம் என்பது பொருள். 'கள்வன் சமழ்ப்பு முகங்காண்மின்' (20 : 36) என்கிறது பரிபாடல்). பயம் மிகுந்த வெட்கம் வீரரை பாதித்தது. அச்சம் மிகுதியால் ஏற்பட்ட வெட்கத் தைக் குறிப்பிடவே ஆசிரியர்,

தங்க ளச்ச மிகுந்த சமழ்ப்பால்

(அந்தாக்கியாவின் முதற்போர் புரிப் படலம் : 91)

என்று பாடினர்.

சழக்கு என்னும் சொல்லுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துக்கள் உண்டு. அவற்றுள் ஒன்று தளர்ச்சி என்பது. தளர்ச்சி என்ற பொருளில் சழக்கு என்னும் சொல்

நந்திறங் கண்டு நெஞ்ச நடுங்கினர் தாமு மற்றுந்
தந்திறங் கண்டுஞ் சென்று சழக்கொடு மிகுந்த மன்னர்

(அகுசாசு கொண்ட படலம் : 3)

மன்னனின் மிகுந்த தளர்ச்சியைச் குறிக்க இங்ஙனம் பயன்படுத்தப் பட்டுள்ளது. குற்றம் என்பது சழக்கு என்பதன் மற்றொரு பொருளாம். கிறக்கீல் மன்னனுடைய செல்வம் குற்றம் உள்ளது என்பதைக் குறிப்பிட சழக்குரிய செல்வம் என்று இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

மன்னிய பெரும்பழி சுமந்தமற மன்னன்
தன்னரசுடன்பல சழக்குரிய செல்வம்

(கிறக்கில் புறம்படுப் படலம்: 112)

சாரி என்பது வட்டமாய் ஓடுகை, பெரும்பாலும் போர் வீரர், குதிரைகள், தேர் முதலானவை வட்டமாய் ஓடுதலையே இது குறிக்கும். சாரி என்பதற்குச் செல்லுதல், வட்டம், பக்கம், தடவை எனப் பொருள் பல கூறலாம். ஆதி, நேமி, பாதி, வீதி என்னும் சொற்களுடன் சாரி என்னும் சொல் சேர்த்துப் பயன்படுத்தப்பட்டுள்ளது. குதிரையின் நேரோட்டம் ஆதி எனப்படும். 'அடிபடு மண்டிலத் தாதி போகிய' என்கின்றது மதுரைக் காஞ்சி (390). குதிரையின் நேரோட்டத்தைத் தான் இது குறிக்கிறது. ஆதிசாரி என்னும் போது குதிரையின் நேரோட்டம் போலவே இங்கு வட்டமாய் நடைபெற்றது. தேர்களும் அங்ஙனம் நேமி என்றால் தேருருளை. பாதி என்பது வீரரைக் குறிக்கும் என்பர். வட்டமாக பல தடவைப் பக்கத்தே வந்து ஈடுபட்ட போரினை வருணிக்கவே சாரி என்னும் சொல் ஒரு செய்யுளில் பலதடவை பயன் படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். சேகுனப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்:

ஆதி சாரி யொடு நேமி சாரியிடை யற்றுமீள்
பாதி சாரிபல வீதி சாரியிரு பாகமுன்
மோது சாரியிரு பேரு மாவுமுக மாறுரு
வேதி சாருமொலி யோசை நாலிடமு மெய்துமால்

(மாகான் முதற் போர் புரிப் படலம்: 58)

இதே கருத்தில் சாரி என்னும் சொல்

... மாவினைத்
தொட்டுளாவி நடைதன்ஞற் சாரி குலாவி
(அந்தாக்கியாவில் முதற் போர் புரிப்படலம்: 74)

என்றும்

உச்சநீள்குர கதத்தாற் சாரி குலாவி கடுத்துவார்
(அந்தாக்கியாவில் முதற்போர் புரிப்படலம்: 79)

என்றும் வந்துள்ளமை காண்க.

சிவிறி என்ருல் விசிறி, சேகுனப் புலவர் விசிறியால் காற்றைச் சிவறி—பரப்பி என்று பொருள்பட ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

பொன்னிறச் சிவிறி விசிறிசாந் தாற்றிப்
பொலிதரக் கவரிகள் நெருங்க
(அந்தாக்கியா மேல் செல் படலம்: 23)

சுலவுதல் என்பது சுழலுதல் என்பதைக் குறிக்கும். அதே சொல் சுலாவுதல் என்றும் பயன்படுத்தப்படுகிறது. சுழலும் என்னும் பொருளிலே சுலாவுதல் என்னும் சொல் தேவாரத்தில் 'விரைகமழ் சோலை சுலாவி யெங்கும்' (4:8:1) என வந்துள்ளது. வாளைச் சுழற்றிஞன் ஒரு வீரன் என்பதைக் குறிக்க சேகுனப் புலவர் 'சுலாவினர் வாளால்' என்று ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மற்ருெரு கயவன் செந்தீ வழிதரு கண்ணி னெய்திச்
சுற்றினன் வயமா வோடுஞ் சுலாவினர் வாளா லாவி
யிற்றனன் கண்ட வொன்ஞ ரிதயத்தில் வள்ளல் வீரன்
குற்றிய விகார நெஞ்சங் கொண்டதோர் தலைவன் புக்கான்
(மூன்ரும் போர் புரிப் படலம்: 88)

சொம் என்பது சொத்து எனப் பொருள்படும், பரம்பரையாகத் தொன்று தொட்டு வரும் சொத்துக்களை முதுசொம் என்பார். இதனையே ஆங்கிலத்தில் Heritage என்பதையும் குறிக்க முஸ்லிம் மக்கள் பயன் படுத்துவதுண்டு. சொத்து என்னும் பொருளில் சொம் என்னும் சொல் சீருப்புராணத்திலும் (அலிமாமுலையூட்டுப் படலம்: 77) வந்துள்ளமை காண்க. சொத்து சொம் என இரட்டைச் சொற்களைக் கொண்ட சொற்ருெடராகவும் இதனைப் பயன்படுத்துவர். சேகுனப் புலவரும் சொம் என்பதனை இவ்வாறு சொத்து என்னும் பொருளில் பயன் படுத்தியுள்ளார்,

அளக்கறும் பல்பொரு ளணிந்த வின்னன
துளக்கறு நகரிகள் நந்தஞ் சொம்மெனக்
களக்கற வருளிய காக்கு நாயகன்
விளக்குநர் புகழ்க் கெல்லாம் விளக்கி நின்றவன்
(பைத்துல் முகத்திசு கொண்ட படலம்: 61)

ஞெள்ளல் என்பது சோர்வு எனப்படும். இங்கே ஆசிரியர் 'ஞெள்ளாச் சோர்' எனக் குறிப்பிட்டுள்ளார். மிகுதியான சோர்வு என்பதனைக் குறிக்கவே இவ்வாறு இச்சொல்லை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். ஞெள்ளா என்ற சொல் இடம் பெற்றுள்ள செய்யுளடி இவ்வாறு அமைந்துள்ளது.

வெற்றி மாதவர் களள்ளாப் பேரயர் வர்ய்மன
மிக்கி ஞய்தலொடு ஞெள்ளாச் சோர்தரு போதினில்
(அந்தாக்கியாவில் முதற் போர் புரிப்படலம்: 77)

திருமால் என்பது பொதுவாக விஷ்ணுவைக் குறிக்கும். ஆனால் சீவக சிந்தாமணியில் அரசனைக் குறிக்க

'தேர்முழங்கு தானைத் திருமாலின் முன்றுறப்பான் (2981) என ஆளப்பட்டுள்ளது, சேகுனப் புலவரும் அரசன் என்னும் பொருளில் திருமால் எனப் பயன்படுத்தியுள்ளார். இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்னர் கஅபுல் அஹ்பார் என்பாரின் கூற்றாகவே அமைந்துள்ளது. கஅபுல் அஹ்பார் என்பார் உமறு கத்தாப் (றலி) அவர்களை விளிக்கும் பொழுது 'நற் திருமானிலையன் பெருமானே' என்றார். 'எமது அரசன் என்னும் நிலையில் உள்ள பெருமான் கலிபா அவர்களே' என்பதையே இச்சொற்றொடர் சுட்டும். இனிச் செய்யுளைப் பார்ப்போம்.

எந்தை யுரையா லெழுதிவைத்த வேட்டாற் கொண்ட வுறுதியினை
நந்த நும்பாற் றொடர்ந்தீமா னுட்டி யிசுலா மாகவெனச்
சிந்தை மகிழ்வா லடைந்தேனந் திருமா னிலையின் பெருமானே
முந்த விறைவன் மறைகடொறு மொழிந்த வியல்பென்
றறைகுவனால்
(கஅபுலகுபாறு ஈமான் கொண்ட படலம் : 30)

நாந்தகம் என்றால் வாள். இச்சொல் திருமாலின் வாளையும் சுட்டும். எல்லா இடங்களிலும் முஸ்லிம்களுடைய வாள்கள் மின்னின என்பதை இவ்வாறு பாடியுள்ளார் ஆசிரியர்.

வானத்திடை மின்னு மருங்கினுமெத்
தானத்திடை மின்னு மறத்தரியா
ரூனத்திடை மின்னு முலாவுமரு
ஞானத்திடை மின்னினர் நாந்தகமே
(கலபு கொண்ட படலம் : 55)

நொச்சி என்பது நொச்சித் திணையைக் குறிக்கும். எயில் காக்கும் வீரர் சூடிய நொச்சிப் பூவைப் புகழும் ஒரு புறத்துறை நொச்சித் திணை எனப்படும். எயில் காவலையும் நொச்சி என வழங்குவர். அரசன் நொச்சி அரண் வீற்றிருந்தான் எனக் குறிப்பிடப்பட்டுள்து. காவலாளர் காக்கும் அரண்மனையில் அரசன்வீற்றிருந்தான் என்பதைக் குறிக்கவே நொச்சி என்ற சொல்லைப் பயன்படுத்தி இவ்வாறு ஒரு செய்யுளைப் பாடியுள்ளார் ஆசிரியர்.

வலிகொள் படையான் மனத்தானு மருவுங் குடியாற் கூழானும்
பலிகொள் வினையா னமைச்சானும் பண்பினதனு னிறைசெல்வ
மெலிவி லியலா னொச்சியரண் வீறுற்றிருந்தான் முதிர்பூசல்
வலிகொள் விறலி னகரோம்புங் கருத்த னழலி னுருத்தோனே
(இருவரின் வினை முதிர்ச்சிப் படலம் : 5)

இங்கே படை, குடி, கூழ், அமைச்சு, அரண் முதலியன சுட்டப் பட்டிருப்பதைக் காணலாம்.

நொச்சி மாலை அணிந்த மன்னனைப் பற்றிக்குறிப்பிடப்பட்டுள்ளது. இச் செய்யுளில் நொச்சியந் தாம மார்பினர் என இவ்வாறு வருணிக் கப்பட்டுள்ளது.

ஆதலிற் புறத்துறை யறபி மார்களின்
காதலி னதிபனைக் கண்க ளாற்குறித்
தோதிய பதமுணர்ந் துறுக வென்றனன்
ருதவிழ் நொச்சியந் தாம மார்பினன்
(உமறு கத்தாபு பைத்துல் முகத்திசுக்கெழுந்த படலம்: 46)

நொறில் என்பது விரைவினைக் குறிக்கும். சேகுனைப் புலவரும் குதிரைகளின் வேகத்தைக் குறிக்க நொறில் என்னும் சொல்லை

... நொறில்பரி யனேக மோட
(அபுல் குதுசு கொண்ட படலம்: 78)

என அமைத்துள்ளார் ஒரு செய்யுளில்

பாத்துதல் என்பது பகுத்தல் எனப் பொருள்படும். எனவே பாத்து என்பதைப் பகுத்து எனக் கொள்ளலாம். சேகுனைப் புலவர் ஒரு செய்யுளில்

... உயர்துணை கொள்க பாத் தென்றார்
(அகுசாசு கொண்ட படலம: 72)

பாத்து என்பதை இவ்வாறு பயன்படுத்தியுள்ளார்.

பிமிர் என்பது தோள். சபலா போருக்குப் புறப்பட்ட தோள்களில் அணியப் பட்டிருந்த மாலைகளிலிருந்து தேன் சிந்தியது எனக் குறிப் பிட்டுள்ளார்.

அமர்வழி யென்னலு மகத்தின் முன்னிய
கமர்வழி யுணர்வினை நீத்துக் காயகன்
சமர்வழி கலன்பல தாங்கித் தாமமார்
பிமிர்வழி தேனுக விவுளி யுந்தினன்

(சபலா முதற்போர் புரிப் படலம்: 118)

பொக்கணம் என்பதைச் சோழியப்பை என்பர். திருக்கோவை யாரிலும் (242) இச்சொல் பை என்னும் பொருளில் இடம் பெற்றுள் ளது. பிச்சைக்காரன் தனது உடமைகளை இடும் பெரிய பை எனவும் இது குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கே சேகுனப் புலவர் குறிப்பிடும் பொக்கணம் பெரிய பை ஆகும். தாமிசு என்பவர் தமது உடமைகளைப் பொக்கணத்தில் இட்டுக் கொண்டு வந்தார் எனக் குறிப்பிடப்பட்டுள் ளது. இதுதான் அந்தச் செய்யுள்

தன்னனி பொக்க ணத்தை யவிழ்த்தனர் தாமி சென்போர்
வன்னனி துருவைச் செந்தோல் வாங்கிமேற் றுங்கிப் பின்ன
ரன்னவன் நன்காற் கைக டளைந்தவ ணிருத்திச் சேர்ந்த
மன்னவ ரோடு வண்மை வளர்சல வாத்துச் சொன்னர்

(கலபு கொண்ட படலம்: 128)

மகார் என்பது மகன் என்பதின் பன்மை. உயர்ந்தோர் மாட்டுச் செல்லும் ஒரு சொல். இச்சொல்லைப் பிள்ளைகளை குறிக்க சேகுனப் புலவர் இவ்வாறு ஒரு செய்யுளில் ஆண்டுள்ளார்.

செருச்சிறந்த வேலதிபர் களைந்து நந்தேஎந்
  திருநகர மிகக்கொண்டா ரெதிர்ந்தார் மாண்டுங்
கருச்சிறந்த பெண்டிர் மகார் தொழும்பிற் செய்தார்
  கலந்துநெறி பொருந்தினருக்குக் குரிமை யீந்தார்
மருச்சிறந்தார்க் கபயமளித் திட்ட வாய்மை
  மறதியுரு தியற்றுகின்ற ரறபி மாரென்
றுருச்சிறந்தீ ரெம்பொருண்மற் றுக்கை யாவி
  யோம்பநனி யிணங்கலுளத் தெடுத்தே மென்றார்.

(கன்சரீன் சமதானப் படலம் : 57)

மகார் என்பது புத்திரர் என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டது பற்றி முன்னரும் குறிப்பிடப்பட்டது.

மாடு என்பது பக்கம். சேகுனப் புலவரும் பக்கம் என்னும் கருத்தில் பக்கத்தில் இருந்தவரை 'மாட்டி ருந்தாரை' (கலபு கொண்ட படலம்: 110) என்று குறிப்பிட்டுள்ளார்.

முப்புரிநூல் என்பது பூணூலாகும். முஸ்லிம் அல்லாதவர் என்பதைக் குறிப்பிடவே தோளில் முப்புரி நூல் அழுத்தமாகப் பதிந்திருந்தோர், முஸ்லிம் மக்களுடன் போர் புரிய எழுந்த பகைவர் என்பது இடம் பெற்றுள்ளது. புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

முன்னுளத்தின் சினமுடையோர் முப்புரிநூற் றோளழுந்த
(அந்தாக்கியா மேற் செல் படலம் : 9)

வரி என்றால் எழுத்து என்னும் ஒரு பொருள் உண்டு. வரித்தல் என்பதும் எழுதுதல் எனப் பொருள்படும். எனவே ஒரு கடிதம் எழுதப் பட்டுள்ளது. அந்தக் கடிதத்தை நினைவு செய்தனர். இதனையே 'வரி நிறைத்தனர்' என சேகுனப் புலவர் பாடியுள்ளார். பாடல் இது தான்:

நீத மேவிய கருணையீர் நுமக்குநன் னினைவிற்
போத மேவின ரியாவர்க்கும் போற்றரும் புகழி
னூத னின்னளி கருணையு நவிற்றுமென் சலாமுஞ்
சீத மேவுக வெனவரி நிறைத்தனர் செம்மல்
(ஆவணம் விடுத்த படலம் : 41)

வல்வில் என்பது ஒரே காலத்தில் பல பொருள்களை ஊடுருவிச் செல்லும்படி ஓர் அம்பை எய்யும் திறமை. இத்தகைய திறமை வாய்ந்த ஓரி என்னும் ஒரு வள்ளல் வல்வில்வோரி என வழங்கப் பட்டனர். 'சேகுனப் புலவர்' வல்வாளி என்னும் சொற்றொடரைப் பயன்படுத்தியுள்ளார். அத்தகைய வல்வில் லிலிருந்து அம்புகள் எறியப்பட்டன என்பதை ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உருத்தி யான் வல்வில் வாளி உகுத்தனன் அடர்ந்திட் டேறி
(கிம்மசு கொண்ட படலம் : 115)

'வல்வில்' என்னும் சொற்றொடர் அதே கருத்தில் மற்றொரு செய்யுளிலும் பயன்படுத்தப் பட்டுள்ளது.

இட்டகாற் றொடர்பற் றுலுமெரிசின மருத வல்விற்
றொட்டகாய் கணைக ளெல்லாம் பூளையின் றூவி மென்மேற்
(இரண்டாம் போர் புரிப் படலம் : 223)

வற்பு என்பது வலிமை என்று பொருள்படும். 'அரக்கர் தலைவன்றன் வற்பார் திரடோள்' என வற்பு என்பது வலிமையைக் குறிப்பிட நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது (பெரிய திருமொழி : 5 : 1 : 4). வலிமை என்னும் பொருளில் சேகுனப் புலவரும் வற்பு என்னும் சொல்லை

நிற்பா லமைக நின்கரும மென்ரு னிருப ரிவையன்றேல்
வற்பாற் கொன்று நும்மைநுந்த மடவார் சிறையுங் கோடு
மென்ருர்

(உமறு கத்தாபு பைத்துல் முகத்திசுக் கெழுந்த படலம் : 79)

என ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தியுள்ளார் :

வன்பு என்பது வலிமை. வலிமையுடையவன் அரசன் என்ப தனேயே சேகுனப்புலவர் வன்புளான் பிணித்த மற்ருேர் வரிக்கயி றதனே நேர்மை

(அகுசாசு கொண்ட படலம் : 115)

என்று வலிமை என்னும் பொருளில் வன்பு என்னும் சொல்லேப் பயன் படுத்தியுள்ளார்.

வெந் என்பது திரிந்து வென் ஆகியுள்ளது. பிங்கலந்தை நிகண்டில் வெந் என்பது முதுகினேக் குறிக்கும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. வெந்நிடுதல் என்பது புறங்காட்டுதலேக் குறிக்கும். வெந் என்பதி-லிருந்து வென் என்பது வந்துள்ளமையினுல் வென் என்பதும் முதுகினேயே குறிக்கும் எனக் கொள்ளலாம். ஆனுல் சேகுனப் புலவர் பிடரியை அல்லது முதுகைக் குறிப்பிட வென்னி என்னும் சொல்லேப் பயன்படுத்தியுள்ளமை ஈண்டு குறிப்பிடத்தக்கது. வென் அல்லது வெந் உள்ள இடம் வென்னி என்ற சொல்லேப் பயன்படுத்தி தாமிசு என்பவர் எவ்வாறு இருவருடைய பிடரிகளேப் பிடித்து மற்ருெருவன் மீது எறிந்து அருகிலிருந்தவன் உட்பட மூவரையுமே இறக்கச்செய்தார் எனத் தாமிசின் பேராற்றல் இங்குக் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காண லாம். சேகுனப் புலவர் இக்கருத்துக்களே அமைத்துப் பிடரியைக் குறிப்பிட வென்னி என்னும் சொல்லேயும் பயன்படுத்திப் போர்க் காட்சி ஒன்றை அழகுற இவ்வாறு ஒரு செய்யுளில் படம் பிடித்துக் காட்டியுள்ளமை பெரிதும் நயக்கத்தக்கது.

இருவர் வென்னி இரண்டுகை பற்றி
ஒருவன் மேலின் உருப்பின் எறிந்தார்
குருசில் வீர கொழுங்கர வன்பால்
அருகி ணேந்தவர் மூவரு மாய்ந்தார்

(அந்தாக்கியாவில் முதற் போர் புரி படலம் : 94)

இச்செய்யுளிலும் வன்பு என்னும் சொல் வலிமையைச் சுட்ட பயன் படுத்தி இருப்பதைக் காணலாம்.

**யாப்பமைதி**

புதூகுச்சாம் என்னும் காப்பியத்திலும் பல் வேறு வகையான விருத்தச் செய்யுட்கள் இடம்பெற்றுள்ளன. விருத்தங்களைச் சார்ந்த சில இனங்களை ஏற்கனவே பார்த்தோம். புதூகுச்சாமில் இடம்பெற்றுள்ள வஞ்சி விருத்தங்களை இப்பொழுது எடுத்துக் கொள்வோம்.

மின்னூற்றிய வாட்படை வெம்பரியா
ரைந்நூற்றுவ ரோடு மகத்தரசன்
றன்னூற்ற மிகைத்திட லுந்தளமுற்
றென்னூற்றமி தென்னவெ னுங்குரலே

(கலபு கொண்ட படலம் : 51)

மறமிஞ்சிய மன்னவன் மாவலியாற்
றிறமிஞ்சினர் சென்னிகள் வீழ்கனியா
லிறமிஞ்சிய மண்ணில னிட்டிழிவாய்
புறமிஞ்சவி ரிந்திரி போயினனுல்

(கலபு கொண்ட படலம் : 57)

போகாநகை தூங்கிய புந்தியிடை
வேகாநிலை வேந்தனி லைத்தவினை
யேகாநனி துன்னவெ ழுந்தனரம்
மாகானெடு மன்னவ ரைவருமே

(மாகான் புறப்பாட்டுப் படலம் : 52)

வன்னெஞ்சுடை யான்வலி சேனையினுல்
துன்னெஞ்சுப டர்ந்து துளங்கிவிற
னன்னெஞ்சினர் நாற்றிசை யுஞ்சிதற
வுன்னஞ்செய வோங்கின வூக்கமரோ

(மூன்றும் போர் புரிப்படலம் : 16)

மானந்தரு மாமயி லார்மறுகத்
தீனந்தர வெம்பகை தீயருற
தானந்தர வல்லுயிர் தாங்கியிவ
ணியானந்தர மேவலெ வன்கொலெனு

(மூன்றும் போர் புரிப் படலம் : 23)

இங்கே ஐந்து வஞ்சி விருத்தங்கள் புதூகுச்சாமிலிருந்து எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவ்வஞ்சி விருத்தம் ஒவ்வொன்றிலும் சிந்தடி நான்கு வந்துள்ளன. முதலாஞ் சீரிலும் மூன்றுஞ் சீரிலுஞ் மோனை வந்துள்ளன. இங்கே தரப்பட்டுள்ள முதலாம் விருத்தம் முதலாம் அடி

தேமாங்கனி தேமா புளிமாங்கனி என அமைந்துள்ளது. அவ்விருத்தத்தின் ஏனைய அடிகளும் அவ்வாறே அமைந்துள்ளது. இரண்டாவது விருத்தத்தில் முதலாம் அடி புளிமாங்கனி கூவிளம் தேமாங்கனி என அமைந்துள்ளது. ஏனைய அடிகளும் அன்னதே.

**கையேடும் குறிப்பும் :**

புதூகுச்சாம் காப்பியத்தைக் கையெழுத்துப் பிரதியாகவும் மக்கள் பயன்படுத்தியுள்ளனர். அத்தகைய கையெழுத்துப் பிரதி கொல்லம் ஆண்டு 1020 இல் தயாரிக்கப்பட்டுள்ளது. கொல்லம் ஆண்டின் ஆரம்பம் கி.பி. 824 எனக் கூறுவர். இது ஹிஜ்ரி 209வது ஆண்டாகும் எனவே இக்கையெழுத்துப் பிரதி ஆங்கில ஆண்டு 1844இல் தயாரிக்கப்பட்டதாகும். இந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது புதுகுச்சாம் ஆசிரியர் செய்கப்துல் காதிறு நயினுர் ஆலிம் புலவர் வாழ்ந்த காலத்திலேயே இது பிரதி செய்யப்பட்டது. புதூகுச்சாம் அரங்கேற்றப் பட்டு 22 ஆண்டுகளில் இதனைத் தயார் செய்துள்ளனர். இதனைத் தயாரித்தவர் செல்வராயன் என்பவர் ஆவார். இவர் உபதேசிப்பாவலர் குமாரர் என்றும் பவளக் காட்டிற் கொட்டைக் குப்பத்தைச் சேர்ந்தவர் என்றும் இக்கையெழுத்துப் பிரதியின் அடிக்குறிப்பொன்று குறிப்பிடுகிறது.

இக்கையேட்டின் சிறப்பமிசம் என்னவெனில் புதூகுச்சாமில் இடம் பெற்றுள்ள ஒவ்வோர் அறபுச் சொல்லும் சொற்றெடரும் அறபு வடிவத்திலேயே பக்கக் குறிப்புக்களாகத் தரப்பட்டுள்ளமையேயாம். கையேட்டுப் பிரதியின் தொடக்கத்திலும் இறுதியிலும் படல அட்டவணை தரப்பட்டுள்ளது. அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டுள்ள புதூகுச்சாம் பிரதிகளில் அங்குள்ள படலங்களின் எண்ணிக்கை 61 ஆகும். ஆனல் கையேட்டுப் பிரதியில் 60 படலங்களே இடம் பெற்றுள்ளன. அச்சுப் பிரதிகளில் வர்த்தான் போர் புரிப் படலம், வர்த்தான் வதைப் படலம் என இரண்டு படலங்கள் இடம்பெற்றுள்ளன. ஆனல் கையேட்டுப் பிரதியில் இவ்விரண்டு படலங்களிலும் உள்ள செய்யுட்கள் வர்த்தான் வதைப் படலம் என ஒரே படலத்தில் அமைந்துள்ளன. பாறூக்கியாக்காண்டத்தின் இரண்டாம் படலமான அபூவுபைதா தலைமை பூண்ட படலத்தில் 61 பாடல்களே அச்சுப் பிரதியில் தரப்பட்டுள்ளன. ஆனல் கையெழுத்து பிரதியில் இப் படலத்தில் 81 செய்யுட்கள் இடம்பெற்றுள்ளன. கையெழுத்துப் பிரதியில் 30 முதல் 49 வரை உள்ள பாடல்கள் அபூவுபைதா தலைமை பூண்ட படலத்திலும் இடம்பெறவில்லை. ஆனல் கையெழுத்துப் பிரதியில் உள்ள இப்படலத்தில் ஒரு குறிப்புத் தரப்பட்டுள்ளது. அக் குறிப்புக்கிணங்க, இச்செய்யுட்களை அந்தாக்கியா முதற்போர் புரி

படலத்தில் 47-ஆம் செய்யுளுக்குப் பின்னர் சேர்த்துக் கொள்ளலாம் என உள்ளது. இதன்படி இப்பாடல்கள் அந்தாக்கியா முதற்போர் புரி படலத்தில் 48 முதல் 67 வரை உள்ள செய்யுட்களாக அச்சுப் பிரதியில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

பவளக் காட்டிற் கொட்டைக் குப்பத்தைச் சேர்ந்த உபதேசிப் பாவல முதலியார் குமாரரான செல்வராயன் என்பவரின் கையெழுத்துப் பிரதியில் கையெழுத்துப் பிரதியினைத் தயார் செய்தவரின் குறிப்புக்குப் பின்னர் ஒரு செய்யுள் அமைந்துள்ளது. அச்செய்யுளில் முகம்மதிய்யாக் காண்டத்தில் பதினொரு படலங்களும் சித்தீக்கியாக் காண்டத்தில் பன்னிரண்டு படலங்களும் பாறுக்கியாக் காண்டத்தில் முப்பத்தேழு படலங்களும் இடம்பெற்றுள்ளன என்றும் இக்காண்டங்கள் ஒவ்வொன்றிலும் முறையே 965 செய்யுட்களும் (ஒன்பானுறஃதறுபத்தைந்து) 1747 செய்யுட்களும் (ஆயிரத்தெழு நூற்றையெட்டேழு) 4074 செய்யுட்களும் (ஆயிரம் நான்ககத்தெழு பானுன்கு) இடம் பெற்றுள்ளன என்றும் மொத்த செய்யுட்களின் எண்ணிக்கை 6786 (ஆறுயிரத்தறு நூற்றுறமுப்பானுறு) என்றும் குறிப் பிடப்பட்டுள்ளது. இச்செய்யுள் வருமாறு :

பகுபடலம் பன்னொன்று பன்னிரண்டுமுப்
 பானேழு பாட்டொன் பானூ
றஃதறுபத் தைந்தாயி ரத்தெழுநூற்
 றையெட்டே ழாயி ரம்நான்
ககதெழு பானுன்கா றுயிரத்தறு
 நூற்றறுமுப் பானுறும் கொண்ட
முகம்மதியா சித்தீகியாபா றூக்கியா
 காண்ட மூன்று மாமே

இங்கே மொத்த எண்ணிக்கையைக் குறிப்பிடும்பொழுது அமைக் கப்பட்டுள்ள சொல்லாட்சியைப் பார்க்கும்பொழுது இவ்வாறு கூற லாம். ஆறுயிரம் அறுநூறும் அறுமுப்பானும் (நூற்றெண்பதும்) ஆறும் சேர்ந்தே இத்தொகை பெறப்பட்டுள்ளது. இச்செய்யுளில் குறிப்பிட் டாங்கு மூன்று காண்டங்களிலும் இடம்பெற்றுள்ள பாடல்களைக் கூட்டிப் பார்க்கும்பொழுது ஆறுயிரத்து எழுநூற்று எண்பத்தாறு செய் யுட்கள் பெறப்படுவதைக் காணலாம். ஆயிஷா (றலி) அவர்களின் கூற்றுக்கிணங்க அல்குர்ஆனிலே இடம்பெற்றுள்ள திருவாக்கியங் களின் எண்ணிக்கை ஆறுயிரத்து அறுநூற்றறுபத்தாறு என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

# பன்னிரண்டாம் இயல்

## தீன் விளக்கம்

இஸ்லாமிய அடிப்படையில் தமிழில் இயற்றப்பட்ட ஒன்பது காப்பியங்கள் தோன்றிய 15 ஆண்டுகளைக் கொண்ட குறுகிய கால எல்லையுள் ஒன்பதாவதாகப் படைக்கப்பட்ட காப்பியம் தீன் விளக்க மாகும். ஒரு பதிப்பில் இக்காப்பியம் தீன் விளக்கம் என்றும் பிறிதொரு பதிப்பில் தீனெறி விளக்கம் என்றும் பெயர் சுட்டப் பட்டுள்ளது. போர் வருணனைகள் மிகுதியாக உள்ளது இக்காப்பியம். இக்கால எல்லையுள் தோன்றிய காப்பியங்களுள் நான்கினைப் படைத்த காயல்பட்டணச் செய்கு அப்துல் காதிர் நெயினார்ப் புலவர்க்கும் மூன்றினுக்கு ஆசிரியராக அமைந்த மதுரை மீசல் வண்ணக்களஞ்சியப் புலவருக்கும் இலக்கியத் துறையில் ஏற்பட்ட போட்டி இஸ்லாமியத் தமிழ் இலக்கியம் பெருக வழிவகுத்தது எனலாம். இரு புலவர்களும் படைத்த காப்பியங்களுக்குக் கருவாக அமைந்த பொருளைப் பார்க்கும் பொழுது இவ்வுண்மை புலனாகின்றது.

இறை தூதர்களுள் ஒருவரானவரும் அரசர்களுக்கெல்லாம் அரசரான வருமான சுலைமான் நபி (அலை) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இராஜநாயகம் என்னும் பெயரில் தமது முதற் காப்பியத்தைப் படைத்தார் வண்ணக்களஞ்சியப் புலவர். மற்றோர் இறை தூதரும் அல்லாஹ்வின் தோழர் எனப் பொருள்படும் கலீலுல் லாஹ் என்னும் சிறப்புப் பெயரைக் கொண்டவரும் ஹனீப் என்னும் மார்க்கத்தைப் பின்பற்றி வந்தவரும் அறபு மக்களின் நேரடி மூதாதை யருமான நபி இபுறுகீம் (அலை) அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு திருமணி மாலை என்னும் பெயரால் தமது மூன்றும் காப்பி யத்தை உலகுக்கு அளித்தார் சேகுனாப் புலவர் என்றும் புலவர் நாயகம் என்றும் வழங்கப்பட்ட செய்கு அப்துல் காதிர் நயினார் லெப்பை ஆலிம் புலவர். அவர் தம் முதற் காப்பியமான குத்பு நாயகத்துக்குப் பாட்டு டைத் தலைவராக அமைந்தவர் இறைநேசச் செல்வர்களுள் சிறப்பு மிக்கவரான முகியித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (றலி) அவர்களேயா வார்கள். இதனைப் பார்த்த ஹமீத் இப்றுகீம் என்னும் இயற்பெயரைப் பெற்ற வண்ணக் களஞ்சியப் புலவர் தாமும் முகியித்தீன் ஆண்டவர் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ஒரு காப்பியம் வெளி யிடத் திட்டம் வகுத்தார். இதன் பிரதி பலனாக குத்பு நாயகம் முகியித்தீன் புராணம் தோன்றியது. சேகுனாப் புலவரின் மூன்றாவது காப்பியமாக விளங்குவது நாகூர் சாகுல் கமீது ஆண்டவரைப் பாட் டுடைத் தலைவராகக் கொண்ட திருக்காரணப் புராணமாகும். அதன்

பின்னர் பெருமானார் காலத்திலும், அவர்களைத் தொடர்ந்து இஸ்லாமிய ஆட்சி பீடத்தில் அமர்ந்த அபூபக்கர் (றலி) உமர் (றலி) ஆகியோரின் ஆட்சிக் காலத்திலும் சிறியா நாட்டை முஸ்லிம் மக்கள் வெற்றி கொண்ட வரலாற்றினைக் கூறும் காப்பியமாகத் தோன்றியது புதூகுச்சாம். சேகுனாப் புலவரின் மிகப் பெருங் காப்பியமாகத் திகழ்ந்த புதூகுச்சாம் ஒரு வகையில் பார்க்கும்பொழுது உமறுப் புலவர் தமது சீறுப்புராணத்தில் விட்ட இடத்திலிருந்து பெருமானார்(சல்) அவர்களின் வாழ்க்கையை விவரிக்கும் காப்பியமாகவும் அமைந்துள்ளது எனலாம். போர் பற்றிய புதூகுச்சாம் என்னும் காப்பியத்தைத் தொடர்ந்து அதே ஆண்டில் மதுரை, மீசல் வண்ணக்களஞ்சியப் புலவர் போர் பற்றிய ஒரு காப்பியம் படைத்தார். மதீனாவிலே பெருமானார் (சல்) அவர்களின் வழித் தோன்றலாகப் பிறந்து நெடுந்தூரம் பிரயாணஞ் செய்து தமிழகம் அடைந்து அப்பொழுது ஆட்சியில் அமர்ந்திருந்த விக்ரம பாண்டியனுடன் போர் புரிந்து தமிழகத்தின் ஒரு பகுதியை பவுத்திர மாணிக்கப் பட்டணத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த வரலாற்றைக் கூறுகின்றது தீன் விளக்கம் என்னும் காப்பியம். இங்ஙனம் பாண்டி நாட்டின் கிழக்குப் பகுதியில் வைப்பாற்றுக்கும் வைகையாற்றுக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பை ஆட்சி புரிந்தவர் செய்யிது இப்ருகீம் ஷஹீது (ரஹ்) அவர்கள். அவ்விறை நேசச் செல்வர் நல்லடக்கம் செய்யப்பட்ட கல்லறை இராமநாதபுர மாவட்டத்திலே ஏர்வாடி என்னும் இடத்தில் அமைந்துள்ளது. மக்கள் தரிசிக்கச் செல்லும் புனிதத் தலமாக ஏர்வாடி இன்றும் விளங்கிக் கொண்டிருக்கின்றது. இந்த ஏர்வாடி என்னும் பெயர் தீன் விளக்கக் காப்பிய நாயகரின் பிறப்பிடமாக அரபு நாட்டில் திகழும் யர்புத் என்பதன் மரூஉ என்று கூறுவாரும் உளர். யர்பாத் என்னும் பெயருடன் மதீனாவுக்கருகாமையில் உள்ள இடத்தின் பெயரே ஏர்வாடி என்று மருவியது. எனவும் கூறுவர். புதூகுச்சாமும் தீன் விளக்கமும் ஒரே ஆண்டிலே (1821 / 1236) இயற்றப்பட்டுள்ளன.

## பதிப்புக்கள்

ஒரு பதிப்பில் இக்காப்பியத்தின் பெயர் தீன் விளக்கம் என்றும் மற்றொரு பதிப்பில் தீனெறி விளக்கம் என்றும் வந்துள்ளது. காயற்பட்டணத்தைச் சேர்ந்த காலி அலாவுத்தீன் அவர்கள் குமாரர் சோ. முகம்மது அப்துல் காதிறு அவர்களுக்கு அதே ஊரைச் சார்ந்த உசைனுத்தீன் புலவர் என்பவரால் பதிப்பித்துக் கொடுக்கப்பட்டது ஒரு பதிப்பு. அதனை அடிப்படையாக வைத்து இரண்டாம் பதிப்பு கண்ணகுமது மருதூ முகம்மதுப் புலவரால் வெளியிடப்பட்டுள்ளது. அப்பதிப்பு நன்குறச் சீர்திருத்தப்பட்டது என்ற குறிப்பும் அங்கு இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இராமநாதபுரம் வரிசை இபுருகீம்

ருவுத்தரவர்கள் குமாரர் காதிறு சாகிபு என்பவர் கேட்டுக் கொண்ட படியால் அந்த இரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. ஹிஜ்ரி 1309ஆம் ஆண்டு துல்கஃதா மாதம் இரண்டப் பதிப்பு அச்சாகி உள்ளது. ஹிஜ்ரி 1309ஆம் ஆண்டு துல்கஃதா மாதம் 1891 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 28ஆம் தேதி சனிக்கிழமை ஆரம்பமாகி உள்ளது. அவ்விரண்டாம் பதிப்பு அதே ஆண்டு ஜூன் மாத இறுதியில் அல்லது ஜூலை மாதத்தில் அச்சாகி இருத்தல் வேண்டும். இப்பதிப்பின் முதல் பக்கத்தில் இவ்வாறு அச்சிடப்பட்டுள்ளது.

> ''இஃது முகம்மது நபி சல்லல்லாகு அலைகியவசல்லம் அவர்களின் திருமகளார் பாத்திமா நாயகி பயந்த ஆண் மக்களிருவரில் அசனவர்களுக்கிளைய குசைனவர்களில் நின்றும் பதினைந்தாம் தலைமுறையிற் ரோற்றிய செய்யிதிபுருகீமொலியவர்கவ் தென்னிந்தியாவிற் றீனிலையை ஸ்தாபிக்க முத்தாதையான முகம்மது நயினர் சொற்ற கனவின் ரோற்றத்தான் மதீனம் விட்டுப் படையொடும் விக்ரம பாண்டியனர் சியார் எல்கையில் வந்தங்கிருக்கையி லெதிர்த்த சொல்லுமப் பாண்டியன் ருெடர்ந்துசெய் யுத்தச் சரித்திரத்தை தீன் விளக்க மென்ரோர் திருபெயர் கொடுத்துத் தான் பிறந்த மீசற்றண்பதி விட்டுவந்து ஷாகுல் ஹமீதொலி தறுகா விளங்கும் நாகூரில் வாழ்ந்திருந்த வண்ணக்களஞ்சியப் புலவரவர்களியற்றிய தீனெறி விளக்கம்''

இதிலிருந்து தீன் விளக்கம் என முன்பு பதிக்கப்பட்டு அச்சியற்றப் பட்ட காப்பியமே பின்பு தீனெறி விளக்கம் என்ற பெயருடன் இரண்டாம் பதிப்பாக அச்சியற்றப்பட்டுள்ளது என்பது தெள்ளிதிற் புலனுகின்றது.

### காப்பிய அமைப்பு

பத்து நாட்கள் நடைபெற்ற போரின் வருணனையே தீன் விளக்கத்தில் முக்கிய இடம்பெறுகின்றது. ஒவ்வொரு நாளும் நிகழ்ந்த போர் ஒவ்வொரு படலத்தில் வருணிக்கப்பட்டுள்ளது. காப்பியத்தில் இடம்பெறும் கடவுள் வாழ்த்து, நாட்டுப் படலம், நகரப் படலம் என்பனவற்றைத் தவிர்த்துப் பத்துப் படலங்களில் போர் நிகழ்ச்சிகளும் ஏனைய ஒன்பது படலங்களில் பிற செய்திகளும் இடம்பெற்றுள்ளன. தலைமுறை, திருவாக்கருளப் பெற்றமை, சமர் யாத்திரை மேற் கொண்டமை, விக்கிரம பாண்டியனுக்குத் தூதனுப்பியமை, செய்யிது இபுருகீம் வொலியுல்லாஹ் அரசாட்சி புரிந்தமை, செய்யிது இசுகாக்குத் திருமணம் புரிந்தமை, செய்யிது இபுருகீம் ஒலியின் மறைவு, தலைமுறை விருத்தியானமை, சேதுபதி மகாராசா சந்ததி பெற்றமை என்பன ஒன்பது படலங்களின் விவரிக்கப் பட்டுள்ளன. இவ்வெட்டுப்

படலங்களுள் முதல் நான்கு படலங்களும் போர் நிகழ்ச்சிகளின் வருணனைக்கு முன்னரும் பின்னைய ஐந்து படலங்களும் போர் நிகழ்ச்சிகள் விவரிக்கப்பட்ட பின்னரும் கதை தொடர்பான செய்திகள் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். 22 படலங்களில் மொத்தம் 1715 செய்யுட்கள் தீன் விளக்கத்தில் இடம் பெற்றுள்ளன.

**கடவுள் வாழ்த்து :**

ஏனைய காப்பியங்களில் உள்ளன போன்ற புகழ் பாக்களோடு வேறு சிலரையும் புதிதாகச் சேர்த்துப் பாடப்பட்ட துதிபாக்களையும் கொண்டுள்ளது இக்காப்பியம். முகியித்தீன் ஆண்டகையின் ஆசானைப் பற்றி வேறு எந்தக் காப்பிய ஆசிரியரும் கடவுள் வாழ்த்துப் படலத்தில் குறிப்பிடவில்லை. ஆனால் வண்ணக்களஞ்சியப் புலவர் முகியித்தீன் ஆண்டகையின் உஸ்தாதை (குருவை) இவ்வாறு புகழ்ந்து பாடியுள்ளார்.

நிரவுறு தவத்தோர் நெஞ்ச நேத்திர மணியொப் பாகத்
தரமுறு மப்துல் காதிர் முகிய்யித்தீன் தமக்குஸ் தாதாய்
வரமுறு மபூ சகீதுல் மகுசூமி மலர்பொற் பாதஞ்
சிரமிசை யிருத்தி வாழ்த்திச் செந்தமிழ்ப் பனுவல் செய்வாம்

(கடவுள் வாழ்த்து : 14)

இப்பாடலைத் தொடர்ந்து முகியித்தீன் ஆண்டகை அவர்களும் (15) இக்காப்பியத் தலைவர் செய்யது இபுருகீம் சகீது அவர்களும் (16) அவர்கள் தம் புதல்வர் செய்யி தபூத்தாகிர் அவர்களும் (17) திருச்சி நத்தரொலி அவர்களும் (18) சாகுல் கமீது ஒலி அவர்களின் குருவான முகம்மது கவுது அவர்களும் (19) சாகுல் கமீது ஒலி அவர்களும் (20) அவர்களுடைய புதல்வர் செய்கு யூசுபு அவர்களும் (21) சதக்கத்துல்லா அப்பா அவர்களும் (22) ஏனைய வலிமார்களும் (23) புகழப்பட்டுள்ளனர் மீன் கொடியை உடையவனான பாண்டிய மன்னனைத் தோற்கச் செய்து ஆட்சி புரிந்தவர் செய்யிது இபுருகீம் அவர்கள் (ஏர்வாடி என்று மருவிய) ஏறுபடியினை வந்தடைந்தவர் என அவர்கள் இவ்வாறு புகழப்பட்டுள்ளார்கள்.

மீனவன் றனையும் வென்று மேதினிக் கோர்கோ லோச்சிப்
பானலார் வயல்சூழ் ஏறுபடியின்வந் தடைந்தோர் தங்கள்
ஈனநோ யகற்றுஞ் செய்யி திபுருகீம் ஷஹீது பாதம்
ஆனபங் கயங்க ளென்ற னகத்தினின் மிகத்து திப்பாம்

(கடவுள் வாழ்த்து 16)

**உரை வழங்கியர்**

நல்ல இபுருஹீம் சாகிபு என்பவர் இக்காப்பியத் தலைவர் செய்யிது இபுருகீம் மரபில் வந்தவர். அவர்களுடைய வரலாறு எல்லாம் நன்கு அறிந்தவர். அந்த வரலாற்றினை அவர் உரையாக வைத்திருந்தார். அவருடைய மைந்தர்களாகிய முத்து இபுருகீம் லெப்பையும் வரிசை இபுருகீம் லெப்பையும் செய்கு இப்ருகீம் லெப்பையும் அவ்வுரையை விளக்கித் தந்தனர். அது ஓர் அம்மானை நூலாக அமைந்திருந்தது. அதனையே ஆசிரியர் இவ்வாறு விருத்தச் செய்யுள்களால் பாடியுள்ளார்.

செய்யிதிபு ருகீமொலி வரவா றெல்லாந்
தெளிந்தவர்தம் மரபில்வருஞ் செம்ம லானோர்
துய்யநல விபுருகீம் சாகி பென்னுந்
தோன்றலுரைசெய் ததைத்தம் மைந்த ராக
வுய்யமுத்து இபுருஹீம் லெப்பை தீரன்
உடன்வரிசை யிபுருஹீம் லெப்பை வள்ளன்
மெய்யியல்சேர் செய்குஇபு ருஹீம் லெப்பை
விரித்துரைக்க வம்மனையாய் விளங்கிற் றன்றே

(கடவுள் வாழ்த்து : 24)

**நூலின் பெயர்**

இக்காப்பியத்தின் பெயர் காப்பியத்தின் இரண்டு வெவ்வேறு பதிப்புக்களில் வித்தியாசப்பட்டு வந்துள்ளது. ஒன்று தீன் விளக்கம் என்றும் மற்றது தீனெறி விளக்கம் என்றும் பதிப்பிக்கப்பட்டுள்ளன. முஸ்லிம் அல்லாதார் தீன் என்னும் அறபுச் சொல்லின் கருத்தைப் புரிந்து கொள்ளாமல் விட்டால் அது வேறு விதமாகக் கருத்துக் கொடுக்கும் என்பதனாலோ என்னவோ இரண்டாம் பதிப்பில் அதன் பெயர் தீனெறி விளக்கம் அல்லது தீனெறி விளக்கம் என்கிற புராணம் எனப் பெயரிடப்பட்டிருப்பதைக் காணலாம். தீன் என்னும் தமிழ்ச் சொல் உணவு என்னும் பொருளைத் தருமாதலால் இந்த நிலைமை உருவாகி இருக்கலாம். தீன் என்பது இஸ்லாத்தையே சுட்டுகின்றது. ஆனால் இக்காப்பிய ஆசிரியர் மதுரை, மீசல் வண்ணக்களஞ்சியப்புலவர் இக்காப்பியத்தை தீன் விளக்கம் என்றே குறிப்பிட்டுள்ளார். தாம் அதன் பெயராக தீன் விளக்கம் என்பதைக் குறிப்பிட்டதாக ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்:

அம்மனையா யிருந்ததனை யவர்தம்பால
ராகிவளர் முசாவிர்களாய்த் தோன்றி னோர்கள்
தம்மனத்தின் மகிழ்ச்சிபொங்கப் படலஞ் சேர்ந்த
தானுலவு காவியமாய்ச் சாற்ற வென்று

செம்மைதர வுரைத்ததனு லவ்வா ருகச்
சிறந்தவின்பம் தருமதுர பாகந் தோன்ற
வண்மைதரு தீன்விளக்க மென்னும் நாம
மகிதலத்தி லேவிளங்க மவுன்றிட் டேனே

(கடவுள் வாழ்த்து : 25)

இக்காப்பியம் அரங்கேற்றபட்டமையைக் குறிப்பிடும்பொழுது அதன் பெயரை தீன் விளக்கம் என்றே ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்,

பண்புசேர்ந் திடுமோர் தீன்விளக்கம்
பரிவுட னரங்கமேற் றியதே

(கடவுள் வாழ்த்து : 27)

**ஆசிரியர் பெயர் :**

ஒரு செய்யுளில் ஆசிரியர் தமது பெயரைக் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு குறிப்பிடும்பொழுது தாம் மீசலைச் சேர்ந்தவர் எனக் கூறியுள்ளார். முதுகுளத்தூர் பதியில் உள்ளது மீசல் என்பர். மதுரையையும் கூடல் எனக் குறிப்பிட்டுள்ளார். தாமரை மலர்கள் நிறைந்த வாவிகளால் சூழப் பெற்றது மதுரை என நகரை வருணித்துள்ளார். தமது இயற்பெயரான ஹமீது இபுருஹீம் என்பதனைக் கூருது பெரு வழக்கைப் பெற்றிருந்த பெயரான வண்ணக்களஞ்சியம் எனக் குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

புதுமைநாட் டியமுகம்ம துறசூலை வலின்மதின புரத்தி னின்று
மதுரைநாட் டெழுந்தசெய்யி திபுருகீம் ஷஹிதுவர லாறதெல்லாங்
கதிரிஞட் டுவதாகக் காவியஞ்செய் தான்கமலத் தடஞ்சூழ் கூடல்
அதிபனூற் புலவரன்பன் மீசல்வண்ணக் களஞ்சியமா ராய்ந்து தானே

(கடவுள் வாழ்த்து : 28)

**அவையடக்கம்**

புலவர் அவையடக்கம் கூறும்பொழுது வெவ்வேறு விதமாகக் கூறிச் செல்வார். உவமைகள் காப்பியத்துக்குக் காப்பியம் வேறுபடுகின்றன. வண்ணக்களஞ்சியப் புலவர் கற்றறிந்த செந்தமிழ்ப் புலவர்களை தந்தம் உள்ள ஆண் யானைக்கும் இக்காப்பியம் இயற்றிய தம்மை ஒரு சங்குக்கும் உவமித்துள்ளார். தந்தத்தையுடைய ஒரு யானையின் முன்னர் கொம்புடன் ஒரு சங்கு நிற்றல் போன்றதே பாவாணர் முன் கவிதை பாட முற்பட்ட தமது நிலை எனத் தாழ்மையாக அவையடக்கம் கூறியுள்ளார் ஆசிரியர். வண்ணக்களஞ்சியப் புலவரின் அவையடக்கப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வீரி யந்தரு கோடுள வேழமு
னூரி யுங்கொம் புடனெதிர் நிற்றல்போற்
சீரி யைந்துணர் செந்தமிழ் வாணர்மு
னேரி யைந்தென யானு நிகழ்த்தவே

(கடவுள் வாழ்த்து : 29)

கொடை நாயகர் :

இக்காப்பியத்தை இயற்றுவதற்காக நிறையப் பொருளீந்துள்ளார் வரிசை இபுருகீம் லெப்பை என்பவர், செய்யிதிபுருகீம் லெப்பை என்பவரின் புதல்வர். அவர் பெருஞ் செல்வந்தர். அவர் கற்பக தருவைப் போன்றவர். இல்லையென்னது வழங்குபவர். அவர் இக் கவிதை பாட நிறையப் பொருள் ஈய்ந்தார். அதன் பயனாக அவருடைய புகழ் எல்லா இடங்களிலும் பரவியது. இக்கருத்துக்களையே ஆசிரியர் வண்ணக் களஞ்சியப் புலவர் ஒரு செய்யுளில் இவ்வாறு எடுத்துக் காட்டியுள்ளார் :

ஆதிபதி செய்கு இபுருகிம் லெப்பை
அருளியதோர் செய்யிதிபு ருஹிம் லெப்பை
நீதிபதி யமுதகுண பதிமாருத
நேயவர பதிநிறைசெல் வத்தி னேனென்
ருேதியல்சேர் செய்யிதிபு ருஹீம் லெப்பை
யுதவியருள் வரிசையிபு ருஹிம் லெப்பை
மாதிருவைந் தருவெனவே நிதிக ளீய்ந்தார்
வையகத்தில் கீர்த்திமிக வளரத் தானே

(கடவுள் வாழ்த்து : 26)

நாடும் நகரும் :

தீன் விளக்கம் என்னும் இக்காப்பியத்தில் மதீன நாடும் நகரப் படலத்தில் மதீன நகரும் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம்.

சீர்தரு முலகி யாவுஞ் செய்துகாத் தருள்வோ னன்பு
சேர்தரு விலாயத் தோங்கித் திகழ்செய்யி திபுரு ஹீம்பூந்
தார்தரு வரைத்திண் டோளார் தங்கிவாழ்ந் திடுவதான
வேர்தரு மதீன நாட்டி னியல்வளஞ் சிலசொல் வாமே

என நாட்டுப் படலத்தில் முதலாஞ் செய்யுளில் மதீன நாடும்

ஆரண முதவு தனிப்பொரு ளிறையோ
னருளொளி திரண்டொரு வடிவாய்ப்
பூரண நபிக ளெவர்க்குமோ ரரசாய்ப்
புண்ணியப் பொருளினுட் பொருளாய்

வாரணத் தரசர் தொழுமுகம் மதுவாம்
வள்ளல்செங் கோல்புரிந் தனந்தங்
காரணப் புதுமை விளக்கும்விண் மணியிற்
கதிர்விரி மதீனமா நகரம்

என நகரப்படலத்தில் மதீன மாநகரமும் வருணிக்கப்பட்டுள்ளன.

மதீன மாநகரின் மக்களின் கல்வி நிலையைக் கற்பனை நயத்தொடு விவரித்துள்ளார் காப்பிய ஆசிரியர். நாகண வாய்ப் புட்களும் கிளிகளும் மக்கள் செய்யவேண்டியவை இவை, தவிர்க்கவேண்டியவை இனையென வாய்விட்டுக் கூறின. ஒப்பற்ற மறையிலே உள்ளவற்றைக் கற்றுத் தேர்ந்து இங்ஙனம் ஒலித்தன. பறவைகளே இவ்வாறு ஆராய்ந்து கூறுகின்றனவாயின் அந்நகரில் வாழும் ஆறறிவுடைய மக்களின் அறிவு எத்தகையது என வரையறை கூறத் தகுதியுடையோர் யாவர் உள்ளனர்? அவர்களுடைய அறிவின் ஆழத்தை ஒருவராலும் அளந்து இவ்வளவு என்று கூறமுடியாது என வியப்புடன் ஒரு பாடலில் இவ்வாறு இக்கருத்துக்களை அமைத்துப் பாடியுள்ளார் ஆசிரியர் :

பூவைகள் கிள்ளை யாவும்
பொருவரு மறைநூ லாய்ந்திட்
டேவல்கள் விலக லீதென்
றியம்பிலந் நகர மீது
மேவிய மாந்தர் கல்வி
வியப்பையு மளவீ தென்னப்
பூவுல கதனி லியாரே
புகன்றிடத் தக்க தாமே

(நகரப் படலம் : 12)

மக்காவைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அங்குள்ள மாட மாளிகைகளின் உச்சி சந்திரனைத் தொடுமளவுக்கு உயர்ந்துள்ளது என இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மதிதொடு சிகர பார மாடமா ளிகைசெ றிந்த
புதியவ னருள்சேர் மக்கா ...

(சமர் யாத்திரைப் படலம் : 54)

விண்ணவர் கண்ணியப்படுத்தும் நகர் மக்கா. அத்தோடு அவர்கள் அதனைப் புகழ்ந்தேத்துவர்.

மதித்து விண்ணவர் துதித்திடு மக்கமா நகரில் ...

(இரண்டாம் போர் புரிப் படலம் : 133)

மதிநாவைப் பற்றியுள்ள வருணனைகள் அனைத்தும் சுருக்கமானவையாகவே உள்ளன. உலகில் உள்ள சுவர்க்கலோகம் மதீநா என்பது

அகில பொற்பதி மதினம் ...

(திருவாக்கருளிய படலம் : 65)

எனவும்

...மதின பொற்பதிக்கே.

(திருவாக்கருள் படலம் :75)

எனவும் குளிர்ச்சியான மழையினைப் பெறும் பொழில்கள் நிறைந்த நகரம் மதீநா என்பது

சீத வான்பொழில் சூழ்மதிநா...

(திருவாக்கருள் படலம் : 76)

எனவும் மணங்கமழும் மலர்கள் நிறைந்த பூஞ்சோலைகளை உடையது மதீநா என்பது

மருமலர்ப் பொழிகள் சூழு மதீநா மாபுரம்

(சமர் யாத்திரைப் படலம் : 52)

எனவும் புகழைத் தருகின்ற அழகான நகர் மதீனம் என்பது

இசைதரு மதீன மென்னு மெழினகர்...

(சமர் யாத்திரைப் படலம் : 70)

எனவும் மதீன மாநகரம் வளம் மிக்கது என்பது

வளந்தரு மதீனம்...

(அரசாட்சிப் படலம் : 57)

எனவும் தீன் விளக்கத்தில் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். மக்காவும் மதீநாவும் தனித்தனியே நகரங்களைச் சுட்டப் பல இடங்களில் ஆளப்பட்டுள்ளன.

பாண்டி நாட்டைப் பற்றிப் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. மதீனம் என்னும் நகருக்குத் தென்கிழக்குத் திசையில் அதிக தூரத்தில் அமைந்துள்ளது பாண்டி நாடு என்பது தீன் விளக்கத்தில் இவ்வாறு குறிக்கப்பட்டுள்ளது.

சிறந்திடு மதீன மென்னுமிப் பதிக்குத்
தென்கிழக் காகிய திசையி
னறைந்திடு மிகுதூ ரத்தினி ளெருநா
டதன்பெயர் பாண்டி நாடாகும்

(திருவாக்கருளிய படலம் : 13)

இசைதரு மதீன மென்னு மெழினகர் தனக்குத் தென்கீழ்த்
திசையினிற் பாண்டி நாடென் றுளதொரு தேய மாங்கே

(சமர் யாத்திரைப் படலம்: 70)

வைகை நதியால் வளம் பெற்று விளங்குவது பாண்டி நாடு என்பது

எதிர்மலே வனங்கள் போக்கி யிருநிதி கொழிக்கும் வைகை
நதிவளம் பெருகும் பாண்டி நாட்டில் வந்துற்ருரன்றே

(சமர் யாத்திரைப் படலம் : 153)

பாண்டி நாட்டைத் 'தமிழ் பாண்டியனிலம்' (விக்கரம பாண்டி யனுக்குத் தூதனுப்புப் படலம் : 52) என்றும் 'சொல்லு செந்தமிழ் நாட்டினே' (முதற் போர் புரிப் படலம் 71) எனவும் ஆசிரியர் குறிப் பிட்டுள்ளார்.

பாண்டி நாட்டின் தலேநகராகத் திகழ்ந்த மதுரை நகர் கூடல் எனப் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. கூடல் நகரின் வளம் அங்குள்ள பூஞ்சோலேகளால் சிறந்து விளங்குகிறது என்பது.

மருமலர் பொழில்சூழ் கூடல் வளம் பதி ...

(கடவுள் வாழ்த்து : 17)

என்றும்

கமலத் தடஞ்சூழ் கூடல் ...

(கடவுள் வாழ்த்து : 28)

என்றும்

... நளினக்
குமுத வாவிகள் சூழ் வளம்பல செறியுங் கூடனுட்டு

(திருவாக்கருளிய படலம் : 31)

பங்கயத் தடஞ்சூழ் கூடல்

(அரசாட்சிப் படலம் : 72)

... வானி
னீண்ட சோலேசூழ் கூடல்

(செய்யிதிபுருகீமொலி சகீதுப் படலம் : 28)

என்றும் அந்நகரிலே மாட மாளிகைகளும் ஆகாயத்தைத் தொடுமளவுக்கு உயர்திருந்தன என்பது

மாடமா ளிகைவிண் ணோங்கி மதிதொடும் வளம்குலாவு
கூடல் ...

(ஐந்தாம் போர் புரிப்படலம் : 2)

என்றும் அது முதுமையான நகரம் என்றும் அழகு மிக்கது என்பதும் தெற்கே உள்ளது என்பதும்

முன்னிருந் தெழிற்றென் கூடன் முதுநகர் ...

(செய்யிதிபுருகீம் ஒலி சகீதுப் படலம் : 2)

என்றும் விதந்தோதப் பட்டுள்ளது.

மதுரை நகரும் பல இடங்களில் சுட்டப்பட்டுள்ளது.

திறந்தரும் அரசு பதியெனு மதுரைத் தென்னகர்

(திருவாக்கருளிய படலம் : 13)

விளங்கு தென் மதுரை...

(சமர் யாத்திரைப் படலம் : 177)

மதீனாவிலிருந்து தமிழ்நாடு வந்து விக்கிரம பாண்டியனுடன் போர் புரிந்து தமிழ்நாட்டின் ஒரு பகுதியைக் கைப்பற்றி செய்யது' இபுருஹிம் அவர்கள் ஆட்சி செய்த நகர் பௌத்திரமாணிக்கப் பட்டணம் என தீன் விளக்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. கி.பி. 1239இல் அரசு கட்டில் ஏறிய மாறவர்மன் சுந்தரபாண்டியன் வழங்கிய ஒரு நன்கொடை பற்றிய கல்வெட்டு திருப்புல்லாணிக் கோவிலின் கோபுர வாசலில் அமைந்துள்ளது. அந்தக் கல்வெட்டில் பவுத்திர மாணிக்கப்பட்டணம் குறிப்பிடப்பட்டுள்ளது. 'கீழ் செம்பி நாட்டுப் பவுத்திர மாணிக்கப் பட்டின கீழ்பால் சோனக சாமந்தப்பள்ளி...' இந்தப் பவுத்திர மாணிக்கப்பட்டணமே சுல்தான் செய்யிதி இப்ருஹிமின் ஆட்சியில் தலை நகராகத் திகழ்ந்தது. இந்நகர் பற்றிய குறிப்புகள் வரலாற்று நூல் களிலே மிக அருமையாகவே இடம் பெற்றுள்ளன. தீன் விளக்க ஆசிரியர் வண்ணக்களஞ்சியப் புலவர் தமது காப்பியத்தில் பவுத்திர மாணிக்கப்பட்டணத்தின் மதில்களையும் கொத்தளங்களையும் மலைக் குன்றுகளையும் குறிப்பிட்டு அவற்றின் உயரத்தைக்கற்பனை நயத்துடன் அவற்றில் முகில்கள் அடை கிடக்கின்றன என்றும் அந்நகரின் பெயர் பவுத்திர மாணிக்கப் பட்டணம் என்றும் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மாந்தர்கா னடைக்கெண்காத நீள்வழியாய வகுப்பதா மதிலுயரிஞ்சி
யாய்ந்தகா வதத்தி நீண்டுள தாமங் கதிலுள கொத்தளத்திரள்கள்
சேந்தவொண் கனகக் கிரிகள் போற்றுலங்கிச்
செழுமுகில் பலவடை கிடக்கும்
பாந்தளுங் கிரியும் புகழத னமம் பவுத்திர மாணிக்க நகரே

(திருவாக்கருளிய படலம் : 15)

ஏனைய பாடல்களில் பவுத்திர மாணிக்கப் பட்டினம் இவ்வாறு குறிப் பிடப்பட்டுள்ளது.

வாறெலாம் பவுத்திர மாணிக்கப் பதி

(சமர் யாத்திரைப் படலம் : 157)

பவுத்திர மாணிக்கப் பட்டினத் தின்மேற் காகவுற்ற
நவத்துறு புன்னைக் காயற் கப்புற நவிலோர் காதம்

(சமர் யாத்திரைப் படலம் : 160)

பவுத்திர மாணிக்கப் பட்டினம் அமைந்துள்ள இடத்தை நன்கறிந்த ஒருவனிடம் சுல்தான் இபுருகீம் ஷகீது அவர்கள் அந்நகர் பற்றிய விவரங்களைக் கேட்டார். அவனும் அந்நகர் அமைந்துள்ள இடம் கிழக்குப் பக்கத்திலே மூன்று காதத்தொலைவில் கத்தலைக் கடலோரத்தில் மாட கூடங்கள் உள்ள ஒளி பிரகாசிக்கும் பவுத்திர மாணிக்கப் பட்டினம் உள்ளது எனக் கூறினன். இதனையே ஆசிரியர்

இத்திசை யினுக்குக் கீழ்பா லியன்றமுக் காதத் தப்பாற்
கத்தலை கடலோ ரத்திற் கதிர்மணி மாடகூட
மைத்தவிண் ணெளிர்ப வுத்ர மாணிக்க நகர்...

(சமர் யாத்திரைப் படலம் : 163)

எனக் குறிப்பிட்டுள்ளார். மற்ருெரு பாடலில் அந்நகரில் விக்ரம பாண்டியன் ஆட்சி செய்தமை

விளங்குதென் மதுரை யாள்வோன் விக்ரம பாண்டியன்சீர்
வளந்த ருமொரு பவுத்ர மாணிக்க நகரி னுற்ருன்

(சமர் யாத்திரைப் படலம் : 177)

எனவும் வருணிக்கப்பட்டுள்ளது.

சுல்தான் செய்யிது இபுருகீம் அவர்கள் ஆட்சி நடத்தியது பவுத்திர மாணிக்கப்பட்டினம் என்பது

விளங்க நால் யூகஞ் சூழழ விண்ணவர் களிப்புப் பொங்க
வளங்குலா வியபவுத்ர மாணிக்க நகர வீதி
கிளர்ந்தசோ திகளு லாவக் கிம்புரி கோட்டு நால்வாய்க்
குளந்தரு கரட தானக் குஞ்சர நடத்தி ஞரே

(அரசாட்சிப் படலம் : 9)

எனவும் அப்பெரியார் செங்கோலோச்சியமை

மருவுசீர் பவுத்ர மாணிக் கப்பட்டணத்திற்
றிருமய னடனஞ் செய்யத் தெளிந்த நூன் மறையோர் மேலோர்
மரபினர் புலவர் சூழ வானவர் மகிழ்ந்து வாழ்த்த
இருநிலந் தழைக்க வோங்கி யேகசெங் கோல்பு ரிந்தார்

(அரசாட்சிப் படலம் : 39)

எனவும் அந்நகர மதில்கள் வானளவும் உயர்ந்திருந்தன என்பது

வானுயர் மதிற்ப வுத்ர மாணிக் கநகர் ...

(அரசாட்சிப் படலம் : 69)

என்றும் நெய்தல் நில மலையோரத்தில் அந்நகர் அமைந்திருந்தது என்பது

... குழகரும் புதிர்க்கும் புன்னை
நிவப்புறு கண்டல் வாய்ந்த நெய்தலா மலையோ ரத்திற்
பவுத்திர மாணிக் கன்பட் டினத்தினிற் சேர்ந்தா ரன்றே

(செய்யிதிபுருஹீமொலி சகீதுப் படலம் : 8)

என்றும் விவரிக்கப் பட்டுள்ளது.

ஒரு செய்யுளில் ஆசிரியர் பவுத்திர மாணிக்க பட்டினத்தை சுவர்க்கத்துக்கு ஒப்பிட்டுள்ளார் இவ்வாறு

உளஞ்செ றிந்திடு வீரமோ டெழுந்து பொன்னூர் போல்
வளஞ்செ றிந்திடு பவுத்திர மாணிக்க நகர் ...

(செய்யிதிபுருகிமொலி ஷஹீதுப் படலம் : 54)

எல்லாச் சீர்களையும் பெற்று விளங்கியது பவுத்திர மாணிக்கப்பட்டணம் என்பது

நல்கு சீர்வளர் பவுத்திர மாணிக்க நகரம்

(செய்யிதிபுருஹிமொலி ஷஹீதுப் படலம் : 66)

செய்யிதிபுருகீம் அவர்கள் அறபு நாட்டிலிருந்து அறபுக் கடலைக் கடந்து கேரளக் கடற்கரையை அண்மினுர்கள். அவர்களுக்குத் தென்பட்ட நகர் கண்ணூர். அதனையே

சொரியுநீள் வளஞ்சேர் கண்ணூர்க் கரைமிகு தொலையிற் ருேன்ற

(சமர் யாத்திரைப் படலம் : 150)

நன்குயர் வளஞ்சேர் கண்ணூர் நாட்டெல்லைகை ஒழுகி நீங்கி

(சமர் யாத்திரை படலம் : 150)

என ஆசிரியர் வருணித்துள்ளார். அங்கு இருந்த புறப்பட்ட சுல்தானும் தோழர்களும் கேரளத்தைச் சேர்ந்த கொச்சியில் வந்தனர் என்பது இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

கிண்கிணிப் புரவி யூர்ந்து கேரள தேய மான
குங்குமச் சோலை சூழுங் கொச்சியின் வந்து சேர்ந்தார்
(சமர் யாத்திரைப் படலம் : 150)

அங்கிருந்து கொல்லம் வந்தமை

துளிமதுப் பொழியுஞ் சோலை சூழுமப் பதியி லன்று
களிறொடு சேனை வைகிக் கதிரவ னுதித்த பின்னர்
கிளர்மணிப் புரவி யூர்ந்து கேரள தேயந் தன்னில்
வளர்நெடுந் தூர நீங்கி வளந்தரு கொல்லஞ் சேர்த்தார்
(சமர் யாத்திரைப் படலம் : 151)

என விவரிக்கப்பட்டுள்ளது. விளிஞ்சம் என்னும் இடத்துக்கு வந்தமையைக் குறிப்பிட்ட ஆசிரியர் அவ்விடம்

வெங்கய மதங்கள் சிந்த விளிஞ்சத்தின் மேவி னூரே
(சமர் யாத்திரைப் படலம் : 152)

எனச் சுட்டப்பட்டுள்ளது.

**பெண்கள் பற்றிய வருணை :**

ஏனைய காப்பியங்களில் உள்ளன போன்று பெண்கள் பற்றிய வருணனை தீன் விளக்கத்தில் இடம்பெறவில்லை. ஆனால் செய்யிது இசுஹாக்கு என்பாரின் திருமணத்தை வருணிக்க முற்பட்ட வண்ணக் களஞ்சியப் புலவர் இலக்கிய மரபினைத் தழுவியப் பெண்கள் பற்றிய வருணனையை இடம்பெறச் செய்துள்ளார். செய்யிது இசுஹாக்கு என்பாரின் திருமண ஊர்வலம் வருணிக்கப்பட்டுள்ளது. அந்தத் திருமண ஊர்வலத்தைக் கண்டு களிப்பதற்குப் பெண்கள் வந்திருந்தனர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அங்ஙனம் திருமண ஊர்வலத்தைக் கண்டு களிக்க வந்தவர்களுள் ஏழு பருவங்களையும் சேர்ந்த பெண்கள் இருந்தனர் என்பது இக்காப்பியத்தில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

மணமகன், செய்யிது இசுஹாக்கு என்பார் ஊர்வலம் வந்தார். அவர் யானை மீது பவனி வந்தார். அங்கே பேதை ஒருத்தி நின்றாள். விள்ளலா முலையை உடையவள். முதுக் குறைந்தவள். பெருக்காத முலையை உடையவள். மழலைச் சொற்களையே பேசிக் கொண்டிருப்பவள். யானை மீது மணமகன் பவனி வருவதைக் கண்டு தன்னையும்

அந்த யானை மீது ஏற்றும்படி தன்னோடிருந்த தாயாரைக் கேட்டுக் கொண்டிருந்தாள். வேறு எந்தச் சொல்லேயும் கேட்காதவளாக இருந் தாள். இதனையே வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு பாடி யுள்ளார்.

வள்ள லார்வரு வீதியின் மண்ணினுண் மலைபோல்
விள்ள லாமுலைக் குதலைவாய்ப் பேதையோர் மின்னாள்
உள்ள மானதிங் கனுப்பினு ளுக்கமீ துறைந்து
தெள்ள வேழமீ தேற்றென வேறில செவிக்கே

(செய்யி திசுஹாக்கு மங்கலப் படலம்: 37)

மற்றவள் பெதும்பை. அவளுடைய முலைகள் மலைக்குன்று போன்றவை. திருமண ஊர்வலத்தைப் பார்த்ததும் மயக்கம் ஏற்பட்டது அவளுக்கு. தனது தோழியுடன் உரையாடினாள். தோழியும் தனது நிலையும் அதுவென ஒத்துக்கொண்டாள். இச்செய்யுள் பெதும்பையின் உளப்பாங்கை குறிக்கின்றது.

குன்றைப் போன்முலை யினர்குழு வினின்மயற் கொடுமை
யன்றைக் கேவரத் துடங்கிய பெதும்பையோ ரன்ன
மின்றைக் கேமுலை தடித்ததே தெனச்சகி யிடத்தி
லொன்றக் கூறின ளெனக்குமவ் விதமென வுணரத்தாள்

(செய்யிதி சுஹாக்கு மங்கலப் படலம்: 38)

பேதை பெதும்பையை விடச் சற்று வயதில் மூத்தவள், மங்கை. தசை நாறும் கூர்மையான வேலைப் போன்ற விழிகளை உடையவள். திருமண ஊர்வலத்தைக் கண்டதும் நெஞ்சில் தானும் மணம் புரிய வேண்டும் என்று நினைத்தாள். அதனால் மயங்கினாள். உடனே தாயிடம் வந்தாள். அப்பெரியாருக்குத் தன்னையும் மணம் புரிந்து கொள்ளச் சொல்வாய் என்று இடைவிடாது கூறிக்கொண்டிருந்தாள். இதனையே மற்றொரு செய்யுளில் விவரித்துள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர்.

நிணம்பு ரிந்திடு வேல்விழி மங்கைநெஞ் சகத்தில்
மணம்பு ரிந்திட மயங்கியே தாயுழை வந்து
குணம்பு ரிந்திடு செம்மலெந் தனையுமே கூட
மணம்பு ரிந்திடச் சொல்லென வோய்ந்திலள் வாயே

(செய்யி திசுஹாக்கு மங்கலப் படலம்: 39)

அடுத்து நின்றவள் மடந்தை. முன்னைய மூவரையும்விட அறிவிற் கூடியவள் குங்குமக் கலவை பூசப்பட்ட கொங்கைகளைக் கொண்டு காட்சி அளித்தாள். மணமகன் அணிந்திருந்த மாலையிலிருந்து ஒரு மலரைத் தனக்குத் தரும்படியும் தந்தால் அதனைத் தனது கூந்தலில் அணிந்து கொள்ளுவேன் எனக் கூறுவதுபோல் நடந்தாள். இதனையே ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்.

குங்கு மங்கள பங்களு முதிர்ந்தன கொங்கை
யங்க மெங்கணும் காய்ந்திதீ தகன்றிட லணியிற்
றங்கு வண்டு காளோர்மலர் தருவிரென் றுருகி
மங்கு லங்குழல் சோர்ந்திடத் தொடர்ந்தனள் மடந்தை

(செய்யிதிசுஹறாக்கு மங்கலப் படலம் : 40)

முன்பு குறிப்பிட்ட நால்வரையும் விட அனுபவம் மிக்கவள் அரிவை. அவள் கோபப்பட்டாள். சத்தமிட்டாள். முன்பு எப்பொழுதும் காணாத காட்சி அது. அத்தகைய காட்சியின் மூலம் பெண்களுடைய அறிவு பறி போய்விட்டது. பெண்கள் மயக்கினர். மயக்கம் என்னும் கடலில் மூழ்கினர். இங்ஙனம் தம்மை ஏமாற்றவோ இப்பெரியார் பவனி வந்தார் என வானவர்க்குக் கூடக் கேட்குமளவுக்குச் சத்த மிட்டுக் கூறினாள். இதுவே இச்செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது.

மண்டு பாவையர் மயற்கடன் மூழ்கிட வறிவைப்
பண்டு காண்கிலாக் காட்சியைக் காட்டியே பறித்துக்
கொண்டு போகவோ வந்தன ரென்னவே குறுகி
யண்டர் காதினும் விழக்கொதித் தறைந்தன ளரிவை

(செய்யிதிசுஹறாக்கு மங்கலப் படலம் : 41)

தெரிவையின் அனுபவம் வேறுவிதமானது. மணமகன் பவனி வருவதைக் கேள்வியுற்றதும் அந்தக் காட்சியைக் கண்டுகளிக்க ஓடோடி வந்தாள். ஆதலினால் பூவை மறந்து வந்துவிட்டாள். ஆகையினாலே அந்த மலரைத் தன்னிடம் தந்திடுமாறு வேண்டினாள். அவ்வாறு தந்தால் தனக்கு அக்காட்சியைப் பார்த்ததனால் ஏற்பட்ட காமம் என்னும் காய்ச்சலை அகற்றி விடுவதாகக் கூறினாள். அழகிய சுந்தரி அங்கு வந்தமை இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

வருபெ ரும்பவ னியையுரைத் திடின்மனம் பதறி
உருவி ளங்குபூ வையைமறந் தோடிவந் தனளென்
கரமி ருத்திடிற் றாதுவி டேன்றருங் காமச்
சுரம கற்றுவ னென்றனள் சுந்தரத் தெரிவை

(செய்யிதி சுஹறாக்கு மங்கலப் படலம் : 42)

இங்குக் குறிப்பிட்ட ஆறு பருவத்தினரையும் விட மூத்தவள் பேரிளம் பெண். மணவாளனின் பவனிவரும் மணக்கோலத்தைக் கண்டதும் அவள் உடுத்திருந்த சேலை நெகிழ்ந்தது. அதனை அவள் உணரவில்லை. உணர்ந்தவுடன் மீண்டும் அதனைச் சரிக்கட்டினுள். இவ்வாறு அவிழ்வதும் உடுப்பதுமாக ஆங்காங்கே அலைந்து திரிந்தாள் அப்பேரிளம் பெண். சைகை காட்டினுள். பின்னர்த் தனது உள்ளக் கிடக்கையை அடக்கிக் கொண்டாள். ஆனுல் அந்தப் பாசம் அகலாத காரணத்தினுல் பெரிதும் வருத்தப்பட்டாள். துயருற்றுள். பேரிளம் பெண்ணின் இத்தகைய நிலையை வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு வருணித்துள்ளார்.

மயலி னுற்கலை நெகிழ்ந்ததை மடந்தைய ரறியாச்
செயல தாயுடுப் பதுநெகிழ் வதுவுமாய்த் திரிந்தாள்
பயிலி யாவதும் பயின்றகத் தடக்கியுட் பாசம்
பெயர்கி லாதுழல் கின்றதோர் பேரிளம் பெண்ணே

(செய்யிதி சுஹாக்கு மங்கலப் படலம் : 43)

**போர் வருணனை :**

செய்யிதிபுருகிம் ஷகீது அவர்களுக்கும் விக்கிரம பாண்டியனுக்கும் இடையே பத்து நாட்கள் தமிழ் நாட்டில் போர் நடைபெற்றுள்ளது. எனவே அப்போரைக் கருவாகக் கொண்டு தோன்றிய தீன் விளக்கம் என்னும் காப்பியத்தில் பத்து நாட்கள் நடைபெற்ற போர் நிகழ்ச்சிகள் வெவ்வேருகப் பத்து அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டுள்ளன. பெரும் பாலான போர் நிகழ்ச்சிகள் இரண்டு சாராரையும் சார்ந்த முக்கியமான இருவர்களுக்கிடையே ஏற்பட்டனவாய் வருணிக்கப்பட்டுள்ளன. பெருந் தொகையினரான போர் வீரரும் பெருந் தொகையான யானைகள், குதிரைகள் தேர்கள் முதலியனவும் போரில் பயன்படுத்தப் பட்டன எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இரண்டாம் நாள் நிகழ்ந்த போரிலே பங்கு பற்றிய குதிரைகளினதும், யானை களினதும் தேர்களினதும் காலாட் படையினரதும் எண்ணிக்கையைப் புலவர் ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். குதிரைகளின் எண்ணிக்கை மாத்திரம் ஆறு இலட்சம் எனவும் ஏனையன அதுபோன்று இருமடங்கு எனவும் கற்பனை நயம் தோன்ற இவ்வாறு ஒரு செய்யுளில் ஆசிரியர் பாடியுள்ளார்.

பரிகளா யிலக்கஞ் சூழப் பன்மணி புனைந்த சோதி
விரிதரு மிரதந் தந்தி மிக்கத னிரட்டி சூழ
விரணிய சிவிகைக் கூட்ட மெண்ணற நெருங்க வாச
மருமலர்த் தும்பை சூடி வந்துதங் கிளைஞர் மேவ
(இரண்டாம் போர் புரிப் படலம் : 37)

இனி இங்ஙனம் பங்கு பற்றிய போர் எவ்வாறு நிகழ்ந்தது என்பது மற்றொரு பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இருசாராரும் ஒருவர் மற்றவருக்கு இளைத்தவரல்லர் எனப் போரிட்டனர் என்றும் அதன் காரணமாகக் குருதி ஆருய் ஓடியது என்றும் கடுமையான போர் நிகழ்ந்தது என்றும் ஒரு செய்யுள் இவ்வாறு கூறுகின்றது.

உறுமிரு வகையி லொன்றுக்
 கொன்றிளை யாத வண்ணங்
கறுவொடு பூச விட்டார்
 கரிபரி யிரதம் வீரர்
அறுவது சிலவாய்ச் சோரி
 யாறெழுந் தங்கு மிங்கு
முறிவது மிலவாய்க் கூண்டு
 மொய்யமர் செய்ய லுற்ருர்
(இரண்டாம் போர் புரிப் படலம் : 49)

தனிப்பட்ட முறையில் இரண்டு சாராரையும் சார்ந்த இருவர் போர் புரிந்தமை பற்றியும் ஒரு செய்யுளில் குறிப்பிடப்பட்டுள்ளது. இருவருடைய தேர்களும் நிலைபெயர இருவரும் ஏனைய ஆயுதங்களை எடுத்துக் கடுமையாகப் போர் புரிந்தனர், என ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது :

இருவ ரூர்தியு மிறந்திட விருவரு மெதிர்த்துக்
கருவி வாளயில் கதைபல படைகரத் தெடுத்துப்
பொருவு போர்புரிந் தனர்பொரும் போரினி வொருவர்க்
கொருவர் தாமுமே நலிந்திடா வியன்பெற வோங்கி
(இரண்டாம் போர் புரிப் படலம் : 60)

படைகள் அழிக்கப்பட்ட விதம் மற்ருெரு செய்யுளில் விவரிக்கப் பட்டுள்ளது. குதிரைகளையும் யானைகளையும் தேர்களையும் சின்னுபின்ன மாக்கினர். ஆயிரக்கணக்கானோர் கொல்லப்பட்டனர். நெற்கதிர் அரிவது போன்று பகைவர் பத்தாயிரம் பேர் மாய்க்கப்பட்டனர். பின்னர் எல்லோருமாய் ஒழுங்காய் ஒன்று சேர்ந்து போரைத் தொடர்ந்து நடத்தினர். இச்செய்தியே ஒரு செய்யுளில் இவ்வாறு பாடப் பெற்றுள்ளது.

பரிகரி யிரதம் வாளாற் பலதுணுக் காக வீழ்த்தி
அரிகள்போ லரச ரோர்பத் தாயிரம் பெயரை மாய்த்து
விரவுறு மளவிற் பின்னு மேயொரு மித்து நின்றூர்
செருமுனை நெதிர்த்து நின்று செழுஞ்சமர் விளைத் திட்டாரே
(ஆறும் போர் புரிப் படலம் : 30)

எவ்வளவு விரைவாகப் பகைவர்களின் தலைகள் துணிக்கப்பட்டன என்பதும் இரத்தம் ஓடியது என்பதும் பிணமலை குவிக்கப்பட்டது என்பதும் இன்னொரு செய்யுளில் இவ்வாறு விவரிக்கப்பட்டுள்ளது.

அரியினுட் புகுந்த வேலை யசைத்தவன் வாங்கு முன்னே
விரைவினிற் குதித்தன் னேன்கை விற்றுணித் துதிரஞ் சிந்தச்
சிரமது துணித்து மற்றுஞ் சேனைவீ ரரைத்து ணித்துப்
பெருகுசெங் குருதி யோடப் பிணமலை குவித்திட்டாரே
(ஆறும் போர் புரிப் படலம் : 32)

பாண்டிய இளவரசன் அம்புகளைச் சரமாரியாக எறிந்தமையும் அவற்றை அபூதாகிர் உடனடியாகத் தடுத்து அறுத்தமையும் இங்ஙனம் எவ்வளவு எனக் கணக்கிட முடியாத அளவுக்கு அம்புகள் இரு பக்கத்திலிருந்தும் பறந்தமையும் மிகுந்த கோபத்தோடு இருவரும் போர்க் களத்தில் திரிந்தமையும் ஒரு செய்யுளில் வருணிக்கப்பட்டுள்ளன. பெருவீரச் செயல் காட்டிப் பகைவரோடு போர் செய்தலைக் கூறும் புறத்திணை வகை தும்பைத் திணை எனப்படும். ஆனால் தும்பை என்று கூறும்பொழுது அது பெருவீரச் செயல் புரிவதன் குறியாக வீரர் போரிலணியும் அடையாளப் பூ என்பதைக் குறிக்கும். இங்கே ஆசிரியர் எதிர்த்துப் போர் புரிந்த இருவரும் தும்பைப் பூ சூடினவர்களாகப் போராடினர் என்பது இடம்பெற்ற அச்செய்யுள் இவ்வாறு அமைந்து உள்ளது.

வரிச்சி லைக்கணை பொழிந்தனர் கவுரியன் மகவுங்
கரச்சி லைக்கணை யாலவை அறுத்தனன் கடிதின்
எரிச்ச றத்தொகை யெண்ணரு திருவரு மேவித்
துரிச்சி னத்தொடு திரிந்தனர் தும்பையிற் றெடுத்தே
(ஏழாம் போர் புரிப் படலம் : 22)

## பெற்றோர் புலம்பல்

விக்கிரம பாண்டியனின் மகன் இந்திர பாண்டியன் போர்க் களத்திலே மாண்டான். வீரமரணம் எய்தினான். இச்செய்தி தந்தை விக்கிரம பாண்டியனுக்கு அறிவிக்கப்பட்டது. அவன் மனம் நொந்

தான். அழுதான். கதறினன். ஐயகோ என அலறினன். அவனது மன நிலையையும் அவனது இரங்கற் கூற்றையும் வண்ணக்களஞ்சியப் புலவர் நுணுக்கமாக வருணித்துள்ளார். 'இந்திரன் என்னும் நின்னுடைய பெயரை உரைக்கக் கேட்டதும் உனக்கு முன்பிருந்தே உள்ள தேவர் தலைவன் இந்திரன் கூட துணுக்குறுவான். அஞ்சுவான். விண்ணகத்திலே உள்ள விண்ணக மகளிர்க்கு உனது கண்ணையும் வாயையும் காட்டுவதற்காக நீ அங்கு போய் விட்டாயா? அவ்விண்ணக மகளிர் அவ்வளவு புண்ணியஞ் செய்தவர்களா? அவர்களுடைய கடுமையான தவங்காரணமாகத்தான் இந்த இளம் வயதிலே அங்கு சென்று விட்டாயா?' என இவ்வாறு புலம்பினன் என்பதை ஒரு செய்யுளில் இங்ஙனம் அமைத்துத் தந்துள்ளார் ஆசிரியர்.

எண்ணுமுன் றன் பேருரைக்க யிந்திரனுர் கேட்டாலுந்
துண்ணென் றுடம்பு றுணுக்கவீ ரம்படைத்தாய்
விண்ணின் றரம்பையரு மிக்கதவஞ் செய்ததினுற்
கண்ணுங் கனிவாயுங் காட்டவங்கு போயினையோ

(ஏழாம் போர் புரிப் படலம் : 75)

விக்கிரமபாண்டியனின் புலம்பலை வேறொரு வகையாகவும் காட்டி உள்ளார் வண்ணக்களஞ்சியப் புலவர். 'இப்போதுள்ள என்னரசு நீ ஆட்சி புரியப் போதுவதன்று என நினைக்கக்கூடியவன் நீ. அந்த அரசை எட்டு மடங்கு விசாலமானதாய் மாற்றிடுவாய் என்று நினைத்தேன். அத்தகைய பேரரசை ஆட்சி செய்வாய் என உள்ளம் பூரிப்படைந்தேன். இப்பொழுது அந்தக் கனவை நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. எனக்குப் பின்னல் இந்த அரசினை ஆட்சி செய்ய ஒரு வாரிசு இல்லாதவனுக மாறிவிட்டேன். ஏனைய அவைக்களங்களில் நான் பிள்ளைப் பாக்கியம் அற்றவன் என்றும் ஒரு பாவி என்றும் என்னை ஏளனம் செய்யப் போகின்றனர். இதற்கெல்லாம் என்னை ஆளாக்கி விட்டு நீ மறைந்து விட்டாயே! என விக்கிரம பாண்டியன் வாய் விட்டலறியதாக ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு பாடியுள்ளார் :

என்னரசி லெண்மடங்கா யெங்குமொரு கோல்செலுத்தி
உன்னரசு செய்வாயென் றுள்ளம்பூ ரித்திருந்தேன்
பின்னரசு செய்யவொரு பிள்ளையில்லாப் பாவியென்று
மன்னர்ச வைதோறும் வசைக்கவைத்துப் போயினையே

(எழாம் போர் புரிப்படலம் : 77)

அடுத்துத் தாயின் புலம்பல் பல செய்யுட்களில் இடம்பெற்றுள்ளன அவளும் மனம் உருகினவளாய் அழு துவிழுந்தாள். வாய் புலம்பினாள். கண்ணீர் சொரிந்தாள். கன்மம் தான் பலன் செய்தது எனக்கத்தினாள்,

விதி செய்த கதி எனத் துன்புற்றாள். பொன் மகளால் கூட உன்னைக் காப்பாற்ற முடியவில்லையா என்று ஓலமிட்டாள். அத்தோடு அவள் நின்றுவிடவில்லை.

'தென்னாடாம் தமிழ்நாட்டில் கிடைக்கும் புகழ் போதாது என நீ நினைத்தாய் போலும். அதனால் தான் நீ பொன்னாடாம் சுவர்க்கத்துக்குப் போனாய் போலும். அங்கே நீ புகுந்தது தேவர்கள் எல்லோரும் உன்னைப் போற்ற வேண்டும் என்ற எண்ணமோ? மேலுலகில் உன் சிறப்புக்களை நிலைநாட்ட நீ அங்கு சென்றாயோ? விண்ணுலகிலே உன் புகழ் நாட்டப் பெற்று அது வளர்ந்துவிடும் பொழுது தேவ அரசன் இந்திரன் கூட இந்தப் பாண்டி நாட்டு இந்திரன் எமது அரசன் எனக் கூறும் வாய்ப்பை அளித்தாயோ?' இவ்வாறு தாயின் அவலநிலையை ஒரு செய்யுள் இங்ஙனம் கூறுகிறது.

தென்னாட்டார் போற்றுஞ் சிறப்புனக்குப் போதாமற்
பொன்னாட்டார் போற்றப் புகுந்தாயோ மேலுலகிற்
கன்னாட்டாய் நாட்டிக் கதித்துவள ருன்புகழ்போல்
என்னாட் டரசெனுமவ் விந்திரனும் பெற்றானே

(ஏழாம் போர் புரிப் படலம் : 87)

'நீ முதியவனாய் விட்டாயோ? உனக்கு இப்பொழுது வயது இருபத்து நான்கு தானே ஆகின்றது. நீ சின்ன வயதுக்காரன். இத்தகைய சின்ன வயதுக்காரன் இத்தகைய தீவினைக்கு ஆளாக வேண்டுமா? நீ இன்று இருந்தால், என் அருமை மைந்தனே, உன்னை மன்னவர் அனைவரும் போற்றி இருப்பார்கள். நான் இப்பொழுது உன்னை இழந்து தவிக்கின்றேன். நீஇத்தகைய இளம் வயதில் உலகை விட்டுப் பிரிந்த பின்னரும் நான் இந்த உயிரை வைத்திருக்கிறேனே. நானும் இறந்து போயிருக்கக் கூடாதா? நான் ஒரு கொடியவளாகி விட்டேன். ஒரு பெண் பேயாகிவிட்டேன்' என இவ்வாறு கதறினாள். இக்கதறலையே வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு பாடியுள்ளார்.

முன்ன முதியவனோ முப்பதுக்கோ ராறுகுறை
சின்ன வயதிலிந்தத் தீவினையுந் தான்வருமோ
மன்னர் போற்றிசெயு மைந்தாவு னையிழந்தே
இன்ன முயிர்வைத் திருந்தே னென்னைப்போ லீலியுண்டோ

(ஏழாம் போர் புரிப் படலம் : 90)

உவமையும் உருவகமும்

போர் நிகழ்ச்சிகளை வருணிக்கும்பொழுது அவற்றை விளக்கப் பல உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர். வடவை என்பது ஊழிக் காலத்தில் பொங்கி எழும் கடலைக் குறிக்கும். வேகமாக வீசும்

காற்று சண்டமாருதம் எனப்படும். குமுறலை இடி என்பர். இவை மூன்றையும் உவமைகளாகப் பயன்படுத்திப் போர் வீரரின் போர் புரிந்த தன்மை ஒரு செய்யுளில் இவ்வாறு விளக்கப்பட்டுள்ளது.

வடவைபோற் கொதிப்பன் சண்ட மாருதம் போலெ திர்ப்பன்
இடிகள்போ லதிர்ப்பன் போரி னேழுல கிவனுக்கீடோ
கடிதினி லெதிர்த்தி யானுங் கையிழந் தேனு மிங்கே
உடலுயி ரொடுமே சேர்ந்த தூன்றிய விதியென் றுமே

(ஒன்பதாம் போர் புரிப் படலம் : 44)

மலையிலிருந்து பெறப்படுவது இரும்பு. இது கரும்பொன் என்றும் வழங்கப்படும், அதே இரும்பு அந்த மலையைப் பிளக்கப் பயன்படுகின்றது. அதுபோன்ற தகப்பன் காரணமாக இருந்து பெறப்படும் புத்திரர் பின்னர் தகப்பனுக்கே பெரிதும் பயனுடையர் ஆவர். இங்ஙனம் பெருமானார் (சல்) அவர்களின் பொன் மொழி கூறுகின்றது. ஆகவே தமதுமகன் தமக்காகப் போர் செய்யப்புறப்படுதல் தாம் பெறற்கரிய ஒரு பேறெனத் தாம் கருதுவதாகக் கூறப்பட்டுள்ளது. இக்கருத்துக்கள் அமைந்த செய்யுள் வருமாறு :

வெற்பருள் கருப்பொன் னேயன் வெற்பினைத் துளைத்தல் போலப்
பொற்புற வளித்தோர் தம்மிற் புத்திர வியப்பா மென்று
நற்புகழ் முகம்ம தோது நயனுற ஹ்தீது கொள்ளப்
பெட்புற விசைத்தீர் உம்மைப் பெற்றபே றெய்திற் றென்றார்

(ஆறும் போர் புரிப் படலம் : 10)

இனி ஓர் உருவகத்தைப் பார்ப்போம். அங்கே படைகள் இருந்தன. எல்லையற்ற எண்ணிக்கை உடையனவாக அப்படைகள் கடலினைப் போன்று காட்சி அளித்தது. கடலாகவே இருந்தது. இந்தப் படையிலே வலிமை மிக்க குதிரைகள் சென்றன. அக்குதிரைகளின் பிடரி மயிர் படையென்னும் கடலிலே நுரையெனக் காட்சி அளித்தது. ஆகாயத்திலே மேகங்கள் இருந்தன. மேகங்கள் சூரியனை மறைத்துக் கொண்டிருந்தன. வீரம் வாய்ந்த குதிரைகள் செல்வதனால் மேலெழுப்பப்பட்ட தூசி சூரியனைப் போர்த்திக் கொண்டிருப்பது போல் தோன்றியது. அந்த மேகங்களிலிருந்து பெறப்பட்ட நீரை உண்ட வண்ணம் முன்னே சென்றன குதிரைகள். இத்தகைய உவமை, உருவகங்களையே ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் :

கரையி லாப்பெருஞ் சேனைவா ருதியினைக் கடுப்ப
நுரைக ளாமெனக் கவரிக ளிரட்டநுண் டுகள்போய்ப்
பருதி போர்த்திட முகிற்பட லத்திடை படிந்துச்
செருகி நீர்ப்பசை யுண்டிட நடத்தினர் தேசி

(நான்காம் போர் புரிப் படலம் : 11)

ஆட்சிமுறைமை :

பத்து நாட்கள் போர் நடைபெற்றன. பத்தாம் நாள் போரில் விக்கிரம பாண்டியன் மாண்டான். செய்யதிபுருகீமும் அவர்தம் குழாத்தினரும் பெருமகிழ்வு அடைந்தனர். எல்லோரும் அல்லாஹ்வைத் தொழுதனர். செய்யிதிபுருகீம் ஷஹீது அவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். உலக நீதியையும் திருமறை அடிப்படையாக அமைந்த நீதியையும் கண்ணுங் கருத்துமாகப் பின்பற்றியே அவர்கள் ஆட்சி புரிந்தார்கள் செங்கோல் செலுத்தினார்கள். அதன் பயனாக நாடு செழிப்புற்றது. வளங் கொழிக்கத் தலைப்பட்டது. காலையில் வெள்ளை வெளேரென இருக்கும் பிரகாசம் பொருந்திய மலை மீதிருந்து சூரியன் உதிக்கின்றான் என்பது இலக்கிய மரபு. அவ்வாறு இருளை அகற்றிச் சூரியன் உதித்தது போல் இக்காப்பியத் தலைவர் திகழ்ந்தார். அது மட்டுமன்று. குளிர்ந்த ஒளியைத் தருகின்ற சந்திரனையும் போன்று காட்சி அளித்தார் பாட்டுடைத் தலைவர் என்றும் வருணிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு திகழ்ந்தவராக முறை மாறாமல் செங்கோல் நடத்தினர் செய்யிதிபுறாஹீம் ஷஹீத் என்பதை ஒரு செய்யுளில் வண்ணக்களஞ்சியப் புலவர் விவரித்துள்ளார் :

வெள்ளியங் கிரியின் மீது
　　வெய்யவ னுதித்த தொப்பாய்த்
துள்ளியி னமுதச் சோதிச்
　　சோமனுந் துலங்க லொப்பாய்
ஒள்ளிதி னிலங்க வுந்தி
　　யுறைந்தன ருலக நீதி
தெள்ளிய மறைநூ னீதி
　　செலுத்துகோ லிபுறா ஹீமே

(அரசாட்சிப் படலம் : 8)

சுல்தான் செய்யிது இப்கீறாம் ஷஹீது அவர்கள் அரசு கட்டிலிலே வீற்றிருந்த காட்சி ஒரு செய்யுளில் வருணிக்கப்பட்டுள்ளது. சுல்தான் செய்யிது இப்றாகிம் சகீது என்பவர் சாதாரண மனிதர் அல்லர். அவர் முகம்மது நபி (சல்) அவர்களின் வழித்தோன்றல் ஆவார். நான்கு வேதங்களான தவுருத், சபூர், இன்சீல், புறுக்கான் சதுமறை என வகுக்கப்படுவதுண்டு. அத்தகைய நான்கு வேதங்களின் திருத்தூதர் முகம்மது (சல்) அவர்களின் மரபில் வந்தவர் ஆவார். அவருடைய மரபினைச்சேர்ந்த ஏனையோர் அவரைச் சுற்றிவர இருப்பது இரவிலே சந்திரனைச் சூழவர நட்சத்திரங்கள் இருப்பதை ஒத்திருந்தது. மிருகங்களுக்கெல்லாம் அரசான சிங்கத்தைச் சூழ்ந்து புலிகள் இருப்பது போன்று சுல்தான் அவர்களைச் சுற்றி

வரப் போர் வீரர்கள் இருந்தனர். இந்தக் காட்சிகளுக்கு மத்தியிலே வீற்றிருந்த சுல்தான் செய்யிது இபுருகிம் அவர்கள் ஒரு பிரகாசமான விளக்கு போலக் காட்சி வழங்கினர். பனியினல் மூடப்பட்ட மேருமலை யின் சிகரத்தில் சூரிய ஒளி பாயும்பொழுது மலைஉச்சி பொன்மயமாகக் காட்சி அளிக்கும். முதிர்ந்த ஒளிக் கதிர்களை எறியும் பொன் மயமான உச்சியிலே இருந்து பிரகாசிக்கும் அழகு மிக்க விளக்குப் போல சுல்தான் செய்யிது இபுருகிம் ஷஹீது அவர்கள் அரசு கட்டிலில் திகழ்ந்தார்கள். இக்காட்சியையே வண்ணக்களஞ்சியப் புலவர் தமது தீன்விளக்கம் என்னும் காப்பியத்தில் இவ்வாறு உவமை நயம் ததும்ப வருணித்துள்ளார் :

மதியினைச் சூழ மீன்போன்
　　மரபினே ரருகிற் சுற்றத்
துதிகொள் கேசரியைச் சூழும்
　　புலிகள்போல் வீரர் சூழ
முதிர்கதிர் செம்பொன் மேரு
　　முடிமணித் தீபம் போலச்
சதுமறை யிறசூல் பேரர்
　　தவிசில்வீற் றிருந்திட் டாரே

(அரசாட்சிப் படலம் : 21)

ஆட்சி பீடத்தில் அமர்ந்ததும் சுல்தான் செய்யிதிபுருகீம் அவர்கள் தமது கட்சிக்காகப் போரிட்டு உயிர் நீத்தார்களை நினைவு கூர்ந்தார் கள். அவர்களை நல்லடக்கஞ்செய்யாது பேழைகளில் வைத்திருந்தனர் எனக் காப்பிய ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். சுல்தான் அவர்களின் புதல்வர் அபூத்தாகிர் அவர்களுள் ஒருவராவார். ஏனைய ஐவரும் அப்பாசு, செய்னுலாபுதீன், முகியித்தின், காதிறு, சமுசுத்தீன் என் போராவார். ஆறு பேரினது சடலங்களையும் அவை வைக்கப்பட்டிருந்த பேழைகளுடனே நல்லடக்கஞ் செய்ய அவற்றைக் கொண்டு வருமாறு கட்டளையிட்டார்கள்.

சடலங்கள் கொண்டு வரப்பட்டன. சுல்தான் அவர்கள் எழுந்து நின்றார்கள். ஏனையோரும் அவ்வாறே செய்தனர். கலிமாவின் ஒலி முழங்கியது. ஏனைய ஓத வேண்டிய அனைத்தும் ஓதப்பட்டன. என்னென்ன ஓத வேண்டுமோ அவை அனைத்தும் தப்பாமல் ஓதப் பட்டன. சடலங்கள் நல்லடக்கம் செய்யப்படடன. அங்கு சில கடமை களைச் செய்வதற்காகத் தங்கி இருக்க வேண்டியவர்களைத் தங்கச் செய்து சுல்தான் செய்யிது இபுறாஹீம் ஷஹீது அவர்கள் தமது அரசு கட்டிலை அடைந்தார். நல்லாட்சி புரியத்தலைப்பட்டார். இக்கருத்துக் களையே மூன்று செய்யுட்களில் ஆசிரியர் இவ்வாறு விவரித்துள்ளார்,

புகழபுத் தாகிறென்னும் புத்திர மணியப் பாசு
திகழ்தரு செயினுல் லாபி தீன்முகிய்யித்தீன் காதி
றிகல்புலி சமுசுத் தீனு மிவரறு வரையு மன்று
தகவுற வைத்த பேழை தம்முட னடக்கஞ் செய்ய

கொண்டுவந் திடுமி னென்னக் கூறினர்கொணர லுற்றார்
மண்டலம் புகழுஞ் செங்கோல் வள்ளலு மெழுந்தா ரியாரும்
விண்டிடுங் கலிமா வோதி மிகுபயித் துகளு மோதி
யண்டரும் துதிக்க வேகி யாங்குசென் றிறக்கி வைத்தே

வேதநூ லுரைவ ழாமல் வியனுற வடக்கஞ் செய்து
தீதறு செய்கை யாவுஞ் செய்துநற் றெளிவுள் ளோராங்
காதன்மா மரபி னோரைக் காத்திருந் திடவுஞ் செப்பி
மாதயா நிதியெங் கோமான் வந்தரி யணையி லுற்றார்

(அரசாட்சிப் படலம் : 34,35,36)

அல்லாஹ் பற்றிய வருணனை

உருவமாகவோ எதற்கும் உவமித்தோ அல்லாஹ்வை வருணிக்க முடியாது. அவனைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது அவனது அழகிய திருநாமங்களைக் கூறலாம். அவனுக்கு உள்ள தன்மைகள், இல்லாத தன்மைகள் முதலியன பற்றிக் குறிப்பிடலாம். முஸ்லிம் தமிழ்க் காப்பிய ஆசிரியர் இஸ்லாமியக கோட்பாடுகளுக்கு முரணாக அமையாத வகையிலே அல்லாஹ்வைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். அவனுடைய திருநாமங்களைக் கூறுத சந்தர்ப்பங்களில் அவன்தன் பண்புகளே சுட்டப் பட்டுள்ளன.

அல்லாஹ்வை அரியவன் என தீன் விளக்கத்தில் பல இடங்களில் வந்துள்ளது. அல்லாஹ்வுடைய சலாத்தைக் கூறினர் என்பது

அண்ணல்பா லணுகி வைத்தே அரியவன் சலாமுங் கூறி

(சமர் யாத்திரைப் படலம் : 112)

என வந்துள்ளது. அல்லாஹ்வின் கருணை சுட்டப்படும்பொழுது

அரிய வன்றிருக் கருணையைப் பாசுமற்றவரும்

(இரண்டாம் போர் புரிப் படலம் : 124)

என்றும் அல்லாஹ்வின் விதிப்பே இறுதியானது என்பது புலப்பட

அரியவன் விதித்த வாறே யாவர்க்கு முடியு மன்றி
இருநிலத் தொன்றும் வாரா திதையிதையத் தெணாது

(மூன்றும் போர் புரிப் படலம் : 99)

என்றும் அல்லாஹ்வுடைய அருளினால் எல்லாம் நடக்கும் என்பது

... பெற்றே மரியவன் அருளா லென்ன

(அரசாட்சிப் படலம் : 23)

என்றும் விவரிக்கப்பட்டுள்ளது.

அல்லாஹ் முடிவில்லாதவன் என்பது
அந்தமில் லிறையைப் போற்றி யவிடம்விட் டகன்று மாதோ

(சமர் யாத்திரை படலம் : 107)

என வந்துள்ளது. முடிவற்றவன் என்பது போலவே அவன் தொடக்கமு மற்றவன். இதனையே ஆசிரியர்

அந்தமா தியுமி லான்ற னருள் ...

(அரசாட்சிப் படலம் : 20)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

உலகத்தைப் படைத்தவன் அல்லாஹ். அதனையே அல்லாஹ்வைக் குறிப்பிடும்பொழுது உலகம், கடல், ஆகாயம் முதலியவற்றை அமைத்தவன் என்று பொருள்பட

செவ்விதி னொளிருங் குத்துபாப் பள்ளி யிடத்தினிற் சென்றுமை
யிருளில்
கவ்வையங் கடற்பார் விசும்பமைத் தவனைக் கருதியே
வணக்கம் செய்திருந்தார்

(திருவாக்கருளிய படலம் : 4)

என இடம்பெற்றுள்ளது. அதே சொல்லை மலர்ந்த உலகத்தை அமைத்தவன் என்று பொருள்பட

அவர்தலை யுலக மெல்லா மமைத்தவன் கருணையாலே

(தலைமுறைப் படலம்: 1)

எனப் பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

தமிழ் மொழியில் தொடக்கம் என்றும் இறுதி என்றும் வருவது முறையே அறபு மொழியில் அவ்வல் என்றும் ஆகிறம் என்றும் வரும்.

அவ்வ லாகிறந் தோன்றிடா தவன்றனே...

(நான்காம் போர் புரிப் படலம் : 2)

என்று ஆதி அந்தம் அற்றவன் அல்லாஹ் என்பது சுட்டப்பட்டிருப் பதைக் காணலாம்,

எல்லாம் படைத்தவன் அல்லாஹ் என்பது
அனைத்தை யும்படைத் தவனருள் பெருகுமப் பாசு
(இரண்டாம் போர் புரிப் படலம் : 76)

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

தொடக்கமானவன் என்னும் பொருளில் ஆதி என்னும் சொல் தீன் விளக்கத்தில் பல இடங்களில் வந்துள்ளது.

ஆதி யருண் மேவிய...

(சமர் யாத்திரைப் படலம் : 18)

ஆதி நன்னபி முகம்மதுக் கன்புறு பேரர்

(நான்காம் போர் புரிப் படலம் : 1)

என்பனவற்றை எடுத்துக் காட்டாகக் குறிப்பிடலாம்.

ஆதி என்னும் சொல் ஒருவன் என்னும் சொல்லுடன் சேர்க்கப்பட்டு
... ஆதியாம்
ஒருவனை வணங்கியன் புற்று றைந்தனர்

(எட்டாம் போர் புரிப் படலம் : 1)

என ஆளப்பட்டுள்ளது. அதே போன்று வல்லவன் என்னும் சொல்லும்

ஆதி வல்லவன் றிருநபி யொடுமுறைந் தருளி

(கடவுள் வாழ்த்து : 5)

ஆதி என்னும் சொல்லுடன் சேர்த்து அல்லாஹ்வைக் குறிக்கப் பயன் படுத்தி உள்ளமையைக் காணலாம். மற்றோர் இடத்தில் அதே பிரயோகம்

உறையு மாதிவல் லவனரு ளொலியிபு ருஹீம்

(திருவாக்கருளிய படலம் : 59)

எனவும்

வையகத் தினிலே யாதி வல்லவன் றூதாய் வந்த
துய்யநம் மிறசூன் முன்னந் தோன்றிய குபிரை மாய்த்தே

(சமர் யாத்திரைப் படலம் : 63)

அல்லாஹ்வைக் குறிக்க இறை, இறையவன், இறையோன், இறைவன் என்பன தீன் விளக்கத்தில் பல தடவைகள் பயன்படுத்தப் பட்டுள்ளன.

விண்டிடக் கருணை புரியென விறையை மிகத்துதி செய்து ...
(முதற் போர் புரிப் படலம் : 156)

என இறை என்பதும்

எழுந்தவர் பணிந்து நின்றே யிறைவன் சலாமுங் கூற
(முதற் போர் புரிப் படலம் : 2)

என இறையவன் என்பதும்

கணிப்பரு மிறையோன் திருக்கலி மாவைக் கனிவுற யாவருங் கழறி
(திருவாக்கருளிய படலம் : 22)

என இறையோன் என்பதும்

ஒருபொரு ளிறைவன் ஹபீபுமாய் நபிக ளெவர்கட்கு முயர்ந்த பூரணராய்
(திருவாக்கருள் படலம் : 23)

என இறைவன் என்பதும் பல பாடல்களில் இடம்பெற்றுள்ளமையைக் காணலாம்.

அந்தம் இல்லாதவன் என்னும் பொருளில் ஈறிலான் என்பது ஈறி லானரு ளாலுனை யீன்றிடும்
(நான்காம் போர் புரிப் படலம் : 110)

என ஆளப்பட்டுள்ளது.

அல்லாஹ் எல்லாம் உடையவன். அவன் எவ்விதத் தேவையும் அற்றவன். எனவே தான் அல்லாஹ்வை உடையவன் என

உடையவன் கருணை மேன்மே லுமக்குற வெனவாக் கீந்த
(சமர் யாத்திரைப் படலம் : 21)

என்றும்

ஒரு பகல் வெள்ளி வாரத் துடையவன் கருணை மிக்காய்
(அரசாட்சிப் படலம் : 65)

என்றும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

உலகில் உள்ள எல்லோரையும் விட, எல்லாவற்றையும் விட மிக்க உயர்ந்தவன் அல்லாஹ். அதனாலேதான் அல்லாஹ் உயர்ந்தவன் என இவ்வாறு பாடப்பட்டுள்ளான்.

தன்னையோர் நிகரற் றுயர்ந்தவன் திருமுன் றனித்துமன் ருடுநா யகமே
(திருவாக்கருளிய படலம் : 11)

இணைதுணையற்ற அல்லாஹ் ஏகன் என்றும் ஏகநாயகன் என்றும் வருணிக்கப்பட்டுள்ளான். அல்லாஹ்வை ஏகநாயகன் என்று

எமதுதங் குலத்து வாழ்வே யேக னாயகன் ஹபீபே
அமுதசா கரமே வள்ள லகுமதே யென்று போற்றி

(சமர் யாத்திரைப் படலம் : 27)

எனவும்

ஏக னாயகன் முகம்மது கருணைபெற் றிட்டீர்

(பத்தாம் போர் புரிப் படலம் : 77)

எனவும் ஏகன் என்று

ஏக னைத்தொழ வெண்ணியெம் மேந்தலு மகவும்

(எட்டாம் போர் புரிப் படலம் : 31)

எனவும் வருணித்துள்ளார் ஆசிரியர்.

அல்லாஹ் ஒருவனே என்பது இஸ்லாம். எனவே தான் ஆசிரியரும் அல்லாஹ்வைக் குறிக்க ஒருவன் என்னும் சொல்லை,

உலகெலா மமைத்துக் காக்கு மொருவனை
முகம்ம தென்னு
சலசலோ சனரை ...

(அரசாட்சிப் படலம் : 1)

என்பது போன்று பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார் ஆசிரியர்

சிலர் கணக்கிட்டுச் சில புதிர்களைத் துலக்க முயல்வர். அங்ஙனம் கணக்கிட்டுப் பார்த்து அறிய முடியாதவன் அல்லாஹ். இதனையே ஆசிரியர்,

கணக்கொன்றி லடங்கி லானைக் கருத்தினிற் றுதித்து றைந்தார்

(ஐந்தாம் போர் புரிப் படலம் : 36)

என்று வருணித்துள்ளார்.

எல்லாம் வல்ல ஒளிமயமானவன் என்பதை ஆசிரியர் சோதி வல்லவன் என்னும் சொற்றொடரைப் பயன்படுத்தி

சோதி வல்லவன் பாலெற்கு துஆச் செய்து ...

(மூன்றாம் போர் புரிப் படலம் : 2)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

தக்கவன் என்பது தகுதி உடையவனைக் குறிக்கும். ஆனால் எல்லாத் தகுதிகளையும் பெற்று சிறந்து விளங்குபவனான அல்லாஹ்வைக் குறிக்க ஆசிரியர் தக்கவன் என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார். தமிழ் இலக்கியங்களில் பெரியவர்களைக் குறிக்கத் தக்கவர் என்றும் தக்கோர் என்றும் பயன்படுத்தப் படுவதுண்டு. வண்ணக் களஞ்சியப் புலவர் அல்லாஹ்வைக் குறிக்கத் தக்கவன் என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

தரமுயர் பொருளதான தக்கவன் ...

(தலைமுறைப் படலம் : 2)

தக்கவன்சலா முரைத்துச் சார்ந்துறைந் தனர்தஞ் சார்பின்

(மூன்றாம் போர் புரிப்படலம் : 102)

அல்லாஹ் தனிமையானவன். இனிமையானவன் என்பதைக் குறிக்க தனியவனினியவன் என்னும் சொற்றொடர் காப்பியத்தின் முதலாவது செய்யுளில் இங்ஙனம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

நரர்முத லியபல் லுயிர்களு மமைத்து
நலிவறு கருணையி னுணவு
தருபவன் வளர்த்து காப்பவ னுயர்ந்த
தனியவ னினியவன் றுணையே

(கடவுள் வாழ்த்து : 1)

தனியவன் என்னும் சொல் தனிமையாக
தனியவன் கருணைசேர் ...

(சமர் யாத்திரைப் படலம் : 136)

என்றும்

தனியவன் சலா முரைத்தனர் பணிந்தனர் சரணம்

(நான்காம் போர் புரிப் படலம் : 38)

... தனியவன் கருணை யோங்கி

(செய்யிதிசுஹாக்கு மங்கலப் படலம் : 2)

என்றும் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

தானவன் என்னும் சொல்லின் பொருள் சந்திரன் என்பதாகும் எனக் கூறுகிறது சூடாமணி நிகண்டு. அசுர சாதியாரைத் தானவர் என்று திருவாசகமும் (13 : 17) வித்தியாதரரைத் தானவர் என்று சீவகசிந்தாமணியும் (535) அசுரப் பெண்ணைத் தானவள் என்று

கம்பராமாயணமும் (தாடகை வதைப் படலம் : 61) குறிப்பிட்டுள்ளன. ஆனால் வண்ணக்களஞ்சியப் புலவர் தானவன் என்ற சொல்லால் அல்லாஹ்வை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

வானுயர் மதிற்ப வுத்ர மாணிக்க நகரிற் சேர்ந்தார்
தானவ னருளால்

(அரசாட்சிப் படலம் : 69)

மாபெரும் நாயகன் என்பதைக் குறிக்கத் துங்க நாயகன் என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. மாபெரும் தலைவன் ஒருவனே, அவனே அல்லாஹ். இதனைக் குறிக்கவே வண்ணக்களஞ்சியப்புலவர்.

... செகதலமுந்
திங்கள் வான்பரு தியுமமைத் தளித்தருள் செய்யுந்
துங்க நாயக னொருவனுண் டென்பதுந் துலங்க

(முதற்போர் புரிப் படலம் : 64)

என இச்சொற்றொடரை இங்ஙனம் ஆண்டுள்ளார்.

அல்லாஹ் தூய்மையானவன். அத்தோடு அவன் எல்லாம் வல்லவன். இவ்விரண்டு பண்புகளையும் சேர்த்து அல்லாஹ்வைத் துய்யவல்லவன் என ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

சொல்லியல் பிசுமி லோதித் துய்யவல் லவனைப் போற்றி

(அரசாட்சிப் படலம் : 20)

மிகப் புனிதமானவன் எனப் பொருள்படும்படி துய்யவன் என்னும் சொல்லை,

...துய்யவன் விதிப்படி யெவையும்

(முதற் போர் புரிப் படலம் : 130)

இவ்வாறு ஆண்டுள்ளார்.

நெட்டையானவனை நெடியோன் என்பர். திரிவிக்கிரமனாகிய திருமாலையும் நெடியோன் என வழங்குவர் (சிலப்பதிகாரம் 11:51). 'முந்நீர் விழவி னெடியோன்' எனப் புறநானூற்றில் (9) வரும் நெடியோன் என்பது பெரியோன் என்பதைக் குறித்தது. ஆனால் வண்ணக் களஞ்சியப் புலவர் நெடியோன் என்று அல்லாஹ்வைச் சுட்டவே அச் சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

நிறை வுறுந்தளத் திறந்தவ ரியாவர்க்கு நெடியோன்
குறை வுறுஞ்சுவ னப்பதிப் பேரது கொடுப்பன்

(பத்தாம் போர் புரிப் படலம் :76)

பழுது என்னும் சொல்லுக்குப் பல கருத்துக்கள் உண்டு. தொல்காப்பியச் சொல்லதிகாரத்திலே (324) பழுது என்பது பயனின் மையைக் குறிக்கின்றது. எனவே தான் வண்ணக்களஞ்சியப் புலவர் அல்லாஹ்வைப் பழுதிலாதவன் என

பழுதி லாதவன் சலாமெடுத் துரைத்துமென் பதத்திற்
றொழுது நின்றவர் வினவலுங் கூறுவர் தூதாய்

(விக்கிரம பாண்டியனுக்குத் தூதனுப்புப் படலம் : 66)

அல்லாஹ்வுக்குரிய அழகுத் திருநாமங்களுள் ஒன்று புதியவன் எனப் பொருள்படும். இங்கும் ஆசிரியர் அல்லாஹ்வைக் குறிக்கப் புதியவன் என்னும் சொல்லை,

புதியவ னருள்சேர் மக்கா புரத்தினில் வந்து சேர்ந்து

(சபர் யாத்திரைப் படலம் : 54)

புகத்தகு மறுமைப் பேறு புதியவன் கொடுப்ப னென்றார்

(சபர் யாத்திரைப் படலம் : 113)

பூண்டுறு கல்லே மீறிப் புதியவன் விதியென் றெண்ணி

(மூன்றும் போர் புரிப் படலம் : 87)

எனப் பயன்படுத்தி உள்ளார்.

அல்லாஹ்வைக் குறிப்பிடப் பயன்படுத்தியுள்ள மற்றொரு சொல் பெரியவன் என்பது. இதனையே ஆசிரியர்

பேழையி னடக்கஞ் செய்து
பெரியவன் காவ லுன்னி

(ஒன்பதாம் போர் புரிப் படலம் 56)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

எல்லோரையும் விடவும் எல்லாவற்றையும் விடவும் மிகைத் தோனாயிருப்பவன் அல்லாஹ். அதனாலேயே அல்லாஹ் மிக்கவன் என ஒரு செய்யுளில் இவ்வாறு சுட்டப்பட்டுள்ளான்.

மிக்கவன் றூதர் பேரர் வெண்டிரை யருகு வந்தார்

(சமர் யாத்திரைப் படலம் : 124)

படைப்பு, காப்பு, அழிப்பு என்பன கடவுளின் மூவகை செயல் எனக் குறிப்பிடுகின்றது பிங்கலந்தை நிகண்டு. வண்ணக் களஞ்சியப் புலவரும் சேதுபதி சந்ததி பெற்ற படலத்தில் 'முத்தொழிற்குரியோன்' (36) என அல்லாஹ்வைப் போற்றி உள்ளமை காண்க.

எல்லாப் பொருள்களுக்கும் காரணனான இறைவனை முதல்வன் என்பர். முதலவன் என்றும் கூறுவர். வண்ணக்களஞ்சியப் புலவர் அல்லாஹ்வைச் சுட்ட முதலவன் என்னும் சொல்லை

முதலவன் ஹபீபு முகம்மது சலவாத் தோதையும்
(நகரப்படலம் : 11)

என்றும்

... முத லவன்ற னுயர்திருக்கருணை பெற் றேங்கி
(திருவாக்கருளிய படலம் : 33)

புந்தி யைத்தெளித் தொருமுத லவனருள் பொருந்து
(முதற் போர் புரிப் படலம் : 69)

... முதலவனைத் துதிபரவி மொழிகுவாரால்
(பத்தாம் போர் புரிப் படலம் : 95)

எல்லோரையும் எல்லாவற்றையும்விட முற்பட்ட பெரியோன் எனப் பொருள்பட முந்துமேலவன் என அல்லாஹ்வைப் புகழ்ந்து ஆசிரியர்,

முந்து மேலவனை யகத்தினிற் றுதித்து
முற்றுமுண் மகிழ்ச்சி கூர் ந்திருந்தார்
(செய்யிதி சுஹூாக்கு மங்கலப் படலம் : 48)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

எல்லாவற்றிற்கு முற்பட்டவன் என்று பொருள்பட முன்னவன் என்பது

முன்னவன் ஹபீபாய்த் தோன்று முகம்மது நபியுதித்த
(அரசாட்சிப் படலம் : 49)

என ஆளப்பட்டுள்ளது.

முன்னவன் கருணை தாங்கி வளர்தரு முகாஜி றீன்கள்
(கடவுள் வாழ்த்து : 12)

என்றும்

முன்னவன் ஹபீபு முகம்மது பெயரர் —
(திருவாக்கருளிய படலம் : 1)

என்றும் அல்லாஹ்வைக் குறிக்க முன்னவன் என்னும் சொல் பயன் படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

மேலவன் என்றால் பெரியவன். அனைத்தையும் விடப் பெரியவன் என்பதைக் குறிக்க மேலவன் என்பது

... மேலவன்றனை நினைந்தே

(நாட்டுப் படலம் : 12)

எனவும்

விண்ணவர்க் கரச ரெனுமொரு ஜிபுறீல்
மேலவன் சுருதிகொண் டிறங்க

(நகரப் படலம் : 4)

மிகுத்த மேலவன் விதியினை நினைந்து மேற்றெ ளிந்து

(இரண்டாம் போர் புரிப்படலம் : 77)

உயர்ந்த மேலவன் கருணையைப் பாசுள முவந்தார்

(இரண்டாம் போர் புரிப் படலம் : 90)

எனவும் அதே கருத்தில் மேலோன் என்பது,

வந்தபி னருமே லோனை வணங்கியே

(சமர் யாத்திரைப் படலம் : 55)

எனவும்

அனைத்தையு மமைத்த மேலோ னருளினால்...

(சமர் யாத்திரைப் படலம் : 57)

எனவும்

நாத னெப்படைப் புகளையு மமைத்தவ னுலாம்
வேத முமிவர்க் கிறக்கின னிறக்கிய மேலோன்

(விக்கிரம பாண்டியனுக்குத் தூதனுப்புப் படலம் : 34)

எனவும்

திருமொழி கொடுத்து மேலோன் செய்கையை யெண்ணி யேற்றி

(அரசாட்சிப் படலம் : 37)

எனவும் வந்துள்ளமை காண்க

வலிமையுள்ளவன் வல்லவன் எனப்படும்.

கலித்தொகையிலே சமர்த்தன் எனப் பொருள்பட 'வல்லவன் றைஇய பாவைகொல்' (56:7) என வந்துள்ளது. வல்லவன் என்பதே வல்லோன் என்றும் வந்துள்ளது: எல்லாம் வல்லவன் என்னும் பொருளில் வல்லவன் என்னும் சொல்லும் வல்லோன் என்னும் சொல்லும் அல்லாஹ்வைக் குறிப்பிட இக்காப்பியத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளன.

வல்லவன் ஹபீபே வகுத்திடும் படைப்பெவை யெவையும்
(திருவாக்கருளிய படலம் : 10)

என்றும்

நெஞ்சில் வல்லவனை யேத்தி நிதிமுகம் மதுவைப் போற்றி
அஞ்சலில் பிசுமி லோதி அணிகொளச் சுவமேற் கொண்டார்
(முதற் போர் புரிப் படலம் : 15)

என்றும்

உற்ற வல்லவன் றன்னுயர் முத்திரை
பெற்ற வள்ளன் முகம்மது பேரனர்
(நான்காம் போர் புரிப்படலம் : 85)

என்றும்

மந்தர மனைய தோளார் வல்லவன் றனைத்து தித்தார்
(ஆறும் போர் புரிப் படலம் : 25)

என்றும் வல்லவன் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளன காண்க. அதே கருத்தில் வல்லோன் என்னும் சொல் ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

வாயில் காவல ரியாரென வினவலும் வல்லோன்
தூய தூதுவர் பெயரர் தூதுவ ரியாமே
(விக்கிரம பாண்டியனுக்குத் தூதனுப்புப் படலம் : 12)

**மீனட்சி அம்மையும் சிவபெருமானும்**

மீனாட்சி அம்மன் கோவில் மதுரையில் உள்ளது. மதுரையிலே வாழ்ந்து மதுரைக்கு அணித்தாயுள்ள பிராந்தியத்தில் செங்கோல் ஓச்சி அங்கேயே கல்லறையமைந்துள்ள செய்யிதிபுறாகீம் ஷஹீது அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுள்ள தமது காப்பியத்தில் வண்ணக்களஞ்சியப் புலவர் பொருத்தமான இடங்களில் மீனாட்சி அம்மையையும் சிவபெருமானையும் குறிப்பிடத் தவறவில்லை. தீன் விளக்கக் காப்பியத்திலே வரும் முஸ்லிம் அல்லாத பாத்திரங்களின் வாயிலாக மீனாட்சி அம்மையையும் சிவபெருமானையும் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

மதுரையில் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைப் புரிந்தவர் சிவபெருமான் என்று சிவபுராணங்கள் கூறுகின்றன. பத்தாம் நாள் போரில் விக்கிரம பாண்டியன் மரணமுற்றான் என்பதை அறிந்த அவன் தன் மனைவி அழுது புலம்பினாள். தனது ஆறாத்துயரை

எடுத்துக் கூறினாள். அவ்வாறு கதறும்பொழுது, ஆறு போன்று மதம் வழிந்த யானையினை அடக்கி அதனை உரித்தது போன்று அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் புரிந்தவர் சிவபெருமான். அதன் மூலமாகத் தென்னகத்தில் வாழ்பவர்களைக் காத்தவர். அத்தகைய தெய்வம் இருந்தும் தனது கணவன் காப்பாற்றப்படவில்லையே. பல மைல்களுக்கப்பாலிருந்து கடல் கடந்து வந்த துலுக்கன் படையினால் தனது கணவன் கொல்லப்பட்டமை தாம் முன்னைய பிறப்பினில் புரிந்த தீமையான செய்கையாகத்தான் இருக்க வேண்டும். கடவுளுக்குக் குறைகூற முடியாது என்பது தொனிக்கும் வகையில் இக்கருத்துக்களை அமைத்து ஆசிரியர் இவ்வாறு பாடியுள்ளார்.

அருவிகள்போற் கடமொழுகும் வேளமுரித்
 தாடிய றுபத்து நான்கு
திருவிளையா டலும்புரிந்து தென்னவரைக் காத்ததெய்வ
 மிருந்துந் தீராக்
கருவிளைவா யுதித்து நெடுங் கடல்கடந்து துலுக்கன்வந்து
 கனன்று தாவிச்
செருவிளைவா யிறந்ததுமுற் சென்மமதி லியாம்புரிந்த
 தீமை தானே

(பத்தாம் போர் புரிப் படலம் : 85)

பாற்கடலைக் கடைந்தபோது பெறப்பட்ட ஆலகால விஷத்தை விழுங்க, உள்ளே செல்லாமல் அதனைத் தடுக்க உமாதேவி கழுத்தை நெரிக்க தொண்டையிலே நின்றுவிட்டது அவ்விஷம் என்பது இந்து சமயக் கருத்து. அதன் பயனாக சிவபெருமான் நீலகண்டன் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார். விக்கிரம பாண்டியனின் மகன் இளவரசன் இந்திரன் பெருமானின் அருளைப் பெற்றவன். அத்தகைய அருளைப் பெற்றவனுடைய உயிரையும் யமன் கவர்ந்துவிட்டானாஎன மன்னன் மனைவி புலம்புவதாக இச்செய்யுள் இவ்வாறு அமைத்துள்ளது.

ஆலநிறை கண்ட ரருட்பெற்ற சீராளா
காலனுமுன் னுவிநிலை கண்டு பிடித்தானு

(ஏழாம் போர் புரிப் படலம் : 88)

சிவபெருமானைக் குறிக்க ஈசன் என்னும் சொல் இக்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது, இங்கே அது விக்கிரம பாண்டியன் கூற்றாக அமைந்துள்ளது.

தாரும்போய்த் தவத்தா லீன்ற சந்ததி களும்போ யீசன்
வரமும்போய்ச் சேனையின்கா வலரும்போய் மற்றோர் கூட்டத்
துரமும் போய்த் துலுக்கன் மைந்த லுற்றடர் போரி னெந்தன்
கரமும்போ யாவி போகாக் கவலைவந் திருக்கின் றேனல்

(பத்தாம் போர் புரிப்படலம் : 16)

அடுத்து மனைவி கூற்றாக ஈசன் என்றும் இவ்வாறு இடம்பெற் றுள்ளது.

ஈசனருண் மணிமுடியுங் கவசமுங்கை வான்கதையு மேவு மெங்கே

(பத்தாம் போர் புரிப் படலம் : 83)

ஐந்தெழுத்து என்னும் சொற்றொடர் இங்குக் குறிப்பிடப் பட்டுள்ளது. பஞ்சாட்சரம் என்பதையே இங்கு ஆசிரியர் ஐந்தெழுத்து எனக் குறிப்பிட்டுள்ளார். சைவ சமயக் கோட்பாட்டுக்கு இணங்க பஞ்சாட்சரம் என்பது 'சிவபிரானை ஆதி தெய்வமாகக் கொண்டதும் 'ந,ம,சி,வா,ய, என்னும் ஐந்து எழுத்துக்களாலானதுமான மந்திரம்' என்பதைக் குறித்து நின்றது. விக்கிரமாதித்தன் சிந்தனை யில் உதித்த கருத்தினைக் கூற வந்த புலவர் அவன் கூற்றாக அதனை இவ்வாறு கூறி உள்ளார்.

சொல்லுமெவ் விதத்தென் றாலுந் துலுக்கன் விட்டிடுவ தில்லை
வெல்லுமைந் தெழுத்தை யுன்னி விமலனைத் தியானஞ் செய்து
கொல்லுமப் பகைஞன் கையிற் கொளவுயிர் கொடுப்ப தாயிற்
செல்லுநந் தீமை நீங்கிச் சேர்வதாம் வீர சொர்க்கம்

(பத்தாம் போர் புரிப்படலம் : 32)

இங்கே போரில் வீர மரணம் எய்தியோர் சுவர்க்கம் அடைவர் என்ற கூற்று முக்கிய இடத்தைப் பெறுவதைக் காண்கின்றோம். இஸ்லாத் திலும் ஐந்து எழுத்துக்களின் முக்கியத்துவம் கூறப்பட்டுள்ளது. அது இதிலிருந்து வேறுபட்டதாகும்.

கயல் என்பது கெண்டை மீனைக் குறிக்கும். மையுண்ட கண் களைக் கவிஞர் கயலுக்கு ஒப்பிடுவர். கயலெனக் கருதிய வுண்கண்' (36) என்கின்றது ஐங்குறுநூறு. அழகிய கெண்டை மீன் போன்ற கண்களை உடையவளை அங்கயற்கண்ணி என்பர். அங்கயற்கண்ணி என்பது ''மதுரையிலே உள்ள கோயிலில் எழுந்தருளி இருக்கும் மீனாட்சி அம்மை''யைக் குறிக்கும் சிறப்புப் பெயராக பயன்படுத்தப் பட்டு வருகிறது. சம்பந்தர் தேவாரத்திலும்

அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த வாலவாய்

(868 : 1)

என அப்பெயர் சுட்டப்பட்டுள்ளது. வண்ணக்களஞ்சியப் புலவரின் தீன் விளக்கத்திலும் மீனாட்சி அம்மையைக் குறிக்க 'அங்கயற்கண்ணி' என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். சிவபெருமானை அங்கயற்கண்ணி பாகன் என்பது மரபு. இம்மரபினைப் பேணியே வண்ணக்களஞ்சியப் புலவர் இவ்வாறு பாடி உள்ளார்:

நங்கிளைத் தலைவ ரெல்லா நாளைந்தி லிறப்ப தானார்
அங்கயற் கண்ணி பாகன ருளன்றி வலிவே றில்லை
(ஆறாம் போர் புரிப் படலம் : 20)

கயல்விழி பாகர் தம்மைக் கனிவொடு மிறைஞ்சி மீண்டோம்
(செய்யிதிபுரு ஹூமொலி ஷகீதுப் படலம் : 21)

எனவும்

கயற் கண்ணி தன்னை
(செய்யிதிபுரு ஹூமொலி ஷகீது படலம் : 19)

எனவும் வந்துள்ளமை காண்க.

கங்கை நதி சிவபெருமான் முடியிலிருந்து ஊற்றெடுக்கிறது என்பது ஐதீகம். இதனாலேயே சிவபெருமான் 'கங்கையஞ்சடை' உடையவர் என வருணிக்கப்பட்டுள்ளார். நெற்றியிலுள்ள கண்ணையும் சேர்த்து மூன்று கண்களை உடையவரா கையால் சிவபெருமான் முக்கண்ணன் என வழங்கப்படுகிறார். இரண்டையும் சேர்த்தே வண்ணக்களஞ்சியப் புலவர் சிவபெருமானை

கஞ்கையஞ் சடைமுக் கண்ணன் கருணையு மில்லை யாயின்
(ஆறாம் போர் புரிப் படலம் : 20)

என்று பாடியுள்ளார்.

காமனுர் புரமெ ரித்தோன் கைவிடு மாயிற் பேசா
(ஆறும் போர் புரிப் படலம் : 21)

எனவும்

சிவனுக் கோர்செய லில்லையா மிவ்வுப தேசம்
(விக்ரம பாண்டியனுக்கு தூதனுப்புப் படலம் : 54)

எனவும்

... சொக்கரானை ...
(இரண்டாம் போர் புரிப்படலம் : 31)

எனவும்

கோதி வெண்பிறை சூடிய சொக்கரே ...
(இரண்டாம் போர் புரிப்படலம் : 114)

எனவும்

ஊன்றிவைக்க வன்று ளொருவசிய ளுகிவந்து
தோன்று சொக்கநாதர் துணையுமற்றுப் போய்விடுமோ
(ஏழாம் போர் புரிப்படலம் : 76)

எனவும்

தனிவிடைச் சொக்க நாதர் சன்னதி யதனிற் போந்து
கனிவொடு மிறைஞ்சி நின்று கருத்தினி னினைத்த வெல்லாம்
இனிதுற முடிய வென்றே எண்ணிஉள்

(செய்யிதிபுருஹீமொலி ஷகீதுப் படலம் : 12)

எனவும்

திரிபுரந் தகனஞ் செய்த செஞ்சடைச் சொக்க நாதர்
(ஐந்தாம் போர் புரிப் படலம் : 4)

தேவர் தேவரைச் சொக்க நாதரை தெரிசித்து
(செய்யிதிபுருகீமொலி ஷகீதுப் படலம் : 61)

எனவும்

பாண்டியனெனப் புரந்த பரமனே மதிகுலத்து
நீண்டநற்கருணை செய்யு நிமலனே ...
(செய்யிதிபுருகிமொலி ஷகீதுப் படலம் : 14)

எனவும்

பவளவொண் ணிறத்த முக்கட் பரமன்மெல் லடிகள் போற்றி
(ஒன்பதாம் போர் புரிப் படலம் : 14)

எனவும்

முடிவுறு விதியை மாற்ற முக்கண ராலு மாமோ
(பத்தாம் போர் புரிப் படலம் : 30)

எனவும் சிவபெருமான் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளார்.

மீனாட்சி அம்மையைக் குறிப்பிடமுற்பட்ட வண்ணக்களஞ்சியப் புலவர், அம்மையை;

பொன்மகளு முன்னைவிட்டுப் போரிற் பிரிந்தாளோ
(ஏழாம் போர் புரிப் படலம் : 86)

எனக் குறிப்பிட்டுள்ளார். சிவபெருமானையும் மீனாட்சியம்மையையும் ஒருவர் மற்றவர் பாகர் எனப் பல இடங்களில் வருணித்துள்ளார் ஆசிரியர்.

கயல்விழி பாகர் தம்மைக் கனிவொடு மிறைஞ்சி மீண்டோம்
(செய்யிதிபுருஹீமொலி ஷகீதுப் படலம் : 21)

கயற்கண்ணி மீதுஞ் சொக்கர் கமலத்தாண் மீதும் தோன்ற
(இரண்டாம் போர் புரிப் படலம் : 22)

கவினுலா வியசொக் கேசர் கயற்கண்ணி பாதத் தாணை
(இரண்டாம் போர் புரிப் படலம் : 28)

... தனித்தசொக் கேசர் பாகத்
தங்கயற் கண்ணி தம்மை யகத்தினி லிருத்தி யேற்றி
(முதற் போர் புரிப்படலம் : 44)

மீன்றகு விழியாள் பாகர் விமலனு ரருளு நின்பால்
(இரண்டாம் போர் புரிப் படலம் : 32)

என வந்துள்ளமை காண்க.

## சொல்லாட்சி

வண்ணக்களஞ்சியப் புலவர் தமது தீன் விளக்கக் காப்பியத்தில் அமைத்துள்ள அருமையான சொல்லாட்சியைப் பார்ப்போம். அவ்வியம் என்பது வஞ்சகம் (பழமொழி: 264). தீன் விளக்கம் அவ்வியம் என்னும் சொல்லை வஞ்சகம் என்னும் பொருளில்

அவ்வியம் அகன்ற அறபிக் கிளையி லானோர்
(சமர் யாத்திரைப் படலம் : 14)

எனக் கொண்டுள்ளது.

உருச்செய் என்பதனையும் அருமையாகப் பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர். இதன் பொருள் உருச் செபித்தல் என்பதாகும். மந்திரத்தைத் திரும்பத் திரும்பக் கணக்கிட்டு அனுசந்தித்தல் என்பதனை இது குறிக்கும். இச்சொல்லைப் பொருத்தமாக ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு ஆண்டுள்ளார்.

சிந்தைவைத் துருகி யுள்ளந் தியானித்து நாடுங் காலை
வந்தவர் கிலுறே யென்ன மறைவெளி யாகித் தோன்ற
அந்தமின் மகிழ்ச்சி கூர்ந்தே யன்புவைத் தயர்வி லாது
மந்திர மதனை யோயா வண்ணத்தி னுருச்செய் தாரே
(அரசாட்சிப் படலம் : 64)

உவணி என்பதன் பொருள் வாள் என திவாகர நிகண்டு கூறும். இதனையே இதே கருத்தில் வண்ணக்களஞ்சியப் புலவர்,

அதிர்ந்துகை யுவணி யாலே யங்கத்தைத் துணிக்க லுற்றார்

(ஆறும் போர் புரிப் படலம் : 41)

கரந்தனி லுவணி யேந்திக் கைதவன் சேனை யெல்லாம்

(ஒன்பதாம் போர் புரிப் படலம் : 32)

ஊதை என்பது காற்றைக் குறிக்கும். வாடைக் காற்றைக் குறிக்கப் பரிபாடலில் இச்சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

புனிப்புலர்பாடி ஊதையூர்தர (11 : 84)

வண்ணக்களஞ்சியப் புலவர் ஊதை என்பதனை காற்றெனக் கொண்டு குதிரைக் காற்றின் வேகத்தில் சென்றது என்பதைக் குறிக்க ஊதை என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்:

ஊதை யார்கதிப் பரிகளில் பரிவொடு முந்தி

(எட்டாம் போர் புரிப் படலம் : 49)

எக்குதல் அல்லது எட்டுதல் என்னும் பொருளைக் கொண்டது எக்கி நின்று என்னும் சொற்றொடர். தன் பார்வைக்கும் பார்க்கப் படும் பொருளுக்கும் இடையே தனது உயரத்துக்கு மறைவு இருப்பின் ஒருவன் தனது விரல்களை ஊன்றி நிற்றலை இச்சொற்றொடர் குறிக்கின்றது.

ஈறு பட்டிடச் சினத்தொடும் எக்கிநின் றெதிர்த்தார்

(நான்காம் போர் புரிப் படலம் : 48)

கிங்கிரர் என்னும் சொல் ஏவலாளர் எனப் பொருள்படும். வண்ணக்களஞ்சியப் புலவர் இதே சொல்லை இதே கருத்தில்

கரவினி லவன்புகிற் களரி செய்துகிங்
கிரரையங் கேவிடிற் கேட்கு மக்கணம்

(எட்டாம் போர் புரிப் படலம் : 9)

என ஆண்டுள்ளமையைக் காணலாம்.

குலிலி என்பது வீராவேசவொலியைக் குறிக்கும் என்பர். அருணகிரிநாதர் தமது திருப்புகழில்

குலிலி யிட்ட களத்தில் (271)

என குலிலி என்னும் சொல்லை இதே கருத்தில் பயன்படுத்தி உள்ளார் இக்காப்பிய ஆசிரியரும் வீராவேசவொலி என்னும் பொருளில் குலிலி என்னும் சொல்லை

கொட்டுவார் முரச மார்ப்பக்
குலிலியிட் டடர வேண்டும்

(ஒன்பதாம் போர் புரிப் படலம் : 7)

என உபயோகித்துள்ளார்.

சந்து என்பது தூதன் எனப் பொருள்படும். ஒருவனிடம் 'நீ யார்' எனக் கேட்க 'நான் பாண்டியனின் தூதன்' என்று பொருள்பட 'மீனவன் சந்து' எனக் கூறினான் என்பதையே வண்ணக்களஞ்சியப் புலவர்

கிட்டுநீ ரியாவ ரென்னக் கிளத்த மீனவன் சந்தென்றுர்

(செய்யிதிபுருஹீமொலி ஷகீது படலம்: 35)

இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

சவளம் என்பது ஓர் ஆயுதம். குந்தம் என்பதனைக் குறிக்கும். கலிங்கத்துப் பரணியில் சவளம் என்பது.

'அருசவளத் தெடுத்த பொழுது' (424)

என வந்துள்ளது. அதனைப் பயன்படுத்தினால் கொவ்லுந் தன்மை வாய்ந்தது அது. இக்காப்பிய ஆசிரியரும் சவளம் என்பதனை ஆயுதம் என்றே குறிப்பிட்டுள்ளார். காதிறு என்பவர் குந்தத்தால் தாக்கினார் என்பதை இவ்வாறு ஒரு செய்யுளில் இடம் பெற்றுள்ளன.

தும்பையந் தொடையல் புனைந்திடு காலை
துலுக்க னிற்காதிர்வந் தெதிர்த்துத்
தம்பெரு நெடிய சவளத்தாற் குற்றிச்
சரித்தன னிரத்தம் வார்ந் தொழுக

(முதற் போர் புரிப் படலம் ; 148)

சன்னை என்பது குறிப்பை, சமிக்கையைக் குறிக்கும். சன்னை என்று சொல்லைச் சமிக்கை என்னும் பொருளில் வண்ணக்களஞ்சியப் புலவர்,

பதுங்கியங் குறைந்தோர் தம்மைப்
பரிந்திவண் சன்னை காட்ட

(ஆரும் போர் புரிப் படலம் : 41)

என ஆண்டுள்ளார்.

தண்டு என்பது கோல். அகநானூறு தண்டு என்பதை
தண்டுகா லூன்றிய தனிநிலை யிடையன் (274)

எனப் பயன்படுத்தி உள்ளது. தீன் விளக்கம் தண்டு என்பதை

போரிய லாதிராஜன் புகுமெனத் தண்டு சேர்த்து

(சமர் யாத்திரைப் படலம் : 145)

எனக் கொண்டுள்ளது.

திட்டி வாயல் என்பது திட்டி வாசல். பெரிய கதவுகளையும் இச் சொல் குறிக்கும். சாத்தப்படும் பொழுது உட்செல்வதற்கு அமைக்கப் படும் சிறிய நுழைவாயில் இப்பெயரால் அழைக்கப்படுகிறது.

திட்டி வாயலிற் சிறந்துள வீரரைத் திரட்டி

(பத்தாம் போர் புரிப் படலம் : 64)

என திட்டிவாயல் என்னும் சொல் இதே கருத்தில் தீன் விளக்கத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

வனி என்றல் சுரம் என்பது பொருள். இராசவைத்தியம் (149) இவ்வாறு கூறுகின்றது.

வனிநிகர்த் தெழு கோபமு மாய்த்தவன் மவுல்வான்

(ஏழாம் போர் புரிப் படலம் : 29)

என வனி என்னும் சொல் தீன் விளக்கத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள மையைக் காணலாம்.

வாகினி என்பது படையைக் குறிக்கும். வாகிணி என்பது ஒரு பேரெண்ணாகவும் பயன்படுத்தப்படுகிறது. எண்பத்தொரு யானை களையும் எண்பத்தொரு தேர்களையும் இருநூற்றி நாற்பத்து மூன்று

குதிரைகளையும் நானூற்றியைந்து காலாட்களையும் உள்ள படையின் வகுப்பு வாகினி எனப்படும் என்பர். வாகினி என்னும் இச்சொல்லை படை என்னும் பொருளில்

> பதவிகள் குலத்தோர் வந்தார் வாகினிக் கருக தாக
>
> (சமர் யாத்திரைப் படலம் : 90)

> முற்றும் வாகினியை யேற்றி முகமதுபெயரர் நின்றுர்
>
> (சமர் யாத்திரைப் படலம் : 127)

> வாரி வாகினியைச் சூழ்ந்து வளைந்திடு காவலாக
>
> (சமர் யாத்திரைப் படலம் : 174)

எனப் பல இடங்களில் வண்ணக்களஞ்சியப் புலவர் பயன்படுத்தி இருப் பதைக் காண்க.

வாதுவன் என்னும் சொல் குதிரைப் பாகனை அல்லது யானைப் பாகனைக் குறிக்கும். வண்ணக்களஞ்சியப் புலவர் அதன் பன்மை உருவத்தில் வாதுவர் என ஒரு செய்யுளில் அதனைக் குறிப்பிட்டுள் ளார். வாதுவர் வழங்கிய காட்சியும் இச்செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

> களத்தினிற் கண்டை பூட்டிக் கடிமலர் மாலேசூட்டி
> வளத்தினம் பாரி சேர்த்து மணியணித் தவிசு வைத்தே
> அளப்பருங் கதிர்கள் வீச யதனின்மேற் போக்க ணிந்து
> விளக்குசெந் திலகந் தீட்டி வியந்துவா துவர்நின்றுரே
>
> (அரசாட்சிப் படலம் : 7)

# பதின்மூன்றாவது இயல்

## நவமணி மாலை

பதினைந்து ஆண்டு கால எல்லையைக் கொண்ட ஹிஜ்றி 1223 முதல் 1236 வரையான (கி.பி. 1807 முதல் 1821 வரையிலான காலத்தில் ஒன்பது தமிழ்க் காப்பியங்கள் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றியுள்ளன. அவற்றுள் கடைசியாகத் தோன்றிய மூன்று காப்பியங்கள் போரைப் பற்றியனவாகும். குஞ்ஞுமூசுப் புலவரின் இறவு சுல்கூல் படைப்போர் (1233 / 1818), செய்கு அப்துல் காதர் நயினார் லெப்பை ஆலிம் புலவரின் புதூகுச்சாம் (1236 / 1821) வண்ணக் களஞ்சியப் புலவரின் தீன் விளக்கம் (1236 / 1821) என்பன மூன்றும், போரைப் பற்றிக் கூறுவனவாகும். இக்காப்பியங்கள் தோன்றி ஏறத்தாழ மூன்று தசாப்தங்களுக்குப் பின்னரே மற்றொரு காப்பியம் தோன்றி உள்ளது. போரைப் பற்றிய காப்பியமாக இது அமைய வில்லை. மாறாக வாழ்க்கை வரலாற்றினை விளக்கும் ஒரு காப்பிய மாகவே நவமணிமாலை அமைந்துள்ளது. மேலே சுட்டப்பட்ட கால எல்லையில், முகியித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (றலி) அவர்களின் வாழ்க்கையைக் கருப்பொருளாகக் கொண்டு மூன்று ஆசிரியர்கள் காப்பியங்கள் இயற்றி உள்ளனர். இம்மூவரும் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையின் வெவ்வேறு அம்சங்களைச் சிறப்பாகக் கொண்டு தத்தம் காப்பியங்களை இயற்றி உள்ளனர். அதே போன்றே நவமணிமாலையிலும் அதன் ஆசிரியர் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையை வேறொரு கோணத்திலிருந்து பார்த்துத் தமது காப்பியத்துக்குக் கருப்பொருளாக அதனைக் கொண் டுள்ளார். ஏனைய மூன்று ஆசிரியர்களும் முகியித்தீன் ஆண்டவர் களின் வாழ்க்கையை வரலாற்று நிகழ்ச்சிகளையே பெரும்பாலும் தத்தம் காப்பியங்களில் விவரித்துள்ளனர். ஆனால் நவமணிமாலை ஆசிரியரோ முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த அற்புத நிகழ்ச்சிகளையே, முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் நிகழ்த்திக் காட்டிய அற்புத நிகழ்ச்சிகளையே தமதுகாப்பியத்துக்கான கருப்பொருளாகக் கொண்டுள்ளார். இக்காப்பியத்தின் பெயர் நவமணி மாலை என்கின்ற முகியித்தீன் புராணம் என்றே ஆசிரியர் குறிப்பிட் டுள்ளார். கௌது முகியித்தீன் அப்துல் காதிறு சாகிபு ஆண்டகையின் இயற்கையுஞ் செயற்கையுமாகிய சரிதங்களில் சிலவற்றை எடுத்துக் கூற முற்படுவதாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். முகியித்தீன் அப்துல் காதிறு ஜெயிலானி (றலி) அவர்களின் வாழ்க்கை முழுமையையும் தாம் பாட முற்படவில்லை என்றும் அளவிடற்கரிய அற்புதங்களைச் செய்து காட்டிய அப்பெரியாரின் வாழ்க்கையிலிருந்து சிலவற்றையே இங்குத் தரப்போவதாகவும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

**ஆசிரியர்**

நவமணிமாலை என்னும் முகியித்தீன் புராணத்தை இயற்றியவர் ஐதுறூசு நயினார்ப் புலவர் ஆவார். அவர் பாவகைவல்ல வித்துவான். காலன் குடியிருப்பைச் சேர்ந்தவர்.ஆசிரியர் தாம் காலன்குடியிருப்பைச் சேர்ந்தவர் என்பதை ஒரு செய்யுளில் இறுதி அடியில்

கோதிலாது வளர்காலன் குடியாந் தடங்க ணகரிருந்தே
(கடவுள் வாழ்த்துப் படலம் : 46)

எனக் குறிப்பிட்டுள்ளார். அவர் தந்தை மகா வித்துவான் மீரா நயினார் மரைக்காயர் புலவர். அவர் தம் தந்தை பாபா நயினாப் புலவர். அவர் தம் தந்தை சிறாஜுத்தீன் புலவர். அவர் தம் தந்தை சேரா முதலியார்ப் புலவர். அவர்கள் அனைவரும் காலன் குடியிருப்பில் வாழ்ந்தோராவர். தம் மூதாதையர்கள் முதலில் வகுதையில் வாழ்ந்தவர்களென்றும் பின்னர் சேரை என்று வழங்கிய குலசேகர பட்டினத்தில் வாழ்ந்தவர்கள் தம் மூதாதையர் என்றும் அம்மூதாதையரின் பெயர்கள் இன்ன இன்ன என்றும் ஒரு செய்யுளில் இவ்வாறு ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

சீரார் வகுதை நகரகத்தீ பினன்சோ ரையின்சே ராமுதலி
யாராம் புலவர் பேரர்சிரு சுத்தீன் பாபா நயினாராம்
பேரா ருதவு செல்வரிற்றம் பேரூர் மூதா தையின்பெயர்கொண்
மீரா நயினார் மரைக்காயர் மெய்மைத் தவத்தால் வருதோன்றல்
(கடவுள் வாழ்த்துப் படலம் : 47)

மற்றொரு செய்யுளில் தன்னைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். தமக்கு எழுத்தியலோ, சொல்லியலோ, பொருளியலோ, அணியியலோ தெரியாது என்றும் ஏதோ கவிதை எழுத முற்பட்டார் என்றும் இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார்.

பழுத்து மதுரங் கனிந்தொழுகும்
　　பண்பின் பனுவற் செழுங்கவிதை
வழுத்தும் புலவர் பயிற்சிசெய் நல்
　　வகைநூன் முறைமை யறிவாகும்
எழுத்தி னியல்சொல் லியல் பொருளி
　　னியலோ டியாப்பி னியலணியின்
அழுத்து மியல்பு மறியாதான்
　　ஐது றூசு நயினானே.

(கடவுள் வாழ்த்து : 48)

**நூலின் பெயர்:**

தமது நூலுக்கு நவமணிமாலை எனப் பெயரிடப்பட்டமை பற்றி ஒரு செய்யுளில் இவ்வாறு சுட்டிக் காட்டியுள்ளார்.

திவமணி புனித ஞான திருமணி வரிசை மேவுந்
தவமணி கௌதுல் லகுலம் தஸ்தக்கீர் முகியித் தீன்றந்
துவமணி சரிதை யான தோற்றமே கொண்ட மாண்பின்
நவமணி மாலை யென்ன நற்பெயர் பொறப்பின் இட்டே
(கடவுள் வாழ்த்துப் படலம்: 40)

நவமணிமாலை என்னும் சொற்றொடரை நவ+மணி+மாலை எனப் பிரிக்கலாம். நவம் என்னும் சொல்லுக்குப் பல பொருள் உண்டு. நவமணி என்று சொல்லும் பொழுது கோமேதகம், நீலம், பவளம், மரகதம், மாணிக்கம், முத்து, புருடராகம், வைடூரியம், வயிரம் என ஒன்பது வகையான மணிகளை-அரதனங்களைக் குறிக்கின்றது. ஒன்பது மணிகளைக் கொண்டு அமைக்கப்பட்ட மாலை என நவமணி மாலை பொருள்படும். ஒன்பது மணிகள் கோர்க்கப்பட்டது போன்று விளங்கும் மாலை எனப் பொருள் கொண்ட நவமணிமாலை எனலாம். ஆனால் இங்கே ஆசிரியர் நவம் எனக்கருதியது புதுமை என்பதேயாகும். அபூர்வமாக நிகழ்த்தப்படும் ஒரு செயலைப் புதுமையான செயல் என்பர். அபூர்வமான அச்செயல் அதிசயமானதாயுமிருக்கும். அத்தகைய புதுமையான செயல் இயற்கையைக் கடந்ததாகவும் அமையும். இயற்கையாகச் செய்ய முடியாத ஒரு செயலைச் செய்துகாட்டுவதை புதுமையான செயல் என்பர். காரணச் செயலாக அது அமைந்து விடுகின்றது, இங்ஙனம் முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் நிகழ்த்திக் காட்டிய அபூர்வமான அதிசயமான. புதுமையான, நவமான செயல்களை மணிபோல் தொகுத்து இயற்றப்பட்டதே நவமணிமாலை எனக் கூறுதல் பொருத்தமுடைத்தாம். இந்த நவமணிமாலையிலும் நவ என்னும் சொல் ஏறத்தாழ அறுபது தடவைகள் பயன்படுத்தப்பட்டு உள்ளமையைக் காணலாம். அற்புதம், புதுமை என்பதைக் குறிக்கவே பெரும்பாலான சந்தர்ப்பங்களில் நவ என்பது பயன்படுத்தப்பட்டுள்ளது.

நாதாராங் கௌதுல் லகுல நவபுகழ் சரிதையாலே
(கடவுள் வாழ்த்து: 30)

என வந்துள்ள செய்யுளடியில் புதுமையான, அற்புதமான என்பதைக் குறிக்கவே நவ என்பது பயன்படுத்தப்பட்டுள்ளது.

நன்முறை யொலிகள் நாதர் நவந்திகழ் முகியித் தீன்றம்
(முன்முறைப் படலம் 1)

... நவமொடுதீன் முந்நீ ருலகின் விளக்கவிரு

(முன்முறைப் படலம் : 134)

வரத்தை நவத்தை யுடை யவராய்
வளஞ்சேர் ஜெயிலா னியினு திப்பார்

(முன்முறைப் படலம் :138)

அவனியிற் பெயர்தாஞ் செய்யி தப்துல் காதிருஎன் ருகும்
நவமுறும் பட்டப் பேர்நன் முகியித்தி னென்ரும்

(முன்முறைப் படலம் : 185)

தவறது மின்றிமேக வரிசிப்பத் தானியங்கள்
நவமுற மலிவுமாக

(முன்முறைப் படலம் : 185)

கொண்ட வரசன் காணக்காட்டி வித்த
புநிதநவங் கோன்மை மேன்மை

(முன்முறைப் படலம் : 241)

நலிவிலாக் காரண நவமு கியித்தீன்
(ஒலியுல்லாஹ் அவதாரப் படலம் : 5)

அகதெனும் பொருளிறை யருளி ஞலுமிப்
பகர்நவ நிகழ்ந்தவர் மேன்மை பார்மிக
(ஒலியுல்லாஹ் அவதாரப் படலம் : 5)

நாலாவ துத்தம் நவக்குதுபு நாதர்
(ஒலியுல்லாஹ் அவதாரப் படலம் : 95)

இப்படி நவங்கள் பதமென் னுமடை யாளம்
(ஒலியுல்லாஹ் அவதாரப் படலம் : 29)

இவைகள் போலவ நேகமுண்டவர்நவ மியல்பாய்
அவைகளிற் பலர்சொற் றுமுண்ட வையன்றி யடங்கா
தவைகளும் பலவுண் டப்துல் காதிறற் புதங்கள்
(ஒலியுல்லாஹ் அவதாரப் படலம் : 106)

எத்திசைக்கு மாமணிவிளக்கெனநவ மிலங்க
(திருவாய்மைப் படலம் : 6)

எந்நில முமேநவ மெனப்ரப லியத்தி
(திருவாய்மைப் படலம் : 10)

நவநம் மாதியா கியறகு மானினி நஃகு
(திருவாய்மைப் படலம் : 51)

நமது தீன்விளக் கவர்நவ மென்கொல் யானவில்
(திருவாய்மைப் படலம் : 54)

வங்கிச வொலிசெய் யீதபுசாலி குக்கிரு கண்மணி யெனச்சீர்
பொங்கவர் மனையிவைமிக வொருநற் புத்திர ருதிப்பான் னவர்தம்
மிங்கித வியற்பேர் செய்யீ தப்துல் காதிரு முகியித்தீ னென்ப
(திருமேன்மைப் படலம் : 8)

அவர்புகழ் நவநல னவைகளைப் பகுத்து
(திருமேன்மைப் படலம் : 65)

நவமிக உடையதாக நானதா யிருப்ப னென்னும்
(திருமேன்மைப் படலம் : 73)

ஆதரத் தவர்மெய் மேன்மை யருணவந் தெரிவிப் பார்நற்
(திருமேன்மைப் படலம் : 83)

... நவ நாயகமும் வளர் பதவி ...
(தெரியுணர் உணர்த்திய படலம் : 77)

ஓதரிய உள்ளுணர் வினிற்கு மொலியென்னுஞ்
சாதநிலை பெற்றுநவ சற்புகழ் விளங்க
(கலிபா தெரிசனைபெற்ற படலம் : 39)

தமதா னனத்தை நவமே மிகுத்த தருணு தரக்க ருணைகூர்
நமதா சகற்று மகுமூ தருட்க ணயனு விழித்து நவில்வார்
(கலிபரிதரிசனை பெற்ற படலம் : 89)

பன்னொரு நவங் கண்டு பயன்பெற
(கலிபா தெரிசனை பெற்ற படலம் : 115)

சுந்த ரத்திரை யருளொடும் பார்ப்புகள் துலங்க
விந்தை யாவெழுந்தவை நிறை பறவையாய் விரிவாம்
அத்தரந்திடை பறந்தன செறிந்தினி தழகாய்
இந்த மாநவந் தன்னையந் நகருளரெவரும்
(அண்டசப் படலம் : 19)

நவஞ்செய் திங்கவ னருடர ஒலிகளி னணுகிற்
(அண்டசப் படலம் : 29)

பீங்கான் கவிழ்த் தெழுப்பித்துள பெரிதாநவ நவில்வாம்
(பீங்கான் கவிழ்த்தெழுப்பத்த படலம் : 1)

நவமிகு மதீன நபிதிரு றெளலா
நண்ணினர் புண்ணியம் பெருக
(பீங்கான் கவிழ்த்தெழுப்பித்த படலம் : 56)

... ஆதி
நவத்தின் சொற்றடை யாளமென்
றுரைத்தவர் நண்ணும்
(ஆடுமேய்த்தவர் படலம் : 44)

நவமு கியித்தீ னுமஞ்சொல் வார்தமை நண்ணும்
(நாடல் காண்பித்த படலம் : 46)

... நவ முகியித்தீ னயகர் கருணை
(நாடல் காண்பித்த படலம் : 49)

நவநித கௌது மீண்டநற் நற்சொல்லால்...
(கபுருளியை வெளிகாட்டு படலம்: 23)

நவநித வாய்மை யாவு நவிலற்க வெவர்க்கு மென்ன
(பயநிறுத்திய படலம்: 23)

நவமுற வினிதி னெடுமிக வழுத்தி
நவின்றிடு நன்னய விருப்பாம்
(அனைமனைதனையனும் படலம்: 54)

நனிதருந் துதியோ தலினெடுள்ளுருகி நவமுறச் செய்தனர்
அனைமனைதனையனும் படலம்: 76)

இருதலத் தொருவர்க் கெரியொரு
வித்த விரும்புகழ் நவமெடுத் திசைப்பாம்
(இருதலத்தொருவற் கெரியொருவித்த படலம்: 1)

நவமுறத் தெரிவி ரெனவறி வித்த நாதரே...
(இரு தலத்தொருவற் கெரியொருவித்த படலம்: 19)

எம்மிறை யெனுமந் நாத
ரிசைநவ முதுகைச் செல்வோர்
(சஞசாவுய்ந்த படலம்: 42)

எனையென் மனுளர் தமைப்புவி விளங்க
விசையொடும் பெயர்சொலக் கலமென்
றனையனை மனையை யினத்தரை நவமாத்
தந்தநற் றருமதா யகமே
(கப்பலெழும்பு படலம்: 41)

நன்னய மானந வந்தெரி சிப்ப
(கப்பலெழும்பு படலம்: 55)

ஞாலத்திற் காணெண நவமென் றேதுவார்
(கப்பலெழும்புப் படலம்: 89)

குருவளர் கருணை பெறுகுவா னவர்கு சேசய
மலர்ப்பதம் பணிந்தொண்
டருவளர் நவமா மகத்வசை தன்ய
ஜகதசற் குருநயி ஞரே
(அபா முகம்மது ஜாவறு வரவு படலம்: 3)

நவநித தாதை கௌதுநா யகமா
நலன்றரு முகியித்தீ னயினர்
இவனுவ ணெவனும் விளங்க மாநவமெய்
யிசைப் பிரபலம் வளர் வுறவே
(ஹஜ்ஜியற்றி வந்த படலம்: 8)

செப்பொணுநவத் தெந்தை சிறப்புற
(ஹஜ்ஜியற்றி வந்த படலம்: 57)

உதவி யாமீ னிறைகு மத்தொலிசீர்
புதுமை நவம் வாழி
(ஹஜ்ஜியற்றி வந்த படலம்: 95)

மேலே எடுத்துக்காட்டப்வற்றுள் எல்லாம் நவம் என்னும் புதுமையை, அற்புத நிகழ்ச்சியைக் குறிப்பிடவே பயன்படுத்தப் பட்டுள்ளன. முகியித்தின் ஆண்டவர் செய்து காட்டிய அதிசய நிகழ்ச்சிகளை வருணிக்கவே 'நவம்' என்னும் பதம் பயன்படுத்தப் பட்டுள்ளது. எனவே முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் நவமா செயல்களைப் புதுமையாம் சாதனைகளை வருணிக்கும் காப்பியம் இதுவாதலால் இக்காப்பியம் நவமணிமாலை எனப்பெயர் பெற்றுள்ளது.

முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் அற்புதச் செயல்களை நவம் எனக் குறிப்பிடாது சில செய்யுட்களில் புதுமை எனச் சுட்டிஉள்ளார் ஆசிரியர்.

திடந்தரும் புதுமைகண்டு
பெண்ணிழந் துடன்சென்ருர்தம்
(செல்வியர் செல்வராம் படலம்: 76)

தணர்வறு புதுமை கண்டூர்ச் சகலரும்
அதிஜ யித்தார்
(செல்வியர் செல்வராம் படலம்: 81)

இத்தகை யாக வாய்மை யேந்திழைக் கிரங்கிப் பெண்கள்
அத்தனை யையுநல் லாணென் றருள்விரி பூவான் வாழ்த்து
மொத்தமாங் குதுபு நாதர் முகியித்தீன் புதுமைப் பூப்பைத்
தத்துவத் தாரு ணர்ந்தியார் சொலத்தகு மெனத்து தித்தார்
(செல்வியர் செல்வராம் படலம்: 83)

**காப்பிய அமைப்பு :**

காப்பிய அமைப்பினைப் பார்க்கும்பொழுதும் நவமணிமாலை என்னும் காப்பியத்தின் பெயரில் அமைந்துள்ள நவ என்னும் சொல் அற்புத நிகழ்ச்சிகளாம் புதுமைகளைச் சுட்டுவதாகவே அமைந் துள்ளது. நவமணிமாலே என்னும் காப்பியத்திலே 2335 செய்யுட்கள் 35 படங்களில் அமைந்துள்ளன. ஒவ்வொரு படலத்திலும் உள்ளடக்கம் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் அற்புத சாதனையை விவரிப் பதாகவே அமைந்துள்ளது. கடவுள் வாழ்த்து, நாட்டுப்படலம், நகர்ப் படலம், ஐந்தாவது படலமான ஒலியுல்லா அவதாரப் படலம் என்னும் இந்நான்குமே முகியித்தீன் அவர்கள் வாழ்க்கை வரலாற்றுடன் தொடர்புள்ளனவாய் அமைந்துள்ளன. இயற்கை நிகழ்ச்சிகளாய் அமைந்துள்ளன. மூன்ருவது படலம் முன்முறைப் படலம். இப்பட-லத்திலும் புதுமைகளே பேசப்படுகின்றன. முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் உலகிலே பிறக்குமுன்னர் எங்கே இருந்தார்கள் எப்படி இருந்தார்கள் என்பதைப் பற்றிய விளக்கம் முன்முறைப் படலத்தில் விரிவாகத் தரப்பட்டுள்ளது. செயற்கையே இப்படலத்திலும் ஏனைய படலங்களிலும் இடம்பெற்றுள்ளது. மூன்ருவது படலம், உட்பட ஏனைய முப்பத்தொரு படலங்களிலும் முகியித்தின் ஆண்டவர்கள் செய்து காட்டிய இயற்கை இறந்த அற்புத நிகழ்ச்சிகளே வருணிக்கப் பட்டுள்ளன. புதுமையான நிகழ்ச்சிகளே விவரிக்கப்பட்டுள்ளன. நவமானவை என்று அழைக்கக்கூடிய சம்பவங்களே வியந்தோதப் பட்டுள்ளன.

முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் வாழ்க்கையைக் கருப்பொரு ளாகக் கொண்ட ஏனைய காப்பிய ஆசிரியர்கள் வாழ்க்கை வரலாற்றை அடியொட்டியே தமது செய்யுட்களை யாத்துள்ளனர். ஆனல் ஐதுறூஸ் நயினர்ப் புலவர் தமது நவமணிமாலே என்னும் முகியித்தீன் புராணத் தில் முகியித்தீன் ஆண்டவரின் வாழ்க்கையில் அவர்கள் புரிந்து காட்டிய புதுமைகள் முக்கியமான ஓர் இடத்தைப் பெறச் செய்துள் ளார். நவமணிமாலேயின் கடைசிப் படலமாக அமைந்திருப்பது ஹஜ்ஜியற்றி வந்த படலம் என்பதாகும். இப்படலத்தில் கூட ஆசிரியர் ஒரு புது உத்தியைக் கையாண்டுள்ளார், முகியித்தீன் ஆண்டவர் அவர் களின் ஹஜ் பயணத்தை ஐதுறூசு நயினர்ப் புலவர் நேரடியாக வருணிக்கவில்லே. முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் மூத்த புதல்வ ரின் கூற்ருக முகியித்தீன் ஆண்டவரின் ஹஜ் பயணம் நவமணிமாலே யில் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் எவ்வாறு ஹஜ் கடமையை நிறைவேற்றினர் என்பதை அவர்களுடைய மூத்த புதல்வன் கூறக்கேட்டவர் போல ஐதுறூசு நயினர்ப் புலவர் வருணித்துள்ளார்,

இங்கும் புதுமை இருப்பதைக் காணலாம். இதுவும் இந்நூல் நவமணிமாலை எனப்பெயர் பெற்றதற்கு ஒரு காரணமாய் இருந்திருக்க லாம். இதனைப் பதிப்பித்து அச்சிட்ட வரலாறு பற்றிய அகவற்பாவில்,

நவமணி கௌது நாயகர் சரிதை
நவமணி யதனால் நவமணி மாலை
எனப்பெய ரியற்றி...

எனக் குறிப்பிட்டுள்ளமையும் புதுமையாம் அற்புத நிகழ்ச்சிகள் முதன்மையாக இக்காப்பியத்தில் வருணிக்கப்பட்டுள்ளமையால் இக்காப்பியம் நவமணிமாலை எனப் பொருத்தமாகப் பெயர் இடப்பட்டுள்ளது எனலாம்.

அவையடக்கம்

ஏனைய காப்பிய ஆசிரியரைப் போலல்லாது ஐதுறூசு நயினார்ப் புலவர் நவமான புதுமையான இரண்டு வேறுபட்ட பொருள்களைக் குறிப்பிட்டுத் தமது நூலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அறிஞர் பெருமக்களின் நூல்களைப் பாற்கடலுக்கும் தமது காப்பியத்தை சுரைக் குடுக்கை (சுரைக்காய்க்குப்பி)க்கும் உவமித்துள்ளார். இரண்டுக்கும் உள்ள வேறுபாடு மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசத்தை விட அதிகமானது. தங்கப்பதக்கம் கொண்ட மாலை அறிஞரின் நூல்கள் என்றும் தமது நூல் பாசிமணியால் தொடுக்கப்பட்ட மாலை என்றும் குறிப்பிட்டுள்ளார். வேகமாகச் செல்லும் அழகிய குதிரையை அறிஞர்களின் நூல்களுக்கு ஒப்பிட்டுத் தமது நூலை சித்திரமாக வரையப்பட்ட ஒரு குதிரைக்கும் ஒப்பிட்டுள்ளார். இங்ஙனம் தமது தாழ்மையெனும் நற்பண்பினை எடுத்துக்காட்டி உள்ளார். இக்கருத்துக்களையும் உவமை உவமேயங்களையும் கொண்ட ஐதுறூசு நயினார்ப் புலவரின் அவையடக்கச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

சுதைக்கடற் கொருபால் வைத்த
சுரைக் குடுக்கை யினைப்போலும்
பதக்கன மணிக்கோ வைக்கோர்
பாசியின் கோவை போலும்
கதிக்கவின் புரவிக் கோவக்
கற்கியைப் போலு மிக்கா
மதிக்கணின் புலவர் முன்னால்
வழங்குமென் புன்சொ லன்றே

(கடவுள் வாழ்த்துப் படலம்: 44)

இங்ஙனம் அவையடக்கம் கூறிய ஆசிரியர் புலவர்களிடத்தில் ஒரு வேண்டுகோளையும் விட்டுள்ளார்.

ஒரு பூவின் அழகினை அந்தப் பூவைப் பார்த்தே அறிதல் வேண்டும் அதே போன்று இறைநேசச் செல்வரான குத்புநாயகர் அவர்களுடைய புனிதச் சரிதையைப் படித்த பின்னரே அதன் முக்கியத்துவத்தை உணரலாம். அவி வேகமாய் இந்தச் செய்யுட்களைத் தாம் பாடியதாகவும் ஆனால் அதனைப் படித்த பின்னர் அதனைப் புலவர் ஏற்றுக்கொள்வர் எனத் தாம் நினைப்பதாகவும் ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

பூவினி னுரைப் பூவாற் பொருத்தமாக் கொள்வ தேபோல்
கோவியற் சிதைவு றுத குத்புநா யகர்தம் மின்ப
மேவிய சரிதை யாலிவ் வெள்ளறி வெனும்பாச் சொல்லை
பாவியற் புலவர் கொள்வா ரெனவெளிப் படுத்தன் மன்னே

(கடவுள் வாழ்த்துப் படலம்: 45)

### கடவுள் வாழ்த்து

ஏனைய காப்பியங்கள் உள்ள முறைமையினைப் பின்பற்றி இஸ்லாமியப் பெரியார் உரிய முறைப்படி கடவுள் வாழ்த்தில் வருணிக்கப் பட்டுள்ளனர். அல்லாஹ்வை வருணிக்க முதல் ஆறு செய்யுட்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. அடுத்த இரண்டு செய்யுட்களும் முகம்மது நபி (சல்) அவர்களைப் புகழ்கின்றன. ஏனைய இசுலாமிய அடிப்படையில் தோன்றிய தமிழ்க்காப்பியங்களில் முகம்மது நபி (சல்) அவர்களுக்கு அடுத்ததாக ஏனைய நபிமார்கள் கடவுள் வாழ்த்தில் புகழப்படுவர். ஆனால் ஐதுரூசு நயினார் இங்கே ஒரு மாற்றஞ் செய்துள்ளார். நவமணிமாலையின் நவத்தன்மையை—புதுமையைச் சுட்டிக்காட்டுவது போல் அமைந்துள்ளது இந்த மாற்றம். எந்த காப்பிய ஆசிரியரும் தம் கடவுள் வாழ்த்துப் படலத்தில் வானவர் என்னும் மலாயிக்கத்து மாரைக் குறிப்பிடவில்லை. ஆனால் ஐதுரூசு நயினார்ப் புலவர் ஒரு புதுமையாக ஒரு செய்யுளில் மலாயிக்கத்துமாரைப் புகழ்ந்துள்ளார். நபிகள் நாயகம் முகம்மது (ஸல்) அவர்களை இரண்டு செய்யுட்களில் புகழ்ந்துவிட்டு ஏனைய நபிமாரைப் புகழ்ந்து பாடுவதற்கு முன்னர் மலாயிக்கத்துமாரைக் குறிப்பிட ஒரு செய்யுளைப் பயன்படுத்தி உள்ளார். அவ்வாறு மலாயிக்கத்துமாரைக் குறிப்பிடும் பொழுது அவரவர் பொறுப்பாயுள்ள தொழிலையும் சுட்டிக்காட்டி உள்ளார். இறைவனுடைய இறைகட்டளை என்னும் வஹியை நபிமாருக்கு அறிவிப்பவர் ஜிபுறீல் (அலை) அவர்கள். ஆறுகடல் முதலிய நீரினுக்குப் பொறுப்பாயிருப்பவர் மீக்காயில் (அலை) அவர்கள். காற்றுக்குப் பொறுப்பாயிருப்

பவர் இசுருபீல் (அலை) அவர்கள். நல்லவர்களின் உயிரைக் கவரும் பொழுது இலகுவாகவும் தீயவர்களின் உயிரைக் கவரும் பொழுது கடுமையாகவும் நடந்து கொள்ளும் சிறந்தவர்களின் உறவினர் இசுருயீல் (அலை) அவர்கள். அறுசு என்னும் அரியாசனத்தைத்தாங்கிக் கொண்டிருக்கும் மலாயிக்கத்துமார்கள், அல்லாஹ்வின் ஏவலை உடனுக்குடன் நிறைவேற்றிக் கொண்டிருக்கும் ஏனைய அமரர்கள், நன்மையே செய்து கொண்டிருக்கும் மற்றைய வானவர்கள், அவர்கள் அத்தனை பேரையும் நினைத்து நம்பிக்கை கொண்டு அவர்கள் புகழ் பாடுவோம். இவ்வாறு ஒரு செய்யுளில் புதுமை ததும்ப மலாயிக்கத்து மாரைப் பற்றிப் பாடியுள்ளார் ஆசிரியர்.

ஆதியொகி கொண்டுவரு சிபுரீலையும்
    அறலினர சானமீக் காயிலையும்
வாதவர சானவிசு ருபீலையும்
    வரருறவ ராணவிசு ருயீலையும்
சோதிதிகழ் அறுசினையெ டுத்தோரையும்
    துய்யோன்ற ணேவனனி செய்வோர்களாம்
தீதகலு மற்றுமுள வானோரையுஞ்
    சிந்தைதனி லேநாடி மிகவோதுவாம்

(கடவுள் வாழ்த்துப் படலம் : 8)

ஏனைய காப்பிய ஆசிரியரைப் போலல்லாது இறை நேசர் பலரின் பெயர்கள் கடவுள் வாழ்த்தில் குறிப்பிடப்பட்டுப் போற்றப்பட்டுள்ளன. பாட்டுடைத்தலைவர் முகியித்தின் ஆண்டவர்(16), பீர்முகம்மது கௌது (17) சாகுல் அமீது ஆண்டகை (18) ஏடனிலுள்ள குத்பு செய்யித் அப்துல்லாஹ் ஐதுரூஸ், புதுமனையில் அடங்கியுள்ள அப்துற்றகுமான் செய்யிது கோயிலாண்டின் வலிய சீதி செய்யிது, செய்யிது செய்கு வள்ளல்,செய்யிது அலவி,கண்ணூர் புகாரி செய்யிது முகம்மது(20)தென் சேரை (குலசேகரப்பட்டணம்) செய்யிது சிருஜுத்தீன் ஒலி (21) சேரை நகர் பீர்செய்யிது முகம்மது ஐகுபறுகுசைனி (22),காலன்குடி ஹத்தாது வொலி செய்யிதப்துல்லா, சதக்கத்துல்லா, உமறு லெப்பை சாகிபு (24) பூலாற்று நூகுவொலியுல்லாஹ் (25) நபிபுகழ் பாடிய புலவர்களான செய்கு அலி (ஆலிப் புலவர்), உமறுப் புலவர், காசிம் புலவர், சவாதுப் புலவர், மின்ஞ நூறுத்தின் புலவர் (26), காயல் உமறுலியுல்லாஹ் அலி மரைக்கார் புதல்வர் மீராகனி (27), செய்கு அலி ஜபறத்தி (28), கீழக்கரை பீர்ஆலிம் செய்கப்துல் காதிறு (29) மகுமூது லெப்பை யாலிமின் புதல்வரின் புதல்வரான சென்னையில் அடங்கி இருக்கும் செய்கு அப்துல் காதிர் நயினர் லெப்பை ஆலிம் புலவர் (30) பீர் முகியித்தீன் (31)என்பவர்கள் இக்காப்பியக் கடவுள் வாழ்த்தில் புகழப் பட்டுள்ளனர்.

### உரை தந்தோர்

அப்துல்லாகித் துருபி அறபு மொழியில் இருபது அத்தியாயங்களில் முகியித்தீன் ஆண்டவரின் வாழ்க்கை வரலாறு எழுதி இருந்தார்! இச்செய்தியும் ஒரு செய்யுளில் (32) குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை எழுதித் தந்தவர் செய்யிது முகம்மது கண்ணூரி என்பவர். இவர் அபூசாலிகு என்பவரின் புதல்வர். இவர் முகம்மது காசீம் என்பவரின் புதல்வர் (33). கருத்துரை வழங்கியவர் பூவாறு, காலி ஹாஜி பக்கீறு முகியித்தீன் என்பவரின் புதல்வர் குட்டிகுசைன் என்பவராவார் (34).

### மூலநூல்

குலாசத்துல் முபாகிரு, லதாயிபுல் மினன், சுனனுல் முசுத்தபா, பகுஜத்துல் லசுரூர், இறுசாதுல் யாபிகீ துபுபிகானி என்பன (35) மூல நூல்களாகக் குறிப்பிட்டுள்ளன. காகிர் பகுதியில் வாழ் முகம்மது அப்துல் காதிறு லெப்பை ஹாஜியின் புதல்வரான முகம்மது அபூபக்கர் லப்பை என்பாரின் புதல்வரான முகம்மது அப்துல் காதிறு லெப்பை ஆலிம் என்பவர் தமிழில் உரை வழங்கி உள்ளார்.

### கொர்டைநாயகர்

நவமணிமாலை என்னும் முகியித்தீன் புராணத்தைப் பாடுவதற்கு ஆசிரியருக்குப் பொருளுதவி புரிந்தவர் இஸ்லாம்புரத்தைச் சேர்ந்தவர். ஆனால் இன்று இந்த இஸ்லாம்புரம் ஆசிரியர் குறிப்பிடும் இடத்தில் இல்லை. குலசேகரப்பட்டணத்துக்குத் தென்பக்கமாய் இஸ்லாம்புரம் இருந்தது என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இஸ்லாம்புரம் ஒரு காலத்தில் (1855 வரையில்) சிறந்து விளங்கி இருக்க வேண்டும். ஏனெனில் அவ்வாறு இஸ்லாம்புரத்தில் கொடைநாயகர் வாழ்ந்த காலத்திலே தான் ஐதுறூசு நயினார்ப் புலவர் அவரிடமிருந்து பொருளுதவி பெற்றுள்ளார். இப்பொழுது இஸ்லாம்புரம் இல்லை. இஸ்லாம்புரத்தில் வாழ்ந்தவர்கள் பிற்காலத்தில் அங்கிருந்து சென்று குலசேகர பட்டணத்தில் குடியேறி இருக்க வேண்டும். ஏனெனில் அங்குள்ள முதியோர் கூற்றுப்படி இஸ்லாம்புரத்தில் இருந்து வந்து குலசேகர பட்டணத்தில் பலர் குடியேறி உள்ளனர். இன்றும் அத்தகையோர் தம்மை இசுலாம்புரத்தவர் என அறிமுகஞ் செய்யும் முகமாக தம் பெயருக்கு முன்னால் முன்னடையாக இ என்னும் எழுத்தைப் பயன் படுத்துகின்றனர். இ இன்னார் என்று கூறிக் கொள்வதில் பெருமை அடைகின்றனர். கடவுள் வாழ்த்துப் படலத்தில் மாத்திரம் மூன்று செய்யுட்களில் கொடைநாயகர் சுட்டப்பட்டுள்ளார். முதலில் அடுத் தடுத்துவரும் இரண்டு பாடல்களில் கொடைநாயகர் இஸ்லாம்

புரத்தைச் சார்ந்தவர் என்பதும் உமறுகத்தாப் என்பவரின் புதல்வர் என்பதும் கொடைநாயகரின் பெயர் செய்கு முகம்மது என்பதும் குறிப் பிடப்பட்டுள்ளன. கொடைநாயகர் உதவி புரிந்த பாங்கினை இவ்வாறு பாடியுள்ளார்.

கனதியின் பனுவ லின்ன காரண கமத்தைச் செய்வான்
இனிகொள கருத்தற் கின்பி னியற்றிநன் நன்னிதி மற்றுந்தான்
மனதுவந் துதவி னன்சீர் வளரிசு லாம்பு ரத்தார்
தனத யாலன் யசம்பன்ன சௌமிய சற்கு ணலன்

உத்தம வுமறு கத்தா புதவிய செல்வ னீத
பத்தியின் முகியித் தீன்பொற் பதகதித் துணைம ருதுள்
வைத்துண ரின்ப செய்கு முகம்மது மிறைநல் லன்பால்
புத்திர சம்பத் தோங்கப் புகழ்மிக வளர நாளும்

(கடவுள் வாழ்த்துப் படலம்: 42)

இந்நூல் குலசேகரப் பட்டணத்தில் அரங்கேற்றப்பட்டதென்றும் இக்கொடைநாயகர் வரிசைகள் பலவற்றைச் செய்து பொருளுதவி புரிந்தார் என்றும் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது,

திருமலி சேரை வாழ்நந் தீனவர் மன்றி னின்ன
குருமுகி யித்தீன் ஆகங் கூறநல் வரிசை செய்த
மருமலி வாகன் செய்கு முகம்மதுஞ் செல்வர் நற்சீர்
தருமரு மக்கள் கோத்ரந் தழைத்திறை யருளால் வாழி

(கடவுள் வாழ்த்துப் படலம்: 51)

தமது கொடைநாயகர் இஸ்லாம்புரம் என்னும் ஊரைச் சார்ந் தவர் என்றும் அவர் தம் தந்தையார் பெயர் உமறு கத்தாப் என்றும் பல செய்யுட்களில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

ஆக்க மேவிய விசுலாம் புரத்த னல்லிர்
யோக்கிய செய்கு முகம்ம துத்தம...

(நகரப் படலம்: 9)

பூமகள் வதிபூந் தடஞ்செறி யிசுலாம் புரர்குலா
திபனெழில் சிறந்த

(ஒலியுல்லா அவதாரப் படலம்: 66)

ஓங்கு சீரிசு லாம்புரத் துமறுகத் தாபு
தீங்கு ருமகன் செய்குமு கம்மதைத் தினமும்

(திருவாய்மைப் படலம்: 5)

பொன்னூர் வளஞ்சேர் வளரிசுலாம்
　　புரமன் னுமறு கத்தாபு
தென்னூர் மகன்மெய் நலன்றேடுஞ்
　　செய்கு முகம்ம துளத்தவிசின்
(தெரியுணர்வுணர்த்திய படலம் : 88)

வண்மையிசு லாம்பதிநன் மன்னுமறு கத்தா
புண்மைவர பேறினுதித் தோன்செய்கு முகம்மது
(செய்குமார்கள் சொற்கொத்த படலம் : 42)

புளகபூந் தடவிசு லாம்பு ராதிபன்
தளர்வறு முமறுகத் தாபு தந்தருள்
வளர்புகழ் செய்குமு கம்மதுள் ளம்போல்
(ஆடை கொள்வித்த படலம் : 15)

கமலை மேவிசு லாம்புரத் துமறுகத் தாபின்
அமுத சொன்மகள் செய்குமு கம்மதன் புற
(அண்டசப் படலம் : 13)

இங்கித வெழிலி சுலாம் புரத்துறை
சங்கமா னுமறுகத் தாபு சந்ததி
மங்கல செய்குமு கம்ம தோய்வுரு
(காயிக்குக் காண்ப படலம் : 19)

திருவளர் இசுலாம் புரத்தினன் எனுந்தென் சேரையம் பதிவளர் செழுமைந்
தருவளர் கரத்தா னுமறுகத் தாபு சந்ததி செய்குமு கம்மது
(பீங்கான் கவிழ்த்தெழுப்பித்த படலம் : 49)

வளரிசு லாம்பு ரத்தின் மகிபதி யுமறு கத்தா
புளமகிழ் செல்வம் ...
(பீங்கான் கவிழ்த்தெழுப்பிய படலம் : 92)

நதிவா ரமுமேய்த் தாமுறுபா னலத்தி னிசுலாம் புரனிலமா
(ஈகைப் படலம்: 15)

　　அணியிசு லாம்பு ரத்தான்
உந்துநேர் உமறு கத்தா புதவும் செய்கு முகம்மது
(புத்திர தானப் படலம் : 56)

பூங்கம லத்தண் வாவி பொழில்செறி சிறந்த சீர்த்தி
ஓங்கிசு லாம்பு ரத்தி னுமறு கத்தாபு செல்வன்
தீங்ககல் பலன்கொள் வானோர் செய்கு முகம்மதுள்ளில்
(பெண் பிறந்தானும் படலம் : 28)

நல்வள விசுலாம் பாக்க நரபதி யுமறு கத்தாப்
செல்வவர்த் தகசு நீத செய்குமு கம்ம துள்ள
(சஞசாவுய்ந்த படலம் : 40)

பொருணயம் பலமா வளமுறு மிசுலாம்
புரத்தின்மன் னுமறு கத்தாபின்
தெருணல மகவாஞ் சகலசம் பன்னன்
செய்குமு கம்மதுள் ளுவந்து...
(பக்கீறு வேட்டல் படலம் : 136)

... இசுலாம்
புரபதி செய்கு முகம்மது
(அபா முகம்மது ஜவாறு வரவுப் படலம் : 17)

தவறு ருவிசு லாம்புரத் துமறுகத் தாபின்
உவகை முன்மகன் செய்கு முகம்மது...
(ஹஜ்ஜியற்றி வந்த படலம்: 82)

கொடை நாயகரின் தந்தையின் பெயர் பிறப்பிடம் சுட்டப்படாமல் குறிப்பிடப்படும் சில பாடல்கள் உள்ளன.

பொன்மலி யுமறுகத் தாபு புத்ரரின்
முன்மகன் செய்கு முகம்மது...
(நாட்டுப் படலம்: 33)

நவமுற மலிவு மாக நல்வளத் துமறு கத்தாப்
உவகை நன்மகன்...
(முன்முறைப் படலம்: 185)

செய்குரை தவிர்சீர் ஈகை யுமறுகத் தாபு புத்திரன்
செய்கு முகம்மது...
(முன்முறைப் படலம்: 247)

உள்ளமீதி னுமறுகத் தாபருள்
தெள்ளி தைப்பெறு செய்கு முகம்மது
(கலிபா தெரிசனை பெற்ற படலம்: 131)

இட்டமா முமறு கத்தா பெழின் மகன்
(கபுருளியை வெளிகாட்டு படலம்: 26)

நன்றுயர்ப தம்பெறந யந்துமறு கத்தாப்
(அருணோக்கப் படலம்: 10)

தருமரு வுமறு கத்தாப் தருசுபுத் திரகு ணலன்
திருமலி நயசம் பன்ன செய்குமுகம்ம தென்றும்
(செல்வியர் செல்வராம் படலம்: 79)

ஆசிரியர், ஐதுறூசு நயினூர்ப் புலவர் சில செய்யுட்களில் கொடை நாயகர் செய்கு முகம்மது அவர்களையும் சுற்றத்தாரையும் வாழ்த்தி உள்ளார்.

மருமலி வாகன் செய்கு முகம்மதுஞ் செல்வர் நற்சீர்
தருமரு மக்கள் கோத்ரம் தழைத்திறை யருளால் வாழி
(கடவுள் வாழ்த்துப் படலம்: 51)

முன்மகன் செய்கு முகம்மது ஒண்மனை
யின்மது கொலிதம் மேலிசைந்து வாழ்த்துமந்
நன்முறை யவர்புகழ் நாளு மோங்குமால்
(நாட்டுப் படலம்: 33)

... செய்குமு கம்ம
தெண்மையற வாழிபுக ழேறவொலி பேராற்
றண்மையற நல்கினிய நேர்ச்சை தவம்வாழி
(செய்குமார்கள் சொற்கொத்த படலம் : 42)

புரபதி செய்கு முகம்மதுத் தமத்தின்
போற்றலின் வைத்துவாழ்த் துதல் போல
(அபா முகம்மது ஐவாறு வரவு படலம் : 17)

சேரை என்பது குலசேகரப்பட்டணமாகும். சேரை என்னும் சொல் இப்பட்டணத்தைக் குறிப்பிடப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

திருமலி சேரை வாழ்நந் தீனவர் மன்றி னின்ன
(கடவுள் வாழ்த்துப் படலம் : 51)

சேமமார் செழுந்தென் சேரையம் பதிவாழ்
செய்குமு கம்மதும் யாமும்
(ஒலியுல்லாவதாரப் படலம் : 66)

திருவள ரிசுலாம் புரத்தின னெனுந்தென்
சேரையம் பதிவளர் செழும் ஐந்தரு
(பீங்கான் கவிழ்த்தெழுப்பித்த படலம் : 49)

கொடை நாயகர் உமறு கத்தாபு என்பவரின் மூத்த மகன் என்பது முன் மகன் என முன்னர் குறிப்பிடப்பட்டது. தீதில்லாத வகையில் நல்ல சீர் வரிசைகள் எல்லாம் செய்தவர் கொடை நாயகர் என்பது இவ்வாறு அமைந்துள்ளது.

தீது ருநல வரிசைசெய் செய்குமுகம்மது
ஓதந் தீர்த்தரு ளருளெம் கபூறுற்ற கீமே
(ஆடு மேய்த்தவர் படலம் : 51

மிக்க மன்னிப்போனும் மிக்க அன்பு காட்டுபவனுமாகிய அல்லாஹ் கொடை நாயகரைக் குறைவராமல் காத்தருளும்படி ஆசிரியர் இறைவனை இங்ஙனம் வேண்டியுள்ளார்.

கொடை நாயகரின் செல்வம்,

அவர்திருப் பெயர்சொலின் அவம்பொய் போமென
உவகையின் செய்கு முகம்ம துள்ளம்போற்
றவரற நினைத்தத போதர் செல்வமெத்
திவசமும் வளர்தரச் சிறந்திருந்தனர்
(நம்பியற் காட்டிய படலம் : 34)

என்றும் நயன் என வழங்கப்படும் கொடைநாயகரின் வள்ளன்மை,

நலனுறத் திடச் செய்குமு கம்மதி னயன்போற்
(மலக்கல் மவுத்திடத்துயிர்கள் மீட்டுவித்த படலம்: 33)

என்றும் செல்வம் மலிந்த அன்பு மிகுந்தவர் கொடைநாயகர் என்பது

திருமலி நயசம் பன்ன செய்குமு கம்ம தென்றும்
(செல்வியர் செல்வராம் படலம்: 79)

என்றும் கொடைநாயகரின் உவகையும் மகிழ்வும்,

முறைவளர் செய்குமு கம்ம தோகை போல்
(கப்பலெழும்பு படலம்: 100)

என்றும் கொடைநாயகர் சகல சம்பன்னன் எல்லாப் பேறும் பெற்றவர் என்பது

தெருணல மகவரஞ் சகல சம்பன்னன்
செய்குமு கம்மது...
(பக்கீறு வேட்டல் படலம்: 136)

எனப் புகழப்பட்டுள்ளமையைக் காணலாம்.

### இயற்கை வருணனை

வண்டுகள் பாடின. அவை இசைப் பயிற்சி செய்வது போன்று காட்சி தந்தன. அவற்றுக்கு இசைபயில் அரங்கமாக அமைந்தது தாமரை பூக்கள். தாமரை மலர்கள் தடாகங்களிலே மலர்ந்திருந்தன. அத்தகைய தடாகங்கள் நிறைந்து பூஞ்சோலைகள் திகழ்ந்தன. அதன் பக்கத்திலே பல வயல்கள் இருந்தன. அதனையடுத்து சிறிய சிறிய சுனைகளைக் கொண்ட கான்யாறுகள் தென்பட்டன. அவற்றையும் சற்றுத் தாண்டிச் சென்றவிடத்து பாலை நிலம் காட்சி வழங்கியது.

அவற்றையும் கடந்து சென்றால் பல வழிகள் உள்ளன. அவ்வழிகளில் சென்றால் பல ஊர்களை அடையலாம். அந்த ஊர்களிலெல்லாம் ஓசை முழக்கம் எழுந்தது. இன்னும் சற்றுத் தூரம் செல்லின் பகுதாத் நகரைச் சூழ்ந்துள்ள நதியைக் காணலாம். இங்கே கூறப்பட்ட ஊர்களுக்கு அணித்தாய் விளங்கியது பகுதாது என்னும் பெருநகர். இக்காட்சிகளையே ஐதுரூசு நயினார்ப் புலவர் தமது காப்பியமான நவமணி மாலையில் இவ்வாறு ஒரு செய்யுளில் வருணித்துள்ளார்.

மூசி வண்டுக ளிசைபயில் செழுமலர் முளரியந் தடங்காவு
மாச கன்றதன் வயல்கழுங் குறுஞ்சுனை யாறுக ளொடுகோவும்
வீசு வெஞ்சுர முங்கடந் ததரிடை மேவுறல் பலவூர்கண்
டோசை மாநதி சூழ்பகு தாதடுத் துளதம தூரருகாய்

(பீங்கான் கவிழ்தெழுப்பித்த படலம்: 20)

இனி, ஒரு மருத நில வருணனை. மருத நிலத்திலே பல காட்சிகள். ஒரு பக்கத்தில் கரும்பு மரங்களைக் கொண்ட துடவை. மற்றொரு பக்கம் ஈத்தம் மரங்களைக் கொண்ட காடு. வேறொரு பக்கம் வாழை மரத்தோட்டம். இன்னொரு பக்கம் நெல் வயல்கள். பிறிதொரு பக்கம் தாமரை மலர்கள் பூத்து நிறைந்த குளிர்ந்த தடாகங்கள். அங்கே மருத நிலத்தில் பணிபுரியும் பெண்களின் குரவை ஒலி ஒரு புறத்தே முழங்கியது. மறுபுறத்தில் மதகினூடே பாய்ந்து செல்லும் நீரின் சப்தம் ஒலித்தது. இத்தகைய பல ஓசைகளைக் கொண்டு விளங்கியது அந்த மருத நிலம். இக்கருத்துக்களையே ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்:

கன்னலின் றுடவை யீத்தங்
கடங்கத லியின்பூந் தோட்டஞ்
செந்நெலின் வயல்கள் பூத்த
திருமலர் களின்றன் வாவி
அந்நலார் குரவை யோசை
ஆலம்பாய் மதகி னோசை
பன்னரும் பொழிற்றே மோசை
பயின்மரு தழுந்தெ ரிந்தார்

(பீங்கான் கவிழ்த்தெழுப்பித்த படலம்: 65)

குறிஞ்சி நிலத்துக்குச் செல்லும் மன்னர் பாலை நிலத்தைக் கடந்து போதல் வேண்டும். பாலை நிலத்தில் அங்கே வேடர் வாழ்ந்தனர். அங்கே வாழும் விலங்கினங்களையும் பறவைக் கூட்டங்களையும் வேட்டையாடி காலங் கழிப்பதே வேடரின் பிரதான தொழிலாகும். அத்தகைய வேடர் உலாவி வரும் நிலம் பாலை நிலம். அத்தகைய பாலை நிலத்திலே எவரும் கடந்து செல்ல முடியாத அளவுக்கு வெப்பம் அதிக

மாக இருக்கும். அந்தப் பாலை நிலத்தைக் கடந்து சென்றவுடன் மலைச்சாரல் தென்படும். குறிஞ்சி நிலமாகிய அந்த மலைச்சாரலிலே கிளிகள் உள்ளன குறத்தியர் அங்கு வாழ்ந்தனர். அந்தக் குறத்தியர் அக்கிளிகளை ஓட்டிக் கொண்டிருந்தனர். மரக்கொப்புகளிலே மலர்ந் திருந்த குளிர்ந்த பூக்களைத் தலையில் சூடியவர்களாக இருந்தனர். இராகத்தோடு பாடினர் அக்குறத்தியர் அவர்களுடைய பாடல்களுக்கு இசை அமைப்பதாக இருந்தது அவர்கள் கிளிகளை ஓட்டிட இயக்கிடும் கவண்கல்லின் ஓசை. இத்தகைய வளம்மிக்கது குறிஞ்சி நிலம். இதனையே ஆசிரியர் இவ்வாறு வருணித்துள்ளார்.

விலங்கினம் பறவைவேட்டை யாடிவேட் டுவரு லாவும்
தலங்கடந் தெவரும் செல்லாத் தழற்சுரங் கடந்து தத்தைக்
குலங்களைக் குறத்தி மார்தன் கோட்டலர் முடித்தி ராகத்
துலங்கவ ணுல்வீ சிப்பா டுயர்வரைச் சார்பு நீந்தி

(பீங்கான் கவிழ்ந்தெழுப்பித்த படலம்: 67)

உவமையும் உருவகமும்

வேகமாய்ச் செல்வது குதிரை. மிக விரைவாகச் செல்லக் கூடியது அது. குதிரையின் வேகத்தைப் புலவர்கள் தனித்தனியே மனதுக்கு ஒப்பிடுவர். அம்புக்கொப்பிடுவர். காற்றுக் கொப்பிடுவர். மனம் எவ்வளவு வேகமாகச் செயல்படுமோ அதைவிட விரைவாய்ச் செல்லக் கூடியது குதிரை என்று கூறுவர். ஒருவன் வில்லிலிருந்து அம்பை மிக வேகமாக எறிவான். அந்த அம்பின் செலவைவிட விரைவாகச் செல்லக் கூடியது குதிரை என்பர். மற்றது காற்று. எதையும் அழிக்கத்தக்க வல்லமையுடன் வீசுவது காற்று. அத்தகைய காற்றைவிட வேகமாகச் செல்லக்கூடியது குதிரை. இவ்வாறு புலவர் குதிரையின் வேகத்தை வெவ்வேருக இம்மூன்றுக்கும் ஒப்பிடுவர். ஆனல் ஐதுறூசு நயினர்ப் புலவர் தமது நவமணிமாலையில் ஒரு செய்யுளின் ஒரே அடியில் மனம், அம்பு, காற்று என்னும் இம்மூன்றையும்விட வேகமாகச்செல்லக்கூடிய குதிரையின் மீது ஏறி தன்னைச் சேர்ந்தவர் அனைவரையும் அழைத்துக் கொண்டு கூட்டமாகச் சென்றமையை ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

தந்தைசொற் றிடச்சேய் மனதியைந் துடன்ருன்
 தரித்திடும் பல்லவுந் தரித்துச்
சிந்தையைச் சரத்தை யனிலத்தைப் பிந்தச்
 செய்திடும் வேகவாம் பரிமேல்

விந்தையி னேறித் தன்னைச்சார் சனமாம்
　　வீரர்கள் சிலரையுங்கூட்டிப்
பந்தியி னடத்தி அவர்கள் சூழ்வரத்தம்
　　பரியினை நடாத்தியே குற்ருன்

(கலிபா தரிசனை பெற்ற படலம்: 15)

காற்றின் வேகமாகச் சென்று அக்குதிரையில் ஏறினன் மைந்தன்: குதிரை வேகமாகச் சென்றது. காற்றின் வலுவைக் கொண்டு இயங்குவது பட்டம். காற்று பட்டத்தை வெகு தூரம் கொண்டு செல்லும். அவ்வாறு காற்றினல் வெகு தூரம் கொண்டு செல்லப்பட்ட பட்டம் போன்று அந்தக் குதிரை வெகு தூரத்தில் தென்படுவதாய் இருந்தது. இதனையே ஐதுறூசு நயினர் புலவர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளிலும்,

ஆவியெனு மைந்தனெ டவன்பரிமற் ரேர்கால்
பாவலியி னேதொலை பறந்திடு படம்போல்

(கலிபா தெரிசனை பெற்ற படலம் : 33)

கண்களிலிருந்து கண்ணீர் வடிவதை பல்வேறு புலவர்களும் வெவ்வேறாக வருணிப்பர். ஒவ்வொன்றையும் தனித்தனி உவமையணி பெற அமைத்துக் காட்டுவர். முத்து விழுவது போன்றிருக்கும் என்பர். வேறு விதமாகவும் உவமிப்பர். ஆனால் ஐதுறூசு நயினார்ப் புலவரோ கண்களிலிருந்து கண்ணீர வடிவதை மலையிலிருந்து நீரூற்று விழுவதுபோல் இருந்தது என்று இங்ஙனம் ஒப்பிட்டுள்ளார்.

எண்கொளாப் பெருமுச் சொடுமிகக் குழறி
　　இரவிநின் றூற்றிழி வனபோல்
கண்களால் புனல்சிந் துறவழு தலறிக்
　　கடலைப்பார்த் தானன மூடி

(கப்பலெழும்பும் படலம் ; 6)

இனி, உருவத்தைப் பார்ப்போம். உசூல் என்பதை ஒரு வித்துக்கு உருவகித்துள்ளார். உசூல் என்பது வேர்கள் எனப் பொருள்படும். திருமறையாம் திருக்குர்ஆன், பெருமானார் பொன்மொழியாம் ஹதீஸ், கருத்தொருமித்தல் என்னும் இஜ்மா, கலந்தாலோசித்து முடிவுக்கு வருதல் என்னும் கியாஸ் இந்நான்கும் பற்றிய கல்வி இல்முல் உசூல் என அழைக்கப்படும். இவை முஸ்லிம் மக்களின் வாழ்க்கையில் இன்றியமையாதனவாகும். எனவே, உயர்ந்த இந்த உசூல் என்னும் வித்தை எமது உள்ளம் என்னும் வயலிலே-இடத்திலே விதைக்க வேண்டும். அந்த உசூல் என்னும் மரம் வளர நீர் இன்றி

யமையாதது அல்லவா? எல்லாம் வல்ல இறைவனான அல்லாஹ்வின் றகுமத் என்று அழைக்கப்படும் அருள் என்னும் தெளிந்த நீரைப் பாய்ச்சி அந்த மரத்தை வளர்த்தல் வேண்டும். அந்தநீரை எப்பொழுதும் தெளித்துக் கொண்டிருத்தல் வேண்டும். அத்தகைய மரம் வளர்ந்து பல கிளைகளைக் கொண்டிருத்தல் வேண்டும். அவைதான் கமாலியத்தான கொப்புகள். சம்பூரணத் தன்மை பெற்ற கொப்புக்கள். இத்தகைய கொப்புக்கள் பலவாக வளர்ந்திட ஆவன செய்தல் வேண்டும். அறிய வேண்டிய இஸ்லாமிய அறிவுகளை ஆராய்ந்து அவற்றிற்கிணங்க ஒழுகி அல்லாஹ்வின் அருளைப் பெற்று பூரணத்துவத்தை மனிதன் பெற வேண்டும் என்பதைக் குறிக்கவே இந்த உருவகம் இங்கு மேற்கொள்ளப்பட்டுள்ளது, இக்கருத்துக்களையே ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார் நவமணி மாலை ஆசிரியர் ஐதுறூசு நெயினார்ப் புலவர்.

உயருகு லென்ற வித்தை உள்ளகத் தினில்வி தைத்து
நயனுற ஹக்குத் தஆலா றகுமத்தென் கிறதெண்ணீரை
மயமுற வேதொளித்து வளர்கமா லிய்யத் தான
வியனின்கொப் புகளைக் காலுண் டாய்மிக வளர வைத்தே

(தெரியுணர்வுணர்த்திய படலம்: 97)

### பெண்கள் பற்றிய வருணனை

பெண்ணைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது ஐதுறூசு நயினர் புலவர், 'அவள் உத்தமி. மிகுந்த பேற்றினைப் பெற்றவள். வரம் பெற்றவள். குணமே குடி கொண்டவள். குளிர்ந்த உள்ளம் படைத்தவள். தவறுகள் எல்லாவற்றையும் கடந்தவள். மயில் போன்ற சாயலை உடையாள். கிளி போன்ற மொழியையுடையாள். அன்னம் போன்ற நடையை உடையாள். உயர்ந்த பத்தினிப் பெண் அவள். இங்ஙனம் அப்பெண்ணின் சிறப்பியல்புகளைப் பாடியுள்ளார் ஆசிரியர்.

பெற்ற நாயகி யானவுத் தமிமிகு பேறுறும் வரமாது
குற்ற மாவன யாவையுங் கடிதருங் குளிர்ந்தசற் குணமேதை
உற்ற மாமயில் கிளிமொழி அனநடை யுயர்ந்தபத் தினிம டமான்
பற்றி ஞரணந் தேர்ந்துநற் றவம்புரி பாவையர்க் கரசானேர்

(பீங்கான் கவிழ்த்தெழுப்பித்த படலம்: 16)

காப்பிய மரபைப் பேணுமுகமாகப் பெண்களை வருணிக்கும் பொழுது கேசாதிபாதமாகப் பெண்ணை இரண்டு தடவைகள் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர் தமது நவமணிமாலை என்னும் முகியித்தீன் புராணத்

தில். கேசாதிபாதமாக எல்லா உறுப்புக்களையும் முதல் தடவையாக ஐந்து செய்யுட்களிலும் இரண்டாம் தடவையாக பதினெட்டுப் பாடல்களிலும் வருணித்துள்ளார்.

முதலாந் தடவையாக முன்முறைப் படலத்தில் 232 முதல் 236 வரை உள்ள செய்யுட்களில் கேசாதிபாத வருணனை இடம் பெற்றுள்ளது, குழலும் நெற்றியும் புருவமும் கண்ணும் ஒரு பாடலில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

காட்டின்விழ லானவந்த வரசனுமவ் வுடன்பெண்போற்
கமழ, கிற்பண்
கூட்டுபுகைத் தூபமிடுங் கனமனைய கருங்குழலுங் கோதண்
டம்போல்
தீட்டுதில கத்திலங்கு நெற்றியுநிம் பிலையனைய திட்டி வாளைப்
பூட்டுமுறை யெனும்புருவத் தோடுநஞ்சக் கோலனைய
போர்வேற் கண்ணும்
(முன்முறைப் படலம்: 232)

காது, மூக்கு, அதரம், பற்கள், சொல் என்பன மற்றொரு பாடலில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன.

வள்ளையெனுஞ் சிரவணமுஞ் சண்பகத்தண் வண்டணுகா
மலரை யேய
வெள்ளைமுனி குமிழெனுநல் லெழின்மூக்கு மதரமென
லிசைகோ பத்துள்
வெள்ளைமுருந் தொடுந்தரளஞ் சேர்ந்தவணி யெனுமெயிறு
மிளிர்செந் தேனென்
கிள்ளைமொழி குதலையினு மென்மையெனக் குயிலிசையிற்
கிளத்துஞ் சொல்லும்
(முன்முறைப் படலம்: 233)

மற்றொரு செய்யுளில் கன்னமும், முகமும், கழுத்தும், தோளும், கரமும், அங்கையும் விரலும் நகமும் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன.

கண்ணைநிகர் சொலும்படைக ளைத்தீட்டச் சாணையென்றுங்
காம ருள்ளத்
தெண்ணுசுரு பத்தையெண்ணத் துள்ளேகாண் கண்ணடி
யெனுங்க துப்பும்

தண்ணளின மலரனைய திருமுகங்கள் தரம்பணிகம்
தடந்தோள் வேங்கை
பண்ணிசையா முங்கைவிர லுகிர்நிகராங் காந்தளம்பூப்
பவளம் வச்ரம்
(முன்முறைப் படலம்: 234)

கொங்கையைப் பாட ஒரு செய்யுளையே முழுமையாகப் பயன் படுத்தி உள்ளார் ஆசிரியர்:

வடமலையை வளைத்தொதுக்கிக் குலமலைக ளோடிகலி
மதர்ப்பிற் ருக்கிக்
கடமலைக்கைக் கயங்களஞ்ச வனவகடிரி யிடத்தாய்வேழ்
கரியுந் தீர்த்தார்த்
தடமலைய வெதிரியின்றென் றெழுந்துமதத் தியூதபமுற்
ருப்போற் பொற்பாற்
குடமலையா திருத்தலும்போன் றிருவாய்க்கட் கருமைகொடுங்
குலவுங் கொங்கை
(முன்முறைப் படலம்: 235)

வேறொரு செய்யுள் மயிரொழுக்கையும், தொப்புளையும், வயிற்றையும், மருங்கினையும், துடையையும், முழங்காலையும் இங்ஙனம் வருணித் துள்ளது.

கரியிரண்டா லிற்றெடுத்த சங்கிலிபோன் மயிரொழுக்குங்
காம வில்லத்
திரிதலிலா மான்குளம்பு பணிப்படத்துக் கேறுபடி சிவணத்
தொப்புள்
உரியவவ்வா லிலைவயிறு முக்கலையும் துவள்கொடி போல்
உறும ருங்கும்
கரிகரத்தேய் துடையலவ தெனுமுழங்கா லனம்பிடிபோற்
கவின்கு லாவல்
(முன்முறைப் படலம்: 236)

இரண்டாவது தடவையாகக் கேசாதிபாத வருணனையை ஆசிரியர் கப்பலெழும்பும் படலத்தில் இடம்பெறச் செய்துள்ளார். ஒவ்வோர் உறுப்பையும் வெவ்வேறாக வருணிப்பதற்குப் பல செய்யுட் களைப் பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர். ஒவ்வொன்றையும் சுருக்க மாகப் பார்ப்போம். இச்செய்யுள்கள் கப்பலெழும்பும் படலத்தில் இடம் பெற்றுள்ளன,

குழல்

மாசிலெழி லின்சுருளின் மூகமளி யோவவண்ம லர்த் தொடையல்
சூடு குழலே (64)

நுதல்

விட்டமொடு பொட்டுமணி நன்னுதல் (65)

புருவம்

கட்டுசர ஞயுதல கோசரவி ழித்தொடுக வின்றனுவ
தோபுருவமே (65)

கண்

மைத்தனைய ணிந்திடுதன் மாவின்வடு வோவரிகொள்
வண்மையறு கண்ணி னிணையே (66)

கன்னம்

... நலன்
ருமுறு கபோலம் (67)

காது

பூமலரை வாடமுனி கத்திரியெனக் குலவுபொங்கெழி
லுறுங் குழையினள் (67)

மூக்கு

... இந்துக னத்திடையே
ஏதமுற வைத்தவர்செய் நாசியினள் (68)

தொண்டை

சீதமுறு தொண்டை (68)

இதழ்

ஓதம்விளை யாவணிசு வேததர ளம்பொதிசெவ்
வொண்டுகிர தோவிதழரோ (68)

பற்கள்

செப்பமுடை யோருளமு மேகரைய வாசமணி
சேயிழையன் ஞளெயிறரோ (69)

வாய்

ஈடிலத ரும்புநித பாலதுகொ லோமொழிவினம்
பரிதெம் மாலுவமையே (70)

முகம்

வார்பதும மம்மதியி னுன் முகம் வருந்தும் வருந்
தாவதன மாமலரினுள் (71)

தோள்

வான்மணிக ளின்பணிகள் சூடுநல பைங்கழையை
மானுமுயர்தோ ளிணைகளே (72)

முன்கை

மிகும நோகர முன்கை (73)

அங்கையும் விரலும்

மாமகும கங்கை விரல் (73)

நகம்

...உகிர் கடாம்
பூமிகுப சுங்கிளியின் வாயனைய வென்றுறழ்பொ
ருந்திடு கவோ (73)

தனம்

வந்தருக ருங்கணுறு திண்சிகர மோவென
வடற்கன தனத்திணையரோ (74)

மயிரொழுக்கு

... காரெறும் புகள்சார்ந் தூர்நிரையோஇளை ஞோர்கள்
சிந்தையுட் புகுஞ் சலாகையோ வெனவே சிறந்தணி
திகழ்மயி ரொழுக்காள் (76)

வயிறு

கவின்றிகழ் தருதூய் துறுமணி வயிறே கலையினுன்
மறைந்தன வன்றே (77)

இடை

பலன்கொளு மடவர ளவட்குள விலவாம் பரிசுமே
கொண்டசிற் றிடையே (78)

துடை

சேகுதீர் மடவாள் வண்மணித் துடையே (79)

முழந்தாள்

சாகரக் கரைசா ரலவனைப் பழித்தே தாழ்வினுக்
கியமுழந் தாளாள் (79)

கணைக்கால்

தோகையா தரநீ ருகள்விரா லுடனே தூணியைப்
பொருங்கணைக் காலாள் (79)

பரடு

பொன்மணி நிறுத்தே நிறைதெரி தரவே புரிந்தத ராசெனும்
பரடாள் (80)

குதி

வின்மணிபதித்த மேகலை மடவார் வியந்தெறி பந்தெனும்
குதியாள் (80)

அடி

துன்மதி தவிர்வான் காமநூ லெழுதுந் தூயபுத் தகப்புற
வடியாள் (80)

பாதம்

தென்மணிப் பவளாங் குலிகளி னழகார் சிவந்தமெல்
லியமலர்ப் பதத்தாள் (80)

நடை

ஆசறு கமலா சனமலர் வதியு மன்னமென் நடையினள் (81)

சாயல்

... அழகார்
தேசுறு மயிலின் சாயலாள் (81)

நவமணி மாலையில் இவ்வாறு முப்பத்திரண்டு உறுப்புக்கள் கேசாதிபாதமாக வருணிக்கப்பட்டுள்ளன.

பெரும்பான்மையான காப்பியங்களில் திருமண ஊர்வலம் வருணிக்கப்படும் பொழுது அத்தகைய திருமண ஊர்வலங்களைக் கண்டு களிக்கப் பெண்கள் திரளாக வந்தனர் என ஆசிரியர் விவரிப்பர். அத்தகைய பெண்கள் கூட்டத்திலே ஏழு பருவங்களையும் சார்ந்த பெண்கள் கூடி நின்றனர் என அப்புலவர் வருணிப்பர். நவமணிமாலை என்னும்

காப்பியத்திலும் இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய தமிழ்க் காப்பியங்களில் இடம் பெற்றுள்ளன போன்று ஏழு பருவங்களையும் சேர்ந்த பெண்கள் திருமண ஊர்வலத்தைக் காண வந்திருத்தனர். பக்கீறு வேட்டல் படலத்தில் தொடர்ந்து வரும் ஏழு செய்யுட்களில் ஏழு பருவத்தையும் சார்ந்த பெண்கள் வருணிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். பேதை (109) பெதும்பை (110), மங்கை (111). மடந்தை (112), அரிவை (113), தெரிவை (114), பேரிளம் பெண் (115) என ஏழு பருவப் பெண்களும் விவரிக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். இப் படலத்தில் மணவினை முதலியனவும் மணவினை என்னும் நிக்காகு நடத்தப்பட்ட முறைமையினையும் விவரித்துள்ளார் ஐதுறூசு நயினாப் புலவர்.

பெண்களுக்கு இருக்க வேண்டிய நான்கு குணங்களைப் பற்றியும் ஒரு செய்யுள் குறிப்பிட்டுள்ளது. கற்புடன் கூடிய நான்கு தன்மைகள் ஒரு பெண்ணிடம் இருக்க வேண்டும் என ஐதுறூசு நயினார்ப் புலவர் நவமணிமாலையில் உள்ள ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். இங்கே நான்கு தன்மைகள் என்பதைத் 'தன்மை சதுவொடு' எனக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். 'தன்மைசது' எதனைக் குறிக்கின்றது? பெண்களுக்கு அமைந்திருக்க வேண்டிய நல்லியல்புகள் நான்கு. அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்பன அந்நான்கு தன்மைகளுமாகும். இவற்றையே 'பொற்புநிறை கற்பு தன்மை சதுவொடு' எனச் சுட்டி உள்ளார். 'தன்மைசது' என்னும் சொற்றொடர் இடம் பெற்றுள்ள நவமணிமாலைச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

நன்மையினல் லாவுதவு நற்பலன தென்னப்
புன்மையற வேயுதித்த பொற்புநிறை கற்பு
தன்மைசது வோடுநய சற்குணநற் செய்கை
வெண்மையுற வேகுடியி ருக்குமொரு மின்னுள்

(பக்கீறு வேட்டல் பெறு படலம்: 4)

### பிற செய்திகள்

தல்கீன் பற்றி முன்னர்க் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு முஸ்லிம் இறந்த பின்னர் அவன் நல்லடக்கம் செய்யப்பட்டதைத் தொடர்ந்து புதைகுழி என்னும் கபுறறைக்குள் நிகழும் சம்பவங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றோடு தொடர்புடையது தல்கீன் என்பது. ஒரு முஸ்லிம் கபுறறைக்குள் வைக்கப்பட்ட பின்னர் அமரர் வந்து அவனிடம் உலகில் இருக்கும்பொழுது செய்த நன்மை தீமைகளை எழுதும்படி கேட்பர். அவன் தன்னிடம் எழுதக் கடதாசியோ எழுது கோலோ மையோ இல்லை என்பானாம். அப்பொழுது அவனைப்

போர்த்தியுள்ள கபன் என்னும் வெள்ளைச் சீலையை கிறுத்தாசு என்னும் கடதாசியாகவும், சப்பாபத்து விரல் என்றும் கலிமா விரல் என்றும் வழங்கப்படும் சுட்டுவிரலினை கலம் என்னும் எழுதுகோலாக வும், வாயில் உள்ள நீரை மையாகவும் கொண்டு உலகில் செய்த நன்மை தீமைகளை எழுதச் சொல்வர் அமரர். இதனையே ஒரு செய்யுளில் ஐதுறூசு நயினார் புலவர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

தீட்டு கைக்கிறுத் தாசெனத் துணிகபன் சீலை
மாட்டெ டுத்துன்சப் பாபத்து விரல்கல மாக்கித்
தோட்டுன் வாயினீர் மையென்ருக் கெழுதெனச் சொல்லிக்
காட்டிக் கேட்டிடும் வானர்க்கப் போனரர் கபுறுள்

(ஆடு மேய்த்தவர் படலம் : 8)

இது முடிந்ததும் முன்கர் நக்கீறு என்னும் இரண்டு அமரர் கேள்விகள் ஒன்றொன்றாய்க் கேட்பர். இக்கேள்விகளுக்குப் பதில் அளிக்க இறந்தவரைத் தயார் செய்யும் பாணியில் ஓதப்படுவது தல்கீன் எனப் படும். அந்த அமரர் இருவரும் கேட்கும் முக்கியமான கேள்விகள் ஆறினைப் பிரதானமாகக் கொண்டது இத்தல்கீன். உனது இறைவன் யார்? உனது நபி யார்?உனது மார்க்கம் எது?உனக்குத் தொழுந்திசை யாம் கிபுலாவாக அமைந்திருப்பதெது? உன்னை வழி நடத்தும் இமாமாக இருப்பது எது? உனக்கு சோதரராய் அமைந்திருப்போர் யாவர்? என்ற இக்கேள்விகளைக் கேட்பர் அமரர். இதனையே சுருக்க மாக ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

உனது நாயக னபிநெறி கிபுலத்தி மாமத்
தினிதி னுமுடற் பிறப்பியார் சொல்லெனக் கேட்பார்

(ஆடு மேய்த்தவர் படலம் : 17)

அங்ஙனம் கேள்வி கேட்கப்படும் பொழுது அளிக்க வேண்டிய பதில் களையும் தல்கீன் கொண்டுள்ளது. எனது இறைவன் அல்லாஹ். எனது நபி முகம்மது (சல்). எனது மார்க்கம் தீனுல் இசுலாம். எனது தொழுந்திசையான கிபுலாப் புனித கஃபா. எனக்கு வழிகாட்டியாம் இமாம் அல்குர்ஆன். எனது சகோதரர் நல்ல குணத்தவர்களான முஸ்லிம்கள். இங்ஙனம் கூறவேண்டும் என்பதையே ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்,

கேட்கும் வானர்க்கு நாயக னேயல்லா கெடநீர்த்
தாட்கொ ளுநபி முகம்மது தீனிசு லாங்காண்
ஆட்கொ ளுங்கிபு லாக்கசு பாவிமாம் குறுஆன்
கோட்கொ ளாவுடற் பிறப்புமே முசுலிமாஞ் சுகுணர்

(ஆடு மேய்த்தவர் படலம்: 18)

அல்குர்ஆன் முஸ்லிம் மக்களுக்குப் புனிதமானதொன்று. அதனை ஓதுதல் புண்ணியந்தரும் செய்கையாகக் கணிக்கப்பட்டுள்ளது. என்றாலும் அவ்வாறு புனிதக் கிரந்தமாம் வேதத்தைத் தானும் அவ்வோதலினால் ஒருவருடைய நித்திரை கலையுமெனின் ஓத வேண்டாம் என்று ஒரு செய்யுளின் முதலிரண்டு அடிகளில் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

ஓத லாற்பிறர் நித்திரை முறியுமே லுரைநல்
வேத மாயினு மோதற்கு வெண்ணெறி விதியால்

(மும்முறைப் படலம்: 64)

எவரும் குறை வருமுன் தம்மைக் காத்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு காத்துக் கொள்ளும் முனைப்பை அறிவதே நன்றாகும். அத்தகைய காக்கும் குணம் ஒருவரிடம் இல்லையெனின் அத்தகையோன் மூடர்களிலும் மூடனாகக் கணிக்கப்படுவான் என ஆசிரியர் இவ்வாறு கூறி உள்ளார்.

அனைவர்க ளையும்பார்த் தொருகுறை வாரா
    ததற்குமுன் கரத்தலே காக்கு
முனையறி வுடைய ரின்குண மன்றேன்
    மூடரின் மூடரா மன்றே

(முன்முறைப் படலம்: 193)

படைப்புப் பல படைத்து என ஆரம்பிக்கும் புறநானூற்றுச் செய்யுலின் கருத்துக்களை ஞாபகப்படுத்தும் பல செய்யுட்கள் நவமணிமாலையில் இடம்பெற்றுள்ளன. கல்வியும், அழகும், செல்வமும், அறிவின் தெளிவும், நல்ல பாக்கியங்களும் என்பன அனைத்தும் இருந்தும் உலகத்திலே ஒரு மகனைப் பெறவில்லையாயின் இத்தனை பேறுகளைப் பெற்றும் அவற்றால் எவ்வித பயனும் இல்லை என்பதையே ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

கல்வியுண் டென்னினுங் கவினுண் டென்னினுஞ்
செல்வமுண் டென்னினுங் தெருளுண் டென்னினு
நல்வர முடையவ ரெனினு நானிலத்
தில்வரு மகவில ரிருந்து மில்லராம்

(ஒலியுல்லா வதாரப்படலம்: 21)

இதே கருத்துக்கள் இன்னொரு வகையில் இவ்வாறு கூறப் பட்டுள்ளது. எல்லாம் இருந்தும் எவ்வித பயனும் இல்லை. பயனடைய வேண்டுமாயின் ஒருவனைச் சார்ந்தே இருத்தல் வேண்டும் செய்யுள் இது.

திருவின ரேனுஞ் சேமஞ் சிறந்தவ ரேனும் யார்க்கு
மருவிள ரேனும் வீர மாண்பின ரேனும் பாராள்
பெருவிய னுடையரேனும் பிரபல ரறிவ ரேனும்
ஒருவனைச் சார்ந்தோ ரைச்சா ராரொரு பேறுங் கொள்ளார்

(பீங்கான் கவிழ்த்தெழுப்பித்த படலம் : 78)

மற்றொரு விதமாகவும் இக்கருத்துக்கள் நவமணிமாலையில் இவ்வாறு இடம்பெற்றுள்ளன.

மதிநல னுடையோ ரெனினுநல் லழகோர் வரநல னுடையவ ரெனினுந்
துதிநல னுடையோ ரெனினுங்கைப் பொருளோர் சுகநலனுடையவ ரெனினும்
பதிநல னுடையோர் செய்கையாற் குலத்தாற் பண்பினு லுயர்நல ரெனினும்
கதிநலனுடையோ ரெனினுமக் களிலார் காசினியி லிருந்துமில் லாதார்.

(புத்திரதானப் படலம் : 12)

இதே பாணியில் மற்றொரு செய்யுள் இவ்வாறு அமைந்திருப்பதைக் காணலாம்.

அழகின ரேனுங் கல்வி யறிவின ரேனு நல்லோர்ப்
பழகின ரேனு மிக்காம் பாக்கிய ரேனு நன்னே
ரொழுகற யீகை கீர்த்தி யுரமுள ருரவ ரேனுங்
குழகுறு மகவி லார்பூக் குடிப்பிறந் ததிற்பே றென்னும்

(புத்திர தானப் படலம் :44)

புதல்வர்களைப் பெற்றவர்கள் எல்லாம் பெற்றவர் என்பதை மற்றொரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடிஉள்ளார் ஆசிரியர்.

எண்மையர் புவிமே லெவர்களும் புகழ்ந்தேற்
றிசையின ராதலு மிறந்தோர்
உண்மையின் பரமேம் பதவிபெற்றிடலு
மோங்குறப் பெயர்விளங் குதலுந்

தண்மையா மினத்தா ரென்னினும் வளமார்
தருபிர சங்கரா குதலுந்
திண்மையி னறிவோ டினிய நற் குணஞ்சேர்
செல்வரைப் பெற்றவர் பெறுவார்

(புத்திர தானப் படலம்: 13)

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்

என்பது திறக்குறள். இதே கருத்துக்களை நவமணிமாலை ஆசிரியர் ஒரு செய்யுளில் முதலிரண்டு அடிகளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

ஈதல துனது செல்வ னியல்புறுஞ் சான்றோ னென்ன
வோதிடக் கேட்கின் அன்னை யுளமிக மகிழ்வ ளீன்ற

(செல்வியர் செல்வராம் படலம்: 73)

ஓசை நயம்

பல்வேறு காப்பிய ஆசிரியரும் தத்தம் காப்பியங்களில் ஓசைநயம் அமையும் செய்யுட்களை உள்ளடக்குவதற்கு வெவ்வேறான உத்திகளைக் கையாளுவர். ஒரே உச்சரிப்பைக் கொண்ட பல்வேறு சொற்களை ஒரே செய்யுளில் பயன்படுத்தி ஓசைநயத்தைப் பெறுவது அத்தகைய உத்திகளுள் ஒன்றாகும். நவமணிமாலை ஆசிரியர் ஐதுறூசு நயினார்ப் புலவர், உல்லா, நல்லார், நில்லாது, செல்லா, வில்லார், புல்லா, வல்லார், எல்லாம் என்னும் சொற்களைப் பயன்படுத்தி ஒரு செய்யுளில் இவ்வாறு ஓசைநயத்தைப் பெற்றுள்ளார்.

ஓதி வழுத்தொலி யுல்லா வுத்தம மதுரச நல்லார்
சோதி யிடத்துற நில்லா துற்றது ணிக்கொடு செல்லாப்
பாதி வழிக்கணின் வில்லார் பக்கறையின் பரி புல்லா
மாதி பதிச்சுதன் வல்லா ராநடை யுற்றவ ரெல்லாம்

(கலிபா தெரிசனைப் படலம்: 18)

இதே பாணியில் அமைந்த மற்றொரு செய்யுள் வருமாறு:

வாகனன் மற்றவ ரெல்லா மாகவெ ளிக்கிடை பொல்லா
ராகந லிந்துணர் வில்லா தாடுக றங்கென நில்லா
தேககு பங்களின் வல்லே யேகலு முன்றிடல் கல்லார்
பாக நடந்தகை யில்லார் பாடினும் வெம்புறு பாடாம்.

(கலிபா தெரிசனைப் படலம் :20)

டகரங்களை மிகுதியாக உபயோகித்தும் ஓசைநயம் பெறுவதுண்டு. இத்தகைய ஒரு செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

வட்டத் தினுட்புக விட்டவர் வாவவ்
விட்ட விடக்கடை யின்குனி வாய்மண்
டொட்ட தழித்தனர் தொல்லுல கிப்பூ
நட்ட மிலாதவர் வந்தவ ணண்ணி

(நாடல் காண்பித்த படலம் : 94)

அங்கே பல ஓசைகள் முழங்கிக் கொண்டிருந்தன. வேதம் ஓதும் ஓசை, பெரியாரின் பிறந்த நாட்களைக் கொண்டாடு முகமாக நடை பெறும், மவுலூதின் ஓசை, தியானத்தில் ஈடுபட்டுள்ளோர் தியான உச்சாடனங்களை - திக்றுகளை உச்சரிக்கும் ஓசை, புகழ்பாடும் ஓசை, முகம்மது நபி (சல்) அவர்கள் பேரில் புகழ் மொழி என்னும் சலவாத்தின் ஓசை, பாடல்கள் எனப் பொருள்படும் பயித்துக்களைப் பாடுவதனால் எழுந்திடும் ஓசை என இந்த ஓசைகள் அனைத்தும் கடல் எப்பொழுதும் எழுப்பிக் கொண்டிருந்த கடல் ஒலி என்னும் ஓசையை மிஞ்சுவனவாக ஒலித்துக் கொண்டிருந்தன. இங்ஙனம் ஓசைகள் அந்நகரில் எழுந்தன என்பதை ஓசை நயமுடைய ஒரு செய்யுளில் இவ்வாறு இடம்பெறச் செய்துள்ளார் ஆசிரியர்.

வேத வோசைமவு லூதினோசைநலன் மேலவோதுதிக்கு
றோசைசீர்
மிகமேவும்விரு தோதுமோசைநபி மேலுமோதுசல வாத்தினும்
போதவோசைபயித் தோதுமோசை கடல் போடுமேசையினும்
மீறவே
நீதிமோடுநனி நாளுமே பயில்செய் நேர்மையாளர்வள ரூரரோ

(அனைமனை தனையனும் படலம் : 3)

ஒரு நாட்டிலே மூன்று முரசும் முழங்கினால் அந்நாடு சீரும் சிறப்பும் பெற்று விளங்குகிறது என்பது கருத்தாம். மணமுரசு. கொடை முரசு, போர் முரசு, என்பன அம்மூன்று முரசுகளாகும். அவை மூன்றும் முழங்கின என ஓசை நயத்துடன் ஒரு செய்யுள் இவ்வாறு இடம்பெற்றுள்ளது.

அன்ன மேவுநடை மின்னை மேவுமிடை
அந்த லார்கண் மணமு ரசமும்
துன்ன லார்கண் முறிவென்ன வோடலடர்
துன்னு தானைகளின் முரசமும்

மின்னம் வாருமணி சொன்ன மாடையன
மின்ன வீடு தெருவின்னபால்
என்ன வேழையர்க டம்மை யேயழைசெய்
இன்ன நீர்கொடையின் முரசமும்
(அனைமனைதனையனும் படலம்: 4)

வல்லெழுத்துக்களை மிகுதியாகப் பயன்படுத்தி ஓசைநயம் பெறுவர் ஆசிரியர். அத்தகைய வல்லெழுத்துக்களுள்ளும் தகர எழுத்தைக் கூடுதலாக உபயோகித்தும் ஓசைநயத்தைப் பெறுவதுண்டு. அத்தகைய ஒரு செய்யுள் வருமாறு:

முத்தலம் புகழ்முகி யித்தீனிலகு முத்தினங் களைம தித்தெடுத்
துத்தமத் தொடுதெ ளித்திதச் சுதைசெய் வித்துவப் பிழை காயதை
எத்தலத் துமொளிரத் தத்திற் றெரிய விச்சையிற் றடவு சோதியார்
சுத்தபொற் பிரசி தப்பொருப் பையிகல் சொர்க்க மொத்ததென
வண்மையே.
(அனைமனை தனையனும் படலம்: 6)

இடக்கை, தம்பட்டம், பம்பை, பேரிகை, உடுக்கை, மத்தளம், முரசு, முருடு முதலிய வாத்தியங்களைக் குறிப்பிட்டுப் பாடும்பொழுதும் செய்யுளில் ஓரளவு ஓசைநயம் தோன்றுவதைக் காணலாம்: (பக்கீறு வேட்டல் பெறு படலம்: 85)

**யாப்பமைதி**

ஏனைய காப்பிய ஆசிரியரைப் போன்று நவமணிமாலை ஆசிரியர், ஐதுறூசு நயினார்ப் புலவரும் பல்வேறு வகையான விருத்தப்பாக்களைத் தமது காப்பியத்தில் பயன்படுத்தி உள்ளார். இவ்வாறு செய்யுட்களின் சந்தம் மாறுவதனால் படிப்போர் ஆர்வம் குறையாமல் இருக்க வழிவகுக்கப்படுகிறது. நவமணி மாலை ஆசிரியரின் கட்டளைக் கலித்துறை செய்யுளை எடுத்துக்கொள்வோம்.

கட்டளைக் கலித்துறை என்பது ஒரு வகை. எழுத்தெண்ணிப் பாடும் கலித்துறை, கட்டளைக் கலித்துறை எனப்படும். கட்டளை என்பது கணக்கு என்ற பொருளை உடையது. எழுத்துக் கணக்கை உடையதால் அது அப்பெயர் பெற்றுள்ளது. கட்டளைக் கலித்துறைச் செய்யுளில் நான்கு அடிகளும் ஒவ்வோர் அடிக்கும் ஐந்து சீர்களும் உண்டு. ஆனால் அளவொத்து வரவேண்டிய அவசியமில்லை. கட்டளைக் கலித்துறைச் செய்யுள் நேரசையை முதலாகக் கொண்டிருப்பின் அடியொன்றுக்கு பதினாறு எழுத்துக்களையும் நிரையசையை

முதலாகக் கொண்டிருப்பின் அடியொன்றுக்கு பதினேழு எழுத்துக் களையும் கொண்டிருக்கும். கட்டளைக் கலித்துறைச் செய்யுள் ஏகாரத்தால் முடியும். எழுத்து எண்ணும்போது ஒற்றுக்களைக் கருத்தில் கொள்ளக் கூடாது. ஆசிரியச்சீர், வெண்சீர், என்னும் இருவகைச் சீர்களே இந்தச் செய்யுளில் வரும். மாச்சீர், விளச்சீர், காய்ச்சீர் என்பனவே வரும். ஒவ்வோரடியிலும் கடைச்சீர் மாத்திரம் கருவிளங் காய்ச் சீராக வரும் அல்லது கூவிளங்கச் சீராய் வரும். முதற்சீர் நான்கும் பெரும்பாலும் ஈரசைச் சீர்களாகவே வரும். சிறுபான்மைச் செய்யுட்களில் தேமாங்காய் புளிமாங்காய் சீர்கள் வரும். ஒவ்வோர் அடியிலுமுள்ள ஐந்து சீர்களிடையிலும் வெண்டளை அமைய வேண்டும். ஆனால் முதலடியின் ஈற்றுச் சீருக்கும் அடுத்த அடியின் முதற்சீருக்கும் இடையே வெண்டளை இருக்க வேண்டியதில்லை. வெண்டளை மேலே சொன்ன வகையில் வந்து, ஐந்து சீர்களில் ஈற்றுச் சீரில் மட்டும் கருவிளங்காய்ச் சீர் அல்லறு கூவிளங்காய்ச்சீர் வந்து அமைந்தால் எழுத்துக் கணக்குச் சரியாக இருக்கும். எழுத்தை எண்ணிப் பாடவேண்டிய அவசியம் ஏற்படாது. எழுத்துக்களின் எண்ணிக்கை இயற்கையாகவே அமைந்துவிடும். எழுத்துக் கணக்குத் தவறாது. வெண்பாவிற் போல் ஓரடியின் இறுதிச்சீர் அடுத்த அடியின் முதற்சீருடன் வெண்டளை பொருந்தி கட்டளைக் கலித்துறையில் வரவேண்டியதில்லை. வந்தால் நிரையசையை முதலாகவுடைய கட்டளைக் கலித்துறைச் செய்யுளில் காய்ச்சீர் முன்நிரை வந்து கலித் தளையாகி விடும்.

இனி, நவமணிமாலையில் இடம் பெற்றுள்ள நிரையசையை முத லாகக் கொண்ட கட்டளைக் கலித்துறைச் செய்யுளைப் பார்ப்போம்.

சுவன நேர்நகர நின்றுட் டோற்றுணர் வொடும்புறப்பட்
டெவன மார்புரிசை நங்கோ டேனலர்ப் பொழின் மற்றெல்லா
முவகை யிற்றெறிந்து ஹச்சும் ருசியா றத்தும் பெறவென்
றவமி லாதேறு வாக னத்தொடுர்க் கதர்கொடன்றே

(ஹஜ்ஜியற்றி வந்த படலம்: 21)

இது நிரையசையை முதலாகவுடைய கட்டளைக் கலித்துறைச் செய்யுள். ஒவ்வோரடியிலும் பதினேழு எழுத்துக்கள் இருப்பதைக் காணலாம். முதலாம், இரண்டாம், நான்காம் அடிகளில் உள்ள இறுதிச்சீர் கருவிளங்காய்ச் சீராக அமைய மூன்றும் அடியில் இறுதிச் சீர் கூவிளங்காய்ச் சீராக இருப்பதைக் காணலாம். ஒவ்வோரடியிலும் முதற்சீரிலும் ஐந்தாம் சீரிலும் மோனை வந்துள்ளது. இறுதி 'ஏ'யில் முடிந்துள்ளமையும் காணலாம்.

சொல்லாட்சி

ஐதுறூசு நயினார்ப் புலவர் மேற்கொண்டுள்ள அருமையான சொல்லாட்சியைப் பார்ப்போம். அகரம் என்னும் சொல்லை ஊர் என்னும் பொருளில் ஆசிரியர் பயின்றுள்ளார்.

பொன்றிடா நுஞ்சொற் போலப் போயென தகர நோக்க
(அனைமனைதனையனுப் படலம்: 32)

அகத்திடை மகிழ்ந்துதம் மகரம் புக்கினர்
(கப்பலெழும்பு படலம்: 98)

அபகடர் என்பது வஞ்சகரைக் குறிக்கும். இச்சொல் நவமணி மாலையில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

அடையலர் பணிநா தருங்கரப் பால்வந்
தரிவைய ரபகட ரோடும்
(முன்முறைப் படலம்: 214)

கரும மென்னெனக் கேட்ட வபகட ரொடுமட
வியர்தாம்
(முன்முறைப் படலம்: 216)

வஞ்சகம் என்னும் பொருளில் அபகடம் என்பது

கருதலின்வஞ் சகத்தொடு மபகடத்தரவ் வில்லகத்
திருக்கும்
(முன்முறைப் படலம்: 217)

அம்புராசி என்பது கடல். (பிங்கலந்தை) நீர் மிகுதியாக உடைய இடம் என்றும் பொருள்படும். நகரின் முழக்கம் கடல் முழக்கம் போன்றிருந்தது என்பதைக் குறிப்பிடவே அம்புராசி என்னும் சொல்லைக் கடல் எனக்குறித்த ஆசிரியர்

அம்புரா சியினார்ப் பென்ன வனுதின முழங்கும் பேரூர்
(நகரப்படலம்: 20)

என ஆண்டுள்ளார்.

அமரி என்பது சிறுநீர். அமரி என்பதை அமுரி என்கின்றது சங்கத்தகராதி—தமிழ்ச் சொல்லகராதி. சிறுநீரைக் குறிக்க ஐதுறூசு நயினார்ப் புலவரும் அமுரி என்னும் சொல்லை

அமுரிபெய் தோடத் தங்க ளழகிய தலையு யர்த்தி
(வைதிகன் பக்கீருல் ஈமான் கொண்ட படலம்: 19)

என இங்ஙனம் பயன்படுத்தி உள்ளார்.

அயினீர் என்பது ஆலத்தி நீர் என்பதைக் குறிக்கும். கம்பர் இதனை அயினிநீர் எனக் குறிப்பிட்டுள்ளார்.

போதுட னயினிநீர் சுழற்றி
(மிதிலைக் காட்சிப் படலம்: 51)

ஐதுறூசு நயினுர்ப் புலவர் ஆலத்தி நீரைக் குறிக்க அயினீர் என்பதை

அயினீர் சுழற்றி யெடுத்தினி தினருளுந் தானந னியருளி
(பக்கீறு வேட்டல் படலம்: 84)

அல் என்பதை இரவு என்னும் பொருளில்
மம்முறு கஞெ மொழிவந் தற்சது மகன்ருல்
(கலிபா தெரிசனை பெற்ற படலம்: 45)

என ஆண்டுள்ளார் ஆசிரியர்.

ஆடகம் என்பது பொன். 'ஆடக மாட நெருங்குங் கடல் (539:1) என்கின்றது தேவாரம். நவமணிமாலையிலும் பொன் என்னும் பொருளில் ஆடகம் என்னும் சொல் ஒரு செய்யுளில்,

ஓர்துகிற் கெழுபது சதவொண் ணுடகம்
(ஆடைகொள்வித்த படலம்: 11)

இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

இரவி என்பது மலையைக் குறிக்கும். பெண்களின் கண்களிலிருந்து வழியும் கண்ணீரை மலையிலிருந்து விழும் ஊற்றுக்கு ஒப்பிட்டுள்ளார் இக்காப்பிய ஆசிரியர். நரைத்த முடியையும் வாடிய உடலையும் உடையவராய் வாய் தடுமாறி பெருமூச்சு விட்டு நாக்குழறியவராய் கண்ணீர் வடித்தவராய் முகத்தை மூடிப் பெண்கள் நீர் கொண்டு போந்தனர். இதனை இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

பெண்கணீர் கொடும்போந் திடத்தலை முடிகள்
பிறங்குவெண் பட்டுநூ லெனவே
வண்கொள நரைத்தே யுடலமுந் திரைந்து
வாயுரை யுந்தடு மாறி

எண்கொளாப் பெருமுச் சொடுமிகக் குழறி
இரவினின் றூற்றிழி வனபோல்
கண்களால் புனல்சிந் துறவழு தலறிக்
கடலைப்பார்த் தானனமூடி
(கப்பலெழும்பு படலம்: 6)

இல்லி என்னும் சொல்லை இல்லாளைக் குறிக்க நவமணிமாலை ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார். மனைவியைக் குறிப்பிட்டுள்ளார் ஒரு செய்யுளில் இவ்வாறு:

மீண்டுவந் தில்லியை விளித்த ளித்துறு
(நம்பியற் காட்டிய படலம்: 53)

இறைவை என்பதை ஒரு வகைப் பெட்டி எனக்கூறலாம். புட்டில் எனவும் படுகிறது. இறை கூடையையும் இச்சொல் சுட்டும். நீர்ப் பாசன வேலைகட்குப் பயன்படும் நீர் கொள் கூடை என்றும் கூற லாம். அங்கிருந்து கொண்டு தேரைகள் எழுப்பிய ஓசை இசையின் முழக்கம் போல் இருந்தது என இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிட் டுள்ளார்.

கறவைகள் குடிகள் சார விலங்கினம் படுக்கை சார
பறவைகள் குடம்பை சார பலவுந்தம் பாகஞ் சார
இறைவைக ளிடத்துந் தேரை களினிசை முழங்க வெங்கு
நிறைவைகள் பிசகத் தன்கோ னிசியர சியற்றி னுைல்
(கலிபா தெரிசனை பெற்ற படலம்: 78)

உகையம் என்பது செல்கை எனப் பொருள்படும். தீமையான செயல்களுக்குச் செல்ல வேண்டாம் எனக் கூற வந்த ஆசிரியர்,

தீயவாஞ் செயல்கட் குகையமல் லனவாந் ...
(தெரியுணர்வுணர்த்திய படலம்: 45)

உகையம் என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார். ‘காம வுததியைக் கரைவிட வுகைய நாலா யானும்’ (19) என்கின்றது கல்லாடம்.

உட்டணித்தல் என்பது சூடாதலை, உடலில் உள்ள வெப்பத்தை மேலும் வெப்பமாக்குதலையும் இச்சொல் சுட்டுகிறது. ஆங்கில மொழியிலே WARM என்னும் சொல்லொடு கருத்தொற்றுமையுள்ளது உட்டணி என்பது, ஒருவரைக் கட்டி அணைத்தலினுல் அவருடையு

உடலும் உள்ளமும் பூரித்துச் சூடாகி மகிழ்ச்சி ஏற்படுகிறது. அதனைத் தான் இங்கே இச்சொல் குறிப்பிட்டுள்ளது. ஆசிரியர் உட்டணி என்னும் சொல்லை இதே கருத்தில்

கட்டிச்சேர்த் தணைத்து முத்திக் காதிறு முகியித் தீனுக்
குட்டணி பிரிச மிக்குற் றுயர்வின்முன் னிலையி னாக

(முன்முறைப் படலம் : 34)

இங்ஙனம் ஆண்டுள்ளார்.

உப்பு என்பது இனிமை. திருவள்ளுவரும் இனிமை என்னும் பொருளில் உப்பு என்னும் சொல்லை

ஊடலிற்றோன்றிய வுப்பு (1328)

என ஒரு குறளில் இவ்வாறு ஆண்டுள்ளார். உப்பு என்பதை இனிமை என்னும் பொருளைத் தர இவ்வாறு ஒரு செய்யுளில் முதலிரண்டு அடிகளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

ஒப்பிலா ஒருவ னை உலகெலாம் படைத்துக் காக்கும்
றெப்பனை யுப்பப் பாகு நேர்மையினுருகி நட்பாம்

(முன்முறைப் படலம் : 184)

இங்கே இறைவன் இனியன் என்பதை உணர்ந்து அவனை விரும்புதல் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம்.

உவ்வி என்பது தலையைக் குறிக்கும் என்கிறது திவாகர நிகண்டு. தலை மேற்கொண்டு என்பதை இவ்வாசிரியர் உவ்வி எனக் குறிப் பிட்டுள்ளார். துஆ என்னும் இறைவனிடம் குறை இரங்கலைத் தலைமேற்கொண்டு என்ற பொருளில்

உத்தமமு றத்தருது ஆவதனை யுவ்வி

(கலீபா தெரிசனை பெற்ற படலம் : 46)

என்றும்

இச்செகம் வெளுத்தபக லின்பொழுது மேசென்
றெச்சநினை வோடுமறு நாள்வருமி ராவின்
உச்சித துஆவதனை யுவ்வி வலன் வைத்தே

(கலிபா தெரிசனை பெற்ற படலம் : 53)

என்றும் ஆசிரியர் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

கருபா என்பது திசையைக் குறிக்கும். இடி முழக்கத்துக்கு முன்னர் திசைகள் நடுங்கும் என்பது கவிமரபு. மழை பெய்வதற்கு முன்னர் இடி இடிக்கும். மின்னல் மின்னும். அதற்கு முன்னர் திசை நடுங்கும். இக்கருத்தையே ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப் பிட்டுள்ளார்.

கருபமு நடுங்க வான்கங் கையைவிழித் திமைப்பதென்ன
(நாட்டுப் படலம்: 3)

மற்ெருரு செய்யுளில் இச்சொல்லை
கட்டைக டழைத்திடக் கருப மீவெளி

(ஒலியுல்லா வவதாரப் படலம்: 16)

கட்டழல் என்பது பெருநெருப்பு ஒருவருடைய முகம் கோபத் தால் சிவந்தது என்பதைக் குறிப்பிடவே ஐதுறூசு நயினர்ப் புலவர் இச்சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

தானுரைத் தனன்கேட் டன்னகோ மகன்கட்
டழலெழச் சிவந்துருந் தன்றே
(முன்முறைப் படலம்: 198)

மணிமேகலையிலும் மிக்க நெருப்பு என்னும் பொருளில் கட்டழல் என்பது,

கட்டழ லீமத் தென்னுயிர் சுட்டேன்
(கந்திற்பாவை வருவதுரைத்த காதை: 12)

என வந்துள்ளமையைக் காணலாம்.

கடுத்தம் என்பது கடிதம் எனப் பொருள்படும். திருமணப் பதிவு கள் அரசு அங்கீகாரம் பெறுவதற்கு முன்னர் இலங்கையில் நடை பெற்ற திருமணங்கள் திருமணக் கிரியைகளை நடத்துபவரால் ஒரு புத்தகத்தில் பதிந்து வைக்கப்படும். இதுவே அப்பொழுது கடுத்தம் எழுதுதல் என்று வழங்கப்பட்டது. எழுத்துப் பிரதி என்ற பொருளில் கடுத்தம் என்னும் சொல்லை இவ்வாறு ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

கையினு லெழுதிய கடுத்தந் தன்னையும்
(நம்பியற் காட்டிய படலம்: 45)

குக்கி என்பது வயிறு. ஆசிரியர் குக்கி என்னும் சொல்லை,

கருவி னன்னைகுக் கியின்மறை கலிறினுற் கற்ரோர்

(ஒலியுல்லாவவதாரப் படலம் : 104)

என அமைத்துப் பாடி உள்ளார்.

கோடிகம் என்பது ஆடை.

கோடிகம் பருவத்திற் கூர்மை யோடுங்கை

(ஆடை கொள்வித்த படலம் : 4)

எனக் கோடிகம் என்னும் சொல்லை ஆடை என்னும் பொருளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

கோணம் என்றால் கூன்வாள் என்பது பொருள். கூன்வாள் என்னும் பொருளிலே ஆசிரியர் இச்சொல்லை,

கோடொன் றிற்குநேர் கல்லின னுருவினன் கோணம்

(நம்பியற் காட்டிய படலம் : 9)

சகசகர் என்னும் சொற்றொடர் நெருங்கிப் பழகும் தோழர் எனப் பொருள்படும். சகசகர் என்னும் சொற்றொடர் ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

தடையற வுறலா யித்தர மான

தன்மையாற் சகச கர்போற் பணிசொல்

(முன்முறைப் படலம் : 214)

சது என்பது சதுர் என்பதன் மருஉ. இறுதிப் போலி என்றும் கூறலாம். நான்கு எனப் பொருள்படும். சதுர் என்பது மற்றொரு சொல்லோடு சேர்ந்தே வரும். இங்கே நான்கு திசைகளிலும் நான்கு பக்கங்களிலும் எனப் பொருள்பட சதுபால் என்னும் சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது. நான்கு பக்கங்களிலும் ஓடினார் என்பதைக் குறிக்க வந்த ஆசிரியர்.

மறுகு வார்மகன் மீதுறு மாசையால் வாடு வார்சது பாலும்

குறுகு வார்வழி தேடுவா ரோடுவர் குறிதெரிவார் மீள்வார்

(பீங்கான் கவிழ்த்தெழுப்பித்த படலம்: 24)

முகம்மது நபி (சல்) அவர்களைத் தொடர்ந்து இஸ்லாமிய ஆட்சி நடத்திய நான்கு பிரதிநிதிகளான கலிபாக்களும் சதுவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர்கள நால்வர் தன்மையும் இவ்வாறு விளக்கப்பட்டுள்ளது.

விடிந்தபின் னழுது தேம்பி மிக்கதீன் வித்தி வீண்பொய்
தடிந்துபுன் குபிரர் வீழத் தாக்கிய சதுவர் தாமும்
(கலீபா தெரிசனைப் படலம் : 66)

பெண்களின் நல்லியல்பு நான்கினைக் கூறவந்த ஆசிரியர் சது என்னும் சொல்லை நான்கினைச் சுட்டி இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

புன்மையற வேயுதித்த பொற்புநிரை கற்பு
தன்மைசது வோடுநய சற்குணநற் செய்கை
(பக்கீறு வேட்டல்பெறு படலம் : 4)

சன்னை என்பது குறிப்பு. சமிக்கை எனவும் பொருள்படும். நேரடியாகக் கூறாமல் சன்னையாய்க் கூறினான் என்று பொருள்பட இச்சொல்லை இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

சன்னைசெய் தலரி யுங்கட் கித்தகை நாளைக் காட்டி
(சஞசாவுய்ந்த படலம் : 23)

சும்பனம் என்பது முத்தமிடுகை. சும்பனம் என்னும் சொல்லை ஒரு விரலை முத்தினமையைக் குறிப்பிட இவ்வாறு ஆண்டுள்ளார் ஆசிரியர்.

மாண்டரு முகில்கற் பகம்பொரா வலக்கை
மலரினோர் விரலைச் சும்பனஞ் செய்து
(அபா முகம்மது ஜாவறு வரவுப் படலம் : 8)

சூர் என்பது பல பொருள் சொல். இங்கே துன்பத்தைக் குறிக்க ஆசிரியர் இவ்வாறு ஆண்டுள்ளார்.

சூரெனுஞ் சலிப்பை யழுதலைச் சொலினீ
சொல்வபோல் வேண்டுதல் கிடைப்ப
(கப்பலெழும்பு படலம் : 9)

பக்கீறு தீங்குகள் பொறுத்திரை யருட்சூர்
(பக்கீறு வேட்டல் பெறு படலம் : 1)

என்று குறிப்பிடும் பொழுது இங்கே சூர் என்பது வீரம் அல்லது அஞ்சாமை என்னும் பொருளைக் குறிக்கின்றது எனலாம்.

சேகிலி என்ருன் வாழை என்பது பொருள், வாழைப் பழத்தைச் சேகிலிக் கனி என இவ்வாறு ஒரு செய்யுளில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

கரைசெய்து சேகிலிக் கனிக டாவுமால்

(நாட்டுப் படலம்: 28)

சேகை என்ருல் சிவப்பு. நிறத்தில் மிகுதியைக் குறிப்பிட ஆசிரியர்,

சேகை யோங்க விரும்புதெவ் வைத்துலேத்து

(முன்முறைப் படலம்: 92)

என சேகை என்னும் சொல்லைப் பயன்படுத்தி உள்ளமையைக் காண லாம்.

தத்து என்பது மனக்கவலையைக் குறிக்கும். மனக்கவலை இல் லாமல் இருக்கும் நிலைமையைத் தத்தற என இவ்வாறு குறிப்பிட்டுள் ளார்.

வைத்துமின் பரிற்ரும் வைத்ததோ ளாலே
வள்ளலேத் தூக்கியே சுமந்து
தத்தற வதனின் கீழ்ப்படி நின்ருர்

(திருமேன்மைப் படலம்: 20)

தாதா என்னும் சொல்லுக்குப் பல பொருள் உண்டு. இக்காப்பிய ஆசிரியர் பெரிய மனிதன் என்னும் பொருளில் தாதா என்னும் சொல்லை ஒரு செய்யுளின் இறுதி அடியில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

கோகனக நிதம்பதம்தாழ்ந் திறைஞ்சு நம்பீர்
குத்பியத்துல் குப்ருவை அருளும் தாதா

(முன்முறைப் படலம்: 242)

தித்து என்னும் சொல்லேப் பொய் எனப் பொருள்பட இக்காப்பிய ஆசிரியர் தமது காப்பியந்தில் பயன்படுத்தி உள்ளார்.

தித்தறச் சுமந்த தாற்பதிந்த தெரிகுறி தெரிந்தன ...

(திருமேன்மைப் படலம்: 20)

தித்தற வொத்தியா வருமச் செப்பலே

(திருமேன்மைப் படலம்: 45)

நதி என்பதைப் பதி என்னும் பொருளில் ஆசிரியர் இங்ஙனம் பாடி உள்ளார்.

பதியகம் வருகக்கப் பலிஞெடே நதி

(கப்பலெழும்பு படலம்: 95)

நவ்வுதல் என்பது முழுதும் நம்புதல் எனப் பொருள்படும். அவனை யேன் நவ்விக் கொண்டிருக்கிருய்? என்பதில் அதே பொருளில் பயன் படுத்தப்பட்டுள்ளது. இது திருநெல்வேலி மாவட்டத்துக்கே உரிய வழக்குச் சொல்லாம். புலவரும் அதே கருத்தில்,

அவ்விடத் திருந்துங் கப்பலி னேறி யன்பொடென் பாலவர் நாடி
நவ்வியே புறப்பட் டன்னவ னேறு நனிசரக் கேறு சோங்கி னுக்கும்
(கப்பலெழும்பு படலம்: 17)

பதங்கன் என்பது சூரியன் எனப் பொருள்படும். இதனையே இவ் வாறு இடம்பெறச் செய்துள்ளார் ஒரு செய்யுளில்,

பாலனுக ரார்பகல் பதங்கனு மடைந்தால்
(ஒலியுல்லா வவதாரப் படலம்: 96)

பிடகன் என்பது வைத்தியனைக் குறிக்கும். இதே கருத்தில் பிடகன் என்னும் சொல் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

பெருந்தவப் பயனே யிங்ஙன் பிடகனே யழைக்க வோவென
(எகூதிகளீமான் கொண்ட படலம்: 4)

என்னுமப் பிடக ஞமெ கூதிக ளௌஜமா ஞனேன்
(எகூதிகளீமான் கொண்ட படலம்: 12)

பிண்டி என்ருல் மா. அரிசி முதலியவற்றினைத் தூளாக்கிய நுண்பொடி. பிண்டி என்னும் சொல் அதே கருத்தில் இவ்வாறு ஆளப் பட்டுள்ளது.

பிண்டி யுறட்டி விருந்தருள் பிதாவுக் கருள ...
(முன்முறைப் படலம்: 125)

புதை என்பது புதுமை எனப்பொருள்படும். நாவல் என்று அழைக்கப்படுவது போன்ற புதுமையான கதையை இச்சொல் சுட்டு கின்றது. புதுமையான கதை என்னும் பொருளில்

கண்டுசொலற் கரிதாமிப் புதைதமைமுன் னெகிழவிறந்
தவர்கழற லால் ...
(முன்முறைப் படலம்: 241)

என்ற செய்யுளிலும்

சஞசா வுய்ந்தபு தைச் சொலு குவமே
(சஞசாய்வுய்ந்த படலம்: 1)

என்ற செய்யுளிலும் புதை என்னும் சொல் இடம் பெற்றுள்ளது.

பூண்(ணு)தல் என்னும் சொல்லுக்கு உடைத்தாதல் எனப் பொருள் படும். புதல்வியர் மாட்சிமைக்குரிய பிள்ளைகளென்றாலும் கல்வியும், நன்மானமும் பூண்ட பிள்ளைகளென்றாலும் புதல்விமார்களுடன் ஒப்பிடுகையில் வீண் பிள்ளைகள் என்றாலும் புவியில் கணிக்கப்படும் மேன்மையால் ஆண் பிள்ளைகளையே எவரும் பெரிதாய் விரும்புவர் என்னும் கருத்தைக் கொண்ட செய்யுளில் மாண்பிள்ளை, பூண்பிள்ளை, வீண்பிள்ளை, ஆண்பிள்ளை என்ற சொற்ரொடர்கள் இவ்வாறு அமைந் திருப்பதைக் காணலாம்.

மாண்பிள்ளை யென்னினு மதியு மானமும்
பூண்பிள்ளை யென்னினும் புதல்வி மார்களின்
வீண்பிள்ளை யென்னினும் புவியின் மேன்மையாம்
ஆண்பிள்ளை தமையுவப் பாரன் ரேநனி

(செல்வியர் செல்வராம் படலம்: 14)

பேறுபத்துடனுறு என்பது பதினாறு பேறுகளைச் சுட்டுசிறது. பதினாறு வகைப்பட்ட செல்வங்களைக் குறிப்பிடுகின்றது, புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள் ஆகிய பதினாறு வகைப்பட்ட செல்வங்களை அபிதான சிந்தாமணி குறிப்பிட்டுள்ளது. இங்கே இவற்றையே பேறுபத்துடனுறும் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அச்செய்யுள் வருமாறு:

பேறு பத்துட னுறும் பெருக்குமெய்
வீறு ஞானவி ளக்கமு மேன்மையுந்
தேறு முள்ளத் தெளிவும் மாதிதீ
தாறும் எய்து முகியித்தீ னென்பதால்

(அனைமனைதனையனும் படலம்: 86)

மகா என்பது மகன் என்பதின் பன்மை என முன்னர்க் குறிப்பிடப் பட்டது.

தம்மன மகிழ்ச்சியின் வேண்டித் தம்மனைக்
கம்மினுற் றவர்மனை மகருண் டன்புற

(நம்பியற் காட்டிய படலம்: 69)

நயமுறு பால ரென்னு நன்மகர்க் குறுகு னுல

(செல்வியுர் செவ்வராம் படலம்: 80)

மட்டை என்னும் பதம் பயனற்றவனைக் குறிக்கப் பயன்படுகிறது. பெண்பாலினும் வரும். ஒன்றன் பாலினும் வரும். எவ்வித பயனும் அற்றவன் என்னும் பொருளில் மட்டை என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

வைத்துள வதிட்டமில் லாத மட்டைநீ
(செல்வியர் செல்வராம் படலம்: 34)

மனபாவை என்னும் சொற்றொடரால் மனதில் வைத்த பாவை என்பதனை இவ்வாறு ஓர் இடத்தில் குறிப்பிட்டுள்ளார்.

காமுகர்பு விக்கண்மன பாவைகுல வத்தெரிகொள்
கஞ்சனைகொலோ விழிகளாம்
(கப்பலெழும்பு படலம்: 67)

முகபாடம் என்பது வாய்ப்பாடம். மனனம் பண்ணுதல் அல்லது வாய்ப்பாடஞ் செய்தல் முகபாடம் என வழங்கப்படும். ஐதுறூசு நயினார்ப் புலவரும் வாய்ப்பாடம் செய்தல் என்னும் கருத்தில் முகபாடஞ் செய்து என இவ்வாறு உபயோகித்துள்ளார்.

ஓதியேமுக பாடமுஞ்செய்துளத் துவந்து
(திருவாய்மைப் படலம்: 26)

முறிவி லாநெறி யாருல மாமுக பாடம்
(திருவாய்மைப் படலம்: 32)

முகிவு என்பது முடிவு. இதே சொல்லை இதே பொருளில் இவ்வாறு ஆண்டுள்ளார் ஆசிரியர்.

அவ்வியம் அணுகா தாதி யருள்செய்வான் சலவாத் தோகை
முவ்வுல கோங்கி நாளு முகிவறத் தீன்ற ஷைப்ப
(திருவாய்மைப் படலம்: 92)

மொகுமொகு என்பது ஓர் ஒலிக் குறிப்பு. நீர் பெருகுதலைக் குறிக்கும். ஒலிக்குறிப்பாகவும் இது பயன்படுத்தப்படுகிறது. நீர் பெருகும் ஒலிக்குறிப்பாகவே ஐதுறூசு நயினார்ப் புலவர் இவ்வாறு பாடி உள்ளார்.

முரிவுகொண் டுடனுள் ளுப்புநீ ரதிக மொகுமொகென் றேறி
யாழ்ந்தன வால்
(கப்பலெழும்பு படலம்: 19)

வட்டம் என்பது தடவை என்பதாகும். தமிழ்நாட்டிலே பேச்சு வழக்கிலே பெரிதும் பயன்படும் ஒரு சொல்லாகும்.

இப்படி மூன்று வட்ட மியார்வந் தழுது நும்பால்

(அனைமனைதனையனும் படலம் : 34)

இங்கே மூன்று தடவை எனப் பொருள்பட மூன்று வட்டம் எனக் குறிப் பிட்டுள்ளமையைக் காணலாம்.

விரிச்சிகன் என்னும் சொல் சூரியனைக் குறிக்க,

விரிச்சிகன் கதிர்புகு தாத விண்டொடும்

(நாட்டுப் படலம் : 35)

என இக்காப்பிய ஆசிரியர் பயன்படுத்தி உள்ளார்.

விருந்தர் என்பது விருந்தினர் என்பதைக் குறிக்கும். இக்காப்பிய ஆசிரியரும் விருந்தினரை விருந்தரை என இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

விருந்தென விருந்தரை விரும்பி வேளை...

(நகரப் படலம் : 10)

வெட்டி என்பது வழி. வழியே சென்றமையைக் குறிக்க,

வெட்டி யேகின ரெரியப்போ தொலிவெகுள வின

(நெருப்பமர்த்திய படலம் : 12)

என வெட்டி என்ற சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

இங்ஙனம் பல அரிய சொற்களை மிக அருமையாகத் தமது காப்பியத்தில் பயன்படுத்தி தாம் கருதிய கருத்தினை வெளிக் கொணர முற்பட்டு வெற்றியும் கண்டுள்ளார் ஆசிரியர்.

இஸ்லாமிய அடிப்படையில் தோன்றிய ஏனைய காப்பிய ஆசிரியர்களைப் போன்று ஐதுறாசு நயினார்ப் புலவரும் பெயரெச்சங்-களை வினைமுற்றுக்களாகப் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம். தக்க என்பது

தாமைந்து முளரு மைந்தி லார்களுந் தமக்குத் தக்க

(முன்முறைப் படலம்: 14)

எனவும் கூன்டுற்ற என்பது

குலநபி மார்கள் றூகெல்லாம் பிற்படக் கூண்டுற்ற

(முன்முறைப் படலம்: 21)

எனவும் சொன்ன என்பது

நல்லவர் வரிலியா மென்றே நாதனு நீவிர் சொன்ன

(முன்முறைப் படலம்: 24)

எனவும் கிழித்த என்பது

சென்னிலத்தைக் கிழித்த சினத்தினே
(முன்முறைப் படலம்: 10)

எனவும் கரிந்த என்பது

பாயரியோ சனேயர் தமையழைத் தனேத்தும்
பகர்ந்திறந் தவர்களங் கரிந்த
(முன்முறைப் படலம்: 205)

எனவும் வந்த என்பது

பருதியி னிருபா லுள்ளா ரெனும்பண்பா ரொலிகள் வந்த
(திருமேன்மைப் படலம்; 67)

எனவும் மிக்குற்ற என்பது

... பாடா
யுட்டியங்கி மாண்டனர்சிலர் சேதமிக்குற்ற
(நெருப்பமர்த்தியப் படலம்: 12)

எனவும் ஒத்த என்பது

தாம்பல தண்கடற் றையலர் வந்தே
யோம்பலின் மாநவ நோக்குவ தொத்த
(கப்பலெழும்பு படலம்: 48)

எனவும் வந்துள்ளமை காண்க.

ஐதுறாசு நயினர்ப் புலவரின் நவமணிமாலை என்னும் காப்பியம் பிழைகள் திருத்தப்பட்ட புதிய பதிப்பாய் வெளிவரின் படிப்போர் பெரிதும் பயன் பெறுவர். முகியித்தீன் ஆண்டவர் அவர்களைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட ஏனைய காப்பியங்களில் இல்லாத பல புதிய நவமான செய்திகளை இந்நவமணிமாலை என்னும் முகியித்தீன் புராணத்தில் காணக்கூடியதாக இருக்கின்றது.

# பதினான்காவது இயல்

## நாகூர்ப் புராணம்

திருத்தலம் ஒன்றின் பெயரால் அழைக்கப்படும் ஒரே இஸ்லாமியத் தமிழ்க் காப்பியம் நாகூர்ப் புராணம். தமிழ் நாட்டில் உள்ள நாகூரிலே சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளார்கள். அவர்கள் பிறந்தது வடஇந்தியாவில் உள்ள மாணிக்கப்பூர் என்னும் நகரம். சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் நல்லடக்கம் செய்யப்பட்ட பின்னர் நடைபெறும் நிகழ்ச்சிகளே நாகூர்ப் புராணத்தில் வருணிக்கப்பட்டுள்ளன. அப்பெரியாரின் மறைவுக்குப் பின்னர் அவர் தம் சிறப்பாற்றல் காரணமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளே நாகூர்ப் புராணத்தில் வருணிக்கப்பட்டுள்ளன.

நாகூர் ஆண்டகை என்றும் மீரான் ஆண்டகை என்றும் சாகமீது நாயகம் என்றும் பலவாறாக அழைக்கப்பெறும் சாகுல் கமீது ஆண்டவர் அவர்கள் வாழ்க்கை நாகூர்ப் புராணத்தில் இடம் பெற்றுள்ள உத்தர வளித்த படலத்தில் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. செய்கு அப்துல் காதிர் நெயினர் லெப்பை ஆலிம் புலவர் சாகுல் கமீது ஆண்டகையின் வாழ்க்கையை தமது திருக்காரணப் புராணம் என்னும் காப்பியத்தின் கருப்பொருளாக அமைத்தமையால் நாகூர்ப் புராணம் அதனை விரிவாக விவரிக்கவில்லை.

இந்நாகூர்ப் புராணத்தில் தரப்பட்டுள்ள வாழ்க்கை வரலாற்றில் சாகுல் கமீது ஆண்டவரின் மூதாதையர் யார் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. எல்லாம் வல்ல அல்லாஹ்வின் படைப்புகளுக்கு மூலகாரணராயிருந்த மூகம்மது நபி (சல்) அவர்களின் இளைய மகளான பாத்திமா (றலி) அவர்களின் மூத்த மகனை அசன் (றலி) அவர்களின் வழித் தோன்றலாக வந்த அஸன் குத்தூஸ் என்பவரின் புதல்வரே சாகுல் கமீது ஆண்டவர் என்பது மூன்று செய்யுட்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மாதான பல்லுயிராள் வல்லதாம் பரம்பொருளின்
உன்னத்தின் முன்னரமைந் துலகுபிற வுந்தோற்ற (1)
மன்னுற்ற நிமித்திகராய் மாண்டதொரு மறையினரா
யின்னுற்ற நபிமாருக் கிறைவராய் முன்னுகிப்
பின்னுற்ற நங்கடிருப் பெருமானர் திருமகளின் (2)
தலைமகனர் நனிவிழையுஞ் சந்தானந் தனித்தோங்க
வலைதிரளு நெடும்புணரி யார்த்தவிரு நிலவலய
நிலைமைபெற வுயர்மார்க்க முயிர்ப்பித்த நிருமலர்தங்
கலைபயிலும் பௌத்திரரா யஸன்குத்தூஸ் கவின் மகவாய் (3)

என மூன்று செய்யுட்களில் உத்தரவளித்த படலத்தில் மூதாதையர் குறிப்பிடப்பட்டுள்ளனர். இஸ்லாத்துக்குப் புத்துயிரளித்தவர் எனப் பொருள்படும். முகியித்தீன் ஆண்டவர் அவர்களினதும் வழித்தோன்றல் சாகுல் கமீது ஆண்டவர் என்பதும் இங்கே குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம்.

சாகுல் கமீது ஆண்டகையின் பிறப்பையும் மறைவையுங் கூறவந்த நாகூர்ப் புராணம், அவர்களைச் சூரியனுக்கு உருவகித்துள்ளது. அவர் பிறந்தது மாணிக்கப்பூர், மறைந்தது நாகூர், சாகுல் கமீது என்னும் சூரியன் மாணிக்கப்பூர் என்னும் வடகடலில் உதித்து நாகூர் என்னும் தென்கடலில் மறைந்தது என்றும் அந்தச் சூரியன் எல்லா இடத்திலும் அற்புத நிகழ்ச்சிகள் என்னும் கதிர்களை பரப்பியது என்றும் ஒரு செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

மாணிக்க நகரமெனும் வடகடலி னுதித்தாங்கு
சேணிக்கை நாகூராந் தென்கடலின் மறையவெழூஉப்
பாணிக்க வெவரகனு மற்புதமாங் கதிர்பரப்பி
யாணிக்கை பெறும்ஷாகுல் கமீதென்னு மாதித்தன்

(உத்தரவளித்த படலம்: 5)

அடுத்து ஆண்டகை அவர்களின் வாழ்க்கை நான்கு கால எல்லைகளாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. பிறந்தகத்திலே வாழ்ந்து கல்வி கற்ற காலம் பதினெட்டாண்டுகள். பிறந்தகத்தினை நீங்கி குருவிடம் சென்று அங்கிருந்த கால எல்லை பத்தாண்டுகள், கவாலியூர் கௌது சாகிபு அவர்களிடம் பயிற்சி பெற்றமையையே இக்கால எல்லை குறிப்பிட்டுள்ளது. கலைகள் பலவற்றைக் கற்றுந் தேர்ந்த பின்னர் அவ்விடத்தை விட்டகன்று பல நாடுகளிலும் சுற்றித் திரிந்த கால எல்லை பன்னிரண்டு ஆண்டுகள். பின்னர் அவர்கள் சிறந்து விளங்கிய இடமாம் நாகூருக்கு வந்தார்கள். நாகூரிலே இருபத்தெட்டாண்டுகள் சிறந்து விளங்கினர்கள். இங்ஙனம் அறுபத்தெட்டாண்டுகள் வாழ்ந்த சாகுல் கமீதாண்டகை அவர்கள் தமது இறுதிக் காலம் நெருங்கியதும் தமது புத்திரரான செய்கு யூசுபு என்பவரை அழைத்து அவர் அறிய வேண்டிய பல அறிவுகளையும் தாம் இறையடி எய்திய பின்னர் செய்கு யூசுபு அவர்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் விளக்கிக் காட்டினாகள். இச்செய்திகளே நாகூர்ப் புராணத்தில் உள்ள உத்தரவளித்த படலந்தில் இடம் பெற்றுள்ள இரண்டு செய்யுள்களில் இவ்வாறு தரப்பட்டுள்ளன.

பிறந்தகத்துப் பதினெட்டாண் டிகப்பித்துப் பின்னரவண்
இறந்தகத்துக் குருவயிற்போய்ப் பத்தாண்டாங் கிருந்தருளத்
துறந்தகத்துப் பஃறேயம் பன்னீராண் டுறச்சுற்றிச்
சிறந்தகத்து நாகூராந் திருத்த லயினி னிதமர்ந்து
ஓரிருபத் தெட்டாண்டு முறப்போக்கி யெல்லாமு
மாரறுபத் தெட்டாண்டுங் கழிந்தவதி யாங்காலை
சீருறுபுத் திரரான செய்குயூசு புவிளித்து
நேருறுபற் பல்லறிவு மற்றவுமே நிகழ்த்தினர் (5-6)

தமது இறுதி அண்மி விட்டது என்பதை அறிந்த சாகுல் கமீது ஆண்டகை தமது புதல்வரிடம் இவ்வாறு கூறினார்கள், 'அருமை மகனே! கேட்பாயாக. யான் இறந்து மூன்று நாட்கள் சென்ற பின்னர் யான் நல்லடக்கம் செய்யப்பட்ட கபுறின் (புதைக் குழியின்) கால் பக்கமாக வந்து சலாம் கூறுவாயாக, நீ கூறிய சலாமுக்குப் பிரதி சலாம் கிடைக்கப் பெற்றால் யான் இக்குழியினுள்ளே இருக்கின்றேன் என்று நீ நினைப்பாயாக. உனது சந்ததிகளுடன் உனது பரம்பரை வளர்ந்தோங்க இங்கே இருப்பாயாக. இந்த இடத்தை விட்டு நீங்காதே. எப்பொழுதும் இதனையே வசிப்பிடமாகக் கொள்வாயாக. அவ்வாறு உனக்குப் பிரதி வார்த்தைக் கிடைக்கவில்லை என்றால் நீ விரும்புவது போல் உனது உறவினர்கள் வாழும் உயர்ந்த பதியான லாகூருக்குச் சென்று விடுவாயாக! சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் புதல்வர் செய்கு யூசுபு அவர்களுக்குக் கூறிய இறுதி உபதேசங்களையே நாகூர்ப் புராணம் இவ்வாறு கொண்டுள்ளது.

என்னரிய மைந்தகேள் யானிகந்த மூன்றுநாண்
மன்னரிய கபுறின்கான் மாட்டடைந்து சலாம்பகர்தி
பன்னரிய பிரதிவெளிப் படுமாயின் இகந்தயான்
இன்னரிய வயினுளனு வென்றுநீ நினைக்குதியால்
சந்ததிகளு டனீநின் சந்தானந் தழைந்தோங்க
இந்தவிட மிறவாமல் எஞ்ஞான்றும் இருக்குதிமற்
றந்தமொழி வரக்கொள்ளா யாயினீ விழைந்தாங்கு
பந்தமுறு முயர்லாகூர் பதியிற் போய்ச் சேர்தியால்
(உத்தரவளித்த படலம்: 29)

சாகுல் கமீது ஆண்டகை தம் புதல்வருக்கு மற்றோர் உபதேசமும் செய்தார்கள். 'மேலும் கேட்பாயாக! யான் மறைந்த மூன்றும் நாள் வைகறைப் பொழுதில் என்னுடைய கபுறடியில் முதியவர் ஒருவர் இருப்பதைக் காண்பாய். அவர் குறைஇரந்து கொண்டிருப்பார். ஓதிக் கொண்டிருப்பார். அவருடைய ஓதல்கள் முடிந்ததும் அவரிடம் செல்வாயாக. சென்று அவருக்கு சலாம் கூறுவாயாக.

அவரும் அதற்குப் பிரதி சலாம் கூறுவார். அவருடைய பெயர் என்ன என்று கேட்பாயாக. அவர் தமது பெயரைக் கூறுவார். நீ நினைப்பன எல்லாவற்றையும் அவரிடம் கேட்பாயாக. அவர் கூறும் முறைப்படி நீ நடப்பாயாக' என்று கூறினார்கள். இச்செய்திகளே இவ்வாறு பாடப்பெற்றுள்ளன.

மற்றுங்கேள் யானிகந்த மூன்றுநாள் வைகறையில்
பற்றுமென் னருங்கபுறின் பக்கத்தி லொரு முதியோர்
உற்றுநின் றிரப்பதுமற் றேதியுறு வாரவணீ
சற்றுநின் றவரேகுந் ததிகண்டாங் குடன்சேறி
சிறுகேட்சென் றவர்க்குநீ செப்புகவால் சலாமவரு
மறுமொழியிற் கூறுவர்பின் மன்னுமவர் பெயர் கேட்டி
பெறுபெயர்மற் றறைகுவர்மன் பிறக்குநீ நினக்குமற்
றுறுவனவெல் லாமாக வுவர்நோக்கி யுரைத்தியால்
நீயுரைத்த மொழிமுழுது நெஞ்சாரக் கேட்டவர்
வாயுரைத்த மொழியாங்கு மரீஇநடவென் மகவென்று
(உத்தரவளித்த படலம் 10-12)

ஒரு தாயானவள் தனது மகனுக்குப் புத்திமதி சொல்வது போல் சொல்லி முடித்த பின்னர் சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் இறையடி எய்தினார்கள். வபாத்தானார்கள் அவர்கள் மறைந்த நாளையும் நாகூர்ப் புராணம் இவ்வாறு குறிப்பிட்டுள்ளது :

தாயுரைத்த தன்மையிற் றனியுரைத்து நம்முடைத்தொள்
ளாயிரத்தேழ் பத்தெட்டா மாண்டுஜமா துல்லாகிர்
என்றவுயர் மதிபத்தாந் தினம்வெள்ளி யின்னிரவு
குன்றவருமி வைகறையிற் கடலுலகோம் பியகுத்பாய்
நின்றவுயர் பெருமானார் நீண்டநிலன் றனைக் கடந்து
மன்றமேன் பதம்புனைஇ மருவுமுபாத் தாயினார்
(உத்தரவளித்த படலம் : 12-13)

இங்கே சாகுல் கமீதாண்டகை இறையடி எய்திய ஆண்டு ஹிஜ்றி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. தேதி ஜமாதுல் ஆகிர் மாதம் 10ஆம் நாள் வெள்ளிக்கிழமை எனக் குறிக்கப்பட்டுள்ளது. இது கி.பி. 1579 ஆகஸ்ட் மாதம் 7-ஆம் தேதி வெள்ளிக்கிழமை ஆகும். நாகூர் ஆண்டகை அவர்கள் அறுபத்தெட்டாண்டுகள் உலகில் வாழ்ந்தார்கள் எனவும் நாகூர்ப் புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவை 68 ஹிஜ்றி ஆண்டுகள் எனக் கொண்டால் சாகுல் கமீது ஆண்டகை அவர்கள் ஹிஜ்றி 919வது ஆண்டில் பிறந்திருத்தல் வேண்டும். இது கி.பி. 1513ஆம் ஆண்டாகும்.

சாகுல் கமீது ஆண்டகை நல்லடக்கஞ் செய்யப்பட்ட பின் மூன்றாம் நாள் வைகறையில் செய்கு யூசுபு கபுறடிக்குச் சென்றார். அங்கே தந்தையார் கூறியவாறே சந்திரன் போன்ற முகத்தை உடைய ஒரு முதியவர்,

ஆங்கொருமுதி யோர்திங்க ளனையவாண் முகத்தர்

(உத்தரவளித்த படலம் : 19)

நின்று கொண்டிருப்பதைக் கண்டார். இருவரும் சலாம் கூறிக் கொண்டனர். தந்தையார் சொற்படி அம்முதியவரின் பெயர் என்ன என்று செய்கு யூசுபு கேட்டார். அம்முதியவரும்,

மெய்கொளு மலர்வாய் விண்டு விளங்குபேர் கலிறெற் கென்றார்.

(உத்தரவளித்த படலம் : 22)

எனத் தமது பெயர் கலிறு என்று கூறினார். இது ஹயாத்துநபி என்னும் கிலிறு நபி (அலை) அவர்களைக் குறிக்கும் என்பர். செய்கு யூசுபு அவர்கட்கும் அவர்தம் மரபினோர்க்கும் உதவி புரிவது தமது கடனெனக் கூறிய அம்முதியவர் சென்றுவிட்டார். பின்னர் செய்கு யூசுபு அவர்கள் தமது தந்தையாரின் கபுறின் கால்மாட்டில் நின்று எல்லோருங் கேட்ப சலாம் கூறினார்.

அம்மொழி யென்னவன்பின் அலைக்குமுஸ் ஸலாமென்மைந்த

(உத்தரவளித்த படலம் : 32)

பதில் சலாம் மொழியைத் தொடர்ந்து நாகூரிலே தங்குமாறு செய்கு யூசுபு அவர்களுக்குப் புத்திமதி கூறப்பட்டது. இங்ஙனம் ஒரு செய்யுள் இதனைச் சுட்டியுள்ளது.

நீயுமிங் கென்று நீங்கா திருக்குதி நினக்குப் பின்னர்
ஆயுநல் லறிவி னேங்கு மரியசந் ததியோர் யாருங்
காயும்வெங் கதிர்மா ருகக் காண்வரை யிவனே யென்றன்
ரேயுமன் புற்று வைகித் துயர்கெட விருக்க மன்னே

(உத்தரவளித்த படலம் 33)

இறுதி நாள் வரை உன் சந்ததியினர் இங்கே இருப்பார்களாக என் ஆசீர்வதித்தமையே இங்கு சுட்டப்பட்டுள்ளது.

இதன் பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகளே நாகூர்ப்புராணத்தில் வருணிக்கப்பட்டுள்ளன. அவர்களின் மறைவுக்குப் பின்னர் நிகழ்ந்த அற்புதக் காட்சிகளே நாகூர்ப் புராணத்தில் சிறப்பாக வருணிக்கப் பட்டுள்ளன.

இக்காப்பிய ஆசிரியரே தாம் எந்தப்பொருளை இக்காப்பியத்துக்கு கருவாகக் கொண்டுள்ளார் என்பதனைக் குறிப்பிட்டுள்ளார். சாகுல் கமீதொலி அவர்கள் மறைவதற்கு முன்னர் நிகழ்ந்த சம்பவங்களைக் கொண்ட அவர்களது வாழ்க்கை முழுவதும் திருக்காரணப்புராணம் என்ற பெயரில் காப்பியமாகப் பாடப்பட்டுள்ளது. இதனை செய்கப்துல் காதிறு நயினார் லெப்பை ஆலிம் புலவர் பாடியுள்ளார். நாகூர் ஆண்டகை அவர்கள் மறைந்த பின்னர் அவர்களோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளே இப்புராணமாம், நாகூர்ப் புராணத்தில் இடம் பெற்றுள்ளன. இதனை பாயிரத்தில் உள்ள முதலாம் பாடலில் இவ்வாறு பாடிஉள்ளார் ஆசிரியர் :

மழைபொரு கரத்தின் சாகுல் கமீதொலி மறைமுற் செய்த
கழைபொரு சரிதம் யாவுங் காரணப் புராண மாகித்
தழைபெற மறைந்த பின்னாஞ் சரிதமற ரெருருங்கு கொண்டு
விழைவுறப் பொலியு மோர்க்கு விளக்குமிப் புராண மன்றே
(பாயிரம் : 1)

காப்பிய ஆசிரியா :

நாகூர்ப் புராணம் நாகூர் குலாம் காதிறு நாவலரால் இயற்றப் பெற்றது. இவர் வாப்பு மரைக்கார் என்பவரின் புதல்வர். வித்வஜன சேகரர். தர்க்க வித்துவான். கல்வி கேள்விகளிற் சிறந்தவர். குலாம் காதிறு நாவலரின் தகப்பனார் ஆயுள் வேத வைத்தியராய்த் திகழ்ந் தவர். சாற்றுக்கவி பாடியவர்களுள் ஒருவர் மகுமுது பந்தரைச் சேர்ந்த அ. முகம்மது சுல்தான் மரைக்காயர் அவர்கள். அவர் ஓர் உருவகம் மூலம் குலாம் காதிறு நாவலரை இவ்வாறு வருணித்துள்ளார், தமிழ் என்னும் குதிரையிலே அவர் வலம் வருபவர். அவரது வலக்கையிலே இலக்கணம் என்னும் வாளைக் கொண்டிருப்பார். இடது கையிலே செய்யுள் என்னும் கொடியைக் கொண்டிருப்பார். இங்ஙனம் குதிரையில் நாவலர் வலம் வரும் விதத்தை இவ்வாறு பாடியுள்ளார் முகம்மது சுல்தான் அவர்கள்

மணவான் றமிழென்னும் வாம்பரியி லேறியிலக்
கணவாள் வலது கரங்கொண் டிடக்கரத்திற்
குணமான செய்யுட் கொடிபிடித்து மாவிசய
நணவா ரிறைவன்குலாம் காதிறுநா வலர்பெருமான்

குலாம் காதிறு நாவலர் பன்னூலாசிரியர். மூன்று காப்பியங்களின் ஆசிரியர். ஆரிபு நாயகம் என்பது இவர் இயற்றிய மற்றொரு காப்பியம். முகாஷபா மாலை இவரது குறுங்காப்பியம். பதாயிகுக் கலம்பகம்,குவாலீர்க் கலம்பகம் மதுரைக் கோவை முதலிய பல நூல்களைக் குலாம் காதிறு நாவலர் இயற்றி உள்ளார். யாழ்ப்பாணத்து சு. அசனு லெப்பை அவர்கள் தமது சாற்று கவிகளுள் ஒன்றில் அவற்றைக் குறிப்பிட்டுள்ளார்.

துதிபுனைந்த கலம்பகங்கள் கோவையுர் மிறைக்கவிக
டொகுக்கப்பட்ட
விதிபுனைந்த பலபாடல் வசனவுரை களுமெவரும் வியப்பத்
தந்தோன்
நிதிபுனைந்த வுலகுபுகழ் நாவலரென் னும்பதவி நிலவப்பெற்றோன்
கதிபுனைந்த வில்லறத்தை யொளிர்பூணுக் கொண்டொழுகுங்
காட்சி யேய்ந்தோன்

மதுரையில் நிறுவப்பட்ட நான்காம் தமிழ்ச் சங்கத்தை நிறுவுவதில் துணைபுரிந்து ஓர் உறுப்பினராய்த் திகழ்ந்தார் குலாம் காதிறு நாவலர். அச்சங்கத்தின் 'நக்கீரர்' எனப் புகழ் நாமத்தையும் பெற்றார். மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் புலவராற்றுப்படை இயற்றிப் புலவரை ஆற்றுப்படுத்தும் வாயிலாகப் புகைவண்டியை வருணித்துப் புதுமை படைத்தார். பல வசன நூல்களையும் இயற்றி உள்ளார்.

ஐதுறூசு நயினார்ப் புலவரின் நவமணிமாலை என்னும் காப்பியந் தோன்றி ஏறத்தாழ 30 ஆண்டுகளுக்குப் பின்னர், குலாம் காதிறு நாவலரின் நாகூர்ப் புராணம் தோன்றி உள்ளது. நாகூர்ப் புராணம் தோன்றி 12 ஆண்டுகளில் ஆரிபு நாயகம் என்னும் காப்பியம் படைக்கப்பட்டுள்ளது. குறுங்காப்பியமாம் முகாஷபா மாலை நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர் குலாம் காதிறு நாவலரால் படைக்கப்பட்டுள்ளது. நாகூர்ப் புராணத்தைத் தாம் ஹிஜ்ரி 1300இல் பாடியதாகப் பாயிரத்தில் உள்ள ஒரு செய்யுளில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

நண்ணருசீர் கெழுமியவிந் நாகூர்ப்பு ராணத்தைக்
கண்ணகனவ் வூரின்குலாம் காதிறுநா வலனென்பா
னண்ணனபி கிசுறத்தோ ராயிரத்து முந்நூற்றிற்
பண்ணமைதீஞ் சொற்றமிழிற் பனுவலாப் பாடினனே

(பாயிரம்: 11)

அவையடக்கம்

குலாம் காதிறு நாவலர் புதியதோர் உவமையினைக் கொண்டு அவையடக்கம் கூறிஉள்ளார். சிறந்த கவிவாணர் முன்னர் சிறியனாகிய நாவலர் இப்புராணம் இயற்ற முற்பட்டுள்ளார் எனக் குறிப்பிட்டுள்ளார். அதனை விளக்க ஏனைய புலவர் கையாளாத ஓர் உவமையைப் பயன்படுத்தி உள்ளார். ஆழ்கடலில் சுறா மீன் திரிகின்றன. அவை எவ்வித அலைகளையும் கடந்து செல்லும் ஆற்றல் வாய்ந்தவை. அவற்றுடன் சரி நிகர் சமானமாய்ச் செல்ல நினைத்தது நெய்த் தோலி என்னும் சின்னஞ் சிறிய மீன். கலைகளிற் சிறந்த கவிவாணரை ஆழ்கடலில் திரியும் சுறா மீனுக்கும் நாகூர்ப் புராணம் என்னும் காப்பியத்தை இயற்றிய தம்மை நெய்த்தோலி மீனுக்கும் உவமித்துள்ளார் இக்கருத்துக்களைக் கொண்ட பாடல் இது.

கலையேறு நெஞ்சிற் சிறந்தகவி வாணர்முன்னம்
புலையேறும் யானிப் புராணம்புனை மாறுகாணின்
விலையேறும் வெங்கட் சுறவோடும் விரிந்தவாழி
யலையேறும் நெய்த்தோலி யுந்தான்திரிந் தற்றுமாதோ

(பாயிரம் : 3)

'சாகுல் கமீது நாயகத்தின் கதையை கூற முற்பட்டேன். அவர் மீதுள்ள அன்பினால் பாடினேன். எனது கண்மணி போன்றவர் ஆண்டகை அவர்கள். அழகிய தமிழில் அவருடைய மறைவின் பின் உள்ள நிகழ்ச்சிகளைக் கூறி உள்ளேன். அங்கே பிழைகள் இருக்கலாம் ஆனால் அவற்றை அறிஞர் பிழைகள் எனக் கொள்ளார். ஏனெனின் அகன்று பரந்த உலகுக்கு நிலாவினை வழங்கும் சந்திரனிலும் மறு இருக்கின்றதல்லவா? அந்த வடுவையும் உலகம் ஏற்றுக் கொண்டுள்ளதல்லவா? அந்தச் சந்திரனிலிருந்து அந்த வடுவை நீக்க எவரும் முற்படவில்லை.ஏற்றுக்கொண்டுள்ளது உலகம். அதே போன்று எனது காப்பியத்திலுள்ள குற்றங்களைக் குற்றமாகக் கொள்ளாது அறிஞர் ஏற்பாராக' என்று இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார்.

எங்கண் மணியினிறை வான்கதையற் பிற்கூறு
மிங்கென் மொழியின் வடுவோர் வடுவென்னு ரின்னே
ரங்கண் விசும்பின கனிலா வீசிக் காலுந்
திங்கள் வடுமா வுலகங் கொளச்சேர்ந் ததானே

(பாயிரம் : 10)

**கடவுள் வாழ்த்து :**

கடவுள் வாழ்த்துக்கு வரு முன்னர் காப்புச் செய்யுள் அமைந்துள்ளது. இம்மா பெரும் உலகில் அனைத்தும் சென்னி தாழ்த்துவது அல்லாஹ்வுக்கே நன்மை தீமை என்னும் இரண்டு மாபெரும் வினைகளுக்கும் அப்பால்பட்டவனாக இருப்பவனும் அல்லாஹ்வே. எல்லாவற்றையும் விட மேலாக உள்ளவன். அவனுக்குப் பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை. அல்லாஹ்தான் எல்லாவற்றிற்கும் முதலானவனுயிருக்கின்றான் எப்போதும் இருப்பான். அவனையே சரணடைந்து வாழ்வோம். இவ்வாறு காப்புச் செய்யுளைப் பாடி உள்ளார் ஆசிரியர்.

திருமா வுலக முளவாமவை சென்னி தாழ்த்த
விருமா வினையி னிகந்தின்புற ஆள்வோன் யாவன்
பெருமா னுயர்ந்தோன் பிறப்போடிறப் பின்றித் தோற்று
மொருமா முதல்வ னவன்மாணர ணுற்று வாழ்வோம்

ஏனைய காப்பியங்களைப் போலவே நாகூர்ப் புராணக் காப்பியத்தின் கடவுள் வாழ்த்தும் அமைந்துள்ளது. அல்லாஹ்வைப் புகழ்ந்து கடவுள் வாழ்த்திலே ஒரே ஒரு செய்யுளே பாடப்பட்டுள்ளது. ஏனைய பாடல்களும் மாறி அமைந்துள்ளன. முகம்மது நபி (சல்) அவர்களைப் புகழ்ந்து ஒரு பாடலும் ஏனைய நபிமார்களைப் போற்றி ஒரு பாடலுமே கடவுள் வாழ்த்தில் இடம்பெற்றுள்ளன. அபூபக்கர் (றலி), உமறு (றலி), உதுமான் (றலி), அலி (றலி) ஆகிய நான்கு கலிபாக்களும் ஒரே பாடலில் புகழப்பட்டுள்ளனர். மற்றைய காப்பிய ஆசிரியர் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு பாடலில் புகழ்வர். அஸன் (றலி) உஸைன் (றலி) ஒரு பாடலிலும் நபித்தோழர் மற்றொரு பாடலிலும் நபிகள் பெருமானாரின் மனைவியரான நம்பிராட்டிமாரையும் அண்ணல் நபி (சல்) அவர்களின் புதல்வியான பாத்திமா (றலி) அவர்களையும் இன்னொரு பாடலிலும் இமாம் ஹனபி முதலிய நால்வரையும் வேறொரு பாடலிலும் முகியித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (றலி) அவர்களை பிறிதொரு பாடலிலும் புகழ்ந்து பாடியுள்ளார். ஏனைய பாடல்கள் ஒவ்வொன்றிலும் குவாலியூர் கௌது நாயகரையும், நாகை ஆண்டகையையும் திரிசிரபுர வேந்தரையும் செய்கு யூசுபையும் ஏனைய ஒலிகளையும் தனித்தனியே புகழ்ந்துள்ளார் ஆசிரியர்.

ஆசிரியர் அவர்தம் குருவையும் ஒரு பாடலில் நினைவு கூர்ந்துள்ளார். நூறுத்தீன் என்னும் பெயருடைய அவர்தம் குருவின் நுண்ணிய புலமையைப் புகழ்ந்து இவ்வாறு பாடி உள்ளார்,

புண்ணிய நேர்வழி புகுத்தி யாரெமை
யண்ணிய வடிமை யினுக்கிய யாண்டரு
ளுண்ணிய வறிவுறு நூறுத் தீன்குரு
தண்ணிய மலரடி தலைமிசைக் கொள்வாம்

(கடவுள் வாழ்த்து : 15)

அத்துடன் ஆசிரியர் நின்று விடவில்லை. தம்மைப் படிக்க வைத்த தமது தகப்பனர் ஒரு காலத்தில் மாணிக்க வியாபாரியாக இருந்தார். ஆனால் அவரோ தமது மகன் வாணிபத்துறையை விட கல்வித் துறையில் சிறந்தோங்க வேண்டுமே என விரும்பினார். ஆனால் அவர் தம் குறிக்கோள் நிறைவேறும் முன்னர் இறையடி சேர்ந்தார். அதன் பின்னர் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கிய அவர்தம் மூத்த சகோதரர் குலாம் காதிறு நாவலருக்குக் கல்வியூட்டும் பணியில் ஈடுபட்டார். அவர் பெயர் பக்கீர்த் தம்பி என்பதாகும். அவரையும் புகழ்ந்து ஒரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

முந்தை விதியின் முறைசேர் வழியென் னைக்காட்டிச்
சிந்தை பொலிய வருந்தெண் டமிழ்தேக் கியிட்டார்
தந்தை முன்றேன் றகைசால் பகீர் தம்பியென்பார்
எந்தை யவர்தம் மிணையீர்ங் கழலேத்துவாமால்

(கடவுள் வாழ்த்து : 16)

உரை வழங்கியவர்

நாகூர்ப் புராணம் பாடுவதற்கு உரை வழங்கியவர் முகம்மது கௌது சாகிபு என்பராவார். அவர் அறிவில் முதிர்ந்தவர். வாஞ்சூர் பக்கீர் சாகிபு என்பவரின் புதல்வர். நாகூர் செய்கு யூசுபு என்பவரின் மரபினில் வந்தவர். அவர் வழங்கிய உரையைப் பெற்றே இக்காப்பியத்தைத் தாம் இயற்றியதாக ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மாவிரவு வனநாகூர் செய்குயூசு புபெருமான் மரபி னோராம்
பூவிரவு புகழ்சோ வாஞ்சூர் பகீர் சாகிபருள் புதல்வ ரென்னும்
தாவிரவு நிறையறிவு முதிர்கொண் முகம்மதுகௌது சாகிபோர்ந்து
பாவிரவு வழியளித்த பழுதுதீ ருரைவழித்திப் பநுவற் ருனே

(பாயிரம் : 2)

இக்காப்பியம் 1893ஆம் ஆண்டு அச்சிடப்பட்டது. இதனை அச்சிடுவதற்குப் பொருளுதவி புரிந்தோர் நாகூரைச் சேர்ந்தவர். பல்வேறு வர்த்தகத் துறைகளில் ஈடுபட்டிருந்தவர். பாவாராவுத்தர் என்பவரின் புதல்வர் செல்வத்திலே வளர்ந்தவர். சிக்கந்தர் ராவுத்தர் என்பவர், அவருடைய பொருளுதவியைக் கொண்டு

நாகூரைச் சேர்ந்த ம. முகம்மது நயினா மரைக்காயரால் அச்சிடப் பட்டது இக்காப்பியம். முகம்மது நயினாவே இச்செய்தியை இவ்வாறு அவர் அளித்த சாற்று கவிகளுள் ஒன்றில் குறிப்பிட்டுள்ளார்.

மெய்வாய்ந்த வினைபலவோ ருருவாய்புக முடம்பான்
விளங்கெம் மூரான்
பொய்வாய்ந்த வுலகநசை யறும்பாவா ராவுத்தர்
பொருந்த நாளுஞ்
செய்வாய்ந்த பெருந்தவத்தின் மகவானே னெனக்குமொரு
சிறந்த நேயன்
உய்வாய்ந்த சிக்கந்த ரிராவுத்த னெனும்மெவர்க்கு
முதவி யோனே

அ. முகம்மது சுல்தான் மரைக்காயர் இவரைப் பற்றி இவ்வாறு பாடி உள்ளார்,

பல்வத்த கஞ்செய்த பாவாரா வுத்தர்மகன்
செல்வத்தின் மேவிவளர் சிக்கந்தர் ராவுத்தன்
வெல்வித்தந் நூலை விளங்குவா ணச்சிட்டான்
கல்வித்தி றத்திற்கரை கண்டமர் நண்பன்

## இயற்கை வருணனை

சங்க காலத் தமிழ் இலக்கியங்களில் உள்ள இயற்கை வருணனைக் காட்சிகளைப் போன்ற காட்சிகளை வருணிப்பதில் தமக்கு நிகர்தாமே என்று கூறக்கூடிய அளவுக்கு இயற்கை வருணனைகளில் கை தேர்ந்தவராய் விளங்கினார் குலாம் காதிறு நாவலர். அவருடைய இயற்கை வருணனைகள் ஒவ்வொன்றும் சங்க காலத் தமிழ் இலக் கியங்களை நினைவூட்டுவனவாகவே இருக்கின்றன.

சூரிய உதயத்துக்குச் சற்று முன்னர் உள்ள நேரம் விடியல் எனப் படும். விடிவதற்கு இன்னும் சொற்ப வேளையே உண்டு. அச்சந்தர்ப் பத்தில் தாமரை மலரின் மொட்டுக்கள் அரும்ப ஆரம்பிக்கின்றன. அவை அரும்புவதற்குக் காலாக அமைகின்றன வண்டினங்கள். அவை மொட்டுக்களிலே அமர்ந்திருந்து 'விரிந்திடு விரிந்திடு', 'எழுந்திடு, எழுந்திடு' என்று கூறுமாப் போல்—ஊதுமாப் போல் காட்சி அளிக் கின்றன. ஊதுகின்றன. இதற்கிடையே பறவை இனங்கள் கலகல என சப்திக்கின்றன. சூரிய உதயமாகப் போகிறதே என்று விலங்கி கினங்கள் மகிழ்ச்சி அடைகின்றன. கிழக்குத் திசை வெள்ளென வெளுக்கிறது. இவ்வாறு ஆரம்பித்தது சாகுல் கமீது ஆண்டகையை

நல்லடக்கஞ் செய்து கழிந்த மூன்ரும் நாள். இதனையே குலாம் காதிறு நாவலர் தமது நாகூர்ப் புராணத்தில் இவ்வாறு வருணித்துள் ளார்.

முள்ளரை முளரி மொக்குண் முறுக்குவிட் டவிழ வாசக்
கள்ளவாய்ச் கரும்புத் தேனும் கலந்துநின் றூத மற்றப்
புள்ளினங் கலக லென்ன விலங்கின முவகை பூப்ப
வெள்ளென மூன்ரு நாட்டு விடியல் வந்துற் றதன்றே
(உத்தாவளித்த படலம்: 26)

இங்கே 'வெள்ளென' என்ற பதம் பயன்படுத்தப்பட்டுள்ளது, இந்த 'வெள்ளென' என்னும் சொற்றொடர் அதிகாலை என்னும் பொருளில் ஈழத்து முஸ்லிம் மக்கள் பயன்படுத்துவர். ஆனால் ஈழத்துத் தமிழ் மக்கள் 'வெள்ளென' என்ற பதத்தை 'முன்னரே', 'நேரகாலத் தோடே' வந்துவிட்டமையைக் குறிக்க 'வெள்ளென வந்துவிட்டேன்' எனப் பயன் படுத்துவதைக் காணலாம். இங்கே ஆசிரியர் கிழக்கே வெண்மை தோன்றியதைக் குறிக்கவே 'வெள்ளென' என பதப் பிர யோகம் செய்துள்ளார், 'சுரும்பும் தேனும் ஊத பூக்கள் மலர்கின்றன' என்பதையே, முல்லைப் பாட்டில் 'அஞ்சிறைத் தும்பி துஞ்சி யூத' பூக்கள் மலர்ந்தன எனச் சான்ருேர் முன்னரே பாடிப் போந்தனர்.

மற்ருெரு காட்சியில் வண்டுகள் தாமரையிலே விழுந்து இசை பாடுகின்றன. அந்த இசைக்கு இணங்க தத்தம் தோகைகளை விரித்து மயில்கள் ஆடிக் கொண்டிருக்கின்றன. அத்தகைய பூஞ் சோலைகள் மலிந்துள்ள நகர் தான் குவாலீர் என குலாம் காதிறு நாவலர் ஒரு பாடலில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

முண்டகம்மிசை வண்டுவீழ்ந் தின்னிசை முரல
விண்டகண்பல போன்மெனக் கலாபங்கள் விரித்துக்
கொண்டமஞ் ஞையங் காவலர் திருநகர் குவாலீர்
(தபோதனர் புறப்பாட்டுப் படலம் : 4)

கருமையான வண்டு பூவிலே அமர்ந்து ஊதுகின்றது. பூ மொட்டு அவிழ்கின்றது. மணங்கமழும் தேன் பெறப்படுகின்றது. அவ்வாறு தேன் பெறப்படுவது மலர் அளிக்கும் விருந்தாக அமைந்து விடுகிறது. அத்தகைய கழித்தரையில் தென்றல் வீசுகின்றது. விளையாடி வருகின்றது சிறகுகளை வளைத்துப் பெண் அன்னத்தைத் தழுவிய வண்ணம் அன்னங்கள் அங்கே துயிலுகின்றன. இத்தகைய அருமை யான தன்மையைத் தெளிவாக எடுத்துக் காட்டிக் கொண்டிருக் கின்றன அந்த அன்னங்கள். இதனையே குலாம் காதிறு நாவலர் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

கருந்தும்பி இருந்தூதப் பிணியவிழ்பு கமழ்தீந்தேன்
விருந்தொன்ற வினிதளிக்கும் விரிமலர்ப்பூங் கழிக்கரைவாய்
வருந்தென்றல் விளையாடி வளைத்திரைகள் பெடைதழீஇ
யருந்தன்மை நனிகாட்டு மன்னங்கள் கண்வளரும்

(பள்ளிக் கட்டிய படலம் : 4)

இதே கருத்து முல்லைப் பாட்டில்

யாழிசையின் வண்ணடார்ப்ப நறுவீமுல்லை
யரும்பவிழலரி (8-10)

எனவும் மணிமேகலையில்

குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட (4 : 4)

எனவும் சிலப்பதிகாரத்தில்

மழலைத் தும்பி வாய்வைத் தூத (4 : 16)

எனவும் வந்துள்ளமை காண்க. ஆசிரியர் தமது புலவராற்றுப் படையில்

அஞ்சிறைத் தும்பி துஞ்சியூதப்
பிணியவிழ் பலர்ந்து கமழ்காம் பணிமலர் (60-61)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

மற்றது ஒரு மாலைக் காட்சி. வானம் சிவந்து காட்சி அளித்தது. பொன் மாலை போன்று இருந்தது. ஞாயிறும் அம்மலைக்குப் பின்னால் சென்று விட்டான். அப்பொன் மலையில் புகுந்து விட்டான். சூரியன் புகவே வானத்தில் புள்ளிகள் தோன்றத் தலைப்பட்டன. நட்சத்திரங்கள் தோன்றலாயின. நட்சத்திரங்கள் நிறைந்த வானிலே சந்திரன் தோன்றினான். எழுந்து வந்தான். பகலிலே பல்வேறு விளக்கு வகைகள் வந்தன போன்று அந்நிலா இரவினில் நட்சத்திரத் கள் காட்சி வழங்கின. அத்தகைய மாலை வந்தது. இதனையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு வருணித்துள்ளார்.

பொன்மலை ஞாயிறு புகுதப் புள்ளிபோன்
மின்மலி வான்மிசை வெள்ளி பூத்தெழப்
பன்மலி விளக்கினம் பகல்வந் தாலென
வின்மலி மாலைவந் திறுத்த தன்றரோ

(தபோதனர் புறப்பாட்டுப் படலம்: 16)

ஒரு பாலைக் காட்சிக்கு வருவோம். திருட்டு மூலம் வாழ்க்கை நடத்துவோர் வாழும் இடம் பாலைநிலம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அவர்களுடைய திருட்டு வாழ்க்கை 'களவேர் வாழ்க்கை' எனச்சுட்டப் பட்டுள்ளது, அவர்கள் மனமோ கொலையையே குறிக்கோளாகக் கொண்டது. அவர்கள் எறியும் அம்புகள் அப்பாலை வழியாகப் போவோரை அச்சுறுத்த வல்லவை. அச்சுறுத்துவதோடு அவ்வழிப் போக்ககரைக்கொன்றும் விடுகின்றன. அவர்கள் எதற்கும் அஞ்சாதவர் கள். அவர்கள் திரிக்கப்பட்ட தாடிமீசை உடையோராவார். அத்தாடிகள் மரைகளின் திரிந்த கொம்புகளைப் போன்று காட்சி அளித்தன. மரை களே நீரில்லாமல் வாடி இருந்தன. எரியும் தன்மை உடைய நிலத்தின் வெப்பம் காரணமாக அவை வாடி இருந்தன. மலைகளையும் பிளக்க வும் நிலத்தை வெடிக்கவும் செய்யும் ஆற்றல் வாய்ந்தவையாய் இருந் தது. இக்காட்சியையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு ஒரு செய்யுளில் படம் பிடித்துக் காட்டி உள்ளார்.

கலைமருப்பின் மறிந்துவீழ் திரிதாடி யுருமஞ்சாக்
    களவேர் வாழ்க்கை
கொலைமனத்த ரெறியம்பு போவாரை யச்சுறுத்திக்
    குவியு ஞாங்கர்
மலைபிளப்பின் மண்பகவெங் கதிர்தெறலி னீர்நசையான்
    மரைகள் வாடும்
பலவயினெய் வெரிநனைய குவிந்தபுறக் குடிற்பாலை
    பலவும் நீந்தி

(திருவிழாப் படலம்: 22)

இச்செய்யுளில் முதலிரண்டு அடிகளில் குறிப்பிடப்பட்டுள்ள காட்சியை கலித்தொகையில் உள்ள பாலைக் கலியில் உள்ள ஒரு செய்யுள் எமக்கு நினைவூட்டுகிறது.

அப்பாலைக்கலிச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

எருத்து வலிய எறுழ்நோக் கிரலை
மருப்பிற் றிரிந்து மறுந்துவீழ் தாடி
உருத்த கடுஞ்சினத் தோடா மறவர்
பொருள்கொண்டு புன்செயி னல்லதை யன்போ (14)
டருள்புற மாறிய வாரிடை யத்தம்

திருமண விழாவுக்குப் பந்தர் அவசியம். அத்தகைய பந்தர்களை சில முக்கனிகள் கொண்டு அந்நகர மக்கள் அலங்கரித்தனர். சில ளகளை உள்ளே கொண்ட முழவு போன்று காட்சி வழங்கும் இனிய

பலாப்பழங்கள் பந்தரிலே தொங்க விடப்பட்டன. மாமரத்தின் கிளை களிலே தாங்க முடியாது போன்று குலைகுலையாகத் தொங்கிக் கொண்டிருந்த மாங்கனிகள் அப்பந்தலிலே இடம் பிடித்து விட்டன. பூக்களைக் கொண்ட இனிய வாழைக் குலைகள் நடப்பட்டு பந்தர் அலங்காரம் செய்யப்பட்டன. முக்கனிகளால் அலங்கரிக்கப்பட்ட பல பந்தர்கள் அங்கே அமைக்கப்பட்டிருந்தன. இக்காட்சி ஒரு செய்யுளில் இவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது.

சில்சுளை முழவுறழ் தீம்ப லாப்பழங்
கொல்கிளை தூங்குறு குலைய மாங்கனி
மல்குபூங் கதலியின் மன்னு தேங்குலை
பல்பல நாற்றினர் பந்தர் தோறுமே

(விவாகப் படலம் : 55)

கோங்கு மரத்தின் அழகிய பிரகாசமான மொட்டுக்களைப்போன்ற கொங்கைகளை உடையராய்ப் பெண்கள் திகழ்ந்தனர். அத்தகைய கொங்கைகளுக்கு நாங்களும் ஒப்பாவோம் என்பதைத் தெளிவாகக் காட்டும் இனிய கனி வகைகளை உண்டு மகிழ்ந்த குரங்குகள் மாங்கனி களைக் கௌவிக் கொள்வதற்காக குதித்தன. இக்காட்சியையே குலாம் காதிறு நாவலர் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

கோங்கெழி லொண்முகை கொங்கை களுக்கு
நாங்களு மொப்பென நன்கு தெரிக்குந்
தேன்கனி பற்பல தின்று களித்து
மாங்கனி கௌவுபு மந்தி குதிக்கும்

(திருவிழாப் படலம் : 76)

நாகூர்ப் புராணத்தில் இடம் பெற்றுள்ள உருமாற்றிய படலத்தில் உள்ள பல செய்யுட்களில் கலித்தொகையில் வரும் பல காட்சிகளைத் திரித்தும் மாற்றியும் குலாம் காதிறு நாவலர் அமைத்துள்ளார். சங்க காலத் தமிழ் இலக்கியங்களில் தமக்கிருந்த அளப்பரிய ஆற்றலை அவர் இவ்வாறு தமது காப்பியங்களிலும் ஏனைய நூல்களிலும் நயம் பெறக் காட்டி உள்ளார்.

ஒரு புலியோடு யானை பகற்பொழுதில் போர் புரிந்தது. அது வேங்கைப் புலி. வேங்கைமரம் பூத்தாற் போல் காட்சி அளிக்கும் புலி அது. பின்னர் யானை உறங்கியது. உறங்கும் பொழுது அந்த யானை ஒரு கனவு கண்டது. தான் உறங்கு முன்னர் புலியோடு சண்டையிட்ட காட்சியை யானை கனவிற் கண்டது. கனவிலும் புலி

யுடன் யானை சண்டையிட்டது. உடனே அந்த யானை விழித்தெழுந்தது. விழித்த உடனே அதற்குத் தோற்றியது வேங்கை மரம். அந்த வேங்கை மரம் பூத்திருந்தது. நறுமலர்கள் பலவற்றைக் கொண்டிருந்தது. வேங்கை மரம் பூத்திருக்கும் பொழுது அது உண்மையிலே ஒரு வேங்கைப் புலியின் தோற்றத்தைக் காட்டிக் கொண்டிருக்கும். நித்திரை விட்டு விழித்தெழுந்த யானை பூத்திருந்த வேங்கை மரத்தைக் கண்டது. அதனை வேங்கைப் புலியென நினைத்தது. யானைக்கு வந்தது கோபம். உடனே யானை அதனைத் தாக்கியது. புலியென நினைத்துத் தாக்கியது. அத்தாக்குதலினால் பழிக்குப் பழி வாங்கி விட்டது என அந்த யானை நினைத்தது. யானையின் கோபமும் தணிந்தது. உடனே அந்த யானை அதன் இடத்திற்குச் சென்று மீண்டும் உறக்கத்தில் ஆழ்ந்தது. இந்த அற்புதக் காட்சியையே குலாம் காதிறு நாவலர் தமது நாகூர்ப் புராணத்தில் இவ்வாறு பாடி உள்ளார்.

புலிபொரு துறங்கும் வேழம் பொருந்திய நனவிற் செய்த
வலிகெழு செய்தி யாங்கு வருங்கன விடத்துக் காண்டு
நலிவுடன் விழித்து நிற்கு நறுமலர் வேங்கை தாக்கி
மலிசினந் தணிய நாணி வழைவயிற் றுஞ்சு கிற்கும்
(உருமாற்றிய படலம்: 9)

இந்தக்காட்சி கலித்தொகையிலே இவ்வாறு இடம் பெற்றுள்ளது.

கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை
நனவிற்றுன் செய்தது மனத்த தாகலின்
கனவிற் கண்டு கதமென வெரீஇப்
புதுவ தாக மலர்ந்த வேங்கையை
அதுவென உணர்ந்ததன் அணிநல முருக்கிப்
பேணுமுன்பிற்றன் சினந்தணிந் தம்மரங்
காணும் பொழுதின் நோக்கல் செல்லாது
நாணி யிறைஞ்சு நன்மலை...
(குறிஞ்சிக்கலி: 13 : 1-9 (49)

இப்பாடலில் புலி யானையை வென்றது என்றும் தான் அடைந்த வெட்கம் காரணமாக வேங்கை மரத்தையே பாராதுச் செல்லும் பழக்கத்தை யானை ஏற்படுத்திக் கொண்டது என்றும் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

மற்றொரு மலைக்காட்சியை எடுத்துக் கொள்வோம். கலித்தொகையில் அக்காட்சி எவ்வாறு அமைந்துள்ளது என்பதை முதலில்

பார்ப்போம். சங்க காலத்தமிழ் மக்களிடையே அம்பெறியும் கலை போருடன் மாத்திரம் நின்று விடவில்லை. அம்பு போன்று கற்களைக் கவணில் ஏற்றிப் பயிர்களை அழிக்க வரும் விலங்கினங்களை ஓட்டவும் அக்கலையைப் பயன்படுத்தினர் அக்கால மக்கள். நாளாந்த வாழ்க் கையில் அம்பெறியும் கலையைப் பயன்படுத்தி உள்ளனர். பண்டைய மக்கள் யானை முதலிய விலங்கினங்கள் தமது பயிரை அழிக்காது காப்பாற்ற அக்கலையைப் பயன்படுத்தி உள்ளனர்.

ஒரு நாள் நடு யாமம். எவ்வித சத்தமும் இல்லாத நடு யாமம். நள்ளென் யாமம். மழை பெய்து கொண்டிருந்தது. மின்னலோடு இடி முழக்கமும் அப்போதைய அமைதியான நிலையைக் கலைத்தது. மின்னலின் ஒலியே அப்பொழுது இடைக்கிடை தென்பட்டது. அந் நேரத்தில் ஆண் யானை அதன் பெண் யானையோடு பயிர்களை மேய அங்கு வந்தது. யானைகளின் அடிகளின் சத்தத்தினாலே யானைகள் அங்கு வந்துள்ளன என்பதை உணரக்கூடியதாக இருந்தது. தாம் விளைத்த பயிர் ஓரளவு வளர்ந்ததும் அதனை விலங்கினங்களிலிருந்து காப்பாற்ற மரத்திலே கவண் அமைத்திருந்த னர். அந்த கவணிலே கல்லையிட்டு எறிந்தால் தினைப்புனத்தை அழிக்க வந்த விலங்கினங்கள் வெருண்டு ஓடிவிடும். அன்று தினைப் புனங் காத்த கானவன் யானையின் அடிச் சத்தத்தைக் கேட்டதும் கல் லெறிய யானைகள் சென்று விட்டன. ஆனால் அந்தக்கல் பல சாதனை களைப் புரிந்துள்ளது. மலையிலே இருந்த ஒளிபொருந்திய வேங்கைப் பூக்களைச் சிதறச் செய்தது. பழுத்த ஆசினிப் பழங்களை அடித்து விழுத்தியது. தேனீக்கள் கட்டி இருந்த தேன் கூட்டை ஊடுருவிச் சென்றது அந்தக்கல். மணம் வீசுகின்ற மாமரத்தின் கிளைகளின் மாந் தளிர்களை உழக்கியது. வளமாக வளர்ந்திருந்த வாழை மரத்தின் வாழைக்குலையைக் கிழித்துக் துளைத்துக் கொண்டு சென்றது. பின்னச் அந்தக் கவண்கல் பலாமரத்தில் பழத்துள் சென்று தங்கியது. இத்தகைய வளம் உடைய குறிஞ்சிமலை எனப் பாடப்பட்டுள்ளது. அப்பாடல் இது:

அடியுமிழ் பிறங்கிய விரவுபெயல் நடுநாட்
கொடுவிடு பிருளிய மின்னுசெய் விளக்கத்துப்
பிடியொடு மேயுஞ் செய்புன் யானை
அடியொதுக் கியக்கங் கேட்ட கானவன்
நெடுவரை ஆசினிப் பணவை யேறிக்
கடுவிசை கவணையிற் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை உதிராத்

தேன்செய் இருஅல் துணைபடப் போகி
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கிக்
குலையுடை வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் பழத்துள் தங்கும் மலை.

(குறிஞ்சிக் கலி ; 5 5-16 (41))

இங்கு விரிவாக வருணிக்கப்பட்ட நிகழ்ச்சியை குலாம் காதிர், நாவலர் தமது நாகூர்ப் புராணத்தில் சுருக்கமாக விவரித்துள்ளார். நடுயாமம், மழை, மின்னல், யானை, புன்செய், சத்தம், கானவர் கவண் என்பனவற்றைக் குறிப்பிட்டுள்ளார். அத்தொடு கானவர் கவணில் வைத்துக் கைவிட்ட கல் தேன் கூட்டை ஊடுருவிச் சென்று பலா மரத்தில் காய்த்துத் தூங்கிக் கொண்டிருக்கும் பலாப்பழத்துள் தங்கியது எனச் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார், இரண்டு பாடல் களிலும் ஒரே கருத்து குறிப்பிடப்பட்டுள்ளது என்பது நோக்கற்பாலது. குலாம் காதிறு நாவலர் இக்கருத்துக்களை இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

மழையிரு ணள்ளென் யாமம் வான்றவழ் மின்னி னேக்கி
யுழைவரு பிடியினேடு முற்றுப்புன் செய்யின் மேயுங்
களகரி யரவத் தோச்சுங் கானவர் கவணி ருலிற்
றுளைபடப் பலவிற் காய்த்துத் தூங்கிடும் பழம்போய் வைகும்

(உருமாற்றிய படலம்: 10)

மலைச்சாரலின் வருணனையை இனி பார்ப்போம். மலைச்சார லிலே பல்வேறு வகையான சத்தங்கள் ஒலித்துக் கொண்டிருந்தன. தினைப்புனம் காக்கும் பெண்டிர் வள்ளை பாடி ஓசை எழுப்பிக் கொண் டிருந்தனர். தேன் கூட்டிலே தேன் எடுக்கச் சென்றவர்கள் தேனீக்கள் கொட்டியதனுலோ என்னவோ விம்மல் சத்தம் செய்து கொண்டிருந் தனர். மரக்கொப்புக்களிலே மலர்ந்திருந்த பூக்களில் உள்ள தேனைக் குடித்து அல்லது தேனைக் குடிக்க மலரும்படி பூக்களுக்கு ஊதும் வண்டுகள் இசைபாடிக் கொண்டிருந்தன. யாழிலிலிருந்துவரும் இனிய இசையாக அது அமைந்திருந்தது. மற்றொரு புறத்தில் பறவைகள் சத்தமிட்டுக் கொண்டிருந்தன. வேருெரு பக்கத்தில் மயில்களின் கூட்டம் அகவும் ஓசை கேட்டது. இத்தகைய ஓசைகள் ஒரு விழாவில் எழுப்பப்படும் ஓசைகள் போன்று ஒலித்துக் கொண்டிருந்தன. அவ் வோசைகள் அனைத்தும் கல்லென இசை மீட்டிக் கொண்டிருந்தன. இதனையே குலாம் காதிறு நாவலர் தமது நாகூர்ப் புராணத்தில் இவ் வாறு குறிப்பிட்டுள்ளார்.

திணைகுறு மகளிர் வள்ளை தேன்கொளு மவரின் விம்மல்
சினைமல ருதுந் தும்பி செய்தயா ழனைய தீம்பான்
வனைசிறைப் பறவை யார்ப்பு மயிற்குழா மகவ லோசை
கனைதரு விழவி னெங்குங் கல்லெனக் கறங்குஞ் சாரல்

(உருமாற்றிய படலம் : 19)

சூரியோதய வருணனை சூரியாஸ்தமன வருணனை

ஒற்றைச் சக்கரம் உருட்டிக் கொண்டு வருபவன் சூரியன் என்பது ஐதீகம். வைகறையானதும் சூரியன் உதித்தான் என்பதை ஒளிபரப்பிக் கொண்டு சூரியன் உதயமானுன் என இவ்வாறு பாடி உள்ளார் குலாம் காதிறு நாவலர்.

அற்றை நாளிது வாகவ கன்றுபின்
மற்றை நாள்வர வைகறை யாதலும்
ஒற்றை யாழியு ருட்டெழி லாதவன்
கற்றை வான்கதிர் காலவெ ழுந்ததே

(திருவிழாப் படலம் : 72)

கூடு எடுத்து ஊர்வலமாகச் செல்லல் நாகூர் விழாவுடன் நெருங்கிய தொடர்புடைய ஒன்ருகும். அவ்வாறு கூண்டு எடுத்துச் செல்லப்படும் பொழுது அதன் அழகினையும் பிரகாசத்தையும் கதிர் பிறப்பிக்கும் வன்மையையும் கண்ட சூரியன் வெட்கப்பட்டான். தன்னுல் இத்தகைய ஒளியைப் பரப்ப முடியவில்லையே எனத் தலை குனிந் தான். சூரியன் வெட்கி தலைகுனிந்து ஓடி மறைந்து விட்டான். சாதாரணமான சூரியாஸ்தமனத்துக்குக் காரணம் காட்டித் தற்குறிப் பேற்ற அணியை அமைத்துக் குலாம் காதிறு நாவலர் இவ்வாறு ஒரு செய்யுளில் பாடி உள்ளார்.

அற்றை நண்பகல் கெடலந் திவான்வரக்
கற்றையங் கதிர்மலை கரப்ப வெய்யவன்
ஒற்றையந் திகிரிமற் றுருட்டி யோடினன்
மற்றையுங் கூண்டினை வட்கி னுனென

(திருவிழாப் படலம்: 114)

பூக்கள் மலரப் புட்கள் ஒலியெழுப்ப ஆயிரமாயிரம் கதிர்களைப் பொழிந்த வண்ணம் சூரியன் உதயமானுன் என்பதை இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

முள்ள லைந்ததா ளள்ளிதழ் வட்டிலே முளரி
விள்ள வம்பொழில் விழித்திரைந் தெனப்பல விதத்த
புள்ள லம்பிய கதிரொரா யிரங்களும் பொழிந்து
பள்ள மன்னிய வாழிவா யெழுந்தது பருதி
(திருவிழாப் படலம்: 135)

மற்ருெரு சூரியோதயத்தைப் பார்ப்போம். கற்றை கற்றையாகக் கதிர்களைப் பரப்பிக் கொண்டு சூரியன் தோன்றினுன். சூரியன் ஒற்றைத் தேருருட்டிக் கொண்டு வந்தான். அவனுடைய உதயத்துக்கு ஒரு காரணம் சுட்டப்பட்டுள்ளது. உறவினர்களின் உள்ளங் குளிரக் கொலைக் குற்றஞ் செய்தவனை விடுதலை செய்தமையினுல் அவனை மகிழ்விக்கும் நோக்குடன் சூரியன் உதயமானுன். இவ்வாறு தற்குறிப் பேற்றவணி அமைய ஒரு செய்யுள் இவ்வாறு பாடப்பெற்றுள்ளது.

சுற்றத் தினவருளந் துளங்கச் செய்கொடுங்
குற்றத் தினவன்களி கொள்ளு மாறெனக்
கற்றைச் செங்கதிர்த்திரள் கால வீசினன்
ஒற்றைத் தேருருளின னுதய மாயினன்
(கொலை தீர்ப்பு மாற்றிய படலம்: 33)

இனி ஒரு சூரிய அஸ்தமனக் காட்சி. மலைக்குப் பின்னால் மறைந்து போய் விடுவேன் என்று கூறியவன் சூரியன் மறைந்தான். வானத்திலே கடுமையாக வெய்யிலைக் கக்கிக் கொண்டிருக்கும் வெய்யவன். சூரியன் அவ்வாறு மறைந்தமைக்கு ஒரு காரணம் கூறப் பட்டுள்ளது. 'கலைகளில் எல்லாம் சிறந்து விளங்கிய சாகுல் கமீது ஒலியுல்லா என்னும் பெரியாரின் கூற்றில் நிலைபெற்ற பெரியார்களை நீக்கிவிடுவேன் அல்லது எனது முலையை வெட்டி விடுவேன்' என்று சபதம் இட்டாள் ஒரு பெண். 'அவ்வாறு சபதமிட்ட அந்தப் பெண்ணின் முடிவினைக் காண இங்கே இருக்கக் கூடாது. மேற்கில் உள்ள இந்த மலைக்குப் பின்னுல் இருந்து பார்த்துக் கொண்டிருப்பேன்' எனக் கூறுமாப் போல் சூரியன் மறைந்தான். இங்கே தற்குறிப் பேற்றவணி அமைந்திருப்பதைக் காணலாம். இதனையே குலாம் காதிறு நாவலர் தமது நாகூர்ப் புராணத்தில் இவ்வாறு அமைத்துப் பாடிஉள்ளார்.

கலைகெழு சிந்தை சாகுல் கமீதொலி பெருமான் கூற்றில்
நிலைபெறு பெரியோர் தம்மை நீக்குவ லின்றே லென்றன்
முலைதடிந் திடுவ லென்ற மொழியவள் முடிவு காண்பான்
மலைகரந் தமைவ னென்ன மறைந்தனன் வானவெய் யோன்
(சபதப் படலம் : 68)

அப்பொழுது சூரியன் மறைந்தான். கடுமையான கதிர்களைச் சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டான். மேற்கே மலைக்குப் பின்னால் மறைந்து விட்டான். இருள் சூழ்ந்தது. குருடர்கள் போன்று எதனையும் பார்க்க முடியாத கும்மிருள். அப்பொழுது அங்கிருந்து சென்று கொண்டிருந்த இருவரும் ஆந்தை முதலிய கூச்சலிடும் கொம்புகளையுடைய மரத்தின் கீழ் உறங்கினர். அப்பொழுது நள்ளிருள் யாமமாயது. இங்ஙனம் சூரியஸ்தமனத்துக்குப் பிந்திய நிகழ்ச்சிகளை ஒரு செய்யுளில் இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

கான்ற வெங்கதிர் சுருக்கிய ஞாயிறு கல்புகக் கண்ணற்ருற்
போன்ற வல்லிருண் மல்குற விருவரப் புறவத் தினொரு பாற்போ
யான்ற சிந்தைய ராகுளி யிரட்டலி னுந்தை கூப்பிடு கொம்பர்
நான்ற மாமரத் தடிவயி னுறங்கினர் நள்ளெனும் யாமத்தில்

(குன்மந் தீர்த்த படலம் : 24)

**உவமையும் உருவகமும்**

குலாம் காதிறு நாவலர் தாம் கூறவந்த கருத்துக்களை விளக்குவதற்காக மேற்கொண்டுள்ள உவமைகளைப் பார்ப்போம் எத்தகைய உவமைகள் எத்தகைய சந்தர்ப்பங்களில் பயன்படுத்தி உள்ளார் என்பதைப் பார்ப்போம். கடலிலே அலை ஓய்வில்லாமல் அடித்துக் கொண்டிருக்கிறது. அங்ஙனம் அலை ஓங்கி வரும்பொழுது அயலில் இருந்த நாரைகள்—குருகுகள்—எழுகின்றன. சிறகுகளை அடித்துக் கொண்டு எழுகின்றன. அவை அங்கிருந்து கடற்கரையில் உள்ள கழிகளில் வேறு வேருய்ப் பிரிந்து அமர்ந்திருக்கின்றன. அவை ஏன் அவ்வாறு அமர்ந்திருக்கின்றன? மீன்கள் தம் பக்கம் வருமளவும் பார்த்துக் கொண்டிருக்கின்றன.ஓடு மீன்ஓட உறுமீன் வருமளவும் உற்றுநோக்கிக் கொண்டிருக்கின்றன. மிகுந்த பொறுமையுடன் அங்கு அமர்ந்திருக்கின்றன. பல்வேறு நூல்களைக் கற்றுத் தேறித் துறைபோய்ப் பெற்ற அறிவினைத் தாங்கி அவற்றை எல்லாம் தமது உள்ளத்திலே தேக்கி வைத்து ஒடுக்கமாக அடங்கி இருக்கும் அறிஞர்களைப் போன்று அவை மீன் வருமளவும் ஆடாது அசையாது கம்பங்களில் அமர்ந்திருக்கின்றன, இனி, இக்கருத்துக்களைக் கொண்ட செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

ஓங்கி முரிதிரை யொலியி னோச னித்தெழுங் குருகு
பாங்கி லகுகழிக் கயல்கள் பார்த்து நூல்பல போகித்
தாங்க றிவின்முதி யோரின் றனிமனத் தினொடுக் கமென
வீங்கு நீர்நெடுங் கரைபோய் வெவ்வேறு பிரிந் தமரும்

(பள்ளிக்கட்டிய படலம்: 8)

செய்கு யூசுபு அவர்கள் இறுதி நெருங்கியதும் தமது மனைவி மக்கள் உற்ருர் சுற்றத்தார் அனைவரையும் அழைத்துப் புத்திமதி கூறி ஞர்கள். அவர்கள் கூறிய இறுதி உபதேச மொழிகள் செய்கு யூசுபு நாயகர் உபாத்துப் படலத்தில் பல பாடல்களில் அமைந்துள்ளன. உலகத்தில் எவ்வாறு இருக்கக் கூடாது. எவ்வாறு இருத்தல் வேண் டும் என்று செய்கு யூசுபு அவர்களின் கருத்து ஒரு செய்யுளில் இவ்வாறு இடம் பெற்றுள்ளது. எவ்வாறு உலகில் வாழ வேண்டும் என்பதற்கு ஓர் உவமை மூலம் விளக்கம் தந்துள்ளார் செய்கு யூசுபு அவர்கள். தாமரை இலையில் தங்கும் நீர் நிலைத்து நிற்பதில்லை. அந்த நீரைத் தாமரை இலை உறிஞ்சிக் கொள்வதுமில்லை. சூரிய வெளிச்சத்துக்கு தாமரை இலையில் உள்ள நீர்த்துளி ஆவியாகி விடுகிறது. தாமரை இலையில் நீர்த்துளி தங்கி இருக்கும் பொழுது இலையில் ஏதாவது பட்டால் அந்நீர்த் துளியும் மறைந்து விடுகின்றது தாமரை இலையின் மீதுள்ள நீர்த்துளிபோல் மக்கள் உலகில் வாழ வேண்டும். எப்பொழுது மறைந்து விடுவார்களோ என்று அறியாதவர்களாய் வாழ்ந்திடல் வேண்டும். செய்கு யூசுபு அவர்கள் கூற்ருக இதனையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்.

கலேயி ருக்குநீர் மையினுயர் மனத்தினிர் கடிமின்
புலேயி ருக்குநீரிலம்படு காலினும் பொன்னம்
மலேயி ருக்குநீ ராயினு மாழ்கலிர் மரையி
னிலேயி ருக்குநீர் நீர்மையின் வையகத் திருமின்

(செய்கு யூசுபு நாயகருபாத்துப் படலம் : 16)

பயிருக்கு நீர் இன்றியமையாதது. மழை பெய்யாவிட்டால் பயிர் வளராது; வாடிவிடும். மழை மறைக்கப்பட்ட பயிர் வாடியது போன்று சிறையில் இருந்த திருமலைச் செட்டி என்பவனும் வாடியவனுய் வாழ்ந்தான். வாழ்க்கையே வாடியவனுக இருந்தான். இதனையே ஆசிரியர் இவ்வாறு பாடிஉள்ளார்.

சிறையமர் திருமலேச் செட்டி யென்பவன்
இறைபடு மோம்படை யிருந்து தன்வினேக்
குறைகெழு நெஞ்சினன் குலேந்து வான்முகின்
மறைபடு பயிரென வாடி ஞனரோ

(கொலே தீர்ப்பு மாற்றிய படலம் : 13)

செல்வந்தனுயிருந்த ஒருவன் வறியவன் ஆயினன். செல்வந் தனுயிருக்கும் பொழுது அவன் பழுத்த மரமாகக் கருதப்பட்டான். மரம் பழுத்தால் வெளவாலே வாவெனக் கூவி அழைக்க வேண்டிய

தில்லை. அதே போன்று பழுத்த மரமாக இருந்தபொழுது எல்லோரும் அவனை நாடினர். பழுத்த மரம் பட்டுவிட்டால் அம்மரத்தை வௌவாலோ வேறு எந்தப் பறவையோ நாடுவதில்லை. அங்ஙனம் செல்வந்தனுக — பழுத்த மரமாக இருந்த ஒருவன் பட்டுவிட்டான். செல்வத்தை இழந்து விட்டான். பழுத்த மரம் பட்டது போன்று செல் வந்தன் வறியவனுயினுன். இதனையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு பாடிஉள்ளார்.

அன்னவன் செல்வத்தி னமர்ந்த காலையிற்
பொன்னவா நிதியெலாம் பொன்றன் மேயின
பன்னரும் பழுமரம் பட்ட வாவிஃ
தென்ன நல் குரவடைந் தெளிஞ ஞயினுன்

(மூங்கையுங் குருடுந் தீர்த்த படலம் : 2)

பயிர்கள் எல்லாம் வாடிப் போயின. சூரியனின் கதிர்கள் கடுமை யாகத் தாக்கவே பச்சைப் பசேலென்றிருந்த பயிர்கள் காய்ந்தன. குடி கள் குற்றம் புரிந்தமையும் இதற்கு ஒரு காரணமாகும். நீதியற்ற அமைச்சர்கள் ஒரு நாட்டில் இருந்தால் அந்நாடு சீரழியும். அத்தகைய நீதியற்ற அமைச்சரின் ஆலோசனையைக் கேட்டு நாட்டைப் பரி பாலனஞ் செய்யும் மன்னன் மக்களுக்கு நன்மையைச்செய்யமாட்டான். அத்தகைய மன்னன் கொடுங்கோலனுகி விடுவான். அப்பொழுது அம்மன்னனுடைய குடிமக்களும் குற்றம் புரிவதில் ஈடுபட்டு விடுவர். நீதி அற்ற அமைச்சரின் ஆலோசனைக்கிணங்க நடக்கும் கொடுங் கோலன் போன்று சூரியன் அதன் கிரணங்களால் பயிர்களை எல்லாம் காய்த்து விட்டான். குற்றம் புரியும் குடிமக்கள் அழிவதுபோல் பயிர்கள் அழிந்து விட்டன. இங்ஙனம் உவமை மூலம் பஞ்சகாலம் ஏற்பட்ட காரணத்தை நாகூர்ப் புராணத்தில் உள்ள ஒரு செய்யுளில் இவ்வாறு விளக்கி உள்ளார் காப்பிய ஆசிரியர் குலாம் காதிறு நாவலர்.

அற்ற நீதிய மைச்சு வழிச்செலுங்
கொற்ற வேந்துடைக் கோலென வெய்யவன்
செற்ற மேய்க்கதிர் சிந்தலிற் கூழெலாங்
குற்ற மேய குடியினு லர்ந்தவே

(பஞ்ச மாற்றிய படலம் : 6)

இளமையிற் செல்வம் இல்லெனின் இளைஞன் வாழ்வு பொலிவு பெறாது என்பர். அத்தகைய பொருள் இல்லாத இளைஞனைப் போன்று மரத்தின் கிளைகள் இலைகள் சற்று வாடிப் போயின. மரக் கிளையிலே இலைகள் அற்றுப்போகவே மரத்தினுல் நிழல் அளிக்க

முடியவில்லை. புன்மையாளன் பெற்ற பொலிவு மற்றவர்க்குப் பயன் படாது. அதுபோன்று நிழலும் ஒருவருக்கும் பயன்படாது இவ்வாறு போய்விட்டது. இந்த நிலைமை ஏற்படவே பொருளில்லாதவன் செய்வதின்னது என்று அறியாது கலக்கமுற்ருன். அங்ஙனம் அந்நாட்டுப் பூஞ்சோலைகளில் இருந்த பொலிவும் நன்மையும் அகன்றுவிட்டன. இக்கருத்துக்களை ஒரு பாடலில் இவ்வாறு சுட்டப்பட்டுள்ளது.

இன்மை யாள னிளமையி னுய்ச்சினை
புன்மை யாளன் பொலிவென நீழல்போ
யன்மை யாளுடை யான்கலக் குற்றெனை
நன்மை தீர்ந்தன நாட்டுப் பொழில்களே
(பஞ்சமாற்றிய படலம் : 10)

பொதுவாக முகத்துக்கு மதியை உவமிப்பதுண்டு. மதி போன்ற முகம் எனக் கூறுவதுண்டு ஆனல் ஒருவனுடைய மதி போன்ற முகம் வாடி இருந்தால் அல்லது அவன் மனத்தில் உள்ள வருத்தம் அவனுடைய முகத்தில் பிரதிபலிப்பதனுல் சூம்பி இருந்தால் அத்தகைய முகத்தையும் சந்திரனுக்குத் தான் ஒப்பிடுவர். ஆனல் ஒரு மாற்றம். வாடிய முகத்தை குளிர்ந்த ஒளி மங்கிய சந்திரனுக்கு ஒப்பிட்டுள்ளார் குலாம் காதிறு நாவலர். அந்தப் பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

தங்குரு கேழலாய்த் தவித்து நிற்பதை
அங்கெழு மணிமுடி யரையர்வந்து பார்த்
திங்கெது நிகழ்ந்ததா லென்று தண்கதிர்
மங்கிய மதிமுகம் வருந்திக் கேட்டனர்
(உருமாற்றிய படலம்: 49)

தஞ்சை மன்னன் நாகூரை அடைந்து சாகுல் கமீது ஆண்டகையின் கல்லறையை நெருங்கி ஆண்டகை அவர்களைப் புகழத் தலைப்பட்டான். அவ்வாறு புகழும்பொழுது உருவகங்களால் அவர்களைப் போற்றினன். ஆண்டவர் அவர்கள் பெருந்தவம் புரிந்தவர்களாதலால் அவர்களை அருந்தவக் கொழுந்து என்ருர். சிங்கம் போன்று பகைவர்களை வென்றவராகையால் அடையலர்க்கு ஏறு என்று கூறினர். மருந்துகளுக்கெல்லாம் மேலான மருந்தாக இருந்தமையால் அவர்களை மருத்துவர் மருந்து என்றார். குன்றில் இட்ட தீபம் எல்லா இடத்துக்கும் பயன்படும். ஆதலால் சாகுல் கமீது ஆண்டவர் அவர்களை மலைமுடி விளக்கம் என்றார். அமுதம் எல்லோராலும் பெற முடியாத தொன்று. எல்லாராலும் அளிக்க முடியாததுமாகும். ஆனால் ஆண்டகை அவர்களோ வருந்துபவர்களுக்கு அமுதம்

போன்றவர் என்றார். பயிருக்கு மழை அவசியம். அதே போன்று மக்களுக்கு மழை அவசியம். எனவே தான் ஆண்டகை அவர்களை மனுப்பயிர் மாரி என்றார். புதையல் எல்லோராலும் பெறப்படக்கூடிய தொன்றன்று அதிலும் பெறுமதி மிக்க செல்வத்தை உடைய புதையல் கிடைப்பது அரிதிலும் அரிதாகும். ஆனால் நாகூர் ஆண்டகை அவர்களோ கருந்தனப் புதையல் என்றார். வானிலிருந்து பெறப்படும் நீர் இலவசமாகக் கிடைப்பதொன்று. அதே போன்று சாகுல் கமீது ஆண்டகையின் கருணை என்னும் மழை எல்லோருக்கும் கிடைக்கக் கூடியதொன்று. எனவேதான் ஆண்டகை அவர்களைக் கருணை வான் புணரி என்றார். இக்கருத்துக்களைக் கொண்ட குலாம் காதிறு நாவலரின் நாகூர்ப் புராணச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

அருந்தவக் கொழுந்து போற்றி
அடையலர்க் கேறு போற்றி
மருந்துயர் மருந்து போற்றி
மலைமுடி விளக்கம் போற்றி
வருந்துநர்க் கமுதம் போற்றி
மனுப்பயிர் மாரி போற்றி
கருந்தனப் புதையல் போற்றி
கருணைவான் புணரி போற்றி

(ஐந்தாம் மினுருப் படலம் : 12)

உள்ளத்தினுவகையாங் கெற்கொரு மகவளித்தல் வேண்டும். (ஐந்தாம் மினுருப் படலம் : 19) என சாகுல் கமீதாண்டகையின் கபுறடியில் மன்றாடினான் தஞ்சை மன்னன். சில நாட்கள் சென்றன, தஞ்சை மன்னனின் மனைவி கருவுற்றாள். குலாம் காதிர் நாவலர் மன்னனின் இராணியின் பெயரைச் சுட்டவில்லை. 'ஐம்பாலோதி' என்றே அம் மங்கையைக் குறிப்பிட்டுள்ளார். ஐந்து விதமாகத் தலைமையிரைப் பகிர்ந்து மலரணிதல் அக்காலத் தமிழ் மங்கையர் மரபாகும். எனவே தான் அப்பெண்மணியை இவ்வாறு உருவகப் பெயர் கொண்டு அமைத்துள்ளார். அப்பெண்டிரை கருவுற்றாள் என்று கூறவந்த ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்.

கழலடித் தடந்தோட் டஞ்சைக்
காவல னமர்சின் ஞளி
னிழலடிப் பெருமா னன்பி
னிரைமல ரைம்பா லோதித்

தழல்புரை காந்தட் செங்கைத்
 தடமுலே யமைத்தோள் வண்டிற்
சுழல்வரு கருங்கட் டேவி
 சூறுளங் குற்று என்றே

(ஐந்தாம் மினுருப் படலம் : 23)

சொல்லாட்சி

நாகூர் குலாம் காதிர் நாவலரின் சொல்லாட்சியில் சங்க காலத் தமிழ் சொல் வளத்தின் செல்வாக்கைக் காணக் கூடியதாக இருக்கின்றது. சங்க காலத் தமிழ் நடையை ஒட்டி குலாம் காதிறு நாவலரின் சொல்லாட்சியில் இடம்பெற்றுள்ள சொற்கள் பெரும்பாலும் அளவிற் சிறியனவாகவே இருக்கின்றன. சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதே அவரின் நோக்கம். நான்கு எழுத்துக்களுக்குக் கூடுதலான எழுத்துக்களைக் கொண்டிருப்பின் அவை திசைச் சொற்களாகவே இருக்கும். அத்தகைய சொற்கள் ஒன்றில் வடமொழியைச் சார்ந்தனவாகும் அல்லது அறபு பார்சி மொழிகளைச் சார்ந்தனவாகும்,

இதை என்பது மரக்கலப் பாயைக் குறிக்கும். 'நெடுங்கொடி மிசை இதை யெடுத்து' என்கின்றது மதுரைக் காஞ்சி (79). குலாம் காதிறு நாவலர் கப்பற் பாய் என்னும் பொருளில் இதை என்னும் சொல்லை

கலமொன் றிதைகள் குவிவிலவாய்க் களிற்றி னிற்ப வினமீனம்
(மரக்கலமழைத்த படலம் : 13)

என்றும்

மேட்டுக் கவின்வா யுலாந்தரசின் விளங்கு முத்திரி கைதேர்ந்திட்
டோட்டுக் கருவி யிதைமுழுது மொடுக்கி நங்கு ரமுமிட்டார்

என்றும் ஆண்டுள்ளார்.

ஈசானம் என்பது வடகீழ் திசையாகும். சாகுல் கமீதாண்டகையின் கல்லறையின் வடகீழ் திசையில் மினரு ஒன்று கட்டப்பட்டதைக் குறிக்கவே அத்திசையைச் சுட்ட ஈசானம் என்னும் சொல்லை இங்ஙனம் பயன்படுத்தி உள்ளார்.

வானிய லும்பணி வாங்குபு நங்கோ
னினம றுங்கபு றின்கணி ருந்தீ
சானமெ னுந்திசை தன்னின ணித்திற்
றானம ரும்படி கட்டின ரன்றே

(மூன்றும் மினுருப் படலம் : 9)

உறவி என்றால் எறும்பு என்பது பொருள். உறவியின் கூட்டத்தை உறவியீட்டம் என்பர். குலாம் காதிறு நாவலரும் எறும்பின் கூட்டத் தைச் சுட்ட உறவியீட்டம் என்னும் சொற்றொடரை இவ்வாறு பயன் படுத்தி உள்ளார்.

எண்ணிலா உறவியீட்ட மிலங்கு பொற்பணமும் வெண்மை
வண்ணவா ளரியுமாக வகையொடு குவிப்பக் கண்ட

(பஞ்சமாற்றியப் படலம் : 33)

சீவக சிந்தாமணியில் உறவி என்னும் சொல் எறும்பைச் சுட்ட 'உறவியோம்பி ஒதுங்கியும்' (3119) என வந்துள்ளது.

எணந்தருமாலை என்னும் சொற்றொடர் எண்ணந்தரும் மாலை யையே குறித்து நிற்கின்றது. எண்ணம் என்றால் கவலை. எனவே கவலை தரும் மாலையைச் சுட்டுகின்றது. கவலை மிக்கான் என்பதை 'எண்ண மிக்கான்' என்கிறது பெரிய புராணம் (தடுத்தாட் கொண்ட புராணம்: 154)

எணந்தரு மாலைவந் திறுத்த தன்றரோ

(தபோதனர் புறப்பாட்டுப் படலம்: 15)

எனக் குலாம் காதிறு நாவலர் கவலையைக் குறிக்கும் எண்ணம் என்னும் சொல்லை 'எணம்' எனப் பயன்படுத்தி உள்ளார்.

எளிஞன் என்பது வறியவன் என்பதைக் குறிக்கும். பணம் படைத்த ஒருவன் காலப் போக்கில் எளியன் ஆயினன் என்பதை இவ் வாறு சுட்டி உள்ளார் இக்காப்பிய ஆசிரியர்.

அன்னவன் செல்வத்தி னமர்ந்த காலையிற்
பொன்னவா நிதியெலாம் பொன்றன் மேயின
பன்னரும் பழுமரம் பட்ட வாவிலை
தென்னநல் குரவடைந் தெளிஞ னாயினன்

(மூங்கையுங்குருடுந் தீர்த்த படலம்: 2)

ஏமாப்பு என்பது இறுமாப்பு, கர்வம் எனப் பொருள்படும். ஆசிரி யர் இச்சொல்லை

... இபுருகீம்கான்
ஆடிய வேமாப் பதையார் சொலற்பா லரன்றே

(முதன் மினுருப் படலம்: 9)

எனப் பயன்படுத்தி உள்ளார்.

ஓசனித்தல் என்பது பறவைகள் சிறகடித்தலைக் குறிக்கும்.

ஓங்கி முரிதிரை யொலியினோ சனித்தெழுங் குருகு

(பள்ளி கட்டிய படலம்: 8)

என ஓசனித்து என்பது பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம். ‘ஓசனிக்கின்ற வன்மை’ (2652) என சீவக சிந்தாமணியிலும் இச் சொல் இதே கருத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

கராம் என்னும் சொல் முதலையைக் குறிக்கும். ‘முதலையு மிடங்களும் கராமும்’ என்கின்றது குறிஞ்சிப் பாட்டு (257). குலாம் காதிறு நாவலர் முதலை என்னும் பொருளில் கராம் என்னுஞ் சொல்லை

கடல் புகக் கடுகிச் செல்லுங் கராம்பயி னதமுந் தீந்தேன்
மடல்விரி காவும் பல்ல வகைக்கனி பழுத்துச் சிந்தும்

(உருமாற்றிய படலம்: 3)

என உபயோகித்துள்ளார்.

கனைவுற என்பது நெருக்கமாக எனப் பொருள் கொண்டுள்ளது. கனை என்பது நெருக்கம் என்னும் பொருளில் ‘கனைதுளி சிதறென’ என கலித்தொகையில் (16 : 7) வந்துள்ளது. நாகூர்ப் புராணத்திலும்

மனைவி யும்மரு மக்களு மக்களு மருவிக்
கனைவு றத்தழீஇ யருமைசெய் திருந்தனர் களிப்ப

(செய்கு யூசுபு நாயக ருபாத்துப் படலம் : 1)

கனை என்னும் சொல் இதே கருத்தில் ஆளப்பட்டுள்ளது.

கீட்டிசை என்பது ஒரு சொற்றொடர். கீழ்+திசை என இச் சொல்லைப் பிரிக்கலாம். இப்புணர்ச்சி வீரசோழியத்துக்கிணங்க அமைந் துள்ளது. ழகரத்தின் முன் வல்லினத் தகரம் வர டகரமாக மாறி உள்ளது. கீழ்+திசை=கீட்டிசை. கிழக்குத் திசை என்பதையே கீட்டிசை என்பது சுட்டுகின்றது. குலாம் காதிறு நாவலர் இச்சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

நலங்கொளு மத்தா னக்குக் கீட்டிசை யினறுங் கானல்
இலங்கொளி யிற்புடை மல்க விடுக்கு மொர்தடஞ் சேரி

(பள்ளி கட்டிய படலம் : 1)

குடிஞை என்பது கோட்டானைக் குறிக்கும். குலாம் காதிறு நாவலர் குடிஞை என்னும் சொல்லைக் கோட்டானைக் குறிக்க

கோட்டி டந்தொறுந் துடிக்குரற் குடிஞைகள் கூப்பிடு மடுக்கத்து
(குன்மந் தீர்த்த படலம் : 6)

என இங்ஙனம் பயன்படுத்தி உள்ளார். மலைபடுகடாம் என்னும் பத்துப்பாட்டு நூலிலும் குடிஞை என்னும் சொல் கோட்டான் என்னும் பொருளில்

குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்து (141)

என வந்துள்ளமையை காண்க.

சந்தானம் என்பது சந்ததி எனப் பொருள் தரும். நாகூர் குலாம் காதிறு நாவலர் தமது நாகூர்ப் புராணத்தில்

தலைமகனுர் நனிவிழையுஞ் சந்தானந் தனித்தோங்க
(உத்தரவளித்த படலம் : 3

என சந்ததி என்னும் பொருளில் சந்தானம் என்னும் சொல்லைப் பயன் படுத்தி உள்ளார்.

சுடுமட்பலகைச் செங்கல் சுடுமண் எனப் பழங்காலத்தில் வழங்கப் பட்டது. 'சுடுமண் ணோங்கிய நெடுநகர் வரைப்பில்' (405) என பெரும்பாணாற்றுப்படையில் சுடுமண் என்பது சுடுமட் பலகைச் செங்கல்லைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளது. குலாம் காதிறு நாவலர் பிற்கால வழக்கிற்கேற்ப செங்கற்களைக் குறிக்க 'சுடுமண் கட்டி' என்பதை உபயோகித்துள்ளார். செங்கல் என்பதனைக் குறிக்கச் 'சுடுமண் கட்டி' என்பது நாகூர்ப் புராணத்தில்,

குறைவறத் தமியேற் கென்றுங் காவல்செய் கோமான் வைகும்
அறையினைச் சுடுமண்கட்டி மண்டப மமைத்தல் வேண்டும்
(விவாகப் படலம் : 15)

என்றும்

இன்னதிவ் வண்ண மாக விரும்புகழ் பெறுகுஞ் சாலி
மன்னவர் சுடுமண் கட்டி மண்டப முயர்த்து மாறு
(விவாகப் படலம் : 19)

என்றும் சுடுமண்கட்டி என்பது வந்துள்ளது. சுடுமண்கட்டி என்பதில் உள்ள கட்டி என்பதை வினையெச்சமாகக் கொண்டால் பழங்கால வழக்குக் கிணங்கவே சுடுமண் என்பது செங்கல்லைக் குறிக்கப் பயன் படுத்தி உள்ளார் ஆசிரியர் எனவும் கொள்ளலாம்,

சுள்ளை என்பது மட்கலஞ் சுடும் சூளை. தொல்காப்பியம் சொல்லதிகாரம் 4:9வது சூத்திர உரையில் இச்சொல் வந்துள்ளது. குலாம் காதிறு நாவலர் செங்கற்கள் சூளையில் சுடப்பட்டன என்பதை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

தென்னமண் வினைஞன் சுள்ளை செய்தசெங் கற்கள் வெற்பி
னன்னிறக் கற்கண் மற்று மருமையிற் றெருத்திட் டாரால்
(விவாகப் படலம் : 19)

சுனைய என்றால் வாட என்பது பொருள். ஒரு செய்யுளில் சுனைய என்பது வாட என்னும் பொருளில்

சுனைய நோய்கொலோ வென்றுளம் பதறுபு துடித்தார்
(சேவற் படலம் : 25)

எனப் பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் காணலாம்.

சொன்றி என்பது சோறு எனப் பொருள்படும். 'வரகின்சொன்றியொடு பெறூஉம் (197 : 12) என்கின்றது புறநானூறு.

தாங்குற்ற கீர்த்திமிகுஞ் சாகிபு மாகுண் மூத்தோர்
தீங்கற்ற சொன்றியவை தட்டனர்சே ரவித்தார்
(சபதப் படலம் : 7)

என்றும்

வந்துற்ற சொன்றிவகை காண்டமர் தரியாபீவி
வெந்துற்று நெஞ்சமிக வாக்கடுப்புற்று...
(சபதப் படலம், 9)

என்றும்

கொன்னுற் றழிந்தகொழி யல்லரி யட்டசொன்றி
தென்னற் றகன்மட்கலம் வாய்வரச்சே றப்பெய்து
(சபதப் படலம்: 10)

என்றும் சொன்றி என்னும் சொல்லை சோறு எனப் பொருள்படப் பயன்படுத்தி உள்ளார் இக்காப்பிய ஆசிரியர்.

ஞெண்டு என்பது நண்டைக் குறிக்கும். ஞெண்டு இறந்தபோலி பெற்று ஞெண்டர் என்று வழங்கப்படும் என்பர். ஞெண்டு என்பது அகநானூற்றில் (176) 'வேப்பு நனையன்ன நெடுங்கணீர் ஞெண்டு, என வந்துள்ளது. ஞெண்டு என்னும் சொல்லை நண்டைக் குறிக்க ஞெண்டர் எனத் திரிந்து ஒரு செய்யுளில் குலாம் காதிறு நாவலர் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

ஞெண்ட ரளேக்கணி ரம்பம லர்த்தா
தொண்டரு புன்னை யுகுத்தொளிர் கிற்கும்
வண்டலி ழைத்த வலேச்சியர் மிக்காங்
கண்டல லர்ந்த கடற்கரை முற்றும்

(திருவிழாப் படலம்: 89)

தனிகன் என்பது செல்வந்தனைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் ஒரு சொல்லாகும். செல்வந்தனைக் குறிக்கத் தனிகன் என்னும் சொல்லை குலாம் காதிறு நாவலர்

குணிப்பிலா வளமதி கொண்ட மேக்குறை
பணிப்பிலா நாட்டி ஞெர் பட்ட ணந்தனின்
மணிப்பணி யருநிதி மலிந்த பாக்கியந்
தணிப்பிலா வாழ்விஞெர் தனிகன் வைகிஞன்

(மூங்கையும் குருடுந் தீர்த்த படலம்: 1)

என ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்.

தாத்திரி என்ருல் பூமி என்பது பொருள். இச்சொல்லை இதே பொருளில் ஒரு செய்யுளில் இக்காப்பிய ஆசிரியர் இவ்வாறு ஆண்டுள்ளார்.

மூத்தவர் சிறுவர் தக்க முறைமுறை வைகி நந்த
மோத்தியல் பரிவி ஞேதி யுற்றனர் பள்ளி முன்றில்
காத்தம ரோரி ராவக் கணத்துளொர் முதியோர் மாட்டுத்
தாத்திரி புரக்கு நங்கோன் றரிசனே காட்டி ஞரால்

(பஞ்ச மாற்றிய படலம்: 27)

திரணம் என்ற சொல்லுக்கு அற்பம் என்றும் புல் என்றும் பொருள் கூறலாம். குலாம் காதிறு நாவலர் அற்பம் என்னும் பொருளில் திரணம் என்னும் சொல்லை

அரிய வற்புத மாமிது புவிமுழு தகன்று
விரிய நின்றதந் நாண்முத லொலிகடம் வேந்தர்க்
குரிய வான்பொரு டிரணமே யாயினு முண்ணப்
பிரிய மாகுந ரவன்பெறு நோமிகப் பெறுவார்

(சேவற் படலம்: 49)

நிதி உடையவர் நிதிஞர் என வழங்கப்படுவர். பறங்கிப்பேட்டையென்னும் மகுமூறு பந்தர் நகரைச் சேர்ந்த தாவூது கான் என்பவரை நிதிஞர் எனச் சுட்டி உள்ளார் இக்காப்பிய ஆசிரியர். அப்பாடல் வருமாறு:

ஆண்டுதோ றடைவி ழாவி ணரியவிவ் விழவி னன்று
பூண்டுறை நிதிஞர் மிக்கிற் பொலிந்தன ரவர்க டம்முள்
ஏண்டரு பறங்கிப் பேட்டை யெனுமகு மூது பந்தர்
வேண்டரு நீதி மன்னர் விறலொடு வந்துற் ருரால்
(நாலாம் மிஞரூப் படலம்: 2)

கணந்தரு நிதிதா வூது காஸெனு மன்னர் மன்னர்
(நாலாம் மிஞரூப் படலம்: 3)

நூங்க என்னும் சொல்லை மிக என்னும் அதன் பொருள் விளங்க அதனை ஒரு செய்யுளில் இவ்வாறு பயன்படுத்தி உள்ளார் ஆசிரியர்.

நூத னப்பொரு ளொண்ணித யளப்பில நூங்கப்
பாத வப்புது மலரிடைக் காணிக்கை படுத்தார்
(உருமாற்றிய படலம்: 80)

நொசிவு என்ருல் வருத்தம் என்பது பொருள். நொசிவு என்னும் சொல்லை வருத்தம் என்னும் பொருளில்

நோயி ருந்துழ லென்னருந் தலைவனை நொசிவு றுமகன் றன்னை
(சேவற் படலம்: 9)

என்றும்

நோய கன்றுறு நாட்குநாள் விரைவினி
நொசிவறுஞ் சுகமுற்றுர்
(சேவற் படலம் : 11)

என்றும் ஆசிரியர் ஆண்டிருப்பதைக் காணலாம்.

பக்கி என்னும் சொல் பறவையைக் குறிக்கும். பக்கி என்னும் சொல்லை இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர்.

பள்ளத்திற் பாயு நீரிற் பழுமரம் படரும் பக்கி
(ஐந்தாம் மிஞரூப் படலம் : 19)

பெட்டு என்ருல் பொய் என்பது பொருள். பெட்டு என்பது அன் விகுதி பெற்று பெட்டன் என வந்துள்ளது. பெட்டன் என்ருல் பொய்யன் என்பது பொருள். பெட்டன் என்பதற்கு விளிவேற்றுமை கொடுத்து பெட்டவா என்று குலாம் காதிறு நாவலர் ஒரு செய்யுளில் இவ்வாறு ஆண்டுள்ளார்.

பெட்டவா வருள்செய்யு நாகூரவர் பெயரான்
விட்டவா ரணமிது பிடிக்கலிரி ரையவிடுதிர்

(சேவற் படலம் : 18)

தேவாரப் பதிகம் ஒன்றிலும்

பெட்டனுகிலுந் திருவடிப் பிழையேன்

(தேவாரம் : 1110 : 2

என வந்துள்ளமை காண்க.

பொக்கணம் என்பது சோழியப்பை. திருக்கோவையாரிலும் இச் சொல் இதே கருத்தில் ஆளப்பட்டுள்ளது : (242).

கக்கமொன்றிய பொக்கணத்தினர் சுவற்காய
பாற்சிசு வுள்ளார்.

(சேவற் படலம் : 6)

என பொக்கணம் என்னும் சொல்லை குலாம் காதிறு நாவலர் தமது காப்பியத்தில் இடம்பெறச் செய்துள்ளார்.

பொல்லம் என்பது தைக்கை என்பதைக் குறிப்பிடுகிறது. கிழிந்த ஒரு துணியின் இரண்டு தலையையுங் கூட்டித் தைத்தலைப் பொல்லம் பொத்துதல் என்பர்.

பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை (8)

என்கின்றது பொருநராற்றுப்படை. குலாம் காதிறு நாவலர் தைத்து என்பதைப் பொல்லஞ் செய்து என்றே குறிப்பிட்டுள்ளார். பொல்லம் என்னும் சொல் நாகூர்ப் புராணத்தில் இவ்வாறு இடம்பெற்றுள்ளது.

பஞ்சகந் திணித்துத்தூ சின் பன்னிறத் துணிகளிட்டு
மிஞ்சுறப் பொல்லஞ் செய்து மெத்தென்ற போர்வை போர்த்து

(திருவிழாப் படலம் : 36)

மச்சு என்பது மேல் மாடம். காப்பிய ஆசிரியர் மச்சு என்பதை,

பிச்சையிற் புரந்த நந்தம் பெருந்தகை யமர்ந்த பள்ளி
மச்சுடன் முதன்மைத்தாக வலைஞர்செய் தனரென் றென்று

(பள்ளி கட்டிய படலம் : 40)

என உபயோகித்துள்ளார்.

மான்மியம் என்பதை மகிமை என்னும் பொருள் சுட்ட

வான்மலி யொலிகண் கோமான்
மான்மியம் பொலிந்து வைகும்

(தல விசேடப் படலம் : 28)

என அமைத்துப் பாடி உள்ளார் ஆசிரியர்.

மேக்கு என்பது மேலிடத்தையும் சுட்டும்; மேற்கு என்பதையும் காட்டும். இங்கே மேற்கு என்பதைக் குறிக்கவே

கனைபுகழ் வள்ளன் மேய கபுறதன் மேக்கி ஞாக
(ஐந்தாம் மினுருப் படலம்: 30)

என மேக்கு என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காண லாம்.

யானையின் பிடரியில் வைக்கப்படும் சிறப்பான ஓர் ஆசனம் 'யவனத்தவிசு' எனப்படுகிறது. தஞ்சைத் துளசிமகாராசன் நாகூரி லிருந்து திரும்பும் பொழுது 'யவனத்தவிசில்' அமர்ந்து சென்றமை

யானைவெரிந் சேர்யவனத் தவிசேறி வைகி
(மானியப் படலம்: 26)

என நாகூர்ப் புராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.

வெச்சென்ற நெஞ்சள் என ஒரு சொற்றொடரை ஒரு பாடலில் குலாம் காதிறு நாவலர் பயன்படுத்தி உள்ளார்.

வெச்சென்ற நெஞ்ச ளுயர் நாகூரை விட்டு நீங்கி
பச்சென்ற சோலைப் பார்ப்பா ரூர்வயிற் புக்கி யன்றே
(சபதப் படலம்: 15)

இங்கே வெச் என்பது கடுமை என்பதைக் குறிக்கிறது. வெச்சென்ற நெஞ்சள் என்பது கடுமையாதற் குறிப்பை உடைய நெஞ்சை உடைய வள் எனப் பொருள்படும். கடுமையான சொற்களைக் கூறமுற்படும் உள்ளத்தை உடையவள் எனக் கூறலாம். ஈவிரக்கம் அற்றவள் அப் பெண் என்பதைக் குறிக்கவும் இச்சொல் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

தமதீஞ் சொல் வெச்சென்றிடச் சொல்லி (2015) என சீவகசிந்தா மணியிலும் வந்துள்ளமை ஈண்டு நோக்கற்பாலது.

பிற செய்திகள்

முஸ்லிம்களைத் தொழுகைக்கு அழைப்பதற்கு பயன்படுத்தப்படும் அழைப்புமொழி அறபு மொழியில் அதான் என்றும் பாரசீக மொழியில் பாங்கு என்றும் வழங்கப்படுகிறது. அதானைவிட பாங்கு என்பதே பெருவழக்கைப் பெற்றுள்ளது. அதான் கூறுபவரே முஅத்தின் என அழைக்கப்படுவார். நாள்தோறும் ஐவேளை பாங்கு அல்லது அதான் ஒலிக்கப்பட்டு முஸ்லிம் மக்கள் தொழுகைக்கு அழைக்கப்படுகின்றனர்.

ஐவேளைகளையும் வைகறை, உச்சி, அந்தி, மாலை, முன்னிரவு எனத் தமிழில் அழைக்கலாம் என்பர். ஆனால் முஸ்லிம் மக்கள் இந்த ஐவேளைகளையும் அறபு மொழியாலே சுப்ஹு, லுஹர். அஸர், மஃரிப், இசா என அழைப்பர். இவ்வாறு அழைக்கப்படுவதையே இங்ஙனம் ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார் குலாம் காதிறு நாவலர்.

வைகறை யுச்சியந்தி மாலேமுன் னிரவா மின்ன
மெய்கெழு மோரை யைந்தும் விரிகட லிரங்கி யாங்கு
துய்மையம் பெரியவல்லோற் ருெழவருகென்ன வார்க்குங்
கைகொளும் பாங்கி னேதை கல்லெனுந் தினமு மன்றே

(நகரப் படலம் : 49)

அந்தக் காலத்திலே நாகூரிலே மூன்று பள்ளிகளே இருந்தன என்றும் முதற்பள்ளி சாகுல் கமீது ஆண்டகை அங்கு வருமுன் அமைக்கப்பட்ட சிறுமனை என்னும் மற்றது முதுபக்கு என்னும் புராதனமனையென்றும் மற்றது பின்னர் கட்டப்பட்டது என்றும் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

குங்குமத் தடத்தோள் குத்புசாகுல் கமீது கோமான்
தங்குற முன்னஞ் செய்த தனிச்சிறு மனேயு நன்மை
பொங்குமம் முதுபக்கென்னும்புரா தனமனே யுமின்ன
கொங்கவிழ் பள்ளி மூன்றுங் கொண்டதித் தலமக் காலம்

(விவாகப் படலம்: 25)

சாகுல் கமீதாண்டகை நல்லடக்கம் செய்யப்பட்டுள்ள ஊரிலே பல வகை மரங்கள் உள்ளன. அத்தகைய மரங்களுள் புன்னை மரமே சிறப்புறத் திகழ்ந்தது. புன்னைக்கு நாகம் என மற்ருெரு பெயருண்டு. எனவே நாகமரம் சிறந்து விளங்கியதால் நாகவூர் எனப் பெயர் பெற்றது. பின்னர் நாகவூர் என்பது மருவி நாகூர் என வந்தது. இவ்வாறு குலகம் காதிறு நாவலர் ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்.

போக மாமரம் பலவகை யுளவெனிற் புன்னே
யேக வொண்மர முதன்மைமிக் கிருத்தலி னிவ்வூர்
நாக வூரெனுந் தலைமைபற் றியபெயர் நண்ணி
யாக மற்றுநா கரென மரீஇயதை யன்றே

(செய்கு யுசுபு நாயகருபாத்துப் படலம்: 6)

செய்கு யூசுபு அவர்கள் இவ்வுலகில் வாழ்ந்த கால எல்லை 94 வருடங்கள் எனக் குலாம் காதிறு நாவலர் ஒரு பாடலில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

சீத வொண்மதி தெறுகதிர் கெழுமுகத் திருவின்
மாதர் மக்களும் புடைகொள வாழ்வொடு வைகு
நாதர் தம்வய தொன்பது பத்துமோர் நான்கும்
போத வந்ததை யவதிநாண் மௌத்தவர் பொருந்த

(செய்கு யூசுபு நாயகருபாத்துப் படலம்: 9)

குலாம் காதிறு நாவலர் தமது நாகூர்ப் புராணத்தில் ஒரு புலவரைப் பற்றி விரிவாக விவரித்துள்ளார். அவர் தஞ்சை மாநகரத்தைச் சேர்ந்தவர் எனக் குறிப்பிட்டுள்ளார். அவர் ஒரு பெரும்புலவர் என்றும் முஸ்லிம் மக்களிடையே சிறந்து விளங்கினுர் என்றும் குணசீலராகவும் செல்வந்தராகவும் கொடையாளராகவும் விளங்கியதோடு இல்லறத்திலும் சிறந்து திகழ்ந்தார் எனவும் அவருடைய பெயர் பாவா ராவுத்தர் என்றும் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது :

எனமுடி யரைய ஞேப்புமு தூரி லிருந்தன ரொருபெரும் புலவர்
இனமுடை முசுலி மீன்களிற் சிறப்புற் றியன்றநாற் குணத்தினர் வியப்பக்
கனமுறழ் கொடையின் வளர்நிதிச் செல்வங் கலந்தவில் லறத்தினி லான்று
பனகவொண் படத்தி னல்குலார் மாழ்கும் பாவாரா வுத்தரென் பவரால்

(மலடு தீர்த்த படலம் : 2)

அவர் கல்வி கேள்விகள் சிறந்து விளங்கினுர் என்பதும் ஐந்திலக்கணம் இலக்கியங்களில் வல்லவராகத் திகழ்ந்தார் என்பதும் எல்லா நூல்களிலும் பாண்டித்தியம் பெற்றிருந்தார் என்பதும் பதினெரு செய்யுட்களில் (மலடுதீர்த்த படலம் 3-13) விவரிக்கப்பட்டுள்ளன. எல்லா வரங்களும் பெற்று மதிவாணராகத் திகழ்ந்தார் எனினும் அவருக்கு மகப்பேறு இல்லாமல் வருந்திஞர் என்று இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார்.

அறங்கொளும் கல்விப் பேரறி வனைத்து
மகனக மமைவரப் பெற்றுத்
திறங்கலந் திருக்குந் தன்மைய ரெனும்பேர்
திசைபுக நாடொறு மலியும்
மறங்கொளுஞ் செல்வ மன்னிய பாவா
ராவுத்த ரெனுமதி வாணர்
பிறங்கெழின் மகப்பே றன்றிமற் றெல்லாப்
பேறுமுற் றிருந்தன ரன்றே

(மலடு தீர்த்த படலம் : 14)

சாகுல் கமீது ஆண்டவரிடம் மகவரம் கேட்டு பல்வேறு வகையான சித்திர கவிகளைப் பாடினுரென்றும் வெவ்வேறு விதமான சித்திர கவிகளை மலடுதீர்த்த படலத்தில் பாவா ராவுத்தர் அவர்களின் வாயிலாகத் தந்துள்ளார். பாவா ராவுத்தர் என்னும் புலவர் நொண்டி நாடகம் ஒன்றும் இயற்றினுர் என ஒரு செய்யுளில் குலாம் காதிறு நாவலர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

குலாம் காதிறு நாவலரின் குறிப்புக்கிணங்கப் பார்க்கும்பொழுது சாகுல் கமீது ஆண்டகையைப் புகழ்ந்து பாவா ராவுத்தர் அவர்கள் நொண்டி நாடகம் ஒன்று இயற்றி இருத்தல் வேண்டும். நொண்டி நாடகம் பற்றிய குறிப்பைக் கொண்ட நாகூர்ப் புராணச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

என்னவண் புகழிற் போற்றி யெழின்மக வரங்கேட் டண்ணல்
பொன்னவாய் நின்று மேன்மைப் புலவர்கோன் பாத்தி காவும்
பின்னமி லாம லோதிப் பெரிதுள விழைவி னேடு
நன்னயத் திருந்து நொண்டி நாடக மொன்றுஞ் செய்தார்

(மலடு தீர்த்த படலம்: 40)

மகவரம் பெற்றதும் கணவன் மனைவியர் இருவரும் அகமிக மகிழ்ந்தனர் என்பது

தனிமக நமக்கீந் தார்நஞ் சாகுல்க மீதென் றின்றேன்
பனிமொழி மடமா னேடு பாவாரா வுத்த ருஞ்சீர்
நனிபெறு மாநந் தத்தி னுட்செலக் கழித்தா ரன்ன
வனிதைதன் கருமுதிர்ந்து மாதமு நிரம்பிற் றன்றே

(மலடு தீர்த்த படலம்: 44)

என வருணிக்கப்பட்டுள்ளது.

நாகூர் எத்தகைய சிறப்பு வாய்ந்த நகரம் என்பதையும் குலாம் காதிறு நாவலர் குறிப்பிடத் தவறவில்லை. முஸ்லிம்களுக்குப் புனிதமாகவுள்ள நான்கனுள் நான்காவது நாகூர் எனக் குறிப்பிட்டுள்ளார். பெருமானுர் முகம்மது (சல்) அவர்களின் கல்லறை (றவுளா சரீப்) அமைந்துள்ள மதினுவையும் அண்ணல் (சல்) அவர்கள் பிறந்த மக்காவையும் முகியித்தீன் ஆண்டவர் அடங்கி இருக்கும் பகுதாது நகரையும் தவிர்த்து மேன்மையானது நாகூர் எனக் குலாம் காதிறு நாவலர் குறிப்பிட்டுள்ளார். அந்தச் செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

மங்க ளத்தொனி சேர்மதி னுவெழின் மக்கா
தங்கு சீர்பகு தாதெனு முப்பதி தவிர
எங்கி ருக்குமற் றிணையிதற் கென்றுல கியம்பு
நங்க ளுக்கொரு மேன்மையி னமைந்தது நாகூர்
(தல விசேடப் படலம்: 2)

ஆனல் முஸ்லிம்களுக்கு மூன்றாவது புனிதத்தலமாக விளங்குவது ஜெருசலம் என்னும் பைத்துல் முகத்திஸ் நகரம் என்பது ஈண்டு நோக்கற்பாலது.

ஓசை நயம்

குலாம் காதிறு நாவலரின் இலக்கிய நடையே பொதுவாக ஓசை நயம் மிக்கது. சங்க காலத்தில் பெரு வழக்கிலிருந்து தமிழ்ச் சொற்களைச் செய்யுள்களில் இடம்பெறச் செய்வதனுல் குலாம் காதிறு நாவலர் ஓசை நயத்தை அமைத்து நாகூர்ப் புராணத்தைப் பாடியுள்ளார் எனக் கூறலாம். எடுத்துக் காட்டாக இவ்விரண்டு செய்யுட்களையும் பார்ப்போம்.

காடரு தகடலு மருதன
நாடரு தநகரு மருதன
கோடரு தகுவிபொ ருண்மல்குறும்
பாடரு தபதிகளு நீந்தினர்
(திருவிழாப் படலம்: 32)

வன்ன மாளிகை வான்வரை தன்னலான்
பொன்ன மால்வரை போன்மென மாமழை
சொன்ன மாரி சொரிந்தெனச் செல்வமார்
நன்ன ராநக ரங்களு நீந்தினர்
(திருவிழாப் படலம்: 33)

முதலாவது செய்யுளில் வல்லின எழுத்துக்களாலும் இரண்டாம் செய்யுளில் மெல்லின எழுத்துக்களாலும் ஓசைநயம் பெறப்பட்டிருப்பதைக் காணலாம்.

மற்றொரு செய்யுளில் வல்லின மெல்லின எழுத்துக்கள் சேர்ந்து இவ்வாறு ஓசைநயம் பெறப்பட்டிருப்பதைக் காணலாம்.

நஞ்ச முண்டவர் பகையினு னியற்றுநர் நலமில்
வஞ்ச முண்டவர் பற்றிலம் பாட்டினர் மல்குந்
தஞ்ச முண்டடை தரினவை யேகிய தவிர்க்கும்
மஞ்ச முண்டெழு பன்னறு மணத்தெழு வாடை
(தல விசேடப் படலம்: 10)

மலடு தீர்த்த படலத்திலே இடம் பெற்றுள்ள ஏகபாதம் முதலிய சித்திரக் கவிகளில் குலாம் காதிறு நாவலர் ஓசைநயத்தைச் சிறப்பாக அமைத்துப் பாடி உள்ளார் என்பது நோக்கற்பாலது.

**யாப்பமைதி**

பொதுவாகக் காப்பியத்தில் அமைய வேண்டிய விருத்தப் பாக்கள் நாகூர்ப் புராணத்தில் இடம் பெற்றுள்ளன. நாகூர்ப் புராணத்தின் சிறப்பமிசமாகத் திகழ்வது அங்கு அமைந்துள்ள சித்திர கவிகளே. பரவா ராவுத்தர் என்னும் மதிவாணர் நாகூர் ஆண்டகையிடம் பிள்ளை வரம் வேண்டும் நிகழ்ச்சியையே குலாம் காதிறு நாவலர் சித்திர கவி களாகப் பாடி உள்ளார். அவருடைய குறை இரங்குதலையும் வேண்டு கோளையும் தமக்குப் பிள்ளைவரம் அருள வேண்டும் என்று முறை யிடும் கருத்துக்களையே குலாம் காதிறு நாவலர் சித்திரக் கவிகளிலே அமைத்துப் பாடியுள்ளார். மலடு தீர்த்த படலத்திலே 19 முதல் 36 வரை உள்ள செய்யுட்கள் சித்திரக் கவிகளாக அமைந்துள்ளன.

திரிபு என்னும் வகையில் அமைந்த கலிவிருத்தத்தை எடுத்துக் கொள்வோம். இது கலி விருத்தம்

மாத வந்தனை மன்னிய செய்ததும்
ஆத வந்தனை யன்ன விளங்குறும்
பாத வந்தனை பண்ணுநர் கட்கினி
ஏத வந்தனை யின்றருள் வாய்க்குமே (19)

இங்கே முதலிரு சீரிலுள்ள முதலெழுத்தொழிந்த ஏனைய ஐந்து எழுத்துக்களும் மாருது ஒன்று வந்துள்ளன. முதலெழுத்து மாத்திரம் மாறி வந்துள்ளது. முதலெழுத்து மாறியும் ஐந்து முதல் ஒன்பது எழுத்துக்கள் மாருமலும் திரிபு வகையில் வரும் பெரிய தவத்தை நிலைபெறச் செய்து முடித்த ஒளிவையொத்து விளங்குதற் பொருந்து மும்து திருவடிகளை வந்தனஞ் செய்கின்றவர்களுக்கு இனிமேற் பயனின்மை ஏது? அளவின்றி அத்திருவடிகளின் அருள் கிடைக்கும். இதுதான் இச்செய்யுளின் கருத்தாகும்.

யமகம் அமைந்துள்ள மற்ருெரு கலிவிருத்தம் இது.

பாதக மலங்களைப் பரப்பி யார்ந்தமேன்
பாதக மலங்களைப் பட்ட மின்னினும்
பாதக மலங்களைப் பழிச்சுங் காலவை
பாதக மலங்களைப் பஞ்சி னுக்குமே (20)

இங்கே அடிதோறும் வந்த முதற் சீரிரண்டும் ஒன்றி வந்துள்ளது. பாது—அக—மல்+அம்—களை என்று பாதகம்—மலங்களை என்றும் நான்கு அடிகளிலும் உள்ள முதலிரண்டு சீர்களையும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

ஏகபாதமாக அமைந்துள்ளது அடுத்த கலிவிருத்தம். நான்கடிகளும் ஒன்ருய் வந்துள்ளது.

மாவ ணங்குடை மாதவ நாதவே
மாவ ணங்குடை மாதவ நாதவே
மாவ ணங்குடை மாதவ நாதவே (21)
மாவ ணங்குடை மாதவ நாதவே

நான்கடிகளும் ஒன்ருய் அமைந்துள்ள போதிலும் அங்குள்ள சொற்கள் வெவ்வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளன.

'பெரிய வணக்கத்தை உடைய மாதவரே, நாதரே, களிப்பையுடையவரே, வருத்தங்கெட்ட சூரியோதயமானவரே, நாதாவே, அழகிய எனது மனையாளாகிய பெண்ணினது மலடென்னுங் கட்டுக் கெட நாதத்தினது வேகின்ற மிகுதியான நோயைத் தகர்ப்பீராக, பெருமை மிக அரசே!' என்பதே இச்செய்யுளின் கருத்தாகும்.

மாலை மாற்று என்பது ஒரு செய்யுளை ஈறு முதலாகவும் முதலீருகவும் வாசிப்பினும் அச்செய்யுள் மாருது அதே செய்யுளாய் இருப்பது. அத்தகைய ஒரு கலிவிருத்தம் இது.

வேதா நாரா வேமா தாதா
நீ தா தாரா நீரா தீதா
தாதீ ராநீ ராதா தாநீ (22)
தாதா மாவே ராநா தாவே

இதன் கருத்து: 'வேதத்தை உடையவரே, அன்பை உடையவரே, இன்பத்தை உடையவரே, தாதாவே, நீதத்தை உடையவரே, வெற்றி மாலையை உடையவரே, குணமேம்பாட்டை யுடையவரே, வலிமை தீராத நீர்மையுள்ள ஆதரவினை உடையவரே, எங்குந் தாவுகின்ற பாக்கியத்தை உடையவரே, அழகினை உடையவரே, நாதாவே' என்பதாகும்.

கருப்ப தோபத்திரமாக அமைந்த கலிவிருத்தம் இது.

வாமா நாதா தாநா மாவா
மாயா வாதா தாவா யாமா
நாவா தாதா தாதா வாநா
தாதா தாநீ நீதா தாதா (23)

ஒரு நிரை எட்டாக அறுபத்து நான்கு அறைகீறி ஓரடியெட்டெழுத்தாக நான்கடிகளை மேனின்று கீழாகவும் கீழ் நின்று மேலாகவும் எழுதினால் முதற்றொடங்கி இறுதியாகவும் இறுதி தொடங்கிமுதலாகவும் மாலை மாற்றாக நான்கு முகத்தினும் வாசிக்க ஒரே செய்யுள் வருவதே இதன் சிறப்பியல்பாகும்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வா | மா | நா | தா | தா | நா | மா | வா |
| மா | யா | வா | தா | தா | வா | யா | மா |
| நா | வா | தா | தா | தா | தா | வா | நா |
| தா | தா | தா | நீ | நீ | தா | தா | தா |
| தா | தா | தா | நீ | நீ | தா | தா | தா |
| நா | வா | தா | தா | தா | தா | வா | நா |
| மா | யா | வா | தா | தா | வா | யா | மா |
| வா | மா | நா | தா | தா | நா | மா | வா |

'அழகினை உடையவரே, நாதாவே, வலிமையான நாவினை உடைய பெருமையினை உடையவரே, கெடாத ஆதரவினை உடையவரே, வருந்தத் தெரியாத, ஒப்பாகாத விருப்புள்ளவரே, தாதாவே, அழியாத குருவே. வலிமைக்கிருப்பிடமானவரே, பிதாவையொத்தவரே' என்பது இக்கவிதையின் பொருளாகும்.

இன்னொரு சித்திரக் கவி சுழிகுளம் எனப்படும். வஞ்சித்துறை செய்யுளாகச் சுழிகுளம் அமைந்துள்ளது.

தவமுதியார் கோவே
வவமறவாரின்கோ
முமலமிறவாரிர்
திறமிகுமறவாயா (24)

இங்கே அடியொன்றுக்கு எட்டெழுத்துக்கள் வந்துள்ளன. நான்கடிகள் உள்ளன. இங்கே நான்கு வகைகளில் இச்செய்யுள் எழுதப்பட்பட்டுள்ளது. இதனை ஒட்டு நிரையாக எழுதின் இச்செய்யுள் எவ்வாறு சுழிகுளமாக அமைகின்றது என்பதைப் பார்க்கலாம்,

த வ மு தி யா ர் கோ வே
வ வ ம ற வா ரி ன் கோ
மு ம ல மி ற வா ரி ர்
தி ற மி கு ம ற வா யா

முதல் நிரையில் உள்ள எழுத்துக்களை மேலிருந்து கீழாகவும் எட்டாம் நிரையில் உள்ள எழுத்துக்களை கீழிருந்து மேலாகவும் வாசித்தால் செய்யுளின் முதலாமடி பெறப்படும். அதே போன்று இரண்டாம் நிரையில் உள்ள எழுத்துக்களை மேலிருந்து கீழாகவும் ஏழாம் நிரையில் உள்ள எழுத்துக்களை கீழிருந்து மேலாகவும் வாசிப்பின் செய்யுளின் இரண்டாம் அடி பெறப்படும். மூன்றும் நிரையை மேலிருந்து கீழாகவும் ஆறும் நிரையைக் கீழிருந்து மேலாகவும் நான்காம் நிரையை மேலிருந்து கீழாகவும் வாசிப்பின் செய்யுளின் இரண்டாம் அடி பெறப்படும். மூன்றும் நிரையை மேலிருந்து கீழாகவும் ஆறும் நிரையைக் கீழிருந்து மேலாகவும் நான்காம் நிரையை மேலிருந்து கீழாகவும் ஐந்தாம் நிரையை கீழிருந்து மேலாகவும் வாசித்தால் முறையே செய்யுளின் மூன்றும் நான்காம் அடிகளைப் பெறலாம். இதன் கருத்து: 'தவத்தில் முதிர்ந்தவரே, குற்றமான செய்கைகளின் றும் விடுபட்டவரே. மும்மலங்களையும் துறந்தவரே. என்னை மறவாமல் காப்பாற்றுவீராக' எனக் கொள்ளலாம்.

அடுத்தது கோமூத்திரி, வஞ்சித்துறைச் செய்யுளாக இது அமைந்துள்ளது.

திருவ நாயக
மருவு மாதவ
பொருவ நாவக
வருக மாநவ

இந்நான்கு வரிச் செய்யுளை இரண்டிரண்டு வரியை மேலுங்கீழுமாய் ஒன்றிடையிட்டு வாசிப்பினும் அதே கருத்துடைய செய்யுளாய் அமைவது

பொருவ நாவக
வருக மாநவ
திருவ நாயக
மருவு மாதவ

என அமைந்தாலும் அதே செய்யுளாய் அமையும்.

கூட சதுக்கம் என்பது ஒரு செய்யுளின் ஈற்றடியில் உள்ள எழுத்துக்கள் ஏனைய மூன்று அடிகளிலும் கலந்து நிற்க வருவது. வஞ்சி விருத்தமாக வந்துள்ள அச்செய்யுள் வருமாறு

தீது மீளுறுந் தேடுதிர்
மீது நாடிய மேன்மையின்
கோதி ராதநா கூரமர்
நாத ராரடி நாளுமே (26)

இங்கே ஈற்றடியுள்ள நா, த, ரா, ர என்பன மூன்ரும் அடியிலும் டி, நா, மே என்பன இரண்டாம் அடியிலும் ளு என்பது முதலாம் அடியிலும் கலந்து நிற்க வந்துள்ளமையைக் காணலாம்.

காதை கரப்பு என்பது வேருெரு விதமான சித்திர கவி. முதலில் நான்கு அடிச் செய்யுளை எழுதிவிட்டு ஈற்றடியிலுள்ள ஈற்றெழுத்தில் தொடங்கி ஒவ்வொரெழுத்தை இடையில் விட்டு எழுத வேருெரு செய்யுள் கிடைக்கும். கவி விருத்தமான அச்செய்யுள் இது

சீதா நாநா வீரு சீமா
மாதா தாவே மாரு நாகூ
ராதா மாநீ ராரு மூவா
நீதர் கோவே பேரு பூபா (27)

இச்செய்யுள் உள்ள ஈற்றடியின் ஈற்றெழுத்து பா என்பது ஈற்றிலிருந்து பா என்னும் எழுத்தில் தொடங்கி ஒன்றுவிட்டு ஒன்ருக எடுத்தல் வேண்டும். பா வை எடுத்து பூவை விட்டு, ரு வை எடுத்து பேயை விட்டு, வேயை எடுத்து கோவை விட்டு தாவை யெடுத்து நீ யை விட்டால் 'பாருவேதா' என்னும் அடி வரும். ஏனைய அடிகளில் உள்ள எழுத்துக்களையும் இதே முறையில் எடுத்தல் வேண்டும். அப்பொழுது பின்வரும் வேருெரு செய்யுள் பெறப்படும் வஞ்சித்துறைச் செய்யுளான இது வருமாறு:

பாரு வேதா
வாரு நீதா
கூரு வேதா
மாரு நாதா

கரந்துறை செய்யுள் என்பது ஒரு செய்யுளைப் பாடி அச்செய்யுளில் பிறிதொரு செய்யுள் மறைந்து நிற்க அச்செய்யுளை அமைப்பது. கலிவிருத்தமான அச்செய்யுள் வருமாறு:

சீர்வளர் தருநருச் செறிந்த சோலை சூழ்
கூர்மலி தாவொழி குறைவுருதவாம்
பேர்படும் பணியு நாகூரைப் பேணிடின்
வார்பெறு நோவிலா வகையிேேருமால் (28)

இதனுள் மறைந்துள்ள செய்யுள் ஒரு குறள் வெண்பாவாகும். அது வருமாறு:

*சீருத நாகூர்வாழ் செல்வர் பதம்பணிந்தா*
*லாருத நோயு மறும்.*

திரிபங்கி என்பது மற்ருெரு வகைச் சித்திர கவி. ஒரு பொருளில் பாடப்பட்ட ஒரு செய்யுளில் மூன்று செய்யுட்கள் அமைந்திருப்பது திரி பங்கி எனப்படும். இத்தகை ஒரு செய்யுளை மூன்ருகப் பிரித்து தனித் தனி மூன்று செய்யுட்கள் பெறப்படும். இது ஒரு கட்டளைக் கலித் துறைச் செய்யுள்

மாதவஞ்சேர் மறைவாயுடையீர் மதிமாவினையீர்
நீதநெஞ்சார் துறைமேவுயர்வீர் விதிநீணெறியீர்
போதமுளீரி றையோனருளீர் பொதிசேர் புகழீர்
ஆதிநண்பீர் கறையேன்விழியீர் ததியாளுதிரே (29)

இக்கட்டளைக் கலித்துறைச் செய்யுளை மூன்று தனித்தனி செய்யுட் களாகப் பிரிக்கலாம். அவை ஒவ்வொன்றும் வஞ்சித்துறைச் செய்யுட் களாக அமைந்திருப்பதைக் காணலாம். வஞ்சித்துறைச் செய்யுட் களாவன.

மாதவஞ்சேர்
நீத நெஞ்சார்
போதமுளீர்
ஆதி நண்பீர் (1)

மறைவாயுடையீர்
துறைமே வுயர்வீர்
இறையோ னருளீர்
கறையேன் விழியீர் (2)

மதிமா வினையீர்
விதிநீ ணெறியீர்
பொதிசேர் புகழீர்
ததியா ளுதிரே (3)

மற்ருெரு சித்திர கவி பிறிதுபடு பாட்டு எனப்படும். ஒரு செய்யு ளின் அடிதொடை வேறுபடுத்தி எழுதினுல் பொருள் வேறுபடாது பிறி தொரு செய்யுள் பெறப்படும். இது ஒரு கொச்சகக் கலிப்பா,

சீரானசோலை செறிந்த திறலார்நா
கூராளு நாதருயர் பாதந் தீராத
வாரான வெய்ய துயர் மாற்றும் மாம்
பேராக வாரும் பெரிதுமினியால் (30)

இது வெண்பாவாக மாறும்

சீரான சோலைசெ றிந்ததி றவார்நா
கூராளு நாதரு யர்பாதந்—தீராத
வாரான வெய்யதுயர் மாற்றும்மாம் பேராக
வாரும் பெரிதுமினி யால்

மற்றொரு வகைச் சித்திர கவி வினாவுத்தரம் எனப்படும். வினவும் அதற்குரிய விடையும் ஒருங்கே ஒரு செய்யுளில் அமையப் பாடுவது வினாவுத்தரமாகும். அத்தகைய செய்யுளில் ஒரு சொற்றொடர் வினாவாக அமையும். அத்தகைய வினாக்களுக்கு விடையாக அமையும் சொற்கள் செய்யுளின் கடைசி அடியின் கடைசிச் சொற்றொடரில் அமையும். கடைசியில் உள்ள அச்சொற்ருடர் முழுவதும் மற்றொரு பொருளாய் முடியும். வெண்பாவாக அமைந்துள்ள அச்செய்யுள் வருமாறு :

பேசுவதென் னுந்தகந்தான் பெற்றதெவ னுர்கலியின்
வீசுமலை தன்னுன்மி குவதென்னும் — மாசுகெடப்
பெற்றுரைத்தி நீயென்ருற் பின்னையென்ன சொல்வதாம்
உற்றதிரு நாகூரொலி (31)

இங்கே உள்ள முதலாவது வினா பேசுவதென் என்பது. அதற்குரிய விடை செய்யுளின் இறுதி அடியில் உள்ள இறுதிச் சொற்றொடரில் முதல் எழுத்தாக அமைந்துள்ளது. எனவே அதற்கான விடை நா என்பதே. அடுத்த வினா நாந்தகந்தான் பெற்றதெவன் என்பது. அதே சொற்றொடரின் இரண்டாவதாக உள்ள கூர் என்பதே அதற்கான விடையாகும். ஆர்கலியின் வீசுமலை தன்னான் மிகுவது என் என்பது செய்யுளில் இடம்பெற்றுள்ள மூன்றாவது வினாவாகும். வெண்பாவின் இறுதிச் சொல்லே இதற்கான விடையாகும். அவ்விடை

தான் ஒலி என்பது. இங்கே வினாவப்பட்ட வினாக்களுக்கெல்லாம் விடையாக அமைந்த சொற்றொடர் நாகூரொலி என்பதாம். ஆனால் நாகூரொலி அவ்விடைகளுடன் தொடர்பற்ற வேறு பொருளைக் கொண்டுள்ளது என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

இன்னும் நிரோட்டம்(32), முரசபந்தம்(33) சதுரங்கபந்தம் (34), அட்டநாகபந்தம் (35), நான்காரச் சக்கரம் என்பன மலடு தீர்த்த படலத்தில் இடம்பெற்றுள்ள ஏனைய சித்திர கவிகளாகும்.

நாகூர்ப் புராணத்தை அச்சிட நிதி உதவி புரிந்த நாகூர் பாவா ராவுத்தர் குமாரர் சிக்கந்தர் ராவுத்தர் அவர்களது பேரில் வாழ்த்துப் பதிகம் பாடி உள்ளார் குலாம் காதிறு நாவலர். அப்பதிகத்தின் பத்தாவது செய்யுள் இவ்வாறு அமைந்துள்ளது.

பாகூர்க மீதொலியாம் பாத்துஷா சாகிபுவின்
நாகூர்ப்பு ராணத்தை நாற்றிசையும் போக்குதற்கு
மாகூர்நி தியருளி மாண்புற்ரு யாவதனுல்
வாகூர்ந்த சிக்கந்தர் வள்ளனீ வாழியவே.

# பதினைந்தாவது இயல்

## ஆரிபு நாயகம்

ஆரிப் என்பது அறிஞரைச் சுட்டும் ஒரு பெயர் என்பர். இறைவனின் நல்லடியார்களுக்கு இப்பெயர் சுட்டப்பட்டுள்ளது. இவர்களைப் பின்பற்றுபவர்களின் கருமங்களை சிலர் செவ்வனே செய்து முடிப்பர். இறை பக்தி மிகுதியாக உள்ளவர்கள் இத்தகையோர். இறைவன் பற்றிய உண்மைகளையும் இரகசியங்களையும் ஆரிப் எனப்படுவோர் நன்கு அறிவர். இத்தகைய ஆரிபுகளுக்கெல்லாம் தலைவராக இருக்கக் கூடியவரே ஆரிபு நாயகம் ஆவார். ஆரிபீன்களுக்கெல்லாம் தலைவராக விளங்குபவர் சுல்தானுல் ஆரிபீன் என அழைக்கப்பட்டார். அத்தகைய பெரியார் தான் ஆரிபு நாயகம் என வழங்கப்பெற்ற சுல்தானுல் ஆரிபீன் சையது அகுமது கபீருர் றிபாயி அவர்கள். அப்பெரியாரின் வாழ்க்கை வரலாற்றினையே ஆரிபு நாயகம் என்னும் தமது காப்பியத்துக்குக் கருப்பொருளாகக் கொண்டார் அதன் ஆசிரியர் குலாம் காதிறு நாவலர். ஆரிபு நாயகம் குலாம் காதிறு நாவலரால் இயற்றப்பட்ட இரண்டாம் காப்பியமாகும்.

அகமது கபீருர் றிபாயி ஆண்டகை அவர்கள் ஹிஜ்ரி 512 றஜப் பிறை 27 (கி.பி. 1118 நவம்பர் 13-ஆம் தேதி) வெள்ளிக்கிழமை பிறந்து ஹிஜ்ரி 578 ஜமாதுல் அவ்வல் பிறை 22 (கி.பி. 1182 செப்டம்பர் மாதம் 23-ஆம் தேதி) வியாழக்கிழமை மறைந்தார்கள். இக்கூற்றுக்கு இணங்க, அவர்கள் ஹிஜ்றிக் கணிப்பின்படி 66 ஆண்டுகள் உலகில் வாழ்ந்துள்ளனர். அதில் அவர்கள் ஹிஜ்றி 500 ஆம் ஆண்டு முகறம் மாதம் (கி.பி. 1106 செப்டம்பர் மாதம்) பிறந்தார்கள் எனவும் கூறப்பட்டுள்ளது. குலாம் காதிறு நாவலர் அவர்கள் அகமதுகபீறுறிபாயி ஆண்டகை அவர்கள் இவ்வுலகை விட்டு நீங்கின செய்தியைக் குறிப்பிடும் பொழுது அவர்கள் எழுபத்தெட்டு ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்தார்கள் எனச்சுட்டி உள்ளார். றிபாயி ஆண்டகை அவர்கள் ஹிஜ்ரி 500இல் பிறந்து ஹிஜ்ரி 578இல் மறைந்ததால் 78 ஆண்டுகள் தான் வாழ்ந்திருப்பார்கள். ஆரிபு நாயகம் அவர்களின் மறைவை குலாம் காதிறு நாவலர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

எண்ணும் ஹிஜுரத் தைஞ்நூற்றே டெழுபத் தெட்டென்
நியலாண்டு
நண்ணு ஜமாத்து லவ்வலதி னடக்கும் இருபத் திரண்டான
மண்ணுந் திகதிக் குருவார மெழுபத் தெட்டாம் வயதிடைநங்
கண்ணுங் கருத்து மிறவாதார் கத்தன் புறத்திற் கலந்தனரே
(உபாத்துப் படலம்: 59)

வருபொருளுரைத்தல்:

தாம் கூறப்போகும் கதை இன்னதென்பதை கடவுள் வாழ்த்தில் உள்ள முதற்செய்யுளிலே வருபொருள் உரைத்தலாகக் குறிப்பிட்டுள்ளார். எல்லாப் புகழுக்கும் உரியவனான அல்லாஹ்வின் பெயரைக் கொண்டு ஆரம்பித்து சுல்தானுல் ஆரிபீனான ஆரிபீன்களுக்கெல்லாம் தலைவராகிய பெரியாரின் கதையைத் தமிழில் சொல்ல முற்படுவதாக முதற்செய்யுளிலே இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் குலாம் காதிறு நாவலர்.

'புகழ்முழு தொருவன பொருந்து மாட்சியன்
றிகழ்கரு ணையினி ரு திரத்த னால்வ
னகழ்பெயர் கொடுநம ராரி பீனிறை
நிகழ்கதை யருந்தமிழ் நிலவச் செய்குவாம்'

(கடவுள் வாழ்த்து: 1)

கடவுள் வாழ்த்து:

ஏனைய காப்பிய ஆசிரியர், கடவுள் வாழ்த்து அல்லது பாயிரம் இரண்டில் ஒன்றையே தமது காப்பியங்களில் இடம்பெறச் செய்வர். ஆனால் குலாம் காதிறு நாவலர் இரண்டையும் தமது காப்பியங்களில் அமைத்துப் பாடி உள்ளார். முதலில் கடவுள் வாழ்த்தினையும் பின்னர் பாயிரத்தினையும் இடம் பெறச் செய்துள்ளார்.

கடவுள் வாழ்த்தில் வருபொருளுரைத்த பின்னர் அல்லாஹ்வை மூன்று செய்யுட்களில் புகழ்ந்துள்ளார். பெருமானார் (சல்) அவர்களை ஒரு செய்யுளிலும் ஏனைய நபிமார்களை மற்றொரு செய்யுளிலும் கலிபாக்கள் நால்வரையும் நான்கு செய்யுட்களிலும் பெருமானாரின் நம்பிராட்டிமார்களை ஒரு செய்யுளிலும் அசன் (றலி), உசைன் (றலி) இருவரையும் வேறொரு செய்யுளிலும் ஏனைய நபித்தோழரை இன்னொரு செய்யுளிலும் நான்கு இமாம்களையும் பிறிதொரு செய்யுளிலும் முகியித்தீன் ஆண்டவரை மற்றொரு செய்யுளிலும் புகழ்ந்துள்ளார். ஏனைய காப்பிய ஆசிரியர்களுள் பெரும்பாலானோர் குறிப்பிடாத இக்காப்பியத் தலைவர், அபாயெஜீது, செய்கு மகுறூபு, ஹாஜிஷரீபு ஜிந்தனி, குத்பு செய்யது முகம்மது, குவாஜா முஈனுத்தீன் சிஸ்தி (அஜ்மீர்) குவாலீயர் முகம்மது கௌது, நாகூர் சாகுல் கமீது ஆண்டகை, சிராமலை (திருச்சி) நாதர், செய்யது முகம்மது யூசுபு, சதக்கத்துல்லா அப்பா இவர்கள் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு பாடலில் அவர்கள் தோன்றிய காலவரையரைக்கேற்பப் புகழ்ந்து ஏனைய வொலிமார், உலமாப்பெருமக்கள், குருவான செய்யிது நூறுத்தீன் தமது தந்தையாரின் தமையனாரான பகீர்த் தம்பி ஆகியோரையும் ஒவ்வொரு செய்யுளால் போற்றியுள்ளார் காப்பிய ஆசிரியர்.

**பாயிரம் :**

பாயிரத்தில் மீண்டும் வருபொருளுரையைக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். தமிழில் அச்சரிதையைப் பாடப்போவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

'இருமையிற் சிறந்தார் காதை இத்தனை தமிழி னுக
ஒருமையிற் சிறந்து வையத் துலவுமா றியன்ற தன்றே'

(பாயிரம்; 2)

**உரை நல்கியவர் :**

இக்காப்பியத்தை இயற்றுவதற்குத் தமக்கு உரை வழங்கின வரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். முகம்மது கௌது சாகிபு என்பவரே உரை வழங்கினவராவார். குர்ஆனை முகபாடஞ் செய்த ஹாபிலாவார். சைகப்துல் காதிர் என்பவரின் புதல்வராவார். அவர் சாகுல் கமீது என்னும் நாகூர் ஆண்டகையின் மரபில் வந்தவராவார்.

'மேன்மையி னுகூர் நாதர் விளக்கிய மரபின் வென்றி
தான்மையி லாதுகொண்ட சைகப்துல்காதி றென்பார்
கான்மையி னீன்ற ஹாபில் முகம்மது கௌது சாகி
பான்மையின் றிந்நூ லாக்க வருமுரை நல்கி னுரால்'

(பாயிரம்: 4)

**அவையடக்கம் :**

ஒரு செய்யுளில் புதுவிதமான ஓர் உவமையைக் கூறித் தமது தாழ்மையாந் தன்மையை எடுத்துக் காட்டியுள்ளார் இக்காப்பிய ஆசிரியர். அமிழ்தெனப்படும் தமிழ்மொழியைக் கரை கண்டவர்கள், கரைத்துக் குடித்தவர்கள் முன்னிலையில் புண்படு மனத்தனுன தாம் இக்காப்பியத்தைச் சொல்லப்போவது நாடகம் நடிக்க வேண்டிய எல்லா இயல்புகளையும் கற்றுத் தேர்ந்து நடப்பவர்கள் முன்னிலையில் சுயமாய் கையாட்டலோ, வாய் பேசலோ, உடலை இயக்கலோ முடியாது ஒரு பதுமை நடிக்க முற்பட்டது போன்ற ஒரு செய்கையாகும். இதனையே ஒரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

தண்படு மமிழ்து மாறுந் தமிழ்க்கடல் முடித்தார் முன்னம்
புண்படு முளத்தே னேற்கும் பொலிவிதி பிறமற் ருயே
னெண்படு தனியே னிந்நா லிச்சையி னிசைத்த வாறு
பண்பொடு நடிப்பார் முன்னம் பதுமையு நடித்த வாறே

(பாயிரம்: 11)

ஒரு கனி தோலால் போர்த்தப்பட்டிருக்கும். அந்தக் கனியில் உள்ள சுளையை விரும்பினமையினுலேயே தோலைக்கொண்ட கனியை எவரும் கொள்ள முற்படுவர். அதே போன்று அகுமது கபீறு றிபாயி ஆண்டகையின் புனிதமான சரிதையைக் கொண்டுள்ள இக் காப்பியத்தை அச்சரிதையைப் படிக்க விருப்பம் உள்ளமையினுலேயே இதனை அறிஞர் ஏற்றுக்கொள்வர் என்பது திண்ணம். இங்கு குறை இருக்கின்றது என்று அதே காரணமாக இந்நூலைப் புறக்கணிக்க மாட்டார். இவ்வாறு ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார்.

'அலையொரு பொருளின் செய்யி தகுமதுல் கபீறு நாதர்
விளை நயச் சரிதங் கொள்ள விழைந்திடு மவர்கற் ருேராற்
களைபடு மென்ன புன்மைக் கவிபிற நயந்து கொள்வார்
சுளையினைக் கருதி யன்ருே தோலொடு கனிகொள் வாரே'

(பாயிரம்: 12)

**காப்பியத்தின் பெயர் :**

இக்காப்பியத்துக்கு ஆரிபு நாயகம் எனப் பெயரிடப்பட்டதன் காரணத்தை ஒரு செய்யுளில் குறிப்பிட்டுள்ளார். அல்லாஹ்வால் மேல் நிலைக்கு உயர்த்தப்பட்டவர் செய்யது அகுமது கபீறு றிபாய் ஆண்டகை அவர்கள். அவர்களுடைய நாமங்களுள் ஒன்று ஆரிபீன் களுக்கெல்லாம் தலைவர் என்று பொருள்படும் ஆரிபு நாயகம் என்பது. அந்த உண்மை என்றும் உலகில் விளங்க வேண்டும் என்னும் அவாவி னுல் உந்தப்பட்டே அப்பெரியாரின் மேன்மையாம் வரலாற்று நிகழ்ச்சி களை இக்காப்பியத்தில் விவரிக்க முற்பட்டேன். அதனுலேயே இக் காப்பியத்துக்கு ஆரிபு நாயகம் என்னும் நாமத்தையும் சூட்டினேன். இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

'பெரியவ னுயர்த்தும் செய்யி தருமதுல் கபீறு பெம்மாற்
குரியதொர் நாமம் பற்றி யுண்மையின் விளங்கி யாண்டும்
விரியநின் றமைந்த வன்னுர் மேன்மையங் காதை மன்னு
மரியவிப் புராண நாம மாரிபு நாய கம்மே'

(பாயிரம்: 16)

**ஆசிரியர் பெயர் :**

இக்காப்பிய ஆசிரியர் ஒரு செய்யுளில் தம்மைப்பற்றிக் குறிப்பிட் டுள்ளார். பெரிய தவத்தினை உடைய சுல்த்தானுல் லாரிபீன் அகுமது கபீரு றிபாய் ஆண்டகையின் வாழ்க்கை வரலாற்றினை எல்லோரும் விரும்பிப் படிப்பர். அதனுலேயே அக்கதையை இனிய தமிழில் காப்பி

யமாகப் புனைந்து தந்தேன் எனக்கூறி தமது தந்தையின் பெயர் வாப்பு என்பதையும் குறிப்பிட்டதோடு தாம் நாகூரைச் சேர்ந்தவர் என்பதையும் அப்பகுதியைச் சேர்ந்த தாம் குலாம் காதிறு நாவலன் என்பதையும் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

'கண்டாடுந் தவத்திறைவர் சுல்தானுல் லாரிபீன் கதையை யாருங்
கொண்டாடுந் தகவாகக் கொழுந்தமிழி னுறப்புனைந்து
கொடுத் தானேலார்
திண்டாடுந் திறவாளன் செய்யதவ வாப்பீன்ற செல்வ மைந்தன்
வண்டாடுந் தடநாகூர் மருவுகுலாம் காதிறுநா வலனென் பானே

(பாயிரம்: 20)

**கொடை நாயகர் :**

ஆரிபு நாயகத்தின் கொடைநாயகர் இருவர் பெயர் இக்காப்பியத்தில் சுட்டப்பட்டுள்ளன. ஒருவர் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர். மற்றவர் அந்தரேத் என்னும் நகரைச் சேர்ந்தவர். இக்காப்பியம் யாழ்ப்பாணத்திலே வண்ணார்பண்ணைக் கல்லூரியில் அரங்கேற்றப் பட்டது.யாழ்ப்பாணத்தைச் சார்ந்தவரும் ஆறுமுக நாவலரின் மருகரும் மாணுக்கருமாகிய வித்துவ சிரோன்மணி ச. பொன்னம்பலப் பிள்ளை அவர்களின் தலைமையில் வண்ணார்பண்ணையில் அரங்கேற்றப் பட்டது. இக்காப்பியத்துக்கு ச. பொன்னம்பலப்பிள்ளை அவர்கள் சிறப்புப் பாயிரம் ஒன்றும் வழங்கி உள்ளார். அச்சிறப்புப் பாயிரத்தில்

'தென்னியாழ்ப் பாண தேசந் தன்னின்
மன்னிய வண்ணை மாநக ரதனிற்
பாக்கிய மெவையும் பரந்து நிற்றலிற்
பாக்கியப் பாவெனப் பலரும் பரவும்
முகம்மது லெவ்வை மரைக்கான் முதலாம்'

என பாக்கியப்பா எனப் புகழ்ப் பெயர் பெற்ற முகம்மது லப்பை மரைக்காயர் குறிப்பிடப்பட்டுள்ளார். இவர் அபூபக்கர் நயினார்ப்பிள்ளை மரைக்காயர் குமாரர் ஆவார். இக்காப்பியம் அச்சிடப்படுவதற்கும் பாக்கியப்பா அவர்களின் பெரு முயற்சியே காரணம் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இவர் செய்த உதவியைப் பற்றி ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார் ஒரு செய்யுளில்,

'பேர்கொளள்புரா ணம்மிஃது செய்விப்பா முதவியெனப் பிரியங்
கூர்ந்து
பார்கொள்பஃ றிசைதேடிப் பல்லாண்டு கழித்தினிது பயப்பச்
செய்தான்
சீர்கொள்வளம் பலவோங்கும் யாழ்ப்பாண நகர்சிறப்பச்
சிறந்தா னன்மை
யார்கொண்முகம் மதுலப்பை மரைக்கா யனெனும்பாக்கி
யப்பா மன்னே'
(பாயிரம்: 3)

இக்காப்பியம் அரங்கேற்றப்படுவதற்குக் காரணமாக இருந்தவர் அபூபக்கர் நயினார்ப் பிள்ளை மரைக்காயர் புதல்வன் முகம்மது லப்பை மரைக்காயன் என்ற இயற்பெயரைப் பெற்ற பாக்கியப்பா எனப்புகழப் படும் பெயருடையவர் என்பதையும் முஸ்லிம் மக்கள் நிறைந்த சபையில் அரங்கேற்றப்பட்டது என்பதையும் ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார். இச்செய்யுளில் யாழ்ப்பாணத்தின் இயற்கை வளமும் சுட்டப்பட்டுள்ளதைக் காணலாம்.

'நறைகமழும் பொழில்புடைசூழ் திருவளரும் யாழ்ப்பாண
நகரில் செல்வ
முறைகொளபூ பக்கர்நயி னார்ப்பிள்ளை மரைக்காய ருதவு பால
னறைபுகழ்மு கம்மதுலப் பைமரைக்கா யன்பாக்கி யப்பா வென்னு
மிறைமுயன்ற முஸ்லீங்கண் மலிசபைக்க ணரங்கேற்றிற் றிந்நூ
லன்றே
(பாயிரம்: 17)

மற்றோர் இடத்தில்

'முதுநகர் யாழ்ப்பா ணம்வாழ் முகம்மது லெப்பை யென்ற
விதுநிகர் பாக்கி யப்பா ...
(மிகுறுசு படலம்: 205)

என்றும் வேறோர் இடத்தில்

'இன்ன மாக்கதை விளங்குற வணியரங் கேற்றிச்
சொன்ன மாரியிற் றங்குரு நாட்டிய தொடர்பிற்
பன்ன நின்றநற் பாக்கியப்பா ...
(சுல்தான் முகம்மது முரீதான படலம்: 95)

என்றும் அவர் பாராட்டப்பட்டுள்ளார்.

பாக்கியப்பா என்னும் இக்கொடைநாயகரின் பெயர் ஆரிபு நாயகத்தின் இறுதிப்படலமாக அமைந்துள்ள உபாத்துப் படலத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. அங்கு அவர் வாழ்த்தப்பட்டுள்ளார். ஏழு செய்யுட்களில் வாழ்த்தப்பட்டுள்ளார்.

... ... ... ... வள்ளல் முகம்மது லப்பை யென்ற
மாசறு பாக்கி யப்பா மருவிய லீமான் மன்னிக்
காசறு துறக்க நாட்டுக் கதிபெற வாழி மாதோ (140)

என அவருக்கு சுவர்க்கப்பேறு கிட்டிட வேண்டும் என்றும்

... ... வள்ளன் முகம்மது லப்பை யென்னும்
புத்தியிற் சிறந்து மிக்க பொலிபுகழ் பாக்கி யப்பா
பத்தியி னுயுண் மெய்யிற் பலன்பெற வாழி மன்னே (141)

என இறைபக்குவம் உடையவராய் நீண்டகாலம் அவர் வாழ வேண்டும் என்றும்

... ... வள்ளன் முகம்மது லப்பை யென்னும்
பத்திரம் பெற்ற வாழ்வின் பலன்பெறு பாக்கி யப்பா
புத்திர பாக்கி யத்திற் பொலிந்தரோ வாழி யன்றே (142)

என்று பத்திரமான வாழ்வும் புத்திர பாக்கியமும் பெற்று வாழ வேண்டும் என்றும்

'செய்தொழிற் பெருக்கங் கொண்டு செழிப்புற வாழி தானே' (143)

என அவர் ஈடுபட்டுள்ள தொழில் வளம் பெற்று வளர்ந்தோங்க வேண்டும் என்றும்

'இருளரு மனத்து வள்ளன் முகம்மது லப்பை யென்னும்
தெருளுறு பாக்கி யப்பா செல்வமே மலியவாழி' (144)

என அவருடைய செல்வம் பெருக வேண்டும் என்றும்

... ... முகம்மது லப்பை யென்னும்
தக்கியல் பாக்கி யப்பா தன்பெய ரூழிக் காலந்
திக்கியல் புகழி னோடு சிறக்கிய வாழி யம்மா' (145)

என எப்பொழுதும் அவருடைய புகழ் நிலைத்து நிற்க வேண்டும் என்றும்

'முருகமர் வண்மையாளன் முகம்மது லப்பை யென்னுங்
கிருபையன் பாக்கி யப்பா கிளையொடு வாழி யம்மா' (146)

என அவர்தம் சுற்றம் சூழ வாழவேண்டும் என்றும் வாழ்த்திப் பாடியுள்ளார். இந்நூல் அரங்கேற்ற எல்லாவிதமான உதவிகளையும்

செய்த யாழ்ப்பாணத்து முஸ்லிம் மக்களையும் குலாம் காதிறு நாவலர் மறந்து விடவில்லை. அவர்களை இவ்வாறு ஒரு செய்யுளில் காப்பிய ஆசிரியர் வாழ்த்தி உள்ளார்.

'காத்தம ரிப்பு ராணங் கவினரங் கேறுங்காலைப்
பூத்தம ருதவி முற்றும் புரிந்தருந் துணையாய்ஞ் ஞின்று
பாத்தமர் நன்மை கொண்டார் பண்புட னெனும்பேர் வாய்ந்த
மூத்தமர் யாழ்ப்பா ணத்து முஸ்லீம்கள் வாழி மாதோ'

(உபாத்துப் படலம்: 147)

மற்றொரு பாடலில் எல்லோரையும் இவ்வாறு வாழ்த்தி உள்ளார் காப்பிய ஆசிரியர்.

'தெரிந்தனர் முற்று மன்று தெரிந்தள வேனுங் காதை
விரிந்தன பொருள்க ளார விளக்குவார் வாழி கேட்டுப்
பரிந்தமர் குழுவார் வாழி படிக்குமோர் வாழி வண்மை
புரிந்தவர் முஸ்லீ மெல்லாம் பொருவர வாழி யன்றே'

(உபாத்துப் படலம்: 148)

**அந்த்றோத்துக் கொடைநாயகர்:**

ஆரிபு நாயகக் காப்பியத்தைப் பாட குலாம் காதிறு நாவலருக்குப் பொருளுதவி புரிந்தவர் முகம்மது காசிம் என்பவர். இவர் அந்த்ரோத் என்னும் தீவைச் சேர்ந்தவர். அந்த்ரோத் தீவு இந்து மகாசமுத்திரத்தில் உள்ளது. கேரளக் கடற்கரையிலிருந்து ஏறத்தாழ 400 கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது அந்த்ரோத் என்னும் தீவு. இருபது தீவுகளைக் கொண்டது இந்தத் தீவுகள் என வழங்கப்படும். தீவுத் தொகுதியில் ஒன்றாக விளங்குவது இத்தீவு. இக்கொடை நாயகரைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அந்த்ரோத் நகரைச் சார்ந்த முகம்மது காசிம் என்றே குறிப்பிட்டுள்ளார். பாயிரத்திலே அவருடைய பெயர் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

'ஈழ நாட்டினு மிக்கதை விளக்கியோ ரியலார்
வாழ நாட்டிய வந்தரேத் தெனுநகர் மகிபர்
பேழ நாட்டு முகம்மது காசிமார் பெயரின்
வீழ நாட்டிய தேறிய வரங்கிடை மிகவே.'

(பாயிரம் ; 18)

அந்த்ரேத் நகரும் அங்கு வாழ்ந்து வந்த முகம்மது காசிம் கொடை வள்ளலும் பல இடங்களில் இவ்வாறு புகழப்பட்டுள்ளார். முகம்மது காசிம் கொடை வள்ளலின் பெயர் ஒவ்வொரு படலத்திலும்

குறிப்பிடப்பட்டுள்ளது. நீண்ட படலங்களில் இரண்டு முறையும் புகழப் பட்டுள்ளார் கொடைநாயகர். பெரும்பாலும் முகம்மது காசிம் என்னும் பெயரைக் குறிப்பிடும் பொழுது ஆசிரியர் அந்த்ரோத் என்னும் தீவை யும் சேர்த்தே குறிப்பிட்டுள்ளார். அது சிறிய தீவாயிருந்த போதிலும் கொடைநாயகர் வாழ்ந்த சிறப்புக் காரணமாக நகர் என்றே ஆரிபு நாயகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. முகம்மது காசிம் என்பவர் பெரு மானார் (சல்) அவர்களின் பரம்பரையைச் சேர்ந்ததனல் போலும் சில பாடல்களில் அவர் செய்யது முகம்மது காசிம் எனக் குறிப்பிடப்பட்டுள் ளார். அந்த்ரேத் என்னும் நகர் குறிப்பிடப்படாமல் கொடைநாயக ரின் பெயர் மாத்திரம் குறிப்பிடப்பட்ட பாடல்களுமுண்டு. அவை யாவன:

'கந்த மேவிய செய்யிது முகம்மது காசிம்'

(தாயிருத் தகர்த்த படலம்: 43)

'முத்தன்ன முகம்மது காசிமுளம்'

(மதீனயாத்திரைப் படலம்: 13)

'மூசு சீரின் முகம்மது
காசி மென்பவர்' (எரிந்துயிர்த்த படலம்: 13)

'மூசிய வண்மை யமைந்த முகம்மது
காசிமெ னுங்குரு கைம்மலர் தொட்டே'

(பஹாருல் முஹீத்துப் படலம்: 43)

'ஆசி றந்தம ரன்பது
மூசி நின்ற முகம்மது
காசி மென்பவர் கல்பென'

(தாதி முத்தி பெற்ற படலம்: 19)

அந்த்ரேத் நகர் குறிப்பிடப்படும் பொழுது அதன் பல்வேறு வகை யான இயற்கை வளங்கள் குறிக்கப்பட்டுள்ளன. கொடைநாயகர் முகம்மது காசிம் என்பவர் மகிபர் அடையுடன் இவ்வாறு சுட்டப்பட் டுள்ளார்.

'வாழ நாட்டிய அந்தரேத் தெனு நகர் மகிபர்' (பாயிரம்: 18)
'அந்த ரேத்தெனும் தடநக ருதித்துநம் மகத்துள்
வந்து தோற்று முகம்மது காசிமா மகிபர்'

[காட்சிப் படலம் : 51)

கொடை நாயகரின் வள்ளன்மை

'ஆநக ராகிய அந்த ரேுத்தெனும்
காநகர் முகம்மது காசிம் வள்ளல்'
(நாட்டுப் படலம் : 43)

'அந்த ரேுத்தெனு மொருநகர் வாழிய வகிலம்
வந்த நாதர் முகம்மது காசிமாம் வள்ளல்'
(மிகுருசு படலம் : 168)

'அருணனி னிலகு கீர்த்தி யந்தரேுத் தென்னு மூதூர்க்
கருணையி னுயர்ந்த வள்ளல் முகம்மது காசி மென்பார்
(நாம மகிமைப் படலம் : 43)

'இத்தகை யந்தரேுத் தென்னு மேர்நகர்
கத்தரா முகம்மது காசிம் மாமனம்
வைத்தமர் மலர்க்கழல் வள்ளல்......'
(மீன்களுயிர்த்த படலம் : 27)

என்றும் அவருடைய குற்றம் இல்லாத புகழும் சிறப்பும்

'மாசறும் பதியந் தரேுத் தெனுநகர் வாழுங்
காசறும் புகழ்செய் யிதுமுகம்மது காசிம்'
(மக்கா யாத்திரைப் படலம் : 102)

'அறப்பலனு மிகப்புனைந்த அந்தரேுத் தெனுநகரத் தமர்ந்து நாளும்
சிறப்பமைந்த நாயகராம் செய்யிதுமு கம்மதுகா சிம்தஞ் சிந்தை
(தாராவுயிர்த்த படலம் : 18)

'ஆசிலா தகனகர் அந்த ரேுத்திடை
யேசிறந் தமர்ந்த செய் யிதுமு கம்மது
காசிமென் பவர்......'
(முரீதின் மகத்துவப் படலம் : 31)

என்றும் அவருடைய மிக மேலான தவம்

ஆன சீர்கெழும் அந்தரேுத் தெனுநக ராளும்
கான லர்த்தநம் செய்யிது முகம்மது காசிம்
தேன லர்ந்தமா மனத்தடம் பூத்தவம் செழும்பூ'
(அகுமதுயிர்த்த படலம் : 51)

என்றும் அவரின் புனிதத் தன்மையும் தூய்மையும்

'நனி சிறந் தவூ ரந்த ரேுத்து தித்துள நயப்பின்
றுனி விறந்த முகம்மது காசிமாந் தூயோர்
தனி விளங்குயர் மொழிபெறு மாக்களில் தக்கோர்'
(குத்பு நாயகர் வாய்மொழிப் படலம்: 51)

'பொற்பி ஞகிய அந்தரூேத் தெனுநகர் புரக்கும்
கற்பி ஞகிய செய்யிது முகம்மது காசிம்
பொற்பினு முளத் தமரிரு கருங்குழற் புனிதர்
அற்பி ஞமொரு குருத்துவம் யாவரே அறைவார்'

(சுல்தான் முகம்மது முரீதான படலம்: 94)

ஒலிகெழும் அந்தரூேத் தென்னு மூரமர்
கலிகெடு முகம்மது காசிம் மாமனம்
பொலிகொளு மருகராம் புனிதர் தந்தகை
நலிவற யாவரே நவிறற் பாலரே'

(இபுருகீ முல்லகுறபு முரீதான படலம்: 31)

என்றும் அவரிடம் பொருந்தியிருந்த மிக்க கருணை

'கருணையி னுயர்ந்த வள்ளல் முகம்மது காசிம் என்பார்'

(நாம மகிமைப் படலம்: 43)

'அருண ஞென்றிய அந்தரூேத் தெனுநக ரமர்ந்த
கருணை தங்கிய செய்யிது முகம்மது காசிம்
பொருண யந்தனர் புளகமெய் தியதெனப் பொலிந்த'

(யாட்டின முயிர்த்த படலம்: 46)

என்றும் அவர் கல்வியில் சிறந்து விளங்கியமை

'அற்பிடை சிறந்துயர் அந்த ரூேத்தெனும்
பொற்புடைத் தடநகர் புரக்கு நாயகர்
கற்புடை முகம்மது காசி மார்மனத்
திற்புடை யிருந்தென விறைவர் வைகினர்'

(தோஷியை நிர்தோஷியாக்கிய படலம்: 46)

என்றும் அவர் எல்லாருக்கும் தலைவராம் மவ்லானு என்பது

'ஈடற் றகன்ற வந்த ரூேத்தெனுமூ ருதித்து நமர்க்கென்றுந்
தேடற் கரிய கதிர்கான்ற செஞ்ஞா யிறுவல் இருள்சீத்து
ஆடற் குதவு முகம்மது காசிம் மவுலானு மனக்கண்'

(காரண நாமப் படலம்: 47)

'பூத்த வளத்தின் மாருமல் பொலியும் அந்தரூேத்தெனுமூர்
காத்த வண்மை முகம்மது காசிம் மவுலா னுநிதமும்'

(உபாத்துப் படலம்: 72)

என்றும் அவர் தமக்குக் குருவாயிருந்தார் என்பது

'மூசிய வண்மை யமைந்த முகம்மது
காசி மெனுங்குரு கைம்மலர் தொட்டே'
(பஹறுல் முஹீத்துப் படலம்: 43)

அண்டர் வியக்குநகர் அந்தறோத் தாங்கமைந்த
கண்டனைய செய்யிது முகம்மது காசிம்
(ஸினுவிலக்கிய படலம்: 49)

அற்பினுமொரு குருத்துவம் யாவரே அறைவார்
(சுல்தான் முகம்மது முரிதான படலம்: 94)

ஏக்கறும் அந்தரேத் தென்னு மாநகர்
காக்குறு முகம்மது காசி மாங்குரு
(உம்முல் கருமத்துப் படலம்: 62)

அருமை மன்னிய அந்த ரேத்துவாழ்
கருமு கம்மது காசி மாகிய
குருமனங் குளிர் கொண்ட நாயகர்
(நீர் மயப் படலம்: 31)

தங்கிய குருவின் பேரும் ...
(உபாத்துப் படலம்: 139)

என்றும் வருணிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

கொடை நாயகர் செய்யது முகம்மது காசிம் எப்பொழுதும் இனிமையாகப் பேசுவார். கரும்பு போன்று இனிக்க உரையாடுவார். இதுவே இவ்வாறு அமைந்துள்ளது.

மிக்கி யன்றசீ ரந்தரேத் தெனுநகர் விளங்கும்
முக்கி யத்துறை முகம்மது காசிமா முதியோர்
இக்கி னன்னவாய் வ஼ருமொழி ...
(பன்னீர் மாரிப் படலம்: 37)

அவருடைய கொடைப் பண்பும் பொறுமையும் அவருடைய புதுமையாம் தன்மையும் இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

அறையெழில் வண்ட ரார்க்கு
மந்தரேத் தென்னு மூதூர்
முறைபெறக் காக்குங் கோமான்
முகம்மது காசி மென்னு

மிறைகழ லிரண்டு மேற்று
ரிதயமெக் களித்த வாறு
பொறையொடு களித்தார் யாரும்
புதுமையிற் றுளங்கி னரால்

(நரகவிமோசனப் படலம்: 36)

முகம்மது காசிம் என்பவரை விட அந்தறோத் நகரில் பிறந்தவர்கள் தக்கவரோ மிக்கவரோ எவரும் இருக்கவில்லை, இந்நிலையை ஒரு வினாவாக இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

அந்த ரேத்தெனு மந்தவூர் பிறந்தவ ரவருண்
முந்த நின்ற முகம்மது காசிமா முதியோர்
தந்த வாமனந் தனிலம ரிருவர் தந்தகுதி
இந்த வாறெனத் தக்கவர் மிக்கவ ரெவரே

(குத்பு நாயகர் மகத்துவப் படலம் : 33)

அவர் பெற்ற கல்வியும் அவருடைய உள்ளப்பாங்கும் அவர்தம் புதுமை வாழ்வும் இவ்வாறு ஒரு செய்யுளில் வருணிக்கப்பட்டுள்ளது.

விதுநிகர் மாட மேய விறன்மலே யாள ஞாங்கர்
பதுமவான் றடஞ்சூழ் அந்த ரேத்தெனும் பதிவாழ் கல்வி
முதுமைகொ ளுயர்ந்த நாதர் முகம்மது காசிம் உள்ளப்
புதுமல ரலர்த்தும் பாதர் புதுமையார் புகலற் பாலார்

(சுவர்க்கம் விற்ற படலம் : 134)

அவருடைய பிரகாசம் பொருந்திய உள்ளம் என்பது

ஆரிடை யீடறும் அந்த ரேத்தெனும்
ஊரிடை முகம்மது காசிம் ஒண்மனத்து

(அபுல் பறக்காத்துயிர்த்த படலம் : 45)

என்றும்

ஆக்கத் தமரந்த ரேத்தூ ரிடைவாழ்
மோக்கத் தர்முகம் மதுகா சிமுளம்

(மிகுருசு படலம் : 63)

என்றும்

ஆமெ னுந்தகை யந்த ரேத்துவாழ்
காமு கம்மது காசிம் மாமனம்

(கலிறு நபி வாய்மொழிப் படலம் : 16)

என்றும் வருணிக்கப்பட்டுள்ளது.

அந்தரேத்து நகரின் நாயகராகவும் தலைவராகவும் அரசராகவும் அவர் விளங்கினார் என்பது

வென்றிகொள் அந்த ரேத்தெனு மேனகர்
நன்றிகொள் முகம்மது காசிம் நாயகர்

(கோத்திரப் படலம் : 23)

ஆராரும் போற்றுமுயர் அந்தரேத் தூர்உதித்த
சீராரும் செய்யிது முகம்மதுகா சிம்பெருமான்

(அவதாரப் படலம்: 56)

எனவும்

ஆவன் மேவிய அந்தரேத் தெனுநக ரதன்கட்
காவன் மேவிய செய்யிது முகம்மது காசிம்

(கல்வி கற்ற படலம்: 28)

எனவும்

அன்ப ராயெழில் அந்தரேத் தென்னுமூர்
முன்ப ராய முகம்மது காசிம் ...

(மக்கா யாத்திரைப் படலம்: 41)

எனவும்

ஆசிறந் திலகு மந்த ரேத்திடை அமைந்துசீர்
மூசிநின் றவொரு நாதர் செய்யிது முகம்மது
காசி மென்றவ ரிகழ்ந்த பேர்கிளைகள்

(தவசியற் படலம்: 31)

எனவும்

அத்தியிற் கிடந்த வையத்து அகல்புகழ் அந்த ரேத்தின்
முத்தியிற் கிடந்த கோமான் முகம்மது காசிம் என்பார்

(சுல்தான் முகம்மது முரீதான படலம்: 51)

எனவும்

அந்தரேத் தெனுநக ரரச ராகிய
வந்தவர் முகம்மது காசிம் மாதவச்
சிந்தையில் ...

(கெறுவிகணைசப் படலம்: 24)

எனவும் கொடை நாயகர் குறிப்பிட்டுள்ளார்.

அந்தரேத்து நகரிலே முறைவிளங்கி நடுநிலை வகித்து நீதி செலுத்தியவர் இக்கொடை நாயகர் என்பது

அறை நெடுங்கடல் அந்தரூேத் தங்கமர்
மறை விளங்கு முகம்மது காசிம்

என வந்துள்ளது. (மகத்துவப் படலம்: 36)

அந்தரூேத்து நகரில் நிலைபெற்று நறுமணம் பரப்பி விளங்கியவர் கொடைநாயகர் என்பது

அந்தரூேத் தொருநக ரமைந்து மன்னிய
கந்தமார் முகம்மது காசிம் ...

(சாதனைப் படலம் : 37)

எனவும் அவர் எவ்வித குற்றமும் இல்லாதவர் என்பது

ஓதுமந்த ரூேத்தெனு மூர்வயிற் பிறந்துபோ
காது வாழ் முகம்மது காசிம் என்ற மாசிலார்

(பைஅத்துப் படலம் : 22)

எனவும், கொடை நாயகர் இருளகற்றும் சூரியனாக விளங்கினர் என்பதை

எங்கு மார்புகழ் அந்தரூே த்தெனும்நக ரிலங்கும்
கங்கு தீர்கதிர் செய்யிது முகம்மது காசிம்

(சைகு அலிக்கு உபதேசம் செய்த படலம் : 28)

எனவும் நாட்டிலே மூத்தவர் என்பது

ஏத்த வந்தந மந்தரூேத் தென்னுமூர்
மூத்த வண்ணன் முகம்மது காசிம்

(பார்வையான் முத்தியளித்த படலம் : 31)

எனவும் கொடைநாயகர் அவர் பிறந்த ஊரையே காத்து வருகின்றார் என்பதும் சுருக்கமாக

முதுநகர் அந்த ரூேத்தின் முகம்மது காசிம் தங்கள்

எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. (நகரப் படலம் : 15)

**இயற்கை வருணனை :**

சங்க காலச் செய்யுட்களின் சொல்வளத்தைக் குலாம்காதிறு நாவலரின் ஆரிபு நாயகத்தில் காணக்கூடியதாக இருக்கின்றது. இயற்கை வருணனைகளைப் பார்க்கும் பொழுது சங்க காலச் செய்யுட்களைப் படிக்கிறோமோ என்னும் ஐயப்பாட்டைத் தோற்றுவிக்கக் கூடியதாக அவருடைய இலக்கிய நடை அமைந்துள்ளது.

பதாயிகு நகரத்தைச் சார்ந்தவர் அகுமது கபீறு றிபாய் ஆண்டகை அவர்கள். அங்கிருந்து அவர்கள் மக்கா நோக்கி புறப்பட்டார்கள். புனித ஹஜ் கடமையைப் புரியும் நோக்கத்துடன் அவர்கள் அப்பொழுது செல்லவில்லை என்று ஆசிரியரே குறிப்பிட்டுள்ளார். பதாயிகு நகரத்தைவிட்டு நீங்கும்பொழுது அவர் கண்ட ஒரு காட்சி இங்கு வருணிக்கப்பட்டுள்ளது. மரத்திலே உள்ள தேன்கூடு காற்று அடிப் பதனால் உடைந்தது. அத்தேன் கூட்டிலிருந்து தேன் வடிந்து ஓடியது. அவ்வாறு வழிந்த தேனை வண்டுகள் உண்டு மகிழ்ந்தன. அந்த மகிழ்ச்சியினால் அவை பாடிக் கொண்டிருந்தன. அத்தகைய வண்டு கள் பாடின சோலைகளைக் கொண்ட பதாயிகு நகரத்திலிருந்து ஆண்டகை புறப்பட்டார்கள். இதனையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு பாடி உள்ளார்.

நீடு வான்புகழ் நீர்மையினண் ணலார்
ஆடு காலின லைப்ப விருலுடைந்
தோடு மாநற வுண்டெழில் வண்டெலாம்
பாடுசோலை பதாயிகு நீந்தினுர்

(மக்கா யாத்திரைப் படலம்: 19)

வானத்தை தொடுவது போன்று வீடுகள் உயர்ந்திருந்தன. சுவன பதியைக் காண்பதற்காக அவை அவ்வாறு உயர்ந்திருந்தன என்று கூறுதற்கு இயைவ போல் உயரமாக அமைந்திருந்தன. அத்தகைய வீடுகளைச் சூழ்ந்து பூஞ்சோலைகள் அமைந்திருந்தன. தனிச்சிறப்பு டன் விளங்கிய அப்பூஞ்சோலைகளில் எப்பொழுதும் மலர்கள் உதிர்ந்தி ருப்பதைக் காணலாம். அத்தகைய பெரிய பதாயிகு நகரை நீங்கி ஆரிபு ஆண்டகை சென்ருர்கள். இதனையே ஆசிரியர் ஒரு செய்யுளில் இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

மீயி கந்துநி மிர்ந்தன வீடெலாம்
போயி ருந்ததை பொற்பதி காண்மெனும்
வீயு குந்தனி மேம்பொழில் சூழ்ந்தப
தாயி கென்றத டம்பதி நீங்கினுர்

(மக்கா யாத்திரைப் படலம்: 37)

பல்வேறு வகையான தேன் சொட்டும் இனிய பழங்கள் குவிந்தி ருந்தன. அப்பழங்களுக்கிடையே நறுமணம் கமழும் மலர்கள் விழுந்து குவிந்திருந்தன. அவற்றுடன் காணப்பட்ட காடுகள் மீன்கள் நிறைந்த

பரந்து விரிந்திருந்த கடல் போன்ற அகன்ற வானத்தைத் தடவு கின்றன போன்று காட்சி அளித்தன. இத்தகைய காடுகள் பலவற்றை நீங்கிச்சென்றார்கள். இக்காட்சியே ஒரு செய்யுளில் இவ்வாறு உள்ளது.

தேன ளாயன தீங்கனி பற்பல
கான ளாய மலர்கட் கலந்துகூஉ
மீன ளாய விரிகட லாங்ககன்
வான ளாய வனம்பல போயினர்

(மக்கா யாத்திரைப் படலம்: 39)

அகுமது கபீறு றிபாய் ஆண்டகை அவர்கள் செல்லும் வழியில் இசையும் நடனமும் வாய்மொழிப் பாடலும் கொண்ட நிகழ்ச்சிகளை யும் கண்டு களித்த வண்ணம் சென்றார்கள்! மரக் கொத்துக்களிலே அமர்ந்தனவாய் வாய்மொழிப் பாடல் பாடுவன போல் குயில்கள் கூவின. அந்தப் புதுமையைக் கேட்ட மயில்கள் அந்த வாய்மொழிப் பாட்டுக்கு இயைய நடனம் ஆடின, வாய்மொழிப் பாட்டுக்கும் நடனத்துக்கும் அமையும் யாழின் இசையென வண்டுகள் இசை எழுப் பின. இத்தகைய காட்சிகளைக் கண்டும் கேட்டும் மனமகிழ்ச்சியுடன் அகுமது கபீறு றிபாயி ஆண்டகை அவர்கள் சென்றார்கள் என்பது ஒரு செய்யுளில் இவ்வாறு உள்ளது.

கொம்ப ரார்குயி லின்பொடு கூவுவ
வம்ப ருவுழி மஞ்ஞைக ளாடுவ
பம்பி யாழென வண்டிசை பாடுவ
நம்பி போம்வழி நன்கினு வந்தரோ

(மக்கா யாத்திரைப் படலம் : 40)

இயற்கை வருணனையில் ஒரு தனி நடையை பின்பற்றி உள்ளார் குலாம் காதிறு நாவலர். நாகூர்ப் புராணத்தில் இத்தகைய வருணனைகள் எவ்வாறு இருந்தன என்பதைக் கண்டோம். தாம் வருணிக்க முற்படும் இடத்தின் அழகினையும் அங்கு காணப்படும் தாவரங்களையும் மிருக வர்க்கங்களையும் விவரிக்கும்பொழுது சங்க கால இலக்கியங்களிலுள்ள அத்தகைய வருணனைகளை நமக்கு ஞாபகப்படுத்துவனவாய் அவை அமைந்துவிடுகின்றன. நாகூர்ப்புரா ணத்தில் உள்ள உருமாற்றிய படலத்தில் அத்தகைய செய்யுட்கள் இடம் பெற்றிருப்பதைக் கண்டோம். ஆரிபு நாயகத்தில் இடம்பெற் றுள்ள ஒரு மலைநாட்டு வருணனையைப் பார்ப்போம்,

மலைக்குன்றுகளிலே குரங்குகள் குதித்துக் கொண்டிருந்தன. முதிர்ந்த தினைகள் மலிந்த வயல்களை அவை நெருங்கின. அத் தினைகள் முற்றினதன் அடையாளமாக வளைந்து நின்றன. அந்தக் கதிர்களைக் குரங்குகள் கவர்ந்தன. வரிசையாக அமைந்துள்ள குன்றுகளுக்குச் சென்றன. உட்கார்ந்தன. அவை கொண்டு சென்ற கதிர்களை அகங்கைகளிலே வைத்து நெரித்துத் தானியத்தை வேறாய் எடுத்தன. அத்தானியத்தை அவற்றின் துணைவிகளுடன் உண்டன. இன்புற்றன. உண்டு மகிழ்ந்து ஏதோ உளறிக் கொண்டிருந்தன. பயனில்லாத, மற்றவர்களுக்குப் புரியாத சொற்களைப் பேசிக்கொண்டிருந்தன. குரங்குகளின் நாடி திரை விழுந்தனவாய்க் காட்சி அளித்தன. குரங்குகள் அவற்றின் வாய்களிலே நிறையத் தானியத்தை இட்டுச் சாப்பிட்டுக் கொண்டிருந்தன. சாப்பிட்டு என்பதைக் குறிப்பிட 'முக்கி' என்னும் சொல்லைக் குலாம் காதிறு நாவலர் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம். சங்க காலத்திலும் சாப்பிட்டு என்பதை முக்கி என்றே குறிப்பிட்டுள்ளமை ஈண்டு நினைவுபடுத்தற்பாலது. முதலில் குலாம் காதிறு நாவலரின் செய்யுளின் இக்கருத்துக்கள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதைப் பார்ப்போம்.

வரைவளர் புனத்து முற்றி வளைகுரல் கவர்ந்த மந்தி
நிரைபெறு பாறை போகி யங்கையின் ஞெமிடி யின்பிற்
நிறைகவு ணிறைய முக்கிப் பயனில செப்ப லோம்பி
யுரையுல மடக்கு வாரி ஞெப்பெனத் திரிதல் கண்டார்

(மக்கா யாத்திரைப் படலம்: 49)

இனி இதே கருத்துக்களைக் கொண்ட சங்க காலச் செய்யுள் ஒன்றினை எடுத்துக்கொள்வோம்.

கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந்தினை
முந்துவிளை பெருங்குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை யேறி
அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டுதன்
திரையணற் கொடுங்கவுள் நிறைய முக்கி

(நற்றிணை 22:1-5)

இரண்டு பாடல்களிலும் 'கசக்கி' என்னும் பொருளில் 'ஞெமிடி' என்பது வந்துள்ளமையைக் காணலாம். இலங்கையில் சில பகுதிகளில் வாழும் முஸ்லிம்கள் 'சாப்பிட்டு' என்னும் பொருளில் 'முக்கி' என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர் என்பதும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

மற்ருெரு நிகழ்ச்சியைப் பார்ப்போம். வேங்கையோடு சண்டையிட்டது யானை. வேங்கையிலிருந்து தப்பிப் பிழைத்து விட்டது. அங்கும் இங்குமாய் உராய்ஞ்சிக் கொண்டு சென்றது. மூங்கில் காட்டில் பாய்ந்தது. அவற்றை உழக்கியது. அதன் நெற்றி படவே பூக்கள் எல்லாம் நிலைகுலைந்தன. நீரருவி பாயும் சத்தமும் யானையின் முழக்கமும் ஒரே நேரத்தில் கேட்கக் கூடியதாக ஒலித்தன. நீரை மொண்டு யானை அதன் தும்பிக்கையினுல் அங்கும் இங்கும் சிதறியது. நீர் வீழ்ச்சியும் யானையின் தும்பிக்கையினுல் விடப்பட்ட நீர்த்துளிகளும் மழையும் மழையைச் சார்ந்த தூறலும் போன்று காட்சி அளித்தன. இதனையே குலாம் காதிறு நாவலர் தமது ஆரிபுநாயகத்தில் இவ்வாறு பாடி உள்ளார்.

வேங்கையைப் பிழைத்த வேழம்
வெரீஇநெரான் றுரிஞ்சி நிற்கும்
பூங்கழை ஞெரியப் பாய்ந்து
போகுழி யுக்க முத்த
மேங்குநீ ரருவி தாழக்
கல்லலைத் திழிவா யெங்கும்
வாங்கிய துளியி ேேடு
மழையெனச் சொரிதல் கண்டார்

(மக்கா யாத்திரைப் படலம்: 51)

ஒரு முல்லைக் காட்சியை எடுத்துக் கொள்வோம். முல்லை நிலத்தின் இயற்கை அமைப்பு இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இடைச்சியர் ஆபரணம் அணிந்தவர்களாகக் காணப்பட்டனர். பிரகாசம் பொருந்தியவை அவ்வாபரணங்கள். அவ்விடைச்சியர் அவர்களுக்கே உரிய பாணியில் தயிரைக் கடைந்தனர். மத்தை இட்டு மத்தினுல் கடைந்தனர். அவ்வாறு தயிரை மத்தினுல் கடையும் பொழுது ஒரு பேரொலி பிறக்கும். அது புலி முழங்குவது போன்று ஒலிக்கும். அந்தச் சத்தத்தினுல் தொலைவில் உள்ள மான் கூட்டங்கள் அஞ்சின. புலியின் சத்தம் அது எனப் பயந்தன. அஞ்சியமைக்கான மற்ருெரு காரணம் அந்தக்கூட்டத்தில் சிறுமான்கள் இருந்தன. மான்கள் சிறிய தலையையும் பெரிய கண்களையும் உடையனவாய் இருந்தன. ஆங்காங்கே அவை மறைந்து திரிந்தன. இக்கருத்துக்களைக் குலாம் காதிறு நாவலர் தமது ஆரிபு நாயகம் என்னும் காப்பியத்தில் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைத்துப் பாடி உள்ளார்.

பூணுவந் திழைபோ காது புணர்முலே யாய்ச்சி மார்கைந்
நாணுரைந் தொளிறு மத்திற் றயிர்தரு நாலே கேட்டுச்
சேணுகைந் துழுவைத் தென்னச் சிறுதலேப் பெருங்கணம்மான்
மாணுவந் துயிரை யாக்குத் தொறுந்தொறு மறுகல் கண்டார்
(மக்கா யாத்திரைப் படலம்: 54)

சிறிய தலையையும் பெரிய கண்களையுமுடைய மான்களை
சிறுதலே நவ்விப் பெருங்கண் மாப்பிணே (2:21)

எனப் புறநானூறு குறிப்பிடுகின்றது. மதுரை காஞ்சியில் இச்செய்தி,

பெருங்கவின் பெற்ற சிறுதலே நவ்வி
மடக்கட் பிணேயொடு மறுகுவனவுகள் (275—276)

என குறிப்பிடப்பட்டுள்ளது.

தனக்குத் தானே நிகர் என்று விளங்குவது கொன்றை மலர். தனிப்பெரும் சிறப்புடன் திகழ்வது தளவம் மலர். பிரகாசம் பொருந்திய பூக்களைக் கொண்டது காயா. இத்தகைய பூக்கள் நிறைந்து காணப்பட்டன. அங்கே வாழ்ந்த கொடை வள்ளல்கள் சாதாரண தன்மை உடையவர்கள் அல்லர். உள்ள அச்சத்தோடு அக்கொடை வள்ளலை அணுகியவர்களுக்கு பொன்னும், மணியும், முத்தும், நீல மணியும் வழங்கும் தன்மை வாய்ந்தவர்கள் அக்கொடை வள்ளல்கள். வழங்கப்பட்டவர்கள் மனநிறைவு பெற வழங்கினர். ஆண்டகை அப்பால் சென்றார்கள். இதனையே ஒரு செய்யுள் இவ்வாறு கொண்டுள்ளது.

தன்னெடு நிகரின் ருேங்கு கொன்றையுந் தளவுத் தானும்
மின்னெடு விரிகா யாவும் விளங்குறத் துவன்றி நின்று
கொன்னெடு புகுமோ ருள்ளங் குளிரிய வள்ள லாரிற்
பொன்னெடு மணிசேர் முத்து நீலமும் பொழிதல் கண்டார்
(மக்கா யாத்திரைப் படலம் : 59)

அடுத்து ஒரு மருதக் காட்சி. அங்கு தடாகங்கள். பல இருந்தன. நீரே வற்றுதல் அறியாதவை அத்தடாகங்கள். அத்தடாகங்களில் ஒலித்துக் கொண்டிருக்கும் புள்ளினங்களை எப்பொழுதும் காணலாம். அத்தோடு அத்தடாகங்களில் முட்களைக் கொண்ட தண்டுகளை உடைய தாமரை மலர்கள் வெளிச்சம் போன்று மலர்ந்திருந்தன. அன்னப்பறவைகள் அத்தடாகத்தில் இருந்த தாமரை இலைகளில் அமர்ந்திருந்தன. அந்தத் தாமரை இலைகள் கோபம் என்னும்

மதத்தை ஒழுகும் யானையின் காதுகள் போல் காட்சி அளித்தன. யானையின் காதுகள் போன்ற தாமரை இலைகளிலே அன்னங்கள் அமர்ந்திருந்தன. இந்தக் காட்சி பல்வேறு வகையான மணிகளினால் சூழப்பெற்று அன்னமாகிய அரசன் தாமரை இலையிலே வீற்றிருந்த தற்கொப்பாகும். இதனையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு வருணித்துள்ளார்.

புனலற வறிய கில்லாப் புள்ளிமிழ் பொய்கை தோறுங்
கனலன வலரி னேங்கு முள்ளரைக் கமலங் கொண்ட
சினமத மொழுக்கும் யானைச் செவியிலே வைகு மன்னம்
மனவின மணிக ளோம்ப வளைத்திறை யிருத்தல் கண்டார்

(மக்கா யாத்திரைப் படலம் : 77)

தாமரை மலர்களின் ஒளி போன்ற பிரகாசமான தன்மையையும் யானையின் செவி போன்ற தாமரை இலைகளில் அன்னங்கள் வீற்றிருப்பதையும் நற்றிணை நானுறு இவ்வாறு சுட்டுகிறது,

விளக்கின் அன்ன சுடர்விடு தாமரைக்
களிற்றுச்செவி அன்ன பாசடை தயங்க

(310: 1-2)

குறுங்கால்களையும் சிவந்த கண்களையும் கொண்ட எருமைக் கூட்டம் நெல் அறுவடை செய்வோர் பறை கொட்டுவதனல் எழுப்பப் படும் சத்தத்தினுல் அஞ்சினவாய்க் கலைந்து சென்றது. இதற்கிடையில் கொல்லையிலே கட்டப்பட்டிருந்த எருமைக்கன்றுகள் பாலுக்காகக் கரைந்து தாய்ப்பசுவை அழைத்தன. இந்த அழைப்பைக் கேட்ட பசுக்களின் பால்முலைகள் பாலைச் சுரந்தன. அப் பால் வீணுய்ப் போனது. இக்காட்சியையும் கண்டு கொண்டு ஆரிபு ஆண்டகை சென்ருர்கள். அச்செய்யுள் வருமாறு:

நெல்லரி களமர் கொட்டுந் தண்ணுமை ஞெளிரி னஞ்சி
எல்லேயிற் குறுந்தாட் செங்க ணெருமைசே ரினங்க ணீங்கிப்
பல்வயிற் செருத்த லுக்க பாலிழிந் தொழுக நின்று
கொல்லேயில் யாத்த கன்று கரைந்துகூப் பிடுதல் கண்டார்

(மக்கா யாத்திரைப் படலம்: 79)

நற்றிணையிலே அறுவடை செய்வோர் எழுப்பும் பறையொலியினுல் புட்கள் வெருண்டு ஓடின என்பது

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புள் இரிய ...

(350: 1-2)

என வந்துள்ளது.

இனி ஒரு நெய்தல் நிலக் காட்சியைப் பார்ப்போம். நெய்தல் காட்சிகளே வெறும் மாயமாகவே உள்ளன என்பது ஆசிரியரின கருத்து. அழகான மணல் திட்டுகளை வேலியாகக் கொண்டு புன்னை மரங்கள் பூத்து இருந்தன. அதன் அழகு முத்துக்கள் விடும் ஒளியினைப் போன்று இருந்தது. நீர் உள்ள கடற்கரை கழிகளில் இருந்த முள்ளி கள் நீலமணிகள் போன்று காட்சி அளித்தன. அங்கே பூத்துக் குலுங்கிய செருந்தி பொன் போன்று காட்சி அளித்தது. இவ்வாறு எல்லாமே மயக்கமாகக் காட்சி வழங்கின. இதனையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு வருணித்துள்ளார்.

ஏர்கெழு புளின வேலி எக்கரம் புன்னை பூத்து
நேர்கெழு நிலவுக் காலு நித்தில மருட்ட மன்ற
நீர்கெழு கழிவாய் முள்ளி நீலமே மருட்ட மாருத்
தார்கெழு செருந்தி முற்றுந் தமனிய மருட்டல் கண்டார்

(மக்கா யாத்திரைப் படலம்: 84)

நெய்தல் நிலத்தில் காணப்படும் பூக்களே இங்கு குறிப்பிடப் பட்டுள்ளன.

மன்றப் புன்னை மாச்சினை நறுவீ
முன்றில் தாழையொடு கமழும்

(நற்றிணை 49 : 8-9)

என வந்துள்ளமை காணலாம்.

புள்இறை கொண்ட முள்ளுடை நெடுந்தோட்டுத்
தாழை மணந்து ஞாழலொடு கெழீஇப்
படப்பை நின்ற முடத்தாட் புன்னைப்
பொன்நேர் நுண்தாது நோக்கி

(அகநானூறு 180 : 11-14)

என ஏனைய மலர்கள் இங்கே சுட்டப்பட்டுள்ளன. செருந்தியின் பூக்கள் கொத்துக்களிலே பொன் அடர்ந்திருப்பது போன்ற ஒளியை உடையனவாய்க் காட்சி வழங்கியமை பற்றி,

பொன்அடர்ந் தன்ன ஒள்ளிணர்ச் செருந்திப்
பனி மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள்

(280: 1-2)

என அகநானூறு எடுத்துக்காட்டுகின்றது.

இனிப் பாலை நிலத்துக்கு வருவோம். உப்பு நீரைக் கொண்ட கிணறுகள் பல நெய்தல் நிலக் கடற்கரையிலே இருந்தன. அத்தகைய உப்பு நீர்க் கிணறுகள் ஒவ்வொன்றிற்கும் அருகில் வால்களையும் பசுமையான கண்களையும் கொண்ட சிவப்பு நிற நாய்கள் துன்புற்றிருந்தன. அவற்றிற்கு உணவு கிடைக்கவில்லை. அவை அங்கே வீழ்ந்து கிடப்பன போன்று காட்சி அளித்தன. அவற்றின் பால்முலைகள் தோலோடு ஒட்டிக் கொண்டிருந்தன. தசையற்ற தோலாகவே நாய்கள் காட்சி அளித்தன. முன்பு அந்த முலைகள் பாலை நிறையச் சுரக்கும் தன்மையில் இருந்தன. இத்தகைய பாலை நிலக் காட்சியைக் கண்டவர்களாக அகுமது கபீறு றிபாயி ஆண்டவர் மக்கா நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். இக்காட்சியையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு நயம்பட வருணித்துள்ளார்.

கல்லறுத் தியற்றி வைத்த கடம்புகரச் சிறுவா யுண்ணு
வல்லுவர்க் கூவரேறும் வால்வளை பைங்கட் செந்நாய்
அல்லலிற் றீம்பால் விம்முந் தோன்முலை யக்கு வீழ்த்தி
யெல்லதி பசியின் மாழ்கி முடங்கிமற் றிருத்தல் கண்டார்
(மக்கா யாத்திரைப் படலம்: 63)

சங்க காலத் தமிழ் இலக்கியங்களிலே இத்தகைய காட்சிகள் வருணிக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

களிறு நின்று இறந்த நீரல் ஈரத்துப்
பாலவி தோல்முலை அகடு நிலம் சேர்த்திப்
பசிஅட முடங்கிய பைங்கட் செந்நாய்
மாயா வேட்டம் போகிய கணவன்
பொய்யா மரபின் பிணவுநினைந்து இரங்கும்
(103: 4-8)

என நற்றிணையில் வந்துள்ளமை காண்க. இங்கே மருதனிள நாகனார் வேட்டை நோக்குடன் சென்ற ஆண் நாய் வரும் வரை பெண் நாய் வருந்தி இருந்தது என்பதைச் சுட்டி உள்ளார்.

மற்றொரு பாடலில் பாலை நிலத்தில் ஒரு யானைக்கு ஏற்பட்ட அவல நிலை வருணிக்கப்பட்டுள்ளது. யானையின் தோற்றப்பொலிவு குன்றிவிட்டது. அதன் அழகு நீங்கியது. இதன் மதம் அகன்று விட்டது. அது நீர் தேடி அலைந்தது. ஒரு கானலைக் கண்டதும் யானை அங்கு சென்றது, அங்கே நீர் இல்லை என அறிந்ததும் அது வருந்தியது. செய்வது இன்னதென்று அறியாது துதிக்கையைத் தொங்கவிட்டுக் கொண்டு தாகத்தினால் யானை வருந்தியது, தவித்தது.

நீரில்லாமல் தத்தளிக்கும் மரக்கலம் போல் காட்சி அளித்தது. காப்பியத் தலைவர் கண்டதாகப் புலவர் வருணிக்கும் காட்சி இப்பாடலில் அமைந்துள்ளது.

ஏரறு மாமை தீர்ந்த விருமத மற்ற வேழந்
தேரகன் வழியி னோடித் தெண்புன லன்மை காண்டு
வாரமர் பனைக்கை நாற்றி வாயுல ரடைந்து மாழ்கி
நீரறு மம்பி மான நின்றிடு நிலைமை கண்டார்

(மக்கா யாத்திரைப் படலம் : 65)

இத்தகைய ஒரு காட்சி அகநானூற்றிலே அமைந்திருப்பதைக் காணலாம். வெம்மை மிக்கது பாலை வழி. எரி பறக்கும் இயல்பினது அங்கே சென்றது யானை. அதன் பெருமை அனைத்தும் ஒழிந்தது. தளர்ந்து அவ்வழியில் சென்றது. நீருள்ள இடம் எது என அறியாமல் அலைந்தது. பேய்த்தேர் தோன்றும் இடம் எல்லாம் அதனை நீரென நினைத்துச் சென்றது. மயங்கி ஓடியது. நீரற்ற ஆற்றிலே கிடக்கும் ஓடத்தைப் போன்றது அதன் நிலை. வழியிடத்திலே வருந்திச் சோர்ந்து வீழ்ந்து கிடந்தது. அக்காட்சி நினைப்பவரை வருத்தும் தன்மையது. அக்காட்சி இவ்வாறு அகநானூற்றில் அமைந்துள்ளது.

வெம்மை தண்டா எரிஉகு பறந்தலை
கொம்மை வாடிய இயவுள் யானை
நீர் மருங்கு அறியாது, தேர்மருங் கோடி
அறுநீர் அம்பியின் நெறிமுதல் உணங்கும்
உள்ளுநர்ப் பனிக்கும் ஊக்கருங் கடத்திடை

(29 : 15-19)

**உவமை உருவகம் :**

அழகிய மென்மையான கூந்தலை அணிந்திருந்தனர், மதின மாநகரப் பெண்கள். நல்லவர்களான அப்பெண்கள் மதீன மாநகரில் உள்ள மாட மாளிகைகளில் நிறைந்து இருந்தனர். அவர்களுடைய சிலம்பின் ஒலி மிக இனிமையாக இருந்தது. அந்த சிலம்பின் ஒலியுடன் அவர்கள் தம் மென்மையான உரையாடல் இனிமையாக இருந்தது. மதீனமாம் பழைய நகர் தோன்றுவதற்குக் காரணமாயிருந்த முகம்மது நபி (சல்) அவர்களின் மரபினரான அதுமது கபீறுறிபாயி ஆண்டகை அவர்களை மதினா மாநகருக்கு 'எங்கள் நம்பியே, இங்கு வருக வருக' என்று அழைப்பது போல் அந்தப் பெண்கள் ஏற்படுத்திய ஒலி அமைந்திருந்தது. இதனையே குலாம் காதிறு நாவலர் இவ்வாறு பாடியுள்ளார்.

அம்மெலோ தியினர் நல்லார் அணிநிறை மாடந் தோறு
மிம்மெனுந் சிலம்பி ஞேதை யின்குரல் கலந்த நீர்மை
செம்மல ரோவா மூதூர் திருநபி பேரர் நோக்கி
வம்மினே நம்பி யென்று வாய்திறந் தழைத்த போலும்

(மதீனு யாத்திரைப் படலம் : 37)

அங்கே ஒரு பெண்கள் கூட்டம். அவர்களுடைய தலைமயிர் கருமையாக இருந்தது. இருளை வார்ந்து கட்டப்பட்ட குழல் போன்றிருந்தது அத்தலைமயிர். அழகு பொருந்திய வாள் போன்று விளங்கின அவர்களுடைய கண்கள். இனிமையான மதுரம் போன்ற கனியினை ஒப்ப அமைந்தன, அவர்களின் வாய்கள். பொன்னுலான பாவைகள் போன்று காட்சி அளித்தனர் பொன்னிற அழகுடைய அப் பெண்கள். இத்தகைய பெண்கள் ஓராயிரவர் அங்கு கூடி இருந்தனர் என உவமை நயம் மிளிர இவ்வாறு பாடி உள்ளார் குலாம் காதிறு நாவலர்.

இருள்வார்ந் தனைய கருங்குழலு
மெழில்வா ளிழுக்கு மிருவிழியும்
மருள்வார்ந் தெவரு மயரியசெய்
மதுர வமுதங் கனிவாயும்
பொருள்வார்ந் திருந்த பொலம்பாவை
பொருவு மடவா ரொராயிர
ரருள்வார்ந் தனையி னிருப்பாரி
னவையி னரிதோ டடைந்தனரே

(சுல்தான் முகம்மது முரீதான படலம் : 67)

மரத்திலே பழங்கள் இருந்தால் அவற்றை நாடிப் பறவைகள் வரும். பழங்கள் ஒழிந்து விட்டால் அப்பொழுது வரும் பறவைகள் வருந்தும். அத்தகைய பழ மரம் போன்றவர் அல்லர் அகுமது கபீறு றிபாயி ஆண்டகை. அவ்வாண்டகையாம் பழ மரத்தில் எப்பொழுதும் பழங்கள் இருக்கும். இருமையிலும் மக்களைக் காப்பாற்றக் கூடியவர் அவ்வாண்டகை. வருந்துகின்ற மக்களுக்கு எப்பொழுதும் ஆதரவு நல்குபவர் அவர். இம்மை மறுமை இரண்டிலும் காப்பாற்று பவர் அவர். இக்கருத்தினையே ஒரு செய்யுள் இவ்வாறு கொண்டுள்ளது.

ஒரு மரம் பழுத்திருந் தொழிந்த பின்னதின்
வரும்பல பறவையின் வருந்து மாந்தரை
யிருமையுங் காக்கிய வெங்க ளுயகர்
மருகர்பா லின்னது வழங்கி னாரோ

(உம்முல் கருமாத்துப் படலம் : [illegible])

சூரியன் ஆகாயத்திலே சஞ்சரிக்கும். அவ்வாறு சஞ்சரித்த சூரியன் அதன் கிரணங்களை எல்லாம் சுருக்கி ஒடுக்கிவிடும். அப்பொழுது வெளிச்சமே அற்றுப் போய்விடும். மலர்ந்திருந்த தாமரை மலர்களும் ஒடுங்கி விடும். வாடி விடும். அதே போன்று சுல்தான் அகுமது கபீறு றிபாயி ஆண்டகை உயிர் நீக்க அங்கிருந்தோர் அனைவரும் செய்வதின்னதென அறியாதவராய் முகமுழுதும் வாடியவராய்க் காட்சி அளித்தனர். அவர்களுடைய முகமுழுவதும் ஒடுங்கியது. இங்கே ஆரிபுநாயக ஆண்டகைக்குச் சூரியனும் அவர்களுடன் இருந்தவர்களுக்கு தாமரையும் உவமிக்கப் பட்டுள்ளமையைக் காணலாம். இதனையே குலாம் காதிறு நாவலர் ஒரு செய்யுள் மூலம் இவ்வாறு காட்டியுள்ளார்.

காயத் திருந்த பெருங்கிரணங் காணா தொடுக்கி யொருபரிதி
மாயத் திருந்த வவிழிதழ்த்தா மரைக ளொடுங்கும் வாறேபோ
னேயத் திருந்த வெம்பெருமா னீப்ப விருந்தார் முகமுழுது
மோயத் திருந்த வழியின்றி யோராங் காக வொடுங்கினவே

(உபாத்துப் படலம் : 60)

குன்றின் மேலிட்ட தீபம் போன்று விளங்கினான் எனக் கூறும் பொழுது அவனுடைய தோற்றம் எல்லோருக்கும் புலப்பட்டது; அவனுடைய புகழ் எல்லா இடங்களிலும் பரவியது என்று பொருள் கொள்வர். இந்த அடிப்படையில் ஆரிபு ஆண்டகையின் பெயரும் புகழும் ஓங்கியமையைக் குறிக்க மலையின்மீது எழுந்த விளக்குப் போன்றவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளார். நபிமார் அனைவருக்கும் அரசர் எனத் தோன்றிய இறுதி நபி முகம்மது (சல்) அவர்களின் குலத்தில் உதித்தவர் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. தெளிவான அமுது பாற்கடலைக் கடையும் பொழுது அலையின் மீது தோன்றியது. அத்தகைய அமுது போன்றவரே எனப் புகழப்பட்டுள்ளார் ஆரிபு நாயகம் அவர்கள். அரசர்க்கெல்லாம் அரசராக வந்தவர்கள் ஆண்டகையவர்கள். இவற்றை உருவகமாக வைத்து ஒரு பாடலின் முதலிரண்டு அடிகளிலும் ஆரிபு ஆண்டகை இவ்வாறு பாடப்பட்டு உள்ளார்.

மலைமே லெழுந்த கதிர்விளக்கே
மன்னர் நபிதங் குலக்கொழுந்தே
யலைமே லெழுந்த தெள்ளமுதே
யரசர்க்கரசே யடிமையேன்

(சுல்தான் முகம்மது முரீதான படலம் : 69)

சுல்தானுல் ஆரிபீன் அகுமது கபீறு றிபாயி ஆண்டகையின் உபதேசம் பொழியும் பெருமழைக்கு உருவகிக்கப்பட்டுள்ளது. பீடம் எனப் பொருள்படும் மிம்பர் ஏறி உபதேசம் புரிவார்கள். அது பெரு மழையாக இருக்கும். இதனையே ஆசிரியர் இவ்வாறு குறிப்பிட்டு உள்ளார்.

எங்க ணுயகர் மின்பறே பீடமே யிருந்து
பொங்க நல்லுப தேசமா மொருமழை பொழியும்
மங்க ணுஞ்சுவர் மாடமற் றுள்ளன வசைந்து
கங்கு காண்பறக் கசிந்துநீர் ஒழுக்குபு கலுழும்

(சங்கீத விசாரப் படலம் : 5)

இதே கருத்தைக் கொண்ட உருவகத்தை மற்றொரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார்.

இன்ன மாக்கனி டத்தொரு பீடமேற்
சொன்ன மாரி துளிக்குமொர் மாமழை
யென்ன நாத ரிருந்துழி யெல்லவன்
கொன்ன கன்ற குடவரைப் போயினன்

(மகத்துவப் படலம் : 30)

பழுத்துத் தொங்கும் கனிகளை உடைய மரங்களைப் பறவைகள் நாட வருவது பற்றிய செய்தியை உவமையாகப் பல இடங்களில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பல்வேறு திசைகளிலிருந்து பற்பல பேர் சுல்தானுல் ஆரிபீன் அகமது கபீறு றிபாயி ஆண்டகையை நாடி வந்தனர். அவர்கள் அனைவரும் அவர்களுடைய உறவை விரும்பி வந்தனர். அன்பினை நாடி வந்தனர். வரத்தினை வேண்டி வந்தனர். அறிவினைப் பெற வந்தனர். ஆன்மிக உணர்வை அடைய வந்தனர். துறவற வாழ்க்கையை முன்மாதிரியாகக் கொள்ள வந்தனர். இங்ஙனம் மக்கள் ஒவ்வொரு நாளும் வந்துகொண்டிருந்தனர். அவர்கள் அத்தனை பேரும் இனிமையான கனிகளைக் கொண்ட மரத்தைத் தேடி வரும் பறவைகள் போன்று ஆண்டகையிடம் வந்தனர். இக்கருத்துக்களை ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துப்பாடி உள்ளார்.

நறவை யங்கனி பழுநிய நெடுமர ஞடிப்
பறவை புக்கிய லாமெனப் பஃறிசைப் பல்லோர்
உறவை யன்பினை வரத்தினை யறிவினை யுணர்வைத்
துறவை வேண்டுபு வைகலும் வந்தனர் தொகுவார்

(மிகுருசு படலம் : 3)

காப்பிய நாயகரின் வாழ்க்கையை முழுமையாகப் பாடப்படாத சில காப்பியங்களில் அவற்றைப் பதிப்பித்தோர் 'புலவர் பாடிய அளவு முற்றிற்று' என்ற குறிப்பை காப்பியத்தின் இறுதியில் இடம் பெறச் செய்துள்ளனர். அவர்கள் செய்ததன் காரணம் ஒரு வேளை அந்தக் காப்பியங்களில் காப்பிய நாயகர் இலவுலகை விட்டு மறைந்த நிகழ்ச்சி வருணிக்கப்படவில்லை என்பதாய் இருக்கலாம். ஆனல் இத்தகைய குறிப்பு சிலரை பிழையான முடிவுக்கு வரத் தூண்டுகோலாவும் அமைந்துவிடும். திருமணிமாலை என்னும் காப்பியத்தில் இத்தகைய குறிப்பு ஒன்று உள்ளது. இதனை ஆதாரமாகக் காட்டி திருமணி மாலை பூரணத்துவம் பெறவில்லை எனக் கூறிவிட முடியாது. இபுருகீம் நபி (அலை) அவர்களுடைய மறைவு குறிப்பிடப்படாததை இதற்கொரு காரணமாக எடுத்துக் காட்டுவர். அவருடைய மறைவு பற்றிய தகவல்கள் கிடையாமல் போனமை அவ்வாறு விடுபட்டதற்கு ஒரு காரணமாயிருக்கலாம். முகியித்தீன் ஆண்டவர் வரலாறு பற்றிய காப்பியங்கள் பல. ஆனல் அவற்றில் முகியித்தீன் ஆண்டவர் அவர்களின் மறைவு பேசப்படவில்லை. பெருமானர் (சல்) அவர்களின் மறைவு சின்ன சீருவிலும் புதூகுஷ்ஷாமிலும் விவரிக்கப்பட்டுள்ளன. வரலாற்றுக்குட்பட்டவர் அவர்கள் ஆனமையினலும் இஸ்லாமிய பு றைமை மாற்றப்பட்டு இஸ்லாமிய விதிமுறைகள் பின்பற்றப்பட்ட மையினலும் பெருமானரின் மறைவும் நல்லடக்கமும் உரிய முறையில் விவரிக்கப்பட்டுள்ளன.

அகுமது கபீறு றிபாயி ஆண்டகையின் மறைவு உபாத்துப்படலத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. அதனைப் பற்றிக் கூறும்பொழுது பல உண்மைகளையும் எடுத்துக் காட்ட ஆசிரியர் தவறவில்லை. மரணம் என்பதைப் போன்று நிச்சயம் வருவதொன்று பிறிதில்லை என உறுதியாகக்கூறலாம். இக்கூற்றினை வலியுறுத்திக் குலாம் காதிறு நாவலர் இயற்கையில் நிகழும் சில சம்பவங்களை எடுந்துக் காட்டி உள்ளார்.

சிலர் வானைக் கிழித்துக் கொண்டு மேலே செல்வர். மற்றுஞ் சிலர் மண்ணைக் கிழிந்துக் கொண்டு கீழே செல்வர். வேறு சிலர் தமது தசையைக் கிழித்து எறிவர். இன்னுஞ் சிலர் உடலை விட்டு விட்டு உலவி வரும் ஆற்றலைப் பெற்றிருப்பர். இத்தகையோர் அனைவருக்கும் உடல் உண்டு. மீனைக் கிழித்து வெட்டி அதன் தசையை எடுப்பர். அதுபோன்ற தன்மை உடையதே இந்த உடல். அத்தகைய உடலை விட்டுச் செல்ல வேண்டிய காலமும் சந்தர்ப்பச் சூழ்நிலையும் ஏற்பட்டால், அதனை அப்படியே விட்டு உயிர் பிரிந்து செல்ல வேண்டிய இடத்துக்குச் செல்லுதல் கடனும். இக்கருத்துக்களையே ஒரு பாடலில் ஆசிரியர் இவ்வாறு அமைத்துள்ளார்.

வான்கிழித் தேறு மோரு மண்கிழிந் திழியு மோரு
மூன்கிழித் தெறியு மோரு முடல்விடுத் துலவு மோரும்
மீன்கிழித் தேகு நீரின் விளங்கிய பிளவின் யாக்கை
தான்கழித் தேகு ஞாங்கர்ச் சார்குதல் கடன தாமே

(உபாத்துப் படலம்: 35)

இங்கே மோரும் என்பது நான்கு முறை பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

ஒழுங்காக அமைக்கப்பட்டவை சீர் குலைந்துவிடும். பிரகாசமாக இருந்தவை இருண்டுவிடும். ஆகாயத்திலே பறந்து செல்வன கீழே விழுந்துவிடும். கண்ணுக்குப் புலப்பட்டவை காலப்போக்கிலே மறைந்து விடும். ஒரு பொருள் ஒரு காலத்து மிகுதியாக இருக்கும். பின்னர் அது குறைந்துவிடும். நிலையாய் நின்றவை நிலத்தில் கிடக்கும் தன்மையைப் பெற்றுவிடும். இங்ஙனம் ஒவ்வொன்றுக்கும் நேர் மாற்றமானவை இவ்வுலகில் நிகழ்ந்து கொண்டிருக்கும்பொழுது பிறந்தன அத்தனையும் இறந்துவிடும் என்று கூறுவதைப் பற்றிப் பேசவும் வேண்டுமா? உண்மையிலேயே பிறந்தன அத்தனையும் இறந்து விடுவது திண்ணமே.

'பூமியிலுள்ள யாவும் அழிந்தே போகும்'

(அல்குர் ஆன் : 55 : 26)

என அல்குர்ஆன் பறை சாற்றிக் கொண்டிருக்கிறது. பிறந்தவர் இறப்பர் என்ற கொள்கையை நிலைநாட்ட முற்பட்ட ஆசிரியர் அக்கருத்துக்களை ஒரு செய்யுளில் இவ்வாறு இடம்பெறச் செய்து உள்ளார்.

சிறந்தன குலையுஞ் சோதி செய்தன விருளும் விண்ணிற்
பறந்தன விழியுங் காணப் பட்டன மறையு மொன்றி
னிறந்தன மழுங்கு நாளு நின்றன கிடக்கு மென்றாற்
பிறந்தன விறக்கு மென்று பேசவும் வேண்டுங் கொல்லோ

(உபாத்துப் படலம்: 37)

மனைவி, மக்கள், உற்ருர், உறவினர், வீடு, சொத்து, சொம், செல்வம், முதலிய எல்லாமே அழிந்து விடும். தாம் அருமையெனக் கருதி உவப்புடன் சேர்த்து வைத்த உயர்ந்த தரத்தனவான பொருள் களும் அழிந்து போம். அவற்றுள் சில எப்பொழுது மறைந்தன என்று சொல்லக்கூட முடியாத விதத்தில் இல்லாமற் போய்விடும். இத்தகைய ஏமாற்றத்தையே தரும் வாழ் நாட்களை எவ்வாறு வருணிக்கலாம் என்னும் ஒரு கேள்வியை எழுப்பி உள்ளார் ஆசிரியர். அதனை எவ் வாறு கூறலாம் என்று சிந்தித்துள்ளார். அதனை இவ்வாறு விவரிக்க லாம் என்று ஒரு முடிவிற்கு வந்துள்ளார். வாழ்க்கையை நீர்க்குமிழி என்று சொல்லட்டுமா? நீரிற்குமிழி தோன்றும் மறையும் அல்லது ஆகா யத்தில் தோன்றும் மின்னல் என வாழ்க்கையைக் குறிப்பிடட்டுமா? தோன்றி உடன் மறையும் தரத்தது மின்னல். இரண்டும் பொருத்த மாயிருக்கின்றன. ஆனுல் எது மிகப் பொருத்தம் என்னும் ஐயப்பாடு ஆசிரியருக்கு ஏற்படுகிறது. அந்த ஐயப்பாட்டை வைத்து குலாம் காதிறு நாவலர், தமது காப்பியமாம் ஆரிபு நாயகத்தில் இவ்வாறு ஒரு செய்யுளை யாத்துள்ளார்.

மக்களு மனையு மாரு மனையுமா நிதியுங் கூண்ட
வொக்கலு முவந்து சேர்த்த வுயர்தரப் பொருளு நீத்த
வெக்கண மென்றுங் காணு ரேய்ந்தன ரிருக்கும் வாணுண்
மிக்கவாங் குமிழி கொல்லோ மின்கொலோ வென்னென் பேனே
(உபாத்துப் படலம்: 38)

எல்லாம் அல்லாஹ்வின் நாட்டப்படியே நடக்கும். இறந்து போனவற்றை எழச் செய்கிருன். எழுந்திருக்கின்றவற்றை இறக்கச் செய்கிருன். அவனது நாட்டப்படியே மேலே பறந்து போவன கீழே விழும். கீழே விழுவன மேலே பறந்து போகும். சிறப்பாய் இருந்தவை சிறப்புக் குறைந்து குலைந்து விடும். குலைந்து போனவை சிறப்பு மிக்குத் திகழும். எனவே எல்லாவற்றினுக்கும் பொறுப்பானவனுய் எல்லாவற்றையும் ஓர் ஒழுங்குமுறையில் இயக்கிக் கொண்டிருப்பவன் எல்லாம் வல்ல அல்லாஹ்வே யாவான். இக்கருத்துக்களையே அகுமது கபீறு றிபாயி ஆண்டகையின் மறைவைக் குறிப்பிட முற்பட்ட குலாம் காதிறு நாவலர் இவ்வாறு ஒரு செய்யுளில் அமைத்துப் பாடி உள்ளார்.

இறந்து போயின வெழுமெழுந் திருந்தன விறக்கும்
பறந்து போயின கீழ்விழும் விழுந்தன பறக்குஞ்
சிறந்து போயின குலையுமாற் குலைந்தன சிறக்குந்
துறந்து போயினு ஞமவ ஞணையிற் றுளும்பி
(உபாத்துப் படலம்: 45)

அல்லாஹ்வின் பேராற்றலினாலே 'ஆகுக' என்று சொல்லி எல்லாவற்றையும் அவன் படைத்தான்; படைக்கிறான்; படைப்பான். அல்குர் ஆனிலே நான்கு இடங்களில் இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும் உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும் வெளிப்படுத்துபவன் அல்லாஹ்வே என்பது வலியுறுத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.

',உயிரற்றதிலிருந்து உயிருள்ளதை
வெளியாக்குவதும் நீயே! உயிருள்ளதி
லிருந்து உயிரற்றதை வெளியாக்குவதும்
நீயே''

(அல்குர் ஆன்: 3:27)

''இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றை அவன்
வெளிப்படுத்துகிறான்; உயிருள்ளவற்றிலிருந்து
இறந்தவற்றையும் அவனே வெளிப்படுத்துகின்றான்''
(இவ்வாறு செய்கின்ற) அவன்தான் உங்கள்
அல்லாஹ்...''

(அல்குர் ஆன்: 6:95)

''இறந்தவற்றிலிருந்து உயிருள்ளவற்றையும்
உயிருள்ளவற்றிலிருந்து இறந்தவற்றையும்
வெளிப்படுத்துபவன் யார்...என்று கேட்பீராக
அதற்கவர்கள் அல்லாஹ்தான் என்று கூறுவார்கள்''

(அல்குர் ஆன்: 10:31)

''அவனே இறந்தவைகளிலிருந்து உயிருள்ளவைகளை
வெளிப்படுத்துகிறான்: அவனே உயிருள்ளவைகளிலிருந்து
மரித்தவைகளை வெளிப்படுத்துகின்றான்''

(அல்குர் ஆன்: 30:19)

ஓசை நயம்

இயல்பாகவே குலாம் காதிறு நாவலர் தம் சொல்லாட்சி ஓசை நடை சிறப்ப அமைவதொன்றாகும். சங்க காலத் தமிழ் இலக்கியங்களில் மேற்கொள்ளப்பட்ட சொற்களையே அவர் பெரும்பாலும் தமது காப்பியங்களில் பயன்படுத்துவதனால் அவருக்கு இந்நடை கைவந்த தொன்றாகத் திகழ்கின்றது. பொதுவாகத் தமிழில் காப்பியங்கள் இயற்றிய முஸ்லிம் புலவர் தமது கடவுள் வாழ்த்துப் படலத்தில் நான்காம் கலீபாவாகிய அலீ (றலி) அவர்களைப் புகழ்ந்து பாடும்பொழுது, அவர்களைப் பற்றிய செய்யுளை ஓசை நயம் மிக்கதொன்றாகவே அமைத்துப் பாடுவர். அத்தகைய பாடல் அலி (றலி) அவர்களின்

வீரம் பொருந்திய சிறப்பாற்றலை எடுத்துக் கூறுவதாகவே அமைந்திருக்கும். டகர எழுத்துக்களைக் கொண்ட சொற்களை அதிகமாகப் பயன்படுத்துவதனுல் பாடல்களில் ஓசை நயம் சிறப்பாக அமைவதைக் காணலாம். குலாம் காதிறு நாவலரும் தமது ஆரிபு நாயகம் என்னும் காப்பியத்தில் அலி (றலி) அவர்களைப் புகழ்ந்து பாடிய கடவுள் வாழ்த்துப் பாடலில் இவ்வாறு பாடியுள்ளார்.

கடிவிட வரவுட னெரிபட விடுமத
கரியுட லுதறிடவே
படிக்க ணெடுதிகை கிடுகிடு வெனவெதிர்
பகையவர் பொடிபடவே
கொடிகுடை முடியடி தலையுட லிவைகுவை
குவைகொடு குவிதரவே
யிடியொடு பொரநட மிடுகுர கதரலி
யெழிலடி முடிபுனைவாம்

(கடவுள் வாழ்த்து: 10)

இச்செய்யுளில் டகரத்தைப் பயன்படுத்தி அதன் கண் ஓசை நயத்தைப் பெற்றுள்ளார் ஆசிரியர். இவ்வாறு டகரங்களை அதன் பல்வேறு உருவங்களில் பயன்படுத்தும் பொழுது ஓர் ஒழுங்குமுறையைப் பின்பற்றியிருப்பது புலனுகின்றது. இச்செய்யுளில் உள்ள ஒவ்வோர் அடியிலும் அறுசீர்கள் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு சீரிலும் டகரம் வர வழி பார்த்துக் கொண்டுள்ளார் ஆசிரியர். ஓர் அடியில் ஒரு சீரில் டகரம் அமையவில்லை. அதற்கு ஈடு செய்யும் முகமாக அதற்கடுத்துள்ள சீரில் இரண்டு டகரங்களை அமைத்துள்ளார். இங்ஙனம் பார்க்கும் பொழுது முதலாம் அடியில் உள்ள அறுசீர்களில் ஏழுமுறைகளும் டகரம் அமைத்து ஓசைநயம் சிறக்கச் செய்யுள் இயற்றி உள்ளார் குலாம் காதிறு நாவலர்.

மற்ருெரு செய்யுளில் த, க, எழுத்தின் பல்வேறு உருவங்களைப் பயன்படுத்தி ஆசிரியர் ஓசை நயத்தை அமைத்துள்ளார். அபூபக்கர் (றலி) அவர்களைப் புகழும் முகமாகப் பாடப்பட்டுள்ள அச்செய்யுள் இவ்வாறு ஓசை நயம் ததும்ப அமைந்துள்ளது.

ஆதித்த னுகத்தி னுர்வித்த நாமத்தி னுரற்பி னுகத்தினுர்
சேதித்த காதத்தை யேயுற்ற நீதத்த சீதத்த யாளத்தினுர்
சாதித்த பேர்கட்கு ளேமிக்க பேர்பெற்ற தாமத்த ரேமத்தினுர்
போதித்த பூபக்கர் பாதத்தை யேநித்த போகத்தி ரேகிப்பமே

(கடவுள் வாழ்த்து: 7)

வேறொரு செய்யுளை எடுத்துக்கொள்வோம். இச்செய்யுளில் உள்ள நாலடிகள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு சொல்லை இவ்விரண்டு கருத்துக்களில் நயம் பெற அமைத்துப் பாடியுள்ளார். இது தான் அந்தச்செய்யுள்:

மலையெ லாமிவர் குணக்கென்று நாணத் துமலைய
நிலையெ லாமொரு பரநிலை யேயென நிலைய
வலையெ லாமிவர் பொறைக்கென வவ்வழி யலையக்
கலையெ லாநிறை மதியி னுயினர் பகை கலைய

(கல்வி கற்ற படலம்: 27)

அல்லாவைப் புகழ்ந்து குறை இறங்கிப் பாடும் பொழுது 'நாயக' என அவனை வியந்து அச்சொல்லைப் பலதடவை ஒரு செய்யுளில் இடம் பெறச் செய்து ஓசை நயம் இடம் பெறச் செய்துள்ளார் ஆசிரியர் இவ்வாறு:

ஆதி நாயக அன்புடை நாயக
சோதி நாயக தூய்க்குண நாயக
நீதி நாயக நேர்வழி காட்டும
னுதி நாயக நீநனி கேட்டியால்

(மக்கா யாத்திரைப் படலம்: 30)

இன்னொரு செய்யுளில் ஓசை நயம் இவ்வாறு அமைந்துள்ளமை யைக் காணலாம்.

உண்ணுழி உடுத்துழி உறங்கும் உள்வுழிப்
பண்ணுழி வணக்கமும் பலவும் இன்புறப்
பொண்ணுழிப் புணர்வுழிப் பிரியும் யாக்கையென்
றெண்ணுழி முடிபையே யேற்று நிற்பரால்

(தவசியற் படலம் : 6)

ஒரே சொல்லைப் பலமுறை பயன்படுத்தி ஒரு செய்யுளில் இவ்வாறு ஓசை நயம் அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

ஒருத்தனை யுவக்கு நீர்மை யுதுநிறை வேற்று நீர்மை
பொருத்தனை யுடைய நீர்மை பொருவழி நிற்கு நீர்மை
கருத்தனைக் காணு நீர்மை கண்டன வழிக்கு நீர்மை
திருத்தனை நிறுவு நீர்மைத் திறனெலா முணர்த்தி னாரால்

(உபாத்துப் படலம் : 24)

வஞ்சி விருத்தத்தில் இவ்வாறு ஓசை நயம் தோன்றப் பாடி உள்ளார் ஆசிரியர்.

ஆற்ற லுற்ற வனன்பஃ
தூற்ற முற்ற வுளத்திடை
யேற்ற முற்ற விலக்கொடுந்
தோற்ற முற்றது தோயவே

(தாதி முத்தி பெற்ற படலம்: 13)

மற்றொரு பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

ஓங்கி னுணர் வுள்ளன
நீங்கி னொரு நேர்நிலை
தாங்கி னுயர் தாதிமா
வாங்கி னல மன்னவே

(தாதி முத்தி பெற்ற படலம் : 16)

இன்னொரு பாடலில் டகரமும் தகரமும் இடம்பெற்று இவ்வாறு அப்பாடல் ஓசை நயத்தைத் தந்துள்ளது.

ஆட்ட கத்தினொடு மன்ன விருக்கின்
காட்ட கத்துள கடும்பொழி லுள்ளே
யோட்ட கத்துமதி லுள்ளது கொள்ளா
வீட்ட கத்தொடு மிடிந்து விழுந்தே

(நீர் மயப் படலம் : 10)

சொல்லாட்சி

சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்றல் மிக்கவர் குலாம் காதிறு நாவலர். அத்தகைய பல சந்தர்ப்பங்களை அவருடைய இரண்டாவது காப்பியமான ஆரிபு நாயகத்தில் காணலாம்.

ஆரிபு நாயகமாம் அகுமது கபீறு றிபாயி ஆண்டகை கண் பேரன்றவர், அருமையானவர் என்பதை விளக்குமுகமாக

அக்க மேயநம் மாரிபு நாயகம்

(அகுமதுயிர்த்த படலம்: 2)

என அவரைப் புகழ்ந்து பாடியுள்ளார். அக்கம் என்பது கண் என்பதனைக் குறிக்க இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது.

அக்கட என்பது அவ்விடம். குலாம் காதிறு நாவலர் அவ்விடம் என்பதை அக்கடை என ஒரு செய்யுளில் இவ்வாறு சுட்டி உள்ளார்.

அக்கடை ஞாங்கரு மமைந்த வண்டரா

(மிகுருசு படலம்: 54)

அக்கரம் என்பது எழுத்து. இந்த சொல்லைக் குலாம் காதிறு நாவலர் அக்கு சாரியையும் சேர்த்து அக்கரக்கு என ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார்.

அக்க ரக்கென விதித்தவு முந்நிலை யனவும்

(கல்வி கற்ற படலம்: 10)

அத்தி என்பது கடல். அஷ்டபிரபந்தத்தில் இடம்பெற்றுள்ள திருவேங்கடத்தந்தாதியில் (33) இச்சொல் இதே கருத்தில் அமைந்துள்ளது. இக்காப்பியத்தில் கொடை நாயகருள் ஒருவரான முகம்மது காசிம் என்பவர் அத்தறோத்து என்னும் தீவில் வாழ்ந்து வந்தவர். அந்தத் தீவைக் கடலில் உள்ள ஒரு தீவு எனச் சுட்டவே அத்தி என்னும் சொல்லை ஆசிரியர் இவ்வாறு ஆண்டுள்ளார்.

அத்தியிற் கிடந்த வையத் தகழ்புக ழந்தரேத்தின்

(சுல்தான் முகம்மது முறீதான படலம்: 51)

கிடந்து என்பது பெயர்ந்து எனப் பொருள்படும். இச்சொல்லை இதே கருத்தில் புறப்பொருள் வெண்பாமாலை

எயிற்றுப் படையா விடந்து (6 : 13)

எனப் பயன்படுத்தி உள்ளமையைக் காணலாம். குலாம் காதிறு நாவலரும் தமது ஆரிபு நாயகம் என்னும் காப்பியத்தில்

இடந்து வேறுளங் கருதிடா தவ்வயி னிருந்து

(காட்சிப் படலம்: 43)

என இடந்து என்னும் சொல்லைப் பெயர்ந்து எனப் பொருள்தரும் விதமாக ஆண்டுள்ளார்.

ஈண்டை என்றால் இங்கு என்பது பொருள். நாலடியாரில்

ஈண்டை வலையகத்துச் செம்மாப்பார் (331)

என இங்கு என்பதைக் குறிப்பிட ஈண்டை என்றும் சொல்லைப் பயன் படுத்தப்பட்டுள்ளது. இதே சொல்லே இதே கருத்தில் குலாம் காதிறு நாவலர்.

ஈண்டை யாண்டகை யின்னணங் கூறிடுமேல்வை

(அகுமதுயிர்த்த படலம்: 68

என மேற்கொண்டுள்ளார்.

ஈனுவந்தி என்பது ஒரு சொற்றொடர். அங்கே ஈனு என்பது பிள்ளைப் பெருத என்னும் பொருளைத் தரும். மலடியைக் குறிக்கும் வந்தியை என்னும் சொல் இங்கே வந்தி என வந்துள்ளது. எனவே பிள்ளைப் பெருத மலடி என்பதைச் சுட்டவே இச்சொற்றொடர் இல் வாறு உபயோகிக்கப்பட்டுள்ளது. மலடி ஒரு பிள்ளை பெற்ருள் என் பதைக்கூற முற்பட்ட புலவர் மலடி என்று சொல்லாமல் ஈனுவந்தி எனக் குறிப்பிட்டுள்ளார். இச்சொற்றொடர் ஒரு செய்யுளில் இவ்வாறு அமைந்துள்ளது.

ஈனு வந்தி யினியமக
வீன்று களிப்பா னிரங்குமுளக்
கோனு நிலேயி னுலகாளுங்
குத்பு லக்தா பிறையுவகை

(குத்பு நாயகர் வாய்மொழிப் படலம்: 25)

உக்குதல் என்ருல் மக்கிப் போதல் என்பது பொருள். மக்கிப் போகாத என்னும் கருத்தில் உக்கா என்பதை ஆசிரியர்

உக்கா நறவொண் டுளியா மணமு
மிக்கா கவிளங் கியமுல் லேயெலாம்

(சுவர்க்கம் விற்ற படலம்: 42)

என உபயோகித்துள்ளார்.

தமிழ் மரபுக்குரியவை ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் மணி மேகலையில்

ஐம்பெருங்குழுவும் எண்பே ராயமும் (1:17)

என இவ்விரண்டு குழுவினரும் சுட்டப்பட்டுள்ளனர். இவ்விரு குழுவி னரையும் பற்றிய குறிப்பு சிலப்பதிகாரத்திலும் (5:157) பெருங்காதை யிலும் (2:566) வந்துள்ளமை காண்க. அக்காலத் தமிழ்நாட்டு அரசி யலுக்கு இன்றியமையாதவரான ஐவகை அரசியல் தலைவர்களை

ஐம்பெருங்குழு என்பது சுட்டுகின்றது. ஐம்பெருங்குழுவைச் சார்ந்தோர் மந்திரியர், புரோகிதர், சேனுதிபதியர், தூதர் சாரணர் ஆகியோராவர். எண்பே ராயம் என்பதனை எண்பெருந்துணைவர் எனவும் சுட்டப்படும். எண்பேராயத்தைச் சார்ந்தோர் கரணத்தியலவர், கரும விதிகள், கனகச் சுற்றம், கடை காப்பாளர், நகர மாந்தர், படைத் தலைவர், யானை வீரர், இவுளி மறவர் என்போராவர். சுல்தான் முகம்மது றூமி என்பவர் புறப்பட்டுச் செல்லும் போது ஐம்பெருங்குழுவினரையும் எண்பேராயத்தினரையும் அழைத்துச் சென்ருர் என்பதைக் குறிக்கவே குலாம் காதிறு நாவலர்.

ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமு மருங்கு சூழ்ந்து
பைம்பொலம் பூணி ஞெள்வார் பல்படை மின்னுக் கால

(சுல்தான் முகம்மது முரீதான படலம்: 30

எனப் பாடியுள்ளார். சுற்றம் முதலிய அனைவரும் சூழப் புறப்பட்டார் சுல்தான் என்பதைக் குறிக்கவே இவ்வாறு ஆசிரியர் செய்யுள் அமைத்துத் தந்துள்ளார்.

எருக்கி என்பது வெட்டி எனப் பொருள்படும். முல்லைப் பாட்டிலும் வெட்டி என்னும் பொருளில் எருக்கி என்னும் சொல்

பைம்பூத லெருக்கி (25)

எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது. குலாம் காதிறு நாவலர்

கன்னி வாழை யெருக்கியென

(ஜிஞ விலக்கிய படலம்: 24)

என எருக்கி என்னும் சொல்லை வெட்டி என்னும் பொருளில் பயன் படுத்தி உள்ளார்.

ஏ என்பது பெருக்கம் என்பதனை உணர்ந்துகின்றது. ஏ பெற்ருகும்' என்று கூறுகிறது தொல்காப்பியம் சொல்லதிகாரம் (302). பெருக்கமாம் தவம் என்பதனைக் குறிப்பிடக் குலாம் காதிறு நாவலர் 'ஏ தவம்' என்னுப் சொற்ருெடரை இவ்வாறு ஒரு செய்யுளில் பயன் படுத்தி உள்ளார்.

ஏதவத் தன்மை யாவு மொருவிய விறந்துதூய

(காட்சிப் படலம்: 4)

ஏ என்பதன் மற்ருெரு பொருள் மேனேக்குகை என்பதாகும். சீவகசிந்தாமணியில் ஏ என்பது இதே பொருளில்

கார்நினைந் தேத்தரு மயிற்குழாம் (87)

என வந்துள்ளது.

ஆரிபு நாயகத்தில் இதே சொல் இதே பொருளில்

ஏவரும் வீடு பேற்றி னெய்திய வினிதிற் செய்யும்

(பார்வையான் முத்தியளித்த படலம்: 13)

என அமைந்துள்ளது.

ஏக்கறும் என்பது விரும்பும் என பொருள்படும். சிறுபாணாற்றுப்படை

மதியேக்கறூ உ மாசறு திருமுத்து (157)

எனக் கூறுகிறது. ஆரிபு நாயகத்தில் விரும்பும் என்னும் பொருளில் ஏக்கறும் என்னும் சொல்

ஏக்கறு மந்தரேத் தென்னு மாநகர்

(உம்முல் கருமாத்துப் படலம்: 62)

எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஏண் என்பதனைத் திண்மை என்பதைக் குறிக்கப் பயன்படுத்துவர். ''நெஞ்சத் தேணிகந்து'' (770) என்கின்றது சீவகசிந்தாமணி. ஏண் என்பதைத் திண்மை என்னும் பொருளைச் சுட்டக் குலாம் காதிறு நாவலர்,

ஏணிடை யாது காக்குந் தேவரீ ரிகந்து மிக்காம்

(மதீனு யாத்திரைப் படலம்: 48)

எனப் பயன்படுத்தி உள்ளார்.

ஏல் என்னும் சொல்லுக்கு அன்பு கூர்தல் என்பது பொருள். அன்பான குணத்தை உடையவர் என்பதைக் குறிக்க ஏல் என்னும் சொல்

ஏல்கு ணத்திது ரீசு விளித்துநீர்

(அகுமதுயிர்த்த படலம்: 18)

என ஆளப்பட்டுள்ளது. மலக்கல் மவுத் என்பது உயிரைக் கவரும் வானவரை குறிப்பிடப் பயன்படுத்தப்படும் ஒரு சொல். அவ்வானவர் இஸ்ரூயீல் என்றும் வழங்கப்படுவார். ஒவ்வொரு மனிதனும் செய்த நன்மை தீமைக்கு இணங்க வெவ்வேறு முகத் தோற்றங்களுடன் மனிதனின் உயிரைக் கவருவர் அவ்வானவர். அன்பு கூர்ந்த முகத்துடன் அந்த வானவர் விளங்கினர் என்பதைக் குறிக்க ஏல் என்னும் சொல்லை அடைமொழியாகப் பயன்படுத்தி இவ்வாறு பாடி உள்ளார் ஆசிரியர்.

ஏலி ரும்மலக் கல்மவுத் தெனுமுய ரிசுரு

யீலி னின்முகம் விழித்தனர் நாயக ரினியென்

(அகுமதுயிர்த்த படலம்: 49)

ஏர் என்பது கலப்பை. ஏரினைப் பயன்படுத்தி உழுது பெறப்படும் உணவை ஏரை எனக் குறிப்பிட்டுள்ளார் குலாம் காதிறு நாவலர். அவர் இச்சொல்லை இவ்வாறு ஆண்டுள்ளார்.

ஏரை யுண்டுமற் றவுமற வாதிவ ணிருமின்

(உபாத்துப் படலம்: 53)

ஒஞ்சுதல் என்பது நாணுதலைக் குறிக்கும். எனவே ஒஞ்சிய என்பது நாணிய என வரும்.

ஒஞ்சிய நிலைகெட வோது வார்களால்

(கெறுவிகளைசப் படலம்: 10)

என இச்சொல் இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

கவான் என்பது துடையைக் குறிக்கும். மணிமேகலையில் துடை யின் மேல் எனப் பொருள்படக் கவான் என்னும் சொல்.

கழுமிய வுவகையிற் கவாற் கொண்டிருந்து

(பதிகம் 27)

என உபயோகிக்கப்பட்டுள்ளது. ஆரிபு நாயகத்திலும் அதன் ஆசிரியர் வாழையை வெட்டி எடுத்தாற் போன்ற துடை என்பதைக் குறிக்க

கன்னி வாழை யெருக்கியெனக்
கவாளு பரணங் கவப்பட்டு

(சிறைவிலக்கிய படலம்: 24)

எனக் கவான் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளமையைக் காணலாம்.

கான் என்பது வாசனை எனப் பொருள்படும். மதுரைக்காஞ்சியில் 'கான் பொழில்' (337) என வாசனை பொருந்திய பூஞ்சோலை வருணிக்கப்பட்டுள்ளது. வாசனை மிகுந்த புயத்தினர் என்பதைக் குறிக்கக் குலாம் காதிறு நாவலர்.

கானே யேறின புயத்தினர் வாலுளைக் கலின

(யாட்டினமுயிர்த்த படலம்: 30)

எனக் கான் என்னும் சொல்லை இவ்வாறு பயன்படுத்தி உள்ளார்.

கீனம் என்பது க்ஷீணம் என்பது மருவி வந்த சொல்லாயிருக்கலாம். தேய்பிறையைச் க்ஷீணசந்திரன் என்று வழங்குவர். எனவே, கீனம் என்னும் சொல்லும் தேய்பிறையாக மாறும் சந்திரனைக் குறிக்கப்பயன்படுத்தப்பட்ட ஒரு சொல்லாயிருக்கலாம். கீனத்தின் ஒளியைப் பற்றித்தான் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். செய்யுளில் இவ்வாறு அச்சொல் ஆளப்பட்டுள்ளது.

கீனத்தி னொளிதான் மூழ்கக்
கிரகணித் திட்ட காலை
(முரீதீன் மகத்துவப் படலம்: 39)

இங்கே கிரகணப் பாதிப்பைச் சுட்டவே 'கிரகணி' என்னும் சொல்லும் மேற்கொள்ளப்பட்டிருக்கலாம்.

கூர்த்த என்பது மிகுந்த எனப் பொருள் கொள்ளும். 'கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்' எனக் கூறும் தொல்காப்பியம் சொல்லதிகாரம் (314). அருளின் மிகுதியைக் கூறவே 'கூர்த்த வருளின்' எனக் குலாம் காதிறு நாவலர் அச்சொல்லை இவ்வாறு ஒரு செய்யுளில் பயன்படுத்தி உள்ளார்.

கூர்த்த வருளி னுயர்ந்தவிழி
கொண்டு பெருமா னொருகாலை
(சுல்தான் முகம்மது முரீதான படலம்: 71)

நுகைபட்டு என்பதை இளகி எனக் கூறலாம். இக்கருத்துச் சிறக்கவே ஒரு செய்யுளில்

நூல்பட்ட சிந்தை யொன்றை
நுகைபட்டு நோக்கா வாற்றில்
(சாதனைப் படலம்: 6)

நுகை என்னும் சொல்லைக் குலாம் காதிறு நாவலர் ஆண்டிருப்பதைக் காணலாம்.

பிறக்கு என்பது வாழ்வு எனப்படும். இக்காப்பிய ஆசிரியர் இச்சொல்லை இதே கருத்தில்

பிறக்கவ ரபுல்பறக் காத்துப் பேறுடை
(அபுல் பறக்காத் துயிர்த்த படலம் : 42)

என இங்ஙனம் பயன்படுத்தி உள்ளார்.

பெட்டது என்பது விரும்பியது என்னும் பொருளில் ஆரிபுநாயகச் செய்யுளொன்றில்

பெட்டது துறக்க மீந்து பெற்றதாம் பெருமிதத்தின்
(சுவர்க்கம் விற்ற படலம் : 127)

என வந்துள்ளது.

பொச்சை என்னும் சொல் காடு எனப்பொருள் கொள்ளும். இத்தகைய சொல்லாட்சி இங்ஙனம் ஒருசெய்யுளில் இடம்பெற்றுள்ளது.

பொச்சை மேயினர் போந்துநீ
(எரிந்துயிர்த்த படலம் : 6)

மஞ்சு என்னும் சொல் பல பொருள்களை உடையது. வலிமை எனப் பொருள்பட மஞ்சு என்னும் சொல்லை,

மஞ்சொன்றொலி நயினரொடு மருவாவரு முரியார்
(யாட்டினமுயிர்த்த படலம்: 13)

எனக் குலாம் காதிறு நாவலர் பயன்படுத்தி உள்ளார்.

'மஞ்சரங்கிய மார்பிலும்'
(இராவணன் வதைப் படலம்: 168)

என 'மஞ்சு என்னும் சொல்லை வலிமையைக் குறிக்கக் கம்பரும் ஆண்டுள்ளார். வெண்மேகம் என்னும் பொருளிலும் மஞ்சு என்னும் சொல் இலக்கியத்தில் பயன்படுத்தப்படுகிறது.

மஞ்சென நின்றுலவும் (2853)

என்கின்றது சீவகசிந்தாமணி. ஆரிபு நாயகத்தில் உள்ள ஒரு செய்யுளில் மஞ்சு என்னும் சொல் மேகத்தைக் குறிக்க

மஞ்சு சேருயர் மாட மடைந்தெழில்
(அகுமதுயிர்த்த படலம்: 8)

என இவ்வாறு பயன்படுத்தப்பட்டுள்ளது.

மான்ரூர் என்போர் புத்திமயங்கினவர் எனப்படுவர். குலாம் காதிறு நாவலர் இதே சொல்லை இதே கருத்தில் இவ்வாறு ஒரு செய்யுளில் இடம் பெறச் செய்துள்ளார்.

மான்றூ ரிதுரீசின் மைந்த ரகுமதெனும்
(அகுமதுயிர்த்த படலம்: 52)

மிச்சை என்றால் அறியாமை என்பது பொருள். இதன் உபயோகத்தை

மிச்சை போகிய மேலவன்
(எரிந்துயிர்த்த படலம்: 6)

என்பதில் காணலாம்.

மூரி என்பது பெருமை. 'மூரிக் கடற்றானை' எனக் கூறும் புறப் பொருள் வெண்பாமாலை (3;3). இங்கேயும் பெருமையே கூறப் பட்டது. குலாம் காதிறு நாவலரும் இதே கருத்தை இங்ஙனம் பயன் படுத்தி உள்ளார்.

மூரி யோங்கிய வத்தனை மாக்களு முறையின்
(முரீதீன் மகத்துவப் படலம்: 3)

மேரை என்பதை அடக்கமுடைமையைக் குறிக்க ஆரிபு நாயக ஆசிரியர் இங்ஙனம் ஒரு செய்யுளில் ஆண்டுள்ளார். அச்செய்யுள் முழுமையாக இவ்வாறு அமைந்துள்ளது.

ஓரை யைந்தினும் விதித்தது மல்லது மொருவா
மேரை கொண்டுப வாசமு மவ்வண மேவிச்
சீரை யுண்டெனிற் பொருள்விதி செலுத்துவ செலுத்தி
யேரை யுண்டுமற் றவுமற வாதிவ ணிருமின்
(உபாத்துப் படலம்: 53)

யாதனை என்பது வேதனையைக் குறிக்கும் ஒரு சொல். இச்சொல்

எழுபதி னாயிரத் தெண்ணின் யாதனை (மிகுருசுப் படலம்: 115)

என ஒரு செய்யுளில் இங்ஙனம் வந்துள்ளது.

வள் என்றால் கூர்மை. அசி என்றால் வாள். போழ்வு என்றால் பிளவு, கூர்மையான வாளினால் பிளவுபடுத்தப்பட்டவர்களையும் ஈட்டியினால் குத்தப்பட்டவர்களையும் குறிப்பிட்டு ஒருபாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

வள்ளசிப் போழ்வுண் டாரும்
வல்லையக் குத்துண்டா ரும்
(உபாத்துப் படலம்: 92)

வாதனை என்பது துன்பத்தைக் குறிக்கும். இச்சொல் இதே பொருள் பெற

வாதனை யொழிக்கென வைத்த வற்புதச்
சாதனை பெறுமுயர் ஜாரி யார்வினை

(உம்முல் கருமாத்துப் படலம்: 23)

என வந்துள்ளமை காண்க.

விளரி என்பது இசையோடு தொடர்புடைய ஒரு சொல். இசைக் கலையில் இச்சொல் ஏழு இசைகளுள் ஒன்றைச் சுட்டும். நெய்தற்குரிய இரங்கற் பண்ணையும் குறிக்கும். யாழ் என்னும் பொருளையும் தரும். மிகுதி என்றும் பொருள் அதற்கு உண்டு. மொய்த்துக் கொண்டிருக்கும் வண்டுகள் எழுப்பிக் கொண்டிருக்கும் இசையைக் குறிக்கவே இச்சொல் ஒரு செய்யுளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. மரங்களால் நிறையப் பெற்ற பூஞ்சோலைகளிலே வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன என்பதை குறிக்கவே 'மூசுதேன் விளரியார்க்கும் என ஒரு செய்யுளில் ஆசிரியர் இவ்வாறு பாடி உள்ளார்.

மூசுதேன் விளரி யார்க்கு முழுமரக் காவி னுப்பண்
மாசுதீர் முகம்ம தென்பார் வளங்கெழு துறக்கம் வாழுந்
தேசுசேர் மடவார் தம்முட் சேர்பவ ரெடரியக் காட்டும்
வீசுவான் புகழின் கோமான் மணிநகர் மேயி னரால்

(சிறு விலக்கிய படலம்: 50)

❀

# தொகுப்புரை

இஸ்லாமியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் முதலாத் தொகுதியின் கனகவிராயர் இயற்றிய கனகாபிஷேக மாலையைப் பற்றியும் உமறுப் புலவர் இயற்றிய சீறாப்புராணம் பற்றியும் குறிப்பிடப்பட்டிருந்தன. ஏனைய காப்பியங்கள் பற்றிய விவரங்கள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

கற்பனைக்கு எட்டாத கருப்பொருளை வைத்து இயற்றப்பட்டது திருமணக் காட்சி. சேகாதி நயினார்ப் புலவரின் கற்பனையில் தோன்றியது இது. பனீ அகுமது மரைக்காயரின் சீறாப்புராணம் ஹிஜ்றத்துக்காண்டம் என்னும் சின்னசீறா உமறுப்புலவர் தமது சீறாப்புராணத்தில் விட்ட இடத்திலிருந்து பெருமானார் முகம்மது நபி(சல்) அவர்களின் வாழ்க்கையை இறுதிக்கட்டம் வரை விவரித்து உள்ளது.

கி பி. 1807 முதல் கி பி. 1821 வரையிலான பதினைந்து ஆண்டு கால எல்லையுள் ஒன்பது காப்பியங்கள் தோன்றி உள்ளன. அவற்றுள் முதலாவது இராஜ நாயகம். இதனை மதுரை மீசல் வண்ணக் களஞ்சியப்புலவர் இயற்றி உள்ளார். வண்ணக் களஞ்சியப்புலவரின் ஏனைய காப்பியங்கள் குத்புநாயகம் என்னும் முகியித்தின் புராணமும் தீன்விளக்கமுமாகும். இங்கே குறிப்பிடப்பட்ட ஒன்பது காப்பியங்களுள் நான்கினை இயற்றி உள்ளார் புலவர் நாயகம் என்றும் சேகுனாப் புலவர் என்றும் வழங்கும் காயல்பட்டண செய்கு அப்துல் காதிறு நயினார் லப்பை ஆலிம் புலவர் அவர்கள் குத்புநாயகம், திருக்காரணப் புராணம், திருமணிமாலை, புதூகுச்சாம் என்பன புலவர் நாயகம் இயற்றிய காப்பியங்களாகும். இக்கால கட்டத்தில் இலங்கை யிலிருந்து பதுறுத்தீன் புலவர் முகியித்தீன் புராணத்தை இயற்றித் தந்துள்ளார். சல்கா படைப்போர் என்றும் வழங்கும் இறவுசுல்கூல் படைப்போர் என்னும் காப்பியத்தை இயற்றியவர் குஞ்சு மூசு ஆலிம் புலவர் அவர்களாவார். இவர் பூவாறு என்று வழங்கும் குழந்தைமா நகரில் வாழ்ந்தவராவார்.

சில ஆண்டுகள் இடைவெளிக்குப் பின்னர் தோன்றியது நவமணி மாலை. இதன் ஆசிரியர் காலங்குடியிருப்பைச் சேர்ந்த ஐதுறூசு நயினார்ப் புலவர் ஆவார்.

ஒன்றுக்கு மேற்பட்ட காப்பியங்களை இயற்றிய மற்றப்புலவர் நாகூர் குலாம் காதிறு நாவலர் அவர்களால் இயற்றப்பட்ட நாகூர்ப் புராணமும் ஆரிபு நாயகமும் ஈண்டு குறிப்பிடத்தக்கனவாகும்.

முகம்மதுப் புலவர் என்பவரால் இயற்றப்பட்ட முகியித்தீன் புராணம் என்பதைப் பற்றிய செய்தி உள்ளது. ஆனால் நூல் கிடைப்ப தாக இல்லை. மேற்கொண்ட முயற்சியும் பலனளிக்கவில்லை. ஆனால் முகம்மது புலவர் நாகூரைச் சேர்ந்தவர் என்பது மாத்திரம் புலனு கின்றது. நாகூர் முகம்மதுப் புலவர் பற்றி அவர் தம் மாணக்கர் நாகூர்ப்புலவர் மு. செவத்த மரைக்காயர் அவர்கள் பாடிய செய்யுளில் இருந்து முகம்மதுப் புலவர் பாவகை வல்லவர் என்பதும் நபிகள் நாயகம் (சல்) அவர்கள் பேரில் கேசாதிபாத மாலை ஒன்று பாடியுள்ள தாகவும் கௌது நாயகம் என்னும் பெரிய புராணம் ஒன்றும் இயற்றி உள்ளார் என்பதும் தெளிவாகின்றது அச்செய்யுள் வருமாறு :

ஆசுசித் திரமதுரம் வித்தார மென்றறையு மணிநாற் பாவும்
பேசுநனி விசுவாச னன்புனரும் காதாரன் பிரிவி நீழன்
மாசுகுடை நபிபெருமான் கேசாதி பாதஞ்சொன் மாலே யோடும்
பூசுநய கௌதுநா யகமென்ன வோர்பெரிய புராணஞ்
சொற்றோன்

நாகூர் முகம்மதுப்புலவரின் மற்றொரு மாணவர் வெ. நாராயணசாமி நாயகர். அவர்கள் பாடியுள்ள குருவணக்கப் பாடலில் முகம்மதுப் புலவர் சித்திரகவி பாடுவதில் வல்லவர் என்றும் சௌமிய சாகர நூலுக்கு உரை செய்தார் என்றும் முகம்மது கவுதெனும் காப்பியம் இயற்றி உள்ளார் என்றும் குறிப்பிட்டுள்ளார். அப்பாடல் இவ்வாறு அமைந்துள்ளது.

இலக்கண இலக்கிய வாரியின் னீருண்
டிறைத்திடும் காள மேகம்
இருநாழி வேலேயில் நாகபந் தக்கவி
இசைக்கவே வல்ல தீரன்
துலக்கமாய்ச் சௌமிய சாகர நூற்குரை
சொல்லவே கற்ற தீரன்
சுதிர்மிகு முகம்மது நபிபண் பிசைத்திடும்
சுத்தகவிப் பிரசங்கமும்
விளக்கமாய் முகம்மது கவுதெனுங் காப்பியம்
விடங்கமாய்ச் சொன்ன சீலன்
வேதாந்த சித்தாந்த நூல்களும் மிக்கவே
விளங்கிய ஞான சொருபன்
கலக்கமாய் என்னெஞ்சம் உழல்கின்ற நாளிலே
காரிகை தொன்னூல் முதல்
களவமிழ்தம் ஈந்தெனேக் காத்திட்ட முகமதின்
காலேயாம் துதி செய்வோமே

மற்ருெரு காப்பியத்தின் பெயர் ஒரு புத்தக விலைப் பட்டியலில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. ஐய்யூப் நபி காவியம் என்றும் அதன் விலையும் அந்தப் பட்டியலில் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனல் அந்த நூலும் கிடைக்கவில்லை என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

இஸ்லாமிய இலக்கிய வரலாற்றின் மூன்ருந்தொகுதியில் சிற்றிலக்கியங்கள் விவரிக்கப்படுகின்றன. குறுங்காப்பியங்களும் அத்தொகுயில் இடம்பெறுகின்றன. தமிழ் இலக்கியப் பரப்பில் முஸ்லிம்களால் புகுத்தப்பட்ட இஸ்லாமிய இலக்கிய வடிவங்கள் மூன்ரும் தொகுதியில் ஆராயப்படுகின்றன. அத்தோடு இஸ்லாம் வழிவந்த தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பலவும், மூன்ரும் தொகுதியில் விவரிக்கப்படுகின்றன.

# பின்னிணைப்பு

இஸ்லாமிய தமிழ் இலக்கிய வரலாறு முதலாந் தொகுதியில் முழுமையான இரண்டு காப்பியங்கள் ஆய்வுக் குட்படுத்தப்பட்டன. கனகவிராயரின் கனகாபிஷேக மாலையும் உமறுப் புலவரின் சீருப் புராணமும் அவை இரண்டுமாம். இந்த இரண்டாந் தொகுதியில் ஆய்வுக்கிலக்காகிய அத்தகைய ஏனை காப்பியங்களின் எண்ணிக்கை பதினான்காகும்.

அவற்றுள் ஒன்று நபிகள் நாயம் முகம்மது (ஸல்) அவர்களின் மறுமை வாழ்வைப் பற்றி விவரிக்கும் திருமணக் காட்சியாகும். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறுதிக்கால வாழ்க்கையைப் பனீ அகுமது மரைக்காயர் அவர்களால் நிறைவு செய்யப்பட்ட சீருவென் கிற புராணம்—ஹிஜ்றத்துக்காண்டம் (சின்ன சீரு) விவரிக்கிறது. சுலைமான் நபி (அலை) அவர்களின் வாழ்க்கை இராஜநாயகத்திலும் இப்ருகீம் நபி (அலை) அவர்களின் வாழ்க்கை திருமணிமாலையிலும் கருப்பொருளாக அமைந்துள்ளன. திருக்காரணப்புராணம் சாகுல் கமீது ஆண்டகையின் வாழ்க்கையை விளக்குகிறது. போரைப் பற்றி யன இறவுசுல்கூல் படைப்போர், புதுகுஷ்ஷாம். தீன் விளக்கம் என் பன. முன்னைய இரண்டும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத் தில் தொடங்கப்பட்ட அறபு நாட்டுப் போர்களை வருணிக்கின்றன. பின்னையது தமிழ்நாட்டைச் சேர்ந்த பாண்டி நாட்டின் ஒரு பகுதி யாகிய பிரதேசத்தை ஆட்சி புரிந்து போரில் ஈடுபட்ட சுல்தான் சையது இபுருகீம் அவர்களைப் பற்றியது. நாகூர்ப் புராணம் ஒரு தல புராணமாக அமைய ஆரிபு நாயகம் சையது அகமது கபீறு றிபாயி அவர்களின் வாழ்க்கையைப் பிரதிபலிப்பதாக உள்ளது. எஞ்சியுள்ள குத்பு நாயகமும், குத்பு நாயகம் என்னும் முகியித்தீன் புராணமும், முகியித்தீன் புராணமும், நவமணிமாலையும் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி (ரலி) அவர்களின் வாழ்க்கை வரலாற்றினை விவரிப் பனவாகும். அவற்றுள் இரண்டாவதை விவரிக்கும் பொழுது (பக்கம் 203) ''முகம்மது நபி (சல்) அவர்களின் புதல்வி பாத்திமா (றலி) அவர்களின் இரு புதல்வர்களான இமாம் ஹஸன் (றலி) அவர் களையும் இமாம் ஹுஸைன் (றலி) அவர்களையும் முறையே முகியித்தீன் ஆண்டவர் அவர்கள் தமது தந்தை வழி மூதாதையராகவும் தாய் வழி மூதாவையராகவும் கொண்டு சிறப்புப் பெற்றுத் திகழ்ந்தார் கள்'-எனக் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் இமாம் ஹஸன் (றலி) அவர்களையும் இமாம் ஹுஸைன் (றலி) அவர்களையும் இரு வழியிலும் தமது மூதாதையராகக் கொண்டவர் முகியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி(றலி) அவர்களின் தந்தையாரான இமாம் அபூசாலிஹ் மூஸா ஜங்கி தோஸ்த் என்பவரேயாவார். இதனை விளக்கவே இந்தக் குறிப்பு தரப்படுகிறது.

## ஸைகு அப்துல் காதிறு ஜீலானி (றலி) அவர்களின் மூதாதையர் பரம்பரையைப் பற்றிய ஒரு விளக்கம்

### தகப்பன் வழி மூதாதையர்

1 இமாம் அபூ சாலிஹ் மூஸா ஜங்கி தோஸ்த்
2 இமாம் அபூ அப்துல்லாஹ் அப்துல் கறீம்
3 இமாம் யஹ்யஸ் ஸாஹித்
4 இமாம் முஹம்மத்
5 இமாம் தாவூத்
6 இமாம் மூஸா
7 இமாம் அப்துல்லாஹ்
8 இமாம் மூஸல் ஜவ்ன்
9 இமாம் அப்துல்லாஹில் மஹ்ள்
10 இமாம் ஹஸனுல் முதன்னா
11 இமாம் அபூ முஹம்மத் ஹஸனுல் முஜ்தபா
12 இமாம் அமீறுல் மூமினீன் அலிய்யிப்னு அபீ தாலிப்
ஸய்யிததினா பாத்திமத்துஸ்ஸஹ்றா

### தாய் வழி மூதாதையர்

1 உம்முல் ஹைர் அமதுல் ஜப்பார் பாத்திமா
2 ஸையித் அபூ அப்துல்லாஹ் ஸவ்ம இய்யிஸ் ஸாஹித்
3 ஸையித் அபூ ஜமாலுத்தீன்
4 ஸையித் முஹம்மத்
5 ஸையித் அபூ மகுமூது தாஹிர்
6 ஸையித் அபுல்அதா அப்துல்லாஹ்
7 ஸையித் அபூ கமாலுத்தீன் ஈஸா
8 ஸையித் அபூ அலாஉத்தீன் முஹம்மத் ஜவாத்
9 இமாம் ஜஉபறுஸ் ஸாதிக்

இமாம் மூஸல் ஜவ்ன் என்பாரின் பெயரில் உள்ள ஜவ்ன் என்பது கறுப்பு என்பதைக் குறிக்கும். இமாம் மூஸல் ஜவ்ன் என்பாரின் தாயார் பெயர் உம்மு ஹிந்த். அவர் தம் மூதாதையர் வருமாறு:

தகப்பனார் – அபூ உபைதா அப்துல்லாஹ்
தாயார்—உம்மு ஸல்மா
உம்மு ஸல்மா அவர்களின் தகப்பனார்—முஹம்மத்
முஹம்மத் அவர்களின் தகப்பனார்—தல்ஹா
தல்ஹா அவர்களுடைய தகப்பனார்—அப்துல்லாஹ்
அப்துல்லாஹ் அவர்களுடைய தகப்பனார்—அப்துல் ரஹ்மான்
அப்துல் றஹ்மான் அவர்களுடைய தகப்பனார் அமீறுல் மூமினீன் அபூ பக்றிஸ் ஸித்தீக் (றலி)

இமாம் அப்துல்லாஹில் மஹ்ள் என்பதில் உள்ள மஹ்ள் என்பது கலப்பற்றது என்பதைச் சுட்டும். இமாம் அப்துல்லாஹில் மஹ்ள் என்பவருடைய தகப்பனர் இமாம் ஹஸனுல் முதன்ஞ. இமாம் ஹஸனுல் முதன்ஞ அவர்களுடைய தகப்பனர் இமாம் அபூ முஹம்மத் ஹஸனுல் முஜ்தபா-இமாம் ஹஸன் (றலி) அவர்கள் இமாம் ஹஸனுல் முதன்ஞ அவர்களின் தாயார் இமாம் ஹுஸைன் (றலி) அவர்களின் புதல்வி பாத்திமத்துஸ்ஸஹ்ரு அவர்களாவார். இந்த அடிப்படையில் பார்க்கும்பொழுது முஹியித்தீன் அப்துல் காதிறு ஜீலானி அவர்களின் தந்தையாரின் மூதாதையர் கலப்பற்ற பரம்பரையைச் சேர்ந்தவர் என்பது புலனுகின்றது.

புகுலுல் முஹம்மதி பீமஃறிபத்தில் அஇம்மதி என்னும் நூலில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

ஹஸனுல் முதன்ஞ அவர்கள் தங்கள் சிறிய தந்தையரான இமாம் ஹுஸைன் (ரலி) அவர்களிடம் பெண் கேட்டார்கள். ஹுஸைன் (றலி) அவர்களுக்கு பாத்திமா என்றும் ஸுகைனா என்றும் இரண்டு புதல்வியர் இருந்தனர். அவர்கள் இருவருள் நீங்கள் எவரை விரும்புகிறீர்களோ அவரைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று இமாம் ஹுஸைன் (றலி) அவர்கள் கூறினர்கள். ஹஸனுல் முதன்ஞ அவர்கள் வெட்கப்பட்டவர்களாக வாய் பேசாது இருந்து விட்டார்கள். அப்பொழுது இமாம் ஹுஸைன் (றலி) அவர்கள் பின்வருமாறு கூறினர்கள்: ''பாத்திமா நல்ல பிள்ளை. அவர் ரசூல் (ஸல்) அவர்களுடைய மகளாராகிய என்னுடைய தாயார் பாத்திமா (றலி) அவர்களைப்போல் அழகானவராவார்''. இங்ஙனம் கூறிவிட்டு ஹஸனுல் முதன்ஞ அவர்களுக்கு பர்த்திமத்துஸ்ஸஹ்ருவைத் திருமணம் செய்து வைத்தார்கள் இமாம் ஹுஸைன் (றலி) அவர்கள்.

ஆதாரம் : சென்னைப் பட்டணம் ஸிப்கத்துல்லாஹிப்னு முஹம்மது கவ்ஸிப்னு நாளிறுத்தீன் முஹம்மத் ஷாபிஈ என்பவரால் எழுதப் பெற்ற 'நத்றுல் ஜவாஹிர், பீ மஞக்கிபிஸ் ஸையிதி அப்தில் காதிறு.



# அகர வரிசைத் தொகுப்பு அட்டவணை